கோவைத் தமிழ்ச்சங்க வெளியீடு - 23

# ஏயர்கோன் கலிக்காம நாயனர் புராணம்

உரையுடனும் படங்களுடனும்



உரையாசிரியர்

சிவக்கவிமணி - C. K. சுப்பிரமணிய முதலியார், B.A.

கோவைத் தமிழ்ச்சங்க வெளியீடு—23க.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

தெய்வச் சேக்கிழார் நாயனாரருளிய

# ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணம்

[உரையுடனும் படங்களுடனும்]

இப்பகுதியில் வரும் ஆளுடைய நம்பிகளது
தேவாரப் பதிகக் குறிப்புக்களும், சரிதச் சுருக்கம், கற்பனை
முதலியவையும் அடங்கியுள்ளன.

உரையாசிரியர் :

கோவை - வழக்கறிஞர் - சிவக்கவிமணி
திரு. C. K. சுப்பிரமணிய முதலியார், B.A., அவர்கள்

சாது அச்சுக்கூடம்,
இராயப்பேட்டை, சென்னை-14

கோவைத் தமிழ்ச் சங்கம்,
கோயமுத்தூர்.
6-2-1952

 [விலை ரூ. ௭—0—0

உ

சிவமயம்

# முன்னுரை

ஏதமில்வே ளாளர்பெரு மங்க லத்துள்
ஏயர்கோன் கலிக்காம ரிறையை நேரே
தூதுகொளு மவனாகி லென்னு மென்னுந்
துணிவினர்பா லிறைவனருஞ் சூலை யேவி
வேதனைவன் றொண்டன் வரினீங்கு மென்ன
வெகுண்டுடல்வாள் கொடுதுறந்து மேய நாவற்
போதகமு முடலிகழ வெழுந்து தாழ்ந்து
போற்றியது விலக்கியருள் பொருந்தி னாரே.

—திருத்தொண்டர் புராண சாரம்

முன்னர்ப் பல சரிதங்களையும் தனிப் பதிப்புக்களாக வெளியிட்டது போலவே அன்பர்களுக்கும் மாணக்கர்களுக்கும் எளிதில் பயன்படும்படி ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணத்தையும் தனிப்பதிப்பாக வெளியிட்டிருக்கிறேன். வித்துவான் பரிட்சைக்கு இப் பகுதியைப் பாடமாக நியமித்துள்ளார்கள். அந்த மாணவர்களுக்கும் இது உதவியாயிருக்கும். புராண உரையில் இப்பகுதி VI-ம் பாகத்தில் வெளிவந்தமையால் தான் இத் தனிப் பதிப்பு வெளிவர ஏதுவாயிற்று. VI-ம் பாகம் ஏறக்குறைய நிறைவாகி அணிமையில் வெளிவரும் நிலையில் உள்ளது. அதற்குப் பேருக்கமளித்துத் தமது அருளும் பொருளும் நிறைந்த ஆசியளித்துத்துதவிய திருப்பனந்தாள் ஸ்ரீகாசி மடத்தின் அதிபர் ஸ்ரீமத் அருணந்தித் தம்பிரான் சுவாமிகளுக்கு எனது மனமார்ந்த நன்றியை முன்னரே தெரிவித்துள்ளேன். இத் தனிப் பதிப்பிலும் அந்நன்றியைத் தெரிவித்தல் மிகையாகாது.

சேக்கிழார் நிலயம்,
கோயமுத்தூர்,
13—3—1952

C. K. சுப்பிரமணிய முதலியார்,
பதிப்பு உரை ஆசிரியன்.

குறிப்புதவிநூல்

# பொருளடக்கம்



## படங்களின் அட்டவணை

# தலவிசேடமும் - சரிதக்குறிப்புக்களும்

**திருப் பெருமங்கலம் - வன்றொண்டர் கோயில் :** இது திருப்புன்கூரினை அடுத்து வடக்கே ½ நாழிகையளவில் உள்ளது ; இதன் தென்புறம் வன்றொண்டர் கோயில் (விறன்மிண்டர் கோயில் என்று தவறாக வழங்கப்படுவது) உள்ளது. இது ஒரு சிறு கோயில் ; ஆயினும் சுவாமி, அம்மை, விநாயக சுப்பிரமணியர், சண்டீசர், நந்திதேவருடன் பூரண சிவாலயமாக உள்ளது. செங்கற் கட்டிடம். இதில் சுவாமியின் பின்புறம் நின்று வழிபடும்கோலத்துடன் வன்றொண்டர் (ஆளுடைய நம்பிகள்) திருவுருவம் உள்ளது ; ஏயர்கோன் கலிக்காம நாயனாரது உற்சவ மூர்த்தித் திருவுருவமும் உள்ளது. அடுத்து உள்ள தென்புறம் கோட்டையும் கிராம நத்தமும் கொண்ட கிராமம் இருந்ததாகவும், மேட்டில் பெரிய பழைய சிவாலயமாய் இது இருந்ததாகவும், அது நிலமாய்ப் போனபின் இங்குக் கொண்டுவந்து அமைக்கப்பட்டதாகவும் அறியப்படுகின்றது. ஆளுடைய நம்பிகள் இங்கு வந்து தங்கியிருந்து கலிக்காமனாருக்குத் தாம் சூலை தீர்க்கவரும் திறம் செப்பிவிட்ட இடம் இது என்றும், இதனை அந்நினைவின் பொருட்டுக் கலிக்காமனார் பின்னாளில் சிவாலயமாக வகுத்தனர் என்றும் கருதப்படுகின்றது. சீகாழியில் திருஞான சம்பந்தர் கோயிலில் சிவலிங்கத்தின் பின்புறம் நின்று வழிபடும் கோலமாக அமைந்திருக்கும் நிலை ஈண்டு நினைவு கூர்தற்பாலது. இக்கோயிலை விறன்மிண்டர், நம்பிகள்பால் சினம் கொண்டு வந்து தங்கிய இடம் என்று தவறாக உணர்ந்துகொண்டு அதற்காகத் திருப்புன்கூர்ப் புராணத்துள் விறன்மிண்ட நாயனார் பூசித்த படலம் என்று ஒரு படலமும் வகுத்துக் கட்டிவிட்டார்கள். விறன்மிண்டருக்கும் இத்தலத்துக்கும் எவ்விதத் தொடர்புமில்லை. இந்த ஐயப்பாட்டினைப் பற்றித் தாம் பலரிடம் விசாரித்ததாகவும், சில ஆண்டுகளின் முன் மிகுந்த வயது சென்ற பறைக்குல அடியாரொருவர் இது "வன்றொண்டர் கோயில்" என்று தமக்கு அறிவித்து ஐயத்தை நீக்கினார் என்றும் தருமபுர ஆதீனம் ஸ்ரீமத். மவுன சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அறிவித்தார்கள். வன்றொண்டர் கோயில் என்பது விறன்மிண்டர் கோயில் என்று வழூஉமருவி வழங்கப்படுகிறது.

**பெருமங்கலம் :—** இக்கோயிலுக்கு வடக்கே ½ நாழிகையளவில் உள்ளது இப்போதுள்ள திருப்பெருமங்கலம் கிராமம் ; அதன் வடபாகத்தில் பழைய நிலமாகிய சிவாலயம் உண்டு. அதன் சிவலிங்க மூர்த்தி பஞ்ச பூதங்களும் நேரே பூசித்து வழிபட வெளியில் வீற்றிருக்கின்றார். அந்தோ ! அன்பர்கள் இவருக்கு ஒரு சிறு கட்டிடமாவது அமைத்து வழிபடும் நாளேதோ ?. கிராமநத்தம் 68 ஏக்கர் பரப்புடைய பெரிய அளவுள்ளது. இப்போது பெரும்பாலும் வீடுகளின்றி நிற்கும் காலியிடமாக உள்ளது ; வீடுகள் இதன் வடபுறத்தில்தான் உள்ளன. இந்தப் பரப்பு நத்தத்தில் குளங்கள் பல உண்டு. வீட்டுக் கிணறுகள் பலவும் கிடைக்கின்றன. பழைய வீடுகள் இருந்த அடையாளங்களும் காணப்படுகின்றன. இந்த இடத்தில்தான் கலிக்காமனாரது திருமாளிகை இருந்திருக்கலாமென்று கருதப்படுகின்றது.

**பன்னிரு வேலி :—** பன்னிரு வேலி என்பது அந்நாளில் ஒரு குறிப்பிட்ட சிறந்த நிலப்பரப்பாக வழங்கியது போலும்; திருவாரூரில் "அஞ்சணை வேலியாரூர்" (அரசு - தேவா) என்றபடி கோயிலும் குளமும் ஓடையும் முறையே ஐயைந்து வேலிப் பரப்புடையனபோல. "ஏத நன்னில மீராறு வேலி யேயர் கோனுற்ற விரும்பிணி தவிர்த்து" என்றும், "பெய்யு மாமழைப் பெருவெள்ளந் தவிர்த்துப் பெயர்த்தும் பன்னிரு வேலிகொண் டருளும், செய்கை" என்றும் வரும ஆளுடைய நம்பிகளது திருவாக்கினால் அறியப்படுகின்றபடி, ஏயர்கோன் கலிக்காம நாயனாரால் தமது பிணி தவிர்த்த அருளுக்காக 12 வேலியும், மழை பெய்ய 12 வேலியும், பெருமழை தவிர்ப்பதற்காக 12 வேலியுமாக நிலங்கள் தானம் செய்யப்பட்டன என்று கருத இடமுண்டு. "பன்னிரு வேலி" என்னும் பெயரால் இப்போதும் வழங்கப்படும் கிராமம் (நிலம்) மழை பெய்வதற்காகவும், பூசலாங்குடி என்னும் 12 வேலி நிலம் மழை தவிர்ப்பதற்காகவும் தானம் செய்யப்பட்டன என்று வழக்கில் தெரிய வருகின்றது. இவை மாயூரம் தாலுக்காவில் திருப்புன்கூருக்கு மேற்கில் 3 நாழிகை யளவில் உள்ளன; "இரும்பிணி தவிர்"க்கக் கொடுத்த 12 வேலி நிலத்தைப்பற்றி ஆராய்ந்து அறியவுள்ளது. இவ்வாலாற்றைப் பிழையாக உணர்ந்து ஒரு இராஜேந்திர சோழன் தனது நாட்டுக்கு மழைபெய்யச் செய்யும்படிக்கும் அங்ஙு

னம் பெய்த பெருமழையைத் தவிர்க்கும்படிக்கும் சுந்தரமூர்த்திகளிடம் வேண்ட அவர் பாட, அதற்காக அவன் பன்னிருவேலி நிலம் கொடுத்தான் என்று கதை புனைந்து "பன்னிருவேலி பெற்ற படலம்" என்று இத் தலபுராணத்திற் புகுத்திவிட்டனர்.

இவ்வாறு வடமொழியாளர் தமிழ்நாட்டுச் செய்திகளைப் பிறழ உணர்ந்து அவ்வாறே வடமொழியில் தலவரலாறுகள் முதலியவற்றை இயற்றிவிட, அவற்றை அவ்வாறே வடமொழி ஆதாரவென்று கொண்டு மீளத் தமிழில் யாத்து வழங்கும் பிழைபட்ட வரலாறுகள் பலவுள்ளன. அவற்றை வழங்குவோர் ஆய்ந்தெடுத்து வழங்குதல் நலம் தரும்.

---

## சரித ஆராய்ச்சிக் குறிப்புக்கள்

(Dr. M. இராசமாணிக்கம், M.O.L L.,T. Ph.D. அவர்கள் உதவியன)

1. **செய்யுள்** - 77 (3231)

" வளவர் பெருமான் மணியாரம்..................—" இச்செய்தி கி. பி. 9 - ம் நூற்றாண்டில் வாழ்ந்த சுந்தரரால் குறிக்கப்பட்டது. 7-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சம்பந்தராலும் குறிக்கப்பட்டது. ஆனால் இச்செய்தி சங்கப்பாக்களில் இன்மையால், இந்நிகழ்ச்சி ஏறத்தாழ கி.பி. 300-க்கும் 600-க்கும் இடையே நிகழ்ந்ததாக வேண்டும்.

2. **செய்யுள்** - 107 (3261)

" உடைய நம்பி "—இப்பெயருடன் (உடைய நம்பி விலாசம் என்னும் பெயரில்) ஒருநூல் சுந்தரர் வாலாற்றை அறிவிக்கின்றது—தெலுங்கு பசவ புராணம், பிரபாக சாஸ்திரியின் முகவுரை காண்க. இப்பெயர் மக்களிடையும் வழங்கி வந்தது. M. E. R. 72 of 1927 (S. I. I. V. 537, A. R. E. 1920, P. 98)

3. **செய்யுள்** - 136 (3290)

" பொன்னை உரைக்க ஆணி " (கட்டளைக்கல்) பொன் அளவை - மா, (137) இச் செய்திகள் பல்லவர்காலக் கல்வெட்டுக்களிலும் காணப்படுகிறது. இதே ஆணி சோழர்காலத்தில் " தண்டவாணி " எனப்பட்டது.

4. **செய்யுள்** - 158 (3312)

" தம்பிரான் தோழர் "—"தம்பிரான் தோழர் மரணக்கஞ்சாறர் " - திருமுட்டம் கல்வெட்டு M. E. R. 1916., 216 of 1925 முதலிய கல்வெட்டுக்களிலும் இப் பெயரைக் காணலாம்.

5. **செய்யுள்** - 181 (3335)

" சிவயோகியார் " சிவயோகியர் சிவனையே நினைந்திருத்தலும், சிவத்தியானத்தால் பிறவித் தளையை அறுக்க முனைதலும் செய்பவர். உயிர் நீங்கும் தறுவாயில் உடல் முழுவதும் நீறுபூசிச் சிவமந்திரங்களைச் சொல்லிக்கொண்டு தம் மார்பில் தொங்கவிடப்பட்டுள்ள சிவலிங்கத்தை வழிபடுவர். இத்தகையோர் நாயன்மார்கள் வாழ்ந்த பல்லவர் காலத்தில் தமிழகத்திலிருந்தனர். சோழர்காலத்தில் இவர்கள் மிகப் பலராக இருந்தமை எண்ணிறந்த கல்வெட்டுக்கள் கொண்டு உணரலாம். திரு எறும்பியூர், திருபுவனை, திருஆரூர் முதலிய ஊர்களில் இருந்த மடங்களில் சிவயோகியரை உண்பிக்க நிவந்தங்கள் விடப்பட்டுள்ளன.

6. **செய்யுள்** - 190 (3344)

காஞ்சி - திருக்காமக் கோட்டம் : திருக்காமக்கோட்டம் - இதனைச் சுந்தரர் தரிசித்தார். இது சங்கரரால் கட்டப்பட்டது என்று கூறப்படுதலால் சங்கரர் காலமாகிய கி.பி. 8-ஆம் நூற்றாண்டில் இக்கோயில் கட்டப்பட்டதாதல் வேண்டும். (திருஞானசம்பந்தரும் இங்குவந்து வழிபட்டனர் என்றறியப்படுதலால் இஃது முன்னமே அமைக்கப்பட்டிருத்தல் வேண்டுமென்பது கருதப்படும்.)

7. **செய்யுள்** - 222 (3376)

திருவொற்றியூரில் சங்கிலியார் : சுந்தரர் காலமாகிய ஒன்பதாம் நூற்றாண்டில் ஆண்ட பல்லவ அபராசிதன், நிருபதுங்கன், வைரமேகன் இவர்கள் காலத்தில்

திருவொற்றியூர்க் கோவிலில் பல நிவந்தங்கள் விடப்பட்டன. எனவே, அக்காலத்தில் அக்கோயில் சிறந்த நிலையில் இருந்திருத்தல் வேண்டும்.

8. ***செய்யுள்*** - 247 (3407)

வன்தொண்டன் : இப்பெயர் சுந்தரர்க்கே உரியது. இதனைப் பிற்கால மக்கள் இட்டுப் பெருமை கொண்டனர் என்பதைப் பல கல்வெட்டுக்களால் அறியலாம். அணுக்க வன் தொண்டன் M. E. R. 524 of 1938.)

9. ***செய்யுள்*** - 337 (3491)

சிவபெருமான் தலைமை அர்ச்சகர் வேடத்தில் சங்கிலியாரிடம் தூது சென்றார் : திருவாரூர்க் கோயில் அர்ச்சகர் ஞானசிவாசாரியார் மகளார் இசைஞானியார். அவர் மகனார் சுந்தரர் எனவரும் கல்வெட்டுச் செய்தி இங்கு நோக்கத்தக்கது. (S. I. I. 4. P. 152).

10. ***செய்யுள்*** - 398 (3552)

கலிக்காமர் மனைவியார் உடன்கட்டை ஏற விரும்பியது. சோழ அரசர்களுடன் சோழமா தேவியர் உடன்கட்டை யேறியதாகக் காணப்படும் பிற்காலக் கல்வெட்டுச் செய்திகளை நோக்க, இவ்வழக்கம் நாட்டில் வழக்கிலிருந்தது என்பது நம்பத்தகும்.

---

## திருத்தங்களும் குறிப்புக்களும்

(அன்பர் இராவ்பகதூர் - தணிகைமணி - V. S. செங்கல்வராய பிள்ளை, M.A., அவர்கள் உதவியன)

3156. நஞ்சு + சூழ் + வன + நயனியர் - நஞ்சு சூழ்ந்துள்ள வனம் (அழகிய) கண்களை உடையவர் - எனவும் பிரித்துப் பொருள் கோடலுமாம். ('வனமுலை', 'வனபவளவாய்' - என்புழிப்போல- 'வனநாயகம்'.)

3164. அணிந்துள்ள மதியை மறைத்து வந்தாராதலின் 'மறையவர்' என்றார். மறை யவர் - மறைந்துவந்த அவர்.

3178. நம்பியும் பரவையும் இருவரும் மகிழ அளித்தாராதலின் 'உமையோடும் வருவார்' எனச் சத்தியையும் சேர்த்துக் கூறினார்.

3184. 'புற்று' - என்பதற்கேற்பத் 'தேன்' என்றார். 'புற்றுத்தேன்' என்பது மதிலிடுக்கு முதலியவற்றில் ஈக்களால் வைக்கப்படுந் தேன்-பதார்த்த இன சிந்தாமணி –" - Vide Lexin.

3190. (பக்கம் 27) பதவுரையில் புகை நோய்ந்த புனுகு + இனிய நறு நெய் (புனுகு— Omitted).

3193. (பக்கம் 29) பதவுரையில்-வரி 7-மக்கண் முறைமை - May be மகள்களாம் முறைமை.

3226. 'குழகாகிய தங்கோலம்'— 'மணங்கமழ் தெய்வத் திளநலங் காட்டி'— திருமுருகாற்றுப்படை.

3231. பக்கம் 75. வரி 2. தாரம் = நீர்.

2269. பக்கம் 120. 'அடிமைக்க ணன்றியே' என்பது பாடமாயின் மடித்து நடிக்கின்ற திருவடியினிடத்து மாறுபட்டு எனப் பொருள் கொள்க. ஈண்டு அடிமை என்பது மை விகுதி தன்மை உணர்த்தாது தன்மையுடைப் பொருளையே உணர்த்திப் பகுதிப் பொருள் விகுதியாய் நின்றது. 'இருமை வகைதெரிந்து' என்புழிப்போல."—சாமிநாத பண்டிதர் குறிப்பு

3274. பக்கம் 131 - விடை யரவக் கொடி - அரவம் - ஒலி ; 'இடிபடு குரலுடை விடையினர்' (சேறை) சம்பந்தர் III - 86-4 'அதிரார் பைங்கண் ஏறு'— சம்பந்தர் (சிற்றேமம்) III - 42 - 4.

3295. பக்கம் 154 - பதிகப்பாட்டு (1) பாறு - பருந்து, கழுகு.

3301. பக்கம் 164. வரி 18. 'பாறு சேர்தலைக் கையர்' சம்பந்தர் I 135 - 1 (பராய்த்துறை).

3313. பக்கம் 181. வரி4. ஏலம் (வாசனைப் பாடம்) இட்ட நறுந்தண்ணீர் எனலுமாம்.

3382. பக்கம் 254 - பக்கம் 257 வரி 24 என்னே !=இது என்ன வியப்பு ! மின்னுக் கொடி போல்வாள் உள்ளம் திரிவித்தாள்; (என்னே-இது என்ன வியப்பு!) எனலுமாம்.

3384. பக்கம் 259 - வரி 18. சங்கிலியார் பிணைக்கும் மலர் இறைவனடி கூடுதல் போலத் தன் உயிரும் அதனுடன் அவரால் பிணிக்கப்பட்டு இறைவனடி சேர்ப்பிக்கப்படும்—எனவும் தொனிக்கும்.

3388. முளரிவளை நிதி - வேண்டுவதைக் கொடுப்பதுபோல - இறைவனும் வேண்டியதைக் கொடுத்தருள்வான் - என்பதைக் குறிக்கப் பதுமநிதி சங்கநிதி குறிப்பிடப்பட்டன.

3386. பக்கம் 262-வரி 23. மாலை தொடுத்துத் தொடை அவிழ்த்த - முரணணி.

3391. பக்கம் 266. மதியம் தீண்டு கன்னிமாடம் - கன்னி (மணங்கூடித்) தீண்டப் படுவாள் என்பதைக் குறிக்கும்.

3392. பக்கம் 268 - வரி 1. 'நீற்றுக் கோலம்', 'நீற்றுக்கோடி நிமிர்ந்து காட்டியும்'—திருவாசகம்.

3397. பக்கம் 271. 'அற்றமுறு நிலைமையினல்' - சமயத்துக்கு ஏற்றபடி (வேறு வழியில்லாமல்); அவமான நிலை வாராவழிக்கு; அற்றம் - சமயம்; அவமானம்.

3409. வரவுபார்த்தாரூரர் - ஆரூரர் என்றார், ஒற்றியூரை "எவ்வளவு நாள் பிரிந்தேன் என் ஆரூர் இறைவனையே" எனத் திருவாரூரை நினைந்து செல்லக் கூடியவர் எனக் காட்டுதற்கு.

3424. எதிர்கொண்டருளும் - வசந்தம் தம்மை (திருவாரூருக்கு வா என்று) எதிர்கொண்டழைத்தபடி ஓர் நினைவு வந்தது போலும்.

3453. 'வேதமெலாம் தொக்கவடி வாயிருந்த தூருத்தியார் - சுவாமி பெயர் (இத் தலத்தில்) வேதேசுரர் - (சிவஸ்தலமஞ்சரி) ஆதலின்.

3472. பக்கம் 367-வரி 13. செற்றம் - பகைமை; நெடுங்காலம் நிகழ்வது. செற்றம் 'இகலொடு செற்ற நீக்கிய மனத்தினர்' - திருமுருகாற்றுப்படை உரை (நச்சினுர்க்கினியர்)

3483. பொன் - மணி-பரவை என்பன பரவையின் பொன்போலும் மணிபோலும் உயர்ந்த குணப்பண்புகளைக் காட்ட வந்தன.

3490. குஞ்சர - உரிவை புனைந்தவர்-என்பது தமது சோதித் திருவுருவை மறைத்துப் பூசை அர்ச்சகர் உருவைக் காட்டப் போகின்றார் ஆதலின்.

3491. ஞாலமுய்ய எழுந்தருளும் என்பதை நம்பியுடன் கூட்டாது தூதருடன்கூட்டியுரைக்கவும் நின்றது.

3492. 'பாவாய் திறவாய்' - என்பது பரவாய் திறவாய் என்பதும் பாடம்.

3496. மின்னிடை மடவாய் - மின் மறைவதுபோல உன் சினம் மறைதல் வேண்டும் என்பது தொனி.

---

அச்சுப் பிழைகள்

3264. பக்கம் 112. வரி 36. ஆவி Shd be அவி [என்பது ஆவி என.]
201 வரி 13. நம்யிகள் - நம்பிகள்
214 வரி 31. முத்தவர் - மூத்தவர்
220 வரி 36. வறைவான் - உறைவான்
221 வரி 18. திருபாட்டு - திருப்பாட்டு
222 வரி 22. திருக்நண்ணப்ப - திருக்கண்ணப்ப

3359. பக்கம் 232 செய்யுள் முதல்வரி - பாவச - sld - be பரவச
பக்கம் 242 வரி 19. சிவனருளிற் செல்லேன் - Shd be செல்வேன்.
பக்கம் 306 வரி 24. மருந்தாரு - மருந்தாகு
பக்கம் 361 செய்யுள் 3469. வரி 2 மிசைபாரர் - மிசையமரார்.

உ

சிவமயம்

# நன்றியுரை



திருஞானசம்பந்த நாயனார் புராண உரை நிறைவெய்தி வெளியாயினபின் 7, 8 மாதங்களாகியும் மேலே தொடர்ந்து அச்சுவேலைகள் நடக்கும் வசதிகள் ஏற்படாமல் வருந்தினேன். புராண உரை அச்சு நிறைவேற மேலால் வேண்டப்படும் அவசியங்களைத் தெரிவித்துத் திருப்பனந்தாள் ஸ்ரீகாசி மடத்தின் அதிபர் ஸ்ரீமத் அருணந்தித் தம்பிரான் சுவாமிகளிடம் விண்ணப்பித்துக்கொண்டேன். அவர்கள் மனமுவந்து "ஒன்றே செய்யவும் வேண்டும்; ஒன்றும், இன்றே செய்யவும் வேண்டும்; இன்றும், இன்னே செய்யவும் வேண்டும்" என்ற நியதியின்படி உடனே அகமும் முகமும் மலர்ந்து ரூ. 3,000 (மூவாயிரம்) வெண்பொற்காசுகள் அளித்து ஆசிகூறி யருளினார்கள். முன்னரும் இதற்குப் பெரும்பொருள்கள் உதவி யருளியுள்ளார்கள். அவர்கள் திருவடிகளுக்கு என் மனமார்ந்த கடப்பாடுடைய நன்றியைச் செலுத்துகின்றேன். சைவ உலகமும் அவர்களுக்கு மிகவும் கடமைப் பட்டுள்ளது. அவர்களும் அவர்கள் திருமரபும் நீடுவாழ்க.

சேக்கிழார் நிலையம்,
கோவை,
1—5—1951

C. K. சுப்பிரமணிய முதலியார்,
பதிப்பு உரை ஆசிரியன்.

உ

சிவமயம்

# 29. ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணம்.

## தொகை

" ......ஏயர்கோன் கலிக்காம னடியார்க்கு மடியேன்...... "

—திருத்தொண்டத்தொகை - (௫)

## வகை

" கொற்றத் திறலெந்தை தந்தைதன் றந்தையெங் கூட்டமெல்லாந்
தெற்றச் சடையாய்! நினதடி யேந்;திகழ் வன்றொண்டனே
மற்றிப் பிணிதவிர்ப் பா?"னென் றுடைவா ளுருவியங்நோய்
செற்றுத் தவிர்கலிக் காமன் குடியேயர் சீர்க்குடியே.

—திருத்தொண்டர் திருவந்தாதி - (35)

## விரி

3155. நீடு வண்புகழ்ச் சோழர்நீர் நாட்டிடை நிலவு
மாடு பொன்கொழி காவிரி வடகரைக் கீழ்பால்
ஆடு பூங்கொடி மாடநீ டியவணி நகர்தான்
பீடு தங்கிய திருப்பெரு மங்கலப் பெயர்த்தால். க

**புராணம் :**—ஏயர்கோன் கலிக்காம நாயனாரது சரித வரலாறும் பண்பும் கூறும் பகுதி. இனி, நிறுத்த முறையானே, வம்பறு வரிவண்டுச் சருக்கத்தில் இரண்டாவதாக ஏயர்கோன் கலிக்காம நாயனாரது புராணங் கூறத் தொடங்குகின்றார்.

**தொகை :**—ஏயர் கோக்குடியின் வந்த கலிக்காமனாரது அடியவர்களுக்கும் நான் அடியேனாவேன். ஏயர் - குடிப் பெயர். ஏயர் பெருமகன் - (881) என்றவிடத் துரைத்தவை பார்க்க. (*II.* ககஙகூ.) கோன் - தலைமை குறித்து நின்றது; குடித்தலைமையும் அரசர் சேனாபதித் தலைமையும் குறித்தது. இந்நாளிலும் சேனாபதிக்கு " மாட்சிமை தங்கிய " என்று மன்னர்க்குரிய சிறப்புடன் கூறும் மரபு காண்க.

அடியார்க்கும் - உம்மை முன் துதித்த அடியார்களுடனே என்று இறந்தது தழுவிய எச்சவும்மை. சிறப்புமாம். நம்பிகளுடன் கலிக்காமனாரது தொடர்பும் நட்பும் பின்னர்த் திருவருளால் வருவன என்பது இச்சரிதத்துட் காண்க. கழறிற்றறிவாரது வரலாறும் இவ்வாறேயாம். இங்குத் திருவருள் உணர்த்த முன்னுற உணர்ந்து துதித்தவாறுங்கும்.

**வகை:—**"கோற்றத்திறல்...தவிர்ப்பான்" என்று - இது கலிக்காமனூர் உடைவாள் கொண்டு தம் வயிற்றிடைக் குத்திக்கொள்வதன் முன் கூறிய வஞ்சின மொழி. "வெற்றியினையும் வலிமையினையு முடைய எந்தையும் அவரது தந்தையும் அவரது தந்தையும் அவர்களையன்றி எங்கள் கூட்டமெல்லாமும் துன்றச் சடையினை உடைய பெருமானே! உனது அடியேம். அவ்வாறிருக்கவும் தேவரீர் வலிய ஆட்கொண்ட வன்றொண்டனே எனது இந்தப் பிணியினை தவிர்ப்பவன் என்று கூறி உடைவாளை உருவி வயிற்றினைக் கீறி நோயினைத் தவிர்த்துக் கொண்டவர் கலிக்காமனூராவர். அவரது திருமரபு ஏயர்களது சிறப்புடைய குடியாகும். 'ஏகாரம் - ஈற்றசை.'

தந்தை...அடியேம் - இக்கருத்தை விரிநூல் "எம்பிரா னெந்தை தந்தை" (ஏயர் - புரா. 392 = 3546) என்ற பாட்டில் ஆசிரியர் எடுத்து விரிவுரை செய்தல் காண்க: திகழ்வன்றொண்டனே - நாங்கள் வழி வழி அடியோம் என்று விடாது பற்றி நிற்க, ஆளல்லேன் என்று சொல்லி மறுத்தவரை வலிய ஆண்ட ஒருவர் என்ற குறிப்புப் பற்றி நின்றது; மற்று இப்பிணி - பிணி வருதற்கு மற்று இயைபில்லையேனும் அருளால் வந்தது என்பது குறிப்பு. தேற்ற - நெருங்க; தேற்றம் என்பது தெற்றம் என நின்றதென்றலுமாம். தவிர் - உயிரினையும் துறந்த; உயிர் என்பது அவாய் நிலையான் வந்தது. பகைதவிர் என்ற குறிப்புமாம்.

பெயரும் குடியும் பண்பும் தொகைநூல் பேசிற்று. அவற்றோடு அடிமைத் திறத்தின் உறைத்த பண்பும், சரித வரலாறும் வகை நூல் உரைத்தது. இவை விரிந்த வகை விரிநூலுட் கண்டுகொள்க.

இனி, இப்புராணத்தை 409 திருப்பாட்டுக்களாற் கூறுகின்றார் ஆசிரியர். அவற்றுள் 1—8வரை திருப்பாட்டுக்களில் ஏயர்கோன் கலிக்காமனூரது நாடு-நகரம் - குடி-குலம் - அடிமை-பண்பு முதலிய சிறப்புக்களையும் ஆளுடைய நம்பிகள் சிவபெருமானைத் தூதுவிட்டதனுக்குச் சினந்து இழிப்ப வந்த செயலையும் கூறியருள்கின்றார். அதன்மேல் 9—382 பாட்டுவரையில் நம்பிகள் திருத்தொண்டத் தொகையருளிய பின், பல தலங்களையும் வணங்கித் திருவொற்றியூர் சார்ந்து, "பிரியே"னென்று சபதம் செய்து, சங்கிலியாரை மணந்து, பின் திருவாரூரை நினைந்து சபதந் தவறியமையாற் கண் மறையப்பெற்று, வரும் வழியில் காஞ்சீபுரத்தில் இடக் கண் பெற்றுத், திருவாரூர் சேர்ந்து மற்றைக் கண்ணும் பெற்றுப், பரவையார் மாளிகையிற் செல்லவொட்டாமல் பரவையார் ஊடல் கொள்ள அதை நீக்க இறைவரைத் தூதுவிட்டு எழுந்தருளியிருந்தது வரை உள்ள வரலாறுகளைக் கூறுகின்றார். அதன் பின் 383 முதல் 409 வரை அச்செயல் பற்றி ஏயர்கோனூர் சினந்து நம்பிகள்பால் பகைமை பூண்ட செயலையும், அந்நோய் நீக்க நம்பிகளை இறைவர் ஏவ, அது தெரிந்து, ஏயர்கோனூர் வயிற்றிடை உடைவாளாற் குத்திக்கொண்டு நோயும் உயிருந் தீரக் கிடந்ததையும், அது கண்ட நம்பிகள் தாமும் அவ்வுடைவாளினால் உயிர் துறக்கத் துணிந்தபோது இறைவரருளால் கலிக்காமனூர் உயிர் பெற்றெழுந்து உடைவாளைப் பற்றிக்கொள்ள, இருவரும் நண்புரிமை பெற்ற நிலையினையும் கூறிச் சரித நிறைவாக்குகின்றார். இதனால் கலிக்காமனூர் சரித அமைதியையும், நம்பிகள் சரிதம் முன்றொடர்ச்சி பெற்று, மேல், கழறிற்றறிவார் நாயனூர் வரலாற்றிற்றொடர வரும் நிலையினையும் உணர்ந்து கொள்க. இதனை ஆசிரியர் 3162-ல் கூறுதல் காண்க.

**விரி :—3155.** (இ - ள்.) நீடு - நாட்டிடை. நீடிய வண்மையுடைய சோழர்களது நீர்வளமுடைய நாட்டினிலே; நிலவு...கீழ்பால் - நிலவப் பெற்ற பக்கங்களில் பொன் கொழிக்கும் காவிரியினது வடகரையில் கிழக்குத் திசையிலே; ஆடு...நகர்

தான் - ஆடும் பூங்கொடிகளையுடைய மாடங்கள் நீடியுள்ள அழகிய நகரானது ; பீடு...பெயர்த்து - பெருமை தங்கிய திருப்பெருமங்கலம் என்னும் பெயரினை உடையது. (ஆல் - அசை.)

(வி - ரை) நீடு...கீழ்பால் - அரச மரபும், நாட்டு வளமும், நீர்ச் சிறப்பும் ஒருங்கு கூறிய நயம் காண்க.

காவிரி வடகரைக் கீழ்பால் - காவிரியின் வடகரையில் உள்ள பகுதிகளில் கிழக்கில் உள்ள.

கீழ்பால் - நகர் - பெயர்த்து என்க. ஆடு பூங்கோடி மாடம் நீடிய அணி - இதனால் நகரச் சிறப்புக் கூறியபடி.

அணிநகர் - கை புனைந்த அலங்காரமன்றி இயல்பாகவே அழகுடைய நகரம்.

பீடு - பெருமை. இது மாறாத சிவமங்கலப் பெருமை. பெருமங்கலம் என்றது நகர்ப் பெருமையினை விளக்கியபடி. தங்குதலாவது தலைவராகிய நாயனார் உயிர் துறந்த ஞான்றும் மாறாது மங்கலம் பொருந்தச் செய்த நிலை.

பெயர்த்து - பெயரினை உடையது. பெருமங்கலம் என்றலே யமையுமாயினும் மேலும் பெயர்த்து என்றது பெயருக்கேற்ற பண்புடையது என்ற குறிப்புப் படக் கூறியதாம். இச்சரிதத்தில் நாயனாரது தேவியார் திருமணத்தினன்று புனைந்த மலர்க்கூந்தலினை அரியப் பெற்ற பின், திருவருளால் மீள வளரப் பெற்றனர். இச் சரிதத்தில் நாயனார் தம்மைத்தாம் உயிர் துறந்தமையால் இழக்க நின்ற மங்கலத்தினை அவர் மீள உயிர் பெற்றெழுந்தமையால் அம்மையார் மீளப் பெற்றனர். இச்சரிதக் குறிப்பும் பெறத் திருப்பெரு மங்கலப் பெயர்த்து என்று கூறிய நயமும், அக் குறிப்பேற நகர்தான் - பெயர்த்தால் என்று ஈரிடத்தும் அசை புணர்த்தி ஓதிய நயமும் கண்டு கொள்க.

தான் - ஆல் - அசை. 1

3156. இஞ்சி சூழ்வன வெந்திரப் பந்திசூழ் ஞாயில் ;
மஞ்சு சூழ்வன வரையென வுயர்மணி மாடம் ;
நஞ்சு சூழ்வன நயனியர் நளினமெல் லடிச்செம்
பஞ்சு சூழ்வன காளையர் குஞ்சியின் பரப்பு. ௨

(இ - ள்.) இஞ்சி...ஞாயில் - திருமதில் சூழப்பெற்றுள்ளன எந்திர வரிசைகளாற் சூழப்பட்ட மதில் ஞாயில்கள் ; மஞ்சு...மாடம் - மேகங்கள் சூழப்படுவன மலைகள் போல உயர்ந்த அழகிய மாடங்கள் ; நஞ்சு சூழ்வன நயனியர் - விடத்தின் தன்மைபோலக் கொடுமை நிறைந்த கண்களையுடைய பெண்களது; நளின மெல்லடிச் செம்பஞ்சு - மெல்லிய தாமரைபோன்ற அடிகளில் ஊட்டிய செம்பஞ்சுக் குழம்பு ; சூழ்வன - சூழப்படுவன ; காளையர் குஞ்சியின் பரப்பு - இளங்காளையர்களது முடி மயிர்களின் பரப்பு.

(வி - ரை.) ஞாயில் இஞ்சி சூழ்வன ; மாடம் மஞ்சு சூழ்வன ; குஞ்சியின் பரப்புப் பஞ்சு சூழ்வன என்று கூட்டுக. நஞ்சு சூழ்வன என்றவிடத்து சூழ்வன என்பது பெயரெச்சம் : ஏனைச் சூழ்வன என்பவை வினைமுற்று.

எந்திரப்பந்தி சூழ்ஞாயில் - பகைவர்கள் மதிலைக் கடந்து புகாமைப் பொருட்டு மதில்களிற் பலவகை இயந்திரங்கள் வைக்கப்படுவன : இவை நெருப்பு உமிழ்வன, நூற்றுவரைக் கொல்வன, முதலியனவாகப் பலவகையாயுள்ளன.

இந்நாளிலும் கோட்டைமதில்களிலும் வாயில்களிலும் பலவகை இயந்திரங்கள் வைக்கப்படுதல் காண்க. ஞாயில் - மதிலுறுப்பு. இஞ்சி - மதில்: சூழ்வன - சூழல் - சூழ்ச்சியுடன் எண்ணி அமைக்கப்படுதலும் குறிப்பு.

மாடம் மஞ்சு சூழ்வன - என்பது மாடங்களின் உயர்ச்சி குறித்தது.

காளையர் துஞ்சியின் பரப்பு நயனியர்களது அடிச்செம்பஞ்சு சூழ்தல் - தலைவியர் ஊடிய வழி, ஊடல் தீர்த்ததற் பொருட்டுக் காளையர் அவர்கள் அடியில் பொருந்த வீழ்தலா லாவது. ஊடலில் இவ்வாறு நிகழ்தலும் மரபென்பர். நஞ்சு சூழ்வன - என்றது பெருங் கோபக் குறிப்பு. நஞ்சு - விடத்தன்மை குறித்தது.

நயனியர் - கண்ணோக்கினாலே காமநோய் புலப்படுப்பாரென்பது குறிப்பு: "ஒருநோக்கு நோய் நோக்கு" (குறள்) "செருவெழுந் தனுவ தொன்றும்" (2996) என்று இதன் தன்மையினைக் குறித்தல் காண்க.

காளையர் - என்றதனால் இத்தன்மையின் நிகழும் ஆண்மக்களின் பருவ முணர்த்தியபடி.

துஞ்சியின் பரப்பு - ஆண்மக்களின் பரந்து நீண்ட தலைமயிரின் தன்மை குறித்தபடி. துஞ்சி - இங்கு ஆண்மக்களின் தலைமயிர் குறித்தது.

இஞ்சி ஞாயில் - என்றதனால், நாடு நகரச் சிறப்பும், மாடம் - என்றதனால் நகர வளமும், நயனியர் - காளையர் என்றதனால் மகிழ்ச்சியுடைய மக்களின் வளமும் கூறப்பட்டன. இதனையே மேல்வரும் பாட்டில் தொடர்ந்து சொல்லுதல் காண்க.

சூழ்வன - என்பன இப்பாட்டில் சொற்பின்வருநிலை. இவை பல பொருளாக மதிப்பிடவரும் நிலை ஆசிரியரது கவி நலச்சிறப்பு. 553 முதலியவை பார்க்க. 2

3157. விழவ றாதன விளங்கொளி மணிநெடு வீதி ;
முழவ றாதன மொய்குழ லியர்நட வரங்கம் ;
மழவ றாதன மங்கலம் பொலிமணி முன்றில் ;
உழவ றாதநல் வளத்தன வோங்கிருங் குடிகள். ௩

(இ - ள்.) விழவு...வீதி - விளக்கமுடைய அழகிய வீதிகள் விழாக்களை நீங்காதிருந்தன ; முடிவு...அரங்கம் - அடர்ந்த கூந்தலையுடைய பெண்களின் ஆடரங்கங்கள் முழா முழக்கத்தினை நீங்காதிருந்தன ; மழவு...முன்றில் - மங்கலம் பொலிகின்ற அழகிய முற்றங்கள் சிறார்களை நீங்காதிருந்தன ; உழவு...குடிகள் - செழிப்புடைய பெருங் குடிகள் உழவு தொழிலின் நீங்காத நல்ல வளப்பங்களைக் கொண்டிருந்தன.

(வி - ரை.) அறுதன - சொற்பொருட் பின்வருநிலை : நீங்காதிருக்கும் நிலை குறித்தன.

வீதி, அரங்கம், முன்றில், குடிகள் - இந்நான்கு எழுவாய்களும் பின் வந்தன, முறையே நீங்காது அவை கொண்டு விளங்கும் விழவு முதலியவற்றின் சிறப்பினை முன்னுணர்த்தற்கு.

முழவறுதன அரங்கம் - இவை தெருவுதொறும் உள்ள நாடக மேடைகள். "கவினார் வீதித், தேந்தாமென் றரங்கேறிச் சேயிழையார் நடம்பயிலுந் திருவையாறே" (6) "வலம் வந்த மடவார்கள் நடமாட முழவதிர" (தே. 1.) ; முழவு - மத்தளவோசை.

மணிமுன்றில் - மனைகளின் முற்றங்கள். மழவறுதன முன்றில் - என்றது சிறார்கள் மனை முற்றங்களில் விளையாடும் தன்மை குறித்தது.

மழவறாதன அரங்கம் - பொலி - "மங்கல மென்ப மனைமாட்சி மற்றத, னன்கல நன்மக்கட் பேறு" என்ற கருத்தினை உட்குறித்தது. முன் 1908, 1909 பாட்டுக்களில் இதனை விரித்தமை காண்க. மங்கல - மழவு - என்று கூட்டியுரைப்பதும் சிறப்பு.

உழவறாத நல் வளத்தன-குடிகள் - இப்புராணமுடைய நாயனார் வேளாள ராதற் குறிப்பினால் அச்சிறப்புப்பற்றிக் கூறிய நயம் கண்டுகொள்க. இஃது ஆசிரியரது தெய்வக் கவிநலச் சிறப்புக்களுள் ஒன்று. ஆளுடைய பிள்ளையார், சண்டீச நாயனார், திருநீல நக்க நாயனார், கண்ணப்பர், ஆளுடைய அரசுகள், திருநாளைப் போவார், அதிபத்தர் முதலியோர் புராணங்களுள்ளும் அவ்வவர் மரபுச் சிறப்புக் காட்டும்படி அவ்வந் நாடு நகரங்களின் பொலிவு கண்டு காட்டிய நலங்களும் ஈண்டு நினைவு கூர்தற்பாலன.

நல் வளம் - உழவினால் வரும் வளங்களின் ஈடற்ற உயர்வும், ஏனைத் தொழில் வளங்களிற் படும் குற்றங்களில்லாமையும் குறிப்பு. 3

3158. நீரி னிற்பொலி சடைமுடி நெற்றிநாட் டத்துக்
காரி னிற்றிகழ் கண்டர்தங் காதலோர் குழுமிப்
பாரின் மிக்கதோர் பெருமையாற் பரமர்தாள் பரவுஞ்
சீரின் மிக்கது சிவபுரி யெனத்தகுஞ் சிறப்பால். ௪

(இ - ள்.) நீரினில்...குழுமி - கங்கையாற்றினைக் கொண்டு விளங்கும் சடைமுடியினையும், நெற்றிக் கண்ணினையும், மேகம்போல விளங்கும் கண்டத்தினையும் உடைய சிவபெருமானிடம் பேரன்புடையவர்கள் கூடி ; பாரின்...பெருமையால் - உலகில் மிக்கதாகிய ஒப்பற்ற பெருமையினாலே ; பரமர்...மிக்கது - சிவபரஞ்சுடரின் திருவடிகளையே துதிக்கின்ற சிறப்பினாலே மிகுந்தது ; சிவபுரி...சிறப்பால் - அச்சிறப்பினாலே அது சிவபுரி என்று சொல்லப்படும் தகுதியினை யுடையது.

(வி - ரை.) நீர் - சிறப்பினாலே கங்கையாற்றினைக் குறித்தது. நீரினிற் பொலிதல் - நீரைச்சூடி விளங்குதல். காதலோர் - அன்பு காதலாய் முற்றி விளைந்த பேரன்பர்கள்.

காதலோர் குழுமிப் பாரின் மிக்கதோர் சீர் - இப்புராணத்து வரலாற்றினுள் "எம்பிரா னெந்தை தந்தை தந்தையெங் கூட்ட மெல்லாந், தம்பிரா னீரே யென்று வழிவழி சார்ந்து வாழும், இம்பரின் மிக்க வாழ்க்கை" (3546 - 392) என்று வரும் கருத்தின் முற்குறிப்பு.

பாரின் மிக்கது ஓர் பெருமை - உலகில் வரும் ஏனை எல்லாப் பெருமைகளி லும் இதுவே மிக உயர்ந்தது என்பதாம்.

பரமர் தாள் பரவும் - தாள் - தாள்களையே என்று பிரிநிலை யேகாரம் தொக்கது. "தம்பிரா னீரே" (3546)

சிறப்பால் - அச்சிறப்பினாலே : சிறப்பால் - எனத்தகும் - என்று கூட்டுக.

மிக்கது - முன்கூறிய திருப்பெரு மங்கலமாகிய அந்நகர் என்று எழுவாய் முன் (3155) பாட்டினின்றும் வருவிக்க. முன் இரண்டு பாட்டுக்களால் உலகியல் நிலையில் நாடு நகர் வளங் கூறினார். இப்பாட்டினால் உயிரியல் நிலையின் சிறப்பினைக் கூறினார். 4

3159. இன்ன வாழ்பதி யதனிடை யேயர்கோக் குடிதான்
மன்னி நீடிய வளவர்சே னாபதிக் குடியாங்

தொன்மை மேவிய தொடர்ச்சியா னிகழ்வது தூய
பொன்னி நாட்டுவே ளாண்மையி லுயர்ந்தபொற் பினதால். ரு

(இ - ள்.) இன்ன...குடிதான் - இத்தன்மைத்தாகிய வாழ்வுடைய பதியினிடத்தே ஏயர் கோக்குடியானது; மன்னி...குடியாம் - நிலைபெற்று வழிவழி வளர்ந்து வருகின்ற சோழர்களது சேனாபதிக் குடியாகிய; தொன்மை...நிகழ்வது - பழமை பொருந்திய தொன்றுதொட்டு வரும் தொடர்ச்சியினாலேயே பொலிவது; தூய...பொற்பினது - தூய்மையுடைய காவிரி நாட்டில் வேளாண்மைத் திறத்தால் உயர்ந்த அணிநலம் வாய்ந்தது; (ஆல் - அசை).

(வி - ரை.) ஏயர் கோக்குடி - குடியாம்: (அது) நிகழ்வது - பொற்பினது என்று கூட்டி முடிக்க.

ஏயர் - ஹேஹயர் என்பது ஏயர் என மருவியது. இதுவே கேகயர் - என வழங்கலாயிற்றென்பர். ஏயர் - குடிப் பெயர். கோ - தலைமை குறித்தது.

சேனாதிபதிக் குடியாம் - சேனாதிபதியாக வரும் தன்மை ஒரு குடியின் வழிவழி மரபுரிமையாக வந்தது முன்னைநாள் வழக்கு. 881-ல் உரைத்தவை பார்க்க.

ஏயர் கோக் குடி - கோ - தலைமை என்பது முதனூலாகிய "ஏயர்கோன் கலிக்காமன்" என்ற திருத்தொண்டத் தொகையானும், வழிநூலாகிய "ஏயர் சீர்க் குடியே" என்ற திருத்தொண்டர் திருவந்தாதியானு மறிக.

தொன்மை மேவிய தொடர்ச்சி - பழங்கால முதல் இடையறாது தொடர்ந்து வழி வழி வருவது. நிகழ்தல் - விளங்குதல்.

வேளாண்மை - உழவுச் செல்வம்; பொற்பாவது - செழிப்பும் தகுதியும் சிறப்புமாம்: வேளாண்மையில் - வேளாண்மை காரணமாக என்க. நாட்டு - நாட்டின்; நாட்டுக்குச் சிறப்பாயுரிய என்றலுமாம்.

வேளாண்மையிற் பொலிவது - இப்புராணமுடைய நாயனார் வேளாளராதற் குறிப்பு. வரும் பாட்டுப் பார்க்க.

நிகழ்ச்சியா னிறைவது—என்பதும் பாடம். 5

3160. அங்கண் மிக்கவக் குடியினி லவதரித் துள்ளார்
கங்கை வாழ்முடி யார்தொண்டர் கலிக்காம ரென்பார்
தங்க ளுபக ரடிபணி வாரடிச் சார்ந்து
பொங்கு காதலி னவர்பணி போற்றுதல் புரிந்தார். சு

(இ - ள்.) அங்கண் ... அவதரித்துள்ளார் - அவ்விடத்துப் பெருமையால் மிகுந்த அந்தக் குடியிலே வந்து அவதரித்துள்ளவர்; கங்கை...என்பார் - கங்கை வாழும் சடைமுடியினை யுடைய சிவபெருமானுடைய திருத்தொண்டராகிய கலிக்காமர் எனப்படுபவர்; தங்கள்...புரிந்தார் - தமது பெருமானது திருவடி பணிவார்களது திருவடிகளைச் சார்பாகக் கொண்டு மேன்மேல் வளரும் மிக்க அன்பினாலே அவ்வடியவர் பணியினை விரும்பிச் செய்து வந்தார்.

(வி - ரை.) அங்கண் - அ - முன்கூறிய அந்த ஏயர் கோக்குடி என அகரமிரண்டும் முன்னறி சுட்டு.

தங்கை...தொண்டர் - சிவனடியார்; என்பார் - எனப்படுவார்.

தங்கணாயகர்...புரிந்தார் - தாம் சிவனுக்குத் தொண்டு பூண்டொழுகியதுடன் சிவனடியார்கள் பணியினை அதனினும் மிக்க அன்புடன் விரும்பிச் செய்தனர் என்பது. சார்ந்து - சார்பாகக் கொண்டு. போங்குதல் - மேன்மேல் அதிகரித்தல். போற்றுதல் - விரும்பி மேற்கொள்ளுதல். புரிதல் - இடைவிடாது நினைத்தல் - சொல்லுதல் - செய்தல். இதனால் இந்நாயனார் சிவபத்தியேயன்றிச் சங்கம பத்தியிலும் சிறந்தவர் என்பதும், அவ்விரண்டனுள்ளும் அடியார் பணியே சிறக்க மேற்கொண்டொழுகினர் என்பதும் கூறப்பட்டன. இவர் வழிவழி சிவனடிமையிற் சிறந்தொழுகினர் என்பது மேல் (3546) கூறப்படுதல் காண்க.

கலிக்காமர் என்பார் - உள்ளார் என்க: எழுவாய் பின் வைக்கப்பட்டது. அவரது அடியார்க்கடியாராந் தன்மையை முடித்துக் காட்டுதற் பொருட்டு. 6

3161\. புதிய நாண்மதிச் சடைமுடி யார்திருப் புன்கூர்க்
கதிக மாயின திருப்பணி யனேகமுஞ் செய்து,
" நிதிய மாவன நீறுகந் தார்கழ " லென்று
துதியி னாற்பர வித்தொழு தின்புறு கின்றார், எ

3162\. நாவ லூர்மன்னர் நாதனைத் தூதுவிட் டதனுக்
" கியாவ ரிச்செயல் புரிந்தன!" ரென்றவ ரிழிப்பத்
தேவர் தம்பிரா னவர்திறந் திருத்திய வதற்கு
மேவ வந்தவச் செயலினை விளம்புவா னுற்றேன். அ

3161\. (இ - ள்.) புதிய...செய்து - புதிதாய் முளைத்த இளஞ்சந்திரனைச் சூடிய சடை முடியினையுடைய சிவபெருமானது திருப்புன்கூருக்கு மேலான அனேகந் திருப்பணிகளையும் செய்து; நிதியமாவன...இன்புறுகின்றார் - திருநீற்றை விரும்பிய சிவபெருமானது திருவடியே தமக்குச் செல்வமானது என்று துதிகளாற் போற்றி வணங்கி யின்பமடைகின்றாராகிய அக்கலிக்காமனார்,

3162\. (இ - ள்.) நாவலூர்...தூது விட்டதனுக்கு - திருநாவலூர்த் தலைவராகிய நம்பியாரூரர் சிவபெருமானைப் பரவையார்பால் தூதாக அனுப்பியதனுக்கு; யாவர்...இழிப்ப - இவ்வாறு செயல் செய்வோர் யாவர்! என்று அவர் குறைகூற; தேவர் தம்பிரான்...திருத்திய - தேவ தேவராகிய சிவபெருமான் அவரது அக்கருத்தினைத் திருத்தும் பொருட்டு; அதற்கு...உற்றேன் - அதற்குப் பொருந்த வந்த அவ்வருட்செயலின் வரலாற்றினைச் சொல்லப் புகுகின்றேன்.

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபுகொண் டுரைக்க நின்றன.

3161\. (வி - ரை.) புதிய நாண்மதி - புதிய மூன்றாம்பிறைச் சந்திரன். அமாவாசை மறைவினின்றும் அன்று மீளத் தோன்றுதல் கருதிப் புதிய என்றார். நாள் - இளமை குறித்தது. புதிய - நாள் - ஒருபொருட் பன்மொழி. இளமையின் மிகுதி குறித்தது. திருப்புன்கூர்க்கு அதிகமாயின திருப்பணி அநேகம் செய்தல் என்றது - அப்பதியில் எழுந்தருளிய இறைவருக்கே யன்றி அப்பதியினுக்கும் என்ற குறிப்பு: அதிகமாயின - அநேகம் என்ற பன்மையும் இக்குறிப்பு. ஒரு காலத்தில் மழை மறுத்து நாடு வருந்தக் கண்டு ஏயர்கோனார் மழையினை வேண்டிப் பன்னிரு வேலி நிலம் தந்து இறைவர்பாற் குறையிரந்து இங்கு வரங்கிடக்க, இறைவ

ரருளாற் பெருமழை பெய்து எங்கும் பெரு வெள்ளமாயிற்று ; பின்னர் அப்பெரு மழையினைத் தடுக்க மேலும் பன்னிரு வேலி நிலம் தந்து வேண்ட, அது நின்றதென்பது வரலாறு. "வையக முற்று மாமழை மறந்து வயலி னீரிலை மாநிலந் தருகோம், உய்யக் கொள்கமற் றெங்களை யென்ன வொளிகொள் வெண்முகி லாய்ப்பரந் தெங்கும், பெய்யு மாமழைப் பெருவெள்ளந் தவிர்த்துப் பெயர்த்தும் பன்னிரு வேலிகொண் டருளும், செய்கை " என்று ஆளுடைய நம்பிகள் இவ்வரலாற்றைப் பொறித்து வைத்த திருவாக்கைக் காண்க. முன்னர் மழை பெய்யப் பன்னிரு வேலியும், பின்னர் மழை ஓயப் பன்னிரு வேலியுமாகத் தருதலின் அதிகமாயின என்று இக்குறிப்புப் பெறுவித்தல் காண்க: ஒருகாலத்துத் தமக்கு நேர்ந்த நோய் நீங்குதற் பொருட்டுக் கலிக்காமனார் பன்னிரு வேலி நிலம் தந்தனர் என்ற வரலாறும் "ஏத நன்னில மீரறு வேலி யேயர் கோனுற்ற விரும்பிணி தவிர்த்து" என்ற நம்பிகளது திருவாக்கால் பெறப்படுகின்றது. இவையேயன்றி ஏயர்கோனார் திருப்புன்கூரிறைவரையே ஆன்மார்த்தமாக வழிபட்டு நற்றிருப் பணிகள் அனேகமுஞ் செய்தனர் என்ற வரலாறும் கேட்கப்படுகின்றது. திருப்பணி அநேகம் என்றது இக்குறிப்பு. திருப்புன்கூர் நாயனாரது பதியாகிய திருப்பெருமங்கலத்துக்கு அருகில் தெற்கில் ஒரு நாழிகை யளவில் உள்ளது. (I பக். ௩௧௨. தலவிசேடம் பார்க்க.)

"நீதியமாவன...கழல்" என்று - இது நாயனார் உட்கொண்டொழுகிய குறிக்கோள். "அளித்துப் பெருஞ்செல்வ மாக்குமை யாற னடித்தலமே" (திருவிருத்தம்) "நெதிய மென்னுள போகமற் றென்னுள நிலமிசை நலமாய, கதிய மென்னுள... ஏத்துதல் புரிந்தோர்க்கே" (அம்பர் மாகாளம் - பண் - நாட்டராகம். பின்.) முதலியவை காண்க. "பாரோடு விசும்பாட்சி யெனக்குமது பாதமலர்" (கழறிற். புரா. 159) என்று கூறும் கழறிற்றறிவார் நாயனார் கருத்தும் காண்க.

நீறுகந்தார் - திருநீற்று நெறியே சிவநெறியாவது என்பதை மெய்ப்பொருளார், ஏனாதியார், புகழ்ச் சோழர் முதலியோர் சரிதங்களால் அறிக. நீறு உகந்தார் என்பது நீற்றினை விரும்பியணிந்தார் என்பதன்றி, நீறு ஆகு பெயராய் நீற்று நெறி நிற்கும் திறத்தினை உணர்த்தித் திருநீற்றின் அடிமைத் திறத்தினை உகந்து அருள்பவர் என்ற குறிப்பு முணர்த்திற்று.

என்று - என்பது மனநிலை, பரவி - வாக்குநிலை, தொழுது - மெய்ந்நிலை, என்ற திரிகரண வழிபாடுங் காண்க.

இன்புறுகின்றார் - அடிமைத்திறம் பற்றி நின்று அதில் இன்புற்று வாழ்தல் அன்புடைமையின் சிறப்பு. "ஆடுவதும் பாடுவது மானந்த மாகநினைத், தேடுவது நின்னன்பர் செய்கை பராபரமே" (தாயுமானார்) ; "சிரிப்பார் களிப்பார் தேனிப்பார்..." (திருவா.)

இன்புறுகின்றார் - இன்புறுகின்றாராகிய கலிக்காமனார். வினைப் பெயர் ; இன்புறுகின்றார் - அவர் இழிப்ப - என மேல்வரும் பாட்டுடன் முடிக்க. இவ்வாறன்றி வினைமுற்றாகவே வைத்து உரைப்பினு மிழுக்கில்லை. நிகழ் காலத்தாற் கூறியதனால் இஃது அவரியற்கை என்றுணர்த்தியபடி. "முந்நிலைக் காலமுந் தோன்று மியற்கை, யெம்முறைச் சொல்லு நிகழுங் காலத்து, மெய்ந்நிலைப் பொதுச்சொற் கிளத்தல் வேண்டும்" (தொல். சொல். வினை. 43) என்பதிலக்கணம். இதனையே "முக்காலத்தினு மொத்தியல் பொருளைச், செப்புவர் நிகழுங் காலத் தானே" என நன்னூலார் வகுத்துரைத்ததும் காண்க. இப்பாட்டினால் அரன்பணியும், முன்பாட்டினால் அடியார் பணியுமாக நாயனாரது அடிமைத் திறத்தினியல்பு கூறப்பட்டது. 7

3162. (வி - ரை.) இப்பாட்டினால் நாயனாரது சரித வரலாற்றின் சுருக்கமும் அமைப்பும் கூறப்பட்டன. சரிதம் பின்னர் (புரா. 283 = 3537 முதல் புரா. 408 = 3562 வரை) உள்ள பாட்டுக்களிற் கூறப்படுதல் காண்க.

இப்பாட்டினால் சரிதத்துக்குப் பதிகம் போலச் சுருக்கம் கூறித் தோற்றுவாய் செய்துகொண்டு, நம்பியாரூரர் வரலாறு பற்றி இச்சரிதம் நிகழ்தலால், அவர் திருத் தொண்டத்தொகை யருளியது முதல் பரவையா ரூடலினைத் திருவாரூர்ப் பெருமான் றூது சென்று தீர்த்த துணையாலே இனிதமர்ந்தருளியதுவரை, அவரது வரலாற் றினை முறையே கூறி, அவ்வாறு நம்பிகள் பெருமானைத் தூதுவிட்ட செய்தி கேட்டுக் கலிக்காமனார் வெம்பி நம்பிகள்பால் செற்றங்கொண்டார் என்று இச்சரிதத்தினைத் தொடங்கி விரித்து முடித்தனர் ஆசிரியர். இதனால் நம்பிகளது சரிதமும், முன், தடுத் தாட்கொண்ட புராணத்திறுதியில் விடுத்த இடத்தினின்று இச்சரித நிகழ்ச்சிவரை உடனே கூறிச் செல்லும் கவிநலமுங் கண்டுகொள்க.

நாவலூர் மன்னர் - திருநாவலூரில் அவதரித்த நம்பியாரூரர். மன்னர் - தலைவர்; மன்னராகிய நரசிங்கமுனையரையர்பால் வளர்ந்த காரணக் குறிப்பும்பட நின்றது.

நாதனைத் தூது விட்டதனுக்கு - நாதன் - தமது இறைவராகிய திருவாரூர்ப் பெருமான். தூதுவிட்ட செய்தி பின் 3477 (புரா. 323) முதல் 3528 (374)வரை வரும் பாட்டுக்களாற் கூறப்படும். விட்டதனுக்கு - விட்டமைபற்றி.

"யாவர் - புரிந்தனர் !" என்று இழிப்ப-யாவர்-புரிந்தனர் - செற்றங்கொண்ட அவலக் குறிப்புப் பற்றிய வினா. வேறு ஒருவருமிலர் என்பது. இழித்தல் - குறைவு படக் கூறுதல்.

திருந்திய . திருத்துதற்கு - திருத்தும் பொருட்டு.

திருத்திய - மேவ வந்த - செயல் என்க. செய்திய என்னும் வாய்பாட்டு வினை யெச்சம்.

வந்தவச் செயல் - இறைவர் இவ்விருவருக்குமிடையாடிச் செய்த செயலும், கலிக்காமனாரது செயலும், நம்பிகளது செயலும் கூடிய தொகுதி. செயல் - பால் பகா அஃறிணை. 8

வேறு

3163. திருத்தொண்டத் தொகையருளித் திருநாவ லூராளி
கருத்தொன்று காதலினாற் கனகமதிற் றிருவாரூர்
ஒருத்தர்கழல் முப்பொழுது முருகியவன் பொடுபணிந்து
பெருத்தெழுமெய் யன்பினாற் பிரியாதங் குறையுநாள், ௯

3164. தாளாண்மை யுழவுதொழிற் றன்மைவளந் தலைசிறந்த
வேளாளர் குண்டையூர் கிழவரொனு மேதக்கோர்
வாளார்வெண் மதியணிந்தார் மறையவராய் வழக்கினில்வென்
றாளாகக் கொண்டவர்தா ளடைந்தன்பா லொழுகுவார், ௧௦

3165. செந்நெல்லும் பொன்னன்ன செழும்பருப்புந் தீங்கரும்பின்
இன்னல்ல வமுதுமுத லெண்ணில்பெரும் பலவளங்கள்
மன்னியசீர் வன்றொண்டர்க் கமுதாக வழுவாமற்
பன்னெடுநாட் பரவையார் மாளிகைக்குப் படிசமைத்தார். ௧௧

3163. (இ - ள்.) *திருத்தொண்டத்தொகை அருளி* - திருத்தொண்டத் தொகையாகிய திருப்பதிகத்தினை அருளிச் செய்தபின் ; *திருநாவலூராளி* - திருநாவலூர்த் தலைவராகிய நம்பியாரூரர் ; *கருத்தொன்று காதலினால்* - மனம் ஒன்றுபட்ட பெரு விருப்பத்தினாலே ; *கனகமதில்...பணிந்து* - பொன்மதில் சூழ்ந்த திருவாரூரில் எழுந்தருளிய ஒருவராகிய தியாகேசப் பெருமானுடைய திருவடிகளை ஒவ்வொருநாளும் மூன்று போதிலும் மனமுருகிய அன்பினொடும் பணிந்து ; *பெருத்து...நாள்* - பெருகி மேன்மேல் எழுகின்ற மெய்யன்பினாலே பிரியாமல் அத்திருப்பதியில் தங்கிய காலத்தில் ; ௯

3164. (இ - ள்.) *தாளாண்மை...மேதக்கோர்* - தமது தாளாண்மையினால் உழவுத் தொழிலின் வரும் தன்மை வளங்களால் மிக்க சிறப்புடைய வேளாளராகிய குண்டையூர் கிழார் என்ற மேம்பாடுடைய பெரியார்; *வாளார்வெண்...ஒழுகுவார்* - ஒளி பொருந்திய வெண்பிறைச் சந்திரனை யணிந்த சிவபெருமான் மறையவராகி வழக்கிட்டு வென்று ஆளாகக் கொண்ட நம்பியாரூரது திருவடிகளைச் சார்வாக அடைந்து அன்பு பூண்டு ஒழுகுவாராய் ; ௧0

3165. (இ - ள்.) *செங்நெல்லும்...பலவளங்கள்* - செந்நெல்லும் பொன் போன்ற செழும் பருப்பும் இனிய கரும்பாகிய இனிய நல்ல அமுதும் முதலாகிய அளவில்லாத பெரிய பல வளங்களையும் ; *மன்னியசீர்...அமுதாக* - நிலைபெற்ற சிறப்புடைய வன்றொண்டராகிய நம்பியாரூரருக்குத் திருவமுதாக உதவும்பொருட்டு ; *வழுவாமல்...படிசமைத்தார்* - தவிராமல் பல நீண்ட நாட்கள் பரவையாரது திருமாளிகைக்குப் படிகொடுத்து வந்தார். ௧௧

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபுகொண்டு உரைக்க நின்றன.

3163. (வி - ரை.) **திருத்தொண்டத்தொகை அருளி** - இது தடுத்தாட்கொண்ட புராணத்திறுதியிற் கூறப்பட்டது. (347-348) ; அத்தொடர்பும் சரிதத் தொடர்பும் தெரிய இவ்வாற்றாற் கூறினார்,

**கருத்தோன்று காதல்** - மனத்தினை வேறொன்றினும் வைக்காமல் சிவனிடத்தே ஒன்றவைத்த பெருவிருப்பம். இது சிவயோகம் எனப்படும். காதல் - நாயகன் நாயகிகளிடையே நிகழ்வது ; இங்கு ஆன்மநாயகனாகிய சிவபெருமானிடத்து நிகழும் அன்பின் மேன்மை குறித்தது. "ஒன்றி யிருந்து நினைமின்கள்" (தேவா.)

**ஒருத்தர்** - சிவபெருமான் ; வேதங்களுள் "ஒன்று" என்று சொல்லும் பரம் பொருள். இங்குத் தியாகேசரைக் குறித்து நின்றது.

**ஒருத்தர் கழல் முப்பொழுதும்** - எண்ணலங்காரச் சுவைபடக் கூறியது.

**உருகிய அன்பு** - மனம் உருகுதற்குக் காரணமாகிய அன்பு.

**பெருத்தெழும் மெய்யன்பினால்** - மேன்மேல் வளர்கின்ற உண்மை அன்பினாலே கருத்தொன்று காதல் மனமுருகிப் பணியக் காரணமாயிற்று ; அது மெய்யன்பாய் விளைந்து பெருத்தெழுந்தது ; அதனால் முப்பொழுதும் வணங்கிப் பிரியாது உறைந்தனர் எனக் காரணகாரியத் தொடர்பு கொண்டு உரைத்துக் கொள்க. திருநாவலூராளி - பிரியாது உறையும் நாளில் குண்டையூர்க் கிழவர் - அடைந்து அன்பால் ஒழுகுவார் - படி சமைத்தார் என்று இம்மூன்று பாட்டுக்களையும் தொடர்ந்து உரைத்துக்கொள்க. 9

3164. (வி - ரை.) **தாளாண்மை** - விடா முயற்சி. தாள்-முயற்சி ; ஆண்மை - ஆளும் தன்மை. "தாளாற்றி" (குறள்).

தாளாண்மை உழவு தொழிற்றன்மை வளம் - உழவு தொழிற் பெரு முயற்சியி னாலே வரும் நேரியவளங்கள். இவை நெல் முதலியனவும், காய்கனி முதலியனவும், பால்தயிர் நெய் முதலியனவும், இவைகொண்டு பெறும் பிறவுமாம். இவற்றை மேல் வரும் பாட்டில் விரித்தல் காண்க.

வேளாளர் குண்டையூர் கிழவர் - வேளாளர் என்பதனால் மரபுச் சிறப்பினை யும், குண்டையூர்க் கிழவர் என்பதனால் ஊர்பற்றிய பெயர்ச்சிறப்பினையும் கூறியபடி. கிழவர் - கிழார் மரூஉ. இது வேளாளர் மரபுக்கு வழங்கும் சிறப்புப் பெயர். இது முன்னாள் மிகுதியும் வழக்கிலிருந்தது ; இந்நாள் அருகி வழங்குவதாயிற்று. தனிப் பெயர் கூறாது ஊர்பற்றிக் கூறியது மரபின் சிறப்புணர்த்திற்று. (தொல். பொருள் - மரபு - 74 உரை) தேவாரப் பதிகத்தினுள் இவ்வூரினையே சிறப்பித்தமை காட்டும் குறிப்புமாம்.

ஆளாகக்கொண்டவர் தாள் அடைந்து - ஆளாகக்கொண்டவராதலின் அவர் தாளடைந்து எனக் காரணக் குறிப்புப்பட ஓதினார்.

வழக்கினில் வென்று ஆளாகக்கொண்டவர்-தடுத்தாட்கொண்ட வரலாறு: நம்பி யாரூரர் வரலாற்றில் குண்டையூர் கிழார் ஈடுபட்டு அன்பு செய்து ஒழுகினார் என்பது.

அன்பால் ஒழுகுவார் - இவ்வொழுக்க நிலை பற்றிய செயலை மேற்பாட்டிற் கூறுவார். 10

3165. (வி - ரை.) செந்நெல் - செந்நெல்லின் மேன்மை பற்றி அரிவாட் டாய நாயனார் புராணமும், பிறவும் பார்க்க.

பொன்னன்ன செழும் பருப்பு - பொன்னிறம் பருப்பின் உயர்வு காட்டுவது.

தீங்கரும்பின் இன்னல்ல அமுது - இன் - நல்ல - இனிய என்பது சுவையினை யும் - நல்ல என்பது குணத்தினையும் குறித்தது. அமுது என்றார் நேரே உணவாகப் பயன்படுதற் குறிப்பு.

வன்றொண்டர்க்கமுதாக - "வழக்கினில் வென்றாளாகக் கொண்டவர்" என்று முன்பாட்டிற் கூறியதற் கேற்ப வன்றொண்டர் என்றார்.

படி - படித்தரம் ; தினந்தோறும் அமைக்கும் அமுது படிக் கட்டளை. சமைத் தல் - அளவிட்டுச் செலுத்துதல். 11

3166. ஆனசெய லன்பின்வரு மார்வத்தான் மகிழ்ந்தாற்ற
வானமுறை வழங்காமல் மாநிலத்து வளஞ்சுருங்கப்
போனகநெற் படிநிரம்ப வெடுப்பதற்குப் போதாமை
மானமழி கொள்கையினான் மனமயங்கி வருந்துவார், கஉ

3167. "வன்றொண்டர் திருவாரூர் மாளிகைக்கு நெல்லெடுக்க
இன்றுகுறை யாகின்ற தென்செய்கே!" னெனநினைந்து
துன்றுபெருங் கவலையினாற் றுயரெய்தி யுண்ணாதே
அன்றிரவு துயில்கொள்ள வங்கணர்வந் தருள்புரிவார், கங

3168. "ஆரூரன் றனக்குன்பா னெற்றந்தோ" மென்றருளி
நீரூருஞ் சடைமுடியார் நிதிக்கோமான் றனையேவப்
பேரூர்மற் றதனெல்லை யடங்கவுநென் மலைப்பிறங்கல்
காரூரு நெடுவிசும்புங் காக்கநிறைந் தோங்கியதால். கச

3166. (இ - ள்.) ஆனசெயல்...ஆற்ற - ஆயின அச்செயலை அன்பினால் விளைகின்ற மிக்க ஆசையால் மனமகிழ்ந்து செய்வதற்கு ; வான முறை...சுருங்க - மழை முறைப்படி பெய்யாமையால் பெருநிலத்தின் வளங்கள் சுருங்கியபடியினாலே ; போனகம்...போதாமை - அமுதாகிய நெல்லும் பிற படித்தரங்களும் கொண்டு செலுத்துவதற்குப் போதா நிலைமையினால் ; மானமழி...வருந்துவார் - மானமழிந்த கொள்கையினாலே மனமயங்கி (குண்டையூர் கிழார்) வருந்துவாராகி ; கஉ

3167. (இ . ள்.) வன்றொண்டர்...நினைந்து - வன்றொண்டராது திருவாரூரின் மாளிகைக்கு நெற்படி எடுத்து உய்ப்பதற்கு இன்று குறைபாடு நேர்கின்றதே ; யான் என்ன செய்வேன் !'' என்று எண்ணி ; துன்றுபெரும்...எய்தி - மிக்க பெருங் கவலையினால் வருந்தி ; உண்ணாதே...கொள்ள - உணவு கொள்ளாமல் அன்றிரவில் துயின்றனராக ; அங்கணர் வந்து அருள்புரிவார் - அங்கணராகிய சிவபெருமான் அவர்பால் வந்து அருள் செய்வாராய் : கங

3168. (இ - ள்.) ஆரூரன்...அருளி - " ஆரூரனுக்குப் படி அமைப்பதற்காக உன்னிடத்து நெல்லினைத் தந்துள்ளோம் '' என்று கூறிக் கங்கை தவழ்கின்ற சடைமுடியினையுடைய பெருமானார் குபேரனை ஏவியிட அதனாலே ; பேரூர்...ஓங்கியது - பெரிய அவ்வூரின் எல்லை முழுதும் நெல் மலையாகிய பெருக்கம் மேகங்கள் தவழும் நீண்ட விசும்பும் மறையும்படி நிறைந்து உயர்ந்தது ; ஆல் - அசை. கச

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3166. (வி - ரை.) ஆன - ஆயின. முன் பாட்டிற் கூறலாயின ; ஆக்கமான என்ற குறிப்புமாம்.

ஆற்ற - ஆற்றுதற்கு ; ஆற்றப் - போதாமை என்று கூட்டுக.

வானம் முறை வழங்காமை - வானம் - மழை ; முறை - பருவ முறையாகிய நிலையும், மாதமும்மாரி என்ற நிலையும் குறித்தது ; வழங்காமல் - வழங்காமையால்.

வளம் - உழவினால் வரும் விளைபொருள்கள்.

போனக நெற்படி - போனகம் - உணவு ; படி - படித்தரம்.

நெற்படி - என்றதனால் நெல் முதலாகிய உணவுக்குரிய பண்டங்களெல்லாம் கொள்ளப்படும்.

எடுப்பதற்கு - எடுப்பித்துக் கொண்டுபோய்ச் செலுத்துவதற்கு.

போதாமை - போதாமையால்.

மானம் அழி கொள்கை - மானம் - பெருமை. உயிர்பற்றிய கடமைகளில் கொண்ட ஊக்கமாகிய உணர்ச்சி குறித்து நின்றது. உலகர் கொள்ளும் ஏனைய பெருமைகள் பாச சம்பந்தமாதலின் ஈண்டைக்குப் பொருந்தா என்க.

இயல்பின்வரும்—என்பதும் பாடம். 12

3167. (வி - ரை.) வன்றொண்டர் - இப்பெயராற் கூறினமை பற்றி முன் 3164-ல் உரைத்தவை பார்க்க.

துறை ஆகின்றது - துறை - பண்டங்களிற் குறைபாடும், அதுகாரணமாக நியதமாகக் கொண்ட செயலாற்ற இயலாமையாற் போந்த குறைபாடும் குறித்தது.

உண்ணாதே - கவலையினால் - துயில்கொள்ள - வன்றொண்டர்க்கு அமுதுபடி சமைக்கக் குறையாயினமையின் அதனைத் தமக்கு நேர்ந்த குறையென்று கொண்டு உணவு உண்ணாராயினர். உண்ணாது கிடத்தல் மனத்துயரங் காட்டும் அறிகுறி. " அமுது செய்யாதே '' (1561) என்றதும் ஆண்டுரைத்தவையும் பார்க்க.

உண்ணதே துயில்கோள்ள - அருள்புரிவார் - உண்ணதே கவலையினல் துயில் கொண்டமையினலே எனக் காரணப் பொருள் கொள்க.

துன்றுபெருங் கவலையினல் - அடியாரைப் பற்றிய பெருங் கவலையாதலின் அங்கணர் வந்து அது தீர அருள் புரிவாராயினர் என்பது "தாள்சேர்ந்தார்க் கல்லால் மனக்கவலை மாற்ற லரிது" என்ற திருக்குறளினும் பெறப்படுதல் காண்க.

அருள்புரிவார் - அருளி - ஏவ - என வரும்பாட்டுடன் முடிக்க. 13

3168. (வி - ரை.) ஆரூரன்றனுக்கு...அருளி - இது குண்டையூர் கிழாருக்கு இறைவர் கனவில் அருளியது.

நிதிக்கோமான்றனை ஏவ-நிதிக்கோமான் - அளகைக் கிறைவனுகிய குபேரன் ; குபேரன் சிவபிரான்றேழர். அட்ட திக்குப் பாலகர்களுள் ஒருவராய், நிதிக்கு அரசராய்ச், சிவபிரா னேவலின்படி அடியார்களுக்கு வேண்டிய வளங்களை அங்கங்கும் கொண்டு உய்க்கும் நியமத்துட்பட்டவர். இளையான்குடி மாற நாயனர் வரலாறும் (445), குங்குலியக்கலய நாயனர் வரலாறும் (844) பிறவும் பார்க்க.

ஏவ - நென்மலையாகக் குண்டையூரில் கொண்டு உய்க்கும்படி ஏவ - இது பின் விளைவினு லறிக.

பெருர்...ஓங்கியதால் - பெருர் - பெரிய ஊர் ; இங்குக் குண்டையூரைக் குறித்தது. மலைப்பிறங்கல்-மலை போன்ற பெருக்கு. பிறங்கல் - உயர்ச்சியுமாம். விசும்பும் கரக்க - கரத்தல் - மறைத்தல். விசும்பு கரக்க என்றது உயர்ச்சி குறித்தது.

ஏவ ஓங்கியது - இறைவர் ஏவுதலும் செயல் நிகழ்ச்சியும் உடன் நிகழ்ந்த விரைவு குறித்தது.

ஆரூரன்தனக்கு உன்பால் நெல் தந்தோம் - ஆரூரன்றனக்கு - ஆரூரருக்குப் படி சமைப்பதற்காக ; இஃது ஆரூரருக்கே நேரே தரப்பெருமல் குண்டையூர் கிழாருக்குத் தரப்பெற்றமை என்னையோ ? எனின், குண்டையூர் கிழாரின் மனக்கவலை தீர்வதற்கும் அவரது திருப்பணி நிறைவேறக் காண்பதற்குமாக இறைவர் அருள் வைத்தபடி என்க. மேற்கூறப்படுவனவும் காண்க.

அடங்கவும் - முழுவதும் - ஊர் எல்லை நென்மலையின் உள்ளே அடங்க என்ற குறிப்புமாம்.

பிறங்கி—பிறங்க—என்பனவும் பாடங்கள். 14

3169. அவ்விரவு புலர்காலை யுணர்ந்தெழுவா ரதுகண்டே
"யெவ்வுலகி னென்மலைதா னிது?"வென்றே யதிசயித்துச்
செவ்வியபொன் மலைவளைத்தார் திருவருளின் செயல்போற்றிக்
கௌவைவாய்ப் பரவையார் கொழுநரையே தொழுதெழுவார், கடு

வேறு

3170. "நாவலூர் மன்ன ரூர்க்கு நாயனு ரளித்த நெல்லிங்
கியாவரா லெடுக்க லாகு?; மிச்செய லவர்க்குச் சொல்லப்
போவன்யா" னென்று போந்தார் ; புகுந்தவா றருளிச் செய்து
தேவர்தம் பெருமா னேவ நம்பியு மெதிரே சென்றூர். கசு

3169. (இ - ள்.) அவ்விரவு...கண்டே - குண்டையூர் கிழார் அன்று இரவு விடியற் காலையில் துயி லுணர்ந் தெழுவாராய் அதனைக் கண்டே ; எவ்வுலகின்...

அதிசயித்து - "இதுதான் எந்தவுணர்த்தின் விளைந்த நென்மலை" என்று அதிசயம் கொண்டு ; செவ்விய...போற்றி - சிவந்த பொன்மேரு மலையினை வில்லாக வளைத்த சிவபெருமானுடைய திருவருட் செயலினைத் துதித்து ; கொவ்வைவாய்...தொழு தெழுவார் - கோவைக் கனிபோன்ற வாயினையுடைய பரவையாருடைய கொழுந ராகிய நம்பியாரூரரையே தொழுதெழுவாராகி, கடு

3170. (இ - ள்.) நாவலூர்...என்று போந்தார் - திருநாவலூர்த் தலைவராகிய நம்பியாரூரருக்காகச் சிவபெருமான் கருணை செய்த நெல், ஆதலின் இதனை இங்கு யாவர்களாற் சுமந்தெடுக்க முடியும்? (ஒருவராலுமியலாது) ; இச்செயல்...யான் என்று போந்தார் - இந்தச் செயலினை அவர்க்குச் சொல்ல நான் போவேன் என்று போயினர் ; புகுந்தவாறு...ஏவ - நிகழ்ந்த படியினைத் தேவதேவராகிய சிவபெரு மான் நம்பியாரூரருக்குச் சொல்லி ஏவியருளியபடி ; நம்பியும்...போந்தார் - ஆரூர் நம்பிகளும் எதிரே சென்றருளினர். கசு

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபுகொண்டன.

3169. (வி : ரை.) அவ்விரவு - இறைவர் தமது கனவில் வந்து சொல்லிய அவ்விரவு என்று அகரம் முன்னறி சுட்டு.

புலர்காலை உணர்ந்தெழுவார் - குண்டையூர் கிழாரென்னும் எழுவாய் அவாய் நிலையான் வருவிக்க (3164) ; உணர்ந்து - துயிலுணர்ந்து ; புலர்காலே உணர்ந்து என்றதனால் இது வைகறைக்கணு வென்பதும், அதனால் உடன் பயன்றருவதென்பதும் கருதப்படும். "புலர்வுறும் வைகறை" (2106) என்ற விடத்துரைத்தவை பார்க்க.

அதுகண்டே - அது - ஊர் எல்லையடங்கவும் விசும்பு காக்க ஓங்கிய நென்மலை ; அது - இது - இரண்டும் பொருள் ஒன்றனையே சுட்டின ; அது என்பது முன் காணாத இன்னதென்றறிய வாராத கனவு நிலை குறித்த சேய்மைச் சுட்டு ; இது - கண்ட பின் மனத்தினுட் கொண்டு கருதவருதலின் அண்மைச் சுட்டு.

அதிசயித்து - அதிசயம் - கண்ணுற் கண்டாராயினும் இன்னதென் றறிய வாராமையின் நிகழ்ந்த பெருமிதம். "அதிசயம் கண்டாமே" (திருவா).

திருவருளின் செயல் - அருள் - காரணம் ; செயல் - அதனுல் நிகழ்ந்த வெளிப் பாடாகிய பொருள்.

கொவ்வைவாய் - கொவ்வை - கோவைக்கனி. கோவை என்பது கொவ்வை என மருவி வந்தது.

கொழுநரையே - ஏகாரம் தேற்றம். திருவருள் வெளிப்படுதற்குக் காரணமாய் நின்ற உரிமை பற்றியது. கொழுநர் - தலைவர் என்பது குறிப்பு.

தொழுதெழுவார் - தொழுதலும் எழுதலும் உடனிகழ்ந்த நிலை குறித்தது. "கொழுநற் றொழுதெழுவாள்" (குறள்) என்புழிப் போல ; கொழுநரையே என்ற குறிப்பும் காண்க.

எழுவார் - போந்தார் - என மேல் வரும் பாட்டுடன் முடிக்க.

எழுவார் - எழுவாராகி - முற்றெச்சம். 15

3170. (வி - ரை.) மன்னனூர்க்கு - மன்னர் - தலைவர் ; மன்னனூர்க்கு - மன்னவருக்குத் தரும்பொருட்டு.

நாயனூர் - தலைவர்-இறைவர் ; "நாயனீரே" (774) ; நாதனூர் என்ற பாடமு முண்டு.

மன்னனார்க்கு நாயனார் அளித்த நெல் - இந்த யாவரால் எடுக்கலாகும் - கொடுத்தாரும், கொடுக்கப் பெற்றாரும், கொடைப்பொருளும் பெரியனவாதலின் வேறு பிறரால் எடுக்கலாகாது என்பது ; இந்த யாவரால் - இந்நிலவுலகத்தில் நாதனார் அருளினாலன்றி வேறு எவரால். வினா எவராலும் எடுக்கலாகாதென எதிர்மறை குறித்து நின்றது ; " பயனென்கொல் ?" (குறள்) என்புழிப்போலக் கொள்க.

இச்செயல் முன் - " திருவருளின் செயல் " (3169) என்ற செயலும், அது யாராலும் எடுக்கலாகாத் தன்மையும்.

புகுந்தவாறு - ஏவ - இச்செயலினையும், கிழார் வரும் நிலையினையும், முன்னமே இறைவர் நம்பியாரூரருக்கு அருளிச் செய்து அதனைச் சென்று காண்பாய் ! என்று ஏவியருளினார் என்க. நம்பிகள்பால் திருவாரூரிலே தாராது குண்டையூரில் தந்து அங்கு நம்பிகளுக்கு அறிவித்து ஏவியருளியவாறு பற்றி முன் (3168) உரைக்கப்பட்டது. குண்டையூர் கிழாரின் அடிமைத் திறமும், நம்பி ஆரூரரின் பெருமையும், இறைவரருள்புரியும் எளிமையும், பரவையாரின் வள்ளண்மையும் ஒருங்கே வெளிப்பட்டு உலகர் அறிந்துய்யவும், நம்பிகள் இது பற்றிய திருப்பதிகம் அருளி ஆள் வேண்டிட அவ்வாறே அருளும் திறமும் உலகர் கண்டுய்யவும் போந்த அருளின் நிகழ்ச்சி என்க. மேல் வருவன (3171-3182) பார்க்க. " ஆட்பாலவர்க் கருளும் வண்ணமு மாதி மாண்பும், கேட்பான்புகி லளவில்லை கிளக்கவேண்டா " (திருப்பாசுரம்) என்ற திருவாக்குக் காண்க. திருவாத்துறை யிறைவர் முத்துச்சிவிகை முத்துச் சின்னங்கள் முதலியவற்றை யருளி அடியார்க் கறிவித்துப், பிள்ளையாருக்கும் அறிவித்தருளியபடியினையும் (2093—2105), ஏயர்கோனார்பால் சூலையினை வைத்து, அது தீரும் வண்ணத்தினை அவர்பாலும் ஆரூர் நம்பிகள்பாலும் தனித்தனியே அறிவித்தருளும்படியினையும் (3543—3548), இவ்வாறு வரும் பிற அருளிப்பாடுகளையும் நோக்குக.

நம்பியும் - நாயனாரது ஏவலினைக் கேட்ட நம்பிகளும் என உம்மை இறந்தது தழுவிய எச்சவும்மை.

எதிரே - தம்மிடம் அறிவிக்கப் போந்த குண்டையூர் கிழாரின் எதிரே. 16

3171. குண்டையூர் கிழவர் தாமு மெதிர்கொண்டு கோதில் வாய்மைத்
தொண்டனார் பாதந் தன்னிற் றொழுதுவீழ்ந் தெழுந்து நின்று
" பண்டெலா மடியேன் செய்த பணியெனக் கின்று முட்ட
அண்டர்தம் பிரானார் தாமே நென்மலை யளித்தா " ரென்று, கஎ

3172. "மனிதரா லெடுக்கு மெல்லைத் தன்றுநென் மலையி னாக்கம் ;
இனியெனாற் செய்ய லாகும் பணியன்றி " தென்னக் கேட்டுப்
" பனிமதி முடியா ரன்றே பரிந்துமக் களித்தார் நெல் "லென்
றினியன மொழிந்து தாமுங் குண்டையூ ரெய்த வந்தார். கஅ

3171. (இ - ள்.) குண்டையூர் கிழவர்...நின்று - குண்டையூர் கிழவரும் எதிர்கொண்டு வந்து குற்றமற்ற வாய்மையுடைய தொண்டனாராகிய நம்பியாரூரருடைய திருவடியில் தொழுது நிலமுறவிழுந்து எழுந்து நின்று ; பண்டெலாம்... என்று - முன் காலமெல்லாம் அடியேன் தேவரீருக்குச் செய்து வந்த பணிவிடை எனக்கு இன்று முட்டுப்பாடுற்றபோது தேவர் பெருமானாராகிய சிவபெருமானார் தாமே நெல் மலையினை அளித்தருளினார் என்று சொல்லி; கஎ

3172. (இ – ள்.) மனிதரால்...என்ன - இந்த நெல்மலையின் பெருக்கம் மனிதர்களால் சுமந்தெடுக்கும் அளவுட்பட்டதன்று ; இனி, இது என்னாற் செய்யக்கூடிய பணியன்று என்று சொல்ல ; கேட்டு - (நம்பியாரூரர்) அதனைக் கேட்டு ; பனிமதி... மொழிந்து - குளிர்ந்த சந்திரனை முடித்த சிவபெருமானன்றே "அருள் சுரந்து இந்நெல்லினை உமக்கு அளித்தார்" என்று இனிய மொழிகளைக் கூறி ; தாமும்...வந்தார் - தாமும் குண்டையூரினைச் சார வந்தருளினார். கஅ

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிவு கொண்டன.

3171. (வி - ரை.) எதிர்கொண்டு - நம்பியாரூரரை எதிர்கொண்டு வந்து.

கோதில் வாய்மை - கோதில் - என்றது தன்மை விளக்கி நின்றது.

பண்டெல்லாம்...பணி - முன்னாளிலெல்லாம் அடியேன் உமக்கு அமுதுபடி சமைத்து வந்த பணி.

அண்டர் தம்பிரானார் தாமே - நான் வேண்டிக்கொள்ளாமலே அவர் தாமே தமது கருணைப் பெருக்கினாலே. என்று - என்ன - என வரும் பாட்டுடன் முடிக்க.

அளித்தார் — கருணையினால் அருளினார் என்ற குறிப்பு. 17

3172. (வி - ரை.) மனிதரால்...ஆக்கம் - மனிதரால் சுமந்தெடுத்து இங்குக் கொண்டு வந்து உய்க்கும் அளவில் அடங்குவதன்றெனவே, இறைவரருளப் பூதங்களாலேதான் இயல்வது என்றது. ஆக்கம் - பெருக்கம்.

இனி...இது - இது - இந்நெல்லைச் சுமந்து வந்து திருமாளிகையில் உய்க்கும் பணி. செய்யலாகும் - செய்யக்கூடிய.

பனிமதி...நெல் என்று - இறைவர் தாமே உமக்கு நெல் அளித்தார் என்பது என்பொருட்டளித்தாராயின் திருவாரூரில் அளித்திருப்பர்; அவ்வாறன்றிக் குண்டையூரில் அளித்து உமக்கு அருளியமையால் உமது அன்பின் பொருட்டே யளித்தனர் என்றவாறும். இனியன - இனிமையான மொழிகளை. தாமும் - அவருடனே தாமும் கூடி.

நென் மலையினோக்கம்—என்பதும் பாடம். 18

3173. விண்ணினை யளக்கு நெல்லின் வெற்பினை நம்பி நோக்கி
அண்ணலைத் தொழுது போற்றி யதிசய மிகவு மெய்தி
"எண்ணில்சீர்ப் பரவை யில்லத் திந்நெல்லை யெடுக்க வாளுந்
தண்ணில வணிந்தார் தாமே தரிலன்றி யொண்ணா" தென்று, கசு

வேறு

3174. ஆளிடவேண் டிக்கொள்வா ரருகுதிருப் பதியான
கோளிலியிற் றம்பெருமான் கோயிலினை வந்தெய்தி
"வாளன கண்மடவாள் வருந்தாமே" யெனும்பதிகம்
மூளவருங் காதலுடன் முன்றொழுது பாடுதலும், ௨0

3175. "பகற்பொழுது கழிந்ததற்பின் பரவைமனை யளவன்றி
மிகப்பெருகு நெல்லுலகில் விளங்கியவா ரூர்நிறையப்
புகப்பெய்து தருவனநம் பூதங்க" ளெனவிசும்பில்
நிகர்ப்பரிய தொருவாக்கு நிகழ்ந்ததுநின் மலனருளால். ௨க



திருவஞ்சைக்களம் - கோயில் முன்கோபுர வாயிலில்
சேரமானார் - சுந்தரர் திருவுருவங்கள்



“சேரமான் பறம்பு”; இளவரசராய் இருந்தபோது சேரலனார் திருவஞ்சைக்களத்தில்
தங்கியிருந்த அரண்மனை இடம். ஞாபகத்தூணும் சிவலிங்கங்களும்



கொடுங்கோளூர் - சிவன் கோயில் முன் வாயிலும் கோபுரமும்

திருஞானசம்பந்தர் திருநாள் – விகுர்தி - வைகாசி - 19௳
(உரைச்சுவடிகளை இரண்டாவது வரிசை இடையில் அன்பர் தாங்கி நிற்கின்றார்)



ஆளுடைய பிள்ளையார் புராணம் அச்சு நிறைவு விழாத் திருக்கூட்டம்
ஆச்சாள்புரம் என்னும் நல்லூர்ப்பெருமணக் கோயில் (உட்புறமிருந்து பெரிய கோபுரம் பார்வை) 1-6-1950

3173. (இ - ள்) விண்ணினை...நோக்கி - ஆகாயத்தை அளாவ உயர்ந்த நெல்மலையினை நம்பி ஆரூரர் நோக்கி ; அண்ணலை...எய்தி - பெருமையுடையாராகிய சிவபெருமானைத் தொழுது மிகவும் அதிசயம் அடைந்து ; "எண்ணில்...ஒண்ணாது" என்று - அளவில்லாத சிறப்பினையுடைய பரவையாரது திருமாளிகைக்கு இந்நெல்லினை எடுத்துச் சேர்க்க ஆளினையும் குளிர்ந்த சந்திரனை அணிந்த சிவபெருமான் தாமே தந்தருளினாலன்றி வேறெவ்வாற்றாலு மியலாது" என்று துணிந்து, கக

3174. (இ - ள்) ஆளிட வேண்டிக் கொள்வார் - ஆள் தரும்படி வேண்டிக் கொள்வாராகி ; அருகு...எய்தி - அருகில் உள்ள திருப்பதியாகிய திருக்கோளிலியிலே தமது பெருமானுடைய திருக்கோயிலினில் வந்து சேர்ந்து ; வாளன...பதிகம் - "வாளன கண்மடவாள் வருந்தாமே" என்ற சொற்றொடரினையும் குறிப்பினையுமுடைய திருப்பதிகத்தினை ; மூள...பாடுதலும் - மேன்மேலும் பெருகி வரும் பெருவிருப்பத்துடனே திருமுன்பு தொழுது பாடுதலும், உ0

3175. (இ - ள்) நின்மலனருளால் - சிவபெருமானது திருவருளினாலே ; நிகர்ப்பரியது ஒரு வாக்கு - ஒப்பற்ற ஓர் திருவாக்கு ; பகற்பொழுது...என - "பகற்பொழுது கழிந்த பின்பு பரவையாரது மனையளவு மட்டுமன்றி மிகப்பெருகும் இந்நெல்லினை உலகில் விளங்கிய திருவாரூர் நிறையப் புகும்படி கொண்டு நம்முடைய பூதகணங்கள் சேர்த்துத்தருவன" என்று ; விசும்பில் நிகழ்ந்தது - ஆகாயத்தில் உண்டாயிற்று. உக

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபுகொண்டுரைக்க நின்றன.

3173. (வி - ரை) அளக்கும் - உயரத்தினை அளப்பது போன்று மேல் ஓங்குதல்.

மிகவும் அதிசயம் எய்தி - "அதிசயித்து" (3169).

எண்ணில் சீர்ப் பரவை இல்லத்து - இல்லத்துக்குரியவர் மனைவியாரேயாகும் குறிப்புப் பெறப் பரவையார் இல்லம் என்றார். பரவையாரது பெருஞ் சிறப்பு இந்நெல்லினைப் பற்றி "இன்றுங்கள் மனை எல்லைக்குட்படு நெற்குன்றெல்லாம் அவ்வவரே எடுத்துக் கொள்க" என இங்கு மேலும் விளங்க நிற்கும் தன்மை காண்க (3182).

எண்ணில் சீர் - இல்லம் என்று கூட்டி இனி இறைவர் இருமுறை திருவடி தோயத் தூது தர எழுந்தருளும் பெருஞ் சிறப்பும் குறிக்க வைத்த நயமும் கண்டு கொள்க. இதுபற்றிப் பின்(3516) உரைப்பனவும், முன் திருநகரச் சிறப்பில் (90-91) விதந்து எடுத்துரைத்தவையும் பார்க்க.

எடுக்க - எடுத்துக்கொண்டு உய்க்க ; "அட்டித்தா" என்பது பதிகம்.

ஆளும் - தரிலன்றி – நெல் தந்ததன்றி ஆளும் என உம்மை இறந்தது தழுவிய எச்ச உம்மை.

தாமே தரிலன்றி - இறைவரது அருட் செயல்கள் அவரருளானன்றி அளத்தற் கொண்ணா என்பது குறிப்பு. ஏகாரம் பிரிநிலை.

ஒண்ணாது - பிறரெவராலும் எடுத்தற்கியலாது.

என்று - எய்திப் - பாடுதலும் - என மேல் வரும் பாட்டுடன் முடிக்க. 19

3174. (வி - ரை) ஆள் இட - ஆள் தர.

அருகு திருப்பதியான கோளிலி - குண்டையூரினின்றும் நேர் தெற்கில் மட்சாலை வழி அரைநாழியளவில் உள்ளது திருக்கோளிலி.

குண்டையூர் - திருவாரூரினின்றும் தென்கிழக்காய்த் திருவமப்பேறூர், திருக்காறாயில், திருவலிவலம் என்ற இவற்றின் வழியாய் மட்சாலைவழி 10 நாழிகையளவில் அடையத் தக்கது. குண்டையூர் பெருந்தலமன்றாதலால் நம்பிகள் அருகில் உள்ளதும் சத்தவிடங்கத் தலங்களுள் ஒன்றும் ஆகிய திருக்கோளிலிக்குச் சென்று பதிகம் பாடியருளினர் போலும். குண்டையூரின் எல்லையடங்கவும் நென்மலைப் பிறங்கல் ஓங்கி ஆளியங்காவாறு வழி அடைத்ததாதலின் அருகு உள்ள பதியிற் சென்றனர் என்று கருதவுமிடமுண்டு. இந்நென்மலை பின்னர்த் திருவாரூர் அடங்கவும் நிறைந்து (3179) நெறிபலவும் போக்கரிதாக நிறையும் (3180) திறமும் இங்குக் கருதுக.

"வாளன கண்மடவாள் வருந்தாமே" என்னும் பதிகம் - பதிகக் கருத்துரைத்தது; பதிக முதற்பாட்டு: நெல்லிட ஆள் வேண்டுவதன் காரணம் கூறும் வகையால் இது பதிகக் குறிப்புமாயிற்று. பதிக முழுதும் இக்குறிப்பு விரவி வருதலும் காண்க. திருமுதுகுன்றப் பதிகமும் இவ்வாறே காணத் தக்கது.

மூளவரும் காதல் - மேன்மேற் பெருகும் பெருவிருப்பம்; மூளுதலாவது இந்நெல்லினால் இனித் திருவாரூர் வாழ்வாரும் அடியார்களும் பயன் பெற உள்ள நிலை பற்றி எழுவதாம்.

முன் - திருமுன்பு; காலத்தால் முன்னர் என்றலுமாம். பதிகம் பாடு முன் தொழுது பாடுதல் மரபு. பதிகம் பாடித் திருவரக்குக் கேட்டு பின்பு தொழுதல் மேற் காண்க. "தொழுதேத்தி" (3176)

பாடுதலும்—நிகழ்ந்தது—என மேல்வரும் பாட்டுடன் முடிக்க. 20

## திருக்கோளிலி

திருச்சிற்றம்பலம். பண் - நட்டராகம்

நீள நினைந்தடியே னுமை நித்தலுங் கைதொழுவேன்
வாளன கண்மடவா ளவள் வாடி வருந்தாமே
கோளிலி யெம்பெருமான் குண்டை யூர்ச்சில நெல்லுப்பெற்றேன்
ஆளிலை யெம்பெருமா னவை யட்டித்தரப் பணியே. (1)

கொல்லை வளம்புறவிற் றிருக் கோளிலி மேயவனை
நல்லவர் தாம்பரவுந் திரு நாவல வூரனவன்
நெல்லிட வாட்கள்வேண்டி நினைந் தேத்திய பத்தும்வல்லார்
அல்லல் களைந்துலகி லண்டர் வானுல காள்பவரே. (10)

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு:**—பரவையார் வருந்தாமே ஆரூருக்கு நெல்லெடுக்க ஆள் தர வேண்டும். 3174-ல் ஆசிரியர் கூறியவாறும், "ஆளிலை எம்பெருமான் அவை யட்டித்தரப் பணியே" (1), "பரவை பசிவருத்தம் அது நீயுமறிதியன்றே" (6), "பரவையவள் வாடுகின்றாள்" (8), "நெல்லிட ஆட்கள் வேண்டி" (11) என்ற பதிகப் பகுதிகளும் பார்க்க.

**பதிகப் பாட்டுக் குறிப்பு:**—(1) நீள நினைந்து - நீள - முன்னை நிலையிலும், அத்தொடர்பறாது இம்மையிலும், இனி வருங்காலத்தும் என்பது குறிப்பு. மடவாள் - பரவையார். 8-ம் பாட்டும் பார்க்க.

வாடி வருந்தாமே - அடியார்க் கமுதளிக்க நெல்லில்லாமைபற்றி வருந்தாமல்; அட்டித்தர - கொண்டு உய்த்தல். அட்டிற்றர என்று பாடங் கொண்டும், அட்டில் -

சமையலறை எனக் கொண்டும் சமையலறையில் தர என்றுரைப்பாருமுண்டு ;—(2) உமை - பங்குடையாய் "மாதர் நல்லார்வருத் தமதுநீயு மறிதி யன்றே" ;—(3) "இடத்தில் வைத்தாய்" ;—(4) (5) (6) (7) (ஷை) ஆதலின் பரவையாரின் வருத்தம் நீ அறிவாய் என்பது குறிப்பு. அண்டமதாயவன்;—(6) விசுவரூபி. "அவையே தானேயாய்" (போதம்) ;—(4) பூசல்-குற்றம்; அல்லல் - வாட்டம்;—(6) நாவு - மயிர்ச்சாந்து ; குராமலருமாம். அறிதி - உயிர்க்குயிராய் அமர்ந்து உயிர்களின் நிகழ்ச்சிகளை உடனிருந்தறிவாய் ;—(8) எப்பொழுதும் - "நீள" (1) ;—நெல்லிட ஆட்கள் வேண்டி - பதிகக் குறிப்பு.

தலவிசேடம் :—திருக்கோளிலி - முன் 2413-ன் கீழ் உரைத்தவை பார்க்க.

3175. (வி - ரை) "பகற்பொழுது......பூதங்கள்" என - இது பதிகங் கேட்டவுடன் இறைவர் விசும்பிடை நின்று கூறிய அசரீரி வாக்கு.

பகற்பொழுது கழிந்ததற்பின் - சிவகணங்களின் செயல் மக்கள் கண்ணுக்குப் புலப்படா வகை நிகழுமாதலால் நெல்மலை முழுதும் குண்டையூரினின்றும் 10 நாழிகையளவில் திருவாரூரில் உய்க்கும் நிலை, மக்கள் காணுவண்ணம் பகற்பொழுது கழிந்ததற்பின் - பெய்து தருவன என்றார்.

பரவை மனையன்றி - ஆரூர் நிறைய - பின் விளைவு (3182) காண்க. இந் நெல்மலை முழுதும் பரவையார் மாளிகை யொன்றின்கட் சேர்க்க இயலாதென்பது கருத்து. பரவை யில்லத்து எடுக்க ஆள் (3173) வேண்டிய நம்பியாரூரருக்கு இந் நெல் பரவையார் மனையளவின்றி ஆரூர் நிறையப் பெய்யப் பெறுவன என்றபடி.

உலகில் விளங்கிய - உலகத்தில் "ஊழிவெள்ளமும் கொள்ளாக் கழனி ஆரூர்" என்றும், "முன்னோ பின்னோ திருவாரூர் கோயிலாக் கொண்ட நாளே" என்றும், மேலும் புகழுநின்ற பண்பினாலும் திருத்தொண்டத் தொகை பெறநின்ற பண்பினாலும், பலவாற்றானும் விளக்கம் பொருந்திய.

நம் பூதங்கள் - நமது சிவகணங்களாகிய குண்டைக் குறட் பூதங்கள் ; "நீடு தேவர் நிலைகளும் வேண்டிடின், நாடு மைம்பெரும் பூதமு நாட்டுவ" (16) என இவைகளின் தன்மையை நூன்முகத்தே உரைத்தவை இங்கு நினைவு கூர்தற்பாலன.

விசும்பில் - அருளால் - வாக்கு நிகழ்ந்தது என்க. அசரீரி வாக்கு என்பார் நிகர்ப்பரிய என்றார். ஒலி வெளிப்படுதற்குரிய கருவிகளின்றி நிகழ்வதாலும், சிவனருள் புலப்பட வருதலானும் நிகர்ப்பரிதாயிற்று. 21

3176. தம்பிரா னருள்போற்றித் தரையின்மிசை விழுந்தெழுந்தே
உம்பரா லுணர்வரிய திருப்பாதந் தொழுதேத்திச்,
செம்பொனேர் சடையாரைப் பிறபதியுந் தொழுதுபோய்
நம்பரா ரூரணைந்தார் நாவலூர் நாவலனார். உஉ

(இ - ள்) தம்பிரான்...எழுந்தே - தமது பெருமானாரது திருவருளினைத் துதித்து நிலத்தின்மேல் விழுந்து எழுந்தே ; உம்பரால்...ஏத்தி - தேவர்களாலும் உணர்தற்கரிய திருவடிகளைத் துதித்துப் பரவி ; செம்பொன்னேர்...போய் - செவ்விய பொன்போல விளங்கும் சடையினையுடைய சிவபெருமானைப் பிற பதிகளிலும் வணங்கிச் சென்று ; நம்பர்...நாவலனார் - திருநாவலூரில் வந்தருளிய நாவலராகிய நம்பியாரூரர் இறைவரது திருவாரூரை வந்து சேர்ந்தனர்.

(வி - ரை) அருள் - அசரீரியால் நிகழ்ந்த அருளிப்பாடாகிய மொழி.

உம்பரா லுணர்வரிய - இவ்வருளின் தன்மை தேவர்க்கு மறிவரிது என்றபடி ; " நெடுவிசும்பும் காக்க '' (3168) "விண்ணினை அளக்கும்'' (3173) முதலியவற்றின் குறிப்பும் காண்க. சிறப்பு உம்மை தொக்கது.

போன் - பொன்னின் விளக்கமாகிய ஒளி.

பிற பதியும் - பிறபதிகளிலும் - ஏழனுருபு தொக்கது.

பிற பதிகளாவன - திருக்கோளிலிக்கும் திருவாரூருக்கு மிடையிலும் அணிமையிலும் உள்ளன. இவை திருவலிவலம், திருநெல்லிக்காவல், திருக்காறாயில், திருஏமப்பேறூர் முதலாயின என்பது கருதப்படும்.

நாவலனூர் - '' உயர் நாவலர் தனிநாதன் '' (223) ; '' தமிழ்நாதன் '' (232) முதலாக வருவன பார்க்க. நம்பர்-தாம் நம்பியடைதற்கிடமானவர் என்பதும், உயிர்கள் மேவுதற்குரியவர் என்பதும் குறிப்பு. "நம்பும் மேவும் நசையா கும்மே." 22

3177. பூங்கோயின் மகிழ்ந்தருளும் புராதனரைப் புக்கிறைஞ்சி
நீங்காத பெருமகிழ்ச்சி யுடனேத்திப் புறம்போந்து
பாங்கானூர் புடைசூழ்ந்து போற்றிசைக்கப் பரவையார்
ஓங்குதிரு மாளிகையி னுள்ளணைந்தா ராரூரர். உ௩

(இ - ள்) வெளிப்படை. பூங்கோயிலின் கண் மகிழ்ச்சியுடன் எழுந்தருளியுள்ள புற்றிடங் கொண்ட பெருமானை, உள்ளே புகுந்து வணங்கி, இடையறாத பெருமகிழ்ச்சியுடன் துதித்துப், புறத்திற் போந்து, பரிசனங்கள் முதலாயினர்கள் பக்கத்திற் சூழ்ந்து துதிக்கச் சென்று, பரவையாரது ஓங்குகின்ற திருமாளிகையின் உள்ளே நம்பியாரூரர் அணைந்தருளினர்.

(வி - ரை) பூங்கோயில் - திருவாரூர்க் கோயிலின் பெயர் (135).

புராதனர் - மிகப் பழமையானவர். '' முன்னைப் பின்னை '' என்ற திருத்தாண்டகக் கருத்துப் பார்க்க

பூங்கோயில்...ஏத்தி - குண்டையூர் சென்று திருக்கோளிலியில் பதிகம் பாடி அருள் பெற்றுத் திருஆரூரில் மீண்ட நம்பியாரூரர் நேரே தமது திருமாளிகையில் எழுந்தருளாது பூங்கோயிலினுட் புக்கு வணங்கிய பின்னரே திருமாளிகையுட் செல்கின்றார். இம்மரபு குறிக்கத் தக்கது. அவனருளா லல்லது ஒன்றையும் செய்யாத சீவன்முத்தரது தன்மைகளே இவ்வாறு விளைவன. திருமுதுகுன்றத்திற் பெற்ற பொன்னையும் (3292), திருப்புகலூரிற் பெற்ற பொன்னையும் (32(8) நம்பிகள், ஆள்களின் மூலம் திருமாளிகையுட்போக்கித் தாம் பூங்கோயிலினுட் சென்று இறைவரை வணங்கிச் செல்லும் நிலையும், இவ்வாறே வரும் பிறவும் இங்கு நினைவுகூர்தற்பாலன.

நீங்காத - ஒருகாலும் இடையறாத ; இது நம்பிகளது இடையறாத சிவராஜ யோகத்தினியல்பு.

பாங்கானூர் - அங்கு மேவினூர்கள் ; பரிசனங்கள் முதலோர். பாங்கு - உரிமையுமாம்.

ஓங்கு திருமாளிகை - இறைவர் தூதராக இருமுறை எழுந்தருளும் பெருமைக் குறிப்பு. 23

3178. கோவைவாய்ப் பரவையார் தாமகிழும் படிகூறி
மேவியவர் தம்மோடு மிகவின்புற் றிருந்ததற்பின்

சேவின்மே லுமையோடும் வருவார்தந் திருவருளின்
ஏவலினா லவ்விரவு பூதங்கண் மிக்கெழுந்து, உச

3179. குண்டையூர் நென்மலையைக் குறட்பூதப் படைகவர்ந்து
வண்டுலாங் குழற்பரவை மாளிகையை நிறைவித்தே
அண்டர்பிரான் றிருவாரூ ரடங்கவுநென் மலையாக்கிக்
கண்டவாற் புதமெய்துங் காட்சிபெற வமைத்தனவால். உரு

3178. (இ - ள்) கோவைவாய்...இருந்ததற்பின் - கோவைக் கனிபோலும் திருவாயினையுடைய பரவையார் மகிழும்படி நிகழ்ந்த செயல்களை எல்லாம் எடுத்துக் கூறி அவரோடுங் கூடி மிக இன்பமுடன் இருந்த பின்பு ; சேவின்மேல்...ஏவலினால்- இடபத்தின்மேல் உமையம்மையாருடனே எழுந்தருளி வரும் இறைவரது திருவருளின் ஏவுதலினாலே ; அவ்விரவு...மிக்கெழுந்து - அந்த இரவிலே சிவபூதங்கள் மிக்கு எழுந்து ; உச

3179. (இ - ள்) குண்டையூர்...நிறைவித்தே - அக்குறட் பூதப் படைகள் குண்டையூரிலிருந்த நென்மலையைக் கைக்கொண்டு எடுத்துச் சென்று, வண்டு உலவுதற்கிடமாகிய கூந்தலையுடைய பரவையாருடைய திருமாளிகையின்கண் நிறையச் செய்தே ; அண்டர்பிரான்...ஆக்கி - தேவர் பெருமானது திருவாரூர் முழுவதும் நென்மலையாக உய்த்து ; கண்டவர்...அமைத்தன - கண்டவர்கள் யாவரும் அற்புதமடையும்படி காட்சிப்பட அமைவு செய்தன ; (ஆல் - அசை) உரு

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபுகொண்டன.

3178. (வி - ரை) கூறி - குண்டையூரிற் கண்டவற்றையும், இறைவர்பால் வேண்டியதனையும், இறைவர் அசரீரியாக அருளியதனையும் கூறி.

மிக இன்புற்று இருந்ததற்பின் - இறைவரது அருட்டிறங்களை எண்ணி எண்ணி மகிழ்ந்து திளைத்திருந்த பின். அந்நாண் முழுதும் அவ்வெண்ணங்களே மிக்கன என்பது.

சேவின் மேல் உமையோடும் வருவார் - சிவபெருமான். இத்தன்மையாற் கூறியது ஈண்டு அருளின் வெளிப்பாடு குறித்தற்கு.

ஏவலினால்-நென்மலையினைத் திருவாரூரிற் கொண்டுய்க்கும்படி ஏவியருளியபடி.

பூதங்கள் - சிவகணமாகிய பூதங்கள். "குறட்பூதப் படை" (3179) என மேற்கூறுதல் காண்க. " குண்டைக்குறட் பூதம் " (தேவா).

மிக்கெழுந்து - கவர்ந்து - நிறைவித்தே - ஆக்கி - அமைத்தன என மேல் வரும் பாட்டுடன் முடிக்க. 24

3179. (வி - ரை) கவர்ந்து - கைக்கொண்டெடுத்து. மாளிகையை நிறைவித்தே - இது முதலிற் செய்த செயல். மாளிகையிடங் கொள்ளுமளவும் நிறைவு செய்தன. ஏகாரம் தந்து பிரித்துக் கூறியதும் அப்பொருட்டு. ஏகாரம் பிரிநிலை.

திருவாரூர் அடங்கவும் நென்மலை ஆக்கி - இது திருமாளிகையினை நிறைவாக்கிய பின் எஞ்சிய நென்மலையைப் பற்றிய செயல். அடங்கவும் - முழுவதும். மலை ஆக்கி - நகரின் திருவீதிகளெங்கும் மலைபோலக் குவித்து.

அற்புதமெய்தும் காட்சி - நெல்மலையினைக் கண்டவர்கள் அற்புதமாகிய மெய்ப்பாட்டுடன் காணத் தக்க காட்சி ; அற்புதமாவது, நெல்மலைகளின் அளவே

யன்றி, அவை போந்தவாறும், வகையும், பிறவும் அறியமுடியாதபடி உள்ளத்தெழும் பெருமித உணர்ச்சி. " அற்புத மறியேனே " (திருவா). மேற்பாட்டுப் பார்க்க. 25

3180. அவ்விரவு புலர்காலை யாரூரில் வாழ்வார்கண்
" டெவ்வுலகில் விளைந்தனநெல் மலையிவை"யென் றதிசயித்து
" நவ்விமதர்த் திருநோக்கி னங்கைபுகழ்ப் பரவையார்க்
கிவ்வுலகு வாழவரு நம்பியளித் தன "வென்பார், உகூ

3181. நீக்கரிய நெற்குன்று தனைநோக்கி நெறிபலவும்
போக்கரிதா யிடக்கண்டு மீண்டுந்தம் மில்புகுவார்
" பாக்கியத்தின் றிருவடிவாம் பரவையார்க் கிந்நெல்லும்
போக்குமிட மரிதாகு" மெனப்பலவும் புகல்கின்றார் ; உஎ

3182. வன்றொண்டர் தமக்களித்த நெற்கண்டு மகிழ்சிறப்பார்
" இன்றுங்கண் மனையெல்லைக் குட்படுநெற் குன்றெல்லாம்
பொன்றங்கு மாளிகையிற் புகப்பெய்து கோள்க"வென
வென்றிமுர சறைவித்தார் மிக்கபுகழ்ப் பரவையார். உஅ

3180. (இ - ள்) அவ்விரவு புலர்காலை - பூதங்கள் அவ்வாறு ஆரூர் அடங்க நென்மலையாக்கிய அந்த இரவு விடியும் காலையில் ; ஆரூரில்...அதிசயித்து - திருவாரூரில் வாழ்வார்கள் பார்த்து " இந்நெல் மலைகள் எவ்வுலகில் விளைந்தன ?" என்று அதிசயப்பட்டு; நவ்வி...என்பார் - "மானின் கண்போன்ற மதர்த்த திருநோக்கினை உடைய நங்கையாராகிய புகழினை உடைய பரவையாருக்கு இவ்வுலகம் வாழும் பொருட்டு வந்தருளிய நம்பிகள் அளித்தன இவை " என்று பற்பலவும் சொல்வார்களாகி ; உகூ

3181. (இ - ள்) நீக்கரிய...நோக்கி - விலக்குதற்கு அரிதாகிய நெற்குன்றினை நோக்கி ; நெறிபலவும்...புகுவார் - வழிகள் பலவும் போதற்கு அரியனவாயிடலான் அதனைக் கண்டு மீளவும் தமது வீடுகளிற் புகுவார்களாய் ; பாக்கியத்தின்...புகல்கின்றார் - "பாக்கியத்தின் திருவுருவேயாகிய பரவையாருக்கும் இந்த நெல்லினைக் கொண்டு சேர்க்கும் இடம் அரிதாகும் " என்று இவ்வாறு பலவும் சொல்வார்களாக ;

3182. (இ - ள்) மிக்கபுகழ்ப் பரவையார் - மிகுந்த புகழினையுடைய பரவையார் ; வன்றொண்டர்...சிறப்பார் - தமக்கு வன்றொண்டராகிய நம்பிகள் அளித்த நெல்லினைக் கண்டு மிக்க மகிழ்ச்சி பொருந்தியவராய் ; " இன்று...அறைவித்தார்- " இன்று உங்கள் மனைகளின் எல்லைக்குட்படும் நெல் எல்லாம் அவ்வவரும் தத்தம் செல்வமிக்க மாளிகைகளினுட் புகும்படி எடுத்துப் பெய்து கொள்க" என்று வெற்றி முரசம் அறையும்படி செய்வித்தார். உஅ

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபுகொண்டுரைக்க நின்றன.

3180. (வி - ரை) அவ்விரவு - இறைவாது ஏவலினால் பூதங்கள் நெல்லினைக் குண்டையூரினின்றும் திருவாரூரின்கண் கொண்டுய்த்த அந்த இரவு என அகரம் முன்னறிசுட்டு. "அவ்விரவு" (3178). புலர்காலை - இரவு நீங்கி விடியும் நேரத்தில்.

எவ்வுலகின்...அதிசயித்து - இது திருவாரூர் வாழ்வார்கள் நெல்லினைக் கண்ட போது முதலில் எழுந்த அவர்களது மன நிகழ்ச்சி ; கண்டு அதிசயித்து - கண்டதனால் அதிசயமடைந்து; "அதிசயம் கண்டாமே " (திருவா).

நவ்விமதர்த் திருநோக்கின் - நவ்வி - மான். இங்குப் பெண்மான் பார்வை குறிக்கும். " விழியாற் பிணையாம்" (சிற். கோ). மான் நோக்காவது மருண்ட பார்வை. அன்பு புலப்படுக்கும் பார்வை என்பது உட்குறிப்பு (3182); பின் கூறும் வரலாற்றின் முற்குறிப்பு. பரவையார்க்கு - அளித்தது என்க. அளித்தது - அளிக்கப்பட்டது. நம்பி - நம்பிகளால்.

இவ்வுலகு வாழவரும் - " மாதவஞ் செய்த தென்றிசை வாழ்ந்திடத், தீதிலாத் திருத்தொண்டத் தொகைதரப் போதுவார் " (35). 26

3181. (வி - ரை) நீக்கரிய - வழிகாணும்படி விலக்குதற்கரிதாகிய; நெறி பலவும் போக்கரிதாயிட - வீதிகள் பலவும் செல்லுதற்கருமையாக வழி அடைபட.

மீண்டும் தம் இல்புகுவார் - மனையினின்றும் வீதி வழி வெளிச்செல்ல முற்படுவார் அஃதியலாமை கண்டு மீளவும் தமது மனையினுட் புகுவாராகி.

பாக்கியம் - சிவபுண்ணியம். பரவையார்க்கும் - எனச் சிறப்பும்மை தொக்கது. இந்நெல்லும் - உம்மை - முன் தமது மாளிகையளவிற் சேர்த்ததனோடு இதனையும் என இறந்தது தழுவிய எச்சவும்மை ; பலவும்-இவ்வாறு தத்தம் மனத்தெழுந்த கருத்துக்கள் பலவற்றையும்.

புகல்கின்றார் - சொல்கின்றார்களாக ; ஆரூர் வாழ்வார்கள் புகல்கின்றாராகப் - பரவையார் முரசறைவித்தார் என முடிக்க. 27

3182. (வி - ரை) வன்றொண்டர் - முன் 3164-3165-ல் உரைத்தவை பார்க்க. குண்டையூர் கிழார் உட்கொண்டு வழிபட்ட கருத்தைக் குறித்து நின்றது.

மகிழ்சிறத்தல் - மகிழ்ச்சி மீக்கூர்தல்.

" இன்று உங்கள்...கோள்க " என-இது பரவையார் திருவாரூர் வாழ்வார்க்கு முரசறைந்து அறிவித்த செய்தி. இது பரவையாரின் பெருமையினைப் புலப்படுத்துவதாகும். நம்பிகள் பரவையார் பொருட்டுப் பொன்னும், பிறவும் வேண்டி இறைவரைப் பாடிப் பெறுகின்றார் எனச் சில அறிவில்லா மாக்களிடை வழங்கும் ஒரு பிழையானஎண்ணம் மிகத் தவறென்பது இதனால் விளங்கும். அவ்வவர் மனை எல்லைக் குட்பட்ட அளவு நெல்லை அவ்வவரே எடுத்துக் கொள்ளக் கடவர் என்பதாம். "கோவைவாய்ப் பரவையார்" (3178) ; " கொவ்வைவாய்ப் பரவையார்" (3169) என்றவை யெல்லாம் இவ்வாறு அருள் கனிந்த மொழிகள் வெளிவரும் இயல்பின் குறிப்புப்பட நின்றன. வற்காலத்தின் கொடுமையால் மக்கள் நெல்பெறாது வருந்தும் அந்நாளில் பரவையார் செய்தசெயல் காலத்தினாற்செய்த பெருநன்றியுமாதல் கருதுக.

பொன்றயங்கு மாளிகை - திருவருட் செல்வ நெல்நிறைதற் குறிப்பு.

புகப்பெய்துகோள்க - தாமே எடுத்துக்கொள்க.

வென்றி - ஈடணைத்திரயம் என்பவற்றுள் பொருட்பற்று அற எறிந்த வெற்றி.

முரசறைவித்தல் - அவ்வவர்க்குத் தனித்தனியாகவன்றி யாவரும் அறியும்படி பொது அறிவிப்பு நிகழ்த்தும் மரபு. தனித்தனி அறிவிக்க நெறியிடங்கொடாமையும் குறிப்பு. மேல்வரும் பாட்டில் " மறுகதனில் ஆளியங்கப் பறையறைந்த " என்பது காண்க. 28

3183. அணியாரூர் மறுகதனி லாளியங்கப் பறையறைந்த
பணியாலே மனைநிறைத்துப் பாங்கெங்கு நெற்கூடு
கணியாமற் கட்டிநகர் களிகூரப் பரவையார்
மணியாரம் புனைமார்பின் வன்றொண்டர் தமைப்பணிந்தார். ௨௯

(இ - ள்) அணியாரூர்...களிகூர - அழகிய திருவாரூரின் வீதிகளில் ஆட்கள் செல்லும் வழியுண்டாகப் பறைசாற்றுவிக்கப் பணித்தமையினாலே தத்தம் மனைகளை நிறைவித்தும் அவரவர்களுக்குள்ள பக்கவிடங்களிலெங்கும் நெற்கூடுகளை அளவின்றிக் கட்டி நகரமக்கள் மகிழ்ச்சி பெருகக் கண்டு; பரவையார்...பணிந்தார் - பரவையார் மணி ஆரம் பூண்ட மார்பினையுடைய வன்றொண்டரை வந்து பணிந்தனர்.

(வி - ரை) மறுகதனில் ஆளியங்க - வீதிகளில் மக்கள் நடந்து செல்ல இயலாதபடி நென்மலை நிறைந்திருந்த நிலை நீங்கி ஆட்கள் செல்ல வழியுண்டாக; "நெறி பலவும் போக்கரிதாயிடக் கண்டு" (3181) என்றது காண்க.

பறையறைந்த பணி - முன் பாட்டிற் கூறிய கட்டளை. கணியாமல் - அளவில்லாமல் - எண்ண முடியாதபடி. நெற்கூடு கட்டி - நெல்லைக் கூடுகட்டிச் சேமித்து. நகர் களிகூர - நகர மக்கள் மகிழ; நகர் - நகர மக்கள் - ஆகு பெயர். நகர் களிகூரக் கண்டு என்க. "ஈத்துவக்கும் இன்பம்" (குறள்).

பரவையார்...பணிந்தார் - தாம் அவ்வின்பம் பெறுவதற்குக் காரணர் வன்றொண்டரேயாம் என்பது கருதிப் பணிந்தனர்.

வன்றொண்டர் - இப்பெயராற் கூறுதல் பற்றி முன் உரைத்தமை பார்க்க. (3182-3167-3164). 29

3184\. நம்பியா ரூரர்திரு வாரூரி னயந்துறைநாட்
செம்பொற்புற் றிடங்கொண்டு வீற்றிருந்த செழுந்தேனைத்
தம்பெரிய விருப்பினொடுந் தாழ்ந்துணர்வி னாற்பருகி
இம்பருட னும்பர்களு மதிசயிப்ப வேத்தினார். ௩௰

(இ - ள்) நம்பி ஆரூரர்...நாள் - நம்பி ஆரூரர் திருவாரூரின்கண் விருப்பத்தோடும் தங்கி எழுந்தருளியிருந்த நாட்களிலே; செம்பொன்...தேனை - சிவந்த பொன் மயமாகிய புற்றினை இடமாகக் கொண்டு எழுந்தருளியிருந்த செழுந்தேனாகிய இறைவனை; தம் பெரிய...பருகி - தமது பெரிய விருப்பத்தினோடும் வணங்கி உணர்ச்சியின் உள்ளூற அருந்தி அநுபவித்து; இம்பருடன்...ஏத்தினார் - இம்மண்ணுலகத்தார்களோடு விண்ணுலகத்தார்களும் வியப்படையும்படி துதித்தருளியிருந்தனர்.

(வி - ரை) புற்றிடங்கொண்டு...தேனை - புற்றிடங்கொண்ட பெருமானை; வன்மீகநாதரை; தேனை-இறைவரைத் தேன் என்றது உவமையாகுபெயர்; தேன் இனித்து-உடலுக்கு நலம் செய்வது போன்று உணர்வுக்குள் ஆனந்தமாகி இனித்து உயிருக்கு இன்பஞ் செய்பவர். "அந்த விடைமருதி லானந்தத் தேனிருந்த, பொந்தை" நினைத்தொறுங்காண்டொறும் பேசுந்தோறு மெப்போதும், அனைத்தெலும் புண்ணெக வானந்தத் தேன் சொரியும் குனிப்புடையான்" (திருவா); "தேனே" (தேவா).

உணர்வினாற் பருகி - தேன் என்றதற்கேற்பப் பருகி என்றார். தேனை வாயினாற் பருகுதல் போல இறைவராகிய தேனை உணர்வினால் அநுபவித்தல் என்பதாம்; ஈண்டுப் பருகுதல் அநுபவித்தல்.

தாழ்ந்து - வணங்கி; தாழ்தல் - விரும்புதல் என்றலுமாம். படிதல் என்ற குறிப்பும்பட நின்றது; தேன் உள்ள இடத்தில் வண்டுகள் சென்று தாழ்ந்து மொய்த்து உண்ணுதல் போலே என்பது.

இம்பருட னும்பர்களும் - தேவர்கள் திருவாரூருக்கு வந்து தேவாசிரியனில் முறையிருந்தும் தியாகேசரை வணங்கியும் நலம்பெறத் திரண்டுள்ளாராதலின் இவ்வுலகத்தாரோடு அவர்களும் கூடிக் கண்டு அதிசயித்தனர். 3186 பார்க்க.

இம்பர் - இவ்வுலகம். உம்பர் - அவ்வுலகம். அஃதாவது மேல்-விண் - உலகம். ஏத்தினார் - ஏத்தியிருந்தருளினர். 30

3185. குலவுபுகழ்க் கோட்புலியார் குறையிரந்து தம்பதிக்கண்
அலகில்புக ழாரூரா ரெழுந்தருள அடிவணங்கி
நிலவியவன் றொண்டரஃ திசைந்ததற்பின் னேர்ந்திறைஞ்சிப்
பலர்புகழும் பண்பினார் மீண்டுந்தம் பதியணைந்தார். ௩௧

(இ - ள்) குலவுபுகழ்க் கோட்புலியார் - விளங்கும் புகழினையுடைய கோட்புலியார்; குறையிரந்து...அடி வணங்கி - தமது பதியினிடத்து அளவற்ற புகழினையுடைய நம்பியாரூரர் எழுந்தருள வேண்டுமென்று அவர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கிக் குறையிரந்து நின்று; நிலவிய...இறைஞ்சி - நிலைபெற்ற வன்றொண்டர் அதனை இசைந்த பின்னே மீண்டும் அவர் திருமுன்பு வணங்கி; பலர் புகழும்... அணைந்தார் - எல்லாரும் புகழத் தக்க பண்புடைய அக் கோட்புலியார் மீளவும் தமது திருப்பதியினுள் சென்று அணைந்தனர்.

(வி - ரை) குறையிரத்தல் - தமது குறையாகிய விருப்பத்தைக் கூறி வேண்டுதல்; இக்குறையாவது தமது பதியில் நம்பி ஆரூரர் எழுந்தருளுதல்.

குலவுபுகழ் என்றது அவரது அன்பின் மேன்மையும் சரித வரலாறும் குறிக்க எழுந்தது. அவர்தம் புராணம் பார்க்க.

அலகில்புகழாராதலின் எனக் கோட்புலியார் குறையிரந்து விண்ணப்பித்ததற்குக் காரணக் குறிப்புப்படக் கூறியவாறு.

அடி வணங்கிப், பின்...அவர் இசைந்தருள, இறைஞ்சி அணைந்தார் - எனக் கூட்டி முடிக்க.

பண்பினார் - கோட்புலியார்; இறைஞ்சிப்பின், அப்பண்பினார் - எனக் கூட்டுக.

தொண்டரது விசைந்ததற்பின்—நேர்ந்ததற்பின்—என்பனவும் பாடங்கள். 31

வேறு

3186. தேவ ரொதுங்கத் திருத்தொண்டர் மிடையுஞ் செல்வத் திருவாரூர்
காவல் கொண்டு தனியாளுங் கடவுட் பெருமான் கழல்வணங்கி
நாவ லூர ரருள்பெற்று நம்பர் பதிகள் பிறநண்ணிப்
பாவை பாகர் தமைப்பணிந்து பாடும் விருப்பிற் சென்றணைவார், ௩௨

3187. மாலு மயனு முணர்வரியார் மகிழும் பதிகள் பலவணங்கி
ஞால நிகழ்கோட் புலியார்தந் நாட்டி யத்தான் குடிநண்ண
ஏலும் வகையா லலங்கரித்தங் கவரு மெதிர்கொண் டினிதிறைஞ்சிக்
கோல மணிமா ளிகையின்க ணார்வம் பெருகக் கொடுபுக்கார். ௩௩

3186. (இ - ள்) தேவர்...அருள்பெற்று - தேவர்கள் ஒருபுறமாக ஒதுங்கி வழிவிட்டு நிற்கத் திருத் தொண்டர்கள் உட்சென்று நெருங்கி வழிபடும் செல்வ நிறைந்த

திருவாரூரினைக் காவல் பூண்டு தனியரசாளுகின்ற புற்றிடங் கொண்ட பெருமானது திருவடிகளை வணங்கித் திருநாவலூராராகிய நம்பிகள் அருள்விடை பெற்றுக்கொண்டு; நம்பர்...அணைவரார் - சிவபெருமானது பிற பதிகளிலும் சென்று உமைபங்கரைப் பணிந்து பாடும் விருப்பினாலே சென்றணைவாராகி ; ௩௨

3187. (இ - ள்) மாலும்...வணங்கி - விட்டுணுமூர்த்தியும் பிரமதேவனும் அறிதற்கரிய இறைவர் மகிழ்ந்து எழுந்தருளியுள்ள பதிகள் பலவற்றையும் வணங்கிச் சென்று ; ஞாலம்...நண்ண - உலகிற் பரவிய புகழுடைய கோட்புலியாரது திருநாட்டியத்தான்குடியினைச் சென்று சேர ; ஏலும்...கொடுபுக்கார் - பொருந்தும் வகையினால் பதியினை அலங்காரம் செய்து அவரும் வரவு எதிர்கொண்டு மகிழ்ச்சியோடும் வந்து பணிந்து, அழகிய மணிகளையுடைய தமது திருமாளிகையினிடத்து ஆசை மீக்கூரக் (நம்பிகளை உடன்) கொண்டு உட்புகுந்தனர். ௩௩

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3186. (வி - ரை) தேவரோதுங்க...மிடையும் - தேவர்கள், உட்புகும் காலம் பார்த்துத் திருநந்திதேவ ராணையின்படி புறவாயிலிற் காத்திருப்ப, அவர்களை விலக்கித் தொண்டர்கள் எக்காலமும் தடையின்றிப் பணி செய்ய உட்செல்ல உள்ள ; இஃது எல்லாப் பதிகளுக்கும் பொதுவாயினும் திருவாரூருக்குரிய சிறப்புத் தன்மை. 137 முதலியவை பார்க்க.

திருவாரூர் காவல்கொண்டு தனியாளும் - " அயிரா வணமேறு தானே றேறி யமரர்நா டாளாதே யாரூ ராண்ட " (தேவா).

கடவுட் பெருமான் - தேவதேவர் ; புற்றிடங்கொண்டார் ; தியாகேசர் என்றலுமாம்.

வணங்கி அருள் பெற்று - பிறபதிகளுக்குச் செல்லும்போது விடைபெற்றுச் செல்லும் மரபு.

நம்பர்...விருப்பில் - கோட்புலியாரது வேண்டுதலுக்கிரங்கி அங்குச் செல்வாரேனும் அங்குமட்டுமன்றி அதனோடு இடையிற் காணும் பிற பதிகளிலும் வணங்கிச் செல்லும் மரபும் விருப்பமும் குறித்தது ; சிவன் கோயில் வழிபாட்டின் ஆர்வமிகுதல் பக்குவமுடைய உயிர்களின்மாட்டு நிகழ்வது.

அணைவார் வணங்கி நண்ண - என மேல் வரும் பாட்டுடன் கூட்டி முடிக்க. 32

3187. (வி - ரை) பதிகள் பல - இவை திருவாரூரினின்றும் திருநாட்டியத்தான்குடிக்குச் செல்லும் வழியில் இடையிலும் அருகிலும் உள்ளன. இவை திருவிளமர், திருஎமப்பேறூர், மாவூர் முதலாயின என்பது கருதப்படும்.

ஞாலம்நிகழ் - உலகில் புகழ் பரவி நிகழும் ; ஞால நிகழ் நாட்டியத்தான் குடி என்று கூட்டி உரைக்கவும் நின்றது.

ஏலும் வகையால் - நம்பியாரூரரது நல்வரவின் சிறப்பினுக்குத் தகுதியாகப் பொருந்தும் அளவினாலே ; தமது என்றலுமாம்.

அவரும் - அந்தக் கோட்புலியாரும் என முன்னறி சுட்டு. 33

3188. தூய மணிப்பொற் றவிசிலெழுந் தருளி யிருக்கத் தூநீராற்
சேய மலர்ச்சேவடிவிளக்கித் தெளித்துக்கொண்டச் செழும்புனலான்
மேய சுடர்மா ளிகையெங்கும் விளங்க வீசி யுளங்களிப்ப
வேய சிறப்பி லர்ச்சனைக ளெல்லா மியல்பின் முறைபுரிவார், ௩௪

3189. பூந்தண் பனிநீர் கொடுசமைத்த பொருவில் விரைச்சந் தனக்கலவை
வாய்ந்த வகிலி னறுஞ்சாந்து வாச நிறைமான் மதச்சேறு
தோய்ந்த புகைநா வியினறுநெய் தூய பசுங்கர்ப் பூரமுடன்
ஏய்ந்த வடைக்கா யமுதினைய வெண்ணின் மணிப்பா சனத்தேந்தி,

3190. வேறு வேறு திருப்பள்ளித் தாமப் பணிகண் மிகவெடுத்து
மாறி லாத மணித்திருவா பரண வருக்கம் பலதாங்கி
ஈறில் விதத்துப் பரிவட்ட மூழி னிரைத்தே யெதிரிறைஞ்சி
ஆறு புனைந்தா ரடித்தொண்ட ரளவில் பூசை கொளவளித்தார் ௩௬

3188. (இ - ள்) தூய...இருக்க - தூய்மையாகிய மணிகளிழைத்த பொற் பீடத்திலே (நம்பிகள்) எழுந்தருளியிருக்க; தூநீரால்...விளக்கி - தூய்மையாகிய நீரினாலே அவரது செம்மை தரும் மலர் போன்ற திருவடிகளை விளக்கி; தெளித்துக் கொண்டு - அந்நீரினைத் தம்மேல் தெளித்துக்கொண்டு; அச்செழும் புனலால்...வீசி - அந்தச் செழிய நீரினாலே பொருந்திய ஒளியினையுடைய திருமாளிகை முழுதும் விளங்கும்படி வீசி; உள்ளம் களிப்ப...புரிவார் - மனமகிழப் பொருந்திய சிறப்பினை யுடைய வழிபாட்டு முறைகளெல்லாவற்றையும் இயல்பினால் விதி முறைப்படி செய்வாராகி, ௩௪

3189. (இ - ள்) வெளிப்படை. அழகிய குளிர்ச்சியுடைய பனிநீர் கொண்டு அரைத்த ஒப்பற்ற சந்தனக் கலவையும், பொருந்திய அகிற் கட்டையின் மணமுடைய சாந்தும், மணங் கமழும் கத்தூரிக் குழம்பும், புகைதோய்ந்த மணமுடைய பச்சைக்கற் பூரமும் ஆகிய இம்மெய்ப் பூச்சுக்களுடனே பொருந்த வரும் அடைக்காயமுதும் இவ்வாறாகிய பண்டங்களைத் தனித் தனி அளவில்லாத அழகிய தட்டுக்களில் எடுத் தேந்தியும், ௩௫

3190. (இ - ள்) வேறு...எடுத்து - வெவ்வேறு வகையாகிய திருப்பள்ளித் தாமத்துக்குரிய அலங்கார மாலை வகைகளை மிகவும் எடுத்தும்; மாறிலாத...தாங்கி - ஒப்பற்ற மணிகளாலாகிய திருவாபரண வகைகள் பலவற்றையும் தாங்கி எடுத்தும்; ஈறில்...நிரைத்தே - எல்லையில்லாத பலவிதங்களிலும் பரிவட்டங்களை முறைப்படி வரிசையாக வைத்தே; எதிரிறைஞ்சி - எதிரிலே நின்று வணங்கி; ஆறு...அளித் தார் - கங்கையை முடித்த சிவபெருமானது திருவடித் தொண்டர் அளவில்லாத பூசை முறைகளையும் ஏற்றுக்கொள்ளும்படி செய்தனர். ௩௬

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபுகொண்டன.

---

குறிப்பு :—இவ்விடத்தில் புராணம் 34-வது பாட்டாக,

"ஆண்ட நம்பி யுடன்வந்த வன்ப ரோடும் புறத்தணைந்து
நீண்ட மதிட்கோ புரங்கடந்து நிரைமா ளிகைவீ தியிற் போந்து
பூண்ட காதன் மிகுதியினாற் புனைமங் கலதூ ரியமொலிப்ப
ஈண்டு புகழ்க்கோட் புலியார்மா ளிகையை யெய்தி யுள்ளணைந்தார்"

என்றதொரு பாட்டுக் காஞ்சிபுரம் சபாபதி முதலியார் முதற்பதிப்பிற் (1859) காணப்படுகின்றது. மற்ற பதிப்புக்களிலும், அவர்களது இரண்டாம் பதிப்பிலும் (1870) இது காணப்படவில்லை; இச்செய்யுள் இடைச் செருகலாயிருக்குமோ என்ற ஐயப்பாடுகளை எனது "சேக்கிழார்" என்ற நூலில் 211-212 பக்கங்களிற் சொல்லி யிருக்கின்றேன்.

3188. (வி - ரை) எழுந்தருளியிருக்க - நம்பியாரூரர் என்ற எழுவாய் வருவிக்க.

(நம்பி) எழுந்தருளியிருக்க - (கோட்புலியார் அவரது) சேவடி விளக்கித்-தெளித்துக்கொண்டு - வீசி - புரிவார் - ஏந்தி (3189) - எடுத்துத் - தாங்கி - நிரைத்தே - இறைஞ்சி - அளித்தார் (3190) என இம்மூன்று பாட்டுக்களையும் தொடர்ந்து முடித்துக்கொள்க. கோட்புலியார் என்ற எழுவாய் தொக்கு நின்றது.

தெளித்துக்கொண்டு - தம் மேனிமேல் தெளித்துக்கொள்ளுதல் அதனுட் குளித்துத் தூய்மை பெறும் நிலை.

செழும் புனல் - செழுமை - நம்பிகளின் திருவடிச் சம்பந்தத்தாற் போந்தது.

மாளிகை எங்கும் புனல் வீசுதல் - மாளிகையினைப் புனிதமாக்கும் பொருட்டு.

சிறப்பிற் - புரிவார் - என்க. அர்ச்சனைகள் - இங்கு வழிபாட்டு முறைகளைக் குறித்து நின்றன. அவை மேற்கூறப்பட்டுள்ளன.

இயல்பின் முறை - இயல்பாவது வலிந்து மேற்கோடலின்றி உள்ளூர எழும் அன்பினால் தன் இயல்பாக வருவது ; முறை - நூல் விதி முறை.

புரிவார் - புரிவாராகி ; முற்றெச்சம். 34

3189. (வி - ரை) பூந்தண் பனிநீர் - பூ - பூவினின்றும் எடுக்கப்படும் ; தண்மை - குளிர்ந்த ; பரிசம். குணமுமாம். சமைத்தல் - பனிநீர் கூட்டி அமைத்தல்.

மான்மதம் - கத்தூரி. தோய்ந்த புகை - புகை தோய்ந்தாற் போலும் ; புகைத் தெடுக்கும் வாசனைக் கூட்டுப்பண்டமுமுண்டு. நாவி - புனுகு.

பசுங்கர்ப்பூரமுடன் - உடன் என்ற உருபு தந்து, இதுவரை கூறிவந்த வாசனைப் பண்டங்களின் வகைகளை வேறு பிரித்தார்.

அடைக்காயமுது - தாம்பூலம் ; அடைக்காயமுது என்பது பழங்காலக் கல்வெட்டுக்களிற் காணும் சொற்றொடர்.

எண்ணில் மணிப்பாசனத்து ஏந்தி - பாசனம் - தட்டு - பாத்திரம் ; எண்ணில் என்றார் வகைகள் பலவாதலின் தனித்தனி ஏந்துதற் பொருட்டு; ஏந்துதல்-எடுத்தல்.

சந்தனமேனவே—கர்ப்பூர முதல்—என்பனவும் பாடங்கள். 35

3190. (வி - ரை) வேறு...பணிகள் - திருப்பள்ளித்தாமப் பணிகள் - மாலை - கண்ணி - இண்டை முதலாகிய மலர் மாலை அணிவகைகள்.

மாறிலாத மணித்திருவாபரண வருக்கம் பல - இவை பொன் - மணி - இவற்றாலாகியவை. வருக்கம் - வகையினையும், பல - தொகையினையுங் குறித்தன ; மாறு - ஒப்பு. "மாறன்மையின்...இளையாரையு மெறியான்" (சீவக சிந். 2261) ; மாறில் - ஒளி மாறுதல் இல்லாத என்றலுமாம்.

பரிவட்டம் - துகில் - உத்தரியம் முதலாயின. இறைவருக்கும் அடியார்க்கும் சாத்துவன பரிவட்டமெனப்படுதல் மரபு ; ஊழின் - முறைப்படி ; நிரைத்தல் - வரிசைபெற அமைத்தல்.

அடித் தொண்டர் - நம்பியாரூரர் ; தொண்டர் பூசை கொள - என்க. கொள்ளுதல் - ஏற்றுக்கொள்ளுதல். 36

3191. செங்கோ லரச னருளுரிமைச் சேனா பதியாங் கோட்புலியார்
நங்கோ மானை நாவலூர் நகரார் வேந்தை நண்பினாற்
றங்கோ மனையிற் றிருவமுது செய்வித் திறைஞ்சித் தலைசிறந்த
பொங்கோ தம்போற் பெருங்காதல் புரிந்தார்; பின்னும் போற்றுவார், ௩௭

3192. ஆறு விருப்பின் மற்றவர்தா மருமை யான்முன் பெற்றெடுத்த
தேனார் கோதைச் சிங்கடியார் தமையு மவர்பின் றிருவுயிர்த்த
மானார் நோக்கின் வனப்பகையார் தமையுங் கொணர்ந்து வன்றொண்டர்
தூநாண் மலர்த்தாள் பணிவித்துத் தாமுந் தொழுது சொல்லுவார். ௩௮

3193. "அடியேன் பெற்ற மக்களிவ ரடிமை யாகக் கொண்டருளிக்
கடிசேர் மலர்த்தா டொழுதுய்யக் கருணை யளிக்க வேண்டு" மெனத்
"தொடிசேர் தளிர்க்கை யிவரெனக்குத் தூய மக்க" ளெனக்கொண்டப்
படியே மகண்மை யாக்கொண்டார் பரவை யார்தங் கொழுநனார். ௩௯

3191. (இ - ள்) செங்கோலரசன்...கோட்புலியார் - செங்கோன்மையுடைய சோழ அரசனது அருள் உரிமையுடைய சேனாதிபதியாகிய கோட்புலியார்; நங் கோமானை...இறைஞ்சி-நமது பரமாசாரியாராகிய தலைவரைத் திருநாவலூரின் மன்னவரை நட்புரிமையினாலே தமது அரண்மனையில் திருவமுது செய்வித்து வணங்கி; தலைசிறந்த...போற்றுவார் - பெருகும் கடல் போன்ற மிகச் சிறந்த பெருவிருப்புடையராகி மேலும் துதிப்பாராகி; ௩௭

3192. (இ - ள்) ஆறு விருப்பின் மற்றவர் - குறையாத அப்பெரு விருப்பினாலே அக்கோட்புலியார்; தாம்...கொணர்ந்து - தாம் அருமையாக முன்னே பெற்றெடுத்த தேன் பொருந்திய மாலையணிந்த சிங்கடியார் என்னும் மகளாரையும் அவர் பின்னே, திருமகள்போற் பெற்ற மான்போலும் மருண்ட பார்வையுடைய வனப்பகையார் என்னும் அம்மையாரையும் அழைத்துக்கொண்டு முன் வந்து; வன்றொண்டர்...பணிவித்து - வன்றொண்டராகிய நம்பிகளது தூய புதிதான தாமரை போன்ற பாதங்களில் வணங்கும்படி செய்து; தாமும் தொழுது சொல்லுவார் - தாமும் வணங்கிச் சொல்வாராகி, ௩௮

3193. (இ - ள்) "அடியேன்...வேண்டும்" என - "இவர்கள் அடியேன் பெற்றெடுத்த மக்கள்; இவர்களை அடிமையாக ஏற்றுக்கொண்டருளித் தேவரீரது மணமுடைய மலரடிகளைத் தொழுதுய்ந்திருக்கும்படி கருணை புரிய வேண்டும்" என்று சொல்ல; பரவையார்தங் கொழுநனார் - பரவையாரது கணவனாராகிய நம்பிகள்; தொடிசேர்...எனக்கொண்டு - "தொடிகளை யணிந்த தளிர்போன்ற கையினையுடைய இவர்களிருவரும் எனக்குத் தூய்மையுடைய மக்களேயாவார்கள்" என்று திருவுளம் பற்றி ஏற்றுக்கொண்டு; அப்படியே...கொண்டார் - அவ்வாறே மக்கண் முறைமையாகும்படி கொண்டருளினார். ௩௯

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3191. (வி - ரை) செங்கோல் அரசன் அருள் உரிமைச் சேனாபதியாம் கோட்புலியார் - "ஏயர் கோக்குடிதான், மன்னி நீடிய வளவர் சேனாபதிக் குடியாம்" (3159) என்றதும், ஆண்டுரைத்தவையும் பார்க்க.

செங்கோல் அரசன் - சோழன்; அரசன் பெருமை கூறியபடி; அருள் உரிமைச் சேனாபதி - அருள் - அரசனது அருளுக்குத் தகுதியுடையாராய்; உரிமை - வழி வழி மரபின் வரும் உரிமை பெற்ற சேனாபதித் தன்மை.

உரிமைச் சேனாபதியாம் - இக்குடியினின்றே சேனாபதிகளை அரசர் தேர்ந்தெடுக்கும் உரிமை குறித்தது; ஏனாதிநாதர் மன்னர்க்கு வாட்படை பயிற்றும் தொல்குடித் தாயத்தின் வந்தார் என்ற வரலாறும் ஈண்டு நினைவு கூர்தற்பாலது; அரு

ளுரிமை - மன்னரின் அருள்பெறும் உரிமை. By appointment என்னும் நவீனர் வழக்கும் காண்க. இவ்வுரிமைக்கு விளைநிலம் - பட்டம் முதலிய பகுதிகளும் முன்னாளில் அரசர் வழங்கும் மரபும் உண்டு.

நம் கோமானை நாவலூரர் நகரார் வேந்தை -நம் கோமான் - நமக்குரிமையாகிய சைவ சமய பரமாசாரியர் என்பது குறிப்பு ; கோமான் - தலைவர். வேந்து - அதிபதி ; ஈண்டு இவ்வாற்றாற் குறித்தது அரசருளுரிமைச் சேனாபதியாங் கோட்புலியாரால் வழிபடற்குரிய அரசராகிய ஏற்றமுடைமை குறித்தற்கு ; அன்றியும் அமைச்சர் - அரசர் சேனாபதி முதலியோர் மகளிரை அரசர் மணக்கும் வழக்குண்மையின், ஈண்டுக் கோட்புலியார் தமது மக்களிருவரையும் அடிமைகொள்ளும்படி நம்பிகளை வேண்டிநிற்கும் தன்மையினை அமைதிப்படுத்தற் குறிப்புமாம் ; நங் கோமான் நாவலூரார் வேந்து என இரண்டு தன்மையாற் கூறியது அன்பர் பெருமானார் தன்மையும் அதனுடன் அரசர்பெருமானார் தன்மையும் குறிப்பது. “ பெருமைசா லரசர் காதற் பிள்ளையாய் ” (152) நம்பிகள் வளர்ந்த தன்மையும் குறிப்பு.

கோமனை-அரசர்களது அரண்மனைக்கேற்ற சிறப்புச் சேனாபதியார் மனைகளுக்கும் உண்டு என்பது குறிப்பு. சேனாபதிகளை “ மேன்மை தங்கிய ” (His Excellency) என்ற கண்ணியப் பட்டத்துடன் அழைக்கும் இந்நாள் மரபும் காண்க.

தலைசிறந்த - பெருங் காதல் - என்று கூட்டுக.

பொங்கு ஓதம் - பொங்கும் கடல் ; ஓதம் பொங்குதல்போல மேன்மேற் பெருகும் காதல் என்க.

தலைசிறந்த பொங்கு ஓதம் என்றே கூட்டித் தலை உவாநாளில் பொங்கும் கடல் போல் என்றலுமாம்.

காதல் புரிதலாவது - காதலால் வரும் செயல் எல்லாம் செய்தல்.

போற்றுவார் - போற்றுவாராய் ; முற்றெச்சம்.

போற்றுவார் - கொணர்ந்து - பணிவித்துத் - தொழுது - சொல்லுவாராய் - (3192) - என (3193) என்று மேல்வரும் பாட்டுக்களுடன் முடிக்க. 37

3192. (வி - ரை) ஆனுவிருப்பு - குறையாத விருப்பம்.

திருவுயிர்த்த - பெற்ற - ஈன்ற ; உயிர்த்தல் - மகவு பெறுதல் - பிறப்பித்தல்.

சிங்கடி - வனப்பகை - கோட்புலியாரது இரண்டு பெண்மக்கள். அந்நாளில் பெண்மக்களுக்குப் பெயரிடும் மரபு காண்க. இவ்வாறு வரும் பல பெயர்கள் பழங்காலக் கல்வெட்டுக்களாலு மறியப்படுவன.

தேனுர் கோதைச் சிங்கடி - “ சேடார் பூங்குழற் சிங்கடி ” (நாட்டியத்தான்குடி - 10 - நம்பி தேவா) என்ற பதிகக் கருத்துப் போற்றப்பட்டது.

தேனுர் கோதை - மானுர் நோக்கின் - ஒருவரை அணிநலத்தாலும், மற்றவரை உடலியல் நலத்தாலும் உரைத்தமை காண்க. இரண்டும் இருவர்பாலும் கூட்டியுரைக்க வைத்த குறிப்பு ; 3193 பார்க்க.

கொணர்ந்து - பெண்ணியல்பாகிய நாண் முதலிய குணங்களாலே அவர் தாமே நம்பிகளெதிர் வரமாட்டாராதலின் அழைத்துக் கொண்டு வந்தார் என்க.

பணிவித்து - மணமாகும் வரை பெற்றோர் சொற்படி அமைவது பெண்ணியல்பாதலின் பணிவித்து என்றார். 38

3193. (வி - ரை) “ அடியேன்...வேண்டும் ” என இது கோட்புலியார் நம்பிகளை நோக்கிக் கூறியது ; அடிமையாகக் கொண்டருளி என்றும், மலர்த்தாள்

தொழுது உய்ய - என்றும் கூறியன இவர்களைத் திருமணஞ் செய்து உரிமைப் பொருளாக ஏற்றுக்கொள்ள வேண்டுமென்னும் குறிப்புடையன; உய்ய - இவர்களை உய்யச் செய்ய.

"தொடிசேர் மக்கள்" எனக்கொண்டு - இது நம்பிகள் திருவுள்ளத்துக் கொண்ட துணிபு. அதன் விளைவாகிய சொல்லும் செயலும் மேல்வருவன காண்க. கொண்டு - உட்கொண்டு - துணிந்து.

தொடிசேர் தளிர்க் கையினர் - இயற்கை நலமும் செயற்கை வளமும் இருவர் பாலும் ஒன்றுபோல அமைந்தமை குறிப்பு. தொடி - கைவளைவகை; தளிர் - மாந்தளிர் போன்ற; செம்மை மென்மை முதலிய பண்புகள் கொண்ட; தூய - "எழு பிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்காப், பண்புடை மக்கட் பெறின்" (குறள்) என்றபடி, பிறந்தகம், புக்ககம் என்ற இரண்டிடமும் தூய்மையாகும்படி வாழ்வளிக்க வல்ல என்ற குறிப்பு.

அப்படியே - மனத்துட் கொண்டபடியே; துணிந்தவாறே.

மகண்மையாக் கொண்டார் - தாம் பெற்ற மக்களேயாகும் முறைமை தந்து ஏற்றுக்கொண்டார். "பிறப்பித்தெடுத்த பிதாவாக" (3196) ஒருவர் தந்த கொடைப் பொருளைப் பெறுபவர் ஏற்றுக்கொண்டாலன்றிக் கொடை முற்றுப்பெறுதலில்லை என்பது நூன்முறையாதலின் கொண்டார் என்றார்.

மகண்மை - மகளாராந் தன்மை; மகன்மை - மகனாந்தன்மை என்பதுபோல; "அன்பினுன் மகன்மை கொண்டார்" (151); மகண்மையா - ஈன்ற பெண்மக்கள் முறைமையாக; ஆ - ஆக.

அப்படியே - ஆரன்போல வேண்டுபவர் வேண்டியதே ஈதல் அன்றோ அடியவர்க்கும் கடன்? எனில், கோட்புலியார் சொன்னவாறே என்ற குறிப்புமாம். என்னை? அடிமையாகக் கொண்டருளுதலும், மலர்த்தாள் தொழுதுய்யச் செய்தலும் என்றிரண்டுமே அவர் வேண்டினார்; அவ்விரண்டு தன்மைகளும் மகண்மை (புதல்வியர்) முறையினும் பொருந்துமாகலான் என்க.

பாவையார்தங் கொழுநனார் - முன்னமே பரவையார்தங் கொழுநனாராதலின் கோட்புலியார் உட்கொண்டபடி மணத்தால் இவர்களை ஏற்கும் நிலையில்லை என்று காரணக் குறிப்புப்படக் கூறிய கவிநலமும் காண்க; பின்னர்ச் சங்கிலியார் வரலாறு வேறு; அது பண்டை விதியின் விளைவு என்க. மறையவர்க்கு, மறையவர் மரபே யன்றி ஏனை எல்லா வருணத்தாருள்ளும் மணம் நிகழ்வது முந்தைநாள் நீதிநூல் மரபு என்பது ஈண்டு நினைவு கூர்தற்பாலது. 39

3194. கோதை சூழ்ந்த குழலாரைக் குறங்கின் வைத்துக் கொண்டிருந்து
காத னிறைந்த புதல்வியராங் கருத்துட் கசிவா லணைத்துச்சி
மீது கண்ணீர் விழமோந்து வேண்டு வனவுங் கொடுத்தருளி
நாதர் கோயில் சென்றடைந்தார் நம்பி தம்பி ரான்றோழர். ௪௦

(இ - ள்) கோதை...வைத்துக்கொண்டிருந்து - மாலையணிந்த கூந்தலையுடைய அப்பெண்களை மடியில் வைத்துக்கொண்டிருந்து; காதல்...மோந்து - மிக்க அன்பு நிறைந்த புதல்வியர்களாகும் கருத்தினாலே உள்ளங் கசிய அணைத்து உச்சிமேல் தமது கண்ணீர் விழும்படி உச்சிமோந்து; வேண்டுவனவும் கொடுத்தருளி - அவர்க்குத் தாம் வேண்டுவனவற்றையுங் கொடுத்தருளி; நாதர்...தோழர் - நம்பியாரூராகிய தம்பிரான்றோழர் இறைவரது திருக்கோயிலினைச் சென்றடைந்தருளினர்.

(வி - ரை) கோதை சூழ்ந்த குழலார் - "தேனூர் கோதைச் சிங்கடி" (3192) என்றவிடத்துரைத்தவை பார்க்க.

தூறங்கு - தடை. தடையின்மேல் வைத்தல் மக்களைப் பாராட்டும் வகை. பின்னர் வரும், அணைத்தல் - உச்சிமேற் கண்ணீர் விழ மோத்தல் முதலியனவும் இவ்வாறே.

உச்சிமீது கண்ணீர் விழமோந்து - உட்கசிவினால் போந்த அன்புக் கண்ணீர் உச்சி மோந்தபோது அவர்களது உச்சியின்மேல் விழும் என்க.

வேண்டுவன - அவர்க்கென்று தாம் விரும்பியனவாகிய பொருள்களும் ஆசியும்.

தம்பிரான்றோழர் - பரவையார்தங் கொழுநனார் என்ற முன் பாட்டின் கருத்தைத் தொடர்ந்த வரலாற்றுக் குறிப்புப்படக் கூறியபடி. 40

3195. வென்றி வெள்ளே றுயர்த்தருளும் விமலர் திருக்கோ புரமிறைஞ்சி
ஒன்று முள்ளத் தொடுமன்பா லுச்சி குவித்த கரத்தோடுஞ்
சென்று புக்குப் பணிந்துதிருப் பதிகம்"பூணு" ணென்றெடுத்துக்
கொன்றை முடியா ரருளுரிமை சிறப்பித் தார்கோட் புலியாரை. ௪௧

(இ - ள்) வென்றி...இறைஞ்சி - வெற்றி பொருந்திய வெள்ளை எருதினைக் கொடிமேல் உயர்த்தியருளும் விமலராகிய சிவபெருமானது கோயிலின் திருக்கோபுரத்தினை வணங்கி; ஒன்றும்...பணிந்து-ஒன்றிய உள்ளத்தினோடும் அன்பினாலே உச்சிமேற் கூப்பிய கைகளுடனே திருக்கோயிலினுள்ளே சென்று புகுந்து பணிந்து; பதிகம் "பூணாண்" என்றெடுத்து - திருப்பதிகத்தினைப் "பூணாண்" என்று தொடங்கி; கொன்றை...கோட்புலியாரை - கொன்றை சூடிய சிவபெருமானது அருளின் உரிமை பற்றி அப்பதிகத்தினுள்ளே கோட்புலியாரைச் சிறப்பித்துப் பாடியருளினார்.

(வி - ரை) ஒன்றும் உள்ளம் - இரண்டற ஒன்றாகப் பொருந்திய உள்ளம்; இறைவரையன்றி வேறொன்றும் நினையாத நிலை ஒன்றும் - எனப்பட்டது.

பூணாண் - இது பதிகத் தொடக்கமாகிய முதற் குறிப்பு.

அருளுரிமை - அருள் உரிமை காரணமாக; இறைவரது திருப்பதிகத்தினுள் கோட்புலியாரது பெருமையினைக் கூறவந்த காரணம், அவர், இறைவரது அருளுக்கு உரியராந் தன்மையே என்பது. திருச்சாத்தமங்கைத் திருப்பதிகத்தில் திருநீலநக்கரையும், திருச்செங்காட்டங்குடித் திருப்பதிகத்தினுள் சிறுத்தொண்ட நாயனாரையும் ஆளுடைய பிள்ளையார் சிறப்பித்ததும், திருப்பழனத் திருப்பதிகத்துள் அப்பூதியாரை அரசுகள் சிறப்பித்ததும், மற்றும் இவ்வாறு வருவனவும் ஈண்டு நினைவுகூர்தற் பாலன. ஆளுடைய நம்பிகள் வரலாற்றினுள் இது சரித அகச்சான்றாக வரும் சிறந்த இடமாதலின் ஈண்டுக் காரணங் கூறினார்.

கோட்புலியாரைச் சிறப்பித்தார் - என்க. வினைமுற்று. முன் வந்தது ஆர்வம் மிகுதி பற்றிய விரைவு குறித்தது. சிறப்பித்தமை அவர் வழிபடும் ஊர் என்று பதியினைக் கூறியதனால் அறிக. பதிகம் 10-வது பாட்டிற் "கூடா மன்னரைக் கூட்டத்து வென்ற கொடிறன் கோட்புலி" என்றது காண்க. பதிகப்பாட்டுக் குறிப்புப் பார்க்க. 41

3196. சிறப்பித் தருளுந் திருக்கடைக்காப் பதனி னிடைச்சிங் கடியாரைப்
பிறப்பித் தெடுத்த பிதாவாகத் தம்மை நினைந்த பெற்றியினன்

மறப்பில் வகைச்"சிங் கடியப்ப " னென்றே தம்மை வைத்தருளி
நிறப்பொற் புடைய விசைபாடி நிறைந்த வருள்பெற் றிறைஞ்சுவார்,

3197. அங்கு நின்று மெழுந்தருளி யளவி லன்பி னுண்மகிழச்
செங்க ணுதலார் மேவுதிரு வலிவ லத்தைச் சேர்ந்திறைஞ்சி
மங்கை பாகர் தமைப்பதிகம் " வலிவ லத்துக் கண்டே"னென்
றெங்கு நிகழ்ந்த தமிழ்மாலை யெடுத்துத் தொடுத்த விசைபுனைவார்,

3198. "நன்று மகிழுஞ் சம்பந்தர் நாவுக் கரசர் பாட்டுகந்தீர் "
என்று சிறப்பித் திறைஞ்சிமகிழ்ந் தேத்தி யருள்பெற் றெழுந்தருளி
மன்றி னிடையே நடம்புரிவார் மருவு பெருமைத் திருவாரூர்
சென்று குறுகிப் பூங்கோயிற் பெருமான் செம்பொற் கழல்பணிந்து,

3199. இறைஞ்சிப் போந்து பரவையார் திருமா ளிகையி லெழுந்தருளி
நிறைந்த விருப்பின் மேவுநா ணீடு செல்வத் திருவாரூர்ப்
புறம்பு நணிய கோயில்களும் பணிந்து போற்றிப் புற்றிடமாய்
உறைந்த பெருமான் கழல்பிரியா தோவா வின்ப முற்றிருந்தார். ௪௫

3196. (இ - ள்) சிறப்பித்தருளும் திருக்கடைக்காப் பதனினிடை - அவ்வாறு கோட்புலியாரைச் சிறப்பித்தருளும் பதிகத் திருக்கடைக்காப்பினிலே; சிங்கடியாரை... ...பெற்றியினால் - சிங்கடியாரைப் பெற்றெடுத்த பிதாவாகவே தம்மை உட்கொண்டு துணிந்த தன்மையினாலே ; மறப்பில் வகை - அத்துணிபு மறவாது நிலைத்திருக்கும் படி ; சிங்கடியப்பன்...வைத்தருளி - சிங்கடியப்பன் என்ற தன்மையாலே தம் பெயரைப் பொறித்து வைத்தருளி ; நிறப்பொற்புடைய...இறைஞ்சுவார் - நிறம் என்னும் இசைப் பண்பின் அழகு பொருந்தப் பண் இசையினைப் பாடி நிரம்பிய அருளினைப் பெற்று வணங்குவாராகி, ௪௨

3197. (இ - ள்) அங்குநின்றும்...உளமகிழ - அப்பதியினின்றும் எழுந்தருளிச் சென்று அளவில்லாத அன்பினாலே மனமகிழ்ச்சி பெற்று ; செங்கண்...இறைஞ்சி - சிவந்த நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான் எழுந்தருளியுள்ள திருவலிவலத்தினைச் சென்று சேர்ந்து வணங்கி ; மங்கை...என்று - உமையம்மையாரை ஒருபாகத்தில் உடைய இறைவரைப் பாடும் பதிகம் " வலிவலத்துக் கண்டேன்" என்ற முடியினுடன் ; எங்கும்...இசை புனைவார் - எங்கும் விளங்கிய தமிழ் மாலையினைத் தொடங்கித் தொடுத்த இசையினைச் சூட்டுவாராகி, ௪௩

3198. (இ - ள்) நன்று...எழுந்தருளி - "நன்மை விளங்கி மகிழும் திருஞான சம்பந்தரும் திருநாவுக்கரசரும் என்றிருவருடைய திருப்பாட்டுக்களைக் கேட்டு மகிழ்ந்தருளினீர்" என்று சிறப்பித்து வணங்கி மகிழ்ந்து துதித்துத் திருவருள் பெற்று மேலே எழுந்தருளிச் சென்று ; மன்றினிடையே ..பணிந்து - திருவம்பலத்தினிடமாகக் கூத்தியற்றும் பெருமான் எழுந்தருளிய பெருமையுடைய திருவாரூரினிற் சென்று சேர்ந்து பூங்கோயிலினுள் எழுந்தருளிய புற்றிடங்கொண்ட பெருமானது செம்பொன் போன்ற திருவடிகளைப் பணிந்து, ௪௪

3199. (இ - ள்) இறைஞ்சி...மேவுநாள் - வணங்கிச் சென்று பரவையாருடைய திருமாளிகையில் எழுந்தருளி நிறைந்த விருப்பினுடனே பொருந்தியிருக்கும் நாட்களிலே ; நீடு...போற்றி - நீடிய செல்வத் திருவாரூரின் புறம்பிலே அணுக

உள்ள திருக்கோயில்களையும் சென்று பணிந்து துதித்து ; புற்றிடமாய்...உற்றிருந்தார் - புற்றிடங் கொண்டு நீங்காதெழுந்தருளிய பெருமானது திருவடிகளைப் பிரியாது இடையறாத இன்பம் பெற்று வீற்றிருந்தருளினர். ௪௧

இந்நான்கு பாட்டுக்களும் ஒரு முடிபுகொண் டுரைக்கநின்றன.

3196. (வி - ரை) சிறப்பித்தருளும் திருக்கடைக் காப்பு - முன் பாட்டிற் "சிறப்பித்தார்" (3198) என்றது பதிகத்துள் இன்ன திருப்பாட்டு என்று காட்டியருளியவாறு.

பிதாவாக - நினைந்த பெற்றி - மக்கள் "எனக்கொண்டு" - (3193) என்று முன் கூறியபடி துணிந்த தன்மை ; நினைதல் - துணிதல் ; பெற்றி - தன்மை.

பெற்றியினால் தம்மை வைத்து - என்று கூட்டுக. வைத்தற்குக் காரணங் கூறியபடி ; சிங்கடி யப்பன் என்ற தேவாரத்தின் கருத்தினையும் பொருளையும் விளக்கிக் காட்டியவாறுமாம்.

தம்மை வைத்தலாவது-தம் பெயரை அவ்வாற்றாற் கூறிப் புலப்படப் பொறித்தல் (முத்திரீகரித்தல்) ; என்றே - ஏகாரம் சிறப்பு.

நிறப் போற்புடைய இசை - நிறம் - இசைப் பாகுபாடுகள். "நிறம்பயி லிசையுடன்" (2139) "தாளநிலையில் எய்தவைத்த நிறம்" (சிலப். அரங். 26-36 உரை.) இப்பதிகம் தாள நிறைவின் அமைதிபெற வருதல் காண்க.

இறைஞ்சுவார் - இறைஞ்சுவாராகி ; இறைஞ்சுவார் - எழுந்தருளி என மேல் வரும் பாட்டுடன் கூட்டுக.

பிறப்பித்தெடுத்த பிதாவாக - ஈன்று வளர்த்த தந்தையாராகவே ; அவ்வாற்றால்வரும் பிதாவல்லாதிருந்தும் அவ்வாறு ஆகத் தம்மை ஆக்கிக்கொண்டு என ஆக்கச் சொல்லின் பொருள் விரித்துக்கொள்க. "அன்பினுன் மகன்மை", பாலூட்டலான் மகன்மை, எடுத்தலால் (சுவீகாரம்) மகன்மை என்று பலவாறு வரும் மகன்மை - தந்தை - முறைகள் போலக் கொள்க. ஈண்டுப் பிறப்பித்தெடுத்த பிதாவாகத் தம்மை எண்ணித் துணிந்து கொண்ட முறையால் அப்பன் என்றார் என்பது. 42

## திருநாட்டியத்தான்குடி

திருச்சிற்றம்பலம். பண் - தக்கராகம். 7-ம் திருமுறை

பூணு ணவதொ ரரவங்கண் டஞ்சேன் புறங்காட் டாடல்கண் டிகழேன்
பேணீ ராகிலும் பெருமையை யுணர்வேன் பிறவே ணுகிலு மறவேன்
காணீ ராகிலுங் காண்பனென் மனத்தாற் கருதீ ராகிலுங் கருதி
நானே லும்மடி பாடுத லொழியே ணுட்டியத் தான்குடி நம்பீ. (1)

கூடா மன்னரைக் கூட்டத்து வென்ற கொடிறன் கோட்புலி சென்னி
நாடார் தொல்புகழ் நாட்டியத் தான்குடி நம்பியை நாளு மறவாச்
சேடார் பூங்குழற் சிங்கடி யப்பன் திருவா ரூரா னுரைத்த
பாட ராகிலும் பாடுமின் றொண்டீர் பாடநும் பாவம்பற் றறுமே. (10)

திருச்சிற்றம்பலம்

பதிகக்குறிப்பு:—அருளுரிமை "சிறப்பித்தார் கோட்புலியாரை" (3195) என்றும், "சிங்கடியாரை...தம்மை வைத்தருளி" (3196) என்றும் கூறியவாற்றால் ஆசிரியர் பதிகக் குறிப்புணர்த்தியமை கண்டு கொள்க.

பதிகப் பாட்டுக் குறிப்பு ;—(1) இப்பதியில் ஆளுடைய நம்பிகளுக்கு இறைவர் பாம்பு தரித்ததுமுதலாக அச்சந் தரும் வடிவுடனே காட்சி தந்தருள அதுகண்டு நம்பிகள் இவ்வாறு பாடியருளினர் என்று வரலாறு கூறுவர் ; 2-3 பாட்டுக்களும் பார்க்க• பூண் நாண் ஆவதோர் அரவம் - பூண் நாண் - பூணூல். ஐந்தலையரவினைப் பூணூலாகச் சிவபிரான் அணிவர் என்ற நிலை ; புறங்காடு - உலகம் வீந்த சுடலை; பேணீர் ஆகிலும் - என்னை நீர்விரும்பீராயினும் ; பிறவேனாகிலு மறவேன் - பிறவா நிலை - வீட்டு நிலை - பெறினும் உம்மை மறவேன். முத்தநிலையினும் உயிர் சிவானுபவத்துக் குரியது என்பது ஞானநூல்; காணீராகிலும் - கருதீராகிலும் - நீர் காணவும் கருதவும் செய்தலினால் நான் காணவும் கருதவும் கூடும் ; ஆனால் அவ்வாறு நீர் காண்பதனையும் கருதுவதனையும் நான் அறியமாட்டேனாயினும் நான் உம்மைக் காண்பதனையும் கருதிப் பாடுவதினையும் ஒழியேன் ; நாட்டியத்தான்குடி - சிவபெருமான் எழுந்தருளியபடி ; நாட்டியத்தான் - கூத்தன்-சிவபெருமான். நாட்டியம் - கூத்து. இங்கு எல்லாவுயிர்களையும் ஆட்டுவிக்கும் அருட் கூத்தன் என்று பொருள் கொள்க. நம்பி - நம்பி அடையத் தக்கவன்:—(2) கச்சு - இடையில் அணியும் உடைவகை ; கவர்வன் - கண்ணாரக் காண்பேன் ; துச்சேன் - இழிதகையேன் - துட்டன். துச்சு - கீழான செய்கை. " துச்சான செய்திடினும் " (திருவிசைப்பா) ; சேர்ல்லாயிதிப்பிய மூர்த்தி - திப்பியம் - திப்யம் என்றது வடமொழி ; தூய்மை ; மேன்மை. திப்பிய மூர்த்தியாயினும் துச்சேனுடைய மனத்தினுட் புகுந்து நீங்காது வீற்றிருக்கின்ற தன்மையினை விளங்கச் சொல்லுக; இடர்களை வைச்சே களைந்திடவல்ல-வினைத் தீர்வின் பொருட்டுத் துன்பங்களை அனுபவிக்கக் கொடுத்தே தீர்க்கின்ற வல்லமைத் தன்மை; மாணிக்க வண்ணர் - தலச்சுவாமி பெயர் ; (இரத்தினகிரி நாதர்) ; நச்சேன் - விரும்பமாட்டேன் ;—(3) அஞ்சாதே உமக்காட் செயவல்லேன் - 1-ம் பாட்டின் கருத்தினைத் தொடர்ந்து கூறியது ; கோத்திட்டைப் பதிகத்துள், " உமக்காட்செய வஞ்சுதுமே" என்பது வேறு நிலையாதலின் மாறுபாடில்லை என்க. பிறவியை வேண்டாமையும் வேண்டுதலுமாக வரும் பதிகக் கருத்துக்கள் போலக் கண்டுகொள்க ; "யாதினுக்கு - ஆட்செய்வதல்லால் வேறுதெனக்கு. "ஆளாயினி யல்லே னெனலாமே" "வேண்டிக்கொள்வேன் றவ நெறியே" (தேவா) ; மங்கை - தல அம்மை பெயர் ; மஞ்சு - மேகம் ;—(4) கல்லேனல்லேன் - கற்கமாட்டேன் ; மேல்வரும் நில்லேனல்லேன் முதலியனவும் இவ்வாறே கொள்ளத்தக்கன ; அடிமை கல்லாதே - அடிமைத்திறத்தில் நிற்கக் கல்லாமல் ; நின்வழி நில்லேனல்லேன் என்றும், நின்வழி நின்றார் என்றும் இருபுறமும் கூட்டியுரைக்க நின்ற இடைநிலைத் தீபம் ; நின்வழி நின்றார் - சிவதவவொழுக்கமுடைய அடியவர்கள் ; நீதி - நியதி - நெறி ; உமக்கல்லாற் பிறருக்கு என்க ;—(5) கருதாதார் தமைக் கருதேன் - "திருமுண்டந் தீட்டமாட்டா தஞ்சுவாரவரைக் கண்டா லம்மநா மஞ்சு மாறே" (திருவா) ; " காணு கண்வாய் பேசாதப் பேய்க ளோடே " (திருவிசைப்பா) ; ஒட்டீர் - நீர் என்னுடன் ஒட்டிப் பசுத்தன்மையடையாது வேறாக நிற்பீர் ; ஒட்டுவன் - உம்மை ஒன்றி நினைவேன் ; அடிமைப்பட்டேன் - ஆகிலும் - அடியார்க்கடியேனாவேன் ; அதனுடன் ; நட்டேன் - நட்புப் பூண்டேன் ;—(6) படப்பாற்றன்மை - படவேண்டிய - அனுபவிக்க வேண்டிய - பான்மை - நியதி - ஊழ் ; படுத்தாய் என்று அல்லல் பறையேன் - துன்பம் செய்தாய் என்று அலர் தூற்றமாட்டேன் ; பறைதல் - சொல்லுதல் ; அல்லல் - அலர். அல்லாத சொல் ; குடப்பாச்சில் - மேற்கில் உள்ள திருப்பாச்சிலாச்சிராமம் என்றும், கோக்குளிர்வானே - அரசனுக்குத் தண்ணருள் புரிந்தவரே என்றும் பொருள் தோன்றுகின்றது ; மடப்பால் - புதிய தன்மை ; நடப்பீர் - விலகுவார் போல் நடத்

தல் செய்வீர்; அடிக்கே - அடிச்சுவட்டினைப் பற்றி;—(7) ஐவாய் அரவு - ஐந்தலை நாகம்; அழகா - அரவும் மதியும் ஒன்றுபடுத்துதல் அழகன்றாயினும் அழகுபடப் பொருந்தவைத்தமை உமது அழகு என்பது; எய்வான் வைத்ததோர் இலக்கினை யணைதர நினைந்தேன் - வில்லின் அம்பு கோத்து எய்பவர் ஓர் இலக்கு வைத்து எய்தல் போல் நீர் ஒரு இலக்கு - குறி - வைத்து இப்பிறவியிற் செலுத்தினீர். அதனை மறவாமற் கடைப்பிடித்தேன் - குறிக்கொண்டேன்; உள்ளமுள்ளளவும்...அடைந்தேன் - அவ்வாறு நினைந்தமைக்கேற்ப நான் செய்யும் செயல் இஃது என்றபடி; உகவீர் - என்று ஏற்காதவர் போல்வீர்;—(8) கலியேன் - மகிழேன்; ஒன்றாக - ஒரு பொருளாக; கண்கணீர்பில்கும் - வருத்தத்தால் கண்ணீர் சோரும். இதுவுமொரு பொருளாக மானிட வாழ்க்கை சார வந்ததே என்ற வருத்தத்தால் மனந்தளரும்; வலியேமாகிலும் - பல துன்பங்களே வரினும்; உமையல்லால் ஒருவரை நலியேன் - என் துன்பங்களுக்கு உம்மையல்லால் வேறு ஒருவரையும் குறைகூறமாட்டேன்; ஒருவரை - ஒருவரையும்;—(9) கொண்டார் - கொள்ள - சினங்கொண்டு புறங்கூற - அலர்தூற்ற; தொழுவார் தொழக்கண்டு - தொழுவேன் - "ஞானத்தாலுனை நான் றொழுவேனலேன்; ஞானத்தாற் றொழுவார்கள் தொழக்கண்டு...நானுந் தொழுவனே" (குறுந்);—(10) கூடா மன்னரை...கோட்புலி - இது நம்பிகள் திருவாக்கு. "அருளுரிமை சிறப்பித்தார் கோட்புலியாரை" (3195) என்று ஆசிரியர் காட்டியருளிய பகுதி; கூடாமன்னர் - தம் அரசர்க்குப் பகையான அரசர்; கூட்டத்து-அவர்கள் தனித்தன்றிப் பலர்கூடிப் போரில் வந்தெதிர்த்தபோது; வென்றி - வேந்தர்க்குற்றுழி அவன் ஏவல் வழி வினைமேற் சென்று பெற்ற வெற்றி. கொடிறன் - விடாப்பிடியுடன் வினை செய்யும் தன்மையுடையவன்; சென்னி - சோழன்; சென்னி நாடார் தொல்புகழ் நாட்டியத்தான்குடி - சோழநாட்டுப்பதி; நாளும் - எக்காளும்; சேடார் பூந்துழற் சிங்கடியப்பன் திருவாரூரன் - நம்பிகள் பதிகந்தோறும் பல திறங்களாலும் தம் பெயர் பொறித்தல் மாபு. ஈண்டு இவ்வாற்றால் வைத்தமை பற்றி ஆசிரியர் (3195) விரித்தமை காண்க. இவ்வாறே "வனப்பகையப்பன்" என வருவனவும் காண்க. "நாணியூரன் வனப்பகையப்பன்" "ஆரூரன் வனப்பகையவளப்பன்" (தேவா); பாடீராகிலும் - உரிய வகையால் பாடவல்லீ ரல்லீராகிலும், "கோழைமிடறாக" (பின்-தேவா-வைகா). கோட்புலியாரது வலிமைபற்றி அவர் புராணம் பார்க்க.

**தலவிசேடம்:** திருநாட்டியத்தான்குடி - சோழ நாட்டில் காவிரித் தென்கரையில் 118-வது பதி. சுவாமி ஆரூர் நம்பிகளுக்கு அஞ்சத் தக்க அடையாளங்களுடன் காட்சி தந்தார் என்பது பதிகப் பாட்டுக்களிற் குறிக்கப்பட்டன என்பர். சுவாமி அம்மை பெயர்கள் பதிகத்துட் காண்க. கோட்புலிநாயனாரது பதி; அவர் தம் புராணமும் பதிகமும் ஈண்டுப் புராண வரலாறுகளும் பார்க்க; கோட்புலிநாயனார் புராணத்துக் கூறப்பட்ட செய்தி நம்பிகள் இங்குவந்து பாடிய பின்னைப் பலநாட் கழித்து நிகழ்ந்திருத்தல் வேண்டும். அப்போது அவர் பெண்கள் சிங்கடி வனப்பகையிருவருக்கும் கல்யாணமாகித் தம் மனை வாழ்க்கை வேறாகக் கொண்டிருந்தனர் என்பதும் ஈண்டுக் கருதப்படும். நாட்டியத்தான்குடி என்று இறைவர் பெயரால் ஊர்ப் பெயர் வழங்கும் பெருமையுடைய பதி. சுவாமி பெயர் - மாணிக்க வண்ணர். (இரத்தினகிரிநாதர்); அம்மை - மலர்மங்கைநாயகி; பதிகம் 1.

இது முன்னர் நாட்டியத்தான்குடி என்றிருந்து, இப்போது மாவூர் ரோடு என்று மாற்றப்பட்டிருக்கும் நிலயத்தினின்றும் வடமேற்கே மட்சாலை வழி 3½ நாழிகையளவில் அடையத் தக்கது. குறிப்பு: இறைவர் பெயரால் அமைந்

திருந்த சிறந்த நிலயப் பெயரைச் சிலர் சூழ்ச்சியால் இவ்வாறு மாற்றியமைத்தமை வருந்தத் தக்கது. இதுபோலன்றி, இதற்கு மாறாக, முன்னர் வேறு பெயராலமைந்த நிலயப் பெயரை இறைவர் சார்பு பற்றிய பதியாக நிலயப் பெயர் மாற்றப் பாடு பட்டு மாற்றச் செய்த நல்லன்பர்களும் இருக்கின்றார்கள். (உதாரணம் : வெட்டாறு என்றிருந்தது அன்பரின் முயற்சியால் விற்குடி என மாற்றப்பட்டது காண்க.) இந் நிலயத்தினையும் முன்னைத் திருப் பெயரால் நன்கு வழங்கச் செய்தல் நன்மை பயக்கும்.

3197. (வி - ரை) திருவலிவலம் - திருநாட்டியத்தான்குடியினின்றும் திருவாரூருக்குச் செல்லும் வழி இடையில் உள்ளது.

"வலிவலத்துக் கண்டேன்" என்று - இது பதிகத்தின் மகுடக் குறிப்பினாலே பதிகக் கருத்துக் கூறியபடி. "வலிவலந்தனில் வந்து கண்டேனே" என்பது பதிகம்.

எங்கும் நிகழ் திருத்தமிழ்மாலை - எல்லாவிடத்தும் பெருமை விளங்கப் பரவிய செந்தமிழ்த் திருப்பதிகம். "ஒலிகொளின்னிசைச் செந்தமிழ் பத்தும் என்பது பதிகத் திருக்கடைக் காப்பு. எங்கும் நிகழ்ந்து - "ஒலிகொள் இன்னிசை" (பதிகம்) என்றபடி ஒலிவடிவாயினமையால் அவ்வொலி அலைகள் பாம்பரையில் எங்கும் சென்று பரவி நிகழ உள்ள தன்மையும் குறிப்பு. இந்நாள் (Radio) ஒலிபரப்பியின் தத்துவம் காண்க. புகழ் பரவுதலுமாம்.

எடுத்து - தொடங்கி ; தொடுத்த - மாலை என்றதற்கேற்பத் தொடுத்த என்றார். தொடை - என்ற யாப்பினுறுப்பு வழக்கும் காண்க ; இசை - இசையினையுடைய பாட்டுக்கு வந்தது. "இன்னிசைச் செந்தமிழ்" என்ற பதிகமும் காண்க.

புனைவார் - என்று சிறப்பித்து என மேல்வரும் பாட்டுடன் முடிக்க. புனைவார் - புனைவாராகி ; முற்றெச்சம்,

மருவு திருவலிவலம்—என்பதும் பாடம். 43

3198. (வி - ரை) நன்று...என்று - இது பதிகத்தினுள் "நல்லிசை ஞானசம் பந்தனு நாவுக் கரசரும் பாடிய நற்றமிழ் மாலை, சொல்லிய வேசொல்லி யேத்துகப் பானை" என்ற ஐந்தாம் பாட்டினைக் குறிப்பது. நன்று மகிழும் - பாட்டு என்று கூட்டுக. நல்லிசை என்றது பதிகம்; திருஞானசம்பந்த நாயனார் - திருநாவுக்கரசு நாயனார் என்ற இரு பெருமக்களுடைய திருப்பாட்டுக்களில் இறைவர் மிக்க விருப்புடன் மகிழ்வர் என்பதாம். இவ்வுண்மை அவர்தம் புராணங்களுட் பல்லாற்றானும் இனிது விளங்குதல் கண்டுகொள்க. இதனை நம்பிகள் எடுத்துக்காட்டிப் பாராட்டுதல் பெருஞ் சிறப்பு ; இவ்வுண்மைச் சிறப்பு நம்பிகளது திருப்பாட்டுக்களுக்கு மொக்கும்.

மன்றி னிடையே நடம்புரிவார் - அம்பலக் கூத்தர் ; தியாகராசரும் நடராசரும் ஒருவரே என்பது முன்னர் "ஆரூரில் வருக நம்பால்" (254) என்றவிடத் துரைத்த வாற்றானும், அவ்வாறு வந்த நம்பிகளுக்கு ஆரூரர் பெருமான் "தில்லைவா ழந்த ணர்தம் மடியார்க்கு மடியேன்" என்று முதலெடுத்துக் கொடுத்தமையானும், அவ் வாறு தில்லையினைப்பற்றித் திருவாரூரிற் றொடங்கிய முதனூல் திருவாக்குத், தில்லையில் இறைவர் "உலகெலாம்" என்று அடி எடுத்துக்கொடுக்க அங்கு நிறைவெய்திய வாற்றானும், பிறவாற்றானும் அறியப்படும். இவ்வுண்மை பற்றியே நடராசப் பெருமான் பிற்காலத்தில் ஒருகால் திருவாரூரில் எழுந்தருளியிருந்தார் போலும் ; மருவு - என்ற எதிர்காலக் குறிப்பும் காண்க.

பூங்கோயிற் பெருமான் செம்பொற் கழல் பணிந்து - நம்பிகள் திருவாரூர் சென்றவுடன் பரவையார் திருமாளிகைக்கு நேரே செல்லாது பூங்கோயிலுக்குச்

சென்று உடைய பெருமானை வணங்கிய பின்னர்ச் செல்வது காண்க. இதுபற்றி முன் உரைத்தவையும் நினைவுகூர்க.

பூங்கோயில் - திருவாரூர்க் கோயிலின் பெயர்; முன் உரைத்தவை (135) பார்க்க. 44

3199. (வி - ரை) பரவையார் திருமாளிகையில் - இறைவரால் ஆளாகக் கொள்ளப்பெற்றுத் தவநெறியும் பெற்றமையால், நம்பிகள் தமக்கென ஒருரும் இடமும் இல்லாது இறைவரது இடங்களே தமதிடமாக்கொண் டொழுகினர்; ஆதலின் திருவாரூரில் பரவையார் திருமாளிகையையும் திருக்கோயிலினையுமே தமதிடமாக் கொண்டனர் என்பது குறிப்பு; இவ்வாறு முன்னுரைத்தவையும் பின் வருபவையும் பார்க்க.

நணிய கோயில்கள் - திருவாரூரினை அடுத்து அணிமையில் உள்ள பல கோயில் கள். இவை திருவிளமர், திருமாலுமங்கை, திருச்சாத்தமங்கை, திருப்பள்ளியின் முக்கூடல் முதலாயின என்பது கருதப்படும்.

பிரியாதே - புறம்பு நணிய கோயில்களுக்குச் சென்று தொழுது அவ்வந்நாளே திருவாரூருக்குத் திரும்பிவந்து சார்ந்தார் என்பது.

ஓவா இன்பம் - நீங்காத இன்பம். வெளியே கோயில்களைச் சென்று வணங்கி னும் அவ்வந்நாளே திருவாரூருக்குத் திரும்பிவந்து புற்றிடங்கொண்டாரை ஒரு நாளும் இடைவிடாது வணங்கினபடியால் இடையறு இன்பம். ஓவுதல் - நீங்குதல்.

புறம்பு நணிய - புறம்பாயினும் அணிமையில் உள்ள. 45

## திருவலிவலம்

திருச்சிற்றம்பலம் பண் - தக்கேசி

ஊனங் கத்துயிர்ப் பாயுயிர்க் கெல்லா மோங்கா ரத்துரு வாகிநின் றானை
வானங் கத்தவர்க் கும்மளப் பரிய வள்ள லையடி யார்கடம் முள்ளத்
தேனங் கத்தமு தாகியுள் ளூறுந் தேனைத் தினைத் தற்கரி யானை
மானங் கைத்தலத் தேந்தவல் லானை வலிவ லந்தனில் வந்துகண் டேனே. (1)

நல்லிசை ஞானசம் பந்தனு நாவுக் கரசநும் பாடிய நற்றமிழ் மாலை
சொல்லிய வேசொல்லி யேத்துகப் பானைத் தொண்ட னேனறி யாமை யறிந்து
கல்லி யென்மனத் தைக்கசி வித்துக் கழலடி காட்டியென் களைகளை யறுக்கும்
வல்லியல் வானவர் வணங்கநின் றானை வலிவ லந்தனில் வந்துகண் டேனே. (5)

கலிவ லங்கெட வாரழ லோம்புங் கற்ற நான்மறை முற்றன லோம்பும்
வலிவ லந்தனில் வந்துகண் டடியேன் மன்னு நாவலா ரூரன்வன் றொண்டன்
ஒலிகொ ளின்னிசைச் செந்தமிழ் பத்து முள்ளத் தாலுகந் தேத்தவல் லார்போய்
மெலிவில் வானுல கத்தவ ரேத்த விரும்பி விண்ணுல கெய்துவர் தாமே. (10)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—நல்லிசை ஞானசம்பந்தனு நாவுக்காசரும் பாடிய நற்றமிழ் மாலை உகந்த இறைவரை வலிவலந்தனில் வந்து கண்டேனே.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) ஊன் அங்கத்து உயிர்ப்பாய் - ஊன் என்னும் உடம்பினுள்ளே தோயாதே உயிர்ப்பின் உருவாய் நின்று; "என்னுளே யுயிர்ப் பாய்ப் புறம்போந்துபுக் கென்னுளே நிற்கும்" (அரசுகள் - குறுந்.) உயிர்க்கெல் லாம் ஓங்காரத் துருவாகி நின்றான் - பஞ்சாக்கர வடிவாகிய தன் உருவத்துள்ளே

உயிர்களெல்லாம் ஒடுங்க நின்றவர் இறைவர்; வான் அங்கத்தவர்க்கும் - விண்ணுலகத்தவர்களாகிய தேவர்களுக்கும்; வானோர்க்கும். தேனங்கத் தமுதாகி - தேனுலாகிய அங்கத்தினுள் இனிக்கும் அமுதமாகித் தித்தித்து; தேனம் - அம் - சாரியை; அங்கைத் தலத்து மான் ஏந்த என்க;—(2) செல் அடியே நெருக்கி - அடியார்கள் செல்லும் செந்நெறியினையே ஒட்டிப் பின்பற்றி; சித்தி - இம்மைநலம்; முத்தி - வீடுபேறு; துறை - வேண்டுவன;—(3) ஆழியனு யகன்றே யுயர்ந்தானை - "ஓங்கி யாழ்ந் தகன்ற நுண்ணியனே" (திருவா. சிவபு.) ஆழியன் - ஆழமுடையன்; உயர்ந்தான் - (ஆயினும்) பணிவார்க்கு அணியான்; கூழையர் - பின்னணியில் நிற்பவர். அடியார் கூட்டத்தில் கடையில் நிற்பவராகி; "கடைக் கூழைச் சென்மின்கள்" (திருவா. படையெழுச்சி); பொய்யே குடி ஓம்பி - உலக வாழ்க்கையில் ஆசையின்றிப் பற்றாது வாழ்ந்து; குழைந்து...வாழியர் - அன்புடன் மெய்யடியார் திறத்துக் குற்றேவல் செய்து வாழ்பவர்; குழூப் பெயிதல் - கூட்டத்துக்கு வேண்டுவன புரிதல்;—(4) அண்ணித்து - அணுகி யின்பந் தந்து; "அண்ணிக்குந் தீங்கரும்பை" (தாண்); ஆத்தான் - ஆத்தன் (ஆப்தன்) என்பது ஆத்தான் என நின்றது; அடியேன் றனக்கென்றும் ஆத்தானை என்க; சோத்தான் - துதி பெறுதற் குரியவன்; சோத்தம் - துதி; சுடர் மூன்று - சூரியன்-சந்திரன்-தீ; மாத்தான் - உயர்வுடையான்; மகத் என்பது மாத்து என நின்றது; மாத்து - பெருமை;—(5) நல்லிசை......ஏத்துநப் பானை - ஆளுடைய பிள்ளையாரும் ஆளுடைய அரசுகளும் அருளிய பாடல்களாகிய தேவாரங்களை இறைவர் மகிழ்ந்து அருளும் திறம் போற்றப்பட்டது. இதனை ஆசிரியர் (3198) உரை செய்து குறித்துக் காட்டியருளியது காண்க. சொல்லியவே சொல்லி ஏத்து - அவர்களது தேவாரங்களையே சொல்லிச் சொல்லி ஏத்துதலை; ஏத்து - ஏத்துதல்; போற்றுதலை. ஏத்து - முதனிலைத் தொழிற்பெயர். நல்லிசை என்பதனை நாவுக்கரசருடனும் கூட்டுக. இசை - புகழ்; கீதம் என்றலுமாம். அவர்களது நற்றமிழ் உகப்பானுயினும் எனது அறியாமையறிந்தும் என்னையும் ஆட்கொள்பவன் என்பது. கல்லி - தோண்டி; அகழ்ந்து; கல்லுதல் - தோண்டுதல். கசிவித்து - பெரிய வைற்றாக வன்றிக் கசியும்படியேனும் செய்து; இளகச் செய்து; "கல்லைப் பிசைந்து கனி யாக்கி" (திருவா). களைகள் - வேண்டப்படாத குற்றங்கள் (உழவு); களைபோல் பவற்றைக் களை என்றார்; வல்லியல் - வலிய இயல்புடைய;—(6) பாடுமா - ஆறு - என்பது ஆ என நின்றது; ஏனை யாவும் இவ்வாறே. பனுவும்ா - பன்னும்-சொல்லும்-ஆறு; கூற - எடுத்துக் கூறி வேண்ட; குறித்துக் காட்டிக் கொணர்ந்தேனை ஆண்டு - திருவெண்ணெய்நல்லூரில் தடுத் தாட்கொண்டதும், திருத்துறையூரில் தவநெறி தந்ததும், திருவதிகையில் திருவடி சூட்டியதும், திருவாரூரில் திருத்தொண்டத்தொகை பாட அருளி அடியரோடு கூட்டியதும் முதலிய வரலாறுகளைக் குறிக்க:—(7) பந்தித்த வல்வினைப் பற்று - மூலமலமும் மூல கன்மமும்; பிறவி...பரப்பு - அளவில்லாத பிறவிகள். சந்தித்த திறலார் பணி பூட்டி - சந்தித்தல் - திருவடி ஞானங் கூடுதல்; திறல் ஆர் - வலிமை பொருந்திய; பணிபூட்டி - பணியில் தம்மைப் பூட்டி; ஒப்புவித்து; மேற்கொண்டு;—(8) வந்தடைந்தவர்க்கே யிடமாகி - வந்து - தேவர் - மன்னர் முதலிய நிலைகளை விட்டுத் தம்மையே பற்றாக வந்து. வவ்வி - என்னைத் தன்னுள்ளாக்கி;—(9) அரக்கன் - இராவணன்; முற்றும் பின்னையாய் முன்னமே முளைத்தானை - முன்கூறிய அருளிப்பாடுகள் நிகழ்ந்த மிகப் பழங்காலத்துக்கும் முன்னே நின்றவன்; பின்னையாய் - அவை பிற்பட்டொழிய; "முளைத்தானை யெல்லார்க்கு முன்னே தோன்றி" (தேவா);—(10) அந்தணன் -

பிரமன்; ஏன்ற - செருக்கியெழுந்த ; அத்தலையினில் ஏற்று என்க. அத்தலையினில் - என்பது இசையெச்சம். மாவிரதத்த - மாவிரதம் என்ற உட்சமயக் கோலத்தை யுடைய ; சான்று காட்டுதற் கரியவன் - " தமக்குவமை யில்லாதான் " (குறள்); தன்னிலா மனத்தார் - தற்போத மில்லாது சிவனையே நினையும் மனத்தவர்கள் ; மான்று - " மயங்கி மான்று மனங்கருதி நின்றீரெல்லாம் மனந்திரிந்து மண்ணின் மயங்காது...சேர்மின்களே " (பிள். தூங்கானை மாடம்-4); —(11) கலிவலங் கெட ஆரழலோம்பும் என்றது உலகங் காக்கச் செய்யும் பொது வேள்விகளை. மறை முற்றன லோம்பும் என்றது வைதிகர்கள் மனை தோறும் வளர்க்கும் முத்தீ; முன்னையது நகரின் புறத்தே யாகசாலைகளில் செய்யப்படுவது ; வந்து - நாட்டியத்தான் குடியினின்றும் வடகிழக்காகத் திருவாரூர் செல்பவர் நேரே செல்லாது தென் கிழக்காக 4 நாழி வழி தேடி வந்து கண்டாராதலின் வந்து என்றார். ஏனைய பாட்டுக்களிலும் இவ்வாறே கொள்க ; ஒலிகொள் இன்னிசை - இசை (பொருட்) சத்தம் பற்றியது ; செந்தமிழ் பொருளைப் பற்றியது ; இயற்றமிழ் என்றலுமாம்.

தலவிசேடம்:—திருவலிவலம் - முன் 2413-ன் கீழ் உரைக்கப்பட்டது பார்க்க.

3200. சேறிபுன் சடையார் திருவாரூர்த் திருப்பங் குனியுத் திரத்திருநாள்
குறுக வரவும் பரவையார் கோடைக்கு விழாவிற் குறைவறுக்க
நிறையும் பொன்கொண் டணைவதற்கு நினைந்து நம்பி திருப்புகலூர்
இறைவர் பாதம் பணியவெழுந் தருளிச் சென்றங் கெய்தினார். சஅ

(இ - ள்) செறி...வரவும் - (அந்நாளிலே) செறிந்த புன் சடையினை உடைய சிவபெருமானது திருவாரூர்த் திருப்பங்குனி உத்திரத் திருநாளானது அணுகவரவே; பரவையார்...நினைந்து - பரவையார் கொடுப்பதற்கும் திருவிழாவில் அடியார்களுக்கு வேண்டுவன வெல்லாம் குறைபாடின்றிச் செய்வதற்கும் நிறைவாகிய பொன்னினைக் கொண்டு வருதற்கு எண்ணி ; நம்பி...எய்தினார் - நம்பிகள் திருப்புகலூர் இறைவரது திருவடிகளைத் தொழுவதற்கு எழுந்தருளிப் போய் அங்குச் சேர்ந்தருளினர்.

(வி - ரை) திருவாரூர்...குறுகவரவும் - புற்றிடங் கொண்ட பெருமானைக் கும்பிட்டு நம்பிகள் ஓவா இன்பமுற்றிருந்த அந்நாளில் திருப்பங்குனி உத்திரத் திருநாள் அணுக வந்தது. " அந்நாளிலே" என்பது சொல்லெச்சம் ; திருப்பங்குனி உத்திரத் திருநாள் திருவாரூரில் மிகச் சிறப்புடையது. 48 நாட்கள் கொண்டாடப் படுவது. இதனுள் விநாயகர், சுப்பிரமணியர், சந்திரசேகரர் முதலாகச் சண்டேசர் இறுதியாக அவ்வம் மூர்த்திகளுக்கும் தனித்தனி விழாக்கள் உண்டு. பங்குனி உத்திரநாளில் வீதிவிடங்கராகிய ஸ்ரீ தியாகேசப் பெருமான் உருத்திரபாத தரிசனந் தந்து ஆழித்தேர் ஊர்ந்து திருவீதி எழுந்தருளுவது பெருஞ் சிறப்பாகும்.

பரவையார் கோடைக்கு விழாவிற் குறைவறுக்க-அத்திருவிழாவில் பரவையார் விழாக் காணவரும் அவ்வவர்க்கும் வேண்டிய வேண்டியவாறு பொன் மணி துணி முதலியவற்றையெல்லாம் கொடுப்பதும், அடியார்களுக்கு அமுது உறையுள் முதலிய எல்லாம் குறைவின்றி உபசரித்துச் செய்வதும் வழக்கமாகும். அதன் பொருட்டு நம்பிகள் இறைவரிடம் பொன் வேண்டுவதும் வழக்கமாம். பின்னர்த் திருமுதுகுன்றத்திலும் திருப்பாச்சிலாச்சிராமத்திலும் பொன் வேண்டிப் பெறும் வரலாறுகளும் காண்க. அவையும் அவ்வப்பங்குனி உத்தரவிழாவின் பொருட்டே யென்க.

இவையொன்றுங் காணமாட்டாத வீணர்கள் சுந்தரர், பரவையாருக்குத் தரப் பொன் இறைவரிடம் வேண்டுவதும் இறைவர் தருவதும் பற்றி மனம் போனவாறு பேசுதல் அறியாமை என்றொதுக்குக. "சுந்தரன் பொன்னைப் பாடுவான்" என்பதாதியாக இவ்வறியாமையே பற்றிப் பாட்டும் பாடிவிட்ட புலவனுமுண்டு. என்னே? இவர்கள் மதியீனமிருந்தவாறு? உலகம் உண்மை கண்டு பெரியோர்பால் அபசாரப் படாது உய்வதாக.

கோடைக்கு விழாவில் குறைவறுக்க - கொடைக்கும் விழாவிற்குறைவறுக்கவும். கோடை - பொன் முதலியவற்றைக் கொடுத்தல். இது யாவர்க்கும் செய்யப்படும்; குறைவறுத்தல் - அடியார்க்கு அமுது படைத்தல் முதலாகிய உபசரிப்பு வகை. கொடுப்பதற்குப் பொருளின்மையாகிய குறைவில்லாதிருக்க என்றனர் முன் உரைகாரர்கள். குறைவறுத்தல் - அடியார்க்கு அமுது உறையுள் முதலாக வேண்டிய உபசரிப்புக்கள் செய்தல் என்பது "கண்ணுதலான் திருத்தொண்டரானூர்க்கெல்லாம் கோதில்புகழ்ப் பாண்டிமா தேவி யார்மெய்க் குலச்சிறையார் குறைவறுத்துப் போற்றிச் செல்ல" (2788); "குறைவறுத்தார் பஞ்சவனூர்" (கழிறிற். புரா - 95) "குறைவறுப்பேவி" முதலியவை காண்க. திருவிழாவில் இவ்வாறு செய்யும் நியமங்கள் மிகப் பெரிய சிவபுண்ணியங்களாம் என்பது சிவாகமநூற்றுணிபு. அமர்நீதி நாயனூர் புராணம் முதலியவை பார்க்க.

பொன்கோண் டணைவதற்குத் திருப்புகலூர் இறைவர் பாதம் பணிய-நம்பிகள் திருவாரூரிலே தமது இறைவர்பாலே பொன் வேண்டிப் பெற்றிருக்கலாமே? எனில், அற்றன்று; தாம் ஆன்மார்த்த நாயகராகக் கொண்டு வழிபடும் உடைய நாதரிடத்துப் பொன் முதலிய எந்தக் காமியங்களையும் வேண்டலாகாது என்பது சிவாகம விதி. பூசாபலன் கன்மபலன் செபபலன் முதலிய எல்லாவற்றையும் உடைய நாதருடைய வரதத் திருக்கையில் அர்ப்பணம் செய்தல் வேண்டும் என்பது சிவாகங்களில் விதித்த பூசாவிதி. ஆதலின் திருவாரூரில் புற்றிடங் கொண்டாராகிய தம் உடையவர்பால் ஆரூர் நம்பிகள் பொன் முதலியவற்றை வேண்டிற்றிலர். திருப்புகலூரிலும் திருப்பாச்சிலாச்சிராமத்திலும் திருமுதுகுன்றத்திலுமே சென்று வேண்டிப் பெற்று அதனைத் திருவாரூர் விழாவில் அடியார்க்குக் குறைவறுக்க உதவியருளினர்.

பரவையார் கோடைக்கு - நம்பிகள் தந்த பொருள்களை எல்லாம் திருவாரூரில் பரவையார், அவ்வவர் வேண்டியவாறு கொடுத்துவந்தார் என்பது முன்னர்க் குண்டையூர் நெல்லினை ஆரூரில் அவ்வவர் மனை எல்லைக்குட்பட்ட அளவு அவ்வவரே எடுத்துக்கொள்க எனப் பறை சாற்றுவித்துக் கொடுத்தவாற்றானுமறிக. 46

3201. சென்று விரும்பித் திருப்புகலூர்த் தேவர் பெருமான் கோயில்மணி
முன்றில் பணிந்து வலங்கொண்டு முதல்வர் முன்பு வீழ்ந்திறைஞ்சித்
தொன்று மாபி னடித்தொண்டு தோய்ந்த வன்பிற் றுதித்தெழுந்து
நின்று பதிக விசைபாடி நினைந்த கருத்து நிகழ்விப்பார், ௪எ

3202. சிறிது பொழுது கும்பிட்டுச் சிந்தை முன்ன மங்கொழிய
வறிது புறம்போந் தருளியயன் மடத்தி லணையார் வன்றொண்டர்
அறிவு கூர்ந்த வன்பருட னணிமுன் றினிலோ ாருகிருப்ப
மறிவண் கையா ரருளாலோ மலர்க்கண் டுயில்வந் தெய்தியதால். ௪அ

3201. (இ - ள்) வெளிப்படை. சென்று விரும்பித்திருப்புகலூரிலே தேவதேவராகிய இறைவரது திருக்கோயிலில் மணிமுற்றத்தில் வணங்கி வலமாக வந்து முதல்

வாது திருமுன்பு நிலமுறவிழுந்து வணங்கிப் பழைய மரபின் வரும் திருவடித் தொண்டிலே ஊறிய அன்பினாலே துதித்து எழுந்து நின்று திருப்பதிக இசையினைப் பாடித் தாம் எண்ணி வந்த கருத்தினை விண்ணப்பிப்பாராகி : சஎ

3202 (இ - ள்) சிறிது...ஒழிய - சிறிது நேரம் கும்பிட்டு நின்று பின்னர் மனம் அங்கு நிற்க ; வறிது...அணையார் - (நினைந்த பொன் பெறாது) வறிதே புறத்துப் போந்து பக்கத்தில் எந்தத் திருமடத்திலும் சென்று அணையாமல் ; வன்றொண்டர்...அருகிருப்ப - வன்றொண்டராகிய நம்பியாரூரர் அறிவு பெருகிய அன்பர்களுடனே அழகிய திருமுற்றத்தில் ஒரு பக்கமாக எழுந்தருளியிருப்ப ; மறி... எய்தியதால் - மானேந்திய வன்மையினையுடைய இறைவரது திருவருளாலேயோ (அறியோம்) அவரது மலர்போன்ற திருக்கண்கள் துயில் வந்து பொருந்தப் பெற்றன. சஅ

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபுகொண் டுரைக்க நின்றன.

3201. (வி - ரை) சென்று...நிகழ்விப்பார் - நினைந்தபின் திருப்புகலூர் சேர்ந்தருளியதும், சேர்ந்தபின் வழிபட்டுப் பாடி நின்றதும் இவ்வாறு ஒரு பாட்டிற் சுருங்கக் கூறியருளியது செயலின் விரைவு குறித்தற்கு.

தோன்றுமரபின் அடித்தொண்டு தோய்ந்த - பழமையாக வரும் திருவடி வழிபாட்டு முறையில் உள்ளூறிய ; மரபு - நெறி ; குருமரபின் வந்த சிவ தவநெறி ; இவ்வாறன்றி மரபு வழிவழி வந்த குலம் என்றுரைப்பாருமுண்டு ; தோன்று - தொன்றுதொட்டு வந்த.

நிகழ்வித்தல் - விண்ணப்பித்தல் ; நிகழ்விப்பார் - முற்றெச்சம் ; நிகழ்விப்பார் - தும்பிட்டு என்று மேல் வரும்பாட்டுடன் கூட்டி முடிக்க.

நினைந்த - முன்பாட்டில் நினைந்து என்ற எண்ணம்.

பதிகவிசை பாடி - இப்பதிகம் கிடைத்திலது ! 47

3202. (வி - ரை) சிந்தை முன்னம் அங்கு ஒழியப் புறம்போந்து - மனம் அங்குத் தங்கி நிற்கத் திருமேனி மட்டில் புறமுற்றத்திற் போந்து. அயல் மடத்தில் அணையார்-முன்றிலின் அருகிருப்ப என்க. வழிபாட்டு நேரங்களிலன்றி மற்றை நேரங்களில் திருக்கோயிலினும் திருமுற்றத்திலும் தங்குதல் பெரியோர் மரபன்று ; விதியு மன்று. என்னை? அவ்வாறு தங்கின் உடம்பின் உபாதிவசத்தாலும் மற்றும் பலப் பல அபசாரங்களுக்கு இடமாகுமாதலானென்க ; அருகு - ஒருபுடை - பக்கம்.

அருளாலோ - திருவருளாலேயோ ? யாம் அறியோம் என்றபடி.

திருமுற்றத்தில் துயிலலாகாது என்பது விதியாதலின் அதற்கு மாறாக ; வழிபாட்டுமுறையும் விதியுமறிந்து ஒழுக்கத்தினும் சிறந்த நம்பிகளுக்குத் துயில் வந்தது. அவரும் துயில் கொண்டனர் எனின், அஃது இறைவர் திருவருளினாலன்றி நேராது என்பார் அருளாலோ என்ற உடன்பாட்டு வினாவினாற் கூறினார் ; "தம் மேலைச் சார்புணர்ந்தோ ?" (1961) "தம்பெருமா னருளாலேயோ" (1891) என்பன முதலியவை பார்க்க. அருளாலே என்ற பாடமுமுண்டு.

அறிவுகூர்ந்த - நம்பிகளுடனிருக்கும்பேறு வாய்த்தவர்களின் பண்பு. 48

3203. துயில்வந் தெய்தத் தம்பிரான் றோழ ரங்குத் திருப்பணிக்குப்
பயிலுஞ் சுடுமட் பலகைபல கொணர்வித் துயரம் பண்ணித்தேன்
அயிலுஞ் சுரும்பார் மலர்ச்சிகழி முடிமே லணையா வுத்தரிய
வெயிலுந் தியவெண் பட்டதன்மேல் விரித்துப் பள்ளி மேவினார்,

(இ - ள்) துயில் வந்தெய்த - அவ்வாறு கண்களில் துயில் வந்து பொருந்த ; தம்பிரான் றோழர்...உயரம்பண்ணி - தம்பிரான் தோழராகிய நம்பி ஆரூரர் அங்கு இறைவர் கோயில் திருப்பணிக்குப் பயன்பட நின்ற சுட்ட மட்பலகைகளுட் பலவற்றைக் கொணரச் செய்து உயரமாக ஆக்கி ; தேன்...மேவினார் - தேன் உண்ணும் வண்டுகள் பொருந்திய மலர் மாலை சூடிய குடுமியினையுடைய திருமுடிக்குத் தலையணையாக உத்தரியமாகிய ஒளியுடைய வெண்பட்டினை அதன்மேல் விரித்துப் பள்ளி கொண்டார்.

(வி - ரை) துயில்வந்தெய்த - இயல்பாக வரவேண்டாத நேரத்தில் வந்து எய்திற்று என்பது குறிப்பு.

தம்பிரான் தோழர் - தோழராதலின் இச்செயலுக்கு உரிமைப்பாடு உடையவர் என்பது குறிப்பு. முன்பாட்டிலும் இவ்வாறே அயல் மடத்தில் அணையாது முன்றிலினில் இருந்துகிடந்த செயல் வன்றொண்டராந் தன்மை என்ற குறிப்புப்பற்றியதும் காண்க.

சுடுமட்பலகை - செங்கல். அந்நாளில் சோழநாட்டில் உள்ள கோயில்கள் பெரும்பான்மையும் செங்கல்லினாலே திருப்பணி செய்யப்பட்டன என்பது சரித உண்மை. அவை மிக நன்றாகவும் செம்மையாகவும் செம்பொற்கட்டிகள் போல அமைந்தன என்பதும் பழைய கோயில்களிற் காணலாம். பலகை என்ற குறிப்புமது. மரப்பலகை இழைத்துச் செம்மை செய்தது போல என்பது. சுடும் - சுடப்பட்ட.

பலகொணர்ந்து உயரம் பண்ணி - உயரமுடைய தலையணையின் மேல் தலையைக் கிடத்தித் துயில வேண்டுமென்பது உடற்சுகத்துக்குரிய நூல் விதி ; பல என்ற என்றதனால் இரண்டுக்கு மேற்பட்டதென்பது குறிப்பு. முன்னைநாட் செங்கல் அளவு கருத மூன்று அல்லது நான்கும் கொள்ளலாம். அணியா என்று பாடங்கொண்டு முடியிற்சூடிய மலர்மாலைகளைக் கற்றையாக்கி வைத்துக்கொண்டு என்றுரைப்பாருமுண்டு.

முடிமேல் அணையா - தலையை மேல் வைக்கும் தலையணையாக ; ஆ - ஆக என்பது ஈறு கெட்டு ஆ என நின்றது.

தேன்...முடி - திருவருளாணையின்படி (273) நம்பிகள் மண வேள்வியில் அன்று கொண்ட கோலத்துடனே உலகில் சரித்தருளினாராதலின் முடியில் எப்பொழுதும் மலர்மாலை அணிந்தருளுவர் ; தோழர் என்ற குறிப்பும் காண்க.

உத்தரிய...விரித்து - வலிந்த பரிசமுடைய மட்பலகைகளைத் தலையணையாக்கிக் கொள்ளத் தலையைச் சார்த்தற்குரியபடி மென்மை தருதற்கு உத்தரிய வெண்பட்டினை அதன்மேல் விரித்தருளினார். உத்தரியம் வெண்பட்டாலியன்றது. நம்பிகள் கொண்ட தோழர் கோலத்துக்குரியது. திருநாகைக்காரோணப் பதிகமும் பிறவும் பார்க்க.

முடிமேலணியா—என்பதும் பாடம். 49

3204. சுற்று மிருந்த தொண்டர்களுந் துயிலு மளவிற் றுணைமலர்க்கண்
பற்றுந் துயினீங் கிடப்பள்ளி உணர்ந்தார் பரவை கேள்வனார்
வெற்றி விடையா ரருளாலே வேமண் கல்லே விரிசுடர்ச்செம்
பொற்றிண் கல்லா யினகண்டு புகலூ ரிறைவ ரருள்போற்றி, ருo

3205. தொண்ட ருணர மகிழ்ந்தெழுந்து துணைக்கைக் கமல முகைதலைமேற்
கொண்டு கோயி லுட்புக்குக் குறிப்பி லடங்காப் பேரன்பு

மண்டு காத லுறவணங்கி வாய்த்த மதுர மொழிமாலை
பண்டங் கிசையிற் "றம்மையே புகழ்ந்" தென் றெடுத்துப் பாடினார்.

3204. (இ - ள்) சுற்றும்...அளவில் - தம்முடனிருந்த தொண்டர்களும் துயிலும்போது ; துணை...பாவைகேள்வனார் - தாமரை மலர் போன்ற இரண்டு திருக்கண்களையும் பற்றிக்கொண்ட துயில் நீங்கப் பள்ளியுணர்ந்தாராகிப் பாவையாரது கணவனாராகிய நம்பியாரூரர் ; வெற்றி...கண்டு - வெற்றி பொருந்திய இடபத்தை உடைய சிவபெருமான் றிருவருளாலே, வெந்த மட்செங்கல்லே விரிந்து ஒளிவீசும் செம்பொன்னாலாகிய திண்ணிய கல்லாகியவற்றைக் கண்டு ; புகலூர்...போற்றி - திருப்புகலூர் இறைவரது திருவருளைத் துதித்து, ருo

3205. (இ - ள்) தொண்டர் உணர - உடன் துயில்கொண்ட அடியார்களும் துயில் நீங்க; மகிழ்ந்து...புக்கு - மகிழ்ச்சியுடன் எழுந்து இரண்டு கைகளையும் தாமரை முகைபோலச் சேர்த்துத் தலையின்மேற் கூப்பிக்கொண்டு திருக்கோயிலினுள் புகுந்து; குறிப்பில்...வணங்க - தமது அறிவிற் குறிக்கொள்ளும் அளவிலடங்காத பேரன்பு செறிந்த ஆசையோடும் வணங்கி ; வாய்த்த...பாடினார் - வாய்ப்புடைய இனிய தமிழ் மொழிமாலையினைப் பண்தங்கிய இசையுடன் " தம்மையே புகழ்ந்து " என்று தொடங்கிப் பாடியருளினார். ருக

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபுகொண்டன.

3204. (வி - ரை) கண்பற்றும் துயில் - இயல்பாய்ப் பொருந்தாது வந்து பற்றிய என்றது குறிப்பு.

பள்ளி உணர்ந்தார் - துயில் விட்டு எழுந்தார். பள்ளி உணர்ந்தாராகி; முற்றெச்சம் ; உணர்ந்தார் - கண்டு - போற்றிப் பாடினார் - என வரும்பாட்டுடன் முடிந்தது.

வேம் மண்கல்லே - வெந்த மண்ணாலாகிய செங்கல்லே. வேம் - வேகும் ; வெந்ததனாலாகிய.

விரிசுடர்ச் செம்பொற்றிண் கல் - விரிசுடர் - ஒளி வீசும்; செங்கல் செம்பொற் கல்லாயினது. திண்கல் - பொன்னாதலின் செறிவுடைய திணிந்த கட்டிக்கல் ; திண்மை - உலோகங்களில் வைத்துப் பொன்னினது செறிந்த தன்மை (Density) யும் கனமும் ; பொற்பாளங்களைச் செங்கல் போன்ற அளவுபட வார்த்துச் சேமிக்கும் வழக்கும் காண்க.

போற்றி - எழுந்து - புக்கு - வணங்கிப் - பாடினார் - என வரும்பாட்டுடன் கூட்டி முடிக்க.

கல்லாயிட—கனகமாக—என்பனவும் பாடங்கள். 50

3205. (வி - ரை) எழுந்து - திருமுற்றத்தில் ஒருமருங்கு பள்ளிகொண்ட இடத்தினின்றும் எழுந்து; துணைக் கைக்கமல முகை தலைமேற்கொண்டு - இரண்டு கைகளையும் அஞ்சலியாகத் தலைமேற் கூப்பிய நிலையில் கூடிய கைகளிரண்டும் தாமரை மொட்டுப் போல இருந்தன என்பது.

குறிப்பில் அடங்காப் பேரன்பு - அன்பு பெருகிச் சென்றமையால் அது செலுத்தப்படும் இடத்தில் அளவு கடந்து குறிநிலைகொள்ளாது மேற்செல்லுதல் பற்றிக் குறிப்பில் அடங்கா என்றார்.

மண்டுகாதல் - குறிப்பிலடங்காப் பேரன்பு, செறிந்த காதலாய் விளைந்தது.

வாய்த்த-ஈண்டுப் பொருளுக்கும் அருளுக்கும் ஏற்றபடி வந்து வாய்க்கப்பெற்ற.

பண் தங்கு இசை - பண் - பதிகப்பண்ணாகிய கொல்லிப்பண் ; இசை பண் தங்குதலாவது - பண்ணோடு இசை பொருந்தி நிகழ்ந்து மாறுகொள்ளாதிருத்தல்.

வாழ்த்து மதுர—என்பது பாடம். 51

திருப்புகலூர்

*திருச்சிற்றம்பலம்.* பண் - கொல்லி - 7-ம் திருமுறை.

*தம்மை யேபுகழ்ந் திச்சை பேசினுஞ் சார்வி னுந்தொண்டர் தருகிலாப்*
*பொய்ம்மை யாளரைப் பாடா தேயெந்தை புகலூர் பாடுமின் புலவீர்காள்*
இம்மை யேதருஞ் சோறுங் கூறையு மேத்த லாமிடர் கெடலுமாம்
அம்மை யேசிவ லோக மாள்வதற் கியாது மையுற வில்லையே. (1)

*செறுவி னிற்செழுங் கமல மோங்குதென் புகலூர் மேவிய செல்வனை*
*நறவப் பூம்பொழி னாவ லூரன் வனப்ப கையப்பன் சடையன்றன்*
*சிறுவன் வன்றொண்ட னூரன் பாடிய பாடல் பத்திவை வல்லவர்*
*அறவ னாரடி சென்று சேர்வதற் கியாது மையுற வில்லையே.* (11)

*திருச்சிற்றம்பலம்*

பதிகக் குறிப்பு:—புலவீர் ! உலகில் *பொய்ம்மையாளரைப் பாடாதே எந்தை புகலூரைப் பாடுமின்; இம்மையே சோறுங் கூறையும் தரும்; இடர்கெடும்; அம்மையே சிவலோகமாள்வதற்கியாது மையுறவில்லையே என்று இறைவர் தமக்குச் செங்கல் செம்பொன்னாக்கித் தந்தருளியதனைப் பாராட்டும் முகத்தால் உலகரை வழிப் படுத்தியது.*

**பதிகப்பாட்டுக் குறிப்பு** :—(1) தம்மையே - *பாடப்படுகின்ற அவர்களையே ;* இச்சைபேசுதல் - *தம் கருத்து எதுவாயினும் அவர் இச்சை வழியே பேசுதல் :* கூறை - *துணி ; சோறுங் கூறையும் என்ற இரண்டும் இம்மை வாழ்வுக் கின்றியமை யாதன என்பது:*—(2) மிடுக்கு - *ஆண்மை - விறல்.* வில்லுக்கு விசயன் - *என்க. இது பழமொழியாய் வில் திறத்துக்கு எடுத்துக்காட்டாகப் பேசப்படுவது ;* பாரி - *கடை யெழு வள்ளல்களுள் ஒருவர் ; "பாரி வேள்பாற் பாடினை செலினே"* (புறம். 105) *"வண்புகழ் பாரிகாரி யென்றிசை வாது கூறி"* (திருப்புகழ்). அடுக்கு மேல் - *அவ்வாறு பாடுதல் கூடுமாயின் ; அதன் அருமை தோன்றக் கூறியது.* பொடி - *திருநீறு.*—(3) காணியேல் - *விளை நிலங்களாயின்;* காணியேல்...ஓம்புமே என்று - *நிலமுடைமை, கல்வி, சுற்றமும் விருந்தும் ஓம்புதல் என்ற தன்மைக ளிலரா யினும் என்பது இசையெச்சம் ; ஏனைப் பாட்டுக்களின் கருத்துப்போல ;* பூணி - *எருது ;* ஆணி - *ஆதார்வு:*—(4) நரைகள் - *பல அங்கங்களிலும் நரைத் தன்மை ;* மெய்தளர்தல் - *திரைத்தன்மை ;* மூத்து - *மூப்புத் தன்மை ;* உடல்நடுங்கி - *பிணித் தன்மை :* அரையன் - *அரசன் ; தலைவன்:*—(5) சழக்கன் - *கொடியவன் ;* வழக்கு - *நல்வழக்கு ;* பஞ்ச துட்டன் - *பொய், கொலையாதி ஐம்பெரும் பாதகங்களும் செய் தோன் ;* சாது - *நல்லவன் ;* பொன் செயி - செயி - *உவம உருபு ;* உஞ்சு - *உய்ந்து. மருஉ :*—(6) புலம் - *விளை நிலம் :* வெறி - *மலர் தேன் முதலியவற்றின் மணம் ;* அலமருதல் - *வருந்துதல் ;*—(7) நோய்மை - *கீழ்மை ;* கண்குழிதல் - *பசி - வறுமை முதலியவற்றால் கண் குழிப்படைதல் ;* ஆயம் - *வருத்தம் ;*—(8) எள் விழுந்திடம் பார்த்தல் - *ஈக்குமிகிலாத்தன்மை - உலோபம் ; கூட்டத்தில் எள் விழுந்தாலும் அதையும் பிறர் கொள்ளவிடாது தேடும் தன்மை ; ஈக்கும் கொடாத தன்மை.*

மைந்தன் - ஈகையின் வல்லமை ; புள்ளலாம் சென்று சேரும் - பறவைகள் எல்லாம் தத்தம் இருக்கைகளுக்குச் சென்று சேரும் இடமாகிய ; புட்கள் பிறரால் வரும் அபாயமின்றி வாழும் நல்லிருக்கை என்பது; உயிர்கள் மலவாதனை தாக்காது அபயம் புக்கு நல்வாழ்வு பெற இறைவரது இடம் சாரும் என்பது குறிப்பு. புகலூர் என்ற பெயர்ப் பொருளும் குறிப்பு ; அள்ளல் - சேறு. இங்கு உலக வாழ்வின் துன்பங்கள் என்ற பொருளில் நின்றது;—(9) முற்று - நற்குணங்களின் தொகுதி ; போத்தில் ஆந்தைகள் பாட்டற - நெய்தற் கரு : புகலூர் நெய்தற்றிணைச் சார்புடைமை காண்க. திருப்புனவாயிற் பதிகமும் பார்க்க ;—(10) வேலன் - குமரன் போன்ற இளையோன் ; அழகன் ; "முருகனே - மாரனே - விஞ்சையனே" (290 பார்க்க). போயிகை வாவி - திருக்கோயிலினைச் சூழ்ந்துள்ள பூம் பொய்கை ; மேதிபாய்தல் - வாவியிலுள்ள நீர்ப் பூக்களை மேய்வதன் பொருட்டு : (1273-1423 பார்க்க); ஐயன் - பெருமையுடையவன் ;—(11) சேறு - வயல்கள் ; நாவலூரான்... ஊரான் - நம்பிகள் இங்குத் தம்மை ஊராலும் வாலாற்றானும் பருவத்தானும் பெயரா னும் அறிவித்துப் பொறித்து வைத்துக் குறித்தமை பேரன்பின் எழுந்த மகிழ்ச்சிக் குறிப்பு. (3205).

தலவிசேடம்:—திருப்புகலூர் (16) முருக நாயனர் புராணத்திறுதியி லுரைக் கப்பட்டது.

3206\. பதிகம் பாடித் திருக்கடைக்காப் பணிந்து பரவிப் புறம்போந்தே
எதிரி லின்ப மிம்மையே தருவா ரருள்பெற் றெழுந்தருளி
நிதியின் குவையு முடன்கொண்டு நிறையு நதியுங் குறைமதியும்
பொதியுஞ் சடையார் திருப்பனையூர் புகுவார் புரிநூன் மணிமார்பர்,

3207\. செய்ய சடையார் திருப்பனையூர்ப் புறத்துத் திருக்கூத் தொடுங்காட்சி
எய்த வருள வெதிர்சென்றங் கெழுந்த விருப்பால் விழுந்திறைஞ்சி
ஐயர் தம்மை "யரங்காட வல்லா ரவரே யழகிய"ரென்
றுய்ய வுலகு பெறும்பதிகம் பாடி யருள்பெற் றுடன்போந்தார். ௩௩

3206\. (இ - ள்) பதிகம்...போந்தே - திருப்பதிகத்தினைப் பாடித் திருக் கடைக் காப்பும் சாத்தித் துதித்துப் புறத்திற்போந்து ; எதிரில்...எழுந்தருளி - ஒப்பில்லாத இன்பத்தினை இம்மையிலேயே தருவாராகிய திருப்புகலூர் இறைவரது அருள்விடை பெற்று எழுந்தருளிச் சென்று ; நிதியின் குவையும் உடன் கொண்டு - திருப்புகலூரிற் பெற்ற செம்பொற் கட்டிகளையும் உடனே கொண்டு ; நிறையு நதி யும்...மணிமார்பர் - நிறையும் நீரினை யுடைய கங்கையினையும் கலைகுறைந்து வந் தடைந்த மதியினையும் சேர உட்பொதிந்து வைத்த சடையினையுடைய சிவபெரு மானது திருப்பனையூரினுட் புகுவாராகிய முப்புரி நூலினையும் மணி வடங்களையு மணிந்த மார்பினையுடைய நம்பிகள், ௩௨

3207\. (இ - ள்) செய்ய சடையார்...அருள - செம்மையாகிய சடையாரா கிய சிவபெருமான் திருப்பனையூரின் புறத்திலே திருவருட் கூத்தினோடும் எதிர் காட்சி பொருந்தக் காட்டியருள ; அங்கு...இறைஞ்சி - அவ்விடத்தே (ஊர்ப்புறத் திலே) எதிர் சென்று மேலோங்கிய விருப்பத்தினாலே நிலமுற வீழ்ந்து வணங்கி ; ஐயர்தம்மை - இறைவரை ; அரங்காட...பாடி - "அரங்கில் ஆடுமாறு வல்லார் அவரே அழகியரோ" என்ற கருத்துடையதாய் உலகம் உய்யப் பெறும் வாழ்வு

தரும் திருப்பதிகத்தினைப் பாடி ; அருள்...போந்தார் - திருவருளினைப் பெற்று உடனே சென்றருளினர். ௫௧

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டுரைக்க நின்றன.

3206. (வி - ரை) புறம் - திருக்கோயிலின் புறம்பு.

எதிரில்...தருவார் - திருப்புகலூரிறைவர். திருப்பதிகக் கருத்துப் போற்றப் பட்டது. எதிரில் - இணையில்லாத. அருள் பெற்று - அருள் விடை பெற்று.

நிதியின் துவை - செம்பொற் கட்டிகள். துவை - திரட்சி - திரண்ட கட்டிகள் ; துவி - பகுதி.

நிறையும் நதி - குறைமதி - முரண் அணி ; நிறைவாய்ப் பெருகி வந்த நதியைச் சிறுகச் செய்தும், குறைந்து வந்த மதியைப் பெருகச் செய்தும் அருளிய எல்லாம் வல்லவர் என்பது குறிப்பு.

போதிதல் - நெருங்கியிடம்பெறச் செருகி வைத்தல்.

மார்பர் புகுவார் - புகுவார் - புகுவாராகி ; எதிர் சென்று என்று மேல் வரும் பாட்டுடன் முடிக்க.

புரிநூல் மணி மார்பர் - நூலும் மணி வடங்களும் பூண்ட மார்பர். உம்மைத் தொகை ; வைதிகத்திருவும் மன்னவர் திருவும் உடையவர். தடுத்தாட்கொண்ட புராணம் பார்க்க. மணி - அழகுடைய என்றலுமாம்.

திருப்பனையூர் புகுவார் - திருப்புகலூரினின்றும் திருவாரூருக்கு வருமிடையில் உள்ளது திருப்பனையூர். திருவாரூர் செல்லும் சாலைக்கு இதன் வழியாய்ச் செல்வது சுருங்கிய வழியாதலின் புகுவார் என்றார். புகுதல் - ஊர்ப்புற எல்லையினைச் சார்தல். 52

3207. (வி - ரை) புறத்து - ஊர் எல்லைப் புறத்தில்.

திருக்கூத்தோடும் காட்சி எய்த அருள - ஆனந்தக் கூத்தாடிக் காட்சி தர.

அங்கு - காட்சி தரக்கண்ட அவ்விடத்தே ; ஊர் எல்லைப்புறத்தே.

அரங்காட வல்லார் அவரே அழகியரே-பதிகக் கருத்துக்காட்டுமாறு ; பாட்டுத் தோறும் வரும் முடிபுகளின் குறிப்புப் பார்க்க. முதற் பாட்டு முடிபு பார்க்க.

உலகு உய்யப் பேறும் பதிகம் என்க. உய்யப் பெறுதலாவது உறுதிப் பொருளை இதனால் உபதேசிக்கப் பெற்று உய்யும் வழி பெறுதல்.

ஐயர ரங்கிலாடுமா—என்பதும் பாடம். 53

### திருப்பனையூர்

திருச்சிற்றம்பலம் பண் - சீகாமரம்

மாட மாளிகை கோபு ரத்தொடு மண்ட பம்வள ரும்வளர் பொழிற்
பாடல்வண் டறையும் பழனத் திருப்பனையூர்த்
தோடு பெய்தொரு காதி னிற்குழை தூங்கத் தொண்டர்கள் துள்ளிப்பாடநின்
றாடு மாறுவல் லா ரவரே யழகியரே. (1)

வஞ்சி நுண்ணிடை மங்கை பங்கினர் மாத வர்வள ரும்வளர் பொழிற்
பஞ்சின் மெல்லடியார் பயிலுந் திருப்பனையூர்
வஞ்சி யும்வளர் நாவ லூரன் வனப்பகை யப்பன் வன்றொண்டன்
செஞ்சொற் கேட்டுகப்பா ரவரே யழகியரே. (11)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—3207-ல் ஆசிரியர் காட்டியருளியது காண்க.

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) வண்டு பாடலறையும் பழனம் என்க. பாடல்-பண் ; ஒரு காதினில் என்பதனை முன்னும் பின்னும் தோடு - குழை என்ற ஈரிடத்தும் தனித்தனி கூட்டுக ; துள்ளுதல் - ஆனந்தத்தின் மெய்ப்பாடு ; இறைவர் நடங் கண்டு அன்பர்கள் ஆனந்தக் கூத்தாடுவர் ; எதிர் காட்சியாக நடங் கண்டு பாடிய பதிகம் ; ஆதலின் இவ்வாறு போற்றினர். மேல் வரும் பாட்டுக்களும் இவ்வாறே ;—(2) நெய்யாடி - பெயர் ; நெய்யாடல் - விழா ;—(3) வினை தீர்ப்பராய் விடில் - வினை தீரும் பருவம் வந்து சேர்ந்த போது;—(4) தோளுமாகமும் தோன்ற நட்டமிட்டு - கூத்துக் கண்ட காட்சிக் குறிப்பு ;—(5) அங்கைத்தீ - தீ ஏந்திய நிலை ;—(6) சோணுட்டவர் பரவிய பாவிரி புலவர் - ஆளுடைய பிள்ளையார் இத்தலத்துப் பதிகத்துட் பாராட்டிய தன்மைக் குறிப்புப் போலும் ;—(7) திரங்கல் - தோல் சுருங்குதல் ; துரங்கன் வாயி பிளந்தான் - திருமால் ; "மாவாய் பிளந்தான்" தூமலர்த் தோன்றல் - பிரமன் ;—(9) துண்டு - ஆழம்.

தலவிசேடம்:—திருப்பனையூர் - சோழ நாட்டில் காவிரித் தென்கரை 73-வது பதி ; இங்கு நம்பியாரூரருக்கு இறைவர் திருநடனக் காட்சியுடன் எதிர் காட்சி கொடுத்தருளிய வரலாற்றுக் குறிப்புப் பதிகத்துக் காணத் தக்கது ; பராசரர் பூசித்துப் பேறு பெற்றனர். கரிகாற் சோழருக்குத் துணை செய்தபடியால் விநாயகர் துணையிருந்த பிள்ளையார் எனப் பெயர் வழங்கப்பெறுவர். சுவாமி - சௌந்தரநாதர் ; அம்மை - பெரியநாயகி ; தீர்த்தம் - அமிர்த புஷ்பகரணி - பதிகம் 2.

இது நன்னிலம் நிலயத்தினின்றும் தென் கிழக்கே (மட்சாலை) கரைவழியே ஒரு நாழிகையளவில் உள்ளது.

3208. வளமல் கியசீர்த் திருப்பனையூர் வாழ்வா ரேத்த வெழுந்தருளி
அளவில் செம்போ னிட்டிகைக ளான்மே னெருங்கி யணியாரூர்த்
தளவ முறுவற் பரவையார் தம்மா ளிகையிற் புகத்தாமும்
உளமன் னியதம் பெருமானுர் தம்மை வணங்கி யுவந்தணைவார்,

3209. வந்து பரவைப் பிராட்டியார் மகிழ வைகி மருவுநாள்
அந்த ணூரூர் மருங்கணிய கோயில் பலவு மணைந்திறைஞ்சிச்
சிந்தை மகிழ விருப்பினொடுந் தெய்வப் பெருமா டிருவாரூர்
முந்தி வணங்கி யினிதிருந்தார் முனைப்பா டியர்தங் காவலனுர். ௫௫

3208. (இ - ள்) வளமல்கிய...எழுந்தருளி - வளம் பொருந்திய சிறப்புடைய திருப்பனையூரில் வாழ்கின்றவர்கள் துதிக்க எழுந்தருளிப் போய் ; அளவில் ...புக - அளவு காண முடியாத செம்பொற் கட்டிகளாகிய செங்கற்கள் ஆட்களின் மேல் நெருங்கி அழகிய திருவாரூரின்கண் முல்லை அரும்பு போன்ற முறுவலினையுடைய பரவையாரது திருமாளிகையிலே புக ; தாமும்...உவந்தணைவார் - தாமும் தமதுளத்தில் நிலைத்த தமது பெருமானுராகிய புற்றிடங் கொண்டாரை வணங்கி மகிழ்வுடன் அணைவாராகி, ௫௪

3209. (இ - ள்) வந்து...நாள் - எழுந்தருளிப் போந்து பரவைப் பிராட்டியார் மகிழும்படி தங்கியிருந்து பொருந்தியிருக்கும் நாட்களிலே ; அந்தணூரூர்... இறைஞ்சி - அழகிய குளிர்ந்த திருவாரூரின் பக்கத்தில் அணித்தாக உள்ள கோயில்

கள் பலவற்றையும் சென்று வணங்கி ; சிந்தை ...காவலனார் - மனமகிழ மிக விருப்பத் தோடும் தேவர் பெருமானாகிய புற்றிடங்கொண்ட பெருமானது திருவாரூரினை முற் பட வணங்கி முனைப்பாடி நாட்டவர்களின் தலைவராகிய நம்பியாரூரர் இனிதாக எழுந்தருளியிருந்தனர். ருரு

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டுரைக்க நின்றன. உவந்தணைந்தார் (ருச) என்பது பாடமாயின் தனிமுடிபுகளாக உரைத்துக்கொள்க.

3208. (வி - ரை) இட்டிகை - செங்கல். பொன் இட்டிகைகள் - செங்கல் வடிவமைந்த செம்பொற் கட்டிகள்.

ஆள்மேல்...புக - ஏவலாட்கள் தாங்கிச் சென்று பரவையார் திருமாளிகையி னுள் சென்று சேர்க்க. பொற்கட்டிகளின் மிக்க கனத்தால் ஆள்மேல் என்றார்.

தாழும்...உவந்தணைவார் - தாம் அவர்களுடன் நேரே திருமாளிகையிற் செல் லாது தமது உள நிறைந்த இறைவரைச் சென்று வணங்கிய பின்னரே அங்குச் சென் றருளுவார். இம்மரபு பற்றி முன்னர்ப் பலவிடத்தும் உரைக்கப்பட்டது ; பின்னும் கண்டு கொள்க ; இதனை உலகர் உள்ளங்கொண்டு ஒழுகும் பொருட்டு ஆசிரியர் அங்கங்கும் வற்புறுத்தி எடுத்துக் காட்டி யருளுதல் வழக்கு.

உளமன்னிய - தமது உள்ளத்தைவிட்டு நீங்காது, என்றும் எண்ணத்தில் நிலை பெறக் கொண்டிருக்கின்ற.

தாமும் - அணைவார் - ஆட்கள் புகுத அதன் பின் தாமும் என் இறந்தது தழு விய எச்ச உம்மை.

தம்பெருமானார் தம்மை - தம் - இருமுறை வந்தது இருபாலும் ஒட்டி நிகழும் தன்மை குறித்ததற்கு.

உவந்தணைவார் - வந்து - என மேல்வரும் பாட்டுடன் முடிக்க. அணைவார் - அணைவாராகி ; முற்றெச்சம். 54

3209. (வி - ரை) பரவைப் பிராட்டியார் மகிழ வைகி - மகிழ்ச்சியாவது செம்பொன்னைத் திருப்பங்குனி உத்தர விழாவிற் பல வகையாலும் கொடை நேர்ந்து அடியார்க் களித்ததனால் ஆயது.

ஆரூர் மருங்கு அணிய கோயில்கள் பலவும் - முன் உரைக்கப்பட்டன. இவை எண்ணிறந்தவை உள்ளன ;

தெய்வப் பெருமாள் - தேவதேவர் ; தேவர்கள் வந்து முறையிருந்து வழி படும் சிறப்புக் குறித்தது ; திருக்கூட்டச் சிறப்புப் பார்க்க.

திருவாரூர் முந்தி வணங்கி - திருவாரூரினை நாளும் வணங்கிப் பின் அணிய கோயில்களைச் சென்று வணங்கி மீண்டு திருவாரூரிற் சேர்ந்தவாறே, ஒருநாளும் திருவாரூரை விட்டு நீங்கி அகலாது இனிதமர்ந்தார் என்பதாம்.

முனைப்பாடியர்தம் காவலனார் - திருமுனைப்பாடி நாட்டினரது தலைவர் என்று நம்பிகளது திருவவதாரம் பற்றி உரைத்தார் ; திருவாரூரில் மகிழ்ந்திருப்பது தமது உலகத் தொடர்பன்றி அதனின்றும் சிறந்த உயிர்த் தொடர்பு பற்றி என்பதறிவித் தற்கு. 55

3210. புலநா ளமர்வார் பரமர்திரு வருளா லங்கு நின்றும்போய்ச்
சிலைமா மேரு வீரனார் திருநன் னிலத்துச் சென்றெய்தி
வலமா வந்து கோயிலினுள் வணங்கி மகிழ்ந்து பாடினார்
தலமார் கின்ற "தண்ணியல்வெம் மை"யினா னென்னுந் தமிழ்மாலை.

(இ - ள்) பலநாள்...போய் - பல நாட்கள் அவ்வாறு திருவாரூரில் விரும்பி எழுந்தருளி யிருந்த நம்பிகள் இறைவரது திருவருளாலே அங்கு நின்றும் சென்று; சிலை...மகிழ்ந்து - பெரிய மேருமலையினை வில்லாகவுடைய வீரனாகிய இறைவர் எழுந்தருளியுள்ள திருநன்னிலத்துப் பெருங் கோயிலினைச் சென்று சேர்ந்து வலம் வந்து திருக்கோயிலில் சென்று வணங்கி மகிழ்ச்சி பொருந்தி; தலமார்கின்ற...தமிழ் மாலை - இந்நிலவுலகின் நிலவி விளங்குகின்ற "தண்ணியல் வெம்மையினான்" என்று தொடங்கும் தமிழ்மாலையினை; பாடினார் - பாடியருளினார்.

(வி - ரை) அமர்வார் - முன் சொன்னவாறு திருவாரூரிலே தங்கியபடியே அணிமையில் உள்ள கோயில்களுக்குச் சென்று சென்று மீண்டு எழுந்தருளியிருப்பா ராகிய நம்பிகள்; அமர்வார் - வினைப்பெயர்.

திருவருளால் - திருவருட் குறிப்பாகிய விடை பெற்று மேல் வரலாற்றின் விளைவுகள் நிகழ வேண்டிய காரணம் பற்றிய திரு அருளினாலே.

சிலை - வில்; சிலையாக மேருவினைப் பிடித்த வீரனார்.

தலம் ஆர்கின்ற - தலம் - இந்நிலவுலகம்; ஆர்தல் - புகழ் நிறைந்து விளங்குதல்.

தண்ணியல் வெம்மையினான் - தட்பமுடைய வெம்மை; முரண் அணி; "அங்கங் குளிர்ந்தன லாடு மெங்க ளப்பன்" (அம்மை. மூத்த. பதிகம்); தண்ணியல் பாவது கருணை; வெம்மை - சங்காரம்; சங்காரமும் அருளேயாம் என்பது.

திருநன்னிலம் - இது மாடக்கோயில் என்னும் பெருங்கோயில்களுள் ஒன்று. 56

## திருநன்னிலத்துப் பெருங்கோயில்

திருச்சிற்றம்பலம் பண் - பஞ்சமம்

*தண்ணியல் வெம்மையினான் றலை யிற்கடை தோறும்பலி*
*பண்ணியன் மென்மொழியா ரிடங் கொண்டுழல் பண்டரங்கன்*
*புண்ணிய நான்மறையோர் முறை யாலடி போற்றிசைப்ப*
*நண்ணிய நன்னிலத்துப் பெருங் கோயி னயந்தவனே.* (1)

*கோடுயர் வெள்ளெயிற்றுத் திகழ் கோச்செங்க ணான்செய்கோயில்*
*நாடிய நன்னிலத்துப் பெருங் கோயி னயந்தவனைச்*
*சேடியல் சிங்கிதந்தை சடை யன்றிரு வாரூரன்*
*பாடிய பத்தும்வல்லார் புகு வார்பர லோகத்துளே.* (11)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—சிவபெருமான், கோச்செங்கணான் செங்கோயிலாகிய நன்னி லத்துப் பெருங்கோயில் நயந்தவர்.

பதிகப்பாட்டுக் குறிப்பு :—(1) தண்ணியல் வெம்மையினான் - இறைவர் எந்தி யாடும் தீ உயிர்களுக்குப் பிறவி வெப்பம் தீரத் தண்மை செய்து குளிர்விக்கும் தன்மை பொருந்தியது; பலி-இட - என்க; பண்டரங்கன் - பண்டரங்கம் என்னும் கூத்துடையவன்; பெருங்கோயில் - மாடக்கோயில்; கோச்செங்கட் சோழ நாயனார் சிவனுக்கு அமைத்த மாடக் கோயில் எழுபதினுள் ஒன்று. 10-வது பாட்டுப் பார்க்க; நயந்தவன் - விரும்பி வீற்றிருப்பவன்; முறையால் - ஆகம நூல் விதித்த முறைப் படி;—(2) மாதவம் செய் மலை மங்கை - உமையம்மை தவஞ் செய்த வரலாறு கந்த புராணத்துட் காண்க; தவஞ் செய்து மணஞ் செய்து கொண்டமையால் ஒரு பங்கி னன் என்றார்; உளங்கிளர் கங்கை - "சலமுகத்தால்" (திருவா); பொழில் -

மதிதடவ - பொழிலின் உயர்ச்சி குறித்தது ;—(3) கச்சியின் - காஞ்சிபுரத்தில் மேவியவர். கருப்பூர் - வைப்புத் தலங்களுள் ஒன்று ; நோச்சி - புனல் - பூசைக் கின்றியமையாதவை ; "புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு" (திருமந்) ; "குடங்கைநீரும் பச்சிலையும்" (திருவிளையாடல்) ;—(5) பிலம் தரு-தரு-உவமவுருபு; —(6) பெண் - கங்கை ;—(7) தேர்மடைமலி - மலி-உவமவுருபு ;—(8) தாராவோடு- "தாராமலரோ டாராமதியம்" (தாண்) ; நளிர்தரு-குளிர்ச்சி செய்கின்ற ;—(9) தமர்-சிவன் சுற்றம் - அடியார் ;—(10) செம்பியர்கோன் - நரபதி - கோச்செங்கட் சோழ அரசர் ;—(11) கோடு - கொம்பு. சிங்கி - சிங்கடி ; சடையன் திருவாரூரன் - தந்தை பெயர் கூட்டித் தம் பெயர் கூறும் நவீனர் வழக்குக் காண்க.

**தலவிசேடம்:**—திருநன்னிலத்துப் பெருங்கோயில் காவிரித் தென்கரை 71-பதி. மாடக்கோயில்களுள் ஒன்று ; மதுவனம் என வழங்கப்படுவது; சான்றாகத் தேன்கூடு ஒன்று விளக்குச் சுடருருவாகத் திருக்கோயிலினுள் இன்றும் இருக்கின்றது ; பூசிக்கப்பட்டு வருகின்றது ; (குறிப்பு) இக்கோயில் மிகவும் பழுதுபட்டுக் கதவுகள் தாழ் இல்லாமல் கவனிப்பாரின்றிக் கிடக்கின்றது. இதனைச் செப்பனிட்டுத் திருப்பணி செய்தல் சிறந்த சிவபுண்ணியம்; அவ்வாறு செய்வது இறைவன் பணியாதலோடு கோச்செங்கட்சோழ நாயனாருக்குப் பணியும், ஆளுடைய நம்பிகளுக்குப் பணியுமாம், சுவாமிகோயில் கட்டுமலைமே லுள்ளது. சுவாமி - பிரகேசுரர் - மதுவநேசுவரர் ; அம்மை - பிரகேசுவரி - மதுவந நாயகி ; தீர்த்தம் - பிரம தீர்த்தம் ; கோயிலுக்கு வடக்கில் உள்ளது. பதிகம் 1. அம்மை கோயிலும் அகத்தியர் கோயிலும் கீழே உள்ளன.

இது நன்னிலம் (செந்நாவூர்) நிலயத்தினின்றும் மேற்கே கற்சாலை வழி 1¾ நாழிகையளவில் உள்ள திருச்சுரத்தை யடைந்து அதனின்றும் பின்னும் மேற்கே 1½ நாழிகை அளவில் அடையத் தக்கது. (இதினின்றும் தென்மேற்கே மாப்பிள்ளைக் குப்பம் மட்சாலை வழி 3 நாழிகையளவில் திருவாஞ்சியம் உள்ளது.) இப்பதிக்கு மோட்டார் வண்டி வசதி உண்டு.

3211. பாடி யங்கு வைகியபின் பரமர் வீழி மிழலையினில்
நீடு மறையான் மேம்பட்ட வந்த ணாளர் நிறைந்தீண்டி
நாடு மகிழ வவ்வளவு நடைக்கா வணம்பா வாடையுடன்
மாடு கதலி பூகநிரை மல்க மணித்தோ ரணநிரைத்து, ருள

3212. வந்து நம்பி தம்மையெதிர் கொண்டு புக்கார்; மற்றவருஞ்
சிந்தை மலர்ந்து திருவீழி மிழலை யிறைஞ்சிச் சேண்விசும்பின்
முந்தை யிழிந்த மொய்யொளிசேர் கோயி றன்னை முன்வணங்கிப்
பந்த மறுக்குந் தம்பெருமான் பாதம் பரவிப் பணிகின்றார். ருஅ

3213. படங்கொ ளரவிற் றுயில்வோனும் பதுமத் தோனும் பரவரிய
விடங்கன் விண்ணோர் பெருமானை விரவும் புளக முடன்பரவி
"அடங்கல் வீழி கொண்டிருந்தீ ரடியே னுக்கு மருளு"மெனத்
தடங்கொள் செஞ்சொற் றமிழ்மாலை சாத்தி யங்குச் சாருநாள், ருசு

3214. "வாசி யறிந்து காசளிக்க" வல்ல மிழலை வாணர்பாற்
றேசு மிக்க திருவருள்முன் பெற்றுத் திருவாஞ் சியத்தடிகள்

பாச மறுத்தாட் கொள்ளுந்தாள் பணிந்து "பொருவ ஞ"ரென்னும்
ஆசில் பதிகம் பாடியமர்ந் தரிசிற் கரைப்புத் தூரணைந்தார். ௬௦

3211. (இ - ள்) வெளிப்படை. அங்குப்பாடி எழுந்தருளியிருந்த பின்பு இறைவரது திருவீழிமிழலையில் உள்ள நீடிய வேத வொழுக்கத்தால் மேம்பட்ட அந்தணர்கள் திரண்டு கூடி நாடெங்கும் மகிழும்படி அவ்வளவும் நடைக்காவண மிட்டுப் பாவாடை விரித்துப் பக்கங்களில் வாழை கமுகுகள் வரிசையாகப் பொருந்தச் செய்து அழகிய மணிமாலைகள் தூக்கிய தோரணங்களை வரிசை பெறக் கட்டி, ருஎ

3212. (இ - ள்) வந்து...புக்கார் - இங்கு வந்து நம்பிகளை எதிர்கொண்டு புகுந்தனர்; மற்று அவரும்...இறைஞ்சி - அந்நம்பிகளும் மனமலர்ந்து சென்று திருவீழிமிழலையினை வணங்கி; சேண்...வணங்கி - நீண்ட ஆகாயத்தினின்றும் முன்னாளில் இழிந்து வந்த மொய்த்த ஒளியுடைய திருக்கோயிலினை முன்னே வணங்கி; பந்தம்...பணிகின்றார் - மலபந்தங்களை அறுக்கும் தம் பெருமானது திருவடிகளைத் துதித்துப் பணிகின்றாராகி, ருஅ

3213. (இ - ள்) படங்கொள்...பெருமானை - படத்தையுடைய பாம்பின் மேல் பள்ளிகொள்ளும் விட்டுணுவும் தாமரை மலரில் இருக்கும் பிரமதேவனும் துதித்தற்கரிய விடங்காரகிய தேவ தேவரை; விரவும்...சாத்தி - பொருந்திய மயிர்ப் புளகத்துடனே துதித்து "அடங்கல் வீழி கொண்டிருந்தீர்; அடியேனுக்கு மருளும்" என்ற கருத்தினையும் முடிபினையுமுடைய பெரிய செவ்விய சொற்பொருளமைந்த தமிழ் மாலையைச் சாத்தி; அங்குச்சாருநாள் - அங்குத் தங்கி எழுந்தருளியிருக்கும் நாட்களிலே, ருகூ

3214. (இ - ள்) வாசி - அருள் பெற்று - வாசிதெரிந்து படிக்காசு அளிக்க வல்லவராகிய திருவீழிமிழலை இறைவரிடம் சிவவொளி மிகுந்த திருவருள் விடை முன் பெற்று(ச் சென்று); திருவாஞ்சியத்தடிகள்...அமர்ந்து - திருவாஞ்சியத்தில் உயிர்களின் பாசங்களை அறுத்து ஆட்கொள்ளும் இறைவரது திருவடிகளை வணங்கிப் "பொருவனார்" என்று தொடங்கும் குற்றமில் திருப்பதிகம் பாடியருளி அங்கு விரும்பி எழுந்தருளியிருந்து (பின்பு); அரிசிற்கரைப் புத்தூர் அணைந்தார் - அரிசிற் கரைப்புத்தூரினை அணுகச் சென்று சேர்ந்தருளினர். ௬௦

இந்த நான்கு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபுகொண்டுரைக்க நின்றன.

3211. (வி - ரை) நீடுமறையால் மேம்பட்ட அந்தணர் - "தெரிந்த நான் மறையோர்" (8) "நான்மறையோர்" (5) வேத வேதியர் (10) என்று நம்பிகளது பதிகத்தும், இவ்வாறே பிள்ளையாரது இப்பதியின் பதிகங்களிலும் பாராட்டப் பட்ட பெருமையுடையோர் என்பது குறிப்பு; "வீழி ஐஞ்ஞூற்றந்தணர்" என்பர். "ஐஞ்ஞூற்றந்தண ரேத்தும்" (திருவிசைப்பா).

அவ்வளவும் - நன்னிலத்தினின்றும் திருவீழிமிழலை அளவும். முழுதும். உம்மை முற்றும்மை. ஆறு வடமேற்காக ஆறுநாழிகையளவு தூரம் உண்டு.

நடைக்காவணம் - காவணம் - பந்தர். பாவாடை - கால் நிலம்படாது மிதித்து நடத்தற்காக இடும் பரந்த ஆடை; பரவுதல் - பரந்து இருக்க இடப்படுதல்.

கதலிபூக நிரை - தோரண நிரை - முன்னையன பக்கங்களிற் கூட்டப்படுவன; பின்னையன மேலே கட்டப்படுவன; ஆதலின் வேறுபிரித் தோதினர். நிரைத்தல் - வரிசைபெறக் கட்டுதல்.

மணித் தோரணம் - மணிமாலைகளை இடையிடைத் தொங்க வைத்த தோரணங்கள். மணி - அழகு என்றலுமாம். 57

3212. (வி - ரை) மற்று அவரும் - அவ்வாறு எதிர்கொண்டு அழைக்கப்பட்ட அங்நம்பிகளும்; மற்று - வினைமாற்றில் வந்தது; அவர் - அகரம் முன்னறிசுட்டு; இறைஞ்சி - சென்று இறைஞ்சி; சென்று என்பது சொல்லெச்சம்.

சேண் விசும்பின் - கோயில் - திருவீழிமிழலை விமானம் விட்டுணுவினால் ஆகாயத்திலிருந்து கொணர்ந்து தாபிக்கப்பட்டதென்பது வரலாறு; அதனால் விண்ணிழி கோயில் எனப்படும்.

பந்தம் அறுக்கும் - அடைந்தார்க்கு மலபந்தங்களை நீக்குகின்ற இறைவர்.

பணிகின்றர் - முற்றெச்சம். பணிகின்றாராகி; பணிகின்றரர்கிப் பரவிச் - சாத்தி என மேல் வரும் பாட்டுடன் முடிக்க. 58

3213. (வி - ரை) படம் - பாம்பின் படம்; அரவு - விட்டுணு பள்ளிகொள்ளும் ஆதிசேடன்.

விடங்கன்-உளியினாற் செதுக்கப்படாத திருமேனியுடையவன்; (டங்கம்-உளி).

விண்ணோர் பெருமான்; விட்டுணுவினால் வழிபடப்பட்ட தன்மை பற்றித் தேவர்கள் தலைவர் என்ற குறிப்புமாம்.

அடங்கல் வீழி...அருளும்என - இது பதிகத்தின் மகுடமும் கருத்துமாம். பதிகம் (10) பார்க்க.

தடங்கொள் செஞ்சொல் - தடம் - பெருமை; பொருளின் பெருமை குறித்தது. "நற்றமிழ்" பதிகம் (10) பார்க்க. 59

3214. (வி - ரை) வாசி...மிழலைவாணர் - திருஞானசம்பந்த நாயனாருக்கு வாசியுடன் படிக்காசும், அரசுகளுக்கு வாசியில்லாக் காசும் தந்தருளிய வரலாறு குறிக்கப்பட்டது. 2467-ம், "இருந்துநீர் தமிழோடிசை கேட்கு மிச்சையாற் காசுநித்த னல்கினீர்" (பதிகம்) என்றதும் காண்க. அதுபற்றி அவ்வவர் புராண வரலாறுகளும் பார்க்க.

தேசுமிக்க திருவருள் - சிவஞான வொளி மிகுதியின் கண்ணே அறியப்படும் அருள் வெளிப்பாடாகிய விடை.

பாசம் அறுத்து ஆட்கொள்ளும் தாள் - இப்பகுதியில் வந்து அடைந்தோர்களது பாசம் என்க; ஆட்கொள்ளும் - ஆளாகக் கொண்டு முத்தி நல்கும். பொது வகையானன்றித் தலவரலாறும் சிறப்புக் குறிப்பு.

பொருவனார் - பதிகத்தின் தொடக்கம்; முதற் குறிப்பு; பதிகம் பார்க்க.

மாசில் - குற்றத்தை இல்லையாகச் செய்யும் உபாயமறிவிக்கும் திறமுடைய; "அடியாரை வாழ்வினை நலிய வொட்டாரே" என்பது முதலாக வரும் பதிகக் கருத்துப் பார்க்க.

அணைந்தார் — அணுகச் சென்று சார்ந்தனர் என்க; அங்குச் சேர்ந்து வழிபட்டது மேல்வரும் பாட்டிற் கூறப்படுதல் காண்க. 60

## திருவீழிமிழலை

திருச்சிற்றம்பலம் பண் - சீகாமரம்

நம்பி னார்க்கருள் செய்யு மந்தணர் நான்ம றைக்கிட மாய வேள்வியுட்
செம்பொனேர் மடவா ரணிபெற்ற திருமிழலை

*யும்ப ரார்தொழு தேத்த மாமலை யாளொ டும்முட னேயுறைவிடம்*
*அம்பொன் வீழிகொண்டீ! ரடி யேற்கு மருளுதிரே.* 1

*விடங்கொண் மாமிடற் றீர்வெள்ளைச்சுரு ளொன்றிட்டு விட்ட காதி னீரென்று*
*திடங்கொள் சிந்தையினார் கலிகாக்குந் திருமிழலை*
*மடங்கல் பூண்ட விமானமும் மண்மிசை வந்தி ழிச்சிய வான நாட்டையும்*
அடங்கல் வீழிகொண்டீ ரடியேற்கு மருளிதிரே. 2

*வேத வேதியர் வேத நீதிய ரோதுவார்விரி நீர்மிழலையுள்*
ஆதி"வீழி கோண்டீ ரடியேற்த மருளு"கென்று
*நாத கீதம்வண் டோது வார்பொழி னாவ லூரன்வன் றொண்ட னற்றமிழ்*
*பாதமோ தவல்லார் பரனோடுங் கூடுவரே.* 10

*திருச்சிற்றம்பலம்*

பதிகக் குறிப்பு :—3213-ல் *ஆசிரியரும், பதிகத் திருக்கடைக்காப்பில் நம்பிகளும் காட்டுதல் காண்க.*

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) நம்பினார்க் கருள்செய்யும் - வேள்வி *என்று கூட்டுக.* அருள்செய்யு மந்தணர் *என்று கூட்டினுமாம் ;* மடவார் - பொன் - அணி பெற்ற *என்க ;* அம்பொன் - *பொன்போன்ற ;* வீழி - *வீழிமிழலையாகிய பதியினை இடமாக ;* அடியேற்கும் - *ஈண்டு உமது* இயல்பாக *யாவருக்கும் அருளுதல்* போல *அடியேற்கும்* என உம்மை இறந்தது *தழுவிய எச்சவும்மை ; தகுதியில்லாத* எனக்கும் *என்று சிறப்பும்மையுமாம் ;*—(2) வெள்ளைச் சுருள் - *வெண் சங்கக் குழை.* சுருள் - *சுருண்டதுபோன்ற* வட்டவடிவமுள்ளதனைச் *சுருள் என்றார் ;* இவ்வாறன்றி *இடது காதில் வெள்ளை ஓலையின் சுருளாலாகிய தோடு என்றுரைப்பினு மமையும் ;* திடங்கொள் சிந்தையினார் - வைதிக *நெறி* ஒழுக்கத்தில் *மாறாது நிற்கும்* உறைப்புடையவர். அந்தணர்கள் - *முனிவர்கள்.* கலிகாக்கும் - *கலியின் துன்பம் வாராமே காக்கும். " கலியை வாராமே செற்றார் "* (தேவா) ; மடங்கல் - *சிங்கம்.* பூண்ட - *சிங்கம் தாங்கிய கோலத்துடன் அமைத்த நிலை;*—(3) ஊனை உற்றுயிராயினீர் - *உயிர்,* ஊனுடம்பில் *நின்று* இயக்குதல்போல *நீர் உயிரினை* உடம்பாகக்கொண்டு *உண்ணின்றியக்குகின்றீர் ;* ஒளிமூன்று - *தீயும் ஞாயிறும் திங்களும் ;* தெளிநீர் - *சுத்தோதகம் என்பர் வடவர் ;* தேன் - *திருமஞ்சனப் பண்டம்;* விண்ணிலான - *விண்ணின்றிழிந்த ;*—(4) பந்தம் வீடிவை பண்ணினீர் - *" பந்தம் வீடு தரும் பரமன் "* (300) *" பந்தமு மாய்வீடு மாயினார்க்கு "* (*திருவா*) பந்தம் - *சிருட்டி முதல் மறைப் பீறாகிய நான்கும்.* வீடு - *முத்தித் திருவருள் ;* ஐந்தொழிலும் *இவற்றுள் அடங்கும் ;* பண்ணினீர் - *உயிர்களுக்கு* ஆக்கினீர் ; மதிர்ப்பிதிர்க் கண்ணியீர் - *பிறையை முடித்தவரே ;* வான நாடியர் - *தேவநாட்டுப் பெண்கள் ;*—(5) புரிசை மூன்று - மும்மதில் ; *திரிபுரம்*—(6) எறிந்த - *"தாதைதாள் மழுவினா லெறிந்த"* ; இடந்த - *தமது கண்ணை இடந்த.* இடத்தல் - *தோண்டுதல் ;* ஏத்து பத்தர்கட்கு - இவர் *முதலாக ஏத்தப்படும் அடியார்கட்கு ;*—(7) சந்தி - *காலை மாலை நண்பகல்கள் ;*—(8) பாரிடம் - பூதகணம். பாரிடம் - சுற்றமாயினீர் *என்று கூட்டுக;* இருந்து...நல்கினீர் - தமிழோடிசை - *ஆளுடைய பிள்ளையாரும் அரசுகளும் அருளிய* இசை *பொருந்திய திருப்பதிகங்கள்.* காசுநல்கினீர் - *நித்தம்* படிக்காசு *நல்கிய வரலாறு அவர்களது புராணங்களுட் காண்க ;* தூயநீரமுதாய...சொல்லினீர் - இஃது இத்தல வரலாறுகளுள் ஒன்று போலும் ; மேய நீர்...பொருளாய - *பலி*

யேற்ற கருத்தை வினவிக் கசிந்து வழிபடும் அடியவர்க்கு மெய்ப் பொருளாகிய வீடு பேற்றை அருளுபவர். " பாந்தல கேழும் படைத்த பிரானை, இரந்துணி யென்பர்க ளெற்றுக் கிரக்கும் ?, கிரந்தர மாக நினையு மடியார், இரந்துண்டு தன்னடி யெட்டச் செய்தானே" (திருமந்). மெய்ப்பொருள் - "ஊனத் திரளை நீக்கு மதுவும் உண்மைப் பொருள் போலும்" (பின். தேவா. அண்ணாமலை) மெய்ப்பொருள் - வீடுபேறு;—(10) வண்டு நாதகீதம் - ஒது - பொழில் என்க ;

தலவிசேடம்:—திருவீழிமிழலை, III. பக். ௬௩௯ பார்க்க.

3215. செழுநீர் நறையூர் நிலவுதிருச் சித்தீச் சரமும் பணிந்தேத்தி
விழுநீர் மையினிற் பெருந்தொண்டர் விருப்பி னோடு மெதிர்கொள்ள
மழுவோ டிளமான் கரதலத்தி லுடையார் திருப்புத் தூர்வணங்கித்
தொழுநீர் மையினிற் றுதித்தேத்தித் தொண்டர் சூழ வுறையுநாள்,

3216. புனித னார்முன் புகழ்த்துணையார்க் கருளுந் திறமும் போற்றிசைத்து
முனிவர் போற்ற வெழுந்தருளி மூரி வெள்ளக் கங்கையினிற்
பனிவெண் டிங்க ளணிசடையார் பதிகள் பலவும் பணிந்துபோந்
தினிய நினைவி லெய்தினா ரிறைவர் திருவா வடுதுறையில். ௬௨

3215. (இ - ள்) செழுநீர்...ஏத்தி - செழுமையாகிய நீர்ச் சிறப்பினையுடைய நறையூரில் நிலைபெற்ற திருச்சித்தீச்சரத்தினையும் பணிந்து துதித்து ; விழுநீர்மையினில்...வணங்கி - நிலமுற விழுந்து வணங்கித் தாழும் தன்மையினை யுடைய பெருமை வாய்ந்த திருத்தொண்டர்கள் விருப்பத்தோடும் எதிர்கொள்ளச் சென்று, மழுவினோடும் இளமான் கன்றைத் திருக்கரத்தில் ஏந்திய சிவபெருமானது திருப்புத் தூரினை வணங்கி ; தொழு நீர்மையில்...உறையும் நாள் - தொழுது வழிபடும் விதி முறைப்படி வணங்கித் துதித்துப் பரவி அங்குத் தொண்டர்கள் சூழ எழுந்தருளிய நாட்களில், ௬௧

3216. (இ - ள்) புனிதனார்...போற்றிசைத்து - இறைவர் முன்னாளில் புகழ்த் துணை நாயனாருக்கு இப்பதியில் படிக்காசு அருள் செய்த அருட்டிறத்தினைப் போற்றிப்பாடி ; முனிவர் போற்ற எழுந்தருளி - முனிவர்கள் போற்ற எழுந்தருளிச் சென்று ; மூரி...போந்து - பெரிய வெள்ளமாகப் பெருகும் கங்கையினில் குளிர்ந்த சந்திரனையும் அணியும் சடையினையுடைய இறைவர் எழுந்தருளிய பதிகள் பல வற்றையும் பணிந்து சென்று ; இனிய...திருவாவடுதுறையினில் - மகிழ்ச்சி பொருந்திய திருவுள்ளத்தினுடனே இறைவரது திருவாவடுதுறையில் வந்து சேர்ந் தருளினர். ௬௨

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3215. (வி - ரை) செழுநீர் - காவிரிக் கரையாதலாலும் காவிரி நீர் பாய்த லாலும் நீர் வளம் பற்றிக் கூறினர். " வாரும் மருவி மணிபொன் கொழித்துச் சேரும் " என்றது முதலாக வருவன பதிகக் குறிப்புக்கள். "செழுநீர் நறையூர்" (5).

நறையூர் - ஊர்ப்பெயர் ; சித்தீச்சரம் - கோயிலின் பெயர் ; நறையூரில் உள்ள கோயில் என்பது.

சித்தீச்சரமும் - உம்மை முன் அணைந்தார் என்ற அரிசிற்கரைப்புத் தூரை அணையச் சார்ந்தவர் வழியில் இதனையும் என இறந்தது தழுவிய எச்சவும்மை.

பணிந்தேத்தி - அரிசிற் கரைப்புத்தூரைச்சார அணைந்த நம்பிகள் இடையில் இப்பதியினைப் பணிந்து பாடியருளினர்.

விழநீர்மை - " தாழ்வெனுந் தன்மை யோடு சைவமாஞ் சமயஞ் சாரும், ஊழ் பெறலரிது " (சித்தி) என்று இதன் அருமைப் பாட்டினை ஞான சாத்திரம் விரித்துக் கூறிற்று. " வெற்றவே யடியா ரடிமிசை வீழும் விருப்பினன் " (பிள். தேவா. ஆலவாய்) என்ற திருவாக்கும் இத்தன்மையினைப் பேசியது. பெருந்தொண்டர் என்ற குறிப்புமிது.

மழுவோடு...உடையார் - மானும் மழுவும் இரு கையிலும் ஏந்தியவர்; சிவ பெருமான். தொழுநீர்மை - தொழுதற்கு விதித்த முறை.

மழநீடிளமான் மறிகரத்தில்—என்பதும் பாடம். 61

## திருநறையூர்ச் சித்தீச்சரம்

திருச்சிற்றம்பலம். பண் - குறிஞ்சி - 7-ம் திருமுறை

*நீரும் மலரு நிலவுஞ் சடைமேல், ஊரும் மரவ முடையா னிடமாம்*
*வாரும் மருவி மணிபொன் கொழித்துச், சேருந் நறையூர்ச் சித்தீச் சரமே.* (1)

*போரார் புரமெய் புனித னமரும், சீரார் நறையூர்ச் சித்தீச் சரத்தை,*
*ஆரூ ரன்சொல் லிவைவல் லவர்கள், ஏரா ரிமையோ ருலகெய் துவரே.* (11)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—சித்தீச்சரம் இறைவரது இடமாம்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) நீரும் என்றெழுந்த குறிப்பினால் ஆசிரியர் "செழுநீர் நறையூர்" என்று நீர்ச் சிறப்புப்பற்றி இப்பதியினைக் குறிப்பிட்டார். பதிகத்தினுள் மற்றும் பார்க்க. "நீருலாவு" என்ற பிள்ளையார் பதிகமும் பார்க்க. அருவி-காவிரி ;—(2) அளைப்பை - நஞ்சுப்பை ; இவை பாம்பின் வாயினுள் பற்களின் மேற்பகுதியில் உள்ளன ; துளைக்கை - துளையையுடைய கை ; துதிக்கை ;—(3) இகழுந்தகையோர் - பகைவர் ; முகமே - திகழ் - முகம்போல விளங்கும் ;—(4) வரைத்தோள் வரையால் இறக்கோள் - மலையினை மலையால் அழித்த என்பது கவி நயம். இறக்கோள் - இறச் செய்தலும் பின்னர் ஏன்று கொள்ளலும் ; "மிறிகொள் சேவடி" (அரசுகள். கோயில்);—(6) ஆன்ஊர் அடல்ஏறு - இடபம் ; அமர்தல் - விரும்புதல் ;—(8) புரியும் மறையோர் - புரிதல் - இடைவிடாது சொல்லுதல்;—(9) முனிவன் - தக்கன் ; மாணமை - சிறவாமை ; அழித்தான் என்பதனை மாணமை செய்தான் என்றது மங்கல வழக்கு ; பாண் - பாணர் மரபு ; சேணார் - நெடுந்தூரமும் கேட்க ஒலிக்கும் ;—(10) நெறியில் வழுவா - வைத்த குறிதவறாத ; நெறியில்... வழுவா நியமத்தவர்கள் - அந்தணர்கள் ; 8-வது பாட்டுப் பார்க்க. சித்தர்கள் என்றலுமாம், இப்பதியின் பெயர் சித்தர்கள் பூசித்தமையாற் போந்த தென்பர். சுவாமி பெயரும் பார்க்க.—(11) போரார் - பகைவர்கள்.

தலவிசேடம்:—திருநறையூர்ச் சித்தீச்சரம் - முன் (IV - சஅக) உரைக்கப்பட்டது. சுவாமி-சித்தநாதர்; அம்மை-அழகம்மை; தீர்த்தம்-பிரம தீர்த்தம்; பதிகம் 4.

கும்பகோணத்தினின்றும் தெற்கே நீடாமங்கலம் கற்சாலை வழி 2 நாழிகையில் உள்ள சாக்கோட்டையினின்றும் தென்கிழக்கே 4½ நாழிகையளவில் உள்ள திரு அரிசிற்கரைப்புத்தூரினின்றும் தென்கிழக்கே 2 நாழிகையளவில் உள்ளது.

3216. (வி - ரை) புகழ்த்துணையார்க்கருளும் திறமும்போற்றிசைத்து - பதிகம் 6-வது பாட்டுப் பார்க்க. "அகத்தடிமை செய்யுமந்தணன்" என்று புகழ்த்துணையாரைச் சிறப்பித்து அவருக்கு நித்தமும் காசு அருளிய சரிதம் போற்றப்பட்டது காண்க.

முனிவர் போற்ற - அந்தணர்கள்; சிவ வேதியர்கள்.

பதிகள் பலவும் - அரிசிற்கரைப் புத்தூரினின்றும் திருவாவடுதுறையிற் சேரும் இடையில் அனேகம் பதிகள் உள்ளன: இவை திருச்சிவபுரம், திருநாகேச்சரம், திருவிடைமருதூர், தென் குரங்காடுதுறை முதலாயின என்பது கருதப்படும்.

இனிய நினைவு - மனமகிழ்ச்சி; நினைதொறும் இனிப்ப வருவது இறைவரது நினைவு; "நினைத்தொறுங்காண்டொறும் பேசுந்தோறுமெப்போதும், அனைத்தெலும்புண்ணெக வானந்தத் தேன்சொரியுங் குனிப்புடையான்" (திருவா)

எய்தினார் - வினைமுற்று முன் வந்தது விரைவுக் குறிப்பு.

மூரிவெள்ளம் - பெருவெள்ளம்; அடங்காத நீர்ப் பெருக்கு.

கங்கையினில் திங்கள் அணிதல் - ஒரு சேர அணிதல்; "வளர்ந்துந்து கங்கையும் வானத் திடைவளர் கோட்டுவெள்ளை, யிளந்திங்களும் மிருக்குஞ் சென்னி" (அம்மை - இரட்டை மணிமாலை 1); "அப்புனலிற், சரிகின்ற திங்களோர் தோணியொக்கின்றது" (பொன்வண். அந்தாதி-67) 62

## திரு அரிசிற்கரைப் புத்தூர்

திருச்சிற்றம்பலம் பண் - இந்தளம் - 7-ந் திருமுறை

மலைக்குமக ளஞ்ச மதக ரியை யுரித்தீ ரெரித்தீர் வருமுப் புரங்கள்
சிலைக்குங்கொலைச் சேவுகந் தேற்றேறியீர் சில்பலிக் கில்கடோறுஞ் செலவொழியீர்
கலைக்கொம்புங் கரிமருப் புமிடறிக் கலவம் மயிற் பீலியுங் காரகிலும்
அலைக்கும் புனல்சே ரரிசிற் றென்கரை யழகார் திருப்புத்தூ ரழகனீரே. (1)

அகத்தடிமை செய்யு மந்தணன்றா னரிசிற் புனல் கொண்டுவந் தாட்டுகின்றான்
மிகத்தளர் வெய்திக் குடத்தையு நம்முடி மேல்விழுத்திட்டு நடுங்குதலும்
வகுத்தவ னுக்கு நித்தற் படியும் வருமென் றொருகாசினை நின்றநன்றிப்
புகழ்த்துணை கைப்புகச் செய்து கந்தீர் பொழிலார் திருப்புத்தூர்ப் புனிதனீரே (6)

காரூர் மழைபெய்து பொழியருவிக் கழையோ டகிலுந்திட் டிருகரையும்
போரூர் புனல்சே ரரிசிற் றென்கரைப் பொழிலார் திருப்புத்தூர்ப் புனிதர்தம்மை
யாரூர னருந்தமி ழைந்தினோடைந் தழகா லுரைப்பார்களுங் கேட்பவருஞ்
சீரூர்தரு தேவர் கணங்களொடு மிணங்கிச் சிவலோகம தெய்துவரே (11)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—தோழமை முறையில் இறைவரது அருட் செயல்களை வியந்து பாராட்டியது.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) சிலைத்தல் - பேரொலி செய்தல்;—(2) திருமால் கண்ணிடந்து பூசித்து ஆழிபெற்ற வரலாறு போற்றப்பட்டது;—(3) தரிக்குந் தரை - தரையின்றொழில் விரித்துரைத்தது; "மண்டானு முரந்தருங் கடினமாகித் தரித்திடு முணர்ந்து கொள்ளே" (சித்தி. சூ. 2-66); "மண்கடின மாய்த்தரிக்கும்" (உண்மைவிள-9); சவிதா - சூரியன்; திரைக்கைகளால் வாரிமோதி - அலையாகிய கை; உருவகம்;—(6) அகத்தடிமை செய்யும் அந்தணன் - திருமேனி தீண்டிப்

பணி செய்தலும், மற்றும் திருக்கோயிலுள் அணிமையாகப் பல பணி செய்தலும் உரிமையாக்கொண்ட சிவவேதியன். அந்தணன் - (ஆகிய) புகழ்த்துணை என்று கூட்டுக. "அங்கணர் கோயி லுள்ளா வகம்படித் தொண்டு செய்வார்" (இல் - புரா.); புகழ்த்துணை நாயனார் புராண வரலாறு பார்க்க. அச்சரித ஆதரவு. புகழ்த்துணையாரது அன்பின் பெருமை "புடைசூழ்ந்த புலியதண்மே லரவாட வாடி பொன்னடிக்கே மனம்வைத்த புகழ்த்துணை" என்ற திருத்தொண்டத் தொகையானுமறியப்படும் ;—(7) எச்சம் - யாகம். (யக்ஞம்) ; தெழித்தல் - அழித்தல், தண்டித்தல் ; விழிக்கும் தழைப்பீலி - கண் போன்ற அமைப்பும் தழைபோன்ற வடிவும் உடைய மயிற்பீலி ;—(8) பறைக் கண் நெடும் பேய் - பறையினைப் போன்று பெரிதாய் அகன்று வட்டமாகிய கண்களையுடைய பேய் ; "பறைபோல் விழிகட் பேய்" (அம்மை - மூ - தி); பாரிடம் - பூதம்;—(9) மழைக் கண் - மேகம்போல மையிட்ட கண். மேகம் போன்ற கருவிழியினை யுடைய கண் என்றலுமாம்; உருவுவமம்; மேகம் போன்று கைமாறின்றிக் கருணை பொழியும் என்று பண்புவமமுமாம் ;—(10) கடிக்கும் அரவால் - வாசுகியைக் கடைகயிறாகக் கொண்டு; ஒடிக்கும் - அழிக்கும் ;—(11) போர்நீர்புனல் - போர் செய்தல் போல மோதியலைக்கும் வெள்ள நீர் பொருது.

தலவிசேடம்:—திரு அரிசிற் கரைப்புத்தூர் - முன் உரைக்கப்பட்டது. 2301-ன் கீழ்ப் பார்க்க.

3217. விளங்குந் திருவா வடுதுறையின் மேயார்கோயில்புடைவலங்கொண்
டுளங்கொண் டுருகு மன்பினுட னுள்புக் கிறைஞ்சி யேத்துவார்
வளங்கொள் பதிக"மறையவ"னென்றெடுத்து வளவன் செங்கணான்
தளங்கொள் பிறப்புஞ் சிறப்பித்துத் தமிழ்ச்சொன் மாலைசாத்தினார்.

(இ - ள்) விளங்கும்...வலங்கொண்டு - விளங்குகின்ற திருவாவடுதுறையில் எழுந்தருளிய இறைவரது திருக்கோயிலினைச் சுற்றி வலமாக வந்து ; உளங்கொண்டு ...ஏத்துவார்-உள்ளத்தினைத் தன் வசமாக்கி உருக்கும் அன்பினோடும் திருக்கோயிலினுக்குள்ளே புகுந்து வணங்கிப் போற்றுவாராகி ; வளங்கொள்...எடுத்து - வளமுடைய திருப்பதிகத்தினை "மறையவன்" என்று தொடங்கி ; வளவன்...சிறப்பித்து - கோச் செங்கட் சோழரது இடம் பொருந்திய பிறப்பினையும் சிறப்பித்துப் போற்றி ; தமிழ்ச் சொன்மாலை சாத்தினார் - தமிழ்ச் சொல் மாலையாகிய அத்திருப்பதிகத்தினைச் சாத்தி யருளினார்.

(வி - ரை) விளங்கும் - அருள் விளங்கும் ; உலகு விளங்குதற்குக் காரணமாகிய ; இவ்விளக்கமாவது இங்குத் திருமூல நாயனார் பசுக்கள் உய்யும்படி சிவாகமப் பொருளைத் திருமந்திரமாகத் தமிழில் வெளிப்படுத்தி யருளியதும், பிறவுமாம். அவர் சரிதம் பார்க்க. இத்திருப்பதிகத்தினுள், இறைவரருள் பலவும் விளங்கக் கண்டு அடைந்தேன் என்ற கருத்துப் பற்றியும் விளங்கும் என்றார்.

மறையவன் - இது பதிகத் தொடக்கம். முதற் குறிப்பு.

வளவன் செங்கணான் - கோச்செங்கட் சோழ நாயனார். தளங்கொள் பிறப்பு-முன்பு சிலந்தியாயிருந்து பணி செய்த அந்தத்தலத்திலேயே அரசராக வந்து பிறந்த பிறவி : "தொடர்ச்சி" என்ற பதிகம் இக்குறிப்புத்தருவதாம் ; தலம் தளம் என வந்தது. வடமொழி வழக்கு. தளம் மேன்மை என்றனர் முன் உரைகாரர்கள்.

சிறப்பித்து - போற்றி - துதித்து ; பதிகப் பாட்டுப் பார்க்க.

மறையவன் என்றெடுத்துச் சிறப்பித்துச்-சாத்தினார் - என்று இப்பதிகம் இன்னதென விளங்க வைத்தது. பின்னரும் நம்பிகள் இப்பகுதியில் வந்து அருளிய "யாரெனக்குற வமரர்க ளேறே" என்பது முதலிய பதிகங்களின்றும் பிரித்துணர்த்தும் பொருட்டு ஆசிரியர் காட்டிய பேரருட்டிறமாகும். சொல்லாலும் பொருளாலும் கண்டுகொள்ளும் வண்ணம் சுட்டிக்காட்டிய நயமும் காண்க.

ஏத்துவார் - வினைப் பெயர். ஏத்துவார் - சாத்தினார் என்க.

புடை - பக்கமாகச் சூழ்ந்து ; புடையின்கண். 63

திருவாவடுதுறை

திருச்சிற்றம்பலம் பண் - தக்கேசி

*மறைய வனொரு மாணிவந் தடைய வார மாயவ னாருயிர் நிறுத்தக்*
*கறைகொள் வேலுடைக் காலனைக் காலாற் கடந்த காரணங் கண்டுகண் டடியேன்*
*இறைவ னெம்பெரு மானென்றெப் போது மேத்தி யேத்திநின் றஞ்சலி செய்துன்*
*அறைகொள் சேவடிக் கன்பொடு மடைந்தே னாவ டுதுறை யாதியெம் மானே (1)*

*தெருண்ட வாயிடை நூல்கொண்டு சிலந்தி சித்திரப் பந்தர் சிக்கென வியற்றச்*
*சுருண்ட செஞ்சடை யாயது தன்னைச் சோழ னாக்கிய தொடர்ச்சிகண் டடியேன்*
*புரண்டு வீழ்ந்துநின் பொன்மலர்ப் பாதம் போற்றி போற்றியென் றன்பொடு புலம்பி*
*அருண்டென் மேல்வினைக் கஞ்சிவந் தடைந்தே னாவ டுதுறை யாதியெம் மானே(12)*

திருச்சிற்றம்பலம்.

பதிகக் குறிப்பு:—திருவாவடுதுறை எம்மானே! தேவரீரது அருளிப்பாடுகள் பலவற்றையும் கண்ணால் கண்டு வல்வினைக் கஞ்சி வந்தடைந்தேன்; காத்தருள்வாயாக. இப்பதிகத்தில் 5 பாட்டுக்களே கிடைத்துள்ளன! வினையவை சிதலரித்தொழிந்தன போலும்!

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) மறையவன் - மார்க்கண்டேயர் ; மாணி - பிரமசாரி ; வாரம் - அன்பு ; ஆருயிர் நிறுத்த - அப்போது இறவாமற் காத்ததன்றி என்றும் அழியாமல் நின்று இருக்கவும் அருள ; அறைகோள் - சிலம்பு சத்திக்கும் ; அறை - அடியவர்கள் வந்தடைந்து அறை கூவும் ஒலி என்று கொண்டு அவ்வொலியை ஏற்றுக்கொள்ளும் என்றலுமாம் ; நறைகோள் என்று பிரித்தோதுவாருமுண்டு. அது பிழை ;—(2) தெருண்ட - தெளிந்த ; சித்திரம் - அழகும் அமைதியும் குறித்தது ; சிக்கென - விரைவாக ; யானையினாற் சிதைவுண்ட அவ்வப்போதே இடைவிடாது ; சோழனாக்கிய - சோழர் மரபில் அரசிளங் குமாரனாக வரவும், அரசாளவும் செய்த ; தொடர்ச்சி - முற்பிறவியின் காரணமாகி அந்தப் பதியிலே வந்த பிறவியின் தொடர்பும், முன்னைநிலை யறிவுடன் பிறந்த அறிவின் தொடர்ச்சியும், அன்பின் தொடர்ச்சியுமாம். புரண்டு வீழ்தல் - புலம்புதல் அன்பின் முதிர்வினாலாவன ; அருண்டு - விதிர் விதிர்த்து ; நடுங்கி. இத்திருப்பாட்டின் கருத்தின் மேம்பாட்டினை ஆசிரியர் மேல் (3217) எடுத்துக் காட்டியருளினர் ;—(3) வழிபட்டார்க்கருள்பவன் சிவன் என்ற உண்மை திருமால் கண்ணிடந்து அருச்சித்து ஆழி பெற்ற வரலாற்றினாலறியப்படும் நிலைபற்றி அச்சரிதம் கண்டு அடியேனும் வந்து அடைந்தேன் என்றபடி ; புகழினால் - தாமரைக் கண்ணன் என்ற புகழ் பற்றி ; புரிந்து - அவனது அன்பை எண்ணி ; தேவதேவ - பெருந் தேவனாகிய அரிக்கும் தேவனாதல் குறிப்பு ; அகழும் - அகழ்ந்து என்னை ஆழத்தில் ஆழ்த்தும் ; ஒன்றன்மேலொன்றாய் மூண்டு வந்து பிறவிக்குழியில் மீளாதபடி அமுக்குதலால் அகழும் வல்வினை என்

றூர்;—(4) கேழல் - பன்றி ; போர என்பது எதுகை நோக்கிப் போா என வந்தது: வான்படை - பாசுபதாஸ்திரம். வான் - பெருமை ; ஏனைவற்றாலும் இதனை வெல்லமாட்டாத முதன்மை ;—(5) ஒக்க - ஒரே காலத்தில் ஒன்றுபோலவே ; முப்புரஞ்செற்று அதில் இருந்த மூவர்களைமட்டும் காத்தருளிய சரிதம். மூன்னிய மூவர் - " எண்ணுடை மூவர் " (திருவாசகம் தோணேக்) ; " மூவெயில் செற்ற ஞான்று" என்ற பதிகத்தில் (திருப்புன்கூர் 8-வது திருப்பாட்டு) இதனை நம்பிகள் மேலும் விரித்தருளுதல் காண்க.

**தலவிசேடம்:**—திருவாவடுதுறை - III-பக்கம் உகஎ பார்க்க.

3218. சாத்தி யங்கு வைகுநாட் டயங்கு மன்ப ருடன்கூடப்
பேர்த்து மிறைஞ்சி யருள்பெற்றுப் பெண்ணோர் பாகத் தண்ணலார்
தீர்த்தப் பொன்னித் தென்கரைமேற் றிகழும் பதிகள் பலபணிந்து
மூர்த்தி யார்த மிடைமருதை யடைந்தார் முனைப்பாடித் தலைவர். சுச

(இ - ள்) சாத்தி...அருள் பெற்று - முன் கூறிய தமிழ்ச் சொன் மாலையினைச் சாத்தி அங்கு எழுந்தருளியிருக்கும் நாளிலே விளங்கும் அன்பர்களுடனேகூட மீண்டும் வணங்கி அருள்விடை பெற்றுச் சென்று ; பெண்ணோர்...பணிந்து - உமையம்மையாரை ஒரு பாகத்தில் உடைய இறைவரது தீர்த்தமாகிய காவிரியின் தென் கரைமேல் விளங்கும் பதிகள் பலவற்றையும் பணிந்து போய்; மூர்த்தியார்...தலைவர்- இறைவரது திருவிடை மருதூரிற் சென்று முனைப்பாடி நாட்டுத் தலைவராகிய நம்பிகள் அடைந்தருளினர்.

(வி - ரை) சாத்தி - "சாத்தினார்" என்று முன் பாட்டிற் கூறி முடித்ததனைத் தொடர்ந்து கூறியது. பேர்த்தும் - மீண்டும் மீண்டும் ; பலநாளும்.

**தீர்த்தப்பொன்னி** - தீர்த்தம் - தூய்மை, பரிசுத்தம் ; அதனைச் செய்யும் நீருக்கு ஆகி வந்தது ; " தீர்த்தன் " என்று இறைவரைக் கூறுவதும் இப்பொருட்டு.

**பதிகள் பல** - இவை திருவாவடுதுறைக்கும் திருவிடைமருதூருக்கு மிடையில் காவிரித் தென்கரையில் உள்ளவை. இவை திருக்கோழம்பம், திருச்சாத்தனூர், தென்குரங்காடுதுறை முதலியன என்பது கருதப்படும்.

**தென்கரைமேல்** - இருபதிகளும் உள்ள தென்கரை வழியாகவே நம்பிகள் சென்றருளினர் என்பது. **மேல்** - என்றதனால் காவிரியின் தென்கரையும் அதன் கிளைகளாய்த் தென்புறமுள்ள கிளை ஆறுகளின் தென்புறமும் கொள்ளப்படும்.

**மூர்த்தியார்** - பெருந்தலைவர் ; "மகாலிங்கம் " என்னும் இடை மருதீசர் தன்மை குறிக்கப்பட்டது. " எந்தை பிரானே " என்ற பதிகக் குறிப்பும் காண்க.

**முனைப்பாடி** - நம்பிகள் அவதரித்த நாடு ; அந்நாட்டரசரால் வளர்க்கப்பட்டனராதலின் இவரும் அந்நாட்டுத் தலைவர் என்பதும் குறிப்பு. 64

3219. மன்னு மருதி னமர்ந்தவரை வணங்கி மதுரச் சொன்மலர்கள்
பன்னிப் புனைந்து பணிந்தேத்திப் பரவிப் போந்து தொண்டருடன்
அந்நற் பதியி லிருந்தகல்வா ரரனார் திருநா கேச்சரத்தை
முன்னிப் புக்கு வலங்கொண்டு முதல்வர் திருத்தாள் வணங்கினார்

(இ - ள்) வெளிப்படை. நிலைபெற்ற மருதினிடமாக விரும்பி எழுந்தருளியுள்ள இறைவரை வணங்கி இனிய தமிழ்ச் சொல்லாகிய மலர்களை மாலையாகப்

புனைந்து வணங்கித் துதித்துச் சென்று, திருத்தொண்டர்களுடனே அந்த நல்ல பதியினின்றும் நீங்குகின்றாராய்ச், சிவபெருமானது திருநாகேச்சரத்தை நினைந்து சென்று திருக்கோயிலினுள் புகுந்து வலங்கொண்டு இறைவரது திருவடிகளை வணங்கினார்.

(வி - ரை) மருது - திருவிடைமருதூர் என்னும் பதி என்றும், அப்பெயர் போந்த காரணமாகி அப்பதியிலுள்ள மருதமரம் என்றும் உரைக்க நின்றது ; "அந்த விடைமருதி லானந்தத் தேனிருந்த, பொந்தைப் பரவி நாம் பூவல்லி கொய்யாமோ" (திருவா).

சொன்மலர்கள் பன்னிப் புனைந்து - சொல்லாகிய மலர்களை ஆய்ந்து தெரிந்தெடுத்து மாலையாகப் புனைந்து ; பன்னுதல் - புனைதல் - சொற்களுக்கும் மலர்களுக்கும் ஒக்கும் ; பன்னுதல் - ஆய்தல் ; புனைதல் - தொடுத்தல் ; ஏகதேச வுருவகம் ; பன்னுதல் - பலமுறையும் பலவாறும் ஒருபொருளைச் சொல்லுதல் என்ற வழக்கும் காண்க.

ஏத்திப் பரவி - ஏத்துதல் - பதிகத்தால் போற்றுதல். பரவுதல் - தோத்திரித்தல்.

முன்னிப்புக்கு - நினைந்தவாறே சென்று திருக்கோயிலினுள் புகுந்து என விரைவு தோன்றக் கூறியவாறு. 65

திருவிடைமருதூர்

திருச்சிற்றம்பலம் பண் - தக்கேசி

கழுதை குங்குமந் தான்சுமந் தெய்த்தாற் கைப்பர் பாழ்புக ழற்றது போலப்
பழுதி னானுழன் றுட்டடு மாறிப் படுசு ழித்தலைப் பட்டன னெந்தாய்
அழுது நீயிருந் தென்செய்தி மனனே யங்க ணாவா னேயென மாட்டா
இழுதையே னுக்கோ ருய்வகை யருளா யிடைம ருதுறை யெந்தைபி ரானே. (1)

அரைக்குஞ் சந்தனத் தோடகி லுந்தி யைவ னஞ்சுமந் தார்த்திரு பாலும்
இரைக்குங் காவிரித் தென்கரை தன்மே லிடைம ருதுறை யெந்தைபி ரானை
உரைக்கு மூர னொளிதிகழ் மாலை யுள்ளத் தாலுகந் தேத்தவல் லார்கள்
நரைப்பு மூப்பொடு நடலையு மின்றி நாதன் சேவடி நண்ணுவர் தாமே. (10)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—"இழுதை யேனுக்கோ ருய்வகை யருளாய் இடைமருதுறை எந்தை பிரானே" என்ற பதிகத்தின் மகுடம் காண்க.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) "கழுதை குங்குமந்தான் சுமந்து" - பயனற்ற செயல் என்பது குறிக்க வழங்கும் பழமொழி. எய்த்தால் - வருந்தினாலும் ; உம்மை தொக்கது. கைப்பர் - இகழ்வர் ; பாழ் - வீண் ; வருந்திச் சுமந்த பொருள் உயர்ந்ததாயினும் அதனால் அக்கழுதைக்கு ஒரு பயனுமில்லை என்பது ; போல - அதுபோல் ; பழுதில்...பட்டனன் - வீணே உடல் சுமந்து தடுமாறி அலைகின்றேன். உடலாற்பெறும் பயனை அடைந்தேனில்லை. "ஊனடைந்த உடம்பின் பிறவியே" "மானிடப் பிறவிதானும்" என்றற் றொடக்கத் திருவாக்குக்கள் காண்க ; அழுது - வீணே கழித்ததற் கிரங்கி ; இழுதையேன் - அறிவில்லாதவன் ; உய்வகை... ...பிரானே - பதிகக் கருத்து ;—(2) அரைத்த மஞ்சளதாவதை - பழமொழி. அரைத்த மஞ்சள் உடனே பயன்படுத்தாவிடின் தன்மை கெட்டு வீணாவது போல விரைவில் நரை மூப்பு முதலிய முடுகிச் சேரும் உடலை வீண் கழித்தேன் ; இரைப்பன் - வீணன் ; வெற்றொலியினன் ; வீண் ஆரவாரமுடையோன் ;—(3) புன்

னுனே...போலும் - பழமொழி ; புல் நுனியில் உள்ள பனி சூரியனைக் கண்டபோது விரைவில் மறைவது போல அநித்தியமாகிய-நிலையில்லாத ; நாளும்...என்றிருந்து - இன்பம் இன்று வரும் நாளை வரும் என்றென்று ஏமாந்து ;—(4) முந்தி...நலிய - முற்பிறப்பிற் செய்த தீவினைகள் இப்போது வந்து வருத்த ; நம்பிகளது சரிதக் குறிப்பும், ஞானநூற் றுணிபுணர்த்தியதும் ஆம் ;—(5) அழிப்பர் - அழிவு செய்வோர் ; ஐவர் - ஐம்புலன்கள் ; காற்பெய்து - துன்பமெல்லாஞ் செய்து அதனுள் அழுந்தச் செய்து ; விழித்து - மயக்க நீங்கி அறிவு பெற்று ;—(6) சுற்றம்... ...பெருக்கி - குற்றமும் குணமுமாகிய வினைகளை விரவப் பெரிதும் செய்து ; எற்றுளேன் - எதன் பொருட்டு வாழ்கின்றேன் ;—(7) கொடுக்ககிற்றிலேன் ஒண்பொருள்தன்னை - பொருள் தேடுதலெல்லாம் தம் பொருட்டன்றிப் பிறர்க்குக் கொடுத்தலின் பொருட்டே என்பது ;—(8) ஐவகை யரைய ரவராகி - "மாறி நின்றெனை மயக்கிடும் வஞ்சப் புலனைந்து" (திருவா) ;—(9) ஏழை - வலியில்லாத ; சிறிய வாழை - கல்வாழை, மலைவாழை முதலாகப் பழுக்காத வாழை வகைகள் ; "வாழை தான் பழுக்கும் நமக்கென்று" - பழமொழி ; கூழைமாந்தர் - அறிவில்லாத மக்கள். கடையில் தள்ளப்பட்டோர்; செல்கதி-அவர் போகும் வழி;—(10) நரைப்பு...இன்றி- (2-ம் திருப்பாட்டில்) வரும் என்றஞ்சிய நரை முதலியன ; நடலை - வஞ்சனை.

தலவிசேடம் :—திருவிடைமருதூர் - III - பக். ௩00 பார்க்க.

3220. பெருகும் பதிகம் "பிறையணிவா ணுதலாள்"பாடிப் பெயர்ந்து,நிறை
திருவின் மலியுஞ் சிவபுரத்துத் தேவர் பெருமான் கழல்வணங்கி
உருகுஞ் சிந்தை புடன்போந்தே, யுமையோர் பாகர் தாமகிழ்ந்து
மருவும் பதிகள் பிறபணிந்து, கலய நல்லூர் மருங்கணைந்தார். ௬௬

(இ - ள்) பெருகும்...பெயர்ந்து - இன்பம் பெருகும் "பிறையணி வாணுதலாள்" என்று தொடங்கும் திருப்பதிகத்தினைப் பாடி அங்குநின்றும் சென்று ; நிறை...போந்தே - குறைவில்லாத நிறைவாகிய சிவச் செல்வம் நிறையும் திருச்சிவபுரத்தில் சேர்ந்து தேவர் தலைவராகிய சிவபெருமானது திருவடிகளை வணங்கி உருகும் சிந்தையுடனே மேற்சென்று ; உமையோர்...பணிந்து - உமையம்மையைப் பாகத்தில் உடைய இறைவர் தாம் மகிழ்ந்து பொருந்தும் பதிகள் பிறவற்றையும் பணிந்து சென்று ; கலயநல்லூர் மருங்கு அணைந்தார் - திருக்கலயநல்லூரின் பக்கத்தில் அணைந்தருளினர்.

(வி - ரை) பெருகும் - இன்பம் பெருகுதற்கு ஏதுவாகிய ; இன்பம் - சொல்லெச்சம் ; இது சிவனடிமைத் திறத்தின் வரும் குறையாத இன்பம் ; பெருக்கும் என்பது பெருகும் என நின்றது.

பிறையணி வாணுதலாள் - இது பதிகத் தொடக்கமாகிய முதற்குறிப்பு.

திரு - சிவத் திரு ; முத்திச் செல்வம்.

பதிகள் பிற - இவை சிவபுரத்திற்கும் கலயநல்லூருக்கும் இடையில் உள்ளவை என்பது கருதப்படும். இப்போது தெரியக்கூடவில்லை. 66

திருநாகேச்சரம்

திருச்சிற்றம்பலம் பண் - பஞ்சமம்

பிறையணி வாணுதலா ளுமை யாளவள் பேழ்கணிக்க
நிறையணி நெஞ்சனுங்க நீல மால்விட முண்டதென்னே

குறையணி கொல்லைமுல்லை யளைந் துகுளிர் மாதவிமேற்
சிறையணி வண்டுகள்சேர் திருநா கேச்சரத் தானே. (1)

கொங்கணை வண்டரற்றக் குயிலும் மயிலும் பயிலுந்
தெங்கணை பூம்பொழில்சூழ் திருநா கேச்சரத் தானை
வங்க மலிகடல்சூழ் வயனாவல ஆரன் சொன்ன
பங்கமில் பாடல்வல்லா ரவர்தம் வினைபற் றறுமே. (10)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—திருநாகேச்சரத்தானே ! என விளித்து விடமுண்டது, அற முரைத்தது முதலாகிய அருளிப்பாடுகளை வினாவுமுகத்தால் பாராட்டித் துதித்தது.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) பிறை அணி - பிறை போன்ற ; அணி-உவம வுருபு. பேழ்கணிக்க - அஞ்ச ; அனுங்க - வருந்த ;—(2) புரிதல் - நினைதல் ; குரவம்...அரும்ப - குராவின் அரும்புகள் பாம்பின் பற்கள் போன்று மென்மை - வெண்மை - கூர்மை கொண்டன. " அரவின் வாயில் முள்ளெயி றேய்ப்ப அரும் பீன்று, குரவம்பாவை முருகமர் சோலைக் குற்றாலம் " (பிள். தேவா - குறிஞ்சி) ; செருந்தி செம்பொன் மலர் - " செருந்தி செம்பொன்மலர் திருநெல்வேலி " (பிள். தேவா) ;—(3) பாலன் - மார்க்கண்டர் ; வீடுவித்துக் கருத்தாகியது - வீட்டிப், பின் உயிர்ப்பித்து அருளியது ;—(4) குன்ற மலை-பல குன்றுகளைச் சாரலிற்கொண்ட மலை ; இடையாள் - உமை ;—(5) திரை - காவிரி நீரின் அலைகள் ;—(6) மாதவத் தின்...போர்த்தது - தாருகவனத்து இருடிகள் செய்த அபிசார யாகத்தில் எழுந்து அவர்களால் ஏவப்பட்ட சிங்கம் - புலி - யானை இவற்றை அடர்த்துத் தோலைப் போர்த்த சரிதம் ; கந்தபுராணம் முதலிய மாபுராணங்களுட் காண்க ;—(7) நின்ற வில் மாதவம் - இறைவர் தென்முகமாகி வீற்றிருந்த நிலை ;—(8) அர - வாசுகி ;—(9) அங்கியல் யோகு - மூன்றாவது பாட்டுப் பார்க்க ; அங்கி - தீயின் தன்மை ; அங்கி இயல் - அங்கியல் எனநின்ற தென்றலுமாம் ;—(10) விரவாகியது - அவற் றுள்ளும் ஏற்றவாறு விரவி நின்றது.

தலவிசேடம் :—திருநாகேச்சரம் - III - பக்கம் ௩௦௩ பார்க்க.

குறிப்பு :—இத்திருப்பதிகத்தில் முன் பகுதியில் கூறிய இறைவரது அருட் செயல் ஒவ்வொன்றும் பிற்பகுதியில் பதியின் நகர வளமாக அருளிய நயம் காண்க.

3221. செம்மை மறையோர் திருக்கலைய நல்லூ ரிறைவர் சேவடிக்கீழ்
மும்மை வணக்கம் பெறவிறைஞ்சி முன்பு பரவித் தொழுதெழுவார்
கொம்மை மருவு "குரும்பைமுலை யுமையாள்" ளென்னுந் திருப்பதிகம்
மெய்ம்மைப் புராணம் பலவுமிகச் சிறப்பித் திசையின் விளம்பினார்.

(இ - ள்) செம்மை...தொழுதெழுவார் - செம்மை நெறியில் நின்றொழுகும் மறையோர்கள் வாழும் திருக்கலயநல்லூ ரிறைவரது சேவடிகளின் கீழே முக்கரணங் களும் ஒன்றிய வணக்கம் பொருந்த வணங்கித் திருமுன்பு தோத்திரித்துத் தொழுது எழுவாராகி ; கொம்மை...திருப்பதிகம் - பெருமையுடைய " குரும்பைமுலை மலர்க் குழலி " என்று தொடங்கும் திருப்பதிகத்தினை ; மெய்ம்மை......விளம்பினார் - மெய்ம்மையாகிய மாபுராண வரலாறுகள் பலவற்றையும் சிறப்பாக எடுத்துக் கூறிப் பண் இசை பொருந்தப் பாடியருளினார்.

(வி - ரை) செம்மை - சைவ ஒழுக்கத்துள் நிற்கும்; மறையோர் - கலைய நல்லூர் மறையோர் வாழும் பதி என்பது: "திருமறையோர் மூதூர் செல்வச் சேய்ஞலூர்" என்புழிப்போல.

மும்மை வணக்கம் - மனம், மொழி, மெய் என்னும் மூன்று காரணங்களும் ஒன்றித்துப் பொருந்தும் வணக்கம்.

எழுவார் - விளம்பினர் - என்று கூட்டுக. எழுவார் - முற்றெச்சம்.

குரும்பைமுலை மலர்க்குழலி என்பது பதிகத் தொடக்கம். "மலர்க்குழலி" என்றதனை உமையாள் எனப் பொருள் விரித்துக்கொண்டார்.

மெய்ம்மை......சிறப்பித்து - பதிகத்துள் ஒவ்வோர் பாட்டிலும் மாபுராண வரலாறுகளுள் ஒவ்வொன்றைச் சிறப்பாக விரித்து மிக அழகாகப் போற்றியிருத்தல் காண்க. இவற்றைக் குறிக்கொள்ளும்படி ஆசிரியர் வைத்தருளிய ஆணை.

இசை - பதிகப் பண்ணாகிய காந்தாரம். இப்பதிகம் பயின்று ஓதப்பட்டு வருதலும் காண்க.

மெய்ம்மைப் புராணம் - மாபுராணங்களுட் பேசப்படும் வரலாறுகள் அனைத்தும் மெய்யேயாம்; ஒவ்வோர் மெய்ம்மையினை உணர்த்துவன; மெய்யாகிய (சத்) இறைவரைப் பற்றியன என்ற பலவும் கொள்க. 67

திருக்கலையநல்லூர்

திருச்சிற்றம்பலம் பண் - தக்கராகம்

குரும்பைமுலை மலர்க்குழலி கொண்டதவங் கண்டு
குறிப்பினொடுஞ் சென்றவடன் குணத்தினைநன் கறிந்து
விரும்பும்வரங் கொடுத்தவளை வேட்டருளிச் செய்த
விண்ணவர்கோன் கண்ணுதலோன் மேவியவூர் வினவில்
அரும்பருகே சுரும்பருவ வறுபதம்பண் பாட
வணிமயில்க ணடமாடு மணிபொழில்சூ ழயலின்
கரும்பருகே கருங்குவளை கண்வளருங் கழனிக்
கமலங்கண் முகமலருங் கலையநல்லூர் காணே. (1)

தண்புனலும் வெண்மதியுந் தாங்கியசெஞ் சடையன்
றாமரையோன் றலைகலனாக் காமரமுன் பாடி
யுண்பலிகொண் டுழல்பரம னுறையுமூர் நிறைநீ
ரொழுகுபுன லரிசிலின்றென் கலையநல்லூ ரதனை
நண்புடைய நன்சடைய னிசைஞானி சிறுவ
னாவலர்கோ னாரூர னுவினயந் துரைசெய்
பண்பயிலும் பத்துமிவை பத்திசெய்து நித்தம்
பாடவல்லா ரல்லலொடு பாவமிலர் தாமே. (11)

திருச்சிற்றம்பலம்

பதிகப் பாட்டுக் குறிப்பு :—குரும்பைமுலை......வேட்டருளிச் செய்த - இது பார்வதியம்மையார் திருமண வரலாறு குறித்தது; கந்தபுராணம் பார்க்க; (தவங்காண் படலம், பார்வதியம்மையார் திருமணப் படலம் முதலியவை.) குறிப்பு :—திருமணம் செய்து உலகுக்குப் போகபோக்கியங்களைத் தந்தருளும் குறிப்பு. அறிந்து-புலப்படுத்தி; கண்வளரும் - கண்போல வளரும் என்றும், கண்துயிலும் என்றிருபொருளும்பட நின்றது தமிழ் நலம்; கமலங்கண் முகமலரும் - கமலம் கண்போலவும் முகம்போல

வும் மலர்கின்ற ;—(2) திருமாலுக்குச் சக்கரம் கொடுத்ததும் அந்தகாசுர வதமும் குறித்தபடி ; மேதை - அறிவுப் பெருமை ; நகர நீர்வளம் குறிப்பது ;—(3) சண்டேசர் சரிதம் குறித்தது ; சண்டேசர் புராணச் சரித ஆதரவு. பின் இரண்டடிகள் நகரச் சிறப்பும் மக்கட் சிறப்பும் உரைத்தபடி ;—(4) "தேய்மா றொளிக ளெல்லாஞ் சிவனருட் டேச தென்னார்" (சித்தி) என்ற உண்மையைக் குறிக்கும் வரலாறு கூறப்பட்டது. ஒளிகள் எல்லாம் தீயின்கூறு கொண்டன ; தீ இறைவரது நெற்றிக்கண்ணின் விளக்கம் என்பது; இச்சரிதம் நிகழ்ந்தது ஒரு கற்பத்தின் ஒரு சம்பவம்; அரிசில்-காவிரிக் கிளையானதொரு சிற்றாறு; ஓமப் புகையால் - முகில்போன்றணி கிளர்தல்-வேள்விப் புகை மழைக்குக் காரணம் என்ற காரணக் குறிப்புத் தோன்றக் கூறியது போன்ற-அதுவேயாகிய; "விளைத்த வன்புமிழ்வார் போல" (772); "சிவத்தைச்சார அணைபவர்போல" (752) முதலியவற்றிற்போலக் கொள்க. "மண்ணிற் பெருவேள்வி வளர்தீப் புகைநாளும், விண்ணிற் புகைகாட்டும் வீழி மிழலையே" (தேவா); இப்பாட்டால் அந்தண ரொழுக்கமும் அதன் பயனும் கூறப்பட்டன ; கலிகடி என்றது காண்க;—(5) நிற்பான் - குறையிரந்து நிற்பான்; ஈண்டு வேண்டிக்கொண்ட அமரர்களில் முதல்வனாய் வந்து நிற்பானாகிய விட்டுணு என்ற பொருளில் வந்தது. முதலா என்றதும் காண்க. திரிபுரமெரித்த வரலாறு : சொற்பால பொருட்பால - சொல்லின் பான்மை கொண்டனவும் அதற்கியையும் பொருளின் பான்மை கொண்டனவும் ஆகிய என்க. பால - அகர வீற்றுப் பலவின்பாற் பெயர் ; இவற்றைத் தோத்திரங்கள் என்றதனுடனும் கூட்டுக. கலைபயில் - அந்தணரொழுக்கத்தின் சிறப்பு ;—(6) தக்க யாக சங்காரம் கூறியபடி ; பெற்றிமை யோன்றறியாத தக்கன்-சிவனது முழுமுதற்றன்மை அறியாத என்ற அடைமொழிகள், அவ்வறியாமையினால் நேர்ந்த சிதைவுக்குக் காரணம் என்று காரணக் குறிப்புப்பட நின்றன ; இதனைப் பெருந்தேவர் என்பதனுடனும் கூட்டுக. அவர்களுடன் கூட்டும்போது பெற்றிமை யாவது தக்கனது செயல் சிவாபராதமாம் என்ற தன்மை ; பெருந்தேவர் - எச்சன் முதலியோர் ; சிரம், தோள், பல், கரம், கண் - எச்சனது சிரம்-இந்திரனது தோள்-சூரியனது பல்-தீயின் கரம்-பகன் என்னும் மற்றொரு சூரியனது கண்-இவை பீடழிந்தன; பீடு - பெருமை ; அருள் பெருக - இத்தண்டனைகளே அருளின் சொரூபம் என்றபடி. "நாயகனே தண்டித்தாற் சயமன்றோ வானவர்க்கு" (திருவா - சாழல்) ; முன்னர்த் தண்டித்துப் பின்னர் அருளும் செய்த என்றலுமாம் ; கற்றின...கவர் - கரும்பின் முளைகள் கறிபோன்றிருக்கப் பசுக்கள் கழுநீர் மலர்களைச் சென்று உண்ணும் ; கமழ் - மணம் வீசும் ; கவர் - உண்ணும் ;—(7) இலங்கையர்...ஊன்றி - இராவணனை மலையின்கீழ் அடர்த்த செய்தி ; நிலம்...ஆகாசமாகி - அட்டமூர்த்தமாந் தன்மை; நிற்பனவு நடப்பனவாம் - எல்லாமாந் தன்மை; (2824); நிலங்கள்-கனி வகைகள் ; கேதகை - தாழை ; கலந்தபுனல் - பெருகிய வெள்ளம் ;—(8) சிவனது அளவிலாற்றலுடைமை குறித்த செய்திகள் குறிக்கப்பட்டன ; நியிர்ந்தோன் - வைத்தவன் - கண்டன் - விடையூர்வன் - விமலன் - உமை பாகன் எனக் கண்டு கொள்க ; வன்னி - வன்னித் தழை; சோலை...துதிக்க - சோலை இப்பறவைக்கெல்லாம் இருப்பிடம் ; குயில், மயில், வண்டு, கிளி இவை எல்லாம் தத்தம் அளவில் கூவித்துதி செய்ய ; கசிந்த மனத்தவர் இருபோதும் அடிபணிவர் என்க ; கிளிதுதிக்க - "பாரிசையும் பண்டிதர்கள் பன்னாளும் பயின்றோதும் ஓசை கேட்டு - கிள்ளை - வேதங்கள் பொருட் சொல்லும்" (பிள். தேவா. மிழலை); கசிந்த மனம் - கடவுள் வழிபாட்டிற்கின்றியமையாத பண்பும் பயனுமாம் ;—(9) தாருகனைப் பொருது பொன்றுவித்த பொன். வீரி - காளி - பத்திரை. என்ப. பொன் போன்றாளைப் பொன் என்றார்.

பொருளினை - என்பதும் பாடம். தாருகன் வதமும், காமனை எரித்ததும் குறிக்கப்பட்டன ; கரும்பூனை - மிகப் பசிய புன்னை மரங்கள். புன்னை - பூனை என வந்தது இடைக்குறை. பூனை...காட்டும் - தன்மை யணியினை உள்ளுறுத்த உருவகம். முத்து - முத்துப்போன்ற மொட்டு ; பொன் - தாது ; பவளம். பூவின் உள்ளிருக்கும் செவ்விய இளங் கொட்டை ; "பொன்னவிழ்ப்பனமலர்ப் புன்னை" (1113);—(10) முன்னாள் - அயன் - வழிபாடு செய்ய இருந்த - தலவரலாறு குறித்தது ; கண் - கணுக்கள்;—(11) காமரம் - சீகா மரப்பண். நிறைநீர் - முன் கூறியவை எல்லாம் நீர்ச் சிறப்புப் பற்றியன என்று முடித்துக் காட்டியவாறு. இச்சிறப்பு வெள்ளக் காலத்தில் இன்றும் காணவுள்ளது ; நண்பு - சிவன் பாலன்பு என்ற பொருளில் நின்றது ; சிவனே எஞ்ஞான்றும் உயிர்களுக்கு நண்பு செய்து எடுப்பவன் என்றறிந்து, என்றும் வினை நட்புக்கள் எல்லாம் அழியத் தக்கன என்பதும் கண்டு என்றும் அந்நண்பினையே பிடித்து அவ்வழிபாட்டிற் சிறந்த என்க. "மாதொரு பாகனுர்க்கு...மேம்படு சடையனுர்" (149) ; நண்புடைய என்றதனை இசை ஞானி - ஆரூரன் என்பவற்றுடனும் கூட்டுக. இங்கு நம்பிகள் தமது தந்தை, தாய், வயது (சிறுவன்), ஊர், பேர், பண்பு முதலிய எல்லாம் ஒருசேரப் பெறவைத்த சிறப்புக் காண்க. பண்பயிலும் - இறைவனது பண்பும் அவன் வெளிப்பட இருக்கும் பதியின் பண்பும் பலவாறு பயிலக்காட்டும்.

தலவிசேடம்:—திருக்கலயநல்லூர் - காவிரித் தென்கரை 68-வது பதி ; இப்போது சாக்கோட்டை எனவழங்கப்படுகின்றது ; உயிர்களை அடைத்த கலயம் (கும்பம் - குடம்) நீர்ப் பெருக்கு ஊழியில் தங்கிய இடமாதலின் இப்பெயர் பெற்றதென்பர் ; நீர்வளமுள்ள அரிசிலாற்றின் தென்கரையில் உள்ள தென்பது பலபடியாலும் பதிகத்துப் பாராட்டப்பட்ட பெருமையுடையது ; பதிகத்துள் இறைவரது அருளிப்பாடாகிய மெய்ம்மைப் புராணம் பலவும் விரிவாய்ப் பதிகப்பாட்டுக்களிற் போற்றப்பட்ட பெருமையும், மறையவர்கள் வாழும்பதி என்பதும் பதிகத்துப் பாராட்டப்பட்ட பெருமையும் உடையது. சுவாமி - அமிர்தகலர்நாதர் ; அம்மை - அமிர்தவல்லி - பதிகம் ;

இது கும்பகோணம் நிலையத்துக்குத் தெற்கே நீடா மங்கலம் கற்சாலை வழியில் 2 நாழிகையில் அரிசிலாற்றின் தென் கரையில் உள்ளது.

குறிப்பு:—பூசையின் பொருட்டு அரி (விட்டுணு) சொல்லின் வழி வந்தமையால் அரி சொல் ஆறு எனப் பெயர் பெற்றதென்றும் இப்போது மருவி அரிசிலாறு என வழங்குவதென்றும் கூறுப.

3222. அங்கு நின்று திருக்குடமூக் கணைந்து பணிந்து பாடிப்போய்,
மங்கை பாகர் வலஞ்சுழியை மருவிப் பெருகு மன்புருகத்
தங்குகாத லுடன்வணங்கித் தமிழாற் பாசி, யரசினுக்குத்
திங்கண் முடியா ரடியளித்த திருநல் லூரைச் சென்றணைந்தார். ௬௮

(இ - ள்) அங்கு...போய் - அப்பதியினின்றும் திருக்குட மூக்கினை அணைந்து வணங்கித் திருப்பதிகம் பாடிச் சென்று; மங்கை...பாசி-உமைபாகராகிய இறைவரது திருவலஞ் சுழியினைச் சார்ந்து, பெருகும் அன்பு உள்ளத்தினை உருகச் செய்ய நிரம்பிய பெரு விருப்பத்துடன் வணங்கித் தமிழ்ப் பதிகத்தினாலே போற்றி செய்து; அரசினுக்கு...சென்றணைந்தார் - மதியினைச் சடையில் அணிந்த பெருமானுர் திருநாவுக்கரசருக்குத் திருவடியினைச் சூட்டியருளிய திருநல்லூரினைச் சென்று சேர்ந்தருளினர்.

(வி - ரை) திருக்குடமுக்கு - திருவலஞ்சுழி - திருநல்லூர் - நம்பிகள் யாத்திரையாகச் சென்றருளிய வழி குறிக்கப்பட்டது.

தங்குகாதல் - நிலைபெற்று மாறாத பெரு விருப்பம்; தங்கு - அப்பதியிற்றங்கும் என்றலுமாம்.

தமிழ் - தேவாரத் திருப்பதிகம்; தமிழாற்பரவி - நம்பிகள் வேதாகமங்களாலும் பரவிப் போற்றலாமாதலின் அதனிற் பிரித்துணரத் தமிழால் என்றார். இயல்பு குறித்த தென்றலும்.

அரசு - திருநாவுக்கரசர்; அரசினுக்கு...அடியமளித்த - வரலாறு அவர் தம் புராணம் (1459-1461) பார்க்க.

திங்கள் முடியார் - வேண்டுவார் வேண்டிய ஈயும் திருவருளுடைமை குறிப்பு.

திருக்குடமுக்கு - திருவலஞ்சுழி - திருநல்லூர் - இம்மூன்று பதிகளுக்கும் நம்பிகளது பதிகங்கள் கிடைத்தில. 69

3223. நல்லூ ரிறைவர் கழல்போற்றி நவின்று நடுவு நம்பர்பதி
எல்லா மிறைஞ்சி யேத்திப்போந் திசையாற் பரவுந் தம்முடைய
சொல்லூ தியமா வணிந்தவர்தஞ் சோற்றுத் துறையின் மருங்கெய்தி
அல்லூர் கண்டர் கோயிலினுள்ளடைந்துவலங்கொண்டடிபணிவார்,

3224. "அழனீ ரொழுகி யனைய"வெனு மஞ்சொற் பதிக மெடுத்தருளிக்
கழனீ டியவன் பினிற்போற்றுங் காதல் கூரப் பரவியபின்
கெழுநீர் மையினி லருள்பெற்றுப் போந்து பரவை யார்கேள்வர்
முழுநீ றணிவா ரமர்ந்தபதி பலவும் பணிந்து முன்னுவார், எ0

3225. தேவர் பெருமான் கண்டியூர் பணிந்து திருவை யாறதனை
மேவி வணங்கிப் பூந்துருத்தி விமலர் பாதந் தொழுதிறைஞ்சிச்
சேவில் வருவார் திருவாலம் பொழிலிற் சேர்ந்து தாழ்ந்திரவு
பாவு சயனத் தமர்ந்தருளிப் பள்ளி கொள்ளக் கனவின்கண், எக

3226. "மழபா டியினில் வருவதற்கு நினைக்க மறந்தா யோ"வென்று
குழகா கியதங் கோலமெதிர் காட்டி யருளக் குறித்துணர்ந்து
நிழலார் சோலைக் கரைப்பொன்னி வடபா லேறி நெடுமாடம்
அழகார் வீதி மழபாடி யணைந்தார் நம்பி யாரூரர். எஉ

3223. (இ - ள்) நல்லூர்...நவின்று - திருநல்லூர்ப் பெருமானது திருவடிகளைத் துதித்துப் பாடி; நடுவு...போந்து - இடையிலே உள்ள இறைவர் பதிகள் எல்லாவற்றையும் வணங்கித் துதித்துச் சென்று; இசையால்...எய்தி - தமிழிசையினாலே துதிக்கின்ற தமது பதிகங்களைப் பயனாக விரும்பி ஏற்று அணிந்துகொண்டருளிய இறைவரது திருச்சோற்றுத் துறையின் பக்கத்திற் சேர்ந்து; அல்லூர்...பணிவார் - விடந்தங்கிய கண்டராகிய சிவபெருமானது திருக்கோயிலினுள்ளே அடைந்து வலமாகச் சூழ்ந்து வந்து திருவடிகளிற் பணிவாராகி, கூகூ

3224. (இ - ள்) அழனீர்...எடுத்தருளி - "அழனீர் ஒழுகியனைய" என்று அழகிய சொற்களாலாகிய திருப்பதிகத்தினைத் தொடங்கியருளி; கழல்...பரவியபின் - திருவடிகளைப் பெருகிய அன்பினாலே துதிக்கின்ற பெருவிருப்பம் மேலும் மிகும்படி போற்றியபின்; கெழு...போந்து - உரிமையாகிய தன்மையில் இறை

வரது திருவருள் பெற்று மேற்சென்று ; பரவையார்...முன்னுவார் - பரவையாரது கணவனாராகிய நம்பிகள் முழுமையும் திருநீற்றினை அணியும் இறைவர் விரும்பி எழுந்தருளியிருக்கும் பதிகள் பலவற்றையும் பணிந்து மேலும் செல்ல எண்ணுவாராகி,

3225. (இ - ள்) தேவர் பெருமான்...வணங்கி - தேவ தேவராகிய சிவ பெருமானுறையும் திருக்கண்டியூரினைப் பணிந்து சென்று திரு ஐயாறதனைச் சென்று பொருந்தி வணங்கி ; பூந்துருத்தி...இறைஞ்சி - திருப்பூந்துருத்தி யிறைவரது திருப்பாதங்களைத் தொழுது பணிந்து ; சேவில்...தாழ்ந்து - இடபத்தில் வரும் இறைவரது திருவாலம் பொழிலின்கண் சேர்ந்து வணங்கி ; இரவு...கனவின்கண் - அன்று இரவிலே பரவும் பள்ளி நிலையினில் அமர்ந்தருளிப் பள்ளிகொண்டிருக்க, அற்றை நாளிலே கனவின் கண்ணே, எக

3226. (இ - ள்) மழபாடியினில்...என்று - திருமழபாடியின்கண் வருதற்கு நினைக்கவும் மறந்துவிட்டாயோ ? என்று ; குழகாகிய...குறித்துணர்ந்து - இளமையாகிய தமது உரிய திருக்கோலத்தைக் காட்டியருளிச் செய்ய, அதனைக் குறிப்பிட்டுத் துயிலுணர்ந்தெழுந்து ; நிழலார்...ஆரூரர் - நிழல் பொருந்திய சோலைகள் சூழ்ந்த கரையினை உடைய காவிரியின் வடகரையில் ஏறிச் சென்று நெடிய மாடங்களையுடைய அழகிய வீதிகள் பொருந்திய திருமழபாடியினை நம்பியாரூரர் அணைந்தருளினர். எஉ

இந்நான்கு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபுகொண் டுரைக்கின்றன.

3223. (வி - ரை) போற்றி நவின்று - துதித்துத் திருப்பதிகம் பாடி ; நவிலுதல் - பதிகம் பாடுதல் என்ற பொருளில் வந்தது.

நடுவு நம்பர்பதி எல்லாம் - இவை திருநல்லூருக்கும் திருச்சோற்றுத் துறைக்கும் இடையில் உள்ளன. இவை திருப்பாலைத்துறை, திருச்சக்கரப்பள்ளி முதலியன என்பது கருதப்படும்.

தம்முடைய சொல் ஊதியமா அணிந்தவர் - "மண்மேல் நம்மைச் சொற்றமிழ் பாடுக" (216) என்று கூறியருளிக் கேட்டு மகிழ்ந்தவர் ; ஊதியம் - இலாபம் ; ஏனையோர் பாடல்கள் அவ்வவர்க்கும் சிவானந்தப் பெரு வாழ்வு தேடித் தந்து அவ்வவர்க்கும் ஊதியம் தருவன ; நம்பிகளது சொற்கள் அதுவேயுமன்றி இறைவரால் தமக்கு ஊதியமாக அணியப்படுவன என்பது ; "பித்தனோ மறையோன் ?" என்ற இகழ்ச்சிச் சொல்லினையே புகழ்ச்சி மொழியாகக் கொண்டு ஏற்று அணிந்த வரலாற்றுக் குறிப்புமாம்.

அல்லூர் கண்டர் - அல் - இருள் ; இங்குக் கருமை நிறமுடைய விடத்தினைக் குறித்தது ; ஊர்தல் - பொருந்துதல்.

பணிவார் - பரவியபின் - பணிந்து முன்னுவார் (3224) - பணிந்து - வணங்கி - இறைஞ்சித் - தாழ்ந்து - பள்ளிகொள்ள (3225) - அருள - உணர்ந்து - ஏறி - அணைந்தார் (3226) என்று முடிபு படுத்திக்கொள்க.

ஏத்திப்போய்—என்பதும் பாடம். 69

3224. (இ - ள்) "அழனீர் ஒழுகி அனைய" எனும் - இது பதிகத் தொடக்கமாகிய முதற் குறிப்பு. எடுத்து - தொடங்கி ; அழலே நீர்போல வடிந்தது போன்ற என்பது இறைவரது செஞ்சடையின் சிறப்பு. தன்மை விரவிய உவமவணி.

நீடிய அன்பினிற் - கழல் போற்றும் என்க.

கெழுநீர்மை - பொருந்தும் தன்மை. கெழுவுதல் - பொருந்துதல்.

முழு நீறு - முழுமையும் வீந்த காலத்திற் பெறும் சங்கார காலத்து நீறு ; முழுமையைத் தரும் நீறு என்ற குறிப்புமாம்.

பதி பலவும் - சோற்றுத்துறையின் அணிமையில் உள்ளவை ; தண்டங்குறை - திருவேதிகுடி முதலாயின என்பது கருதப்படும். 70

3225. (வி - ரை) பாவு சயனம் - பாவுதலாவது உடல் முழுதும் பரப்ப நிலத்தில் கிடத்தியமர்தல். கைகால் முதலியவற்றை முடக்கிப் பள்ளிகொள்ளுதல் உடல் நலத்துக் கியைவதன்று என்பது மருத்துவநூற் கருத்து ; பாவு சயனம் - பரப்பிய படுக்கை என்றலும் ஆம்.

தேவர்பெருமான் றிருப்பழனந் திருவையாறு நெய்த்தானம்—என்பதும் பாடம்.

3226. (வி - ரை) நினைக்க மறந்தாரோ ? - வருதற்கு மறந்தாரோ என்றலே அமையுமாதலின் நினைக்க மறந்தாரோ ? என்ற தென்னை ? யெனின் ; நம்பிகள் சிவயோக நிலையினராகி எஞ்ஞான்றும் "பேரா வொழியா மறவா நினையா" என்றபடிக்குள்ள தன்மையுடையாராதலின் மறப்பிலர் ; நினைப்பின் நீக்கமே மறத்தலாம் ; ஆதலின் மறந்தாரோ என்பது பொருந்தாமையின் இங்குக் குறித்தது மழபாடியில் வருதலாகிய சிறப்பு நினைவேயாம் என்பார் நினைக்க என்றார் என்க. " யாரை நினைக்கேனே " என்ற பதிக விளக்கமும் சரிதச் சான்றும் ஆம்.

குழகு - இளமை ; அழகு என்றலுமாம். குழகாகிய தம்கோலம் - என்றும் மாறாது ஒருபடித்தாய் நிற்கும் தமது இன்பமயமாகிய திருக்கோலம் ; பதிகத்துப் "பொன்னார் மேனியனே " என்பது முதலாகத் தொடங்கிப், பலபடியும் பாராட்டப் பட்டது. இக்கோலம் எதிர் காட்டக் கண்ட காட்சியின் குறிப்பு. காளையாந் திருவடிவங் காட்டி, " யாமிருப்பது கானப்பேர் " என்று அருளியதும், அத்திருப்பதிகமும் இங்கு நினைவு கூர்தற்பாலன.

துறித்து உணர்ந்து - துறித்தலாவது கனு நிகழ்ச்சிகளுட் பல நனவின்கண் செவ்வியின் வாராது போதலின் அவ்வாறின்றி அம்முழுமையும் நனவின் வருமாறு குறி வைத்துத் துயிலுணர்தல்.

பொன்னி வடபால் ஏறி - காவிரியின் தென்கரை வழியே உள்ள தலங்களை வழி பட்டுத் திருவாலம் பொழிலிற் சேர்ந்தாராதலின். அங்கிருந்து மழபாடிக்கு வடக்கு நோக்கிக் காவிரியையும் கொள்ளிடத்தையும் தாண்டிச் சென்று ; கொள்ளிடம் காவிரியின் பிரிவுகளுள் ஒன்றாதலின் வேறு பிரித்துக் கூறாது பொன்னி வடபால் என்றமைந்தார் ; பால் - பக்கம். வட பக்கமுள்ள இரண்டு கிளையாறுகளையும் குறித்தது. 72

3223.—நடுவு நம்பர்பதி - இவைகட்கு நம்பிகள் பதிகங்கள் கிடைத்தில !

## திருச்சோற்றுத்துறை

திருச்சிற்றம்பலம் பண் - கௌசிகம் 7-ம் திருமுறை

அழனீ ரொழுகி யனைய சடையும், உழையீ ருரியு முடையா னிடமாம்
கழைநீர் முத்துங் கனகக் குவையும், சுழனீர்ப் பொன்னிச் சோற்றுத் துறையே. (1)

இலையா லன்பா லேத்து மவர்க்கு, நிலையா வாழ்வை நீத்தா ரிடமாந்
தலையாற் றொழுந் தவத்தோர்க் கென்றுந், தொலையாச் செல்வச் சோற்றுத்துறையே. (9)

சுற்றார் தருநீர்ச் சோற்றுத் துறையுண், முற்றா மதிசேர் முதல்வன் பாதத்
தற்றா ரடியா ரடிநா யூரன், சொற்றா னிவைகற் றார்தன் பிலரே. (10)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—இறைவாது இடம் சோற்றுத்துறையே. இதனுள் இறை வாது இலக்கணங்கள் பலவும் பேசப்பட்டன. (பிள். திருநெல்விக்கா - பார்க்க).

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) அழல்நீர் ஒழுகி அனைய சடை - நெருப்பே உருகி நீர்போல் ஒழுகின்றாற்போலும் சிவந்த சடை ; செஞ்சடை ; உழை - மான் ; கழை - கரும்பு ; கழைநீர் முத்து - கரும்பினின்றும் விளையும் நீர்மையுடைய முத்து; சுழல் நீர் - சுழலும்படி அலைத்து வரும் நீர் ;—(2) பண்டைவினைகள் - மூல கன் மங்கள் முதலிய பழவினைகள் ; இடையறாத அன்பு - இடையில் எக்காலமும் அறுத லில்லாத அன்புடைய ;—(3) ஆலும் - அசைந்தாடும் ;—(4) பளிக்குத்தாரை... போல் நூல் - பவளம்போற் றிகழும் ; மார்பில் பூணூல் வளைந்து கிடத்தல் பவள மலையிற் பளிங்குத் தாரை கிடந்ததுபோல உள்ளதென்பது ; உரு உவமம் ;—(5) கூற்றுக்கு உதையும், ஒல்கா விதிக்கு வதையும் செய்த என்க. ஒல்குதல் - வளைதல். ஈண்டுத் தலைவணங்குதல் குறித்தது ; விதி - படைத்தற்றொழிலுடைய பிரமன் ; விதித்தல் - படைத்தல் ; விதி செய்பவனை விதி என்றார் ; வதை - சிரங்கிள்ளுதல் ; மைந்து - வல்லமை ; திதையும் - செறியும் ;—(6) பேதை - பேதையாகிய (பெண்) அம்மையைப் பாகமுடைய ; பேதைமையுடை என்றலுமாம் ; பேதைமையாவது கட லில் வந்த அமிர்தத்தைத் தாம் உண்ணாது அமரருக்கு ஈந்து. விடத்தைத் தாம் எடுத்து உண்டமை ; எரியைக் காலும் - எரிபோன்ற தளிர்களைக் காட்டித் தழைகின்ற ; சூதம் - மா ;—(7) சிறந்தார்...துறந்தார் - பற்றுக்களை விட்டோர் ;—(8) ஓமக் கனல் - ஓமத்தில் எழுந்து அவியுண்பது போன்று உண்ட என்பது குறிப்பு ; சேக்கை - பள்ளியறை ;—(9) இலை - அருச்சிக்கும் தழை ; நிலையா வாழ்வை நீத்தார் என்றதனால் நிலைத்த பெருவாழ்வு தருபவர் என்பது குறிப்பு ; தொலையாச் செல்வம் - அளவில்லாத சிவச் செல்வம் ; அற்றார் அடியார் - வேறு பற்று அற்றவர் களாகிய அடியவர்கள்.

தலவிசேடம்:—திருச்சோற்றுத்துறை - III-பக். ருருடு பார்க்க.

3224. பதிபலவும் - நம்பிகள் பதிகங்கள் கிடைத்தில !

திருக்கண்டியூர் - திருப்பூந்துருத்தி - திருவாலம்பொழில் - இவற்றிற்கு நம்பிகள் பதிகங்கள் கிடைத்தில !

திருவையாறு - நம்பிகள் இந்த யாத்திரையிற் பாடியருளிய பதிகமும் கிடைத் திலது ! "பரவும் பரிசு" என்ற பதிகம் பின்னர் அருளப்பட்டது. (3881 = கழறிற்- புரா - 134 பார்க்க.)

3227. அணைந்து திருக்கோ புரமிறைஞ்சி யன்பர் சூழ வுடன்புகுந்து
பணங்கொ ளரவ மணிந்தார்முன் பணிந்து வீழ்ந்து பரங்கருணைக்
குணங்கொ ளருளின் றிறம்போற்றிக் கொண்ட புளகத் துடனுருகிப்
புணர்ந்தவிசையாற் றிருப்பதிகம் "பொன்னார்மேனி"யென்றெடுத்து,

3228. "அன்னே யுன்னை யல்லாலியா னாரை நினைக்கே" னெனவேத்தித்
தன்னே ரில்லாப் பதிகமலர் சாத்தித் தொழுது புறம்பணைந்து
மன்னும் பதியிற் சிலநாள்கள் வைகித் தொண்ட ருடன்மகிழ்ந்து
பொன்னிக் கரையி னிருமருங்கும் பணிந்து மேல்பாற் போதுவார்,

3229. செய்ய சடையார் திருவானைக் காவி லணைந்து திருத்தொண்டர்
எய்த முன்வந் தெதிர் கொள்ள விறைஞ்சிக் கோயி லுட்புகுந்தே

ஐயர் கமலச் சேவடிக்கீ ழார்வம் பெருக விழுந்தெழுந்து
மெய்யு முகிழ்ப்பக் கண்பொழிநீர் வெள்ளம் பரப்ப விம்முவார், எ௲

3230. "மறைக ளாய நான்கு "மென மலர்ந்த செஞ்சொற் றமிழ்ப்பதிகம்
நிறையுங் காத லுடனெடுத்து நிலவு மன்பர் தமைநோக்கி
"இறையும் பணிவா ரெம்மையுமா ளுடையா" ரென்றென் றேத்துவார்
உறையூர்ச் சோழன் மணியாரஞ் சாத்துந் திறத்தை யுணர்ந்தருளி,

3231. வளவர் பெருமான் மணியாரஞ் சாத்திக் கொண்டு வரும்பொன்னிக்
கிளருந் திரைநீர் மூழ்குதலும் வழுவிப் போகக் கேதமுற
அளவி றிருமஞ் சனக்குடத்து ளதுபுக் காட்ட வணிந்தருளித்
தளரு மவனுக் கருள்புரிந்த தன்மை சிறக்கச் சாற்றினார். எஎ

3227. (இ - ள்) அணைந்து...புகுந்து - சேர்ந்து திருக்கோபுரத்தை வணங்கி அன்பர்கள் உடன் சூழ்ந்துவரத் திருக்கோயிலின் உள்ளே புகுந்து; பணங்கொள்... வீழ்ந்து - படத்தினையுடைய பாம்பினை அணிந்த இறைவரது திருமுன்பு பணிந்து நிலமுற வீழ்ந்து எழுந்து; பரங்கருணை...எடுத்து - அளக்கலாகாத கருணைத் தன்மையினை உட்கொண்ட பேரருளின் திறத்தினைத் துதித்துத் திருமேனி முழுதும் மயிர்க்கூச்செறிய உள்ளமுருகி இசையுடன் கூடிய திருப்பதிகத்தினைப் "பொன்னார், மேனி" என்று தொடங்கி, எங

3228. (இ - ள்) அன்னே...புறம்பணைந்து - "அன்னே! உன்னையல்லாவினி யாரை நினைக்கேன்" என்று துதித்து ஒப்பற்ற பெருமையினையுடைய பதிகமாலையினைச் சாத்தி வணங்கிப் புறத்தே அணைந்து; மன்னும்...மகிழ்ந்து - நிலைபெற்ற அத்திருப்பதியில் சிலநாள்கள் எழுந்தருளித் திருத் தொண்டர்களுடன் கூடி மகிழ்ந்தருளி; ; பொன்னிக் கரையின்...போதுவார் - காவிரியின் கரையில் இரண்டு பக்கமும் உள்ள பதிகளைப் பணிந்து மேற்குத் திசை நோக்கிச் செல்வாராகி; எச

3229. (இ - ள்) வெளிப்படை. சிவந்த சடையினை யுடைய இறைவரது திருவானைக்காவில் அணைந்து திருத் தொண்டர்கள் சேர முன்னே வந்து எதிர் கொள்ள வணங்கித் திருக்கோயிலினுள்ளே புகுந்து இறைவரது தாமரைபோன்ற திருவடிகளின் கீழே ஆசை பெருக விழுந்து எழுந்து திருமேனி முழுதும் உரோம புளகம் போர்ப்பக் கண்களினின்றும் ஆனந்த வெள்ளம் பாயத் தினைப்பாராகி, எ௫

3230. (இ - ள்) மறைகளாய...எடுத்து - "மறைகளாயின நான்கும்" என்று தொடங்கி விரிந்த செஞ்சொற்களாலாகிய தமிழ்ப் பதிகத்தினை நிறையும் பெருவிருப்பத்துடன் தொடங்கி; நிலவும்...ஏத்துவார் - நிலை பெறும் அன்பர்களைப் பார்த்து "இறையும் பணிவார் எம்மையு மாளுடையாரே" என்றென்றேத்துவார்; உறையூர்...உணர்ந்தருளி - உறையூர்ச் சோழரது மணியாரத்தை இறைவர் அணிந்து ஏற்றுக்கொண்டருளிய திருவருட்டிறத்தினை உணர்ந்தருளி, எசு

3231. (இ - ள்) வளவர் பெருமான்...கேதமுற - சோழ அரசர் மணியாரம் அணிந்து கொண்டபடியே காவிரியின் கொழிக்கும் அலைகளையுடைய நீரிலே மூழ்குதலும் அது நீரினுள் தவறி வீழ்ந்து போக அதனால் அரசன் வருத்தமுற; அளவில்...அணிந்தருளி - அளவில்லாத திருமஞ்சனக் குடத்தினுள் அது புகுத மஞ்சனம் ஆட்டியபோது அதனை இறைவர் அணிந்தருளி; தளரும்...சாற்றினார் - மனந் தளர்ந்திருந்த அவ்வரசனுக் கருள்புரிந்த தன்மையினைச் சிறப்பித்து ஏத்தியருளினார்.

இவ்வைந்து பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபுகொண்டன.

3227. (வி - ரை) பரங்கருணைத் தணங்கோள் அருள் - பரங்கருணையாவது அளவைகட் கெல்லாம் அப்பாற்பட்டது; பொருள் என்றபடி; "நினையா வென் னெஞ்சை நினைவிப்பானை" என்று அரசுகள் விதந்து பாராட்டிய அருளின் தன்மை; பரங்கருணையாய் முகிழ்த்த அருள்;

கொண்ட - திருமேனி முழுதும் இடங்கொண்ட.

புணர்ந்த இசை - பண் நட்டராகமாகிய பதிக இசை; இயல்பிற் றானே வந்து சொல்லோடு பொருந்திய என்பார் புணர்ந்த என்றார். 73

3228. (வி - ரை) "அன்னே...நினைக்கேன்" என - இது பதிகத்தின் மகுடமும் கருத்துமாம்; "யாரை நினைக்கேன்" என்றது இறைவர் "நினைக்க மறந்தாயோ?" என்ற சரித வரலாற்றுக்கு அகச்சான்றாகும்.

தன் நேரில்லாப் பதிகமலர் - தன்-தனக்கு; நேர் - ஒப்பு; இப்பதிகத்தின் ஒப்பற்ற தன்மை அதனை இந்நாளிலும் பெரிதும் மக்கள் விரும்பிப் பயின்று வருதலானு மறியப்படும். இப்பதிகத்தினுள் இறைவரை அன்னே, கேள், எம்மான், அண்ணா எனப் பலபடப் பாராட்டிய உரிமைத் திறம் காண்க.

பொன்னிக்கரையின் இருமருங்கும் - இதுவரை காவிரித் தென்கரை வழியே சென்றருளிய நம்பிகள், இறைவரால் நினைவிலூட்டப் பெற்ற இதன் பின், இருமருங்கும் சென்று வழிபட்டனர் என்பதாம்; இவ்வாறு சென்றருளிப் பணிந்த பதிகள், வடகரையில் திருஅன்பிலாலந்துறை, திருத்தவத்துறை, வடகரைத் திருமாந்துறை முதலியனவும், தென்கரையில் திருக்கானூர், திருநியமம், திருவேங்கூர் முதலியனவு மாம் என்பது கருதப்படும். இவற்றுக்கு நம்பிகள் பதிகங்கள் கிடைத்தில!

மேல்பால் - காவிரியின் வரவு நோக்கியவாறே மேற்குத் திசையில். போதுவார் - அணைந்து - என மேல் வரும் பாட்டுடன் கூட்டி முடிபுகொள்க. 74

### திருமழபாடி

திருச்சிற்றம்பலம் பண் - நட்டராகம்

பொன்னார் மேனியனே புலித் தோலை யரைக்கசைத்து
மின்னார் செஞ்சடைமேல் மிளிர் கொன்றை யணிந்தவனே
மன்னே மாமணியே மழ பாடியுள் மாணிக்கமே
அன்னே யுன்னையல்லா லினி யாரை நினைக்கேனே (1)

ஏரார் முப்புரமு மெரி யச்சிலை தொட்டவனை
வாரார் கொங்கையுடன் மழ பாடியுண் மேயவனைச்
சீரார் நாவலர்கோ னூ ரூரனுரைத்ததமிழ்
பாரோ ரேத்தவல்லார் பர லோகத் திருப்பாரே. (11)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—ஆசிரியர் 3228 காட்டியருளியபடி.

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) பொன்னார் மேனி - பொன் - பொன் நிறம்; பொன்போன்ற திருமேனி; "பொன்வண்ண மெவ்வண்ண மவ்வண்ண மேனி" (கழறிற்); மின்னார் செஞ்சடை - "பொலிந்திலங்கு மின்வண்ண மெவ்வண்ண மவ்வண்ணம் வீழ் சடை"; மிளிர் - சடையின் மேலும் விளங்கும்; மாணிக்கம் - தலச்சுவாமிப் பெயர் - "வயிர மணித்தூண்" என்ற குறிப்புப் பதிக முழுதும் குறித்தல் காண்க;—(2) கீளும் கோவணமும்; கேள் - சுற்றம்;—(3) எம்மான் - தந்தை; எம்மனை - தாய்; சுற்றம் என்ற பொருளில் வந்தன;

பிறந்தே இறந்து - பிறந்தும் இறந்தும் ;—(4) பண்டே...ஒழிந்தேன் - திருத் தொண்டத் தொகை அருளிய உட்கோளும் அடிமைத் திறமும் குறிக்கப் பட்டன ; தொடராமை - பிறவியில் மேலும் மேலும் வாராதபடி ;—(5) அருத்தம் - செல்வம் ; உள்ளீடு என்றலுமாம் ; தமிழ் - வீடுபேற்றுக் கேதுவாகிய தமிழ் ;—(6) நாளார் - காலம் ; ஆர்விகுதி சிறப்புக் குறித்த திணை வழுவமைதி ; மாளாநாள் - நித்தியமாகிய வீடு பேறு ;—(7) மைந்து - அழகு ; வலிமையுமாம்- (9) குறியே - குறிக்கொண்ட பொருளே ; " குறுமா ணுருவன் றற்குறி யாகக் கொண்டாடும் " (தேவா):—(10) கொங்கை - கொங்கையினையுடைய அம்மை.

தல விசேடம் :—திருமழபாடி - iii - பக் - கசசஈ பார்க்க.

3229. (வி - ரை) செய்ய - சிவந்த ; செம்மை தருகின்ற என்றலுமாம்.
எய்த - ஒரு சேர - ஒன்று கூட வர ; பொருந்த என்றலுமாம்.
விம்முதல் - அன்பு மீதூரத் திளைத்தலால் உடல் அசைதல். 75

3230. (வி - ரை) மறைகளாய நான்கும் - இது பதிகத் தொடக்கமாகிய முதற்குறிப்பு. அன்பர்...என்றென்று ஏத்துவார் - இது பதிகக் கருத்தும் குறிப்புமாம். "இறைவ னென்றடி சேர்வா ரெம்மையு மாளுடை யாரே" என்பதுமுதலாக அடியார் வணக்கமாகிய இக்கருத்தினைப் பதிகப் பாட்டுத்தோறும் காண்க; "எம்மையு மாளுடை யாரே" என்பது மகுடம் ; இப்பதிகம் நம்பிகள் தம்மை எதிர் கொள்ள வந்த அடியார்களை நோக்கி அருளியது என்பதனை ஆசிரியர் அறிவித்தபடி ; என்றென்று ஏத்துவார் - என்றென்று - பாட்டுத்தோறும் ; பலமுறையும் ; ஏத்துவார் - இஃது அடியாரைப் போற்றியபடி என்பதாம்.

உறையூர்ச்சோழன்...உணர்ந்தருளி - இச்சரித வரலாறு மேல் வரும் பாட்டில் விரிக்கப்படுவது. உணர்ந்தருளி - திருவுள்ளக் குறிப்பிற் கொண்டு அதனால் ; வினையெச்சம் காரணப்பொருளில் வந்தது. உணர்ந்தருளிச் சாற்றினார் என வரும் பாட்டுடன் முடிக்க. சோழன் - சோழனுடைய என ஆறும் வேற்றுமைத் தொகை. ஆரம் - ஆரம் - ஆரத்தை ; இரண்டனுருபு விரிக்க. சாத்தும் - இறைவர் அணிந்துகொள்ளும் ; " ஆரங்கொண்ட " (பதிகம்) பதிகத்துள் 7 வது திருப் பாட்டில் இச்சரிதம் போற்றப்படலால் ஆசிரியர் இதனை விதந்தெடுத்துக் காட்டி யருளினார். இறையும் - சிறிதேனும்.

உறையூர்ச் சோழன் - உறையூர் திருவானைக்காவின் அண்மையில் உள்ளது ; சோழரது தலைநகரங்களுள் ஒன்று. 76

3231. (வி - ரை) இத்திருப்பாட்டுத் " தாரமாகிய பொன்னி " என்ற பதிகத் திருப்பாட்டினை விரிவுரை செய்து, அதிற்குறித்த இத்தலச் சரித வரலாற்றினை விளக்கியது.

சாத்திக்கொண்டு - அணிந்துகொண்டபடியே.
கிளருந் திரைநீர் - அலைப்பெருக்குடைய நீர்ப்பருவக் குறிப்பு.
வழுவிப்போக - நழுவி நீரினுள் வீழ்ந்துவிட.
கேதமுற - அரசன் வருந்த ; கேதம் - வருத்தம்.
அளவில்-அளவு படுத்தி அறியமுடியாத பெருமையுடைய. திருமஞ்சனப் பணிக் கருவிச் சிறப்பு.

அதுபுக்கு ஆட்ட......அருள் புரிந்த தன்மை - ஆரம் நழுவியபோது அரசன் " இறைவரே நீர் இதனை ஏற்றுக்கொண்டருளுக " என வேண்ட, அவ்வாறே அதனைத் திருமஞ்சனக் குடத்துட் புகச்செய்து அத்திருமஞ்சன நீரினை ஆட்டும்

போது நீரினுடனே அதனைத் தமது திருமேனியில் அணிந்தருளினார் என்பது "நின் மல ! கொள்ளென வாங்கே, ஆரங்கொண்ட" என்ற பதிகத்தாற் பெறப்படும்.

சிறக்க - யாவரும் சிறப்பா யறியும்படி ; சாற்றினார் - எடுத்துப் போற்றினார். தலைவராலாருதலின் இறைவரது அருளின் பெருமை குறிக்க அதனைச் சிறக்கச் சாற்றினார் என்பது.

திருவாரம்—என்பதும் பாடம். 77

திருவானைக்கா

திருச்சிற்றம்பலம்                                        பண் - காந்தாரம்

மறைக ளாயின நான்கும் மற்றுள பொருள்களு மெல்லாந்
துறையுந் தோத்திரத் திறையுந் தொன்மையு நன்மையு மாய
அறையும் பூம்புன லானைக் காவுடை யாதியை நாளும்
இறைவ னென்றடி சேர்வா ரெம்மையு மாளுடையாரே (1)

தார மாகிய பொன்னித் தண்டுறை யாடி விழுத்தும்
நீரி னின்றடி போற்றி நின்மல கொள்ளென வாங்கே
ஆரங் கொண்டவெம் மானைக் காவுடை யாதியை நாளும்
ஈர முள்ளவர் நாளு மெம்மையு மாளுடை யாரே. (7)

ஆழி யாற்கரு ளானைக் காவுடை யாதிபொன் னடியின்
நீழ லேசர ணாக நின்றருள் கூர நினைந்து
வாழ வல்லவன் றொண்டன் வண்டமிழ் மாலைவல் லார்போய்
ஏழு மாபிறப் பற்று மெம்மையு மாளுடை யாரே. (10)

திருச்சிற்றம்பலம்

பதிகக்குறிப்பு :—ஆசிரியர் முன் (3230) காட்டியருளியவாறு கண்டு கொள்க

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) துறையும் தோத்திரம் - துறைகளிலுமாகிய சோத்திரம் ; தோத்திரத்து இறை - தோத்திரங்களுக் கெல்லாம் நுதலிய பொருளாகிய முதல்வன் ; வேதங்களும் எவ்வகைக் கீதங்களும் எப்பொருளையேனும் எத்தெய்வத்தையேனும் சொல்லினும் அவற்றிற்கெல்லாம் பொருளாகும் முழுமுதல்வன் ; இறையும், தொன்மையும், நன்மையும் ஆகிய ஆதி - என்று கூட்டுக : நாளும் சேர்வார் என்க. இறைவன் என்று - இவரே முழுமுதல்வன் என்றுட் கொண்டு; சேர்வார்-சேரும் அடியவர்கள் ; "எதிர் கொள்ள வந்து நிலவும் அன்பர்" (3230) ; எம்மையும் - உம்மை ஆட்கொள்ளத் தகுதிபெறாத எம்மையும் என்று இழிவு சிறப்பும்மை ;—(2) வங்கம் - கப்பல் ; வங்கமேவிய என்றது வேலைகளின் பொதுவியல்பு ; வஞ்சகர்கள் - தேவர்கள், முதல்வனாதலின் முதலில் வந்தவிடத்தினை நீ உண்டபின் நாங்கள் பின்னர் எழுந்த அமுதினைப் பின் உண்போம் என்று வேண்டிய நயப்பாடு வஞ்சம் எனப்பட்டது ; அடராமை - வருத்தாதபடி ;—(3) நேரிழை - கங்கை ; நோன்றை...அரவங்கள் - உம்மைத் தொகை ; ஏலுமாறு-பொருந்திய வகையால் ;—(4) பந்தம் - தன்னின் நீங்காது பிணிப்பவன் ;—(5) தீ கணையாக அரவம் நாணாகக், கல் சிலையாகக் கொண்டு என்க ; கல் - மேரு மலை ; வளையும் சிலை - வளையும் வில் ; இதனால் வளையாத கல்லினை என்பது கொள்ளக் கிடக்கும் நயம் காண்க ;—(6) விலையிலி - விலை அளவு

படாத ; கலன் - ஈண்டு எலும்பு - பாம்பு முதலியவற்றை அணியாக் கொண்டமை குறித்து நின்றது;—(7) தாரம் - ஆதாரம் என்பது தாரம் என நின்றது ; தாரகம் - தாங்குவது என்க. விழுத்துநீர் - விழவிட்ட ஆற்றுநீர் ; " நின்மல கோன் " என இறைவரே இதனைத் தேவரீரே ஏற்றுக்கொள்ளுக என்று ; ஆங்கே - அவ்வாறே ; இது தல சரிதங்களுள் ஒன்று ; மேல் ஆசிரியர் (3231) இதனை விதந்தெடுத்துக் காட்டியமை இதன் சிறப்பினை யுணர்த்தும் :—(8) உரவம் - வலிமை ; இரவும்—பகலும்-இறைவரை எப்போதும் மறவாதேத்துதல் வேண்டும் என்பது;—(9) காலனைக் காலாற் கலங்கச் செய்வானை என்றும், காமனைக் கலங்கக் கண் சிவப்பானை என்றும் உரைக்க ; கலங்க என்பதனை ஈரிடத்தும் கூட்டுக ; காலனும் காமனும் உயிர் போய்ப் பின் உயிர்ப்பிக்கப் பெற்றபடியால் நிலைகலங்குதல் மட்டும் நிகழ்ந்ததென்பது குறிப்பு ; அலங்கல் - அழகு ; போதும் - அலைத்துவரும் ;—(10) ஆழியான் - சக்கரமுடைய விட்டுணு :

தலவிசேடம் :—திருவானைக்கா—iii - பக் - ருகரு பார்க்க.

3282. சாற்றி யங்குத் தங்குநாட் டயங்கும் பவளத் திருமேனி
நீற்றர் கோயி லெம்மருங்குஞ் சென்று தாழ்ந்து நிறைவிருப்பாற்
போற்றி யங்கு நின்றும்போய்ப் பொருவிலன்பர் மருவியதொண்
டாற்றும் பெருமைத் திருப்பாச்சி லாச்சி ராமஞ் சென்றடைந்தார். எஅ

(இ - ள்) சாற்றி...நாள் - முன் கூறிய தமிழ்மாலை சாற்றி அத்திருப்பதியில் தங்கியிருக்கு நாட்களிலே ; தயங்கும்...போற்றி - விளங்கும் பவளம் போன்ற திருமேனியில் திருநீற்றினையுடையவரது திருக்கோயில்கள் எப்பக்கத்தும் உள்ளனவற்றைச் சென்று பணிந்து நிறையும் விருப்பினாலே துதித்து ; அங்கு நின்றும் போய் - அங்கிருந்து மேல்சென்று ; பொருவிலன்பர்...அடைந்தார் - ஒப்பற்ற தொண்டர்கள் பொருந்திய திருத்தொண்டு செய்யும் பெருமையுடைய திருப்பாச்சிலாச்சிராமத்தினைச் சென்று அடைந்தருளினர்.

(வி - ரை) சாற்றி - முன் பாட்டிற் கூறியவாறு பதிகம் சாற்றி முற்றுவித்து ; பவளத் திருமேனி நீற்றர் - பவளம் போன்ற திருமேனிமேல் திருநீற்றினை உடைய இறைவர். " பவளம்போன் மேனியிற் பால் வெண்ணீறும் " (தேவா.)

கோயில் எம்மருங்கும் சார்ந்து —இவை திருச்சிராப்பள்ளி, உறையூர் (திருமூக்கீச்சரம்), திருக்கற்குடி முதலாயின என்பது கருதப்படும்.

போற்றி - இப்பதிகங்கள் கிடைத்தில !

பொருவில் - ஒப்பற்ற ; பொரு - ஒப்பு.

பொருவில்...பெருமை - இப்பதியில் வழி வழியாய்ச் சிவனடிமைத் திறத்து நின்ற கொல்லிமழவன் சரிதக்குறிப்பும், அவர் போன்ற தொண்டர்களின் பணியும் பெற வைத்தார். ஆளுடைய பிள்ளையார் புராணம் (2209—2218) பார்க்க. அதன் முன்னும் அந்நாள் முதல் இந்நாள் வரையும் தொண்டர் பணிவிடைகளின் பெருமை இப்பதியில் நிகழ்ந்து வந்ததென்பது தொண்டாற்றும் பெருமை என்பதனாற் பெறவைத்தார். இனி, நம்பிகளால், முன்னிலைப் படுத்தி இங்குப் பதிகம் பாட நின்ற பெருமையுடைய தொண்டர்களின் தன்மைக் குறிப்புமாம். 78

3283. சென்று திருக்கோ புரமிறைஞ்சித் தேவர் மலிந்த திருந்துமணி
முன்றில் வலங்கொண் டுள்ளணைந்து முதல்வர் முன்னம் வீழ்ந்திறைஞ்சி

நன்று பெருகும் பொருட்காத னயப்புப் பெருக நாதரெதிர்
நின்று பரவி நினைந்த பொரு ளருளா தொழிய நேர்நின்று, எசு

3234. அன்பு நீங்கா வச்சமுட னடுத்த திருத்தோ ழமைப்பணியால்
பொன்பெ றாத திருவுள்ளம் புழுங்க வழுங்கிப் புறம்பொருபால்
முன்பு நின்ற திருத்தொண்டர் முகப்பே முறைப்பா டுடையார்போல்
என்பு கரைந்து பிரானார்மற் றிலையோ?" வென்ன வெடுக்கின்றார்.

வேறு

3235. நித்தமு நீங்கா நிலைமையி னீங்கி
நிலத்திடைப் புலங்கெழும் பிறப்பால்
உய்த்தகா ரணத்தை யுணர்ந்துநொந் தடிமை
யொருமையா மெழுமையு முணர்த்தி
"யெத்தனை யருளா தொழியினும் பிரானா
ரிவரலா தில்லையே?" யென்பார்
"வைத்தனன் றனக்கே தலையுமென் னாவு"
மெனவழுத் தினார்வழித் தொண்டர். அக

3233. (இ - ள்) சென்று...வீழ்ந்திறைஞ்சி-சென்று திருக்கோபுரத்தினை வணங்கித் தேவர்கள் பெருகியுள்ள திருந்தப்பாடுடைய அழகிய திருமுற்றத்தினை வலமா வந்து உள்ளே அணைந்து இறைவரது திருமுன்பு நிலமுற விழுந்து வணங்கி ; நன்று ...பரவி - நன்மை பெருகும் பொருள் பெறும் காதலினால் அவ்விருப்பம் பெருக இறைவரெதிரே நின்று துதித்து ; நினைந்த...நேர்நின்று - தாம் எண்ணிய பொருளினை இறைவர் அருளாதொழியத் திருமுன்புக்கு நேரே நின்று, எசு

3234. (இ - ள்) அன்பு நீங்கா...பணியால் - அன்பு மாறாத அச்சத்துடனே பொருந்திய திருத்தோழமைப் பணிவிடையினாலே ; பொன் பெறாத...அழுங்கி- தாம் விரும்பியவாறே இறைவர்பாற் பொன் கிடைக்கப் பெறாத திருவுள்ளத்தில் புழுக்கம் நிகழ வருந்தி ; புறம் பொருபால்...உடையார்போல் - புறம்பு நின்ற திருத்தொண்டர்களை முகநோக்கி முறைப்பாடு உரைப்பவர் போல ; என்பு... எடுக்கின்றார் - எலும்பும் கரைந்துருகப் "பிரானார் மற்றிலையோ?" என்ற கருத்துட் கொண்ட மகுடம் அமையப் பதிகத்தினைத் தொடங்குகின்றாராய், அO

3235. (இ - ள்) நித்தமும்...நொந்து - ஒருநாளும் நீங்குதலில்லாத நிலைமையின் (திருக்கயிலையினின்றும்) நீங்கி இந்நிலத்தினிடத்தின் அறிவுடன் பொருந்தும் பிறவியினிடத்துச் செலுத்திய காரணத்தை மனத்தில் உணர்ந்து வருந்தி ; அடிமை... உணர்த்தி - அடிமைத் திறத்தின் ஒருமைப்பாடானது எழுபிறப்பிலும் தொடரும் நிலையினை எடுத்துக் கூறி ; "எத்தனை...என்பார் - எவ்வளவும் திருவருள் புரியா தொழிந்தாலும் பிரானார் இவரல்லாது இல்லையோ?" என்று முடிப்பாராய் ; வைத்தனன்...வழித் தொண்டர் - "வைத்தனன் றனக்கே தலையுமென் நாவும்" என்று தொடங்கித் துதித்தருளினர் வழித்தொண்டராகிய நம்பிகள். அக

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3233. (வி - ரை) தேவர் மலிந்த திருந்து மணிமுன்றில் - மலிதலாவது உட்புக்குச் சேவை செய்வதற்குக் காலம் பார்த்தும், உத்தரவை எதிர்நோக்கியும் கூடிக் காத்துக் கிடத்தல்.

நன்று பெருதும் பொருள் - நன்மை பெருகும்படி சிவ புண்ணியமாகிய மாகேசுர பூசைக்கும் ஆண்டவர் திருவிழாவுக்கும் பயன்படும் பொருள்.

கர்தல் நயப்பு - காதலினால் வந்த விருப்பம்.

பரவி - பரவிய பின்னும் ; உம்மை தொக்கது.

நினைந்த பொருள் - நினைந்து விரும்பி வேண்டிய பொருள்.

அருளாதொழிய - இறைவர் அருள்புரியாது நிற்க.

நேர் நின்று - திருமுன்பு நின்றவாறே - திருமுன்பு விட்டகலாது அங்கிருந்தபடியே. 79

3234. (வி - ரை) அன்பு நீங்கா அச்சமுடன் - அன்பு நிகழ்ந்தபோது அச்சமும், அச்சம் வந்தபோது அன்பும் நிலைபெறா ; அவ்வாறன்றி ஈண்டு இரண்டும் ஒருங்கே நிகழ்ந்தன. " அச்சந், தாய்தலை யன்பின் முன்பு நிற்குமே " (574) என்ற கருத்துக் காண்க.

அடுத்த தோழமைப் பணியால் - பதிகத்தின் வரும் கருத்து ; தோழமை உரிமைபற்றி எழுந்தது என்பதாம்.

பொன் பெறாத - தாம் வேண்டியவாறு பொருள் பெறாத காரணத்தால் ; பொன் - அந்நாளில் பொற்காசுகளே நாணயமாக வழங்கி வந்தன என்பது சரித வரலாற்றாலறிக.

புறம் பொருபால்...உடையார்போல் - இறைவரது திருமுன்பு நின்றபடியே அவரது முகமாகப் பாராமல், அப்புறம் திரும்பிப் புறம்பு நின்ற தொண்டர்களை முக நோக்கி முறைப்பாடு அறிவிப்பார்போல ; முறைப்பாடு உடையார் - முறை அறிவிப்பார் ; முகப்பே - முக நோக்கி.

என்பு கரைந்து - அன்பினால் எலும்பும் கரைய உருகி.

" பிரானார் மற்றிலையோ ?" என்ன - இது பதிகக் கருத்தும் குறிப்புமாகிய மகுடம் ; இதன் கருத்தினை மேல்வரும் பாட்டில் ஆசிரியர் விரித்தல் காண்க.

எடுக்கின்றார் - பதிகம் தொடங்குகின்றாராகி ; முற்றெச்சம். எடுக்கின்றார் - உணர்த்தி - என்பார் - வழுத்தினர் என மேல்வரும் பாட்டுடன் முடிக்க. 80

3235 (வி - ரை) பதிகப்பாட்டின் யாப்பின்படியே சரிதம் கூறத் தொடங்கும் யாப்பமைதி காண்க. இஃது ஆசிரியரது கவி மரபுகளுள் ஒன்று.

நித்தமும்...உணர்ந்து நொந்து - திருக்கயிலாயத்தினின்றும் மண்ணிலே வந்த பிறவியின் காரணத்தை உணர்ந்து மனம் வருந்தி ; இவ்வரலாறு திருமலைச் சிறப்பிலும் தடுத்தாட் கொண்ட புராணத்திலும் விரித்துரைக்கப்பட்டது.

நித்தமும் நீங்கா நிலைமையின் - நீங்குதலாவது, திருமேனியிருப்பினாலே பிரியினும் நினைவினாலே ஒருபோதும் பிரியா நிலையிற் பிரிதல் ;-இது கயிலையினின்றும் பிரிந்து வரும்போது "மையன் மானுட மாய்மயங் கும்வழி யைய னேதடுத் தாண்டருள் செய்யென " (38) வரங் கேட்டு அவ்வாறே அருளப் பெற்றுப் போந்த வரலாற்றினாலறியப்படும் ; இவ்வாறன்றி நித்தமு நீங்கா நிலைமையாகிய திருக்கயிலைத் திருத்தொண்டி னிலையினின்றும் நீங்குதல் என்றுரைத்தனர் முன்னுரைகாரர்கள் ;

நிலத்திடைப் புலங்கெழும்பிறப்பால் உய்த்த காரணத்தை உணர்ந்து நொந்து - புலங்கெழுதல் - இவ்வுலக நினைவினால் மூடப்படுதல் ; உய்த்த - செலுத்திய ; "தென்புவிமீது தோன்றி...அணைவா யென " ஆணையிட்ட ; பிறப்பால் - பிறவியிலே ; ஆல் என்ற மூன்றனுருபு ஏழனுருபின்கண் வந்தது ; உருபு மயக்கம் ; காரணமாவது " மாதவஞ் செய்த தென்றிசை வாழ்ந்திடத், தீதிலாத் திருத்தொண்டத் தொகை தா " (35) என்பது ; " மாதர் மேன்மனம் போக்கிட " என்றது

அதன் வழித்தாய் வந்த துணைக்காரணம் ; காரணத்தை உணர்ந்து நோதலாவது தென்றிசை வாழ்ந்திடவுள்ள யாத்திரைகளும் அடியார் பணிகளும் நிகழவும், குறித்த இருமணங்களுள் எஞ்சி நின்ற திருமணம் நிகழ்ந்திடவும் உள்ள மேற்சரித வரலாறுகள் நடைபெறுதற் கின்றியமையாத பொருள் அருளப்பெறுது வருந்துதல்.

அடிமை ஒருமையாம் எழுமையும் உணர்த்தி - அடிமை ஒருமை - அடிமைத் திறத்தில் இரண்டுற மனம் வையாது சிவனோடு ஒன்றித்து நின்ற ஒருமைப்பாடு ; எழுமையும் - எழுவகைப் பிறவியின் கண்ணேயும் ; உணர்த்தி - அடியார் மாட்டு உரைப்பார் போன்று இறைவரிடம் விண்ணப்பித்து ; ஒருமையாம் எழுமையு மடிமைத்திறம் இப்பதிகத்துட் பாட்டுத்தோறும் கண்டுகொள்ளத் தக்கது. 5-8-10-11-பாட்டுக்கள் பார்க்க ; " உய்த்தனன் தனக்கே திருவடிக் கடிமை யுரைத்தக்கா லுவமனே யொக்கும் " என்ற முதற்பாட்டின் கருத்தினை எடுத்துக் காட்டும் வகையால் விரித்தபடி ; பதிகம் 10-வது திருப்பாட்டுச் சிறப்பாய் எடுத்துக் காட்டப் பட்டது.

எத்தனை...என்பார் - இது பதிகக் கருத்தாகிய குறிப்பு. எத்தனை - எத்தனையும் ; முற்றும்மை தொக்கது ; " ஏழு பிறவியிலும் உணர்த்திச் சிறிதும் அருளா தொழியினும் " என்றுரைப்பாரு முண்டு.

வைத்தனன்...என - இது பதிகத் தொடக்கமாகிய முதற் குறிப்பு.

வழித் தொண்டர் - திருக்கயிலைத் தொண்டின் றொடர்ச்சியும், நம்பிகள் அவதரித்த மரபு " மாதொரு பாகனார்க்கு வழிவழி யடிமை செய்யும் " மரபாதலும் குறிப்பு. வன்றொண்டர்—என்பதும் பாடம். 81

## திருப்பாச்சிலாச்சிராமம்

திருச்சிற்றம்பலம் பண் - தக்கராகம்

வைத்தனன் றனக்கே தலையுமென் னாவு நெஞ்சமும் வஞ்சமொன் றின்றி
உய்த்தனன் றனக்கே திருவடிக் கடிமை யுரைத்தக்கா லுவமனே யொக்கும்
பைத்தபாம் பார்த்தோர் கோவணத் தோடு பாச்சிலாச் சிராமத்தெம் பரமர்
பித்தரே யொத்தோர் நச்சில ராகி லிவரலா தில்லையோ பிரானார் (1)

ஏசின வல்ல விகழ்ந்தன வல்ல வெம்பெரு மானென்றெப் போதும்
பாயின புகழான் பாச்சிலாச் சிராமத் தடிகளை யடிதொழப் பன்னாள்
வாயினாற் கூறி மனத்தினா னினைவான் வளவய னாவலா ரூரன்
பேசின பேச்சைப் பொறுக்கிலா ராகி லிவரலா தில்லையோ பிரானார் (12)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—ஆசிரியர் முன் (3235) காட்டியருளியவாறு கண்டுகொள்க;— குறிப்பு : (1) இப்பதிகம் இறைவர் திருமுன்பு நின்றவாறே புறம்பு நின்ற அன்பர்களை முகநோக்கி முறைப்பாடு உரைப்பார்போல் அருளிச்செய்யப்பட்டது ; (3234) ; இவரலாது - என்ற அணிமைச் சுட்டினால் நம்பிகள் அணிமையில் நின்று சுட்டிக் கூறிய திறம் வெளிப்பட உணரப்படும் ; (2) இப்பதிகம் 12 திருப்பாட்டுக் களைக்கொண்ட சிறப்புடையது.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) வைத்தனன் றனக்கே தலையும் என் நாவும் நெஞ்சமும் - " வாழ்த்த வாயு நினைக்க மடநெஞ்சுந் தாழ்த்தச் சென்னியுந் தந்த தலைவனை " (தேவா) ; தனக்கே-ஏகாரம் பிரிநிலை ; "நித்தமுநீங்கா நிலைமை" (3235) என்ற கருத்து ; வைத்தனன் - வைத்தலாவது படைத்தளித்தல் ; " பிறவிதானும்

வருத்தது" (சித்தி); உவமனே ஒக்கும் - உவமை யளவா யொழியும்; பைத்த - பையினை உட்கொண்ட; ஓர் - ஒருசிறிதும்; நச்சிலர் - விருப்பமில்லார்; இவரலா தில்லையோ பிரானார் - இவர் எங்கெங்கு முள்ளவராதலின் வேறு இவர் விளங்கும் இடங்களிலும் பெறுவேன் என்பது குறிப்பு; பிரானார் - அருள்தந் தாட்கொள்ளும் தலைவர்;—(2) அடிகள் - மிக்க பெருமை யுடையாரைக் குறிக்கும் சிறப்பு மொழி; பின்னையே - இப்போதருளாது பின் காலத்திலே; "பின்னை யென்னார் பெருமா னடிகளே" (தேவா);—(3) உற்ற - பயன் கைவரப்பெற்ற; உள்ளமே - எண்ணிய அளவே; "காதல் நயப்புப் பெருக" "நினைந்த" (3233); அன்னம் சூழ்தரு - போயிகை என்க; பெற்றபோது - பதிகம்பாடி விண்ணப்பித்தபோது;—(4) நாச் சில...என்கிலர் - இவர் நமர் - இவர் பிறர் என்றும், இது நன்று - இது தீது என்றும் நாவினால் சில மொழிகளாலேனும் கூறுவாரலர்; பூச்சு-விளக்கமும்; சிறப்பு உம்மை தொக்கது; பலரையும்...தரகிலர் - பலர்க்கு அருள்பவர்; எனக்கு ஒரு பேச்சுமிலர்; நினைந்த தொன்றைத் தருவதுமிலர்;—(5) எயில் - மதில்; வாட்டிய - அழித்த; புரிந்தவந்நாளே - இடைவிடாது நினைந்து சொல்லிய அந்நாளிலேயே; அடிமை-புரிந்த - என்க; புரிதல் - இடைவிடாது சொல்லுதல்; "இறைவன் பொருள் சேர் புகழ்புரிந்தார்" (குறள்); போந்நாள் வீழநாளாகி - வீணே கழிந்து இறப்பதற் கேதுவா யொழிகின்ற நாள் சிவனை விரும்பிய நாளாக ஆகி; போது நாள் - சாதல் நாள்; வீழநாள் - விரும்பும்நாள்; வீழ்தல் - விரும்புதல்; ஆகி - ஆதலினாலே; "இருள்சேர் இருவினையும் சேரா" என்ற திருக்குறட் கருத்தும் சொல்லும் பொரு ளும் காண்க; இறைப்போதில் - சிறிய காலத்திலே; இறை - சிறிது; கணத்திற் பிரிந்து போதல்; விரைவாய்ப் போதல் என்றும், இறைப் போதாயினும் பிரிதல் என்றும் உரைக்க நின்றது; யாது சொன்னாலும் - நினைந்த அளவிலே அருள்பவர் அடியேன் மறவாது எத்தனையும் சொன்னாலும் என்பது குறிப்பு;—(6) செடித் தவம் - பொய்த்தவம்; அடித்தவம் - வழிவழி யடிமை செய்யும் தவம்; ஆவதும் - அவ்வாறாவதனையும்; பிடித்த வெண்ணீறே - "பெருந்தவத் தோர்களுக் கெல்லாம் ஆசை கெடுப்பது நீறு" (தேவா) என்னும் தன்மையே பொருந்திய திருநீற்றினையே; அணியும் தவத்தவர்களுக்குப் பிறிதொன்றிலும் ஆசையின்றித் தன்னையே பற்றச் செய்யும் திருநீற்றினையே இவர் பூசியும், நான் அடித்தவமல்லாரையும் ஆரையுமறி யேன் ஆவது மறிந்தும் இவ்வாறு அருளாது புறக்கணிப்பதாகில்; பிடித்த - அத் தன்மை கொண்ட; அடியார் பற்றாகப் பிடித்த என்றலுமாம்;—(7) மெய்யரே யொத்தோர் போய் செய்வதாகில் - பற்றுக் கோடாகக் காட்டிப் பற்றுத்தரா தொழியில்;—(8) நிணம் - மாமிசம்; நெஞ்சமே - சிவன்பாலன்பு கொண்ட மனமே; தஞ்சம் - பெறத் தக்க - அடையத் தக்க - உறுதிப் பொருள்; கணம் - ஒவ் வொரு கணமும்; முற்றும்மை தொக்கது; படிந்து - வணங்கி; நம்பிகளின் கூர்ந்த அன்பு நிலைக்குச் சிறந்த அகச்சான்று; 5-6-8-9-10-11 பாட்டுக்களுமிவ்வாறே காண்க. பணம் - படம்; நாக மணி என்றலுமாம்; பிணம்...ஆடுவதாகில் - உலக நிலையாமையினையும் தமது நிலைத்த தன்மையினையும் காட்டக் காட்டிலாடுவார், நிலையாமையினை உணர்ந்து சிவனையே பற்றி ஒழுகும் எனக்கு அருள வேண்டும் என்பது குறிப்பு;—(9) குழைத்து - நெஞ்சமுருக; இழைத்தநாள் கடவார் - இழைத்தநாள் - குறித்த ஆயுள்நாளின் எல்லை; கடவார் - அவ்வெல்லையினைக் கடக்க விடமாட்டார்; பிழைத்தது பொறுத்து ஒன்று ஈகிலராகில் - நினைந்து வேண்டிய தனைத் தாராமைக்கு என் பிழை காரணமாகில் அதனைப் பொறுத்து என்க;—(10) துணிப்படும் உடை - உரிவையுடை; துணிப்படும் - துண்டப்படுத்திப் பெற்ற -

பிணிப்பட ஆண்டு - அடியான் என்று பிணித்து - கட்டுப்படுத்தி ஆட்கொண்டு; தடுத்தாட்கொண்ட வரலாற்றின் குறிப்பு. பணிப்பு - அருள் செய்து வழிப்படுத்தல் ;—(11) ஒருமையே...உருதும் - இக்கருத்தை ஆசிரியர் முன் (3235) "அடிமை ஒருமையா மெழுமையும்" என விரித்தமை காண்க ; அருமையார்ம் புகழார் - பேரடியார் என்பது ; ஆளுடைய பிள்ளையாரின் இத்தல வரலாற்றுக் குறிப்புமாம் ; பெருமைகள் பேசி - தடுத்தாட்கொண்ட குறிப்பு ; சிறுமைகள் செய்யில் - வேண்டியும் அருளாமை ;—(12) ஏசின...பாயின புகழான் - பதிகக் குறிப்பு ; ஏச்சுப்போலக் காணப்படினும் புகழ் பரவியதேயாம் என்றபடி ; பாயின - பரவின ; பேசின - இகழ்ச்சிக் குறிப்பால் பேசின ; ஏச்சு - மிக்க இகழ்ச்சி வெளிப்படும் பேச்சு ; 3236 பார்க்க.

தல விசேடம் :—திருப்பாச்சிலாச்சிராமம் - முன் ஆளுடைய பிள்ளையார் புராணத்துரைத்தவை பார்க்க. (2217 - 2218).

3236. இவ்வகை பரவித் திருக்கடைக் காப்பு 'மேசின வல்ல'வென் றிசைப்ப
மெய்வகை விரும்பு தம்பெரு மானார் விழுநிதிக் குவையளித் தருள
மைவளர் கண்டர் கருணையே பரவி, வணங்கி,யப் பதியிடை வைகி
எவ்வகை மருங்கு மிறைவர்தம் பதிக ளிறைஞ்சியங்கிருந்தனர்சிலநாள்.

(இ - ள்) இவ்வகை...இசைப்ப - இவ்வாறு துதித்து "ஏசின வல்ல" என்று திருக்கடைக் காப்பும் சேர்த்திப்பாட ; மெய்வகை...அளித்தருள - மெய்யன்பினையே விரும்பும் தமது பெருமானார் தூய நிதிக்குவையினை அளித்தருளவே ; மைவளர்...வைகி - திருநீலகண்டராகிய இறைவரது பெருங்கருணையினையே துதித்து வணங்கி அந்தப் பதியினிடத்து எழுந்தருளி ; எவ்வகை...சிலநாள் - பக்கத்தில் எப்பாலும் உள்ள இறைவரது பதிகளைச் சென்று வணங்கி மீண்டும் அங்கு எழுந்தருளிச் சில நாட்கள் இருந்தருளினர்.

(வி - ரை) இவ்வகை - முன் இரண்டு பாட்டுக்களிலும் கூறிய வகையினாலே; திருக்கடைக்காப்பும்...இசைப்ப - முன் பாட்டுக்களில் "இவரலாதில்லையோ பிரானார்" என்று ஏச்சும் இகழ்ச்சியும்படப் பாடியதுடன், திருக்கடைக் காப்பிலும் அதற்கு மாறாக அல்ல என்று இசைப்ப என்று, உம்மை இறந்தது தழுவிய எச்சவும்மை ; அதற்கு மாறாக என்பது இசையெச்சம்.

மெய்வகை விரும்பு தம்பெருமானார் - மெய்வகை - மெய்யன்பின் நிலை ; மொழிகளின் நிலையன்றி உள்ளத்தின் மெய்ம்மை நிலையினையே ; பிரிநிலை ஏகாரம் தொக்கது ; மொழிகளின் நிலையன்றி என்பது இசையெச்சம்.

தம்பெருமானார் - பிணிப்பட வாண்டு ஏவலாளராகக் கொண்ட தலைவர் ; (பதிகம். 10)

கருணையே - முன்னர்த் தாழ்த்த அருளின்மையின்றித் திருவுளத்துட்கொண்ட கருணையினையே ; இங்குக் கருணையாவது பாடப் பணித்துப் பாடல் கேட்டு மகிழ்தல்; "அருச்சனை பாட்டேயாகும்" (216) "பித்தனென்றே பாடுவாய்" (219) என்ற முற்சரித வரலாறுகள் இங்கு நினைவு கூர்தற்பாலன.

எவ்வகை மருங்கும் இறைவர்தம் பதிகள் - இதுவரை போந்தது போல மேற்கு நோக்கியே செல்லாது பலபக்கமாகவும் காவிரியினிருகரையாகவும் சென்றருளினர் என்பது ; இவை இன்னவென்று தெரியக்கூடவில்லை ; திருப்பாச்சிலாச்சிராமத்தின் அருகிலும் சுற்றிலுமுள்ள பதிகள் போலும் ! 82





சுவாமி கோயில் - விமானத்துடன்

## திருப்பேரூர்

" மீகொங்கில் அணிகாஞ்சிவாய்ப் பேரூரர் பெருமான் "

—(நம்பி. தேவா. கோயில் - 10).



கோமுனிவர் ஸ்ரீ நடேசப்பெருமான் ஸ்ரீ சிவகாமசுந்தரி யம்மை பட்டிமுனிவர்

பாட்டுக்கள் - 3243—3244 ; பக்கங்கள் - சூ௦ - சூக (vi)

3237. அப்பதி நீங்கி யருளினாற் போகி
யாவினஞ் சாடுவார் நீடும்
எப்பெயர்ப் பதியு மிருமருங் கிறைஞ்சி
யிறைவர்பைஞ் ஞீலியை யெய்திப்
பைப்பணி யணிவார் கோபுர மிறைஞ்சிப்
பாங்கமர் புடைவலங் கொண்டு
துப்புறழ் வேணி யார்கழ றொழுவார்
தோன்றுகங் காளரைக் கண்டார். அரு

(இ - ள்) அப்பதி...போகி - அந்தப் பதியினை நீங்கி அருள்விடை பெற்றுச் சென்று; ஆவினஞ்சு...இறைஞ்சி - ஆனைந்து என்னும் பஞ்சகவ்வியத் திருமஞ்சன மாடியருளும் இறைவர் நீடியுள்ள எல்லாப் பதிகளையும் காவிரியின் இரண்டு கரைப் பக்கங்களிலும் சென்று வணங்கி; இறைவர்...எய்தி - இறைவரது திருப்பைஞ் ஞீலியினைச் சென்று சேர்ந்து; பைப்பணி...தொழுவார் - நச்சுப் பையினையுடைய பாம்பினை அணிந்த சிவபெருமானது கோயிற் றிருக்கோபுரத்தினை வணங்கிப் பக்கத் துச் சுற்றி வலங்கொண்டு வந்து பவளம் போன்ற சடையினையுடைய இறைவரது திருவடிகளைத் தொழுவார்; தோன்று...கண்டார் - முன்னே காட்சிப்பட நின்ற கங்காள வேடங்கொண்ட இறைவரைக் கண்டார்.

(வி - ரை) அருளினால் - அருள்விடை பெற்று.

எப்பெயர்ப் பதியும் இருமருங்கு - இவை, திருச்செந்துறை, திருவாலந்துறை, திருத்துடையூர், திருப்பாய்த்துறை முதலாயின என்பது கருதப்படும். நம்பிகளது பதிகங்கள் கிடைத்தில! எப்பெயர்ப்பதியும் - எல்லாப் பதிகளிலும்.

பைப்பணி - பை - நச்சுப் பை; பணி - பாம்பு. துப்பு - பவளம்.

தொழுவார்...கண்டார் - தொழுவாராகிய நம்பிகள், தம் முன்பு இறைவரைக் கங்காள வேடமுடையவராகக் கண்டனர். கங்காள வேடத்தாராக இவருக்கு இறை வர் எதிர் காட்சியளித்தனர். "ஆரணீய விடங்கரே" என்ற பதிகமும், அதன் கருத்தினை ஆசிரியர் மேற்பாட்டில் விரிப்பதுவும் காண்க.

இத் திருவேடங் கண்ட காரணமே பதிகம் அவ்வா றருளப்பட்டதென்பது. 83

3238. கண்டவர் கண்கள் காதனீர் வெள்ளம்
பொழிதரக் கைகுவித் திறைஞ்சி
வண்டமர் குழலார் மனங்கவர் பலிக்கு
வருந்திரு வடிவுகண் டவர்கள்
கொண்டதோர் மயலால் வினவுகூற் றாகக்
குலவுசொற் "காருலா விய"வென்
றண்டர்நா யகரைப் பரவி "யா ரணிய
விடங்கரா" மருந்தமிழ் புனைந்தார். அச

(இ - ள்) கண்டவர்...இறைஞ்சி - முன் கூறியவாறு கங்காள வேடராக இறைவரைக் கண்ட நம்பிகள் காதலினாலே தமது திருக்கண்களினின்றும் ஆனந்தக் கண்ணீர்வெள்ளம் பொழியக் கைகள் கூப்பி வணங்கி; வண்டமர்...கூற் றாக - வண்டுகள் விரும்பி வாழும் கூந்தலையுடைய பெண்களது உள்ளத்தைக் கவர் கின்றபடி வரும் இறைவரது திருவடிவினைக் கண்டு அவர்கள் கொண்ட மயலி

ஞாலே வினவுகின்ற பொருளுடைய சொற்களாக வைத்து ; குலவு...புனைந்தார் - விளங்கும் சொல் "காருலாவிய" என்று தொடங்கித் தேவதேவரைத் துதித்து "ஆரணீய விடங்கரே" என்ற மகுடங் கொண்ட அருந் தமிழ்மாலை புனைந்தருளினர்.

(வி - ரை) காதல் நீர் கண்கள் பொழிதர - என்க ; காதல் நீர் - ஆனந்தக் கண்ணீர்.

வண்டமர்...வடிவு - பிட்சாடணத் திருவுருவம் ; தாருகாவனத்து இருடியாது மனைவிமார்களிடம் இத் திருவுருவுடன் இறைவர் சென்று அவர்களை மயக்கச்செய்து அவர்களது மனங்களைக் கவர்ந்த வரலாறு கந்தபுராணத்துட் காண்க.

மயலால் அவர்கள் வினவு கூற்றாக - அத் திருவடிவத்தினைக் கண்டு அதில் ஈடுபட்டு மயங்கி அவர்கள் அவரை விளித்துப் பேசும் காதற் சொற்களாகிய பொருள் கொண்டு.

இது பதிகக் கருத்தும் குறிப்புமாக ஆசிரியர் காட்டியவாறு ; "மங்கை மார் பலர் வேண்டிக் காதல் மொழிந்த சொல்" (11) என்ற பதிகத்தினை ஆசிரியர் பொருள் விரித்தவாறு.

"காருலாவிய" என்று - இது பதிகத் தொடக்கமாகிய முதற் குறிப்பு.

"ஆரணீய விடங்க"ராம் அருந்தமிழ் - ஆரணீய விடங்கரே என்று பாட்டுத் தோறும் முடிபுகொண்டு இறைவரை விளித்து வினவிய தமிழ்ப் பதிகம் ; ஆம் - முடிபுகொண்ட ; ஆரணீயம் - வனத்தின் வரும் ; வனத்தைப் பற்றிய ; ஆரணியம் - காடு ; விடங்கர் - உளி படாத திருமேனியுடையவர் ; ஒருவரால் ஆக்கப்படாது தாமாகச் சமைந்த இயற்கைத் திருவடிவம் ; மேலே வேறு அணிந்து மறைக்கப்படாத நக்க வடிவம் என்பதும் குறிப்பு.

வண்டறை—என்பதும் பாடம். 84

## திருப்பைஞ்ஞீலி

திருச்சிற்றம்பலம் பண் - கொல்லி

காரு லாவிய நஞ்சை யுண்டிருள் கண்ட வெண்டலை யோடுகொண்
டூரெ லாந்திரிந் தென்செய் வீர்பலி யோரி டத்திலே கொள்ளுநீர்
பாரெ லாம்பணிந் தும்மை யேபர விப்ப ணியும்பைஞ் ஞீலியீர்
ஆர மாவது நாக மோசொலு மார ணீய விடங்கரே. (1)

அன்னஞ் சேர்வயல் சூழ்பைஞ் ஞீலியி லார ணீய விடங்கரை
மின்னு நுண்ணிடை மங்கை மார்பலர் வேண்டிக் காதன் மொழிந்தசொன்
மன்னு தொல்புகழ் நாவ லூரன்வன் றொண்டன் வாய்மொழி பாடல்பத்
துன்னி யின்னிசை பாடு வாருமை கேள்வன் சேவடி சேர்வரே. (11)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—முன் ஆசிரியர் (3237—3238) எடுத்துக் காட்டியவாறு கண்டுகொள்க.

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) கார் - கருமை நிறம் ; மேகம் என்றுகொண்டு மேகத்தின் தன்மை - கைமாறு கருதாத உதவி - கொண்ட என்றதும் குறிப்பு ; உலாவுதல் - பெறுதல் ; நீர் ஒரிடத்திலே பலிகோள்ளும் - என்க ; ஊர் எல்லாம் திரியாது எம் ஒருவரிடத்திலே தங்கும் என்ற காதற் குறிப்புடைய சொல் ; பாரெலாம்...பணியும் - உலகமெல்லாம் வந்து இங்கு உம்மை வணங்கும் ; நீர் வேறெங்கும் போதல்வேண்டா என்பது ; ஆரமாவது நாகமோ சொலும் - ஆரம் பாம்பானால் அணுக வந்து பலி எப்படி இடுவர் ? என்பது குறிப்பு. "நீயுலக

மெல்லா மிரப்பினு நின்னுடைய, தீய வரவொழியச் செல்கண்டாய்—தூய, மட வாலார் வந்து பலியிடா ரஞ்சி, விடவரவ மேலாட மிக்கு" (அற். அந் - 57) என்ற அம்மையார் திருவாக்கின் கருத்து இங்கு நினைவுகூர்தற்பாலது; மயல் கொண்டு அணுக வரும் பெண்கள் பாம்புகண் டஞ்சிக் கூறிய கூற்றுமாறு கண்டுகொள்க; இப்பதிகத்தினுள் வரும் ஏனைய வினாக் கூற்றுக்களும் இவ்வாறே உய்த்துணர்ந்து கொள்ளற்பாலன ;—(2) சிலைத்து...பிரானீரே - முன் " ஆரமாவது நாகமோ?" (1) என்றவிடத் துரைத்த குறிப்புக்கள்; பூசேனும் - பூசு - பாம்பின் இரைச்சல் காட்டும் ஒலிக்குறிப்புச் சொல் ;—(3) துன்னவாடை - தைத்த ஆடை; கூடலை யில்...தவிரும் - காதற் குறிப்பு ;—(4) செந்தமிழ்த் திறம் வல்லிரோ? - செந்தமி ழுக்கே சிறப்பாயுரிய அகப்பொருள் இயல் வல்லிரோ என்றது காதற்சொற் குறிப்பு; செங்கண் அரவம்...இடகிலோம் - முன் (1) கூறிய குறிப்பு; அந்தி வர்ணம் - பசும்பொன்னிறம்; காதற் குறிப்பு ;—(5) கண்ணிறுனோடும் கூற ராய் - ஆறு தாங்கிய சடையரோ என்ற இவை இரு மனைவியரை உடைய நீர் அவர்களுடனே கூடி நின்றே பிறர் மனைவியர்க்கு மையல் செய்வது தகாது என்பது காதல் விளையும் குறிப்பு ;—(6) வளை கொள்வதே தொழிலாகி - மையல் தருவதற் கென்றே; இரவு மிம்மனை யறிதிரே...வல்லிரே - இரவில் வருக என்ற குறிப்பு; —(6) காதல் - அகப்பொருள் வினைவாகிய காதலும் அடிமைத் திறமாகிய காதலும் குறிப்பு ;—(8) கங்காள வேடம்; அத்தியீருரி போர்த்திரோ? - "கொலைக் களிற் றுரி போர்த்ததம் மேனி குழைந்து காட்டினார் விழைந்தகொள் கையினார்" (1141) என்ற கருத்துக் காண்க ;—(9) அக்கும் ஆமையும் பூணுது வருக என்ற குறிப்பு; அக்கு - உருத்திராக்கம்; எலும்பு என்றலுமாம் ;—(10) கையோர்...விடங்காக நின்று - விடங்க வேடத்தில் மையல் கொண்டு கூறும் மொழிகளின் குறிப்பு ;—(11) மின்னும்...சொல் - வன்றொண்டன் வாய்மொழி பாடல் - இறைவர் பலிக்கு வரும் விடங்க வேடங் கண்டு மயங்கிய பெண்கள் வினவிய மொழியாக வைத்து அவ் வுரிமைப்பட நம்பிகள் கூறியது என்றது பதிகக் கருத்து என்பதாம். ஆசிரியர் உரைத்தது (3238) பார்க்க.

தலவிசேடம் :—திருப்பைஞ்ஞீலி - III - பக். ௫௨௫ பார்க்க.

3239\. பாவியப் பதிகத் திருக்கடைக் காப்புச்
சாத்திமுன் பணிந்தருள் பெற்றுக்
காவிலன் பர்கடங் கூட்டமுந் தொழுது
கலந்தினி திருந்துபோந் தருளி
விரவிய வீங்கோய் மலைமுத லாக
விமலர்தம் பதிபல வணங்கிக்
குரவலர் சோலை யணிதிருப் பாண்டிக்
கொடுமுடி யணைந்தனர் கொங்கில். அ௫

(இ - ள்) பாவி...பெற்று - (முன் கூறியவாறு) துதித்துத் திருப்பதிகத்தினைத் திருக்கடைக்காப்புச் சாத்தித் திருமுன்பு வணங்கி அருள்விடை பெற்று; காவில... ...இருந்து - காவு இல்லாத அன்பர் கூட்டத்தினைத் தொழுது அவர்களுடன் கலந்து இனிதாக அமர்ந்து இருந்தருளி; போந்தருளி - மேலே சென்றருளி; விரவிய... ...வணங்கிய - பொருந்திய திருவீங்கோய்மலை முதலாக இறைவரது பதிகள் பலவற் றையும் வணங்கிக்கொண்டு போந்து; குரவலர்...கொங்கில் - கொங்கு நாட்டினில்

குராமலர்கள் அரும்புதற் கிடமாகிய சோலைகள் அணி செய்யும் திருப்பாண்டிக் கொடுமுடியினை அணைந்தருளினர்.

(வி - ரை) திருக்கடைக்காப்புச் சாத்தி - பதிகக் கருத்தை விளக்குதலால் திருக்கடைக்காப்பினை விதந்தெடுத் தோதினர்.

கரவில் அன்பர் - நெஞ்சிற் கள்ளங் கபடு இல்லாத அன்பர்கள்; "கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானைக் கரவார்பால், விரவாடும் பெருமானை" (தேவா); கரவு - மனத்திற் கொள்ளும் கபடம்; கள்ளம். இவ்வன்பர்கள் திருப்பாச்சிலாச்சிராமத்தில் நம்பிகளால் முகநோக்கிப் பாடப்பெற்றாராய் உடன் வந்தவர்கள் போலும்.

அன்பர்தங் கூட்டமும் தோழது கலந் தினிதிருந்து - அன்பர்களைத் தொழுதலும் அவருட னிருத்தலும் சீவன்முத்தராகிய அணைந்தோர் தன்மையாம்.

விரவிய - இடையிற் பொருந்திய; கொங்கிற் புகுமுன் வழியிடை விரவிய.

குரவலர் சோலை அணி...கொடுமுடி - குரவு - "குராமலர்" (தேவா); "குறி யதன் கீழாக் குறுகலும் அதனோ, டுகர மேற்றலும்" என்பதிலக்கணம். குரா என்றது குரவு என நின்றது.

ஈங்கோய்மலை - நம்பிகள் பதிகம் கிடைத்திலது!

விமலர்தம் பதிபல - இவை காவிரிக் கரையில் திருப்பைஞ்ஞீலியினை அடுத்துக் கரை அளவில் உள்ளவை. இவ்வாறுள்ள பழைய கோயில்கள் பல இன்றும் காவிரிக் கரையில் காணப்படுவன. 85

3240. கொங்கினிற் பொன்னித் தென்கரைக் கறையூர்க்
கொடுமுடிக் கோயின்முன் குறுகிச்
சங்கவெண் குழைய ருழைவலஞ் செய்து
சார்ந்தடி யன்பினிற் றாழ்ந்து
பொங்கிய வேட்கை பெருகிடத் தொழுது,
புனிதர்பொன் மேனியை நோக்கி
"இங்கிவர் தம்மை மறக்கவொண் ணா"தென்
றெழுந்தமெய்க் குறிப்பினி லெடுப்ப, அசு

3241. "அண்ணலா ரடிகண் மறக்கினு நாம
வஞ்செழுத் தறியவெப் பொழுதும்
எண்ணிய நாவே யின்சுவை பெருக
விடையறா தியம்பு"மென் றிதனைத்
திண்ணிய வுணர்விற் கொள்பவர் "மற்றுப்
பற்றிலே" னெனச்செழுந் தமிழால்
நண்ணிய வன்பிற் பிணிப்புற நவின்றார்
நமச்சிவா யத்திருப் பதிகம். அஎ

3240. (இ - ள்) கொங்கினில்...குறுகி - கொங்குநாட்டிலே காவிரியின் தென் கரையில் உள்ள கறையூர்ப் பாண்டிக்கொடுமுடித் திருக்கோயிலின் முன்னே சேர்ந்து; சங்கவெண்...தொழுது - சங்கினா லியன்ற குழையினை அணிந்த இறைவரைத் திருக் கோயிலினைச் சூழ்ந்து வலஞ்செய்து சார்ந்து திருவடிகளில் அன்பினாலே வணங்கி மேன்மேலும் பொங்கிய ஆசை மேலும் பெருகத் தொழுது; புனிதர் பொன் மேனியை நோக்கி - இறைவரது பொன்னார்ந்த திருமேனியை நோக்கி; இங்



திருப்பேநூர்
முன்கோபுரமும் திருக்குளமும்

—பாட்டு - 3242 ; பக். அஎ (vi)

திருப்பேநர் - கனகசபை மண்டபத்தில் உள்ள திருவுருவங்கள்



ஸ்ரீவிநாயகர்



ஸ்ரீஆறுமுகவர்

இத் திருமண்டபம் மதுரை அளகாத்திரி நாய்க்கரால் அமைக்கப்பட்டது (கி. பி. 1642 - ஆண்டு)

கிவர்...எடுப்ப - " இங்குள்ள இவரை மறக்கவொண்ணாது " என்று திருவுள்ளத்தில் எழுந்த மெய்க் குறிப்பினாலே தொடங்க, அசு

3241. (இ - ள்) அண்ணலார்...கொள்பவர் - " அண்ணலாரது திருவடிகளை நான் மறப்பினும் அவரது திருநாமமாகிய திருவைந்தெழுத்தினை எண்ணிய நாவே இனிய சுவை பெருக இடையறாமற் சொல்லும் " என்ற இக்குறிப்பினைத் தமது உறைப்புடைய உணர்வினாலே கொள்பவராகி ; மற்றுப் பற்றிலேன்...நமச்சிவாயத் திருப்பதிகம் - " மற்றுப் பற்றெனக் கின்றி " என்று தொடங்கிச் செழுமையாகிய தமிழினாலே பொருந்திய அன்பினாலே கட்டுப்பாடு பெறும்படி நமச்சிவாயத் திருப் பதிகத்தினைச் சொல்லியருளினர். அஎ

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3240. (வி - ரை) கோங்கு - கொங்கு நாடு. முன் பாட்டினும் " கொங்கில் " (3239) என்றார் ; இதுவரை காவிரி வடகரையிலும் இரு கரைகளிலுமாகச் சோழ நாட்டில் யாத்திரை செய்தருளிய நம்பிகள், இங்குக் காவிரி - வடகரை தாண்டி வடகரைப் பதிகளில் (63-வதாக) இறுதிக்கண்ணின்ற திருவீங்கோய் மலையினை வணங்கிச் சோணாடு நீங்கிக் கொங்கு நாடாகிய வேற்று நாட்டுக்குள் யாத்திரை சென் றருளும் நிலை குறித்தற்கு.

கறையூர்க் கொடுமுடிக் கோயில் - " கறையூரிற் பாண்டிக் கொடுமுடி " என்பது பதிகம். ஒரு பாண்டியனது கறைநோய் தீர்த்த காரணத்தால் இப்பெயர் பெற்றதென்பது தலவரலாறுகளுள் ஒன்று. கொடுமுடி - இறைவர் பெயர். மேரு வின் பெருஞ் சிகரங்களுள் ஒன்றென்பது வரலாறு ; அதனை இடமாகக் கொண்டு இறைவர் விளங்க வீற்றிருத்தலின் கொடுமுடிநாதர் என்றே பெயர் வழங்குவர். கொடுமுடியின் கோயில் என்க. (2236 பார்க்க.)

குழையர் உழை - குழையாருடைய கோயிலின் பக்கத்துச் சுற்றி வலமாக.

பொங்கிய வேட்கை பெருகிட - முன்னமே உள்ளடங்காமல் மேலெழுந்து பொங்கிய பெருவிருப்பம் மேலும் பெருக.

பொன்மேனி - பொன்னார்ந்த அழகுடைய திருமேனி. " பொன்னார் மேனி யனே " (தேவா). அடியிணையினில் - என்பதும் பாடம்.

இங்கிவர்...எடுப்ப - இங்கு இறைவரது திருமேனிப் பொலிவினில் ஈடுண்டு உள்ளூர அழுந்திவிட்டமையால் இனி இவரை எப்போதும் மறக்கவொண்ணாது என்று திருவுளத்தில் மெய்க்குறிப்பு நிகழ, அதனாலே அக்கருத்துத் தோன்ற ; மெய்க் குறிப்பு - உண்மை ; சத்தாகிய குறிப்பு. மெய் - திருமேனி என்றலுமாம். 86

3241. (வி - ரை) அண்ணலார்...இயம்பும் என்று - இது பதிகக் குறிப்பு ; " கற்றவாவுனை நான்மறக்கினுஞ் சொல்லும் நா நமச்சி வாயவே " என்ற தேவாரத் தின் பொருள் விரித்தவாறு.

நாம அஞ்செழுத்து - இறைவரது திருநாமமாகிய திருவைந்தெழுத்து ; " ஐந் தெழுத்தின் நாமத்தான்காண் " (தேவா).

" அறிய எப்பொழுதும் எண்ணிய நாவே - இயம்பும் " - அறிய - மனம் அறிந்துகொள்வதனால்.

எப்பொழுதும் எண்ணிய நா - இடைவிடாது நாவானது திருவைந்தெழுத்தைத் தழும்பேறச் சொல்லிக்கொண் டிருக்கும் ; எண்டு எண்ணுதல் என்ற மனத்தின் செய்கை அதனால் இடைவிடாது தூண்டப்பட்டுத் தானே சொல்லிப் பழகுதல் என்ற பொருளில் வந்தது ; உட்கரணமாகிய மனமும் அதனாற் றூண்டப்பட்ட புறக்கருவி

யாகிய நாவும் ஒருதன்மைப்பட்டுப் பழகியதனுல் மனத்தின் செயல் நாவின் செயலே யாயிற்று ; எண்ணுதல் - அளவறிந்து சொல்லுதல் என்ற குறிப்புடனும் நின்றது ; நாவே - மனம் மறக்கினும் நா தானே என ஏகாரம் பிரிநிலை. தேற்றமுமாம்.

இன்சுவை பெருக - நாவின் றொழிலாகக் கூறியதற்கேற்பச் சுவை என்றார். இரண்டும் பிணைந்து இயன்றமையால் மனத்தின் றொழிலாகிய எண்ணுதல் நாவிற் கும், நாவின் றொழிலாகிய சுவை மனத்துக்கும் ஏற்றப்பட்டன. " ஆலைப் படுகரும் பின் சாறுபோல அண்ணிக்கும் ஐந்தெழுத்தின் நாமம் " (தேவா) என்று அரசுகள் இதனை அருளுதல் காண்க.

என்றிதனை - என்ற இக்குறிப்பினை ; என்ற இதனை என்பது என்றிதனை என நின்றது.

திண்ணிய உணர்வு - திட்பமாவது அன்பி னிலையினின்றும் பிறழாத உறைப்பு ; உணர்விற் கொள்ளுதல் - மனத்தினுள் ஊன்றி வைத்தல்.

மற்றுப் பற்றிலேன் - பதிகத் தொடக்கமாகிய முதற்குறிப்பு ; என - என்று தொடங்கி.

செழுந்தமிழ் - செழுமை - மெய்ப்பொருளாகிய திருவைந்தெழுத்தினை உட் கொண்டு எடுத்துக்கூறும் தன்மை.

பிணிப்புறுதல் - பிறழாது ஒன்றுபடச் சேர்த்துக் கட்டப்படுதல் ; பிணிப்புற - வினையெச்சம் ; இதனை நவின்ற தாம் பிணிக்கப்பெறுதலால் எனக் காரணப்பொரு ளில் வந்தது ; இதனைப் பயிலும் உலகவர் அன்பிற் பிணிப்புறும் பொருட்டு என்று உரைக்கும் குறிப்புமுடையது.

நமச்சிவாயத் திருப்பதிகம் - பதிகத்தின் பெயர். உட்கொண்ட பொருளினுற் போந்த பெயர். கோளறு பதிகம் - திருநீற்றுப் பதிகம் என்புழிப்போலக் காண்க ; பயன் பற்றியும், ஏகபாதம், மொழிமாற்று முதலியவை யாப்பமைதி பற்றியும், இவ் வாறு பிற அமைதிகள் பற்றியும் பதிகப் பெயர்கள் வருதல் காண்க.

முன் பாட்டில் " இங்கிவர் தம்மை மறக்க வொண்ணுது " என்பது உண்ணின் றெழுந்த அருளின் குறிப்பும், இப்பாட்டில் அதனுற் போந்து உணர்வினுள் ஊன்றிய கருத்தும், பதிக முதற்குறிப்பும், பதிகப் பெயரும் கூறியவாறு கண்டுகொள்க. மேற் பாட்டில் பதிகப் பயன் கூறுதலும் காண்க. திருவைந்தெழுத்துப் பற்றியதனுடு, தலம் பற்றிய பதிகமாயு மிருக்கும் தனிச் சிறப்புடைய திருப்பதிகமாதலின் இத்துணை யும் எடுத்துக் காட்டியது ஆசிரியரது தெய்வக் கருணைக் கவிநலமாம். மேலும் இதன் சிறப்பினை வரும் பாட்டிலும் பயன் கூறுமாற்றாற் கூறுதலும் காண்க. 87

## திருப்பாண்டிக்கொடுமுடி

திருச்சிற்றம்பலம் நமச்சிவாயத் திருப்பதிகம் பண் - பழம்பஞ்சுரம்

மற்றுப் பற்றெனக் கின்றி நின்றிருப் பாத மேமனம் பாவித்தேன்
பெற்ற லும்பிறந் தேனி னிப்பிற வாத தன்மைவந் தெய்தினேன்
கற்ற வர்தொழு தேத்துஞ் சீர்க்கறை யூரிற் பாண்டிக் கொடுமுடி
நற்ற வாவுனை நான்ம றக்கினுஞ் சொல்லுநா நமச்சி வாயவே. (1)

கோணி யபிறை சூடி யைக்கறை யூரிற் பாண்டிக் கொடுமுடி
பேணி யபெரு மானைப் பிஞ்ஞகப் பித்த னைப்பிறப் பில்லியைப்
பாணு லாவரி வண்ட றைகொன்றைத் தார னைப்படப் பாம்பரை
நாண னைத்தொண்ட னூரன் சொல்லிவை சொல்லு வார்க்கில்லை துன்பமே. (10)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—ஆசிரியர் முன் (3241) காட்டியவாறு கண்டுகொள்க.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) எனக்குப் பற்று மற்றின்றி என்க; பெற்றலும் - பெறுதலும்; அவ்வாறு பாவிக்கப் பெற்றதனால் பிறந்தேன்; இந்நிலை பெற்றலும், பிறவாத தன்மை எய்தினேன் என்க. பிறந்தேன் - வினைப் பெயர்; பிறந்தேனாகிய - பிறவியில் வந்த - நான். உனை நான்...நமச்சிவாயவே - முன் ஆசிரியர் இதன் உரை விரித்தருளினர் (3241); நமச்சிவாயவே - ஏகாரம் பிரிநிலை; —(2) ஏத்துவார் - ஏத்தக் கடமைப்பட்டவர்கள் அது செய்யாமல் இகழ்ந்தும் மறந்தும் உள்ள நாட்கள் கெட்ட நாள்கள் என்பது. ஆதலின் அவர்களைப் பொருளாகக் கருதமாட்டேன் என்க. வட்ட வாசிகை - வட்டவடிவா யமைந்த திருவாசிபோல அமைத்த மாலை; இட்டன் - அன்புடையவன்; நட்டவா - கொடுமுடியினை விரும்பியவரே; கொடுமுடியில் நிலைபெற்றவரே;—(3) ஒவுநாள் - நாட்கணக்கினின்று நீங்கின - நீக்கப்பட்ட - நாட்கள்; "பேசாத நாளெல்லாம் பிறவா நாளே" (அரசு. தேவா) என்ற கருத்து; உன்வழிபாடு இல்லாமல் கழியும் நாட்களை உள் உணர்வு அழியும் நாட்களாகவும், உயிர்போகு நாட்களாகவும், உயிர் போயினபின் உடல் பாடையின்மேற் காவும் நாட்களாகவும் கருதுவேனன்றி வாழும் நாளாகக் கருத மாட்டேன் என்க. கருதேன் - இவற்றை நாட்களாகக் கருதேன்; ஆதலின் எனது நா - சொல்லும் என்பதாம்; பாவு - பரவும்; நாவலா - நாவன்மையானது வேதாகமங்களைச் சொல்லுதல்;—(4) கல்லை உந்தி -மலைப் பண்டங்களை - பெருங்கற்களை - அலைத்துக்கொண்டு; வளம் பொழிந்து இழி - மலைப் பண்டங்களை அலைத்து வருதலால் அக்குறிஞ்சி வளங்களை இங்குக் கொண்டுவந்து பொழிந்து இறங்கும்; இழிதல் - கீழிறங்குதல்;—(5) அஞ்சினார்க் கரணாதி - அஞ்சி வந்தடைந்தார்களுக்கு அபயம் கொடுக்கும் காவலனாவாய்; ஆதி - ஆவாய்; நல்கினுய்க்கு அழிகின்றது என் - நல்கின உனக்குக் குறையாவதென்னையோ?;—(6) ஏடு - ஏடு போன்ற; உயர்ந்த - எளிய-என்றலுமாம் (எடு - பகுதி - ஏடு - எடுத்தலுடையது); பாடு-பெருமை; சேடன் - அறிவிற் சிறந்தவன்;—(7) விண்டன - நீங்கின; கோடு - கரை;—(8) கோலினாய் - வளைத்தாய்;—(9) சாரணன் - பற்றுக்கோடா யுள்ளவன்; வண்டு-பாண்-அறை என்க; பாண் - இசை; அறை - பாடுதற் கிடமாகிய; பாம்பு அரை நாணன் - பாம்பினை அரைநாணாக வுடையவன்.

தலவிசேடம் :— திருப்பாண்டிக்கொடுமுடி - 2236-ம் பாட்டின்கீழ் உரைக்கப்பட்டது.

3242. உலகெலா முய்ய வுறுதியாம் பதிக
முரைத்துமெய் யுணர்வுறு வொருமை
நிலவிய சிந்தை யுடன்றிரு வருளா
னீங்குவார் பாங்குநற் பதிகள்
பலவுமுன் பணிந்து பரமர்தாள் போற்றிப்
போந்துதண் பனிமலர்ப் படப்பைக்
குலவுமீ கோங்கிற் காஞ்சிவாய்ப் பேரூர்
குறுகினார் முறுகுமா தரவால். அஅ

(இ - ள்) உலகெலாம்...உரைத்து - உலகெல்லாம் உய்யும்படி உறுதி தருவதாகிய நமச்சிவாயத் திருப்பதிகத்தினை அருளிச்செய்து; மெய்யுணர்வுறு...நீங்குவார்- மெய்யுணர்வு இடையறுத ஒன்றிய தன்மை நிலைபெற்ற சிந்தையினுடனே திருவருள்

விடைபெற்று அங்குநின்றும் போவாராகி ; பாங்கு...போந்து - பக்கத்தில் உள்ள நல்ல பதிகள் பலவற்றையும் முன்னே வணங்கி இறைவரது திருவடிகளைத் துதித்துச் சென்று ; தண் பனிமலர்...ஆதரவால் - குளிர்ந்த மலர்கள் நிறைந்த ஆற்றின் பக்கத்தின் குளிர்ந்த நிலங்களையுடைய விளக்கமாகிய மேல் கொங்குநாட்டிலே காஞ்சி மாநதியின் கரையிலே உள்ள திருப்பேரூரினை மேலெழும் பேரன்பினாலே சென்று சேர்ந்தருளினர். அஅ

(வி - ரை) உலகெலாம் உய்ய உறுதியாம் பதிகம் - நமச்சிவாயத் திருப்பதிகம். உலகமுய்யும் உறுதியாவது திருவைந்தெழுத்தாகிய மகாமந்திரம். இதுவே ஆதி மந்திரம், மகாமந்திரம் என்பனவாதியாக விதந்து பேசப்படுவது ; உயிருக்கு உறுதிப் பயனாகிய சிறந்த வீடுபேற்றைத் தருவது ; இதன் தன்மைகள் முன்னர் உரைக்கப் பட்டன ; கடைப்பிடிக்க. இவை உண்மை விளக்கம், திருவருட் பயன் முதலிய ஞான நூல்களினும் சிவாகமங்களினும் அநுபவமுடைய தேசிகர்பால் அறிந்துகொள்ளத் தக்கன. உறுதி ஆம் - உறுதி செய்யும் ; ஆகச் செய்யும். "இங்குன் புண்ணிய மணத்துள் வந்தார், யாவரும் என்பாற் சோதி யிதனுள்வந் தெய்தும்" (3145) என்று இறைவர் தந்த ஆணையின்படி அங்கு வந்தார்களுக்கெல்லாம் உய்யுநெறி காட்டி வீடு பெறும் தகுதி பெறுவித்து முத்திக்கு விடுத்திட ஆளுடைய பிள்ளையார் நமச்சிவாயத் திருப்பதிகத்தினையே அருளிய வரலாறு ஈண்டு நினைவுகூர்தற்பாலது. "மாயிரு ஞாலமுய்ய வழி" (3145) என்றும், "ஞானமெய்ந் நெறிதான் யார்க்கு நமச்சிவா யச்சொலாம்" (3146) என்றும் ஆண்டு ஆசிரியர் உரைத்தருளியவையும் நினைவுகூர்க.

மெய்...சிந்தை - "இங்கிவர் தம்மை மறக்கவொண் ணுதென் றெழுந்தமெய்க் குறிப்பு" (3240) ; "இதனைத் திண்ணிய உணர்வினிற் கொள்பவர்" (3241) என்று முன் கூறிய தன்மைபெற்ற சிந்தை என்க ; அச்சிந்தையின் நிலை மாறுதபடி.

திருவருளால் - திருவருள் விடை பெற்றதனால்.

பாங்கு நற்பதிகள் - இவை மேல் கொங்குநாட்டிலும், அங்குக் காவிரிக் கரையிலும் உள்ள பல பழைய சிவாலயங்களும், குன்றுதோருடல்களாகிய கோயில்களுமாம் என்பது கருதப்படும். மூலனூர் - சிவமலை - சென்னிமலை - ஊதியூர் மலை - பெருந்தலையூர் - குரக்குத்தளி முதலாயின என்பது கருதப்படும்.

பனிமலர்த் தண் படப்பை என்க. நீலகிரி - வெள்ளிமலைச் சாரல்கள் அணியன வாதல் தண் - பனி என்ற ஒருபொருட் பன்மொழிகளின் குறிப்பு.

மீகொங்கிற் காஞ்சிவாய்ப் பேரூர் - முன்னர் "கொங்கில்" (3239) ; "கொங்கினில்" (3240) என்ற ஆசிரியர் இங்கு "மீகொங்கு" என்றார். "மீகொங்கி லணி காஞ்சிவாய்ப், பேரூர் பெருமானைப் புலியூர்ச்சிற் றம்பலத்தே பெற்றாமன்றே" (கோயில் - நம்பிகள் - 11) என்ற தேவார ஆட்சி போற்றப்பட்டது காண்க. முன் கூறியது கொங்குநாடு என்ற பெரும் பகுதி. அக்கொங்கில் - என்ற பாடம் பிழை.

இங்கு "மீகொங்கு" என்றது அதன் உட்பிரிவாகிய மேற்குக் கொங்குநாடு. கொங்குநாடு, கீழ்கொங்கு, மேல்கொங்கு, வடகொங்கு என மூன்று பெரும் உட்பிரிவுகளை யுடையது ; இங்கு மீ என்றது மேற்கு என்ற பொருளைக் கொண்டது.

காஞ்சி - ஆறு. இது பேரூருக்கு மேற்கில் 25 நாழிகையளவில் வெள்ளிமலைச் சாரலில் வன்னி மூலத்தில் எழுந்து ஓடிவந்து பேரூர்வழி வரும்வரைக் காஞ்சி நதி எனப் பெயர்பெற்றும், அதன்கீழ்க் காவிரியிற் கூடும்வரை நொய்யல் எனப் பெயர் பெற்றும் விளங்கும் ஒரு ஆறு. காவிரியின் கிளை நதிகளுள் ஒன்று. எப்போதும் நீரூற்றுடன் வற்றாது ஓடும். இது காவிரியுடன் கூடும் இடத்தில் நொய்யல் என்ற இருப்புப்பாதை நிலையத்தை அமைத்துள்ளார்கள். இதனுள் இடப்படும் இறந்தோ



**காவிரிக்கரை** குளிக்குந் துறையிலிருந்து ¼" அளவில் கோயில் தெரியும் காட்சி



காவிரியின் எதிர்க்கரையிலிருந்து பார்வை
• புள்ளியின் கீழ் கோபுரங்கள் உள்ளன



**உ**ட்புறம் வன்னி மரத்திலிருந்து பார்வை
சுவாமி கோயில் விமானமும் கோபுரமும்
விமானத்துக்கருகில் தெரிவது கணபதி விமானம்



சுவாமி விமானமும் - நடராசர் விமானமும்

கொடுமுடி

கோயில் - முன் கோபுரம்

பாட்டு - 3239



(உட்புறமிருந்து பார்வை)

பவாநி - கூடல் (2225)



× இடத்தில் பவாநியும் காவிரியும் கூடுமிடம்.
கூடுதுறையும்
அதிலிருந்து கோயிற் பார்வையும்

வெஞ்சமாக்கூடல்




1. மனைவி 2. வெஞ்சன்
3. ஒரு தெய்வத்தின் சிரம்
(கீழ்ப்பாகம் மண்ணுள் புதைக்கபட்டுள்ளன)

பவாநி



அம்மை விமானமும் - முன் கோபுரமும்

ரெலும்புகள் நாளடைவில் கல்லாக ஆகிவிடும் தன்மை இன்றும் காணப்படும் சிறப்புடையது ; சிற்றுருயினும் மேல் கொங்குக்குச் செழிப்பு விளைக்கும் 32 அணைகளையுடையதொரு சிறப்புமுடையது. இதன் நீர் பல நோய்களை நீக்கும் தன்மையும் இன்றும் காணப்பெறும். இதன் சிறப்புக்கள் பேரூர்ப் புராணத்தினுள் கச்சியப்ப முனிவர்பெருமானுல் விதந்து போற்றப்பட்டுள்ளன. *

பேநூர் - ஊர்ப்பெயர் ; இது முன்னுளில் மிகப் பெரிய நகரமாக விளங்கிய தென்பது தேச சரிதத்தாலும் பழைய கல்வெட்டுக்களாலும் தெரிகிறது. †

இது மேலைச் சிதம்பரம், ஆதிபுரி, பிறவாநெறி முதலிய பற்பல காரணப் பெயர்களால் விளங்க வழங்கப்படும். பேரூர்ப் புராணம் பார்க்க ; " பேரூ ருறைவாய் பட்டிப் பெருமான் பிறவா நெறியானே " என்ற நம்பிகள் (ஊர்த்தொகை) திருவாக்குக் காண்க ; தில்லையம்பலவர் நடத்தினை இங்கு நம்பிகளுக்குக் காட்டினர் என்பது

---

*இந் நதிச்சிறப்பினைப் பற்றிச் சில பொருள்கள் ஈண்டுத் தரப்படுகின்றன :

கலியிடைக் கன்ம முற்றுங் காதிநா சஞ்செய் மாண்பாற்
கலிகன்ம நாசி னிப்பேர் கைக்கொளு மனைய காஞ்சி
ஒலிநதி விருத்த கங்கை யுறுபிர யாகை யென்னப்
பலபரி யாயப் பேரும் பற்றுமா லுலகம் போற்ற. (37)

நிவந்தெழு புனற்பூங் காஞ்சி நெடுங்கரை மருங்கு நண்ணித்
தவஞ்செபந் தியானம் யோகந் தனிமகந் தரும மாற்றின்
அவந்தெறும் பயனொ ரோரொன் றனந்தமாய் விளையு மந்தப்
பவந்தெறுங் காஞ்சி மேன்மை பகரலாந் தகைமைத் தன்றே. (38)

—பேநூர்ப் புராணம் - தீர்த்தப் படலம் - கச்சியப்ப முனிவர்.

—ஆர்த்தெழுந்தே,
யந்நாட் பகீரதற்கா யார்த்தெழுந்த கங்கையைப்போ
லிந்நாட் பலவுலக மீடேறப்—பொன்னுற்
பொலிந்த ரசிதப் பொருப்பி லுலாவி
மலிந்தபொருள் பற்பலவும் வாரிக்—கலந்து
தொடும்பொருளை யெல்லாஞ் சுவர்ணமய மாக்கி
விடும்பரிசாற் காரணப்பேர் மேவிக்—கடும்பவநோய்
யாவு மகற்றி யறம்பொருளின் பாக்கியலை
வாவி வருங்காஞ்சி மாநதியான்— (92–95)

—திருப்பேநூர்க் கிள்ளைவிடுதூது - வித்வான்-கந்தசாமி முதலியார்.

†பேரூர்ப் புராணம் 2-ம் பதிப்பு - பதிப்பாசிரியர் முன்னுரையும், பண்டைய சரித வரலாறும் பார்க்க.

உரைத்தநாற் பயனுட் பெரும்பய னுய தொள்ளிய வீடஃ துறலால்
தரைத்தலைப் பேநு ரென்மர்கள் சில ;ரெத் தலத்தினுஞ் சாற்றுநாற் பயனும்
நிரைத்தலிற் பேநு ரென்மர்கள் பலரே ; நீடிய வாதிமா நகரை
இரைத்தெழு கடல்போல் வளத்தினும் பேநு ரென்மர்கள் பற்பலா யிரரே.

—திருநகரப்படலம் (1)

போட்டி விளைத்,
தூநுரேல் லாஞ்சின்ன வூராய்ப் புறங்கொடுக்கப்,
பேரூ ரெனத்திகழ்பே ரூரினன்—, —கிள்ளைவிடு தூது (92)

மேல் வரும் பாட்டினாலும், இப்பதியின் பெருமான் இத்திரு நடக்காட்சியைத் தில்லையில் நம்பிகளுக்குக் காட்டியருளினார் என்பது "பேரூரர் பெருமானைப் புலியூர்ச்சிற் றம்பலத்தே பெற்றாம்" என்ற நம்பிகளது திருவாக்காகிய அகச்சான்றாலும் பெறப்படுதலின் இப்பதி தில்லையம்பதியே யாகும் என்ற உண்மை விளங்கும்; இவ்வுண்மையினை ஆசிரியர் ஈண்டு இப்பதியில் நம்பிகள் வழிபட்ட வரலாற்றினைத் தில்லையின் வழிபாடு கூறிய (250—253) அந்த யாப்பிலும் சந்தத்திலும் யாத்த வகையாலும், ஈரிடத்திலும் நந்நான்கு திருப்பாட்டளவே கூறிமுடித்த கருத்தினாலும், ஈரிடத்தும் முறையே அவ்வப்பாட்டுக்களின் பொருளும் கருத்தும் ஒற்றுமை பெறக் கூறிய திறத்தாலும், ஈண்டு "உலகெலாம்" என்னும் இறைவர் தந்த முதன்மொழி கொண்டு தொடங்குதலானும், பிறவாற்றானும் அறியவைத்த ஆசிரியரது அருட்குறிப் கொண்ட கவிநலத்தின் தெய்வ மணம் கண்டுகொள்க. "உலகெலா முய்ய" (3242) என்ற இத்திருப் பாட்டுப் "பெருமதில் சிறந்த" (250) என்ற பாட்டின் பொருளும், மேல்வரும் "அத்திருப்பதியை" (3243), "காண்டலுந் தொழுது" (3244), "அந்நிலை நிகழ்ந்த" (3245) என்ற பாட்டுக்கள், முறையே, "வையகம் பொலிய" (251) "ஐந்து பேரறிவும்" (252), "தெண்ணிலா மலர்ந்த" (253) என்ற பாட்டுக்களின் கருத்தும் பொருளும் விளங்க வைத்து நிற்பன காண்க. பேரூர் குறுகினார் முறுகு மாதரவால் = புகுந்தார் - திருவாணுக் கன்றிருவாயில்; தில்லை மன்றுணின் றாடல் - நேர்காட்ட....கண்டார் = வெளியே ஆடுகின்றாரை அஞ்சலி மலர்த்தித் - தாழ்ந்தெழுந்தான்; பூண்டவைம் புலனிற் புலப்படா வின்பம் புணர்ந்துமெய் யுணர்வினிற் பொங்க = ஐந்து பேரறிவும்...ஆனந்த வெல்லையி றனிப்பெருங் கூத்தின் வந்த பேரின்ப வெள்ளத்துட் டிளைத்து; பொன் மணிமன்றுள்...புரிநடங் கும்பிடப் பேற்றா லென் னிப்புறம்போ யெய்துவது = திரு நடங் கும்பிடப் பெற்று மண்ணிலே வந்த பிறவியே - வாலிதா மின்பமாம்; என்றிவ்வாறு ஒற்றுமை கண்டு கொள்க.

துலவுமக்கோங்கில், துலவுமிக்கோங்கில் - என்று முன் பதிப்புக்களிலெல்லாம் கொண்ட பாடங்கள் தவறு. 88

3243. அத்திருப் பதியை யணைந்துமுன் றம்மை
யாண்டவர் கோயிலிற் புகுந்து
மெய்த்தவர் சூழ வலங்கொண்டு முன்பு
மேவுவார் தம்மெதிர் விளங்க
நித்தனார் தில்லை மன்றுணின் றாட
னீடிய கோலநேர் காட்டக்
கைத்தலங் குவித்துக் கண்களா னந்தக்
கலுழிநீர் பொழிதரக் கண்டார். அகூ

(இ - ள்) அத்திருப்பதியை...வலங்கொண்டு - அந்தத் திருப்பதியாகிய திருப்பேரூரினை அணைந்து, முன்னால் தம்மை ஆண்டருளிய இறைவரது திருக்கோயிலினுள்ளே புகுந்து, மெய்த்தவர்களாகிய அடியார்கள் புடைசூழ வலமாக வந்து; முன்பு மேவுவார் - திருமுன்பு சென்று சேர்வாராகிய நம்பிகள்; தம்மெதிர்...காட்ட - தம்மெதிரே இறைவனார் தில்லையம்பலத்திலே நின்றாடுகின்ற நீடிய திருக்கோலத்தினையே நேராக இங்குக் காட்டியருள; கைத்தலம்...கண்டார் - இரண்டு கைகளையும் சிரமேற் கூப்பிக் கண்களினின்றும் ஆனந்தக் கண்ணீர் ஆறுபோலப் பெருகிவரக் கண்டருளினார்.

(வி - ரை) முன் தம்மை ஆண்டவர் - திருவெண்ணெய் நல்லூரிலும், அதன் முன் திருக்கயிலையிலும் தம்மை ஆளாகக் கொண்ட இறைவனார்.

மெய்த்தவர் - உண்மை யடியார்கள். நம்பிகளுடனே சூழ்ந்து திருக்கோயிலில் இறைவரை வணங்கப் பேறு பெற்றது மெய்த் தவப் பயனும் என்பது. திருக்கோயில் வழிபாடு அடியார்களுடன் கூடிச் செய்யத் தக்கது என்ற குறிப்புமாம்.

நீத்தனார்...கோலம் - விளங்கக் - காட்ட - தில்லைத் திருநடனத்தின் காட்சியே இங்குக் காணும்படி விளக்கமாகக் காட்டியருள ; திருவீழிமிழலையில் திருப்புகலிக் காட்சியும், திருமருகலிற் றிருச்செங்காட்டங்குடிக் காட்சியும் ஆளுடைய பிள்ளையாருக்கு இறைவர் அருளிய நிலைகள் இங்கு நினைவுகூர்தற்பாலன ; ஒரு பதியிற் கும்பிட்டு வழிபட்டால் அப்பதியின் இறைவரது திருவடையாளங்கள் முதலிய திருமேனியின் கோலங்கள் முழுதும் மனத்துட் பதியும்படி கண்டு வைத்து வழிபட வேண்டுமென்ற நிலையுங் காட்டப்பட்டது.

நேர் காட்டக் - கண்டார் - காட்டக் காண்பது உயிரியல்பு. இந்நினைவின் உறைப்புப் பற்றியே, பின்னர்த் தில்லையில், இக்காட்சியே கண்டு பேரூரிற் கண்ட நிலை சிறப்பித்துப் " பேரூர் பெருமானைப் புலியூர்ச் சிற்றம்பலத்தே பெற்றாம் " (தேவா) என்றருளிச் செய்கின்றார்.

ஆனந்தக் கலுழிநீர் - ஆனந்த வெள்ளமாகி அருவிபோலப் பாய்ந்தொழுகும் கண்ணீர் ; கலுழி - காட்டாறு ; நீர் பெருக்கு ; பெரு வெள்ளம் என்றலுமாம்.

வலங் கொடுதிருமுன்—என்பதும் பாடமாம். 89

3244. காண்டலுந் தொழுது வீழ்ந்துட னெழுந்து
கரையிலன் பென்பினை யுருக்கப்
பூண்டவைம் புலனிற் புலப்படா வின்பம்
புணர்ந்துமெய் யுணர்வினிற் பொங்கத்
தாண்டவம் புரியுந் தம்பிரா னாரைத்
தலைப்படக் கிடைத்தபின் சைவ
ஆண்டகை யாருக் கடுத்தவந் நிலைமை
விளைவையா ரளவறிந் துரைப்பார். கூ0

(இ - ள்) காண்டலும்...எழுந்து - முன்கூறியவாறு காட்டக் கண்டவுடனே தொழுது நிலமுற விழுந்து உடன் எழுந்து நின்று ; கரையில்...உருக்க - கரை காணாத பேரன்பானது எலும்பினையும் உருகச் செய்ய ; பூண்ட...பொங்க - இயைந்த ஐம்புலங்களாலும் அறியப்படாத பேர் ஆனந்தம் தம்முள்ளே கலந்து மெய்யுணர்வினிலே நிறைந்து மேம்பட; தாண்டவம்...கிடைத்தபின்-ஆனந்தப் பெருங்கூத்தியற்றும் தமது பெருமானாரை நேரே பெறும்படி கிட்டிய பின்னர் ; சைவ...உரைப்பார்-சைவ ஆண்டகையாராகிய நம்பிகளுக்குப் பொருந்திய அந்நிலைமையின் அதீதமாகிய ஆனந்தத்தின் விளைவினை அளவறிந்துரைக்க வல்லவர் யாவர் ? (ஒருவருமிலர்.)

(வி - ரை) காண்டலும் - முன் கூறியபடி திருவருள் காட்டக் காணலும்.

பூண்ட ஐம்புலனிற்...பொங்க - பூணுதல் - ஒவ்வோர் புலனும் உரிய ஒவ்வோர் பொறியினைப் பொருந்தியறிதலாற் பூண்ட ஐம்புலன் என்றார் ; ஐம்புலனிற் புலப்படா இன்பம் - ஐம்பொறிகளுக்கும் விடயமாகிய ஐம்புல வின்பங்களுக்குட் படாத பேரின்பம். புலன்களுக்குமெட்டாத என்க ; ஐம்புலனாலும் அறியப்படாத சிவானந்த இன்பம். ஐம்புலனிலும் என முற்றும்மை தொக்கது.

புணர்ந்து மெய்யுணர்வினிற் பொங்க - புலனின்பம் புணரு முணர்வு வேறு ; இங்கு அவற்றாற் புலப்படா இன்பம் புணர்வுறும் மெய்யுணர்வு - சிவானந்த போக பூமி - வேறு ; இது சிவஞான அருட்புவனமாகிய அருளுணர்விற் பொங்கிற்று என்பது.

தாண்டவம்...கிடைத்தபின் - அருட் கூத்து ஆடும் தமது பெருமானை வெளிப் படக் கை வரும்படி நேர் பெற்றபின் ; தலைப்படுதல் - கிட்டுதல் ; கிடைக்கப் பெறுதல்.

சைவ ஆண்டகையார் - நம்பிகள்; ஆண்டகைமை - அன்பின் உறைப்பாகிய வீரம்.

அடுத்த அந்நிலைமை விளைவு - பெற்ற சிவானந்தத்தின் விளைவாகிய போகம்.

யார் - உரைப்பார் - யார் என்ற வினு ஒருவருமிலர் என்று எதிர்மறை குறித்து நின்றது ; ஆதலின் எம்மாற் சொல்லலாகாதது என்பது குறிப்பெச்சம்.

குறிப்பு:—இப்பாட்டினையும் " ஐந்து பேரறிவும் " என்ற திருப்பாட்டினையும் ஒப்பிட்டுக் காண்க. 90

3245. அந்நிலை நிகழ்ந்த வாரருள் பெற்ற
வன்பரு ரின்ப வெள்ளத்து
மன்னிய பாடன் மகிழ்ந்துடன் பரவி
வளம்பதி யதனிடை மருவிப்
"போன்மணி மன்று ளேடுத்தசே வடியார்
புரிநடங் கும்பிடப் பெற்றால்
என்னினிப் புறம்போ யெய்துவ " தென்று
மீண்டெழுந் தருளுதற் கெழுவார், கூக

3246. ஆயிடை நீங்கி யருளினுற் போவா
ரருவரைச் சுரங்களும் பிறவும்
பாயுநீர் நதியும் பலபல கடந்து
பரமர்தம் பதிபல பணிந்து
மேயவண் டமிழால் விருப்பொடும் பரவி
வெஞ்சமாக் கூடலும் பணிந்து
சேயிடை கழியப் போந்துவந் தடைந்தார்
தென்றிசைக் கற்குடி மலையில். கூ௨

3245. (இ - ள்) அந்நிலை...அன்பனர் - அத்தன்மை நிகழப் பெற்ற நிறைந்த அருளினைப் பெற்ற அன்பனாகிய நம்பிகள் ; இன்ப வெள்ளத்து...பரவி - இன்பப் பெருக்கிலே நிலைத்த திருப் பாட்டினை மகிழ்ச்சியோடும் பாடித் துதித்து ; வளம் பதி...மருவி - வளம் பொருந்திய அப்பதியினிடைத் தங்கியிருந்தருளி ; பொன் மணி...என்று - அழகிய பொன்னம்பலத்தினில் எடுத்த சேவடியினையுடைய கூத்தப் பெருமானுர் புரிநடனத்தினைக் கும்பிடும் பேறு பெற்றால் இனிப் புறமே சென்று கிடைக்கப் பெறும் பொருள் வேறென்ன உள்ளது ? (ஒன்றுமில்லை) என்ற கருத் துடனே ; மீண்டு - அங்கு நின்றும் புறப்பட்டு ; எழுந்தருளுதற் கெழுவார் - செல் வதற்குத் துணிந்தெழுவாராகி ; கூக

3246. (இ - ள்) ஆயிடை...செல்வார் - அவ்விடத்தினின்றும் நீங்கி அருள் விடைபெற்றுச் செல்லும் நம்பிகள்; அருவரை...பரவி - கடத்தற்கு அரிய மலைக் கானங்களும் மற்றும் நிலங்களும் பெருகிப் பாய்கின்ற நதிகளுமாகிய பலபலவற்றை யும் கடந்து சென்று இறைவரது பதிகள் பலவற்றையும் வணங்கிப் பொருந்திய வளப்பமுடைய தமிழ்த் திருப்பதிகங்களாலே துதித்து; வெஞ்சமாக் கூடலும் பணிந்து - திருவெஞ்சமாக் கூடலினையும் தொழுது; சேயிடை...மலையில் - நெடுந் தூரம் கடந்து சென்று தென்றிசையில் உள்ள திருக்கற்குடி மலையில் வந்து அடைந் தருளினர். கூஉ

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3245. (வி - ரை) அந்நிலை நிகழ்ந்த - "அடுத்த அந்நிலைமை" (3244) என்று முன்பாட்டிற் கூறி முடித்த அந்த என அகரம் முன்னறி சுட்டு; நிலையாவது முன்கூறிய சிவானந்த அனுபவநிலை. நிகழ்ந்த - நிகழப்பெற்ற.

மன்னிய பாடல் - இப்பதிகம் கிடைத்திலது!

மருவி - சிலகாலம் தங்கியிருந்து.

"பொன்மணி...எய்வது" என்று - இக்கருத்துடன் கூடிய பதிகம்பாடி அருள் விடை பெற்று என்பது. நடம் கும்பிடப் பெறுதலே எல்லாவற்றிலும் சிறந்த பேறு; வீடுதரும் தன்மையுடையது; ஆதலின் இதனைவிட்டுப் புறம்போய்ப் பெறுவதுதான் யாது? ஒன்றுமில்லை என்பதாம்; "கும்பிடப் பெற்று மண்ணிலே வந்த பிறவியே எனக்கு வாலிதா மின்பமாம்" என்ற கருத்து; என்று - என்ற பொருள் கொண்ட பதிகம் பாடியருளி; இப்பதிகமும் கிடைத்திலது!

மீண்டு - முன் 3244-ல் உரைத்தபடி இறைவர் வயமேயாகித் தன்னை மறந்த அழுந்திய நிலையினின்றும் வெளிப்பட்ட நிலையின் மீண்டு என்க.

எழுந்தருளுதற்கெழுவார்-அங்கு நின்றும் புறப்பட்டுச் செல்வதற்கு எழுவாராகி; எழுவார் - நீங்கி - என மேல்வரும் பாட்டுடன் முடிக்க. இவ்வாறன்றி, உலகியல் வழக்கில் போகின்றேன் என்னாது, வருகின்றேன் - போய்வருகின்றேன் என்று விடைபெறும் மரபுக்கு ஏற்ப இங்கு உரைத்துக்கொள்வதுமாம். 91

3246. (வி - ரை) ஆயிடை நீங்கி - ஆயிடை - அவ்விடத்தினின்றும்; இடை- இடம்; இடையினின்றும். நீக்கப் பொருளில் வரும் ஐந்தனுருபு தொக்கது.

அருளினால் - அருள்விடை பெற்று.

அருவரை...கடந்து - கற்சுரங்களுங் கட்டாறுகளுமாயுள்ளன மேல் கொங்கு நாட்டின் நிலையும் அதனை ஒட்டிய கீழ் கொங்கின் நிலையுமாம். "கானகமுந், துன்று மணிநீர்க் கான்யாறுந் துறுகற் சுரமுங் கடந்தருளி" (வெள்-சருக்-15), "கற்சுரமு நீளருங் கான்யாறு நெடுங்கானும் பலகழிய" (கழறிற். புரா. 164) முதலியவை பார்க்க.

பதிபல - இவை - மூலனூர், தென்னிலை, கருவூர் முதலாயின என்பதும்,

நதிகள் - அமராவதி - நன்காஞ்சி - சிற்றாறு - குழகனாறு முதலியன என்பதும் கருதப்படும்.

வெஞ்சமாக் கூடல் - கொங்கு நாட்டுப் பாடல் பெற்ற பதிகளுள் ஒன்று. தலவிசேடம் பார்க்க.

சேயிடைகழிய - இடையிலே பட்ட நெடுந்தூரம் நாடு கடந்து.

தென்றிசை - கொங்கு நாட்டின் தெற்குத் திசையில் உள்ள. 92

## திருவெஞ்சமாக்கூடல்

திருச்சிற்றம்பலம் பண் - கொல்லிக்கௌவாணம்

எறிக்குங் கதிர்வே யுதிர்முத் தமொடு மிலவங்கத் தக்கோல மிஞ்சி [கரைமேல்
செறிக்கும் புனலுட் பெய்து கொண்டு மண்டித் திளைத்தெற்று சிற்றா றதன்கீழ்க்
முறிக்குந் தடமா முடப்புன்னை ஞாழல் குருக்கத் திகண்மேற் குயில் கூவலரு
வெறிக்குங் கலைமா வெஞ்சமாக் கூடல் விகிர்தா வடியேனையும் வேண்டுதியே. (1)

வஞ்சிநுண் ணிடையார் மயிற்சா யனல்லார் வடிவேற் கணல்லார் பலர்வந்திறைஞ்சும்
வெஞ்சமாக் கூடல் விகிர்தா வடியேனையும் வேண்டுதியே யென்றுதான் விரும்பி
வஞ்சியா தளிக்கு வயனு வலர்கோன் வனப்பகை யப்பன் வன்றொண்டன் சொன்ன
செஞ்சொற் றமிழ்மாலைகள் பத்தும் வல்லார் சிவலோ கத்திருப்பது திண்ணமன்றே.

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—"வெஞ்சமாக்கூடல் விகிர்தா! அடியேனையும் வேண்டுதியே!" என்ற கருத்து; பதிகம் 10-வது பாட்டும், பதிகத்தின் மகுடமும் பார்க்க.

பதிகப் பாட்டுக் குறிப்பு ;—(1) எறிக்கும் - காற்றினால் மிகவும் அசைக்கப்பட்டு மோதும்; வேயுதிர் கதிர்முத்தம் என்க; முத்துக்கள் பிறக்கு மிடங்களுள் மூங்கிலுமொன்று; முத்தம் - இலவங்கம் - தக்கோலம், இஞ்சி இவை மலைபடு பண்டங்கள். இங்குக் குறிஞ்சி நிலப்பகுதியாதலானும், சிற்றாறு கோடைக்கானல் மலைத் தொடரிற் சேர்ந்த பெருமாள்மலை, வராகமலைகளினின்றும் தோன்றிப் பெருகி வருதலாலும் குறிஞ்சிக் கருப்பொருளாகிய இம்மலைப் பண்டங்களை அலைத்து வருதல் கூறினர். மேல் வரும் பாட்டுக்களிலும் இவ்வாறே கண்டுகொள்க. "காடும் மலையும் நாடு மிடறிக் கதிர் மாமணி சந்தனமும் மகிலுஞ், சேடனுறையும், மிடந்தான் விரும்பித் திளைத்தெற்று சிற்றாறு" (8) என்று இதனை நம்பிகள் நன்கு தெரித்தருளுதல் காண்க. வெறிக்கும் கலைமா - தம்மிச்சையாய் ஓடித் திரியும் கலைமான் கூட்டம்; வெஞ்சன் என்ற அசுர அரசனது தலைநகரமாதலின் வெஞ்சமாக்கூடல் எனப் பெயர்பெற்றது. கூடல் - குழகனாறும் சிற்றாறும் கூடுகின்றமையால் போந்த பெயர். மேல் அணிமையில் இது நன்காஞ்சி நதியுடன் கூடி அமராவதியினுடன் கூடிப் பெருகி ஓடுகின்றது; விகிர்தன் - இப்பதியின் சுவாமி பெயர். வேண்டுதியே - ஏகாரம் விரும்பி ஆட்கொள்வையோ? என்ற வினக்குறிப்பு; வேண்டுதி என்ற விண்ணப்பமுமாம்; முடப்புன்னை - நேரே வளராது முடங்கிக்கொண்டு கோணல்களுடன் வளரும் இம்மரத்தினியல்புணர்த்தியது. மேல், நெடுந்தாட்டெங்கு, குறுந்தாட் பலவு, நிரையார் கமுகு என்பனவாதியாக வருதல் காண்க. தமிழ் நயமும் காண்க; செறிக்கும் புனல் - துளங்கும் புனல் - திரையார் புனல் - முதலியன சிற்றாற்றின் நீர் செறிந்த தன்மை குறிப்பு;—(2) மணி, சந்தனம், அகில் - மலைபடு பண்டம்; மதில் மாளிகை, கோபுரம், மண்டபம் - இவை இந்நகர் முன்னாளிற் செழித்தோங்கிய அரசன் றலைநகராயிருந்த நிலை குறித்தன; கழுது முதலியவை பொழிலாகச் செழித்த மருத நில வளங்கள்; சிற்றாறு பிறந்த இடம் மலைசார்ந்த குறிஞ்சிநில மென்பதும், அது பாய்ந்து வளஞ் செய்வது மருதநில மென்பதும் குறிப்பு;—(4) அகில் - சாமரை - முதலியவை குறிஞ்சிக் கரு. சாமரை - சாமரையாகப் பயன்படும் கவரிமான் வால்மயிர் குறித்தது; காரிய ஆகுபெயர்; நலசாமரை - ஆலயங்களினும் பெரியோரிடத்து உபசாரப் பொருள்களாய் நன்மைதரப் பயன்படுதல் குறிப்பு; அரங்கு - ஆடல் பயிலுமிடம்:—(5) துளை வேண்

துழை - சங்கினைத் துளைத்து எடுத்து வடிவாக்கிய குழை; " சங்கக் குழையார் செவியா " (தேவா); சுருள் - ஓலைச் சுருளாலாகிய ; சுருள் போன்றமைந்த ; தூங்கும் - தொங்கும் ; வடிந்த காது ; களேயே - கள் ; தேன் ; கள்ளையே என்பது எதுகை நோக்கிக் களேயே என நின்றது ; பிள்ளை என்பது பிளே என நின்றது. வெள்ளை என்பதும் இவ்வாறே;—(6) உழவார்க்கரிய - உழவில் எவர்க்குமரிய ;—(7) நரையேறு - வெள்ளை விடை ; துந்தி - உச்சிக்கொண்டை ; படத்தின் உச்சி ; படம் ஆயிரம்...அரவு - இறைவர் பூணும் பாம்பின் இயல்பு குறித்த அடைமொழிகள் ;—(8) காடு, மலை, நாடு - குறிஞ்சி - முல்லை, மருதம் என்ற திணைகளையும் குறித்தன ; சேடனுறையும் இடம் - பாதாள உலகம் ; விரும்பி - நோக்கி ; கடலினை நேரே சென்று சேராமைபால் விரும்பி என்றார் ; வேடர் - திருவேடத்தார் ; நிலம்பற்றி வேடர் - குலங்குறித்த தென்றலுமாம் ;—(9) கோங்கு - மணம் ; நாடு குறித்ததென்றலுமாம் ; கோடுகோட்டி-இயம் ; வீணை-கையில் ஏந்திய நிலை ; " மிக நல்ல வீணை தடவி " " நல்வீணை வாசிக்குமே " (தேவா); துங்கார் புனல் - பெரிய நீர் ; பெருமையுடைய என்றலுமாம் ; வெங்கார் - வெம்மை - விருப்பம் ;—(10) இடையும் சாயலும் கண்ணும் - சிறந்த இயல்பு குறித்தன ; நல்லார் - பெண்கள் ; வஞ்சி - கொடி ; " வெஞ்சமாக்கூடல்...வேண்டுதியே " என்றுதான் விரும்பி - நம்பிகள் பதிகக் கருத்தினை எடுத்துக் காட்டியவாறு ; வஞ்சியாதளிக்கும் வயல் - என்றது செய்திக்குத் தக்கவாறு மருது வளர்ந்தரும் ; " செய்பவர் செய்திப் பயன் விளைக்குஞ் செய் " (போதம்); வஞ்சியாதளிக்கும் நாவலர்கோன் - என்று கூட்டியுரைப்பினுமமையும்.

தலவிசேடம் :—திருவெஞ்சமாக்கூடல் - இது கொங்கு நாட்டுப் பாடல் பெற்றதலங்கள் ஏழனுள் ஐந்தாவது பதி ; வெஞ்சன் என்னும் அசுரஅரசனது தலைநகரமாதலின் இப்பெயர் பெற்றது. கோட்டையின் அடையாளங்கள் காணப்படுவன; ஊர் மண்மேடிட்டுப்போய்க், கோயில் பள்ளத்தில் இருக்கின்றமை இதன் பழைமையைக் காட்டும் அடையாளங்களுள் ஒன்று; சுவாமி பெயர் பதிகப்பாட்டுத்தோறும் உள்ளது ; குழகனாறு என்னும் சிற்றாறு கோயிலின் மேல்புறம் அணிமையில் ஓடுகின்றது ; சுவாமி - விகிர்தேசுவரர் ; அம்மை - விகிர்தேசுவரி ; தீர்த்தம்-குழகனாறு; பதிகம் 1. இது கருவூரினின்றும் தென்மேற்கில் அரவக்குரிச்சிக் கற்சாலைவழி 10 நாழிகையளவு சென்று பின் தெற்குநோக்கி மட்சாலைவழி 2½ நாழிகையளவில் அடையத் தக்கது. சிற்றாறு என்னும் குழகனாற்றின் தென்கரையில் உள்ளது.

திருப்பேரூர் - (வைப்புத்தலங்களுள் ஒன்று) ; இத்தலத்துக்கு நம்பிகள் எழுந்தருளிப் பதிகம் பாடின செய்தி புராணத்துட் கூறப்பட்டது ; பதிகமிருந்து இறந்து போயிருக்க வேண்டும் ; நம்பிகள் ஊர்த்தொகையிற் " பேரூ ருறைவாய் பட்டிப் பெருமான் பிறவா நெறியானே " என்று போற்றி யருளியுள்ளார் ; நம்பிகளது கோயிற் பதிகத்தினுள் இத்தல இறைவர் தில்லையம்பலத்தில் நம்பிகளுக்கு ஆடல் காட்டக் கண்டு அருளிய சிறப்புப் போற்றப்பட்டது ; சுவாமி பெயர் திருவான்பட்டியுடையார் என்பது பழங்காலத்துக் கல்வெட்டுக்களிற் கண்டது. இப்பெயர் அரசுகளது காப்புத் திருத்தாண்டகத்தினுள்ளும் (10) " ஆன்பட்டியும் " என்று போற்றப்பெற்றுள்ளது. இப்பதி ஆதிபுரி, பிறவாநெறி முதலாகப் பற்பல காரணப் பெயர்களையுடையது. காஞ்சிநதி, பிரமதீர்த்தம் முதலிய பல சிறந்த தீர்த்தங்களையுடையது; காஞ்சி நதி, தேவாரத்தில் அணிகாஞ்சி எனப்பெற்ற பெருமையுடையது ; இதனுள் இடப்பட்ட எலும்புகள் கல்லாய் விளைவது இன்றும் காணலாம். பிரமதீர்த்தம்

எவ்வகைநோய்களையும்போக்கிச் சுகந்தரும் குணமுடையது; இன்றும் காணத் தக்கது. நாரதர், காலவர், விசுவாமித்திரர், பட்டிமுனி, கோமுனி, காமதேனு, இந்திரன் முதலியோர் வழிபட்டுப் பேறு பெற்றமையும்; முசுந்தன், கரிகாற் சோழன், குசத்து வசன், குலசேகரன், திரிலோக சோழன் முதலிய அரசர்கள் வழிபட்டுப் பேறுபெற் றமையும், பிற சிறப்புக்களும் தல புராணத்தினுள் பேசப்பட்டன. கச்சியப்ப முனிவ ரியற்றிய இத்தலபுராணம் சிறந்து விளங்கும் பெருமையுடையது. மதுரை அழகாத் திரி நாயக்கரால் அமைக்கப்பட்ட கனகசபை சிறந்த சிற்பவிளக்கமுடையது; ஏறக் குறைய60 ஆண்டுகளின் முன் வாழ்ந்த கோயமுத்தூர் வித்வான் கந்தசாமி முதலியார் (அடியேனது தந்தையார்) இப்பதியிற் பேரன்பு பூண்டு பல திருப்பணிகள் செய்த தோடு திருப்பேரூர்க் கிள்ளைவிடுதூது, பேரூர் மும்மணிக் கோவை, பேரூர்ப் பச்சை நாயகியம்மையார் ஊசல், மரகதவல்லியம்மன் மாலை, போற்றிக் கலிவெண்பா, பச்சைநாயகியம்மையார் ஆசிரிய விருத்தம் முதலிய பிரபந்தங்கள் பலவற்றையும் இயற்றியுள்ளார்கள்; இவையேயன்றி பேரூர்ப் பட்டிப்புராணம் என்னும் பிறவா நெறிப் புராணம், பச்சைநாயகியம்மை பிள்ளைத் தமிழ், அரசம்பல விருத்தம், திருப் பேரூர்ச் சிலையறுத்தான் வண்ணம், கண்ணாடி விடுதூது, விளக்குவிடுதூது, மரகத மஞ்சரி, பட்டீச்சுரக்கோவை, பச்சைநாயகியம்மன் பந்தடி, திருப்பேரூர் பட்டி விநாயகர் ஆனந்தக் களிப்பு, மருதாசலபதி தாய்மகளேசல், உயிர்வருக்க மாலை முத லிய நூல்களும், பிரபந்தங்களும், தனிப் பாடல்களும் உண்டு.

இது கோயமுத்தூர் நிலயத்தினின்றும் மேற்கே கற்சாலைவழி மூன்று நாழிகை யளவில் அடையத் தக்கது. மோட்டார்பஸ் வசதியுண்டு.

வேறு

3247. வீடு தருமிக் கற்குடியில் விழுமி யாரைப் பணிந்திறைஞ்சி
நீடு விருப்பிற் றிருப்பதிக நிறைந்த சிந்தை யுடன்பாடிப்,
பாடும் விருப்பிற் றொண்டருடன் பதிகள் பலவு மணைந்திறைஞ்சித்
தேடு மிருவர் காண்பரியார் திருவாறை மேற்றளி சென்றடைந்தார்.

(இ - ள்) வீடு...பாடி - முத்திதரும் இந்தக் கற்குடிமலையில் விழுமிய நாதரைப் பணிந்து நிலமுற வீழ்ந்திறைஞ்சிப், பெருவிருப்பினாலே அன்பினால் நிறைந்த சிந்தை யோடு திருப்பதிகம்பாடி; பாடும்...இறைஞ்சி - மேலும் திருப்பதிகங்கள் பாடித் துதிக்கும் விருப்பினாலே திருத்தொண்டர்களுடனே பற்பல பதிகளையும் சென்று வணங்கி; தேடும்...அடைந்தார் - மேலும் கீழுமாகத் தேடிய மால் பிரமர் இருவர்க் கும் காண்பதற்கரியவராகிய சிவபெருமானது திரு ஆறை மேற்றளியினைச் சென்று அடைந்தருளினர்.

(வி - ரை) இக்கற்குடி - கற்போர் மனம் நம்பிகளுடன் அப்பதியினில் அடைந்திருந்தலால் இகரச்சுட்டினாற் கூறினர்.

விழுமியார் - கற்குடி யிறைவரது பெயர். "கற்குடியில் விழுமியானைக் கற் பகத்தை" (தாண்டகம்); "கற்குடிக் கற்பகத்தை" (நம்பிகள்).

பணிந்திறைஞ்சி - பணிதல் - அஞ்சலிகூப்பி வணங்குதல்; இறைஞ்சுதல் - நில முற வீழ்ந்து வணங்குதல்.

பாடும் விருப்பில் - மேலும் மேலும் சென்று அங்கங்கும் பாடித் தொண்டு செய்யும் விருப்பினாலே; "அருச்சனை பாட்டேயாகும் ஆதலான் மண்மே னம்மைச்

வேஞ்சமாக்கூடல் படங்கள்
(பாட்டு - 3246)

கொடுமுடி



அம்மை கோயில் விமானமும் முன்கோபுரமும்
(கோயிலினுள் தென்மேற்கிலிருந்து பார்வை)



வெள்ளம் கரைபுரளும் சிற்றுறும்
அதன் கரையிற் கோயிலும்
(குடகனுறு = குழகனுறு)



(வெள்ளம் கரைபுரண்டோடும் காட்சி)



கொடுமுடி
பிரமதேவர் கோயில் கொண்டுள்ள வன்னிமரம் ;
அதனை அடுத்து மகாலட்சுமி கோயில் ;
அதனை அடுத்து விஷ்ணு கோயில் ;
இறைவனை வழிபட்டுப் பிரமவிட்டுணுக்கள் பின்புறம்
அமர்ந்து உள்ளார்கள்



கோயில்

(பவாநி) திருநணு படங்கள் (பாட்டு - 2225)



முன்கோபுரம் - (உட்புறமிருந்து பார்வை)
தலமரம் - (இலந்தை - பதரிவனம்)



கோயிலுள்ள வெளிச்சத்தில் தென்மேற்கில் உள்ளன



**பவாநி ஆறும் கோயிலும்**
(மேற்கிலிருந்து பார்வை)

சொற்றமிழ் பாடுக " என்று, தடுத்தாட்கொண்ட ஞான்று ஆண்டவர் பணித்தருளி யமையால் அத் திருத்தொண்டு செய்யும் விருப்பினால் என்றது குறிப்பு.

**பதிகள் பலவும்** - இவை, திருச்சிராப்பள்ளி, திருவெறும்பியூர், திருவேங்கூர், திருக்காட்டுப்பள்ளி, திருவாலம் பொழில், திருப்பூந்துருத்தி, திருக்கண்டியூர், திருவேதிகுடி, திருத்தண்டங்குறை, திருப்புள்ள மங்கை ஆலந்துறை, திருச்சக்கரப் பள்ளி, திருப்பாலைத்துறை, திருச்சேலூர், திருநல்லூர் முதலியன என்பது கருதப் படும்.

குறிப்பு:—திருச்சிராப்பள்ளியினின்றும் காவிரி, குடமுருட்டியாறு, இவற்றின் தென்கரை வழி அடுத்து ஒரு பாதை நீளச்செல்கின்றது; அது அரசங்குடியினின் றும் திருக்காட்டுப்பள்ளிவரை (10 நாழிகை) சிற்றடிப் பாதையாகவும், பின்பு பெரும் பாதையாகவும் உள்ளது; இது சுருங்கிய நேர்வழியாதலின் இவ்வழியே நம்பிகள் சென்றிருத்தல் கூடுமென்பது கருதி மேல் உரைக்கப்பட்டது.

**தேடும் இருவர்** - அடியும் முடியும் தேடும் மாலும் அயனும்.

அக்கற்குடி—என்பதும் பாடம். 93

## திருக்கற்குடி

திருச்சிற்றம்பலம் பண் - நட்டராகம்

விடையா ருங்கொடியாய் வெறி யார்மலர்க் கொன்றையினாய்
படையார் வெண்மழுவா பர மாய பரம்பரனே
கடியார் பூம்பொழில்சூழ் திருக் கற்குடி மன்னி நின்ற
அடிகே ளெம்பெருமா னடி யேனையு மஞ்ச லென்னே. (1)

அலையார் தண்பொழில்சூழ்ந் தழ காகி விழவமருங்
கலையார் மாதவர்சேர் திருக் கற்குடிக் கற்பகத்தை
இலையார் வாணுதலாள் நல்ல சிங்கடி யப்பனுரை
விலையார் மாலைவல்லார் வியன் மூவுல காள்பவரே. (10)

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு** :—திருக்கற்குடி மன்னிநின்ற எம்பெருமானே! அடியேனையும் அஞ்சலென்னே; என்று நீடுவிருப்பிற் றிருப்பதிகம் நிறைந்த சிந்தையுடன் பாடியது.

**பதிகப் பாட்டுக் குறிப்பு** :—(1) **பரம்** - எப்பொருளுக்கும் அப்பாற்பட்டவர்; " அடியேனையும் அஞ்சலென்னே " பதிகத்தின் கருத்தும் மகுடமுமாம்; **அடிகேள்** - பெரியோரே;—(2) **அறவா** - " அற வாழி யந்தணன் " (குறள்);—(3) **மலைமேல் மா மருந்தே** - இங்கு மலையில்மேல் மன்னி நின்ற மருந்து போல்வார் என்றும், மலையில் உள்ள மருந்துப் பண்டங்கள் போலச் சிறந்தவர் என்றும் உரைக்க நின்றது;—(5) **சந்து** - பெருமை; புகழ்; **கந்து** - மணம்; **ஏன்று கோள்ளுதல்** - ஏற்றுக் கொள்ளுதல்; வீழ்ந்து படாமல் தாங்கிக்கொள்ளுதல்;—(7) **தணியாத** விருப்பம் விளைக்கும்;—(8) **நிலனே... ஆகி** - ஐம்பூதங்களையும் திருமேனியாகக் கொண்டு; இவை இறைவரது எட்டு மூர்த்தங்களுள் வருவன; **புலனே** - அறியப்படுபவன்; **கனலே** - அழற்றூணாய் நின்றவரே!;—(9) **பெரும் பாலன்** - மார்க்கண்டேயர்; **விரும்பா** - விருப்பம் விளைப்பவரே!

குறிப்பு:—8-வது திருப்பாட்டில் லகாரமும் னகாரமும் எதுகையாக வந்தன.

**தலவிசேடம்**:—திருக்கற்குடி - III பக். கௌ பார்க்க.

3248. செம்பொன் மேருச் சிலைவளைத்த சிவனா ராறை மேற்றளியில்,
நம்பர் பாதம் பணிந்திறைஞ்சி நாளு மகிழ்வார்க் கருள்கூட
உம்பர் போற்றுந் தானங்கள் பலவும் பணிந்து போந்தணைவார்
இம்பர் வாழ வின்னம்பர் நகரைச் சேர வெய்தினார். கூச

(இ - ள்) செம்பொன்...மகிழ்வார்க்கு - செம்பொன் மேருமலையை வில்லாக வளைத்த சிவபெருமானாரது திரு ஆறை மேற்றளியிலே இறைவரது திருவடிகளைப் பணிந்து நாடோறும் மகிழ்ந்து எழுந்தருளிய நம்பிகளுக்கு; அருள்கூட - மேலும் பதிகள் சென்று வணங்கும்படி திருவருள் விடைகூடியதனாலே; உம்பர்...அணைவார் - தேவர்கள் வந்து வணங்கும் பதிகள் பலவற்றையும் வணங்கிச் சென்று போந்து அணைவாராகி நம்பிகள்; இம்பர்...எய்தினார் - இவ்வுலகிலுள்ளார் வாழும் பொருட்டுத் திருவின்னம்பரினைச் சேரச் சார்ந்தருளினர்.

(வி - ரை) மேருச் சிலை வளைத்த - மேருவைச் சிலையாக (வில்லாக) வளைத்த என்றும், மேருவாகிய சிலை (மலை)யினை வளைத்த என்றும் இரட்டுறமொழிய நின்றது.

மகிழ்வார்க்கு - அருள்கூட - மகிழ்வுற எழுந்தருளும் நம்பிகளுக்கு மேற் செல்லும்படி திருவருள் விடையும் குறிப்பும் கூடியதனாலே; கூட - காரணப் பொருளில் வந்த வினையெச்சம்.

உம்பர் போற்றும் - சிவ வழிபாட்டுக்குரிய சாதனங்கள் விண்ணுலகிற் பெருமையாலே இப்புவனியில் வந்து வழிபடும் என்க. "புவனியிற் போய்ப்பிற வாமையி னாளும் போக்குகின் றோமவ மேயிந்தப் பூமி, சிவனுய்யக் கொள்கின்றவாறு" (திருவா.)

தானங்கள் பலவும் - பல பதிகளையும். இவை திருச்சத்திமுற்றம், திருப்பட்டீச்சுரம், திருப்பழையாறை, திருப்பழையாறை வடதளி, திருவலஞ்சுழி முதலாயின என்பது கருதப்படும். இதுவரை கிழக்கு நோக்கிப் போந்தருளிய நம்பிகள் இங்குக் குடமுருட்டி, காவிரியாறுகளைக் கடந்து, வடக்கு நோக்கிச் சென்றணைகின்றார். இனிச்சாரும் திரு இன்னம்பரும், அதன்மேற் சென்றருளும் திருப்புறம்பயமும் வடக்கு நோக்கிய யாத்திரையினைக் குறிக்கின்றன; இது "அங்க மோதியோர் ஆறை மேற்றளி நின்றும் போந்துவந் தின்னம்பர்த், தங்கி னோமையு மின்ன தென்றில ரீச னாரெழு நெஞ்சமே...புறம்பயந் தொழப் போதுமே" என்ற தேவாரத் திருவாக்கின் அகச்சான்றினால் விளங்கும் சரித ஆதரவு பெற்றது.

இம்பர் வாழ - மாதவஞ் செய்த தென்றிசை வாழ்ந்திடவே (35) நம்பிகள் திருவாணைக் குறிப்பின்படி வந்தவதரித்தா ராதலின் இம்பர் வாழ என்றார்; நம்பிகளின் அருளிப்பாடுகளினால் உலகம் பயன் பெற்று ஈடேறுதல் குறிப்பு.

வாழும்—என்பதும் பாடம். 94

திருவாறை மேற்றளி - இதன் பதிகம் கிடைத்திலது!

தலவிசேடம் :—திருவாறை மேற்றளி - அமர்நீதி நாயனார் புராணத் திறுதியில் - I-பக்கம் கூஅஅ பார்க்க.

3249. ஏரின் மருவு மின்னம்பர் மகிழ்ந்த வீசர் கழல் வணங்கி
ஆரு மன்பிற் பணிந்தேத்தி யாரா வருளா லங்கமர்வார்
போரின் மலியுங் கரியுரித்தார் மருவும் புறம்ப யம்போற்றச்
சேரு முள்ள மிக்கெழமெய்ப் பதிகம் பாடிச் செல்கின்றார்; கூரு

வேறு

3250. "அங்க மோதியோ ராறை மேற்றளி" யென்றெ டுத்தமர் காதலிற்
பொங்கு செந்தமி ழால்விரும்பு "புறம் பயந்தொழப் போதுமென்"
றெங்கு மன்னிய வின்னி சைப்பதி கம்பு னைந்துட னெய்தினார்
திங்கள் சூடிய செல்வர் மேவு திருப்பு றம்பயஞ் சேரவே. கூகூ

3249. (இ - ள்) ஏரின்...அமர்வார் - அழகினாலே பொலிகின்ற திருவின் னம்பரில் மகிழ்ந்தெழுந்தருளிய இறைவரது திருவடிகளை வணங்கி நிறைந்த அன்பி னாலே பணிந்து துதித்து தெவிட்டாத அருளினாலே அங்கு விரும்பித் தங்குவாராகிய நம்பிகள்; போரின்...செல்கின்றார் - போர்த் தொழிலின் மிக்க யானையினை உரித் தருளிய இறைவர் எழுந்தருளிய திருப்புறம்பயத்தினை வழிபடுதற்குச் சென்று சேரும் திருவுள்ளத் தன்பு மீக்கூர மெய்த்திருப்பதிகத்தினைப் பாடிக் கொண்டு செல் கின்றாராகி, கரு

3250. (இ - ள்) அங்கமோதி...என்று - "அங்க மோதியோ ராறை மேற் றளி" என்று தொடங்கி விருப்பமிக்க ஆசையினாலே பொங்கும் செந்தமிழினாலே தாம் "விரும்பும் புறம்பயந் தொழப்போதுமே" என்று; எங்கும்...புனைந்து - எங் கும் நிலைபெற்ற இன்னிசையினையுடைய திருப்பதிகத்தை அருளிச் செய்து; திங் கள்...சேரவே சந்திரனைத் தரித்த செல்வராகிய சிவபெருமான் எழுந்தருளியுள்ள திருப்புறம்பயத்தினைச் சேரும்படி; உடன் எய்தினார் - உடன் சென்றருளினார். கூகூ

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3249. (வி - ரை) ஏரின் மருவும் - ஏர் - அழகு.

ஆரும் அன்பில் - ஆராஅருளால் - ஆரும் - ஆரா - முரண் அணிச்சுவைபடக் கூறியது; அன்பு நிறைவுபடும்; அருள் எஞ்ஞான்றும் தெவிட்டாது பெருகும்.

பணிந்து ஏத்தி - இப்பதிகம் கிடைத்திலது!

சேரும் உள்ளம் மிக்கெழ மெய்ப் பதிகம்பாடிச் செல்கின்றார் - ஒரு பதியினை நோக்கிச் செல்லும்போதே அதனைச் சேர்வோம் என்று துதித்துக்கொண்டே செல்லு தல் அதில் வைத்த ஆர்வப் பெருக்கினைக் காட்டுவதாம். "முதுகுன் றடைவோமே" "சோற்றுத் துறை சென்றடைவோம்" "காழிசேர்மினே" (தேவா) முதலியவை காண்க. உள்ளம் - உள்ளத்தின் வேட்கை குறித்தது. "நினைத்தன" (பதிகம்).

பாடிச் செல்கின்றார் - பாடியவாறே செல்வாராகி; பதிகம் மேற்பாட்டில் விரிக்கப்படும்.

மெய்ப் பதிகம் - "மெய்த் திருவாக்கெனு மமுதம்" (2986); மெய்ம்மை - அழிவுறாத சத்தாந்தன்மை. 95

3250. (வி - ரை) அங்கமோதி...என்றெடுத்து - பதிகத் தொடக்கமாகிய முதற் குறிப்பு.

அமர் காதல் - மிக்க காதல்; அமர்தல் - பிறழாது நிறைவுறுதல்; விரும்புதல் என்றலுமாம்.

காதலிற் பொங்குதலாவது மீக்கொண்ட காதல் காரணமாக ஊற்றெடுத்து மேன்மேல் வழிதல் போலத் தடையிலாது முயற்சியின்றித் தானே வருதல்.

செந்தமிழ் இன்னிசை - இயலும் இசையும் கூடிய நிலை குறித்தது; இசை - சொல்லியாகிய பண்ணமைதியும் தாள அமைதியும் யாப்பமைதியும் ஆகிய நிலை யெல்லாவற்றின் தொகுதி; "தமிழ்ச் சீரினால்" என்பது பதிகம். (10)

" புறம்பயந் தொழப் போதும் " என்று - இது பதிகக் குறிப்பும் கருத்துமாகிய மகுடம்; பதிகத்தின் " புறம்பயந் தொழப் போதுமே " என்று பாட்டுத்தோறும் முடிபு வருதல் காண்க. உடன் - விரைவாக; ஆர்வங் குறித்தது.

செல்வர் - முத்திச் செல்வமுடையவர்; " செல்வப் புறம்பயம் " என்பது பதிகம்.

சேரவே - எய்தினார் என்று கூட்டுக. வினைமுற்று முன் வந்தது செயல் முற்றின விரைவு குறித்தது. 96

திருப்புறம்பயம்

திருச்சிற்றம்பலம். பண் - கொல்லி

அங்க மோதியோ ராறை மேற்றளி நின்றும் போந்துவந் தின்னம்பர்த்
தங்கி னோமையு மின்ன தென்றில ரீச னாரெழு நெஞ்சமே
கங்கு லேமங்கள் கொண்டு தேவர்க ளேத்தி வானவர் தாந்தொழும்
பொங்கு மால்விடை யேறி செல்வப் புறம்ப யந்தொழப் போதுமே. (1)

துஞ்சி யும்பிறந் துஞ்சிறந் துந்து யக்க றாதம யக்கிவை
யஞ்சி யூரன் றிருப்பு றம்பயத் தப்ப னைத்தமிழ்ச் சீரினால்
நெஞ்சி னாலே புறம்ப யந்தொழு துய்து மென்று நினைத்தன
வஞ்சி யாதுரை செய்ய வல்லவர் வல்லர் வானுல காள்வரே. (10)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—ஆசிரியர் முன் காட்டியருளியவாறு கண்டு கொள்க. (3250); பிறவியிறவிகளின் மயக்கினை உலகர் நீங்க வடையும் சாதனங்களை உபதேசித்தது உட் குறிப்பு. (பதிகம் 10)

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) அங்கம் - வேதாங்கங்களாகிய ஆறு; ஓர் - எண்ணு கின்ற; இன்னதென்றிலர் - அருள் செய்தாரிலர்; கங்குல் ஏமங்கள் - இரவில் உரிய யாமங்கள்; கொண்டு - காலங் குறிக்கொண்டு; ஏறி - பெயர்; ஏறியவருடைய;—(2) பதி - ஊர்; பண்டையரல்லர் - பண்டைக் காலந் தொட்டு உடனுள்ளவரல்லர்; இடையில் வந்து இடையில் நீங்குபவர்; சிவன் ஒருவரே " பண்டு மின்றும் என்று முள்ள பொருளாவார் "; ஆதலின் - என்பது சொல்லெச்சம்; பெண்டிரும் - வாழ்க் கையும் நிலையென்ற நினைப்பொழி; எல்லி - இரவு; மல்லிகை - சண்பகம் முதலிய பூக்கள் மாலையில் மலர்ந்து இரவு முழுதும் மணம் வீசு மியல்புடையன;—(3) புறம்...தளர்ந்து - இவை மூப்பின் முடுகிய நிலை; தளர்ந்து...ஆண்மை - அவ்வாறு தளர்ந்தபின் அறத்தினை இடைவிடாது நினைப்பதும் செய்தலும் ஆளுதலும் அரிய; திறம்பியாது - ஆதலின் திறம்புதலின்றி; தயங்காமல் - தாமதியாமல்; ஆதலின் என்பது சொல்லெச்சம்; சிறுநாலை நாம் உறு வாணிபம் - சிறுபோ திலே; விரைவிலே; ஈண்டு அறம் - சிவ தர்மம்;—(4) குற்றெருவரை... தீண்ணமே - குற்று - அடித்து, கூறைகொண்டு - துணியினையும் வழிப்பறி செய்து; கொலைகள் சூழ்ந்த களவு - கொலையும், எண்ணமிட்டுச் செய்த களவும்; குற்றுதல் - கொலை வகையும், கூறைகொள்ளுதல் - களவு வகைகளும் குறித்தன; எல்லாம் இத்தீமைகளின் பலவகைகள் எல்லாம்; சேற்றெருவரை...தீமைகள் - கொலை களவாதியாகப் பிறரைச் செறுத்துச் செய்யும் தீங்குகள்; தீமைகள் இம்மையே வரும் - தீமைகளின் பயன் இம்மையிலேயே வந்து, செய்தார்

பாற்சாரும்; இது கன்ம நியதி - இறைவரது ஆணை; தீமை - தீமையின் பயன்; திண்ணம் - உறுதி; தவறாத உறுதிப்பாடு; இம்மை வினைப் பயன் மறுமையில் வரும் என்பர்; ஆனால் இக் கலிகாலத்தில் இம்மையே வரும் என் பதும், மிக்க நல்வினையும் தீவினையும் இம்மையே பலிக்கும் என்பதும் நூன் முடிபு களாம்;—(5) கள்ளி - கள்ளங்கொண்டு; கள்ளமாக; பறையும்படி - நீங்கும்படி; தேள்ளிதா - தெளிவு பெற்று; நள்ளி - நண்டு;—(6) பகடு - தேர்; கடை - இறு தியில்; தேரைவால் - தேரையில் வால் எவ்வாறு காணப்படாது தேய்ந்துள்ளதோ அதுபோல இல்லையாகும் என்பது. உருவகம்;—(7) முன்னை...ஆதலின் - இஃது உண்மை நூல்களின் றுணிபு; முன்னமே - அங்ஙனம் மூடும் முன்னமே; தியக்கர்து- மயங்காது; புன்னைக்கன்னி - புன்னை அரும்புகள்; கழிக்கண் நாறும் - கழி - கடற் கழி; புன்னை நெய்தற் கருப்பொருளாதலின் கடற்கழி யருகில் மலர்ந்து மணம் தரு வன; கழியின் தீ நாற்றத்தை மாற்றி மேலெழுந்து மணந் தரும் என்பதும் குறிப்பு;—(8) மலம் - மும்மலங்களும்; வல்வினை - பழவினை - மூலமலங்களின் பயன்; சலம் - சஞ்சலம்; துயர்;—(9) பண்டு...பாவமும் - பழமலங்கள்; தீமையும் அதனால் வரும் பாவமும்; அரியன - அரியசாதனங்கள்; தொண்டு - தொண்டாக; அடிமைத்திறத்தில்;—(10) துஞ்சியும்...அஞ்சி - பிறவியிறவிகளால் வருந்துன்ப நீங்காத மயக்கத்தினை அஞ்சி; இது பதிகத்தினுட் குறிப்பு; பிள்ளையார் தேவாரம் 5-வது பாட்டு பார்க்க. தமிழ்ச்சீர் - "எங்கும் மன்னிய இன்னிசைப் பதிகம்" (3250); நெஞ்சினாலே...நினைத்தன - "சேருமுள்ளமிக்கெழு" (3249) என்று ஆசிரியர் இதனை எடுத்துக் காட்டியருளினர்.

தலவிசேடம்:—திருப்புறம்பயம் - சோழநாட்டில் காவிரிக்கு வடகரை 46-வது பதி; 2139-ம் பாட்டின்கீழ்ப் பார்க்க.

3251. அப்ப திக்க ணமர்ந்த தொண்டரு "மன்று வெண்ணெய்நல் லூரி
ஒப்ப ருந்தனி வேதி யன்பழ வோலை காட்டிநின் றாண்டவர் [னில்
இப்ப திக்கண்வந் தெய்த வென்ன தவங்க"ளென்றெதிர் கொள்ளவே
முப்பு ரங்க ளெரித்த சேவகர் கோயில் வாயிலின் முன்னினார். கூஎ

(இ - ள்) அப்பதிக்கண்...எதிர்கொள்ளவே - அந்தப் பதியிலே வாழ்ந்த தொண்டர்களும் "அன்று திருவெண்ணெய் நல்லூரிலே ஒப்பற்ற தனியாகிய வேதியனாய் வந்த இறைவரால் பழவோலையினைக்காட்டி நின்று ஆட்கொள்ளப்பெற்ற நம்பிகள் இந்தப் பதியில் வந்து சேர என்ன தவங்களைச் செய்தோம்" என்று மகிழ்ந்து எதிர்கொள்ளவே; முப்புரங்கள்...முன்னினார் - திரிபுரங்களையும் எரித்த இறைவரது திருக்கோயிலின் வாயில் முன்பு வந்து சேர்ந்தனர்.

(வி - ரை) "அன்று...தவங்கள்" என்று - இது திருப்புறம்பயத்தின் தொண் டர்கள் எண்ணியும் சொல்லியும் மகிழ்ந்த கருத்து.

ஒப்பரும் தனிவேதியன் - "ஒப்பரும் - தனக்குவமையில்லாதான்" (குறள்); தனி - "ஒன்றே பதி" (போதம்); "தனியாய் நின்றான்" (198) "ஒருவர்" (174) என்றபடி அவ்வழக்கினும் வேறு யாரும் தன் பக்கம் சேர்வோரின்றித் தனியாய் நின்றவன் என்ற குறிப்புமாம்; தனிவேதியன் - 175 - 178 பார்க்க.

அன்று - தடுத்தாட்கொண்ட அன்று - முன்னை நாளில்; பண்டறிசுட்டு.

அன்று...ஆண்டவர் - அம்மையாரால் ஞானவமுதூட்டப்பெற்ற சிறப்பால் ஆளுடைய பிள்ளையாரையும், கன்மிதப்பிற் கடல் கடந்து போந்த தன்மையாலும்

சூலை தந்தாட்கொள்ளப்பெற்ற சிறப்பினாலும் ஆளுடைய அரசுகளையும் உலகர் தேற்றமாக அறிந்து பாராட்டுதல்போல், நம்பிகளை இச்சிறப்பினால் அறிந்து போற்றுவர். 1443 - 1484 முதலியவை பார்க்க.

எய்த - எய்தப் பெறுவதற்கு; பெறுதற்கரிய இப்பெரும் பேறு கிடைப்பதற்கு.

என்ன தவங்கள் - எத்தகைய பெருந் தவங்கள் செய்தோம்! என்று அற்புதக் குறிப்புப்படக் கூறியபடி; செய்தோம் என்பது சொல்லெச்சம்; பெருந்தவம் முன்னர்ச் செய்திருந்தாலன்றி இப்பேறு பெறுதல் அரிதென்பது கருத்து.

சேவகர் - ஆண்மையும் வெற்றியுமுடையார்; "தந்திமேல் விடைமே லழகர் சேவகஞ் செய்தவாறு" (திருவிளை. புரா - விருத் - பட 1); "புறஞ்செற்ற கொற்றச் சேவக னாமங்கள் பாடிப் பாடி" (திருவா - பொற்சு. 16)

முன்னினார் - முன்பு சார்ந்தருளினர்.

தவஞ் செய்தோ மெனவெதிர் கொள்ள—என்பதும் பாடம். 97

3252. நீடு கோபுர முன்பி றைஞ்சி நிலாவு தொண்டரொ டுள்ள ணைந்
தாடன் மேவிய வண்ண லாரடி போற்றி, யஞ்சலி கோலிநின்
றேடு லாமலர் தூவி யெட்டினோ டைந்து மாகு முறைப்பினாற்
பீடு நீடு நிலத்தின் மேற்பெரு கப்ப ணிந்து வணங்கினார். கூஅ

(இ - ள்) நீடு...அணைந்து - நீண்ட திருக்கோபுரத்தின் முன்பு வணங்கி நிலைபெற்ற திருத்தொண்டர்களுடனே திருக்கோயிலினுள் சேர்ந்து; ஆடல்...நின்று - ஐந்தொழிற் பெருங்கூத்து இயற்றும் சிவபெருமானது திருவடிகளைத் துதித்துக் கைகூப்பித் தொழுது நின்று; ஏடுலாம்...வணங்கினார் - இதழ்கள் விரிந்த புதிய மலர்களைத் தூவி எட்டு அங்கத்தாலும் ஐந்து அங்கத்தாலும் வணங்கும் முறையினாலே பெருமை நீடிய நிலத்தின்மேல் விருப்பம் பெருகப் பல முறையும் பணிந்து வணங்கினார்.

(வி - ரை) நீடுதல் - உயரத்தினாலன்றிச் சிவத்தன்மை காட்டும் பெருமையினாலும் நீளுதல்.

கோபுரம் முன்பு இறைஞ்சுதல் - கோபுரத்தைத் தூலலிங்கமாகக் கண்டு நிலமுற வணங்கியபின் திருக்கோயிலினுட் புகுதல் வழிபாட்டு முறை.

நிலவு தொண்டர் - நிலவுதலாவது அடிமைத் திறத்திற் பிறழாது நிலைபெற்றிருத்தல்; வாழ்வு - தாழ்வு முதலிய எல்லா நிலைகளினும் சலியாது அடிமை செய்தல்; "இடரினும் தளரினும்" என்ற பிள்ளையாரது திருப்பதிகமும் பிறவும் பார்க்க.

ஆடல் - ஐந்தொழில் அருட்கூத்து; பிள்ளையாரது இத்தலப்பதிகம் பார்க்க; நிலையாமைகளையும் கன்ம நிச்சயத்தையும் கூறி உலகரைத் தேற்றிய நம்பிகளது பதிகமும் காண்க. அஞ்சலி கோலி - கைகளை அஞ்சலியாகக் கூப்பி.

ஏடுலா மலர்தூவி...பணிந்து - புது மலர்களைத் தூவி நிலமுற வீழ்ந்து அட்டாங்க பஞ்சாங்கமாக வணங்கி; இது வழிபாட்டு முறை. "நின்று மலர்தூவி."

பீடு - பெருமை; பீடுநீடு நிலம் - இறைவர் கோயிற் திருமுற்றமாகும் பெருமையுடைய நிலம்; இஃது ஏனை நிலம் எதற்குமில்லாத சிறப்பு; பெருக - விருப்பம் பெருக என்றும், பலமுறையாகப் பெருக என்றும் இரட்டுற மொழிந்து கொள்க.

தொண்டருடன் பணிந்து—என்பதும் பாடம். 98

3253. அங்கு நீடருள் பெற்று ளார்வ மிகப்பொ ழிந்தெழு மன்பினாற்
பொங்கு நாண்மலர்ப் பாத முன்பணிந் தேத்தி மீண்டு புறத்தணைந்
தெங்கு மாகி நிறைந்து நின்றவர் தாமகிழ்ந்த விடங்களிற்
றங்கு கோல மிறைஞ்சு வாரருட் டாவி லன்பரோ டெய்தினார். ௯௯

(இ - ள்) அங்கு...புறத்தணைந்து - அவ்விடத்து நீடிய திருவருளினைப் பெற்று மனத்துள்ளே ஆர்வம் மிகுதலின் மேலெழுந்து பொழியும் அன்பினாலே பொங்கும் புதிய பூவைப்போன்ற பாதங்களின் முன்னே பணிந்தேத்தி அங்கு நின்றும் மீண்டு புறத்திற் சேர்ந்து; எங்குமாகி...இறைஞ்சுவார் - எங்கும் நீக்கமற முழுதும் நிறைந்து நின்றவராகிய இறைவர் மகிழ்ந்து எழுந்தருளிய இடங்களில் உள்ள நிலைபெற்ற திருக்கோலங்களைச் சென்று வணங்குவாராகி (நம்பிகள்); அருள்தாவில்... எதினார் - அருள்பெற்ற குற்றமற்ற அன்பர்கள் உடன் சூழ்ந்துவர அவர்களுடனே சென்றனர்.

(வி - ரை) ஏத்தி - இப்பதிகம் கிடைத்திலது!

எங்குமாகி நிறைந்து நின்றவர் - எங்கும் நிறைதல் இறைவரது முழுமுதற் றன்மை காட்டும் குணங்களுள் ஒன்று: சர்வவியாபகம் என்பது வடமொழி; நின்ற வர் - எல்லாமாய் நிற்பவர்; எல்லாவற்றுள்ளும் நீங்காது நிற்பவர்; இத்தன்மை நின்ற திருத்தாண்டகம் - திருவுருத்திரம் முதலியவற்றுட் பேசப்படுவது.

மகிழ்ந்த இடங்களிற் றங்குகோலம் - எங்கும் நிறைந்து நின்றவரை எங்கும் காணலாமே; அதன் பொருட்டுப் பல இடங்களுக்கும் செல்வானேன்? எனின், சிலவிடங்களில் மகிழ்ந்து தயிரினெய் போல விளங்கியும், மற்ற இடங்களில் விளங் காது பாலினெய்போல மறைந்தும் வீற்றிருப்பார் இறைவராதலின், விளங்கி உள்ள இடங்களிற் சென்று கண்டு வணங்குதல் வேண்டப்படும் என்க; "அவன் மற்றிவ் விடங்களிற் (பத்தரது திருவேடமும் சிவாலயமும்) பிரகாசமாய் நின்றே" என்று சிவஞான போதத்தினுள் (சூ. 12) மூன்றுமதிகரணத்துள் சிவாலய வழிபாட்டின் இன்றியமையாமைக்கு ஏதுக் கூறியவாற்றான் அறிக: தங்குகோலம் என்ற குறிப்பு மிது; வெளிப்பட நின்றிடுதல்.

இறைஞ்சுவார் - வினைப்பெயர்.

தாவில் அன்பரோடு - குற்றமற்ற மெய்யன்பர்கள். 99

வேறு

3254. வம்புநீ டலங்கன் மார்பின் வன்றொண்டர் வன்னி கொன்றை
தும்பைவெள் ளடம்பு திங்க டுயநீ ரணிந்த சென்னித்
தம்பிரா னமர்ந்த தானம் பலபல சார்ந்து தாழ்ந்து
கொம்பனா ராட னீடு கூடலை யாற்றூர் சார, கOO

3255. செப்பரும் பதியிற் சேரார் திருமுது குன்றை நோக்கி
ஒப்பரும் புகழார் செல்லு மொருவழி யுமையா ளோடு
மெய்ப்பரம் பொருளா யுள்ளார் வேதிய ராகி நின்றார்
முப்புரி நூலுந் தாங்கி நம்பியா ரூரார் முன்பு. கOக

3254. (இ - ள்) வம்பு...வன்றொண்டர் - மணமிகுந்த மாலையினை அணிந்த மார்பினையுடைய நம்பிகள்; வன்னி...தாழ்ந்து - வன்னி, கொன்றை, தும்பை,

வெள்ளடம்பு, சந்திரன், தூயநீராகிய கங்கை யிவற்றைச் சூடிய தலையினையுடைய தமது பெருமானாகிய இறைவர் விரும்பி யெழுந்தருளிய பதிகள் பலப்பலவற்றையும் சென்று சேர்ந்து வணங்கி ; கொம்பனார்...சார - பசுங்கொம்பு போன்ற பெண்களின் ஆடல் மிக்க திருக்கூடலை யாற்றூரினைச் சாரவும் ; ௧00

3255. (இ - ள்) செப்பரும் பதியிற் சேரார் - சொல்லுதற்கரிய அத்திருப் பதியின் சென்று சேராராகி ; திருமுதுகுன்றை...ஒருவழி - திருமுதுகுன்றத்தினை நோக்கி ஒப்பரிய புகழினையுடைய நம்பிகள் செல்கின்ற அவ்வழியிலே ; உமையாளோடு...உள்ளார் - உமையம்மையாருடன் கூடி மெய்ப்பாம் பொருளாகியுள்ளவராகிய சிவபெருமான் ; வேதியராகி முப்புரி நூலுந்தாங்கி - வேதியர் வடிவங் கொண்டு முப்புரி நூலினையும் தாங்கிக்கொண்டு ; நம்பியாரூரர் முன்பு நின்றார் - அந்நம்பியாரூரரது முன்பாக நின்றருளினார். ௧0௧

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபுகொண்டன. குறிப்பு - முன்பாட்டு நம்பிகள் செய்கையும் பின்பாட்டு இறைவர் செய்கையும் குறித்து நின்றமையும், இரண்டினிலும் தம்பிரானுந் தோழருமாகப் பிணைந்து பேசப்பட்டமையும் குறிக்கொள்ளத் தக்கன.

3254. (வி - ரை) வம்பு நீடு...வன்றொண்டர் - வம்பு - வாசனை ; அலங்கல் - மலர்மாலை ; வம்புநீடு - வன்றொண்டர் என்று கூட்டி வன்பு பேசி வழக்கிட்டு ஆட்கொள்ளப்பெற்ற என்றுரைத்தலுமாம் ; இப்புராணத்தில் பின்னர் "வம்பெனவாண்டு கொண்டா னொருவனே" (3546) எனவரும் குறிப்பும் காண்க.

வன்னி...அணிந்த சென்னி-இறைவர் சடையிற் சூடிய பொருள்கள் வன்னியிலை முதலியன ; வெள்அடம்பு - அடம்பு ஒருவகைச் செடி ; தூயநீர் - கங்கை ; பதிகள் பல பல சார்ந்து வணங்குதற்கேற்பப் பலவற்றையும் அணிந்த கோலம் பற்றிக் கூறியது தெய்வக் கவிநயம் ; "தங்கு கோல மிறைஞ்ச" (3253) என்று முன்கூறிய குறிப்புக் காண்க.

தானம் பலபல - இவை திருப்புறம்பயத்தினின்றும் வடக்கே 1½ நாழிகை யளவில் கொள்ளிடத் திருநதியினைக் கடந்துசென்று கொள்ளிடத்தின் வடகரையிலும் வடக்கே திருமுதுகுன்ற நோக்கிச் செல்லும் இடையிலும் உள்ளவை ; கோவந்தபுத்தூர், பழுவூர், கடம்பூர்க்கரக்கோயில், கடம்பை இளங்கோயில், முதலாயின என்பது கருதப்படும்.

கொம்பனார் - பசிய இளங்கொம்புபோல் அசையுமியல்புடையவர் ; "கொம்பனாள் பாகங் குளிர்ந்தார் போலும்" (தேவா)

சாரச் - சேரார் (ஆகி) - செல்லும் ஒரு வழி - என்று மேல்வரும் பாட்டுடன் முடிக்க. சார - அருகாக வர ; சாரவும் என்று சிறப்பும்மை விரிக்க. 100

3255. (வி - ரை) செப்பரும் பதியில் சேரார் - முன் கூறிய அந்தப் பதியில் என முன்னறி சுட்டு வருவிக்க ; சேராராகி ; சேராமல்.

திருமுதுகுன்றை நோக்கிச் செல்லும் ஒரு வழியில் - என்க ; கூடலையாற்றூர் இடையே இருப்பவும் அங்குச் சென்று வணங்காது செல்லும் அவ்வழியில் ; "இவ்வழி போந்த" என்பது பதிகம்.

உமையாளோடும் மெய்ப்பாம் பொருளாயுள்ளார் - "அருளுடைய பாம்" என்றபடி; உமையாள் - அருள் ; உள்ளார் - என்றும் அழியாது உள்ளவர் ; சத்து. பதிகம் பார்க்க.



கச்சித் - திருமேற்றளி

—பாட்டு - 3344

(உள்ளிருந்து பார்வை)






ஈழநாடு
திருக்கோணமலை கோயிலின் படம்
(போர்த்துகேசியர் இதைத் தகர்ப்பதன் முன் தாங்கள் எழுதிவைத்த படம்)



கச்சித் திருமேற்றளி
(உள்ளிருந்து பார்வை)



வன்றொண்டர் திருவுருவம்
திருப்பெருமங்கலம்-வன்றொண்டர்
கோயிலில் உள்ளது - மூலத்தானம்



பெருமங்கலம்-ஏயர்கோன் கலிக்காம நாயனார்
உற்சவமூர்த்தி திருஉருவம் -
வன்றொண்டர் கோயிலில் உள்ளது.



திருப்பெருமங்கலம் - பழைய ஊர் கிராமநத்தம் -
ஊர் இருந்த இடம்

வேதியராகி - முப்புரிநூலும் தாங்கி - வேதியராகி என்றது பிழம்பும், புரிநூல் தாங்கி - உரிய அங்கமும் உணர்த்தியபடி ; ஆகி - ஆக்கச் சொல் வெளிப்படும் இயல் புணர்த்திற்று ; முப்புரிநூல் - வேடம் மேற்கொண்ட செயற்கை குறித்தது ; ஆகி - வெளிப்பட்டு. ஒருவழி - ஒப்பற்ற சிவநெறியாகிய பெருவழி என்ற குறிப்புமாம்.

வன்றொண்டர் + (3264) — புகழார் செல்லும் வழி - உள்ளார் - முன்பு நின்றார் (3255) என இரண்டு பாட்டுகளையும் முடித்துக்கொள்க.

உள்ளார்-நின்றார் - முன்னமே யாண்டும் நிறைந்து உள்ளவர் ஆயினும் வெளிப் பட்டு நின்றார். 101

3256. நின்றவர் தம்மை நோக்கி நெகிழ்ந்தசிந் தையராய்த் தாழ்வார்
"இன்றியா முதுகுன் றெய்த வழியெமக் கியம்பு" மென்னக்
குன்றவில் லாளி யாருங் "கூடலை யாற்றூ ரேறச்
சென்றதிவ் வழிதா" னென்று செல்வழித் துணையாய்ச் செல்ல, ௧0௨

3257. கண்டவர் கைகள் கூப்பித் தொழுதபின் றொடர்வார்க் காணார்
வண்டலர் கொன்றை யாரை "வடிவுடைமழு" வென்றேத்தி
"அண்டர்தம் பெருமான் போந்த வதிசய மறியே" னென்று
கொண்டெழும் விருப்பி னோடுங் கூடலை யாற்றூர் புக்கார். ௧0௩

3256. (இ - ள்) நின்றவர்...தாழ்வார் - முன்கூறியவாறு தாம் செல்லும் ஒரு வழியில் நின்றவராகிய இறைவரை நோக்கி நம்பிகள் உருகிய மனத்தினை யுடையவராய் வணங்கி ; இன்று...என்ன - " இன்று நாம் திருமுதுகுன்றத்தினைச் சென்று சேர்வதற்கு உரிய வழியினை எமக்குச் சொல்லும் " என்று கேட்க ; குன்றவில்லாளியாரும்...என்று - மலையை வில்லாக ஏந்திய இறைவரும் கூடலை யாற்றூர் ஏற இவ்வழி சென்றது என்று கூறி ; செல்வழித்துணையாய்ச் செல்ல - செல்லும் இடத்து வழித்துணையாகத் தாமும் உடன் செல்ல, ௧0௨

3257. (இ - ள்) கண்டவர்...காணார் - முன்கூறியபடி செல்வழித்துணையாய்த் தம்முடன் செல்லக் கண்ட நம்பிகள் அவரைக் கைகூப்பித் தொழுது பின் அவ்வாறு தொடர்வாரைக் காணாராகி ; வண்டலர்...ஏத்தி - வண்டுகள் ஊதி மலர்த்தும் கொன்றையினைச் சூடிய இறைவரை "வடிவுடைமழு" என்று தொடங்கித் துதித்து ; அண்டர்தம்...என்று - தேவ தேவராகிய இறைவர் " வேடங் காட்டிக் கூட வந்து மறைந்து போயின அதிசயத்தை இன்னதென்றறியேன் என்று கூறிப் பதிகம் பாடி ; கொண்டெழும்...புக்கார் - தம்மைப் பற்றிக் கொண்டு மேலெழுகின்ற விருப்பத்தி னுடனே திருக்கூடலை யாற்றூரினிற் புகுந்தருளினர். ௧0௩

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3256. (வி - ரை) நின்றவர் - முன் கூறியபடி நம்பிகள் செல்லும் ஒரு வழி அவர் முன்பு நின்ற வேதியர் ; நம்பிகளுள்ளும் நின்று தம்மை நோக்கும்படி செய் தவர் என்ற குறிப்புமாம்.

நெகிழ்ந்த சிந்தையராய் - " நேசமுன் கிடந்த சிந்தை நெகிழ்ச்சியால் " (186) என்று இவ்வாறு நெகிழ்ச்சியுண்டாதற்குக் காரணத்தை முன் விரித்தவாறு கண்டு கொள்க; வேடம் மாறினும் பொருட்டன்மையின் முன்னைத் தொடர்புபற்றி நெகிழ்ச்சி கிளைப்பதாயிற்று என்க.

தாழ்வார் - வணங்குவாராய் : தாழ்தல் - விரும்புதலுமாம்.

வழி - வழிச்செல்வோராதலின் வழி வினவினர்.

கூடலையாற்றூர் ஏற - கூடலை யாற்றூரினைச் சார அதனை அடைந்து அவ் வழியாக.

சென்றது இவ்வழி - வழிச்செல்வோரது செல்கை வழியின்மேல் ஏற்றி உரைத் தல் மரபு.

செல்வழித் துணையாய் - ஆன்மாக்கள் செல்லும் சென்ம யாத்திரை தோறும் வழித்துணையாகி நீங்காது உடனிருந்து செல்பவர் (மார்க்க சகாயர்) என்ற குறிப் பும் காண்க. "வழிவிடுந் துணைபின் போத வழித்துணை யாகி யுள்ளார்" (418) என்றபடி ஏனையோர் எல்லாரும் வழிவிடுவோரேயாவர்; சிவன் ஒருவரே எப் பிறவியிலும் எந்நாளும் உயிர்களுக்கு நீங்காத வழித்துணை யாவார் என்பது.

செல்லத்-தொடர்வார்-காணார் - என்று வரும்பாட்டுடன் கூட்டி முடிக்க. 102

3257. (வி - ரை) தொழுது - வழி அறிவித்தமைக்கும், செல்வழித் துணையாய் உடன்செல்ல ஒருப்பட்டுத் தொடர்ந்த செயலுக்கும் நன்றி செய்யும் முறையிலே தொழுது;

பின் தொடர்வார் - வழித்துணையாய்ச் செல்ல ஒருப்பட்டுத் தொடர்ந்தவரை; இரண்டனுருபு விரிக்க; தொடர்வார் வினைப்பெயர்.

காணார் - சடுதியில் மறைந்து போயினமையாற் காணாராகி; காணார் - ஏத்திப் புக்கார் என்று கூட்டுக; காணார் - முற்றெச்சம்.

கொன்றையாரை - வேதிய வேடங் காட்டிக் கூடி - மறைந்தவர் சிவபெரு மானே என உணர்ந்தமையால்.

வடிவுடை மழு - பதிகத் தொடக்கமாகிய முதற்குறிப்பு.

அண்டர்தம்...என்று - பதிகக் கருத்தாகிய குறிப்பு; மகுடமுமாம்.

கொண்டெழும் விருப்பினோடும் - புக்கார் - இறைவனார் கூடி மறைந்தருளிய திருவருட் செயலினாற் பற்றிக் கொள்ளப்பட்டு அங்குச் சேரவேண்டுமென்று எழுந்த பெருவிருப்பினோடும். 103

திருக்கூடலையாற்றூர்

திருச்சிற்றம்பலம்

பண் - புறநீர்மை

வடிவுடை மழுவேந்தி மதகரி யுரிபோர்த்துப்
பொடியணி திருமேனிப் புரிகுழ லுமையோடுங்
கொடியணி நெடுமாடக் கூடலை யாற்றூரில்
அடிகளிவ் வழிபோந்த வதிசய மறியேனே. (1)

கூடலை யாற்றூரிற் கொடியிடை யவளோடும்
ஆடலு கந்தானை யதிசய மிதுவென்று
நாடிய வின்றமிழா ருவல ஆரன்சொற்
பாடல்கள் பத்தும்வல்லார் தம்வினை பற்றறுமே. (10)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—முன் ஆசிரியர் (3257) உரைத்தவாறு கண்டுகொள்க.

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) வடிவுடைமழு - மழுவுக்கு வடிவாவது உயிர் களைப் புனிதஞ் செய்யும் தொழிலால் வருவது. "மங்கல மழுவாற் கொல்கை வழக்குமன்று" (592) என்ற கருத்துப் பார்க்க; வடிவு - அழகு; வண்ணம்;

உமையோடும் - அம்மையோடும் கூடவேதியாகி நின்றார் என்பது; "உமையாளோடும்" (3255) என்றதற்கு அகச்சான்று. அம்மையோடும் எனப் பதிகப்பாட்டுத்தோறும் கூறுதல் காண்க. இறைவரது அருளினையே இவ்வாறு கூறினார் என்றலுமாம். புரிகுழலம்மை என்பது இப்பதியில் அம்மை பெயர்; கூடலையாற்றூருக்கு வழிகாட்டிப் போந்தாராதலின் இப்பதியிற் சுவாமி பெயர் நெறி காட்டு நாயகர் எனவழங்கும்; "குறிகளும் அடையாளமும் கோயிலும், நெறிகளும் அவர் நின்றதோர் நேர்மையும்" (தேவா - பாசுரம்); கூடலையாற்றூரில் அடிகள் இவ்வழி போந்த - என்றதனால் இறைவர் வழிகாட்டிக் கூடலையாற்றூரின் அணிமைவரை எழுந்தருளி மறைந்தனர் என்பது கருதப்படும்; "காணார் - ஏத்திக் கூடலையாற்றூர் புக்கார்" (3257) என்பதனாலும் இக்குறிப்புப் பெறப்படும்: அறியேனே - முன் கண்டபோது அறிந்திலேனாயினேன்; திருவதிகையில் இறைவர் திருவடி சூட்டி மறைந்தபோதும் "தம்மானை அறியாத" (தேவா) என்றது காண்க. "இவ்வழி போந்த வதிசய மறியேனே" பதிகக் கருத்தாகிய மகுடம். அடிகள் - ஐயன் - ஆர்வன் - அந்தணன் - ஆதி - அத்தன் - அழகன் - அறவன் - ஆலன் - ஆடலுகந்தான் என்று இப்பதிகத்தினுள் நம்பிகள் இறைவரது கருணைப் பெருக்கினைப் பாராட்டும் அருமைப்பாடுகள் குறிக்க; இதனையே "கொண்டெழும் விருப்பினோடும்" (3257) என்று அருளினர். குறிப்பு - இப்பதிகம் செல்வழித் துணையாய் உடன் றொடர்ந்து வந்த இறைவர் மறைந்தருளிய இடத்தினின்று பாடியருளியவாறே நகரினுள் வரும்போது பாடப்பட்டது:—2) கோயி - மலரும்புகள்;—(3) ஆர்வன் - அடியார்க்கருளும் செயலில் ஆர்வமுடையோன்;—(4) சந்து - பெருமை; அழகு; அணவுதல் - உடன் விரவுதல்; அந்தணன் முன் காட்டிய வேதிய வடிவம்; முனிவர் என்றலுமாம்;—(5) வேதியர் - முன்பு காட்டிய உருவக் குறிப்பு; வேதியராகிய ஆதி என்று கூட்டுக.—(6) வித்தகம் - பெருமை; நன்மை; பெருமையாவது உலகம் புனருற்பத்திக்குக் காரணமாகிய நாதத்தை உளதாக்குதல்; வருங்கடன் மீளநின் றெம்மிறை நல்வீணை வாசிக்குமே" (தேவா)—(7) குழை - இலைக்கொத்துக்கள்; அழகன் - இறைவர் தம் முன்பு காட்டிய வடிவத்தில் நம்பிகளது மனம் ஈடுண்டு விருப்ப மிகுந்த நிலைகாட்டிற்று; (9) கோலமதுநவாகி - வேதியர் கோலங்கொண்டு காட்டிப் போந்த சரிதக்குறிப்பு; அகச்சான்று;—(10) ஆடல்-காட்டிக் கூறி மறைந்த திருவிளையாட்டுச் சரிதக் குறிப்பாகிய சான்று.

தலவிசேடம்:—திருக்கூடலையாற்றூர் - நடுநாட்டில் மூன்றாவது பதி; திருமணி முத்தாறும், வசிஷ்டநதி கூடிய பின்வரும் வடவெள்ளாறும் கூடும் இடத்தில் உள்ளமையால் இப்பெயர் பெற்றது; வசிட்டநதி வடவெள்ளாற்றுடன் கூடிய பின் நிவாநதி என வழங்கப் பெறும். ஆளுடைய நம்பிகள் திருப்புறம்பயத்தினின்றும் வடக்கு நோக்கிப் பல பதிகளையும் வணங்கித் திருமுதுகுன்றத்திற்குச் செல்ல நினைந்து செல்பவர், வழியில் கூடலையாற்றூரிற் சேராது செல்லும்போது, அவ்வழியில் வேதிய வடிவுடன் நின்ற இறைவரைத் திருமுதுகுன்றத்துக்கு வழி எது என்று வினவக், "கூடலையாற்றூர் ஏறச்சென்றது இவ்வழி" என்று நெறிகாட்டி உடன் வந்து நகரணிமையில் மறைய, நம்பிகள், "மறையவனா ரிறையவனார்" என்றுணர்ந்து வியந்து "வடிவுடைமழு" என்ற பதிகம்பாடி அடைந்த பெருமை பெற்ற பதி. விரிவு புராணத்துட் காண்க. (3254 - 3259) (ஏயர்கோன் - புரா 100—105) அதுகாரணமாகச் சுவாமி - நெறிகாட்டுநாதர் எனப்படுவர்; அம்மை - புரிகுழனாயகி; பதிகம் 1.

இது சிதம்பரத்தினின்றும் மேற்கே செல்லும் குமாரகுடிக் கற்சாலையில் 4 நாழிகையளவில் அடையத்தக்கது. இவ்வழியில் 1½ நாழிகையளவு மட்சாலையிற் செல்லுதல் வேண்டும். இவ்வழி நிவாநதியின் தென்கரையில் உள்ளது ; (2) திரு முதுகுன்றம் நிலயத்தினின்றும் திருமணி முத்தாற்றின் வடகரையில் கிழக்கு நோக்கிச் செல்லும் கற்சாலைவழி 6 நாழிகையளவில் எறும்பூரையடைந்து, நிவா நதியைக் கடந்து தென்மேற்கில் 2 நாழிகையளவில் அடைவது மற்றொரு வழி : (3) திருமுதுகுன்றம் நிலையத்தினின்று தெற்கிலேனும் திருப்பெண்ணாகடம் நிலை யத்தினின்று கிழக்கிலேனுங் கற்சாலைகள் வழி நிவாநதி வடகரை வழி 4 நாழிகை வந்து அவ்வழி நிவாநதியினைத் தாண்டி 2 நாழிகையில் நதியின் தென்கரையில் திருஎருக்கத்தம்புலியூரை அடைந்து அங்கு நின்றும் நிவாநதியின் தென்கரை வழி யாய்க் கிழக்கில் 4 நாழிகையளவில் இதனை அடைவது மற்றுமொரு வழி ; திருப் புறம்பயத்தினின்றும் தெற்கு நின்று நம்பிகள் வந்த வழி வேறு; எவ்வழியேயாயினும், ஆறு கடந்தும் மட்சாலை, ஒற்றையடிப்பாதைகளின்வழிச் சிரமத்துடன்தான் இவ் வூர் சேரத்தக்கது ; மழை நாளில் மிகக் கடினம்.

3258. கூடலை யாற்றூர் மேவுங் கொன்றைவார் சடையி னார்தம்
பீடுயர் கோயில் புக்குப் பெருகிய வார்வம் பொங்க
ஆடகப் பொதுவி லாடு மறைகழல் வணங்கிப் போற்றி
நீடருள் பெற்றுப் போந்து திருமுது குன்றி னேர்ந்தார். கO௪

(இ - ள்) கூடலையாற்றூர்...புக்கு - திருக்கூடலை யாற்றூரில் மேவும் கொன்றை மாலை சூடிய நீண்ட சடையினையுடைய இறைவரது பெருமையினா லுயர்ந்த திருக்கோயிலினுள்ளே புகுந்து ; பெருகிய...பொங்க-பெருகி எழும் ஆசை யானது மேலும் அதிகரிக்க ; ஆடகப் பொதுவில்...போந்து - பொன்னம்பலத்தில் ஆடுகின்ற சத்திக்கின்ற வீரக்கழலை யணிந்த திருவடிகளை வணங்கித் துதித்து நீடு கின்ற திருவருள் விடை பெற்றுச் சென்று ; திருமுதுகுன்றில் நேர்ந்தார் - திரு முது குன்றத்திற் போய்ச் சேர்ந்தனர்.

(வி - ரை) பீடு உயர் - "பீடி னாலுயர்ந் தோர்களும்" (தேவா); பீடு-பெருமை.

பெருகிய ஆர்வம் பொங்க - முன்னமே பெருகியுள்ள பெருவிருப்பம் மேன் மேலும் அதிகரிக்க.

ஆடகப் பொது - பொன்னம்பலம் ; ஆடகம் - பொன் : இங்கு ஞானமயமான சிற்றம்பலம் என்ற பொருளில் வந்தது ; புறத்துப் பொன் வேய்ந்து விளங்கு கின்றது அதன் புறத்தோற்றமாகிய குறியீடு.

நீடு அருள் - என்றும் நீடுகின்ற திருஅருள் விடை.

நேர்தல் - சென்று சேர்தல். 104

3259. தடநிலைக் கோபு ரத்தைத் தாழ்ந்துமுன் னிறைஞ்சிக் கோயில்
புடைவலங் கொண்டு புக்குப் போற்றினர் தொழுது வீழ்ந்து
நடநவில் வாரை" நஞ்சி யிடை "யெனுஞ் செஞ்சொன் மாலைத்
தொடைநிகழ் பதிகம் பாடித் தொழுதுகை சுமந்து நின்று, கO௫

3260. நாதர்பாற் பொருடாம் வேண்டி நண்ணிய வண்ண மெல்லாங்
கோதறு மனத்துட் கொண்ட குறிப்பொடும் பரவும் போது

தாதவிழ் கொன்றை வேய்ந்தார் தரவருள் பெறுவார் சைவ
வேதியர் தலைவர் மீண்டு "மெய்யில்வெண் பொடி"யும் பாட, ௧௦௬

3261. பனிமதிச் சடையார் தாமும் பன்னிரண் டாயி ரம்பொன்
நனியருள் கொடுக்கு மாற்றா னல்கிட, வுடைய நம்பி
தனிவரு மகிழ்ச்சி பொங்கத் தாழ்ந்தெழுந் தருகு சென்று
கனிவிட மிடற்றி னார்முன் பின்னொன்று கழற லுற்றார்; ௧௦௭

3262. "அருளுமிக் கனக மெல்லா மடியனேற் காரு ருள்ளோர்
மருளுற வியப்ப வங்கே வரப்பெற வேண்டு" மென்னத்,
தெருளுற வெழுந்த வாக்காற் "செழுமணி முத்தாற் றிட்டுப்
பொருளினை முழுது மாரூர்க் குளத்திற்போய்க் கொள்க" வென்றார்.

3259. (இ - ள்) தடநிலை...இறைஞ்சி - பெரிய நிலைகளையுடைய திருக்கோபுரத்தைக் கும்பிட்டு நிலமுற வீழ்ந்து வணங்கி; கோயில்...வீழ்ந்து - திருக்கோயிலினுள் பக்கத்திற் சுற்றி வலங்கொண்டு உள்ளே புகுந்து துதித்தனராகித் தொழுது நிலமுற விழுந்து எழுந்து; நடநவில்வாரை...பாடி - அருட் கூத்தாடும் இறைவனை "நஞ்சியிடை" என்று தொடங்கும் செஞ்சொல்லாலாகிய மாலைத்தொடையாக நிகழும் திருப்பதிகம் பாடி; தொழுது...நின்று - தொழுது கைகூப்பி நின்று, ௧௦௫

3260. (இ - ள்) நாதர்பால்...போது - இறைவனிடத்திலே பொருள் பெற வேண்டிக் கூடியபடியினை எல்லாம் குற்றமில்லாத மனத்தினுள்ளே கொண்டருளிய உட்குறிப்பினோடும் துதிக்கும்போது; தாதவிழ் பெறுவார் - இதழ்கள் விரியும் கொன்றைமாலையைத் தரித்த இறைவர் பொருள் தரும் அருளினைப் பெறுவாராகி; சைவ...பாட - சிவவேதியர் பெருமானாகிய நம்பிகள் மீண்டும் "மெய்யில் வெண்பொடி" என்று தொடங்கும் திருப்பதிகத்தினையும் பாடவே, ௧௦௬

3261. (இ - ள்) பனிமதி...நல்கிட - குளிர்ந்த சந்திரனைச் சூடும் சடையினையுடைய இறைவரும் பன்னிரண்டாயிரம் பொன்னை மிகவும் அருள் புரியும் வகையால் கொடுத்தருளினாராக; உடைய நம்பி...கழறலுற்றார் - ஆளுடைய நம்பிகள் ஒப்பற்றெழுந்த மகிழ்ச்சி பொங்க வணங்கி எழுந்து அருகே சென்று கனிவிடமுடைய கண்டத்தார் முன் மேலும் ஒரு செய்தியினைச் சொல்வாராகி; ௧௦௭

3262. (இ - ள்) அருளும்...என்ன - "தேவரீர் கொடுத்தருளும் இந்தப் பொன்னெல்லாம் அடியேனுக்குத் திருவாரூரில் உள்ளவர்கள் மருளவும் வியப்பவும் அங்கே வரப்பெறவேண்டும் என்று விண்ணப்பிக்க; தெருளுற...என்றார் - இறைவனார் தெளிந்தறியும்படி வானிலே எழுந்த திருவாக்கினாலே செழிப்பையுடைய திருமணிமுத்தாற்றிலே இட்டு இப்பொன் முழுமையினையும் திருவாரூர்க் குளத்தினிற் போய்ப் பெற்றுக் கொள்ளுக" என் றருளிச்செய்தனர். ௧௦அ

இந்நான்கு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3259. (வி - ரை) புடை - உள்ளே திருக்கோயிலின் திருமாளிகையினைச் சூழ்ந்து. போற்றினர் - போற்றினராகி; முற்றெச்சம். நடம் நவில்வார் - கூத்தியற்றுபவர்; ஆடுபவர். கூத்தாவது உலகுக்கருளும் மெய்த்தொழி லைந்து.

நவிலுதல் - இயற்றுதல்; நடநவிலுதல் என்பது மரபு வழக்கு; சொல்லுதல் என்று கொண்டு, தமது கூத்தாடலினாலே உலகுக்கு அறிவுறுத்துதல் என்றலுமாம்.

இக்குறிப்பினையே பற்றி முன் பாட்டிலும், பொதுவிலாடும் அறை கழல் என்றதும் காண்க. அறைதல் - சொல்லுதல்.

"நஞ்சியிடை" எனும் - இது பதிகத் தொடக்கமாகிய முதற் குறிப்பு.

மாலைத் தோடைநிகழ் - கோவைபடத் தொடுத்த நிலைவிளங்கும்; மாலை - தோடை - இச்சொற்கள் மலர்மாலைக்கும் செய்யுளுக்கும் ஒக்கும்.

கைசுமந்து - இருகைகளையும் தலைமேலே உயரக்கூப்பி அஞ்சலித்தல் சுமத்தல் எனப்பட்டது.

நின்று - பரவும்போது - என்று மேல் வரும் பாட்டுடன் கூட்டுக.

தடவரைக் கோபுரம்—என்பதும் பாடம். 105

3260. (வி - ரை) நாதர்பால்...குறிப்போடும் பரவும் - பதிகக் குறிப்புப் பார்க்க. "உம்மை நச்சுவார், துஞ்சி யிட்டாற் பின்னைச் செய்வதென்" (1), "எத்து வார்க் கம்மை செய்வதென்?" (4) "பாடிப் படைத்த பொருளெலா முமையா ளுக்கோ?" (5) முதலியனவாகப் பதிகப் பாட்டுக் கருத்துக்களின் உட்குறிப்புப் பார்க்க.

நண்ணிய வண்ணம் - வந்து கூடிய நிலைகள்; உட்குறித்த கருத்துக்கள்; மனத்துட் கொண்ட குறிப்பு - தமது விருப்பத்தினைப் புலப்பட வெளியிட்டுக்கூறாது மனத்தினுள்ளே குறிவைத்து.

தர அருள் பெறுவார் சைவ வேதியர் தலைவர் - பொருளினை வேண்டியவாறே தரப்பெறுவாராகி; திருபாச்சிலாச்சிராமத்திற் போலத் தர அருள் பெறுமைக் குறிப்பன்றித் தரும் குறிப்புப் பெற்று; சைவ வேதியர் - சிவமறையோர்; தலைவர் - அவர்களுள் உயர்ந்தோர்.

மீண்டும் - தம் உள்ளக் குறிப்புடன் முன் "நஞ்சியிடை" என்ற பதிகத் தினைப் பாடியதனோ டமையாது, மேலும்; இறைவர் தர அருளும் திருவுள்ளக் கிடையினைக் கண்டு மேலும்; "எழுபிறப்பும் எங்கள் நம்பி" என்று தர அருள் பெறும் உரிமைபற்றி வற்புறுத்தி "நம்பி" என்று பாடிய குறிப்புக் காண்க.

மெய்யில் வெண்பொடி-இது பதிகத் தொடக்கமாகிய முதற்குறிப்பு. மெய்யில் வெண்பொடியும் - என்று தொடங்கும் பதிகத்தினையும்: முன் "நஞ்சியிடை" என்று தொடங்கிய பதிகத்தினோடு இதனையும் என்று உம்மை இறந்ததுதழுவிய எச்சவும்மை.

பாட - நல்கிட - என்று மேல் வரும் பாட்டுடன் கூட்டுக. 106

3261. (வி - ரை) பனிமதி - பனி - குளிர்ச்சி; தாமும் - நம்பிகள் பாட அதற்கேற்ப இறைவரும் என்று உம்மை எச்சவும்மை.

நனி அருள் கொடுத்து மாற்றல் - மிகவும் அருள்புரியும் வகையாலே; மிக்க அருளாவது 12000 என்ற தொகையின் அளவுப் பெருக்கம்; அஃதேயன்றி மேலும் அதனை ஆற்றிற் புகப்பெற்றுத் திருவாரூர்க் குளத்தில் அவர் பெறக் கொடுத்தலும்; மாற்று நிறையக் கொடுத்தலுமாகிய மேற்செய்ய நின்ற அருளும் குறித்தது.

அருகு சென்று - பொருள் வேண்டிப் பாடி வணங்கி நின்ற இடத்தினின்றும் பின்னும் அருகு அணைந்து; இடத்தானன்றி மேல் வேண்டிக்கொள்ளும் உரிமைப் பாட்டானும் அருகில் என்ற குறிப்புமாம்.

கனி விடம் - கனி - முதிர்ந்த; களங்கனி போன்ற என்றலுமாம்.

முன் பின்னென்று - பின் - பின்னும்; உம்மை தொக்கது. முன்னர்ப் பொருள் வேண்டி யுரைத்துப் பெற்றதன் மேலும் ஒரு செய்தி; முன் கேட்டதனுடனே பின் னும் என உம்மை இறந்தது தழுவிய எச்சவும்மை. முன் பின் - முரண் அணிச்சுவை.

கழற லுற்றாராகி - என முற்றெச்சமாம். கழற லுற்றாராகி - என்ன என மேல் வரும்பாட்டுடன் கூட்டுக. 107

3262. (வி - ரை) அருளும் - கொடுத்தருளிய ; கனகமெல்லாம் - 12000 பொன்குவைகள் முழுதும்.

அடியனேற்கு - அங்கே - வரப்பெறுதல் வேண்டும் என்று கூட்டுக.

மருளுற - வியப்ப - முன்னர், வரத் தாமதித்தல் கண்டு மருளுறுதலும், பின் னர்ப் பதிகம் பாடிய அளவில் வரப் பெறுதல் பற்றியும் திருமுதுகுன்றத்தில் ஆற்றி னில் இட்டுத் திருஆரூர்க் குளத்தினில் வருதல்பற்றியும் வியப்புறுதலும் பின்னர்ச் சரித நிகழ்ச்சியில் காண்க. அதன் முற்குறிப்பு. அங்கே - திருவாரூரிலே ; ஆரூர் உள்ளோர் - பரவையாரும் அவர்மூலம் ஆரூரில் உள்ளார் பிறரும்.

தெருளுற - தெளியும்படி ; தெருள் - அறிவு விளக்கம் ; வாக்கால் - அசரீரியாகிய தமது ஞானகாயத் திருமேனியில் எழுந்த அருள் ஒலி வடிவாகிய வாக்கினாலே ;

என்றார் - களிவிட மிடற்றினாராகிய இறைவர் என்ற எழுவாய் முன்பாட்டி னின்றும் வருவிக்க.

போய் - ஆரூர்க் குளத்திற் - கொள்க - என்க. 108

3263. என்றுதம் பிரானார் நல்கு மின்னருள் பெற்ற பின்னர்
வன்றொண்டர் மச்சம் வெட்டிக் கைக்கொண்டு மணிமுத் தாற்றிற்
பொன்றிர ளெடுத்து நீருட் புகவிட்டுப் போது கின்றார்
"அன்றெனை வலிந்தாட் கொண்ட வருளிதி லறிவே" னென்று, ௪0௯

3264. மேவிய காதற் றெண்டு விரவுமெய் விருத்தி பெற்றார்
"ஆவியின் விருத்தி யான வந்தணர் புலியூர் மன்றிற்
காவியங் கண்டர் கூத்துக் கண்டுகும் பிடுவ" தென்று
வாவிசூழ் தில்லை மூதூர் வழிக்கொள்வான் வணங்கிப் போந்தார்.

3263. (இ - ள்) என்று...பின்னர் - முன்கூறியபடி தமது பெருமானார் தந்த இனிய திருவருள் வாக்கினைப் பெற்ற பின்பு ; வன்றொண்டர்...கொண்டு - வன்றொண்டராகிய நம்பிகள் மச்சம் (பொற்றுண்டம்) வெட்டி யெடுத்துக்கொண்டு ; மணிமுத்தாற்றில்...போதுகின்றார் - திருமணி முத்தாற்றிலே பொற் குவியலை எடுத்து நீரினுள்ளே புகப்பெய்து செல்கின்றவர் ; " அன்றெனை...அறிவேன் " என்று - அன்று என்னைத் (திருவெண்ணெய் நல்லூரிலே) வலிய ஆட்கொண்ட திரு வருளினை இச்செயலில் மெய்ப்பட அறிவேன் " என்று ; ௪0௯

3264. (இ - ள்) மேவிய...பெற்றார் - பொருந்திய பெருவிருப்பத்தினாலே திருத்தொண்டினுடன் கூடிய நிலை தமது பிறவித் தொழிலாகப் பெற்ற நம்பிகள் ; ஆவியின்...மன்றில் - ஆன்ம லாபத்துக்குரிய தொழில் புரியும் அந்தணர்கள் வாழும் திருப்புலியூர்த் திருவம்பலத்திலே ; காவியங் கண்டர்...என்று, - நீலகண்டராகிய இறைவரது திருக்கூத்தினை நேரே கண்டு கும்பிடுவோம் என்று எண்ணி ; வாவி சூழ்...போந்தார் - பொய்கைகள் சூழ்ந்த திருத்தில்லையாகிய பழம்பதியினை நோக்கிச் செல்லும் பொருட்டு இறைவரை வணங்கிச் சென்றருளினர். ககO

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபுகொண்டன.

3263. (வி - ரை) நல்கும் இன்னருள் - திருவாக்கு ; மச்சம் - பொன்னின் மாற்று ஒப்பு நோக்குதற்கு அக் குவையினின்றும் வெட்டி எடுத்துக் கொள்ளும் சிறு

பொற்றுண்டம்; பொன் வினைஞர் அத்துறையில் வழங்கும் மரபுப் பெயர். வெட்டி - பொற்கட்டியினின்றும் சிறு துண்டம் வெட்டி எடுத்தல் மரபு. இறைவர் தந்தவை பொற்கட்டிகளாக இருந்தன என்பது.

போன்றிரள் - பொற்றிரள் எனற்பாலது எதுகை நோக்கி இயல்பாய் நின்றது.

புக விட்டு-புகும்படி இட்டு என்றும், புகும்படி விட்டு என்றும் உரைக்கநின்றது.

போதுகின்றார் - வினைப் பெயர்; போதுகின்றாராகிய நம்பிகள்; போதுகின்றார் - என்று - என்று போந்தார் என மேல் வரும் பாட்டுடன் முடிக்க.

அன்று - முன்னாள்; பண்டறி சுட்டு; திருவெண்ணெய் நல்லூரில் சபைமுன் ஓலைகாட்டித் தடுத்தாட்கொண்ட அன்று என்க;

அருள் இதில் அறிவேன் - அருள் இன்னும் உள்ள தன்மையினை இச்செயல் நிகழ்ச்சியில் தெளிந்துகொள்வேன்.

இதில் - இனி இவ்வாக்கு நிறைவேற அருளும் நிலையினாலே; திருவாக்கின்படி திருவாரூர்க் குளத்தில் இப்பொன்னெல்லாம் தரும் நிலை.

மச்சம்வேண்டி—என்பதும் பாடம். 109

3264. (வி - ரை) மேவிய காதல் தொண்டு விரவு மெய் விருத்தி பெற்றார்- பெரு விருப்புடன் தொண்டு செய்வதே தமது உடம்பினாலாய பிறவித் தொழிலாகப் பெற்றவர்; மெய்விருத்தி - உடம்பினால் செய்யும் உறுதொழில்; "மாதொரு பாகனார்க்கு வழிவழி யடிமை செய்யும், வேதியர் குலத்துட் டோன்றி"னாராதலின் விருப்புடன் அகம்படித் தொண்டு செய்தல் உறுதொழிலாயிற்று; அதுவேயுமன்றி, அடியானைத் தடுத்தாட்கொள்ளப் பெற்ற ஞான்று, "அருச்சனை பாட்டே யாகும் ஆதலால் மண்மேல் நம்மைச் சொற்றமிழ் பாடுக" என்று இறைவர் ஏவியருளியபடி மெய்த்திருவாக்கின் றொண்டு செய்து செல்லுதலும் விருத்தியாயிற்று; விருத்தி - தொழில்; சீவனோபாயம் என்பர். இவையேயன்றித் தமக்கு வேறு தொழி லில்லாமையால் அத்தொண்டினை ஏற்றுக்கொள்ளும் இறைவர்க்கும் இவரைக் காத்தல் கடனாயிற்று; அதுபற்றியே பொருள் வேண்டிய வேண்டியவாறே வேண்டிய வேண்டிய காலத்தும் இடத்தும் பெறலாயினர் என்ற குறிப்பெல்லாம் கண்டுகொள்க.

ஆவியின் விருத்தி - பிறவிப்பயன் - ஆன்ம லாபம் என்பது இராமநாதச் செட்டியார் குறிப்புரை; முன்னர் மெய்விருத்தியைக் கூறினர்; இங்கு உயிர்க்குறுதிப் பயன் கூறப்பட்டது. "ஊனாலு முயிரானு முள்ளபயன் கொளநினைந்து" (1421) என்ற கருத்து ஈண்டு வைத்துக் காணற்பாலது; "ஊனடைந்த உடம்பின் பிறவியே, தானடைந்த உறுதியைச் சாருமால் ..தாடொழ" என்பதும், பிறவும் காண்க. ஈண்டு விருத்தி என்றது உறுதிப் பயன் என்ற பொருள் தந்து நின்றது; விருத்தியான - புலியூர் மன்று என்று கூட்டுக.

மெய்விருத்தி - ஆவியின் விருத்தி - ஆக்கச் சொல் உளதாக்கும் என்ற பொருள் தந்து நின்றது. ஈண்டு, இவ்வாறன்றி, மெய்விருத்தி - மெய்ம்மையான சித்த விருத்தி என்றும், ஆவியின் விருத்தி - ஆவி - என்பது ஆவி என முதனீண்டதென்று கொண்டு வேள்விகளை வேட்டலே தமது தொழிலாகக் கொண்ட என அந்தணருடன் கூட்டியும் உரைத்தனர் முன் உரைகாரர்கள்.

தும்பிடுவது - இது நம்பிகள் திருவுள்ளத்துட் கொண்ட துணிபு.

வழிக்கொள்வான் - வழிக்கொள்ளும் பொருட்டு; செல்லும் பொருட்டு.

வணங்கி - திருமுதுகுன்றரை வணங்கி விடைபெற்று.

தும்பிடுவனென்று—என்பதும் பாடம். 110

I திருமுதுகுன்றம்

திருச்சிற்றம்பலம் பண் - கொல்லிக் கௌவாணம்

நஞ்சியிடை யின்று நாளை யென்றும்மை நச்சுவார்
துஞ்சி யிட்டாற் பின்னைச் செய்வ தென்னடி கேள்சொலீர்
பஞ்சியிடப் புட்டில் கீறு மோபணி யீரருள்
முஞ்சியிடைச் சங்க மார்க்குஞ் சீர்முது குன்றரே. (1)

முத்திமுத் தாறு வலஞ்செ யும்முது குன்றரைப்
பித்த னொப் பானடித் தொண்ட னூரன் பிதற்றிவை
தத்துவ ஞானிக ளாயி னார்தடு மாற்றிலார்
எத்தவத் தோர்களு மேத்து வார்க்கிட ரில்லையே. (10)

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு** :—ஆசிரியர் (3260) காட்டியருளியவாறு கண்டுகொள்க.

குறிப்பு :—நாதர்பாற் பொருள் வேண்டிய திருவுள்ளக் குறிப்பு ; " இன்று நாளை யென்றும்மை நச்சுவார் துஞ்சியிட்டாற் பின்னைச் செய்வதென்" (1) என்றும், " இளைப்பறியீ ரிம்மை யேத்துவார்க் கம்மை செய்வதென் " (4) என்றும், " பாடிப் படைத்த பொருளெலா முமையாளுக்கோ " (5) என்றும், பிறவாறும் வரும் பதிகக் குறிப்புக்களா லறியப்படும் ; " கையிலொன்றும் காணமில்லை " "மற்றைக் கண்டான் றூரா தொழிந்தால் " " ஒன்றைத் தாகில ராகில் " என்பன போன்று வெளிப் படையாய் இங்கு வேண்டினாரல்லர் ; பொருள் வேண்டிய கருத்தினைக் குறிப்பினு லுணர்த்துகின்றார் ; இதனைப் "பித்த னொப்பா னடித் தொண்ட னூரன் பிதற்றிவை" (11) என்று நம்பிகள் பதிகத்தால் தாமே அறிவித்தருளுதல் காண்க.

**பதிகப் பாட்டுக் குறிப்பு**:—(1) நஞ்சியிடை - இடை நஞ்சு என மாற்றுக ; இடையில் வருந்தி ; நைஞ்சு என்பது நஞ்சு என நின்றது ; நைஞ்சுபோதல் - உடைந்து வருந்துதல் ; இன்று நாளை என்று - நாள்தோறும் ; நச்சுதல் - விரும்பு தல் ; பலகாலும் வேண்டுதல் என்ற குறிப்புமாம் ; துஞ்சியிட்டால் இறந்துபோனால் பின்னைச் செய்வதேன் ? - வருந்தி வேண்டுபவர்க்கு ஆயுள்வரையும் கொடாமல் இருந் தால் அவர்கள் வேண்டுவது பெறாதே இறந்தபின் அப்புறம் அவர்களுக்கு என்ன செய்யப் போகிறீர் ? ; பஞ்சியிடப் புட்டில் கீறுமோ - புட்டில் - அம்புப் புட்டில் ; அம்பறாத்தூணி என்பர். அதனுள் இடும் அம்பு முதலிய ஆயுதங்களின் கூர்மையி னால் அதன் உட்பக்கங்கள் கீறி ஊறுபடாதபடி பஞ்சு இடுதல் மரபு. பஞ்சு இட் டால் புட்டில் கீறி ஊறுபடாதவாறு போல நச்சுவார்க்கு ஏதேனும் தந்தொழிந்தால் உம்மைக் கேட்டுத் தொல்லைப்படுத்தமாட்டார் என்பது குறிப்பு. முஞ்சியிடை... முதுகுன்றரே - முதுகுன்றத்தின் நீர்வளம் கூறியபடி ; வளமுடையீரே ! ஆதலின் தருதல் வேண்டு மென்பது குறிப்பு. முஞ்சி - நீர்வளமுள்ள இடங்களில் முளைக்கும் ஒருவகைப் புல் ; பிரமசாரிகள் அரைஞாண் இதனாலாக்கப்படும். " முஞ்சி நாணுற முடிந்தது சாத்திய அரையில் " (509) ; முஞ்சிப்புற் புதரில் ஏறிச் சங்கம் வளைகள் வயிறுளைந்து சத்திக்கும் என்பது ; " திடலேறிச் சுரிசங்கம் வெண்முத்தந் தீன்றலைக் கும் திருவையாறே " (தேவா) ; எனது வேண்டுதல் முஞ்சியிடைச் சங்கமார்த்தல் போல வீணே கழியாது, கேட்டுப் பயன் பெற வேண்டுமென்ற குறிப்புமாம் ;—(7) திரிந்தக்கால் - பலிக்குச் சென்று திரிந்தால் ; திரிந்தால் தாமரை போன்ற சேவடிகள் வருந்தாவா ? இப்பதிகத்தினுள் இறைவர் பலிதேர்ந்துழல்கின்றமை பற்றிப்

பலவாறும் போற்றுதல் காண்க. பூரி - வலிமை ; களிறு - மலைபடுபொருள் ; குறிஞ்சிக் கரு ; கண்டகர்...சீர் - வேள்வி முழக்கு - இவை குறிஞ்சிநில மக்கள் செய்யும் வழிபாட்டு முழக்கு ; கண்ணப்ப நாயனார் புராணம் பார்க்க ;—(4) விளைப்பு - மேல் விளைவு ; அளை - புற்று ; பொருள் வேண்டிய உள்ளக் குறிப்பு ;—(5) அம்மைச் செய்வதென் - உமையாளுக்கோ ? - அடியாருக்கும் அதில் பங்குண்டு என்பது குறிப்பு ; அடியாரும் நீரும் என்றது அடியாரும் நீருமாகச் சேர்ந்து பாடிப் பெற்றதாதலின் அவர் பங்கு பெறுதற்குரியார் என்பது குறிப்பு ; 8-வது பாட்டும் பார்க்க ;*—(6) கோடு - மலைச் சிகரம் ; யானை - (பிடி) - ஆளி - குறிஞ்சிக் கரு ; முழை - குகை ;—(7) ஆளி - சிங்கம் ; குறத்தி-குறிஞ்சிநில மக்கள் ; கன்றிடும்-ஈனும் ; குறத்திகள் முன்றிலிடைப் பிடிகன்றிடும் - பெண்மை இனம் பற்றிப் பெண் யானைகள் குறத்திகள் உள்ள முற்றத்திற் கன்று ஈன அதற்கு அவர்கள் வேண்டும் துணைக் காரியங்கள் செய்குவர் என்பது குறிப்பு. மலைவாணர் யானை முதலிய மிருக இனங்களுடன் பழகும் நிலையும் குறித்தது ; சேடிச்சிகள் - இழிந்தோர் ; குன்றில் - மலையிடங்கள் ;—(8) மந்தி - பெண் குரங்கு ; கடுவன் - ஆண் குரங்கு ; மந்தி...உண்பழநாடி - விலங்கினத்துள்ளும் காணும் அன்புநிகழ்ச்சி; உமது மலைவாழும் விலங்கினமும் அன்புச்செயல்கள் செய்தலால், நீர், உமக்கு அடிமைப்பட்ட வாழ்வுடைய எனக்கு ஈந்து அளிப்பது கடன் என்றது குறிப்பு;—(9) செட்டி-வாணிகம் செய்யும் சாதியீரே!; முருகனுக்குச் செட்டி என்ற பெயர் வழங்கும் முறை குறித்தது; செட்டி...நிற்பதே - உமது தேவி ஊர்தோறும் அறங்களெல்லாம் செய்யவும் நீர் பிச்சை ஏற்பது தகாது ; ஆதலின் "நான் பலி ஏற்பவன்; உனக்குப் பொருள் தருதல் எவ்வாறு ?" என்று கூறிக் கழித்தலும் தகாது என்ற குறிப்பு. முட்டி - சார்ந்து ;—(10) எத்திசையும்...கோண்மினோ ? - எல்லா வுயிர்களிடத்தும் பொது நோக்கால் எழுந்தருளினும் பத்தி செய்வார் பக்கல் சிறப்பு நோக்கால் அருள்புரிதல் வேண்டுமென்பது குறிப்பு ; எத்திசையும்...வலஞ்செய்யும்-திருமணி முத்தாறு எல்லாத் திசைகளிலும் திரைகளால் நீரினை வீசிப் புக்கு வளம் செய்யினும் திருமுதுகுன்றத்தினிற் சிறப்பாகக் கரைகளின்மேல் முத்தி வலஞ்செய்து வழிபடும் என்பது. உமது ஆறுதானும் இவ்வாறு செய்தால் அதுபோல் நீரும் செய்தல் வேண்டுமென்பதும், ஆதலின் அடியானாகிய என் பக்கம் சிறப்பாக அருள் புரிதல் வேண்டுமென்பதும் குறிப்பு ; முத்தி - மெதுவாக ஒத்தி வருகுதல் ;—(11) பித்தனொப்பான்...பிதற்றிவை - மனக் கருத்தினைப் புலப்படுத்தாது வேறு வகையாற் கூறுதலின் பித்தன் - பிதற்று என்றார் ; பித்தனொப்பான் - அடிமைத் திறத்தினிற் பித்துக்கொண்டவன் ; தத்துவ ஞானிகள்...தடுமாற்றிலர் - ஞானிகள் இதன் உட்பொருள் காணுதலில் மயங்கிலர் ; ஏத்தவத்தோர் - ஏனையோர்.

## II திருமுதுகுன்றம்

திருச்சிற்றம்பலம் ("நம்பி" என்ற திருப்பதிகம்) பண் - தக்கேசி

மெய்யைமுற் றப்பொடிப் பூசியோர் நம்பி வேதநான் கும்விரித் தோதியோர் நம்பி
கையிலோர் வெண்மழு வேந்தியோர் நம்பி கண்ணு மூன்றுமுடை யாயொரு நம்பி
செய்ய நம்பிசிறு செஞ்சடை நம்பி திரிபுரந் தீயெழச் செற்றதோர் வில்லால்
எய்த நம்பியென்னை யாளுடை நம்பி யெழுபிறப்பு மெங்க ணம்பி கண்டாயே. (1)

கரத்தி நம்பி கசியாதவர் தம்மைக் கசிந்த வர்க்கிம்மையோ டம்மையி லின்பம்
பெருக்கு நம்பி பெருகக் கருத்தா * * * (10)

திருச்சிற்றம்பலம்

---

*இஃது இந்நாள் தொழிலாள ரியக்கக் கருத்தின் முளைபோலும் !.

பதிகக் குறிப்பு :—முன் ஆசிரியர் (3260) உரைத்தருளியவாறு.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) மெய்ம்மை - மெய்யின்கண் ; ஐ - உருபு மயக்கம் ; நம்பி - நம்பி அடையத் தக்கவர் ; என்னை யாளுடை நம்பி - அடிமை கொண்டதனால் பொருள் தந்து காக்கக் கடமைப் பட்டவர் என்பது குறிப்பு ; எழு பிறப்பு மெங்கணம்பி - "அடிமை ஒருமையா மெழுமையும்" (3235);—(3) பொருளால் வரு நட்டம் - ஐந்தொழிற் பொருள் காட்டும் திருக்கூத்து ; பொழுது - காலம் ; விண் - முதலியன இடம் ;—(4) உயிர்க்கெல்லா மழுதா ஆறு நம்பி என்க ; உயிர்க்கெல்லாமரிய என்று பின்னுங் கூட்டுக ;—(6) இரித்த - சிதைந்தோடச் செய்த ;—(7) பின்னை - இலக்குமி ;—(8) சொல்லை...நின்ற நம்பி - சொல்லும் பொருளுமானவர் ; இல்லை - வீடுகள் தோறும் ;—(9) தரு - பெரிய ; பொய்ச்சமண் பொருளாகி - பொய்ச் சமணத்திலும் அவர்க்கேற்றவாறு விளங்குபவன் ;—(10) கசியாதவர்தம்மைக் கரத்தி - அன்பினால் உருகாதவர்பால் விளங்காமல் ஒளித்திருப்பவர் ; கசிதல் - அன்பினால் உள்ள முருகுதல் ; குறிப்பு - இப்பாட்டில் பின் மூன்று அடிகள் சிதலமாயின !

தலவிசேடம் :—திருமுதுகுன்றம் - III-பக்கம் உகஎ பார்க்க.

3265. மாடுள பதிகள் சென்று வணங்கிப்போய், மங்கை பாகர்
நீடிய கடம்பூர் போற்றி, நிறைந்தவா னந்தக் கூத்தர்
ஆடிய தில்லை மூதா ரணைந்தணி வாயில் புக்குச்
சேடுயர் மாட நீடு செழுந்திரு வீதி சார்ந்தார். ககக

(இ - ள்) மாடுள...போற்றி - பக்கத்தில் உள்ள பதிகளிற் சென்று இறைவரை வணங்கிப் போய் உமை பாகராகிய இறைவர் நீடி எழுந்தருளியுள்ள திருக்கடம்பூரினை வணங்கித் துதித்து ; நிறைந்த...புக்கு - நிறைந்த ஆனந்தக் கூத்தர் நடஞ் செய்யும் தில்லை மூதூரினை அணைந்து அழகிய நகர் வாயிலினுட்புக்கு ; சேடுயர்... சார்ந்தார் - பெருமையினாலுயரும் மாடங்கள் நிலை பெற்று விளங்கும் செழுமையாகிய திருவீதியினைச் சார்ந்தருளினார்.

(வி - ரை) மாடுளபதிகள் - திருமுதுகுன்றத்தினின்றும் திருத்தில்லை செல்லும் இடையிலும் பக்கங்களிலும் உள்ள பதிகள்.

நிறைந்த ஆனந்தம் என்று கூட்டி ஆனந்தத்தின் முழுமை என்றுரைத்துக் கொள்க. "பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற பரிபூர ணானந்தமே" (தாயுமானார்).

நிறைந்த - எல்லாப் புவனங்களிலும் நிறைவாகிய ; நிறைந்த மூதூர் என்று கூட்டியுரைப்பினு மமையும் ; "எப்புவனங் களுநிறைந்த திருப்பதியி னெல்லையினை யிறைஞ்சி யேத்தி" (1444) என்றதும், ஆண்டுரைத்தவையும் பார்க்க.

அணிவாயில் - நகரத்தின் திருவாயில் ; இது மேற்குத் திருவாயில் என்பது கருதப்படும் ; கோயிற்றிருவாயில் மேற்பாட்டிற் கூறப்படும்

சேடு உயர் மாடம் - தில்லைவாழந்தணர்களும் மடபதிகளும் வாழும் மாடங்களாதலின் சேடுயர் என்றார் ; சேடு - பெருமை.

திருவீதி - "மாதவங்க ணல்குந் திருவீதி நான்குந் தொழுது" (2063) ; சார்ந்தார் - "சார்புணர்ந்து" (குறள்).

கடம்பூர் - இதன் விவரம் விளங்கவில்லை.

மாடுளபதிகள் - எருக்கத்தம்புலியூர் - முதலாயின என்பது கருதப்படும். 111

3266. பொற்றிரு வீதி தாழ்ந்து புண்ணிய விளைவா யோங்கும்
நற்றிரு வாயி னண்ணி நறைமலி யலங்கன் மார்பர்
மற்றதன் முன்பு மண்மேல் வணங்கியுட் புகுந்து பைம்பொற்
சுற்றுமா ளிகைசூழ் வந்து தொழுதுகை தலைமேற் கொள்வார், ககஉ

3267. ஆடிய திருமுன் பான வம்பொனின் கோபு ரத்தின்
ஊடுபுக் கிறைஞ்சி யோங்கு மொளிவளர் கனக மன்றில்
நாடகச் செய்ய தாளை நண்ணுற வுண்ணி றைந்து
நீடுமா னந்த வெள்ளக் கண்கணீர் நிரந்து பாய, ககங

3268. பரவுவாய் குளறிக் காதல் படிதிருப் படியைத் தாழ்ந்து
விரவுமெய் யங்க மைந்து மெட்டினும் வணங்கி வேட்கை
யுரனுறு திருக்கூத் துள்ள மார்தரப் பெருகி நெஞ்சிற்
கரவிலா தவரைக் கண்ட நிறைவுதங் கருத்திற் கொள்ள, ககச

வேறு

3269. "மடித்தாடு மடிமைக்க"ணென்றெடுத்து மன்னுயிர்கட் கருளுமாற்றால்
அடுத்தாற்று நன்னெறிக்க ணின்றார்கள் வழுவிநரகணையாவண்ணம்
தடுப்பானைப் பேரூரிற் கண்டநிலை சிறப்பித்துத் "தனிக்கூத்தென்றும்
நடிப்பானை நாமனமே பெற்றவா" றெனுங்களிப்பா னயந்து பாடி,

3270. மீளாத வருள்பெற்றுப் புறம் போந்து திருவீதி மேவித் தாழ்ந்தே
ஆளான வன்றொண்ட ரந்தணர்க டாம்போற்ற வமர்ந்து வைகி,
மாளாத பேரன்பாற் பொற்பதியை வணங்கிப்போய், மறலி வீழத்
தாளாண்மை கொண்டவர்தங் கருப்பறிய லூர்வணங்கிச்சென்று சார்ந்தார்.

3266. (இ - ள்) நலமலி அலங்கல் மார்பர் - நன்மை மிகும் மாலை தாங்கிய மார்புடைய நம்பிகள்; பொற்றிரு...நண்ணி - அழகிய திருவீதியினை வணங்கிப் புண்ணியத்தின் விளைவாகி ஓங்கி விளங்குகின்ற நல்ல திருவாயிலினைச் சேர்ந்து; மற்றதன்...வணங்கி - அதன் முன்பு நிலமுற விழுந்து வணங்கி; உட்புகுந்து - உள்ளே புகுந்து; பைம்பொன்...கொள்வார் - பசும்பொன் வேய்ந்த இடங்களையுடைய சுற்றுத் திருமாளிகையினைச் சூழ்ந்து வலம் வந்து தொழுது கைகளைத் தலைமேற்கொள்வாராகி, ககஉ

3267. (இ - ள்) ஆடிய...இறைஞ்சி - ஆனந்தக் கூத்தர் ஆடும் திருமுன்பாகிய அழகிய பொற்கோபுரத்தின் வழியே உட்சென்று வணங்கி; ஓங்கும்...நண்ணுற - பெருகும் ஒளிவளர்கின்ற பொன்னம்பலத்தில் ஆடுகின்ற சேவடியைச் சார; உள் நிறைந்து...பாய - உள்ளே நிறைந்து நீடுகின்ற ஆனந்த வெள்ளமாகிய கண்ணீர் இரு கண்களினின்றும் விடாது பொழிய, ககங

3268. (இ - ள்) பரவுவாய் குழறி - துதிக்கின்ற வாய் தழுதழுத்துக் குழறி; காதல்...தாழ்ந்து - பெரு விருப்பம்படியும் திருக்களிற்றுப் படியினை வணங்கி; விர வும்...வணங்கி - மெய் பொருந்திய ஐந்தங்கம் எட்டங்கம் என்ற முறையில் வணங்கி; வேட்கை...பெருகி - பெருகிய ஆசை வலுப்படத் திருநடனம் மெய்யுணர்வினுள்ளே

நிறைந்து மேன்மேலும் பெருகி ; நெஞ்சில்...கொள்ள - தமது திருவுள்ளத்தினுள் காத்தல் இல்லாது வெளிப்பட்டு நின்ற இறைவரைத் திருப்பேரூரிற் கண்ட அக் காட்சி நிறைவாகத் தம் கருத்தில் கொள்ள ; கக௪

3269. (இ - ள்) மடித்தாடும்...எடுத்து - " மடித்தாடும் அடிமைக் கண் " என்று தொடங்கி ; மன்னுயிர்கட்கு...சிறப்பித்து - உலகில் உயிர்களுக்கு அருளும் வகையினால் இறைவரை அடுத்துச் செய்யும் சிவநெறியினின்றவர்கள் தவறி இயமன் கைப்பட்டு நரகில் அணையாதபடி தடுத்தாட்கொள்ளும் இறைவரைத் திருப்பேரூரில் கண்டு வழிபட்ட நிலையினைச் சிறப்பித்து ; தனிக்கூத்து...பாடி - ஒப்பற்ற தனிக் கூத்தினை ஆடுகின்றவரை மனமே ! நாம் கிடைக்கப்பெற்ற பேறுதான் என்னே ! என்று பெரு மகிழ்ச்சியினால் விரும்பிப்பாடி, கக௫

3270. (இ - ள்) மீளாத...தாழ்ந்தே-பிரியாவிடை அருளப்பெற்றுப் புறத்துப் போந்து திருவீதியினை அணைந்து தொழுதே ; ஆளான...வைகி - இறைவருக்கு ஆளாயின வன்றொண்டராகிய நம்பிகள், அந்தணர்கள் தம்மைப் போற்ற, விரும்பி அங்குத் தங்கியருளி ; மாளாத...போய் - ஒழியாத பேரன்பினாலே அழகிய அத் திருப்பதியினை வணங்கிச் சென்று ; மறலி...சார்ந்தார் - இயமன் வீடும் படி தாளாண்மை கொண்ட இறைவரது திருக்கருப்பறியலூரினை வணங்கிப் போய்ச் சார்ந்தருளினர். கக௬

இவ்வைந்து பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3266. (வி - ரை) புண்ணிய...வாயில் - புண்ணியம் - சிவபுண்ணியம் ; முன் செய்த அளவில்லாத சிவபுண்ணியங்களின் மேலீட்டினாலே மக்கள் இத்திருவாயிலிற் புகும்பேறு பெறுவர் என்பது கருத்து ; "பல்லூழி காலம் பயின்றரனை யர்ச்சிக்கில், நல்லறிவு சற்றே நகும் " என்ற பொருளை ஈண்டு வைத்துச் சிந்திக்க ; " வாயி, லப் பதியில் வாழ்பெரியோ ருள்ளம் போல, ஓங்குநிலைத் தன்மையவா யகில முய்ய வுமைபாக ரருள்செய்த வொழுக்க மல்லாற், றீங்குநெறி யடையாத தடையு மாகிச் செந்நெறிக்க ணிகழ்வாய்மை திருந்து மார்க்கந் தாங்குலவ நிலவி " (1165) என்று இக்கருத்தை முன் விரித்துரைத்தாராதலின், இங்குப் " புண்ணிய விளைவு " என்றமைந்தார் ; இது மேற்குக் கோபுரவாயில் என்று கருதுக.

பைம்பொற் சுற்று மாளிகை - பொன் வேய்ந்தமைந்த இடங்களையுடைய சுற்றுத் திருமாளிகைப் பத்தி. தலைமேற்கொள்வார் - புக்கு - இறைஞ்சி - என மேல்வரும் பாட்டுடன் கூட்டுக.

அலங்கல் மார்பர் - அலங்கல் - உரிய அடையாள மாலையாகிய தாமரை மாலை ; இறைவரது ஆணையின்படி (273) வேள்வியிற் கொண்ட மணக் கோலத்துடன் சரித்தாராதலின் அதன் குறிப்புமாம்.

நலமலி அலங்கல்—என்பதும் பாடம். 112

3267. (வி - ரை) ஆடிய திருமுன்பு - கூத்தப்பெருமானின் நேர் திரு முன்புள்ள ; இது நடராசரின் நேர் முன்பாகிய உட்கோபுரம் ; கொடி மரம் உள்ள திருவாயில். இதனைத் திருவணுக்கன்றிருவாயில் என்பாருமுண்டு.

கோபுரத்தின் ஊடுபுக்கு - கோபுர வாயிலின் வழியே உள்ளே புகுந்து ; வாயிலும் கோபுரத்தின் அங்கமேயாகி யடங்குதலின் கோபுர வாயிலின் ஊடு என்னாது கோபுரத்தின் ஊடு என்றார்.

ஒளிவளர் கனகமன்று - ஒளியாகிய இறைவர் வளர்ந்தாடும் பொன்னம்பலம்; "ஓங்குமொளி வெளியேநின் றுலகுதொழ நடமாடும்" (கோயிற் புராணம்).

நாடகச் செய்ய தாள் - ஆடும் சேவடி; எடுத்த திருவடி.

நண்ணுற - அணுகச் செல்ல.

உள் நிறைந்து...பாய - உள்நிறைந்து பாய - உள்ளே நிறைந்தமையால் மேல் பொங்கி வழிய; வெள்ள - நீர் என்க; நிரந்து; வரிசைப்பட இடையறாது பரவி. பாய்தல் - வழிதல்.

அம்பொனின் கோபுரம்—என்பதும் பாடம். 113

3268. (வி - ரை) பரவுவாய் குழறி - பரவுகின்ற திருவாய் அவ்வாறு செய்ய இயலாது குழறித் தழுதழுத்து.

காதல்படி திருப்படி - திருக்களிற்றுப் படி; 251ம் பாட்டின் கீழ் இதுபற்றி உரைத்தவை பார்க்க. I - பக். உ௬எ. காதல்படி - பேரன்புஅழுந்தும்; படிதல் - பொருந்திக் கிடத்தல்.

அங்கம் ஐந்தும் எட்டினும் வணங்கி - ஐந்து அங்கம் நிலமுற வணங்குதலும், எட்டு அங்கம் நிலமுற விழுந்து வணங்குதலும் செய்து; இவை முறையே பஞ்சாங்க அட்டாங்க நமக்காரம் எனப்படுவன; இவற்றின் விரிவு முன்னர் உரைக்கப்பட்டது.

வேட்கை உரனுற - பேரன்பின் வலிமை பொருந்திக் கிடந்த: உரன் - திண்மை - அறிவு; "உரனென்னுந் தோட்டியான்" (குறள் - பரி. உரை.)

நெஞ்சிற் கரவிலாதவர் - ஒருசிறிதும் ஒளிக்காமல் தமது முழு ஆனந்தத்தினையும் உள்ளே நிறைய வெளிப்பட நின்றவர்; "கரவார்பால் விரவாடும் பெருமான்" (தேவா). வேட்கை - பெருகி என இயையும்.

கரவிலாதவரைக் கண்ட நிறைவு - "தில்லை மன்றுணின் றுட னீடிய கோல"த்தை நேர்காணத் திருப்பேரூரில் கண்ட மெய்யுணர்வினுள் நிறைந்த காட்சி அங்குக் கண்ட காட்சியினையே இங்கும் முழுமையும் காணும் நிலை.

கருத்தில் கொள்ளுதல் - மனத்தினுள் நிறைந்து கிடக்கப் பெறுதல்.

அரனுற—என்பதும் பாடம். 114

3269. (வி - ரை) மடித்தாடும் அடிமைக்கண் - இது பதிகத்தொடக்கமாகிய முதற்குறிப்பு; பதிகம் பார்க்க.

மன்னுயிர்கட்கு...தடுப்பானை - உயிர்களுக்கு அருள்புரியும் வகையாலே - தடுப்பான் என்று கூட்டுக.

அடுத்தாற்றும் நன்னெறிக் கண் நின்றார்கள் - முன்னை வினையின் வழித் தோன்றி அவ்வினைப் பயனை அனுபவித்துக் கழிக்கும் வகையாலே அவ்விதிவழி அறநெறியில் நிற்பவர்கள்; வழுவி - அந்நெறியினின்றும் விலகி - தவிர்ந்து; நரகனையா வண்ணம் - வழுவியதன் காரணமாக நரக லோகம் செல்லும் வழிபோகாத படி; தடுப்பான் - தடுத்தாட் கொள்பவர்; நம்பிகள் தமது சுயசரித நிலைபற்றி எண்ணித் திருவருளைப் போற்றிய குறிப்பும் கண்டு கொள்க; தமக்குச் செய்த பேர் அருள்கள் எல்லாவற்றிலும் இதுவொன்றே மிகச் சிறந்தது என்பது நம்பிகள் திருவுள்ளத்தினுள் ஊன்றிக் கிடந்த தென்க.

நின்றாலும் வழுவினார்கள் என்ற பாடமுமுண்டு. அப்பாடத்துக்கு, அறத்தின் நன்னெறியிலே நிற்பினும் பிறவியில் வந்த வினைப்பயன் துய்ப்பதனோடு அமையாது புதிது புதிது வினைகளைத் தேடிக்கொள்ளும் வகையால் வழுவியவர்கள் என்றுரைத்துக் கொள்க; இப்பொருட்கு நன்னெறிக்கண் நின்றாலும் என்றதற்கு உலக

விதிப்படி நல்லநெறி சென்றாலும், என்றுரைத்து, நன்னெறி - உலகியல் நெறியாகிய இல்லற முதலிய நிலைகள் என்று கொள்க ; ஈண்டு நம்பிகள் புத்தூரில் முயன்ற திருமணம் உலகியலில் நன்னெறியே யன்றித் தீநெறி எனப்படா நிலையும் காண்க ; ஆயினும் உயிர், மேலும் பிறவியில் விழுந்துவிடாது ஈடேறும் வகையால் முன்னர் வேண்டிய வரத்தின்படி அது வழுவேயாகி முடிந்து, தடுக்கப்பட நின்ற இயைபும் கண்டுகொள்க. தடுப்பானை - தடுத்தாட் கொள்ளும் இறைவனை.

பேரூரிற் கண்ட நிலை சிறப்பித்தது.-பதிகம் இறுதிப் பாட்டிற் "பேரூர் பெருமானைப் புலியூர்ச்சிற் றம்பலத்தே பெற்றாம்" என்பதனை ஆசிரியர் காட்டியருளியபடி.

தனிக்கூத்து என்றும் நடிப்பானை - புலியூர்ச் சிற்றம்பலத்தே கண்ட காட்சி.

பெற்றவாறு - காணப்பெற்ற பேற்றின் அருமைப்பாடுதான் என்னே ! என வியந்தது ; "பெற்றாமன்றே" என்ற பதிக மகுடத்தின் பொருள் விரித்துக்காட்டியபடி ; களிப்பு - பேரானந்த விளைவு ; பெறுதற்கரிய பொருள் பெற்றபோது விளையும் உள்ள நிகழ்ச்சி ; நயப்பு - விருப்பம். 115

3270. (வி - ரை) மீளாத அருள் - பிரியா விடை ; மீளாத - அங்கு நின்று பிரிய முடியாத ; திருவீதி - " மாதவங்கள் நல்குந் திருவீதி நான்கும் " ; கூத்தப்பிரான் திருத்தேரில் எழுந்தருளும் மாடவீதி.

அந்தணர்கள் - தில்லைவாழந்தணர்கள் ; அந்தணர்கள் தாம் போற்ற - "பேரூர் பெருமானைப் புலியூர்ச்சிற் றம்பலத்தே பெற்றா மன்றே" என்ற திருப்பதிகத்தைக் கேட்ட அந்தணர்கள், நம்பிகளை நோக்கித் தில்லைபோல வேறு ஒரு தலமும் உலகில் இல்லையாயிருப்பவும் பேரூரினை இங்குச் சிறப்பித்த தென்னை ? என வினவ, நம்பிகள் தில்லையம்பலத்திற் போலவே பேரூரில் அரசம்பலத்திலும் கூத்தப்பெருமான் எப்போதும் ஆனந்த நடனம் புரிந்தருளுவர் என்றுரைக்க, அது கேட்டு, அவ்வந்தணர்கள் அங்குச் சென்று அவ்வாறே கண்டு, அழகிய திருச்சிற்றம்பலம் என்றொரு தலத்தையும் தாபித்து வணங்கி மீண்டு வந்தனர் என்பது பேரூர்ப்புராணம் ; வன்றொண்டர் அந்தணர்கள் தாம் போற்ற என்பது அக்குறிப்புத் தருவது ; வன்றொண்டர் என்ற பேரூர்ப் புராணமும் கருதுக.

ஆரூரர் பேருரை யணைந்திறைஞ்சிப் போய்த்தில்லை
நீரூருஞ் சடையாரை நேர்வழுத்தும் பதிகத்திற்
" பேரூரர் பெருமானைப் பெற்றா "மென் றிசைத்ததமிழ்
சீரூருந் தில்லைவா ழந்தணர்தஞ் செவிக்கேட்டார். (1)

தம்பிரான் றோழரவர் தமைநோக்கி வினவுவார்
" எம்பிரா னமர்தில்லை யித்தலம்போ லொருதலமும்
உம்பரார் தொழுமுலகி லுயர்ந்திருப்ப திலையன்றே !
நம்பிபே ரூர்ச்சிறப்ப நயந்தெடுத்த தென் ?" னென்றார். (2)

மாண்ட குணத் தந்தணர்கள் வினவுதலும் வன்றொண்டர்
நீண்டமகிழ் வினராகி நிலைமையவர்க் கருள்செய்வார்
" ஈண்டுநடம் புரிவதுபோ லெம்பிரான் போதிவனத்
தாண்டுமன வாதமுறல் லானந்த நடம்புரியும் " (3)

பேரூர்ப்புராணம் - அழகிய திருச்சிற்றம்பலப் படலம்

பதியை வணங்கிப் போய்-பதியினை விட்டுப் புறப்படும்போது நகர் எல்லையில் பதியை வணங்கிச் செல்லுதல் சிறந்த மரபு.

தாளாண்மை - இரட்டுற மொழிதலால் முயற்சி என்றும், தாளினாலே செய்த ஆண்மை (உதைத்துருட்டியது) என்றும் கொள்ள வைத்தது கவி நலம்.

கருப்பறியலூர் வணங்கி - ஊரினைத் தூரத்தே கண்டு வணங்கி; சார்ந்தார் - ஊரினுள் சார்ந்தனர்.

குறிப்பு - முதன்முறை திருத்தில்லை வழிபாடும் (250—253) திருப்பேரூர் வழிபாடும் (3242—3245) தனித்தனியே நந்நான்கு பாட்டுக்களால் ஆசிரியர் கூறிய வொற்றுமை நயம் பற்றி முன் (3242—3245) உரைக்கப்பட்டது. அதன்பின் ஈண்டு இரண்டாம் முறைத் திருத்தில்லை வழிபாட்டினைப் பேரூரும் தில்லையும் கூடியவாற்றால் ஐந்து (3266-3270) திருப்பாட்டுக்களா லருளிய திறமும் கருதத் தக்கது. முன்போலவே இவற்றின் பொருளொற்றுமை நயமுஞ் சிந்தித்துணரத் தக்கது. **116**

### கோயில்

*திருச்சிற்றம்பலம்* பண் - குறிஞ்சி

மடித்தாடு மடிமைக்க ணன்றியே மனனேநீ வாழு நாளுந்
தடுத்தாட்டித் தருமனார் தமர்செக்கி லிடும்போது தடுத்தாட் கொள்வான்
கடுத்தாடுங் கரதலத்திற் றமருகமு மெரியகலுங் கரிய பாம்பும்
பிடித்தாடி புலியூர்ச்சிற் றம்பலத்தெம் பெருமானைப் பெற்றா மன்றே. (1)

பாரூரு மரவல்கு லுமைநங்கை யவள்பங்கன் பைங்க ணேற்றன்
ஊரூரன் றருமனார் தமர்செக்கி லிடும்போது தடுத்தாட் கொள்வான்
ஆரூரன் றம்பிரா னாரூரன் மீகோங்கி லணிகாஞ் சிவாயப்
பேரூரர் பெருமானைப் புலியூர்ச்சிற் றம்பலத்தே பெற்றா மன்றே. (10)

*திருச்சிற்றம்பலம்*

**பதிகக் குறிப்பு** :—முன் ஆசிரியர் (3269) காட்டியருளியவாறு கண்டுகொள்க. திருப்பேரூர் வழிபாடும் (3242—3245), முன்னர்த் திருத்தில்லை வழிபாடுங் கருதுக.

**பதிகப் பாட்டுக் குறிப்பு** :—(1) மடித்தாடும் அடிமை - ஒருதாளை மடித்து ஊன்றியும் ஒருதாளை மடித்துத் தூக்கியும் ஆடுகின்ற திருவடிக் கீழ்ச் செய்யும் அடிமைத்திறம்; அடிமைக் கண் அன்றியே வாழும் நாளும் - அடிமைத்திறத்தினின் றும் வழுவி நிகழும் நாள்களிலே; தடுத்தாட்டி - மேற்செல்லாதபடி தடுத்துத் தமது புரத்துக்குட் கொண்டு புகுத்தி; காலனார் கைப்படாது தாமே வினைப்போகந் துய்ப் பித்து ஆட்கொள்ளுதல் கருத்து. தருமனார் - இயமன்; தமர் - "கால பாசம் பிடித் தெழு தூதுவர்" - இயமன் தூதர்கள்; செக்கிலிடுதல் - இது முதலியவை நரகத் தண் டனைகள்; போற்றிப் பஃறொடை பார்க்க. கடுத்து - கடுக; விரைவுபட; எரி அகல் - தீயைக் கொண்ட அகல்; கரிய பாம்பு - மிகவும் விடத்தன்மையுடைய குறிப்பு. பிடித்தாடி - பெயர்; ஆடுபவர்; ஆடுபவராகிய பெருமானை என்க. பெற்றாமன்றே - பெற்றவாறு தான் என்ன பெரும் பேறு என்று மகிழ்ந்தது; "பெற்றவா றெனுங்களிப்பால்" (3269) என்று ஆசிரியர் இதனை உரைத்தருளி னர்;—(2) பேராது - பெயர்தலின்றி - நீங்காது; பேரா்து...பிரியாது உள்கி - காமத்திற் சென்றார்களும் பிரியாது உள்குகின்றனர்; திருஅடித் தொண்டர்களும் பிரியாது உள்குகின்றனர். ஆனால் அடித்தொண்டர் பிரியாது உள்கும் திறம் வேறு; முன்னையது அழியும் தன்மையும், சிறிது அளவே நிற்கும் தன்மையும், வெறுப்பும் துன்பமும் உளதாக்கும் தன்மையு முடையது; பின்னையது அவ்வாறன்று என்பார்

அது போலன்றியே என்றருளினார். சீரார்ந்த அன்பர் - திருவிளையாடல் முறைமையும் இக்கருத்து; வரும்பாட்டும் பார்க்க. ஓராது - அத்தன்மைகளை எண்ணாது; பேராளர் - பெரியோர்;—(3) நரியார்...பரிசு - இஃது ஒரு பழமொழியை உள்ளடக்கி நிற்பது; ஒரு நரி ஆடுபோல வேடம்பூண்டு பட்டிக்குள் புகுந்து பாழ்படுத்தி வர அதனை அறிந்தவனால் புடைக்கப்பட்டு இறந்த கதைபோல என்று எடுத்துக் காட்டியபடி; பக்கு - துண்டம்; நரியார் - ஆர் விகுதி இகழ்ச்சிக் குறிப்பு. கள்ளம் - கள்ள வேடம். "நரி விருத்தம தாகுவர் நாடரே" என்பதற்கும், இதற்கும் திருத்தக்கதேவர் பாடியதாக மதுரைத் தமிழ்ச் சங்கத்தார் அச்சிட்ட நரி விருத்தம் என்னும் நூலின் கதையைக் கூறுவாரும் உளர். இந்நரியின் கதை பஞ்சதந்திரத்தும் உள்ளது;—(4) கருமை - துன்பானுபவங் குறித்தது; மண்ணுலகம்...பெருமையார் - இது நம்பிகள் காலத்து நாட்டு நடப்பு நிகழும் வழக்குக் குறித்தது; பல்லவர் மரபு சோழ நாட்டை அரசாண்டகாலம்; பல்லவ அரசுக்குப் பணிந்து அவர்க்கு அரசுரிமையாகிய திறையினைக் கொடாது மறுத்த சிற்றரசர்களுக்குத் தில்லைக் கோயிலில் வழிபடவும், அருணீறும் மாலை முதலியவை பெறவும் உள்ள உரிமையினைத்தாத் தில்லைவாழந்தணர்கள் மறுப்பது அந்நாள் வழங்கியதொரு வழக்கம்; சோழர்க்கன்றி முடிசூட்டமாட்டோம் என்று மறுத்துத் தில்லைவாழந்தணர் இந்நாட்டினையே விட்டகன்று சேர நாட்டிற் புகலடைந்த செய்தி கூற்றுவநாயனார் புராணத்துட் காண உள்ளது; அந்நாளில் அரசாங்க உலகியல் நடைமுறை கோயில் நடை முறையுடன் பிணைந்து நிகழ்ந்த வழக்கு இவற்றினின்றும் அறியப் பெறும். பௌத்தாசாரியனுடன் ஈழநாட்டு அரசன் சமயவாதத்துக்கு வந்து திருவாதவூரடிகளால் புத்த வாதம் நிகழ்த்தப்பெற்ற காலத்தில், சோழ அரசனும் வந்து, அந்நிகழ்ச்சியில் உடனிருந்து கண்டனன் என்று திருவாதவூரடிகள் வரலாறு அறிவிக்கின்றது; பிற்காலத்தில் மகமதியர் படையெடுப்பின்போது நடேசப் பெருமானையும் எழுந்தருளுவித்து உடன்கொண்டு தில்லைவாழந்தணர்கள் சோழர் தலைநகராகிய திருவாரூரில் பூங்கோயிலினுள் காவல் பெற்றனர் என்பது சரிதம். அதுபோழ்து நடேசப் பெருமானார் எழுந்தருளியிருந்த தனித் திருமண்டபம் இன்று கோயிற் காரியாலயமாக விளங்குகின்றது; இந்நாளிலும் கோயிற் காரியங்கள் உலகியல் அரசாங்க நிகழ்ச்சிகளுடன் இணைக்கப்பட்டு நிகழ்கின்றன; ஆனால் தகாத வழிகளில் நிகழ்வதுதான் பெரிதும் வருந்தத் தக்கது! பெருமையார் - என்ற குறிப்புக் கவனிக்கற்பாலது; மறுக்கம் - கோயில் வழிபாட்டுரிமைகளை மறுத்தல்;—(5) கருமான் - கருநிறமுடைய தொருவகை மான்; உரும் - இடி; உலவா - கெடாத; அழியாத; ஏனை உலக இன்பங்கள் போலன்றி இறைவர் தரும் இன்பம் என்றும் அழியாதது;—(6) உய்த்து ஆடி - நிலையற்ற உலக இன்பங்களுள் மனத்தினைச் செலுத்தி; ஆடுதல் - அனுபவித்து மகிழ்ந்து கிடத்தல்; ஊன் கண்ணோட்டம் - உலகியலில் அறியப்படும் கண்ணோட்டம் என்ற அளவாலும்; பித்தாடி - உயிர்களின் பாவம் தீர்ப்பதே பித்தாக ஆடுபவர்;—(7) முட்டாத - முட்டுப்படாத;—(8) கல்தானும் குழையுமாறு - இறைவருள் கல்லையும் குழைவிக்கும்; "கல்லைப் பிசைந்து கனியாக்கி" "கல்லை மென் கனியாக்கும் "விச்சை" (திருவா); "கல்லேனும் ஐயவொரு காலத்தி லுருகும்...கருணைக்கிணங்காத வன்மையையும் நான் முகன் கற்பிக்க ஒரு கடவுளோ?" (தாயுமானார்); தானும் - சிறப்பும்மை; எற்றாலும் - எவ்வாற்றாலும்; பேற்று - எருது;—(9) தாடுடைய - தாடுதல் - தடுத்து வருத்துதல்; மோடு உடைய - மோடு - அறியாமை; முருடு; மூடை - தீநாற்றம்; மூடம் வைத்தல் - வினைவயத்தால் அறியாமையிற் புகுத்தி வினை கழிப்பித்தல்; பீடு - பெருமை;—

(10) மீகொங்கு - மேல் கொங்கு நாடு. கொங்கு நாடு, மேற்கு - வடக்கு - கிழக்கு என்று மூன்று பெரும் பிரிவுகளை உடையது ; காஞ்சி - நதி ; அணி என்ற அடைமொழி என்றும் வற்றாத அதன் நீர்ச் சிறப்பினால் வரும் வளம் குறித்தது ; பேரூர் - திருப்பேரூர் ; பேரூரர்...பேற்றும் - இதனை ஆசிரியர் (3269) விரித்தமை காண்க ; "பேரூரிற் கண்ட நிலை"

தலவிசேடம்:—கோயில் - (சிதம்பரம்) முன்னுரைக்கப்பட்டது.

வேறு

3271. கூற்றுதைத்தார் திருக்கொகுடிக் கோயி னண்ணிக்
கோபுரத்தைத் தொழுதுபுகுந் தன்பர் சூழ
ஏற்றபெருங் காதலினா லிறைஞ்சி யேத்தி
யெல்லையிலாப் பெருமகிழ்ச்சி மனத்தி லெய்தப்
போற்றிசைத்துப் புறத்தணைந்தப் பதியில் வைகிப்
புனிதரவர் தமைநினையு மின்பங் கூறிச்
சாற்றியமெய்த் திருப்பதிகஞ் "சிம்மாந்" தென்னுந்
தமிழ்மாலை புனைந்தங்குச் சாரு நாளில், கஎ

3272. கண்ணுதலார் விரும்புகருப் பறிய லூரைக்
கைதொழுது நீங்கிப்போய்க் கயல்கள் பாயும்
மண்ணிவளம் படிக்கரையை நண்ணி யங்கு
மாதொருபா கத்தவர்தாள் வணங்கிப் போற்றி
எண்ணில்புகழ்ப் பதிகமு"முன் னவ"னென் றேத்தி
யேகுவார் வாழ்கொளிபுத் தூரெய் தாது
புண்ணியனார் போம்பொழுது நினைந்து மீண்டு
புகுகின்றார் "தலைக்கல"னென் றெடுத்துப் போற்றி ; கஅ

3273. திருப்பதிகம் பாடியே சென்றங் கெய்தித்
தேவர்பெரு மானார்தங் கோயில் வாயில்
உருப்பொலியு மயிர்ப்புளகம் விரவித் தாழ்ந்தே
யுள்ளணைந்து பணிந்தேத்தி யுருகு மன்பாற்
பொருப்பரையன் மடப்பாவை யிடப்பா லானைப்
போற்றிசைத்துப் புறம்போந்து தங்கிப் பூமென்
கருப்புவயல் வாழ்கொளிபுத் தூரை நீங்கிக்
கானாட்டு முள்ளூரிற் கலந்த போது, கககூ

3274. கானாட்டு முள்ளூரைச் சாரும் போது
கண்ணுதலா ரெதிர் காட்சி கொடுப்பக் கண்டு
"தூநாண்மென் மலர்க்கொன்றைச் சடையார் செய்ய
துணைப்பாத மலர்கண்டு தொழுதே" னென்று

வானாளுந் திருப்பதிகம் " வள்வா " யென்னும்
வண்டமிழின் றொடைமாலை மலரச் சாத்தித்
தேனாரு மலர்ச்சோலை மருங்கு சூழ்ந்த
திருவெதிர்கோள் பாடியினை யெய்தச் செல்வார், கஉ௦

3275. எத்திசையுந் தொழுதேத்த " மத்த யானை "
யெடுத் " தெதிர்கோள் பாடியினை யடைவோ " மென்னுஞ்
சித்தநிலைத் திருப்பதிகம் பாடி வந்து
செல்வமிகு செழுங்கோயி லிறைஞ்சி நண்ணி
அத்தர்தமை யடிவணங்கி யங்கு வைகி
யருள்பெற்றுத் திருவேள்விக் குடியி லெய்தி
முத்திதரும் பெருமானைத் " துருத்தி கூட "
" மூப்பதிலை " யெனும்பதிக மொழிந்து வாழ்ந்தார். கஉக

3271. (இ - ள்) கூற்றுதைத்தார்...புகுந்து - இயமனை உதைத்த இறைவரது கொடிக் கோயிலினைச் சேர்ந்து திருக்கோபுரத்தைத் தொழுது உள்ளே புகுந்து ; அன்பர் சூழ...எய்த - அன்பர்கள் உடன் சூழ்ந்துவரப் பொருந்திய பெரு விருப்பத்தினாலே வணங்கித் துதித்து அளவில்லாத பெருமகிழ்ச்சி மனத்தினுட் பொருந்த ; போற்றிசைத்து...வைகி - துதி செய்து புறத்திலே வந்தணைந்து அந்தப் பதியினில் தங்கி ; புனிதரவர்...புனைந்து - புனிதராகிய இறைவரை நினைந்ததனால் வரும் இன்பத்தை எடுத்துக் கூறிச் சொல்லிய திருப்பதிகம் " சிம்மாந்து " என்று தொடங்கும் தமிழ்மாலையினைப் புனைந்து சாத்தி ; அங்குச் சாருநாளில் - அங்குத் தங்கியிருந்த நாள்களில் ; ககஎ

3272. (இ - ள்) கண்ணுதலார்...போய் - கண்ணுதலாராகிய இறைவர் விரும்பி எழுந்தருளிய திருக்கருப்பறியலூரினைக் கைதொழுது வழிபட்டுச் சென்று ; கயல்கள்...எகுவார் - கயல் மீன்கள் பாய்தற்கிடமாகிய நீர்வளமுடைய திருப்பழ மண்ணிப் படிக்கரையினைச் சேர்ந்து அங்கு உமையொரு பாகமுடையவராகிய இறைவரது திருவடிகளை வணங்கித் துதித்து அளவற்ற புகழினையுடைய திருப்பதிகத்தினையும் " முன்னவன் " என்று தொடங்கிப் பாடித் துதித்து மேலே செல்வாராகி ; வாழ்கொளிபுத்தூர்...போற்றி - திருவாழ்கொளிபுத்தூரினைச் சேராது புண்ணியனாராகிய நம்பிகள் போகும்போது நினைந்துகொண்டு மீண்டு திரும்பித் " தலைக்கலன் " என்று தொடங்கித் துதித்துக்கொண்டு அங்குப் புகுகின்றாராகி ; ககஅ

3273. (இ - ள்) திருப்பதிகம்...எய்தி - திருப்பதிகம் பாடிப்போய் அப்பதியில் சேர்ந்து ; தேவர் பெருமானார்தம்...பணிந்தேத்தி - தேவர் தலைவராகிய இறைவரது திருக்கோயிலின் வாயிலில் திருமேனியில் விளங்கும் மயிர்க்கூச்சுப் பொருந்த வணங்கி உள்ளே அணைந்து பணிந்து துதித்து ; உருகும்...போற்றிசைத்து - மலையரசன் மடமகளாரை இடப்பாகத்தில் வைத்த இறைவரைத் துதி செய்து ; புறம் போந்து...போது - வெளியே போந்து தங்கியிருந்து அழகிய மெல்லிய கரும்புகளையுடைய அந்தத் திருவாழ்கொளி புத்தூரை நீங்கிச் சென்று திருக்கானாட்டு முள்ளூரினை அணுகியபோது, ககக

3274. (இ - ள்) கானாட்டு முள்ளூரை...கண்டு - (அவ்வாறு) திருக்கானாட்டு முள்ளூரினைச் சேரும்பொழுது கண்ணுதலாராகிய இறைவர் எதிரே காட்சி கொடுத்தருளக் கண்டு ; தூநாண்...என்று - தூய்மையான புதிதாகிய மெல்லிய மலராகிய கொன்றையினை யணிந்த சடையினையுடைய இறைவரது செம்மையாகிய துணைப்பாத மலர்களைக் கண்டு தொழுதேன் என்ற கருத்தினைப் புலப்படுத்தி ; வானாளும்... சாத்தி - தேவருலகத்தையும் பணிகொள்ளும் தன்மையுடைய " வள்வாய் " என்று தொடங்கும் வளப்பமுடைய தமிழின் தொடைமாலையினை அழகு பொருந்தச் சாத்தி; தேனூறும்...செல்வார் - தேன் பொருந்திய மலர்கள் நிறைந்த சோலைகள் பக்கத்தே சூழ்ந்த திரு எதிர்கொள்பாடியினை மேவச் செல்வாராய், ௧௨0

3275. (இ - ள்) எத்திசையும்...வந்து - எல்லாத் திசைகளில் உள்ளோர்களும் தொழுது துதிக்க " மத்தயானை " என்று தொடங்கித் " திருஎதிர்கொள்பாடியினை அடைவோம் " என்கின்ற சித்தநிலையாகிய திருப்பதிகத்தினைப் பாடி வந்து ; செல்வமிகும்...அருள் பெற்று - அருட்செல்வ மிகுந்த செழுந்திருக் கோயிலினை வணங்கிச் சேர்ந்து இறைவரைத் திருவடி வணங்கி அப்பதியில் தங்கித் திருவருள் விடை பெற்றுப்போய் ; திருவேள்விக்குடியில்...வாழ்ந்தார் - திருவேள்விக் குடியிற் சேர்ந்து முத்தியளிக்கும் சிவபெருமானைத் திருத்துருத்தியினையும் கூட்டி " மூப்பதில்லை " என்று தொடங்கும் திருப்பதிகம்பாடித் துதித்து வாழ்வு பெற்றனர். ௧௨௧

இவ்வைந்து பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3271. (வி - ரை) கோதுடிக் கோயில் - கொகுடி என்னும் வடிவிலமைந்த கோயில் ; கோதுடி - முல்லை விசேடம் ; முல்லையினையுடைய கோயில் என்பதுமாம்.

புனிதர்...கூறி - இது பதிகக் கருத்தும் குறிப்புமாம்.

நினையும் இன்பம் - இறைவரை நினைத்தலே இன்பந் தருவதாம். " நினைத்தோறும்......எப்போதும், அனைத்தெலும் புண்ணெக வானந்தத் தேன் சொரியும், குனிப்புடையான் " (திருவா.) " அறுசுவை யதனினு முறுசுவை யுடைத்தாய்க், காணினுங் கேட்பினுங் கருதினுங் களிதருஞ், சேணுயர் மருத மாணிக்கத் தீங்கனி " (11-ந் திருமுறை - திருவிடை - மும் - கோ - 10).

சிம்மாந்து - இது பதிகத் தொடக்கம். 117

## திருக்கருப்பறியலூர்

திருச்சிற்றம்பலம் பண் - நட்டராகம்

சிம்மாந்து சிம்புளித்துச் சிந்தையினில் வைத்துகந்து திறம்பா வண்ணங்
கைம்மாவி னுரிவைபோர்த் துமைவெருவக் கண்டானைக் கருப்பறியலூர்க்
கொய்ம்மாவின் மலர்ச்சோலைக் குயில்பாட மயிலாடுங் கோதுடிக் கோயில்
எம்மானை மனத்தினு னினைந்தபோ தவர்நமக் கினியு வாறே. (1)

கலைமலிந்த தென்புலவர் கற்றோர்தம் மிடர்தீர்க்குங் கருப்பறியலூர்க்
குலைமலிந்த கோட்டெங்கு மட்டொழுகும் பூஞ்சோலைக் கொகுடிக் கோயில்
இலைமலிந்த மழுவானை மனத்தினு லன்புசெயி தின்ப மெய்தி
மலைமலிந்த தோளூரன் வனப்பகையப் பன்னுரைத்த வண்டமிழ்களே. (10)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—புனிதரவர்தமை நினையு மின்பங் கூறுதல்; ஆசிரியர் (3271) எடுத்துக்காட்டி யருளியபடி.

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) சிம்மாந்து - மிகமகிழ்ந்து ; சிம்புளித்து - கண்களை மூடிக்கொண்டு ; "பாட லாட லருத செம்மாப் பார்ந்து" (அரசு. ஆரூர். குறிஞ்சி : 10); கோகுடிக்கோயில் - கொகுடி - முல்லை விசேடம் ; சிம்மாந்து... வண்ணம் - மனத்தினுனினைந்தபோது - எனக் கூட்டுக. "நினையு மின்பம்" பதிகப் பாட்டுத் தோறும் மகுடம் பார்க்க (3271);—(2) நீறநும் என்பது நீற்றநும் என நின்றது ; மேனியராய்...நிறைந்து - திருநீறணிந்து - சிவசின்னம் பூண்டு-நினைந்து ; 3, 4, 6, 9, 10 பாட்டுக்களும் பார்க்க. மேனியராகத் தியானித்து என்று நினையும் வகைகூறியது என்றலுமாம்; நிறைந்து...மதியானை-இறைவரைக் காற்று-தீ-ஞாயிறு-மதி என்ற வடிவங்களாகக் கண்டு தொழலாம் என்பது ; "வேற்றாகி விண்ணாகி நின்றாய் போற்றி" (தாண்);—(3) மூட்டாமே - தவிராது ; மூன்று போதும் - "சந்தி மூன்றிலுந் தாபர நிறுத்திச் சகளி செய்திறைஞ்சு" (நம்பி); காலை - நண்பகல் - மாலை என்பன ; கோட்டாட்டுப் பாட்டாகி நின்றானை - ஆடல் பாடல்களில் விளங்குபவனை ; எட்டான மூர்த்தி - அட்ட மூர்த்தத்துள்ளான் ; "நிலநீர்...எண்வகையாய்ப் புணர்ந்து நின்றானை" (திருவா);—(4) விருந்தாய-புதிதான; ஞான அமுதப் பொருள் விருந்து ; வினைபோக நினைந்தபோது என்று கூட்டுக ;—(5) பொடி - திருநீறு ; தேன் - தேன் வண்டு ; அடியேறு - திருஅடியிற் பூண்ட ;—(6) வாய்மை - அகத் தூய்மை குறிப்பது. "அகத்தூய்மை வாய்மையாற் காணப் படும்" (குறள்). பொடி பூசி - புறமும் அகமும் தூய்மைதரப் பூசி ; "பூசு நீறுபோ லுள்ளும் புனிதர்கள்." (141) ; பூசை - சிவபூசை ; இஃது ஆன்மார்த்தம் பரார்த்தம் என்ற இருவகையு முள்ளிட்டது ; முன் (3) கூறியது ஆன்மார்த்த பூசை ;—(7) நோய் - பிறவி; தீவினை - பண்டைப் பழவினை ;—(8) பறையாத - நீங்காத ; வினைகளும் எனச் சிறப்பும்மை தொக்கது ;—(9) பாடியாடி - நினைந்தபோது என்று கூட்டுக ; கம் - நீர் ; கங்கை ஆர்ந்த என்பது கங்கார்ந்த என நின்றது ;—(10) பண்தாழ் இன்இசை-தாழ்தல் - மிக்கு விளங்குதல் ;—(11) தேன்கலை என்க ; தமிழ் ; மட்டு - தேன் - கள் ; இலை - இலையின் வடிவம் ; மனத்தினா லன்புசெய் தின்பமெய்தி - இப்பதிகம் திருக்கோயிலில் கும்பிட்டு வழிபட்ட போதன்றிப் புறத்தே முன்கூறிய அப்பதியில் வைகியபோது மனத்தினால் நினைந்து தியானத்தினுள் கண்ட அகக் காட்சியின்பம் என்று ஆசிரியர் (3271) கூறியருளியது சரித அகச்சான்று.

தலவிசேடம்:—திருக்கருப்பறியலூர் - காவிரி வடகரை 27-வது பதி; மேலைக் காழி - தலைஞாயிறு - என வழங்கப்படும். "கொகுடிக் கோயில்" (பதிகம்) என்பது இப்பதியின் கோயிலின் பெயர். இந்திரன் அகந்தையுடன் கயிலைக்குச் சென்றபோது இயக்கர் வடிவத்துடன் இறைவர் முன்னே வர, அறியாது அவர்மேல் தனது வச்சிரப் படையினை ஏவி இடர்ப்பட்டுப், பின் தெளிந்து, வணங்கி அந்தக் குற்றம் நீங்க இங்கு வந்து வழிபட்டுப் பேறடைந்தான் என்பது தலவரலாறு. சுவாமி - குற்றம் பொறுத்த நாதர் ; அம்மை - கோல்வளை நாயகி ; தீர்த்தம் - இந்திர தீர்த்தம். பதிகம் 2.

இது திருப்புன்கூரினின்றும் மேற்கில் மட்சாலை வழி 2 நாழிகையில் மண்ணிப் பள்ளத்தை அடைந்து அங்கு நின்றும் வடக்கே மட்சாலை வழி ½ நாழிகையில் அடையத் தக்கது. வைத்தீசுவரன் கோயில் நிலயத்தினின்றும் 5 நாழிகையில் உள்ளது. 2153 பாட்டின்கீழ்க் குறிப்புக்களும் பார்க்க.

3272. (வி - ரை) மண்ணிவளம் படிக்கரை - இது பழமண்ணிப்படிக் கரை என்ற பதி ; பழமண்ணி - என்பது மண்ணியாறு முன்னர் ஓடிய வழி.

**எண்ணில் புகழ்ப் பதிகம்** - பதிகத்தின் சிறப்புணர்த்தியபடி; பதிகக் குறிப்பும் பாட்டுக் குறிப்பும் பார்க்க.

முன்னவன் - பதிக முதற் குறிப்பாகிய தொடக்கம்.

வாழ்கொளிபுத்தூர் எய்தாது...போம்பொழுது - நினைந்து மீண்டு புகுகின்றார்- திருக்கருப்பறியலூரினின்றும் மேற்கு நோக்கிப் பழ மண்ணிப் படிக்கரை செல்கின்ற நம்பிகள் இடையில் உள்ள திருவாழ்கொளிபுத்தூரினைச் சேர்ந்து வழிபட்டுச் செல்லு தல் மரபும் கடமையு மாதலின் ; அவ்வாறு அதிற் சேராது செல்லும்போது நினைவு கொண்டு மீண்டு வந்து சேர்கின்றார். "வாழ்கொளிபுத்தூர் மாணிக்கத்தை மறந் தென்னினைக்கேனே " என்ற பதிகத்தின் மகுடம் இதன் அகச்சான்றாகும். இவ் வாறே " நீடூர் பணியா விடலாமே " (நம்பி) என்று நினைந்து மீண்டு போந்து திரு நீடூரினை வந்து வழிபட்ட வரலாறு இங்கு நினைவு கூர்தற்பாலது.

புகுகின்றார் - முற்றெச்சம் ; புகுகின்றார் - போற்றி - எய்தி என மேல்வரும் பாட்டுடன் கூட்டி முடித்துரைத்துக் கொள்க.

தலைக்கலன் - பதிக முதற் குறிப்பு ; எடுத்து - தொடங்கி.

**போற்றி** - துதித்தவாறே ; " பாடியே " என்று மேற்கூறுதல் காண்க. இப் பதிகம் தலத்தைச் சாருமுன் வழியில் அருளியது ; பதிகக் குறிப்பும் பதிக மகுடமும் பார்க்க.

புண்ணியனார் - சிவபுண்ணிய விளைவாயுள்ளவர். " முடிவிலாத சிவபோக முதிர்ந்து முறுகி விளைந்ததாய் " (வெள. சருக். 2) 118

திருப்பழமண்ணிப்படிக்கரை

திருச்சிற்றம்பலம் பண் - நட்டராகம்

முன்னவ னெங்கள் பிரான் முதல் காண்பரி தாயபிரான்
சென்னியி லெங்கள் பிரான் திரு நீல மிடற்றெம்பிரான்
மன்னிய வெங்கள் பிரான் மறை நான்குங்கல் லானிழற்கீழ்ப்
பன்னிய வெங்கள்பிரான் பழ மண்ணிப் படிக்கரையே. (1)

பல்லுயிர் வாழுந் தெண்ணீர்ப் பழ மண்ணிப்படிக்கரையை
அல்லியந் தாமரைத்தா ரா ரூரா னுரைத்ததமிழ்
சொல்லுதல் கேட்டல்வல்லா ரவர்க் குந்தமர்க்குங் கிளைக்கும்
எல்லியு நண்பகலுமிடர் கூருத லில்லை யன்றே. (10)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—இறைவனது இடம் பழமண்ணிப்படிக்கரையே ; இறைவரது தன்மைகள் இவையிவை; அன்புடையீர் ! அவரை அடைந்து வழிபடுமின் ! என்றது. இறைவர் புகழ்களைக் கூறுதல்பற்றி இதனை "எண்ணில் புகழ்ப் பதிகம்" என்றார்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) முன்னவன் - " முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருள் "(திருவா); "மூளத்தானை எல்லார்க்கு முன்னேதோன்றி" (தேவா) ; முதல் - அடியும் முடியும் ஆகிய மூலம்; அளவிலாற்றலுடைமை - பேரரு ளுடைமை முதலிய இறைமைக் குணங்கள் கூறப்பட்டன ; எங்கள் பிரானது இடம் என்க. இடம் என்பது சொல்லெச்சம் ; ஆறனுருபு விரிக்க ; திருநீலமிடற்றெம் பிரான் - தலச்சுவாமிபேர் ;—(2) அண்டம் கபாலம் சென்னி-அண்டமுகட்டுக்கப்பா லும் நீண்ட சென்னியை யுடையவன் ; தொண்டு - தொண்டர்கள் ; ஏத்தி - ஏத்தப் பெறுபவன் ; சென்னியானும், ஏத்தப்படுபவனும், ஆகிய இறைவர் நின்றாடும் இடம் ;

சென்னி - ஏத்தி என்பன பெயர்கள் "விடையேறி" "பிறை சூடி" என்புழிப் போல ;—(3) இப்பாட்டு அடியார்களை நோக்கி அன்பு செய்யும் திறங்களைக் கூறியது. உமரோடேமர் - "உம்மன்பினோ டெம்மன்புசெய் தீசன்னுறை கோயில்" (தேவா) ; "கொண்டுங் கொடுத்துங் குடிகுடியீசற் காட்செய்மின் குழாம்புகுந்து" (திருப்பல்லாண்டு) வாடுமிவ் வாழ்க்கைதன்னை - வாழ்க்கை - உலக வாழ்க்கைப் பற்றுக்கள் ; வாடுதல் - வெறுத்தல் ; "தொண்டர்காள் தூசிசெல்லீர் ; பத்தர்காள் சூழப்போகீர்" (திருவா - படையாட்சி 2);—(4) அடுதல் - சங்கரித்தல் ; கேடுதல் - கேடுறும் வகை ; நடுதல் - ஊன்றுதல் ; வலித்து அழுத்துதல் ; கோல் - அம்பு ; நரிகான்றிட்ட - நரி தினைத்தை உண்டு கழித்த ; படுதலை - இறந்தார் தலையோடு ; மண்டை ஓடு ; புரிந்தான் - நினைந்து நீங்காது எடுத்தான் ;—(5) அலையார் கதிர் - அலைபோல வீசும் ஒளி ;—(7) படுத்தவன் - பொருட்படுத்தி அருளீந்தவன் ;—(8) அட்ட புட்பம் - புன்னை, வெள்ளெருக்கு, சண்பகம், நந்தியாவர்த்தம், நீலோற்பலம், பாதிரி, அலரி, செந்தாமரை என்பவற்றின் பூக்கள் ; இவை புலரி முதலிய காலங்களில் வேறுபடும். புட்பவிதி பார்க்க ; அகப்பூசையில் கொல்லாமை, ஐம்பொறியடக்கல், பொறுமை, இரக்கம், அறிவு, மெய், தவம், அன்பு என்னும் இவை அட்ட புட்பமாக இதய கமலத்தில் அஞ்செழுத்தானமைந்த இறைவரது ஞானத் திருமேனியிற் சாத்தல் வேண்டு மென்பது விதி ; (போதம் - மாபாடியம் - 9 - 3); பரியவன் - பெரியவன் ; பற்றர் - இப்பதியினை இடமாகப் பற்றி வாழ்பவர் ;—(10) பல்லுயிர் வாழும் தெண்ணீர் - வாழும் - உயிர் வருக்கங்கள் அனைத்தையும் செழிக்கச் செய்யும் - வாழ்விக்கும் - என்று பிற வினைப்பொருள் கொள்க ; இனி, இங்கு இவ்வாற்றின் மடுக்களில் முதலைகள் முதலிய பல உயிர்களும் வாழ்தலும் குறிப்பு; அல்லி- அகவிதழ் ; தாமரைத் தார் - அந்தணர்களுக்குரியது ; சொல்லுதல்...கிளைக்கும் - எல்லியும் நண்பகலும் - எல்லாருக்கும் எல்லாக் காலத்தும் ; கூடுதல் - மிகுதல்.

தலவிசேடம் :—திருப்பழமண்ணிப்படிக்கரை - சோழநாட்டில் காவிரி வடகரை 30-வது பதி ; இலுப்பைப் பட்டு என்று வழங்கப்படுகின்றது ; இறைவர் விடமுண்டபோது அம்மையார் அஃது உட்செல்லாதுறக் கையினாற்றடுத்துக் கழுத்தளவில் நிறுத்தியதால் திருநீலகண்டங் காட்டினார் என்பது தலவரலாறு ; சுவாமி அம்மை பெயர்கள் காண்க ; "திருநீலமிடற்றெம்பிரான்" என்ற சுவாமி பெயர் பதிகத்துட் போற்றப்படுதல் (1) காண்க ; பாண்டவர்கள் வழிபட்ட ஐந்து இலிங்கங்கள் உண்டு ; பதிகம் 1. சுவாமி—திருநீலகண்டர் ; அம்மை - அமிர்தகரவல்லி.

இது வைத்தீசுவரன் கோயில் நிலயத்தினின்றும் மேற்கில் மட்சாலை வழி 6 நாழிகையில் அடையத்தக்கது ; இடையில் 1½ நாழிகையில் திருப்புன்கூரையும், அங்கு நின்று மேற்கே 2 நாழிகையில் மண்ணிப் பள்ளத்தையும், அங்கு நின்றும் மேற்கே 1½ நாழிகையில் திருவாழ்கொளிபுத்தூரையும் (வாளொளிபுத்தூர் - வாளப்புற்றூர் என வழங்கும்) அடைந்து, அங்கு நின்றும் மேற்கே 1 நாழிகையில் அடையத்தக்கது.

## திருவாழ்கொளிபுத்தூர்

திருச்சிற்றம்பலம் பண் - தக்கேசி

தலைக்க லன்றலை மேற்றரித் தானைத் தன்னையென் னைநினைக் கத்தரு வானைக்
கொலைக்கை யானையுரி போர்த்துகந் தானைக் கூற்றுதைத்தகுரை சேர்கழ லானை
அலைத்த செங்கண்விடை யேறவல் லானை யானை யாலடி யேனடி நாயேன்
மலைத்த செந்நெல்வயல் வாழ்கொளிபுத்தூர் மாணிக்கத்தைமறந்தென் னினைக்கேனே.

வளங்கி ளர்பொழில் வாழ்கொளி புத்தூர்மாணிக்கத் தைமறந் தென்னினைக் கேனென்
றுளங்கி ளர்தமி ழூரன்வன் றொண்டன் சடையன் காதலன் வனப்பகை யப்பன்
நலங்கி ளர்வய லூவலர் வேந்த னங்கை சிங்கடி தந்தை பயந்த
பலங்கி ளர்தமிழ் பாடவல் லார்மேற் பறையு மாஞ்செய்த பாவங்க டானே (10)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—3272 பார்க்க. பதிகக் குறிப்பு ஆசிரியர் கூறியரு ளியவாறு ; வாழ்கொளிபுத்தூரெய்தாது போம்பொழுது நினைந்து மீண்டு புகுகின்ற கருத்துடன் பாடியது ; பதிகம் சரித அகச்சான்றாகிய ஆதரவு.

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) தலைக்கலன் - தலைமாலை ; "தலைமாலை தலைக் கணிந்து"(தேவா) "தலைக்குத்தலை மாலையணிந்த தென்னே"(நம்பி); தன்னை யென்னை நினைக்கத் தருவானை - "தன்னை நினையத் தருகின்றான்" (நாரையூர் - விநா - இரட்-(1) ; ஆணையால் - மறந்து மேற்சென்ற என்னை நினைக்கச் செய்து மீண்டு வருமாறு பணித்த ஆணை ; மலைத்த - ஒன்றோடொன்று பொருவதுபோல வளைந்த ; மறந்து என்னினைக்கேன் - சரித ஆதரவு ;—(2) பாவிக்கொள்ளுதலாவது - முழுதும் நிரம்பித் தன்வய மாக்கிக்கொள்ளுதல் ; கடை - தலைவாயில் ; வாயில் முன்கடை ;—(3) வெந்த நீறு - உலகங்கள் ஊழியில் அழிதலாற் பெற்ற நீறு ; வேதமால்விடை - வேதங்களின் அறமே விடையாவது என்றும், திருமால் விடையாய்த் தாங்கினான் என்றும் வரும் இரண்டு கருத்தும் சேர்த்துக் கூறியது ; ஆறு அலைத்த - கங்கை அலை புரண்ட ; சொன்முனியாதே - பித்தன் என்று இகழ்ந்த சொல்லினையும் பொறுத்து;—(4) செல்லும் - செலுத்தும் ;—(5) திளைக்கும் - பகைமையில் ஆரவாரிக்கும் ;—(6) வேடனாயென்னொடும்வந்து மருவினான் - வேடனாய் - இறைவர் அருச்சுனன் பொருட்டு வேட வடிவம் எடுத்து ; கோயமுத்தூர் சில்லா துடியலூர் என்ற தலத்தி னருகு நம்பிகள் செல்லும்போது காட்டினுள் வேடனாக எழுந்தருளி இறைவர் வழி காட்டினர் என்பதொரு தலவரலாறு குறித்த தென்று கூறுவாருமுளர் ;—(7) எந்தையை...பிரானை - "என்றாயோ டென்னப்ப னேழேழ் பிறவியும், அன்றே சிவனுக் கெழுதிய ஆவணம்" (திருமந்திரம்) ; "எந்தை தந்தை தந்தையெங் கூட்ட மெல்லாம்" (ஏயர். 392) ; சந்து - சந்தனமரம் ;—(8) கானவானையின்...கள்ளப் பிள்ளை - குவலயாபீட மென்னும் யானையின் கொம்பினைப் பிடுங்கி அந்த யானையை அதுகொண்டேயடித்துக் கொன்ற கண்ணனாகிய திருமால் ;—(9) காளை - விடலை ; நன்று தீதறியா மூர்க்கன் என்ற பொருளில் வந்தது ;—(10) பூதிப்பைப்புலித் தோல் - பையும் தோலும்; புலித்தோலினாலாகிய பூதிப்பை என்றலுமாம்; இருந்துண் தேரர் - நின்றுண்சமணர் - இவை சமண புத்த குருமார் வழக்குகளைக் குறித்தன ; ஏச நின்றவன் - அவ்வவர் வினைப்பயன் துய்க்க அருளுவார் அவர்களது ஏச்சினிடமும் முனியாது நின்றவர் ; மருந்து-பிறவி நோய் தீர்க்கும் மருந்து ;—(11) பொய்யன் - வெளிப்படாதவன் ;—(12) சடையன்...தந்தை - நம்பிகள் சரிதக் குறிப்புக்கள் ; பயந்த - சொன்ன ; பறைதல் - நீங்குதல்.

தலவிசேடம்:—திருவாழ்கொளிபுத்தூர் - சோழநாட்டில் காவிரி வடகரை 29-வது தலம். இது வாளொளிபுத்தூர் - வாளப்புற்றூர் எனவும் வழங்கும் ; விட்டுணு பூசித்த மாணிக்க லிங்கத்தைக் கொண்டமையின் வடமொழியில் "அரதன புரம்" என வழங்கப்பெறும் ; சுவாமி பெயர் மாணிக்க வண்ணர் என்பதும் காண்க; நம்பிகள் திருப்பதிகத்துள் "மாணிக்கத்தை" என்று பாட்டுத்தோறும் போற்றுதலும்

காண்க; விண்டு பூசித்ததும், அருச்சுனன் பூசித்ததும் ஆகிய குறிப்புக்களும் பதிகத்துட் காணப் பெறுவன. அருச்சுனன் வாளினைப் புற்றில் ஒளித்தமையால் வாளொளி புற்றூர் என்று தலப் பெயர் வழங்குவதாமென்பதும் வரலாறு. பழ மண்ணிப்படிக்கரை நோக்கிச் செல்கின்ற நம்பிகள் வழிநடையில் உள்ள இப்பதியினை அடையாது போம்பொழுது திருவருளினால் நினைந்து மீண்டுவந்து வழிபட்ட பெருமையுடையது (3272). சுவாமி மாணிக்கவண்ணர்; அம்மை - வண்டமர் பூங்குழலி - பதிகம் 2.

இது திருப்புன்கூரினின்றும் மண்ணிப் பள்ளத்தை யடைந்து அங்கிருந்து மேற்கே மட்சாலையில் 1½ நாழிகையில் உள்ளது; பழமண்ணிப்படிக்கரைக்குச் சொல்லியவை பார்க்க.

குறிப்பு:—நம்பிகள் பதிகம் 12 திருப்பாட்டுக்களைக் கொண்ட சிறப்புடையது.

3273. (வி - ரை) பாடியே - பாடிக்கொண்டபடியே.

உருப்பொலியும் - திருமேனி முழுதும் மேல் விளங்கும். இஃது இறைவர் நினைப்பித்தருள மீண்டுவந்து வழிபட்ட அருளிப் பாட்டின் நினைவினால் ஆகியது.

மயிர்ப்புளகம் விரவி - மயிர்க்கூச்செறிதல் பொருந்தி.

பூமென் கருப்பு வயல் - பூத்தபின் பயன்படும் ஒருவகை மெல்லிய கரும்பு.

கலந்த - அருகில் அணைந்த. 119

3274. (வி - ரை) சாரும்போது - புறநகரினைச் சார்ந்தபோது; முன்பாட்டில் கலந்த என்றது அணுக வந்த என்றதாம்.

எதிர் காட்சி - நகரினுள்ளே செல்லு முன்னே புறநகரில் எதிர் தோன்றிக் காணக் காட்டும் காட்சி; திருக்கழுமலம், திருப்பனையூர் முதலிய பதிகளின் வழி பாட்டு வரலாறுகள் ஈண்டு நினைவுகூர்தற் பாலன.

"தூநாண்மென்...தேர்ழுதேன்" என்று - இது பதிகக் கருத்தாகிய குறிப்பு; பதிக மகுடம் காண்க.

"வள்வாய்" என்னும் - இது பதிகத் தொடக்கமாகிய முதற் குறிப்பு.

வண்டமிழின் தொடைமாலை மலரச்சாத்தி - பதிகத் திருப்பாட்டுக்களின் சொல் - பொருள் - இசை - அருள் - வளங்கள் குறிக்க வண்மை யுடைய என்றார்; தொடைமாலை - ஒவ்வொரு திருப்பாட்டும் தொடை எனப்படும்; மாலை - அவை யனைத்தும் சேர்ந்த நிலை; மலர - விளங்க; சாத்தி - தொடை மாலை என்றதற்கேற் பச் சாத்தி என்றார்; உயர்ந்த தமிழ் இலக்கியப் பண்புகள் இப்பதிகத்துட் காணப் படும்.

துணைப்பாதம் - இரண்டு பாதங்கள்; "உற்றா ரிலாதார் குறுதுணையா"கும் பாதம் என்ற குறிப்புமாம்.

வானாளும் திருப்பதிகம் - வானவர்தங்கோனை, உலகம் விழுங்கி யுமிழ்ந்தானை நான்முகத்தினானை, உலகந்தானாய், பூதங்களைந்தாய், எண்குணத்தினானை, நாளை யின்று, நெருநலாய், தேவர்கள் சூளாமணியை, விண்ணவர் தங்கோனை, அமரர்கடம் பெருமானை, பலவுருவந் தன்னுருவே யாய பெருமானை, மேவியவெந் நரகத்தி லழுந் தாமை நமக்கு மெய்ந்நெறியைத் தான் காட்டும் வேதமுதலானை,—என்றிவ்வாறு பல வும் இறைவரது முழுமுதற்றன்மைகளையும், தேவர் பெருமானாந் தன்மைகளையும் கூறிய நிலை குறிக்க வானாளும் 'வானவர்களை ஆட்கொண்டு செலுத்தும்' என்றார். திருக்கடைக்காப்பில் "வானவர்க்குந் தலைவராய் நிற்பரவர் தாமே" என்று பதிகப் பயன் கூறியருளியதும் குறிப்பு; வானாளும் - பயின்றாரை வானாளவைக்கும். 120

திருக்கானாட்டுமுள்ளூர்

திருச்சிற்றம்பலம் பண் - கொல்லிக் கௌவாணம்

வள்வாய மதிமிளிரும் வளர்சடையி னானை மறையவனை
வாய்மொழியை வானவர்தங் கோனைப்
புள்வாயைக் கீண்டுலகம் விழுங்கி யுமிழ்ந் தானைப்
பொன்னிறத்தின் முப்புரிநூ லான்முகத்தி னானை
முள்வாய மடறழுவி முடத்தாழை யீன்று
மொட்டலர்ந்து விரைநாறு முருகுவிரி பொழில்சூழ்
கள்வாய கருங்குவளை கண்வளருங் கழனிக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே (1)

திரையினார் கடல்சூழ்ந்த தென்னிலங்கைக் கோனைச்
செற்றவனைச் செஞ்சடைமேல் வெண்மதியி னானைக்
கரையினார் புனல்தழுவு கொள்ளிடத்தின் கரைமேற்
கானாட்டு முள்ளூரிற் கண்டுகழ றொழுது
உரையினார் மதயானை நாவலா ரூர
னுரிமையா லுரைசெய்த வொண்டமிழ்கள் வல்லார்
வரையினார் வகைஞால மாண்டவர்க்குந் தாம்போய்
வானவர்க்குந் தலைவராய் நிற்பரவர் தாமே (11)

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு** :—(1) வள்வாய - வளைந்த வாயினையுடைய; வள் - பகுதி; வள்வாயமதி - இஃது அருமையான தமிழாட்சி; மறையவனை வாய்மொழியை - மறை அவன் வாய்மொழி என்பது; புள்வாயை...உமிழ்ந்தான் - கண்ணன்; விட்டுணு; பொன்னிறத்தின்...முகத்தினானை-பிரமனாகி நின்ற சிவன்; தேவர்களை இயக்குபவர்; பிள்ளையாரது சிவபுரத் தேவாரம் காண்க. "அரியாகிக் காப்பான் அயனாய்ப் படைப்பான், அரனா யழிப்ப வனுந் தானே" (ஞான உலா). முள்வாயமடல் - ஓரங்களில் முட்களையுடைய மடல்; தழுவுதல் - மூடுதல்; முடத்தாழை - தாழை மரங்கள் நேராய் வளராது முடங்கி வளரும் இயல்பு குறித்தது; ஈன்று - பூத்து; கண்வளரும்- இதழ்கள் குவிந்த நிலை; கண்போல வளர்கின்ற என்றும் இரட்டுற மொழிந்துகொள்க; துயிலும் என்ற குறிப்புமாம். கண்டு தொழுதேனே - இறைவர் எதிர் காட்சி கொடுப்பக் கண்ட தன்மை; சரித அகச்சான்று (3274); கானாட்டுமுள்ளூரில் - ஊரைச் சாரும் போது;—(2) ஒரு - ஒப்பற்ற: ஒருமேக...புனைந்தவனை - இறைவர் எல்லாமாய் நின்ற தன்மை; "அவையே - யாய்" (போதம். 2. சூத்); பொரு - அலைகள் பொருந் தன்மை; பொரு - பொருதல்; ஈண்டு அலைகள் மோதி அலைத்தல் பொருதல் எனப்பட்டது; திருமேவு செல்வம் - திரு - அருட்டிரு; அருளாகிய செல்வம்; கருமேதி...மேயும் - எருமைகள் மடுக்களில் தாமரைப் பூக்களை மேய்தல் அவற்றின் உயர் பண்பு குறித்தது (1273);—(3) எண் குணத்தினான் - "எண் குணத்தான்" (குறள்); சைவாகமங்களுட் கூறப்பட்ட தென்பர் பரிமேலழகர். சுரும்புயர்ந்த கொன்றை - தேனின் பொருட்டுக் கொன்றைப் பூக்களை வண்டுகள் மிக மொய்த்துச் சூழும்; அரும்புயர்ந்த - தாமரை அரும்புகள் நீரினிற் படர் கொடிகளின் மேலே தண்டு நீண்டு உயரும்தன்மை; அரவிந்த...விளையாடும் - "சேற்றெழுந்த மலர்க்கமலச் செஞ்சாலி கதிர்வீச, வீற்றிருந்த வன்னங்காள்" (பிள். தேவா. தோணி - பழந்தக்க -

6) "செறியிதழ்த்தா மரைத்தவிசிற் றிகழ்ந்தோங்கு மிலைக்குடைக்கீழ்ச் செய்யார் செங்நெல், வெறிகதிர்ச்சா மரையிரட்ட விளவன்னம் வீற்றிருக்கு மிழலை யாமே" (1-9 - மேகராக - மிழலை - 2); கரும்புயர்ந்து...விளை - தன்மையணி; கரும்பு உயர விளைதல் - நெல் நெருங்கி விளைதல்; செழிப்பும் பயன் மிகுதியும் காட்டுவன - கரும்பு போல உயர்ந்து நெல்விளை என்றுரைத்தலுமாம்; கரும்பும் நெல்லும் பக்கம் பக்கம் விளைக்கும் பயிர்கள் என்பது சேர்த்துக் கூறிய கருத்து; "கரும்பல்ல நெல்லென்ன" (65);—(4) பூனை - சிவபெருமானுக்குச் சாத்தும் பூக்களுள் ஒன்று; புனலாகி...ஐந்தாய் - புவனமாய் நின்ற தன்மை; புனல் முதலிய பூதங்கள் ஐந்து என்றபடி; நாளை - யின்று - நெருநலாயி - காலங்களாய் நின்ற தன்மை; நெருநல் - நேற்றைப்பொழுது - எதிர் - நிகழ்வு - இறந்த காலங்கள்; ஆகாச...மதி - அட்ட மூர்த்தக் குறிப்பு; நின்ற - நின்ற திருத்தாண்டகம் பார்க்க; பரன் - அப்பாற்பட்டவன்; அவையேயாய் நின்ற தன்றி வேறாயும், உடனாயும் நிற்கும் தன்மை; சூழல் - நெருங்கிச் சூழ்வன: காளை வண்டு - இளவண்டு; ஆண் வண்டு என்றலுமாம்; பாட - ஆலும் - பாட்டுக்கேற்ப அசையும் என்ற குறிப்புமாம்;—(5) செருக்கு வாய் - இடைநுழைக்கும் பற்களையுடைய வாய்; கோபமுடைய என்றலுமாம்; சூளாமணி - தலையணி; முருக்கு வாய்மலர் - முருக்கமரத்தின் செம்மலர்; ஒக்கும் - செந்நிற ஒற்றுமை; முன்னிலை - "மன்னு சிவன் சந்நிதியில் மற்றுலகஞ் சேட்டித்தது" (போதம் - 5) என்றபடி தனது சந்நிதிக்கண் உலகத்தைச் சேட்டிப்பித்தற்குரிய இயைபு; உலகவியல்கள் தம்மைத் தாக்காது சாட்சி மாத்திரையாய் நிற்றல்; "இரவிபோல் நிற்குமரன்" (போதம் 5); "என்று மறையி னியல்" என்று கூறிய மறையின் கருத்து; இது தமிழ்மறை; இருக்கு - வேதம்; வரிப் - பயிலுதல்; எழுபிறப்புள் - ஏழு சரங்களிலும்; நீதியம் வழங்குதல் - வேள்விகளிற் செய்யும் தானங்கள். கற்றோர்க்கும் மற்றோர்க்கும் நிதி வழங்குதலுமாம்; நகர் - இடங்கள்; கருக்கு - வாள் போன்ற கூர்மை; பெண்ணை - பனை; மடல் குறித்தது;—(6) விடை யரவக் கொடி - அரவவிடை என்று மாற்றிப் பாம்பணைப் பள்ளியுடைய திருமால் என்றுகொண்டு, விடைக்கொடி என்க. விடை ஏந்தும் - என்றதனால் இரட்டுற மொழிதலால் விடையாகிய ஊர்தியினால் ஏந்தப்படும் என்று உரைக்கவும் நின்றது தமிழ்நலம். இப்பொருளில் ஏந்தும் - ஏந்தப்படும் என்று செயப்பாட்டு வினையாகப் பொருள் கொள்க; வெள்ளத்து - பாற்கடலினுள் இருக்கும்; அடியிணையும் திருமுடியும் - கிரணிறை; தையல்... ஆட - நீராட்டுச் சிறப்பு; குங்குமம் - அப்பெண்களின் மெய்ப்பூச்சு; குங்கும மரங்கள் என்றலுமாம்; கடைகள் விடுவார் - வயலில் நீர் தேக்கமுறாது கடைக் கழிவு நேர்படுத்தும் பொருட்டு; குவளை களைவாரும் - குவளைக் கொடிகள் நீர் ஓட்டத்தைத் தடை செய்யாது களையாகப் பறித்து வாரி எறிவார்; வாரும் - பறிந்து வாரி எறியும்;—(7) குரு - பரிய; குரு...திரைவாய் - "திகழ்ந்தபுனற் கொள்ளிடம்பொன் செழுமணிக டிரைக்கரத்தால், முகந்துதர விருமருங்கு முளரிமலர்க் கையேற்கும்" (1041) என்று ஆசிரியர் இக்கருத்தை அழகுபட விரித்தமை காண்க;—(8) இழை - "ஒன்பது போலவர் மலர்பினி னூலிழை" (தேவா); தழைதழுவு...அருகே - முன் 3-வது பாட்டுப் பார்க்க. கண்..நெல் - தண்மையும் செந்நிறமுமுடைய நெல்; தடந்தாள - பருத்த தாள்களையுடைய; மென்கரும்பு - கரும்பின் ஒருவகை; கழை - கரும்புத் தண்டுகள்; தழுவி - பிணைத்து; தேன் - தேன்கூடு;—(9) குனிவினிய கதிர்மதியம் - குனிவு - வளைதல்; குனி மதியம் என்க; பனி உதிரும் - குளிர்ந்த கங்கைநீர்த் திவலை; கங்கைப் பெருக்கினைச் சுருக்கிப் பனிபோலத் திவலையாய்

உதிர்க்கும் ; உதிரும் - என்ற கருத்து ; உதிரச் செய்யும் ; உதிர்தற் கிடமாகும் ; " பரந்தெழுந்த புனற்கங்கை பனிபோ லாகச், செறுத்தானை "(தேவா) ; துனிவு - நெடிது கலாய்த்தல் ; வெறுப்பு. " துனியும் புலவியு மில்லாயின் " (குறள்) ; " நாணின்றி வரினெல்லாந் துனிப்பேன் யான் " (கலித் - 67-16) ; துனிவினிய தூயமொழி - துனியை வெளிப்படுக்கும் மொழியாயினும் இனிமையும் தூய்மையு முடைய மொழி ; நல்லார் - பெண்கள் ; நல்லார் - சேர் சோலை என்று கூட்டி உரைக்க. சேர் - சொல்லெச்சம் ; கன்னி வளரும் - 1-ம் பாட்டுப் பார்க்க ;—(10) மேவிய .. காட்டும் வேதமுதலான் - இறைவர் உயிர்களுக்கு அறிவு கொடுத்து அற நெறி காட்டி வீடுபெறத் துணையாய் நிற்கும் நிலை ; காட்டும் வேத முதலான் - காட்டும் வேதம் என்றும், காட்டும் முதலான் என்றும் கூட்டுக. காவி - கருங்குவளை ;— (11) கானாட்டுமுள்ளூரிற் கண்டு - ஊரருகில் எதிர்காட்சி காட்டக் கண்டு ; சரித அகச்சான்று ; உரையினர் மதயானை - தமிழ்ப் பெருவளமுடைய ; மதயானை - கட்டுமீறி எண்ணியவாறெல்லாம் மதம் சொரிந்துலவும் மத யானைபோல எண்ணிய வாறெல்லாம் தமிழ் வளம் சொரிபவர் ; இப்பதிகத்தின் எண்ணிறந்த தமிழ் வளம் கண்டு களிக்கத் தக்க தமிழ்ப் புலமை விருந்தாதல் காண்க.

தலவிசேடம் :—திருக்கானாட்டுமுள்ளூர் - சோழநாட்டில் காவிரி வடகரை 32-வது பதி ; கானாட்டாம் புலியூர் என வழங்கப்படும் ; பதஞ்சலி முனிவர் பூசித்த தலம் என்பது சுவாமி பெயராற் காண்க. சுவாமி - பதஞ்சலிநாதர் ; அம்மை கானார்குழலி ; கோல்வளைக்கையம்மை. பதிகம் - 1.

இது சிதம்பரத்திலிருந்து 18 நாழிகையளவில் உள்ளது ; சிதம்பரத்திலிருந்து தென்மேற்கில் 15 நாழிகையில் (மோட்டார் வசதி உண்டு) கற்சாலையில் மன்னார் குடியை அடைந்து, அங்குநின்றும் தெற்கு மட்சாலை வழி 2 நாழிகை தெற்கு ஓமாம் புலியூர் செல்லும் வழியில் 2 நாழிகை வழி சென்று, கிழக்கே திரும்பி (மட்சாலை) 1 நாழிகையில் அடையத் தக்கது.

3275. (வி - ரை) மத்தயானை - பதிகத் தொடக்கமாகிய முதற்குறிப்பு.

" எதிர்கொள்பாடியினை அடைவோம் " என்னும் இது பதிகக் கருத்தாகிய மகுடம் ; " எதிர்கொள்பாடி யென்ப தடைவோமே " பதிகம்-2 ; இது வரும் வழி யிற் பாடி அருளியது ; திருமுன்பு பாடிய பதிகம் கிடைத்திலது !

திருவேள்விக்குடி-துருத்தி(கூட) - இவ்விரண்டும் எதிரெதிராய்க் காவிரியின் இரு கரையிலும் உள்ளன. இரண்டும் சேர்ந்து ஒரு தலமாகக் கருதப்படும். "திருத்துருத்தியும் வேள்விக்குடியும் " என்ற பிள்ளையார் பதிகமும், ஆண்டுரைத்தவையும் பார்க்க. கூட - சேர்த்து - " வேள்விக்குடி தண்டுருத்தி எங்கோன் " என்பது பதிகம். " பக விடம் புகலிடம்... துருத்தியார் ;... இரவிடத் துறைவர் வேள்விக்குடியே " (பிள். தேவா).

மூப்பதிலை - பதிக முதற் குறிப்பும் தொடக்கமுமாம்.

வாழ்ந்தார் - வாழ்வு பெற்றார் ; சிவபூசையும் வழிபாடுமே உயிர்களுக்கு நல் வாழ்வாவது என்பது குறிப்பு.

சித்தநிலைத் திருப்பதிகம் - உலக நிலையாமையை வற்புறுத்தி மனங்கொண்டு நிறுத்தும் திருப்பதிகம். பதிகக் குறிப்புப் பார்க்க.

பாடிநைந்து—என்பதும், செல்வமலி—என்பதும் பாடங்கள். 

திருஎதிர்கோள்பாடி

திருச்சிற்றம்பலம் பண் - இந்தளம்

மத்தயானை யேறி மன்னர் சூழ வருவீர்காள்
செத்த போதி லாருமில்லைச் சிந்தையுள் வைம்மின்கள்
வைத்த வுள்ள மாற்ற வேண்டா வம்மின் மனத்தீரே
அத்தர் கோயி லெதிர்கோள் பாடி யென்ப தடைவோமே. (1)

முத்து நீற்றுப் பவள மேனிச் செஞ்சடை யானுறையும்
பத்தர் பந்தத் தெதிர்கொள் பாடிப் பரமனை யேபணியச்
சித்தம் வைத்த தொண்டர் தொண்டன் சடைய னவன்சிறுவன்
பத்த னூரன் பாடல் வல்லார் பாதம் பணிவாரே (10)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—" இறைவரது கோயில் திருஎதிர்கொள்பாடியினை அடைவோம் " என்றெழுந்த திருவுள்ளக் குறிப்பாகிய மகிழ்ச்சி ; (3275) ஆசிரியர் காட்டியருளியது. பதிக மகுடம் பார்க்க. இப்பதிக முழுதும் யாக்கை நிலையாமை செல்வ நிலையாமை முதலிய குறிப்புக்களை வற்புறுத்தும் சிறப்புடையது.

குறிப்பு :—இப்பதிகம் வரும் வழியிற் பாடியது ; திருமுன்பு பாடிய பதிகம் கிடைத்திலது !

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) மத்தயானை - மதயானை ; யானை மத்தம் என்று மாற்றி யானையின் பிடரியில் என்றலுமாம்; மத்த...வருவீர் - செல்வ முதலியவற்றின் மிகுதியாலாகிய அனுபோக வகைகளின் சிறப்பு ; மன்னர் சூழ வருதல் - மன்னரும் பணிந்து சிறப்புச்செய்யும் நிலை குறித்தது; செத்த...இல்லை - உடலில் உயிருள்ளளவு மட்டும் வருவன இவை ; இறைவன் அருள் அதன் பின்னரும் பிறவிதோறும் தொடர்ந்து துணை செய்வது என்பது குறிப்பு ; வைத்த...வேண்டா - பிறழாத சிந்தையுடன் பணிக என்பது ;—(2) தோற்றம்...உண்டாம் - பிறப்பு, இறப்பினைத் தந்தே விடும் என்பது உறுதி ; மனைவாழ்க்கை துயரம் (தரும்) என்க ; துயரம் - துயரத்துக்கிடமாயது ; மாற்ற...முண்டாடு - நிலைபேறில்லாத வாழ்வு வஞ்சனையாய் முடியும் ; இவையெல்லாம் நிலையாக இறைவரை அடைதற்குரிய காரணங்கள் ;—(3) சேடி - துன்பம் ; சிதைவு ; வீழ்தல் - இறந்துபடுதல் ;—(4) மூவர் - அயன்-அரி-அரன் ; இருவர் - சத்திசிவம் ; முதல்வனவனே - பரமசிவம் ;—(5) அரித்து - சிறிது சிறிதாய் இடைவிடாது வருத்தி அழித்து ; ஐவர் - ஐம்புலன் ; ஆறலைப்பான் பொருட்டால் - அறிவைப் பறித்துக் கொள்ளைகொள்ள ; ஆறலைத்தல் - வழிப்பறி செய்தல் ; பல்வாய்...சேர்தல் - இறந்த பின் வாய்திறந்த வண்ணம் சுடலை சேர்தல்; வரிக்கோள் துத்தி - வரிகளையுடைய தலையணி அணிந்த ; வில்லி - வில்லையுடைய வாது ;—(6) போத்தடைப்பான் பொருட்டால் - வஞ்சமாகிய துவாரங்களுள்ளே அகப்படுத்த வைக்கும் வகை காரணமாக ; போத்தடைத்தல் - பொறிகளுள்ளே படவைத்தல் ; போத்தல் - துளைத்தல் - " பொத்தநூற்கல்லும் " (நாலடி - 376) ; பொருட்டால் - அதனாலே - அது காரணமாக என்ற பொருளில் வந்தது ; நைய வேண்டா - வருந்த வேண்டா : இம்மை ஒத்த - அம்மை அருளும் - இம்மை-இங்கு - இப்போது ; அம்மை - அங்கு - மறுமையில் ; பக்குவமாம் போது ;—(7) கூசநீக்கி-கூசம் - கூச்சம் என்பர் ; குற்றம் - மிகுதி பற்றிச் செற்றமும் காமமும் பின்னர்த் தனிக் குறிக்கப்படுதலால் இங்குக் குற்றம் அறுவகையுள் ஏனை நான்குமாம் ; அன்பு

சேர்த்தி-கேடு தரும் குணங்களை நீக்கியதனோடு நில்லாது, வீடுதரும் அன்பினைக் கைக்கொண்டு; அன்பு நெறி சேராவிடில் குற்றங்களை நீக்கிய மட்டிற் பயனில்லை என்பதாம்; அன்பு - இறைவர்பாற் செலுத்துவது; குற்றம் நீங்கிய ஒழுக்கமே வீடுதரும்; இறைபணி வேண்டா என்பாரை நோக்கிக் கூறியது; மேல்வரும் பாட்டில் இதனை விரிவாய் உறுதிபடக் கூறல் காண்க;—(8) இன்பம்...உண்டு - இன்பம் - உலகவின்பம்; ஏழை-வலியற்ற; பயனற்ற; மோழைமை - அறியாமை; முட்டை - கீழ்மை; அன்பரல்லார்...சேரார் - எதிர் மறையாற் கூறியது உறுதி குறித்தற்கு;—(9) (9) எள் தனை - எள்ளினளவும் - சிறிதும்; தனை - அளவு. வந்து...காட்டும் - எந்தை - என்று கூட்டுக;—(10) மருந்து...மால் - கண்ணன் கதை; கண்ணனாய் வந்த விட்டுணு; சுருதி - கேட்கப்படுவது; கேட்கப்படுவதாக; முத்து - முத்துப் போன்ற; பத்தர்பந்தம் - பத்தர்கள் மனத்துட் பந்தித்து வைக்கும்; தொண்டர் - தொண்டர்களுக்கு.

**தலவிசேடம்:—திருஎதிர்கொள்பாடி** - சோழ நாட்டில் காவிரி வடகரை 24-வது பதி; மேலைத் திருமணஞ்சேரி என வழங்குவது; 25-வது பதியாகிய மணஞ்சேரி என்ற பதி இதனை அடுத்து மிக அணிமையில் (½ நாழிகையளவு) கிழக்கில் உள்ளது; மணக்கோலத்துடன் வந்த அன்பனாகிய அரசகுமாரனொருவனை இறைவர் மாமனாய் எதிர்கொண்டு அழைத்துச் சென்ற வரலாற்றினால் இப்பெயர் பெற்ற தென்பர்; ஐராவதம் பூசித்துப் பேறு பெற்ற பதி; சுவாமி பெயர் பார்க்க; சுவாமி - ஐராவதேசுவரர்; அம்மை - மலர்க்குழனாயகி; பதிகம் 1.

இது வேள்விக்குடியினின்றும் வடக்கே கரைவழியாய் 1½ நாழிகையில் உள்ளது.

## திருவேள்விக்குடியும் திருத்துருத்தியும்

திருச்சிற்றம்பலம் "மூப்பது மில்லை" எனும் பதிகம் பண் - நட்டராகம்

மூப்பது மில்லை, பிறப்பது மில்லை, யிறப்பதில்லைச்
சேர்ப்பது காட்டகத் தூரினு மாகச்சிந் திக்கினல்லாற்
காப்பது வேள்விக் குடிதண் டுருத்தியெங் கோனரைமேல்
ஆர்ப்பது நாக மறிந்தோமே லாமிவர்க் காட்படோமே. (10)

கூடலர் மன்னன் குலநாவ லூர்க்கோ னலத்தமிழைப்
பாடவல் லபர மன்னடி யார்க்கடி மைவழுவா
நாடவல் லதொண்ட னாரூர னாட்படு மாறுசொல்லிப்
பாடவல் லார்பர லோகத் திருப்பது பண்டமன்றே. (1)

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு:—**ஆட்படுமாறு சொல்லி நிந்தைத் துதியாகப் பாடித் துதித்தது. பதிகம் 10 பாட்டுப் பார்க்க. குறிப்பு: இப்பதிகம் - முதல் முறை நம்பிகள் இப்பதியினை வழிபட்டபோது பாடியருளியது; இரண்டாம் முறை பாடியருளியது (திருவொற்றியூரினின்றும் வரும் இடையில்) காந்தாரப்பண் - மின்னுமாமேகங்கள் என்ற பதிகம், நோய் நீங்கப் பெற்றுப் பாடியருளியது.

**பதிகப் பாட்டுக் குறிப்பு:—**(1) மூப்பதுமில்லை...ஊரினமாக - ஆர்ப்பது நாகம் முதலியவை மக்கள் நிலையில் எட்டாத இறைமைத் தன்மைகள்; இவ்வாறு எட்டமுடியாதவராதலின் நாம் ஆட்படிற் பயன் என்? என்றது குறிப்பு; மேல்வரும் பாட்டுக்களிற் கூறுவனவு மிவ்வாறே கண்டு கொள்க. நிந்தைத் துதிகள்; வேள்

விக்குடி தண் துருத்தி - இரண்டும் சேர்ந்து ஒரு பதி; "துருத்திகூட" என்று ஆசிரியர் இதனைக் குறித்தனர். (3275); காப்பது - இடமாகக் கொண்டு உலகைக் காப்பது; "காப்புக்களே", காப்புத் திருத்தாண்டகம் என்பன காண்க ;—(2) கட்டக் காடு - வறிய மயானம்; காட்சிபோன்னார் - எட்டா நிலை; தூய நெய் - பசு நெய்; இதுவே வேள்விக்குரியது; வட்டக் குண்டம் - ஓம குண்டத்தின் வடிவம்; இது பெரும்பான்மை பற்றிக் கூறியது; அட்டம் கொண்டு - விரும்பி ;—(3) பெரும்...உடையார் - பலபேருடையர் என்பது இகழ்ச்சிக் குறிப்பும் பட நின்றது; ஒற்றியூர் - ஒற்றி வைத்த ஊர் என்று இகழ்ச்சிபட உரைத்தது; காரும் - மைநிற முடைய; கைப்புடைய என்றலுமாம் ;—(4) கண்டன - தாந்தாம் கண்டவாறு என்றும், மனம் போனவாறெல்லாம் (இகழ்ச்சிக் குறிப்பு) என்றும் உரைக்க நின்றது; மானைத் தோல் - மான்றோல்; ஐகாரம் எதுகை பற்றி வந்த அசைநிலை; மான்தோல், புலித்தோல், யானைத்தோல் - தோல் மூன்றும் உரைத்தது; இவை யெல்லாம் இகழ்ச்சிப் புகழ்ச்சி; இகழ்வது போலப் புகழ்தல் இலேச வணியின்பாற் படுவன ;—(5) ஊட்டிக்கொண்டுண்பதோர் - ஊண் - மேம்பட்ட தொழில் செய்து பெறும் சீவனம்; பாட்டிக்கொண்டு - பாடச் செய்து உடன் கொண்டு; பாம்பு சுற்றி ஆட்டிக்கொண்டுண்பது - பாம்பாட்டிப் பிழைக்கும் தொழில் ;—(6) குறவனார்...மணவாட்டி - மகனார் - முருகப் பெருமான்; மணவாட்டி - தேவியார்; மகனார் மணவாட்டி குறவனார்மகள் - (குறச்சாதிப் பெண்) என்க; மறவனார் - வேடுவன்; மறவனார் - குறவனார் - ஆர் விகுதிகள் இகழ்ச்சிக் குறிப்பு ;—(7) ஒரு பெற்றியர் - சொல்லலாகாத பித்துப்போன்ற ஒருவகை நிலை - (இகழ்ச்சிக் குறிப்பு); ஒரே தன்மை - மாறாத நிலை என்பது பொருள்; மூத்தவை தம்மனை - பாட்டன்; பாட்டி; தவ்வை - தாய்; "எந்தை தந்தை தந்தையெங் கூட்டமெல்லாம், தம்பிரா னீரே" (ஏயர். புரா - 392); சேத்தவர்...அத்தவம் - இகழ்ச்சிக் குறிப்பு ;—(8) அம்பரம் - அப்பாற்பட்டது ;—(9) சிந்துரம் - இங்குச் சிந்தூரம் போன்ற சிவப்பு நிறங் குறித்தது; சிந்துரக்கண்ணான் - செங்கண்மால்; அந்தரஞ் சேல்வது - தேடத் தேட அப்பாற் கடந்து செல்வது ;—(10) கூடலர் மன்னன் - பகைவரையும் அடிப்படுத்தி ஆளும் தலைவன்; ஆட்படுமாறுசொல்லி - ஆட்படோமே என்ற கருத்து ஆட்படும் வகை குறித்த புகழ்ச்சி என்று பதிகக் கருத்துக் காட்டிய படி; பண்டம் - உறுதி.

தலவிசேடம் :—திருத்துருத்தி-III பக்கம் உஅஅ பார்க்க; வேள்விக்குடி - திருத்துருத்திக்குச் சொல்லியவையும், முன் உரைத்தவையும் பார்க்க.

வேறு

3276. காட்டுநல் வேள்விக் கோலங் கருத்துற வணங்கிக் காதல்
நாட்டிய வுள்ளத் தோடு நம்பியா ரூரர் போற்றி
ஈட்டிய தவத்தோர் சூழ வங்குநின் றேகி யன்பு
பூட்டியாட் கொண்டார் மன்னுந் தானங்க ளிறைஞ்சிப் போந்து,

வேறு

3277. எஞ்சாத பேரன்பிற் றிருத்தொண்ட ருடனெய்தி
நஞ்சாருங் கறைமிடற்றா ரிடம்பலவு நயந்தேத்தி
மஞ்சாரும் பொழிலுடுத்த மலர்த்தடங்கள் புடைசூழுஞ்
செஞ்சாலி வயன்மருதத் திருவாரூர் சென்றடைந்தார் கஉ௬

3276. (இ - ள்) காட்டுநல்...வணங்கி - அங்கு இறைவர் காட்டிய நல்ல திருமணக் கோலம் தமது மனத்துட் பொருந்த வணங்கி ; காதல்...போற்றி - பெரு விருப்பம் ஊன்றிய உள்ளத்தினோடு நம்பிகள் துதித்து ; ஈட்டிய...ஏகி - பலகாலம் முயன்று சேர்த்த தவத்தினை யுடைய திருத்தொண்டர்கள் சூழ்ந்துவர அங்கு நின்றும் புறப்பட்டுச் சென்று ; அன்பு...போந்து - அன்பினாலே பிணைத்துத் தம்மை ஆட்கொண்ட இறைவர் நிலைபெற எழுந்தருளியுள்ள பதிகளை வணங்கிச் சென்று, கஉஉ

3277. (இ - ள்) எஞ்சாத...எய்தி - எஞ்ஞான்றும் குறைவுபடாத பேரன்பினையுடைய திருத்தொண்டர்களுடனே கூடிச் சென்று ; நஞ்சாரும்...ஏத்தி - விடம் பொருந்திய கரிய கண்டத்தினையுடைய இறைவரது பதிகள் பலவற்றையும் பணிந்து துதித்து ; மஞ்சாரும்...அடைந்தார் - மேகங்கள் பொருந்திய சோலைகள் சூழ்ந்த பூந்தடாகங்கள் பக்கங்களிற் சூழ்கின்ற செந்நெல் வயல்கள் மிகுந்த மருத நிலங்களையுடைய திருவாரூரினைச் சென்று அடைந்தார். கஉந

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3276. (வி - ரை) வேள்விக் கோலம் - திருவேள்விக்குடியில் இறைவர் மணவாளக் கோலத்துடன் கல்யாணசுந்தரர் என்ற பெயருடன் உள்ளார்.

கருத்துற - மனத்தில் ஊன்றி அழுந்த.

காதல் நாட்டிய உள்ளம் - பெரு விருப்பம் மிகக் கொண்ட நிலை

ஈட்டிய தவத்தோர் - பல பிறவிகளில் செய்து செய்து சேர்த்த பெருந்தவத்தை யுடைய அடியார்கள்; அவ்வாறு சலியாது முயன்ற தவப் பெருந் தொண்டர்களுக்கே யன்றி நம்பிகளைச் சூழ்ந்து வணங்கும் பேறுபெறுதலரிது என்பது குறிப்பு ; "மெய்த் தவர் சூழ வலங்கொண்டு" (3243).

அன்பு பூட்டி - ஆட்கொண்டவர் - அன்பினை உளதாகச் செய்து தடுத்தாட் கொண்டவர் ; "ஆளாயினி யல்லேனென லாமே" (பதிகம்).

குறிப்பு :—காட்டுநல்...போற்றி என்ற கருத்தும் வழிபாடு முற்றிய நிலையும் அங்கு முன்பாட்டிற் "பதிக மொழிந்து வாழ்ந்தார்" என்றதனாற் பெற்றமையானும், ஈட்டிய...போந்து என்ற, பின் இரண்டடிகளின் பொருள் மேல் வரும்பாட்டில் எஞ்சாத...ஏத்தி என்ற இரண்டடிகளாற் பெறுவதனாலும், இப்பாட்டின்றியே பொருள் தொடர்ந்து செல்லுதலானும், இவ்வொரு பாட்டுக்கென யாப்பு மாறுதல் அமைதியின்மையானும், பிறவாற்றானும் இப்பாட்டு ஐயப்பாடுள்ளவற்றுள் ஒன்றாகுமோ என்று கருத இடமுண்டு.* 122

3277. (வி - ரை) எஞ்சாத பேரன்பு - எக்காலத்தும் எவ்வாற்றானும் குறைவுபடாது மேன்மேல் மிகுகின்ற பேரன்பு ; இறைவரிடமும் நம்பிகளிடமும் பேர் அன்புடைய திருத் தொண்டர்கள்.

இடம்பல - இவை, திருஅழுந்தூர், திருவழுவூர், திருமீயச்சூர், திருத்திலதைப் பதிமுற்றம், திருஅம்பர்மாகாளம், திருஅம்பர்ப் பெருந்திருக்கோயில், திருக்கொண்டீச்சரம், திருவிற்குடி, திருப்பள்ளியின் முக்கூடல் முதலாயின என்பது கருதப்படும். நம்பிகள் நீண்டநாள் யாத்திரை போந்தருளியமையாலும், திருவாரூர் மேற்செல மனம் வைத்த ஆர்வத்துடன் வருகின்றமையாலும் திருவேள்விக்குடியினின்றும் தெற்கு நோக்கிச் செல்லும் நேர்வழியிடையிலும் வழியணிமையிலும் உள்ள பதிகளாகிய இவற்றைக் கொண்டுரைக்கப்பட்டது ; இவைகட்கு நம்பிகள் பதிகங்கள் கிடைத்தில !

*எனது சேக்கிழார் பக். உகசு பார்க்க.

மஞ்சாரும்...வயின்மருதம் - திருவாரூரின் நீர்வளம் நிலவளம் முதலிய சிறப்புக்கள்; நம்பிகளின் ஆர்வ மிகுதியினையும் திருவுள்ளத் தெழுந்த இனிய செழுங் கருத்துக்களையும் குறிக்கும் நிலை கண்டுகொள்க.

மஞ்சாரும் பொழிலுடுத்த - "அன்றின் முட்டா தடையும் சோலை யாரூர்" "செந்தண் பவளந் திகழுஞ் சோலை" "இனைத்தா னன்ன செங்கா னுரை சேரும் திருவாரூர்" "ஆயம் பேடை யடையும் சோலை யாரூர்" "செருந்தி செம்பொன் றிகழுஞ் சோலை" (ஆரூர் - செந்துருத்தி) என்று பின்னர் இவ்வாறே பன்னாட் பிரிந்த "எல்லையிலாக் காதன்மிக" (3278) அணையும்போது நம்பிகளது மனத்தெழும் கருத்துக்களை இங்கு வைத்துக் காணும்படி அவரது திருவுள்ளத்துட் புகுந்து காட்டியருளிய ஆசிரியரது தெய்வக் கவிநலம் கண்டனுபவிக்கத்தக்கது.

பொழிலுடுத்த மலர்த்தடங்கள்...மருதம் - மேகங்கள் சோலைகளைச் சூழ்வன; சோலைகள் மலர்த் தடங்களை உள்ளடக்கி வைத்து அவற்றைச் சூழ்வன; அத்தடங்கள் தாமும் பலபுறமுமிருத்தலால் வயல்களைச் சூழ்வது; அவ்வாறுள்ள வயல்கள் மிக்க மருதம் திருவாரூர் நகரைச் சூழ்வது என்றிவ்வாறு முறையே பலவற்றையும் ஒருங்கு கண்டுகொள்க. உடுத்தல் - சூழ்தல். 123

3278. செல்வமலி திருவாரூர்த் தேவரொடு முனிவர்களும்
மல்குதிருக் கோபுரத்து வந்திறைஞ்சி யுள்புக்கங்
கெல்லையிலாக் காதன்மிக வெடுத்தமலர்க் கைகுவித்துப்
பல்குதிருத் தொண்டருடன் பரமர்திரு முன்னணைந்தார். கஉச

(இ - ள்) செல்வமலி...இறைஞ்சி - செல்வ நிறைந்த திருவாரூரிலே தேவர்களுடனே முனிவர்களும் நெருங்கியுள்ள திருக்கோபுரத்தினை அணுகி வந்து வணங்கி; உள்புக்கு - திருக்கோயிலினுள்ளே புகுந்து; அங்கு...கைகுவித்து - அங்கு அளவில்லாத காதல் மிகுதியினாலே சிரத்தின் மேலே கைகளைக் கூப்பி; பல்கு... அணைந்தார் - மிகுந்த திருத்தொண்டர்களுடனே கூடி இறைவரது திருமுன்பு அணைந்தருளினர்.

(வி - ரை) செல்வமலி திருவாரூர் - நிறை செல்வத் திருவாரூர் என விதந்து பேசப்படும்; இங்குச் செல்வம் என்றது உலகத்திருவும் முத்தித் திருவுமென்னும் இரண்டையுங் குறித்தது. 86-வது பாட்டுப் பார்க்க; திருஆரூர் என ஊர்ப் பெயரை விளக்கியபடியுமாம்.

தேவரொடு முனிவர்களும் மல்குதிருக்கோபுரம் - "தேவரொதுங்கத் திருத் தொண்டர் மிடையுஞ் செல்வத் திருவாரூர்" - தேவாசிரியன் என்பன முதலியவை காண்க; திருத்தொண்டர்களன்றி ஏனையோர் உள்ளே புகும் காலம் பார்த்து நந்தி பெருமானது ஆணையை எதிர் நோக்கித் திருவாயிலில் முறையிருப்பர் என்பது.

பல்கு திருத்தொண்டருடன் - இவர்கள் அங்குத் திருக்கோயிலிற் குழுமியிருக்கும் திருத்தொண்டர்கள். முன் "எஞ்சாத பேரன்பிற் றிருத்தொண்டருடன்" (3277) என்றது வேறு; அவர்கள் முன் நம்பிகளுடன் கூடிவந்தணைந்தோர்.

பரமர் - புற்றிடங்கொண்ட பெருமான்; வரும் பாட்டுப் பார்க்க. 124

3279. மூவாத முதலாகி நடுவாகி முடியாத
சேவாருங் கொடியாரைத் திருமூலட் டானத்துள்

ஓவாத பெருங்காத லுடனிறைஞ்சிப் புறம்போந்து
தாவாத புகழ்ப்பரவை யார்திருமா ளிகைசார்ந்தார். கஉரு

(இ - ள்) மூவாத...கொடியாரை - என்றென்றும் மூத்தல் இல்லாத முதலும் நடுவும் ஆகி முடிதலு மில்லாதவராகிய இடபம் நிறைந்த கொடியினையுடையவரை; திருமூலட்டானத்துள்... இறைஞ்சி - திருமூலத்தானத்தினுள் ஒழியாத பெரு விருப்பத்தினுடன் வணங்கி; புறம்போந்து - புறத்தே போந்தருளி; தாவாத...சார்ந்தார் - கெடுதலில்லாத புகழினையுடைய பரவையம்மையாரது திருமாளிகையினைச் சார்ந்தருளினர்.

(வி - ரை) மூவாத...முடியாத - இறைமைக் குணங்கள்; மூத்தல் - காலக்கோட்பட்டுப் பழமையாதல்; முடிதல் - இறத்தல்; முதல் - முதல்வன்; நடுவாகி - எல்லாப் பொருள்களுள்ளும் உயிர்களுள்ளும் கலந்திருக்கும் நிலை நடு எனப்பட்டது.

திருமூலட்டானத்துள் - என்றும் எங்கும் உள்ள இறைவரைத் திருமூலட்டானத்துள் வெளிப்படக் கண்டு என்க; திருமூலட்டானம் - புற்றிடங்கொண்ட பெருமான் எழுந்தருளியிருக்கும் இடம்; திருமூலட்டானத்து இறைவரை என்னாது இறைவரைத் திருமூலட்டானத்துள் என்றது எங்கும் நிறைந்த பரமசிவமாகிய இறைவர் ஒருவரே இங்குத் திருமூலட்டானத்துள்ளும், அங்குத் திருமுதுகுன்றத்தினும், மற்றும் அங்கங்குப் பதிகளிலும், குறிகளிலும், கோயில்களிலும் எழுந்தருளியிருப்பவர் என்ற குறிப்புப் பெறும் பொருட்டு; திருமுதுகுன்றத்திற் பெற்று ஆற்றில் விடுத்த பொன்னினை இங்கு இறைவரருளால் இனிக் குளத்திலெடுக்கவுள்ள நிலையாதலின் அது குறிக்க இவ்வாற்றாற் கூறினர். இனி இங்குத் திருவாரூரில் அருளும் பதிகமும் திருமுதுகுன்றினைப் பற்றியதாதலும் கருதுக.

திருமூலட்டானம் - வேறு; வீதிவிடங்காரகிய தியாகேசர் சந்நிதி வேறு.

ஓவாத - ஓவுதல் - நீங்குதல்; "ஓவுத லோவு திருப்பணி."; "ஓவுநாள்."

இறைஞ்சிப் புறம்போந்து...அணைந்தார் - ஒரு திருப்பதியினை அணைந்தவுடன் முதலிற் செய்யும் கடமையாக இறைவர் கோயிலையடைந்து வணங்கிய பின்னரே தமது ஏனைச் செயல்களுட் புகுதல் முந்தையோராகிய பெரியோர் நிலை; சிவபாத இருதயர் திருவாலவாயிற் சேர்ந்ததும் ஆலவாயுடையாரைச் சென்று வணங்கிய பின்னரே பிள்ளையாரது திருமடத்திற் சார்ந்ததும், பிறவும் இங்கு நினைவு கூர்தற்குரியன. இதனை விடுத்து இந்நாள் மாக்கள் ஒரு பதியினை அணைந்தபோது, தமது பிற காரியங்களையெல்லாம் முதலிற் செய்த பின்னரே கோயிலிற் சேர்தலும் அவ்வாறும் செய்யாதொழிதலும் வருந்தத் தக்கன.

தாவாத புகழ் - பின்னர்ப் பாமனார் இருமுறை தூது சென்ற புகழ்; புகழ் என்பதைப் பரவையாருக் கன்றித் திருமாளிகைக்குங் கொள்ளலாம். பரவையார் திருமாளிகைக்குத் 'தாவாத புகழ்' என்பது தாவுதலைத் தடுப்பாரெவர்? என்ற குறிப்புடன் நின்றது. 9-3516-பாட்டுக்கள் பார்க்க. 125

3280. போங்குபெரு விருப்பினெடு புரிகுழலார் பலர்போற்றப்
பங்கயக்கட் செங்கனிவாய்ப் பரவையா ரடிவணங்கி,
"யெங்களையு நினைந்தருளிற்" றென்றியம்ப, வினிதளித்து
மங்கைநல்லா ரவரோடு மகிழ்ந்துறைந்து வைகுநாள், கஉக

3281. "நாயனார் முதுகுன்றர் நமக்களித்த நன்னிதியந்
தூயமணி முத்தாற்றிற் புகவிட்டேந் ; துணைவரவர்
கோயிலின்மா ளிகைமேல்பாற் குளத்திலவ ரருளாலே
போயெடுத்துக் கொடுபோதப் போதுவா " யெனப்புகல, கஉஎ

3282. " என்னவதி சயமிதுதா ? னென்சொன்ன வா ?"றென்று
மின்னிடையார் சிறுமுறுவ லுடன்விளம்ப, மெய்யுணர்ந்தார்
" நன்னுதலா ! யென்னுடைய நாதனரு ளாற்குளத்திற்
பொன்னடைய வெடுத்துனக்குத் தருவது பொய் யா "தென்று,

3283. ஆங்கவரு முடன்போத வளவிறந்த விருப்பினுடன்
பூங்கோயி லுண்மகிழ்ந்த புராதனரைப் புக்கிறைஞ்சி,
ஓங்குதிரு மாளிகையை வலம்வந்தங் குடன்மேலைப்
பாங்குதிருக் குளத்தணைந்தார் பரவையார் தனித்துணைவர். கஉக

3280. (இ - ள்) பொங்குபெரு...அடி வணங்கி - மேன்மேல் அதிகரிக்கும் பெரு விருப்பத்தினுடனே பின்னிய புரிந்த கூந்தலை யுடைய தோழியர்கள் துதிக்கத் தாமரை மலரைப் போன்ற கண்களையும், கொவ்வைச் செங்கனி போன்ற வாயினையு முடைய பரவையம்மையார் வந்து (நம்பிகளது) திருவடிகளில் வணங்கி ; எங்களை யும்...இயம்ப - எங்களையும் நினைந்து எழுந்தருளிய தேவரீரது கருணைக்கு யாம் தகுதியுடையோமா என்று கூற; இனிதளித்து...வைகுநாள்-அவருக்கு இனிய மொழி யுரைத்து மங்கைநல்லாராகிய அவருடனே மகிழ்ச்சியுடன் வதிந்திருக்கு நாளிலே,

3281. (இ - ள்) வெளிப்படை ; " தலைவராகிய திருமுதுகுன்றத்தில் எழுந் தருளிய சிவபெருமான் நமக்கு அருளிய நன்னிதியமாகிய பொன்னினைத் தூய திரு மணிமுத்தாற்றிலே புகும்படி இட்டோம் ; அதனைத் துணைவராகிய அப்பெருமானது இத்திருக் கோயிலின் மாளிகையின் மேல்பாலுள்ள (கமலாலயத்) திருக்குளத்திலே அவர் திருவருளாலே போய் எடுத்துக்கொண்டு வருதற்கு உடன் போதுவாயாக !" என்று (நம்பிகள்) சொல்ல, கஉஎ

3282. (இ - ள்) மின்னிடையார் - அது கேட்ட மின்போலும் இடையினை உடைய பரவையம்மையார் ; என்ன...என்று - இதுதான் என்ன அதிசயம் ! சொல்லியவாறுதான் என்னே ! என்று அற்புதத்துடன் ; சிறுமுறுவலுடன் விளம்ப - புன்முறுவலுடன் சொல்ல ; மெய்யுணர்ந்தார்...பொய்யாதென்று - மெய் யுணர்வுடையாராகிய நம்பிகள் " நல்லநுதலினை யுடையவளே ! என்னுடைய நாயக னாரது திருவருளாலே இக்குளத்தினின்று பொன் முழுதும் எடுத்து உனக்கு நான் தருவது பொய்யாகாது "என்று கூறி, கஉஅ

3283. (இ - ள்) ஆங்கு அவரும் உடன் போத - ஆங்குத் தம்முடன் அப் பரவையாரும் வர ; அளவிறந்த...வலம் வந்து - அளவு கடந்த விருப்பத்துடன் பூங் கோயிலினுள் மகிழ்ந்தெழுந்தருளியுள்ள புனிதராகிய இறைவர் திருவடிகளை அக் கோயிலுட் புகுந்து வணங்கி ஓங்கிய திருமாளிகையினை வலமாகச் சுற்றி வந்து ; பரவையார் தனித் துணைவர் - பரவையாருடைய தனித் துணைவராகிய நம்பிகள் ; அங்கு...அணைந்தார் - அவ்விடத்தினின்றும் உடனே மேலைப் பக்கத்திலுள்ள கமலா லயத் திருக்குளத்தில் அணைந்தருளினார் ; கஉக

இந்நான்கு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபுகொண் டுரைக்கின்றன.

3280. (வி - ரை) புரிகுழலார் - தோழியர்கள்.

விருப்பினுடன் - போற்ற என்றும், விருப்பினுடன் - அடிவணங்கி - இயம்ப என்றும் கூட்டியுரைக்க நின்றது.

எங்களையும் நினைந்தருளிற்று - சிவபெருமானையே நினைத்தலன்றி வேறு நினையாத திருவுள்ளத்தில் நினைக்கத் தகாத எங்களையும் என உம்மை இழிவு சிறப்பும்மை ; அருளிற்று - எழுந்தருளியது ; அருள் துணைவினை எனக்கொண்டு, நினைந்தெழுந்தருளியது என்றலுமாம். நீண்ட நாட்பிரிந்த நிலைக்குறிப்பும் படக்கூறியது.

இனிது அளித்து - மலர் முகம் அளித்து இனியன கூறி.

மங்கை நல்லாரவர் - மங்கையருள் நல்லாராகிய அவர் ; பரவையம்மையார்.

வைகுநாள் - புகல - என மேல் வரும் பாட்டுடன் கூட்டுக.

அங்கயற்கண்—என்பதும் பாடம். 126

3281. (வி - ரை) நாயனார் முதுகுன்றர் - நாயனாராகிய திருமுதுகுன்றத்து இறைவர் ; பெயரடைமொழி பண்பு குறித்து நின்றது ; நாயனார் - தலைவர் ; 759 - 774 முதலியவை பார்க்க.

நாயனார் - அளித்த - நாயனாரதலின் - அடியாரைக் காக்கும் கடமை பற்றி அளித்த என்று காரணப் பொருள்பட நின்றமையும் காண்க.

நன்னிதியம் - அசுத்த மாயாபுவன போகவகைப் பொருளாயினும் இறைவர் பாற் பெறும் அருட் பண்டமாதலின் நன்மை யுடையதாம் என்பது ; "அறத்தாற்றினீட்டப் பட்ட ; அனையவை புனிதமான திறத்தாலே" (திருவிளை - புரா. வாதவூ. உ. ப. படலம் 62.)

புக இட்டோம் - புகும்படி ஆற்றில் இட்டோம். புக் - அங்கு நின்றும் இங்குப் புகும்படி ; விட்டோம் என்று பிரித்துரைப்பினுமமையும்.

துணைவரவர் கோயில் மாளிகை - பூங்கோயிலின் மாளிகை ; துணைவரவர் - திருமுதுகுன்றத்தின் நாயனார் ; இங்குத் திருவாரூர்ப் புற்றிடங்கொண்டார் எழுந்தருளும் பூங்கோயிலைத் திருமுதுகுன்றத்து நாயனாரது கோயிலாகக் கூறியது அவரே இவர் ; எங்கும் நிறைந்த முதல்வர் என்ற அனுபவ நிலை ; அவரருளாலே என்ற கருத்துமது ; அவரருளாவது திருமுதுகுன்றில் நம்பிகள் வேண்டியவாறே இறைவர் " செழுமணி முத்தாற் றிட்டிப் பொருளினை முழுது மாரூர்க் குளத்திற் போய்க் கொள்க " என்று தம்பிரானார் நல்குமின்னருள் (3263) ; அவ்வாற்றாற் பொன் முழுதும் நம்பிகளின் கைப் புகுமளவும் திருமுதுகுன்றரின் அருட் கடமைப் பாடாதல் நியமமாம் என்ற குறிப்பும் கண்டுகொள்க.

மேல்பாற்குளம் - இது கமலாலயம் என்று விளக்கமாய் வழங்கப்படுவது ; இது பற்றி நமிநந்தியடிகணாயனார் புராணத்தும், பிறுண்டும் பார்க்க.

கொடுபோத - கொண்டு வர; போதுவாய் - உடன் செல்வாயாக என்ற ஏவல்.

நமக்களித்த - நமக்கு என்றது பரவையாரை உள்ளிட்ட உளப்பாட்டுத் தன்மைப் பன்மை ; மேல்வரும் பாட்டில் " என்னுடைய நாதன் " என்றும், " உனக்குத் தருவது " என்றும் தனிப்படுத்தி ஒருமையிற் கூறுதலின் காரணம் மேற்காண்க.

புகல - விளம்ப - என்று - இறைஞ்சி - அணைந்தார் - என மேல்வரும் பாட்டுக்களுடன் கூட்டி முடிக்க. 127

3282. (வி - ரை) " என்ன...வாறு " என்று - இது பரவையார் அதிசயப் பட்டுக் கூறிய மொழி. இஃதியலாதென்ற குறிப்புடன் கூறிய ஐயப்பாடு புலப்படும் மொழியுமாம் ; என்ன அதிசயம் ? என்சொன்னவாறு ? - வினாக்கள் அதிசயமும்

இயலாமைக் குறிப்பும்பட நின்றன. என் செய்தவாறு என்பது பாடமாயின் நீர் பொன்னை ஆற்றிலிட்டது தக்கதன்று என்ற குறிப்புப்பட உரைத்த மொழி என்க.

சிறு முறுவல் - இகழ்ச்சிக் குறிப்புத் தோன்ற நின்ற புன்முறுவல்; இக்கருத்துப் பதிகத்துட் காண்க. மேல் 3286 - 3287-ல் ஆசிரியர் இதனைக் காட்டியருளியதும் காண்க; "பரவையிவ டன்முகப்பே" (பதிகம்).

மெய்யுணர்ந்தார் - மெய் - இறைவர் - சத் - மெய் - முழுதுமாகும் தன்மையினை;

என்னுடைய நாதன் - உனக்குத் தருவது - என்னுடைய என்றது பரவையார் என் சொன்னவாறு? என்ன அதிசயம்? என்று இறைவரருளினில் ஐயப்பாடுடையார் போற் கூறியதனால் பிரித்துக் காட்டியபடியாம்; முன்னர் நமக்களித்த நன்னிதியம் என்ற நம்பிகள் இங்கு எடுத்து உனக்குத் தருவது என்று பிரித்து உரைப்பதும் அக்கருத்தாதலுடன் ஐயப்பாடு கொண்ட நீயே உன் கையில் ஏற்று அடியார்களுக்குப் பங்குனி உத்திரத் திருவிழாவில் அமுதூட்டி உபசரிக்கும்படி தருவது; நீயே காணும்படி - என்ற குறிப்புமாம்.

பொய்யாது - உறுதி; நிச்சயம் என்றபடி. எதிர்மறை உறுதி குறித்தது.

பொன் அடைய - ஒன்றும் குறையாமல் 12000 பொன் முழுமையும்; மாற்று - உறை - சிறிதும் தாழாமலும் என்றலும் குறிப்பு; 3290 - 3291 பார்க்க. அடைய - பொன்னை நீ அடையும்படி; பெறும்படி என்றும், பொன் பெற்றுப் பயனடைய என்றும், முதுகுன்றத்தில் அடைந்தது போல இங்கு அடைய - பெற - என்றும் கொள்ள நின்றது. 128

3283. (வி - ரை) ஆங்கு - குளத்திற் என்று இடக்குறிப்பும் அப்பொழுதே என்று காலக் குறிப்பும், அவ்வாறே என்று பண்புக் குறிப்பும்பெற நின்றது.

அவரும் - ஐயப்பட்ட பரவையாரும்; உம்மை இறந்தது தழுவிய எச்சவும்மை.

அளவிறந்த விருப்பினுடன் - என்றதனைப் புக்கிறைஞ்சி என்றதனுடனும், வலம் வந்து என்றதனுடனும், அணைந்தார் என்றதனுடனும் தனித்தனிக் கூட்டியுரைத்துக் கொள்க. முதனிலைத் தீபம்.

புக்கிறைஞ்சி - வலம் வந்து - அணைந்தார் - "அவனருளாலல்லது ஒன்றையும் செய்யானாக", "ஏகனாகி யிறைபணி நிற்க" என்ற சிவஞான போதம் பத்தாஞ் சூத்திரக் கருத்துக்கள் ஈண்டு வைத்துச் சிந்திக்கற்பாலன. "அவரருளாலே போயெடுத்துக் கொடு போத" (3281) என்றும், "என்னுடைய நாதனருளாற் குளத்தில் எடுத்து உனக்குத் தருவது" (3282) என்றும் முன் கூறியவையும் காண்க. நம்பிகள் தற்போத முனைப்பென்பது சிறிதுமின்றி இறைவன் திருவருளிலே நீங்காது கலந்து நின்று அதனால் மும்மலவாதனையும் நீங்கிய பரமாசாரியர் என்பது ஈண்டு மனங்கொளற்பாலதாகிய உண்மை; இதனை ஆசிரியர் அங்கங்கும் நம்பிகளது அருட் செயல்களில் வைத்து விரித்துக் காட்டும் தெய்வக் கவிநலம் கண்டு கொள்க.

உடன் - வலம் வந்த உடனே; உடன் - அணிமையில் உள்ள என்றலுமாம்.

மேலைப்பாங்கு - மேற்குப் பக்கத்திலுள்ள; ஏழனுருபு தொக்கது; பாங்கு என்றூர் திருக்கோயிலினை அடுத்து உள்ள நிலை குறித்தற்கு; திருக்கோயிலுக்கும் திருக்குளத்துக்குமிடையே ஒரு திருவீதிதான் இப்போது காணப்படுவது.

பரவையார் தனித் துணைவர் - பரவையார் இங்கு சேரே உடனிருக்க இவ்வாறு கூறுதல் அவரது ஐயப்பாடு நீக்கித் திருவருளுக் காளாந்தன்மை புலப்படுத்தி ஆட்

கொள்ளும் ஆசாரியாராம் தன்மைப் பெரு நலம் குறித்தற் கென்க; தனி என்ற குறிப்பு மிது. பொன்னைத் தாமே சென்றெடுத்துத் தரலாமாயினும் நம்பிகள் அவரையும் "உடன் போதுவாய்" என்று கூட்டிச்சென்ற குறிப்பு மிதுவே என்க; பிறர் பிறவா றெல்லாமெண்ணி அபசாரப்படுதல் உண்மையறிவில்லாமையாலா மென்க; இது பற்றிய மேல் அருட் சரித விளைவு வரலாறும் காண்க; துணைவர் என்ற குறிப்பும் கருதுக; தனித் துணைவர் - தம்மையடைந்த அடியார்கள் யாவர்க்கும் நல்லாறு செலுத்தும் துணைவரே யாயினும், பரவையாருக்குச் சிறப்பாகிய துணைவர் என்பது.

புராதனர் - கால எல்லை கடந்த பழமை; "முன்னை பின்னை" என்ற திருத் தாண்டகக் கருத்துக் காண்க.

புனிதர் கழல்—என்பதும் பாடம். 129

3284. மற்றதனில் வடகீழ்பாற் கரைமீது வந்தருளி
முற்றிழையார் தமைநிறுத்தி முனைப்பாடித் திருநாடர்
கற்றைவார் சடையாரைக் கைதொழுது குளத்திலிழிந்
தற்றைநா ளிட்டெடுப்பார் போலங்குத் தடவுதலும், கங0

3285. நீற்றழகர் பாட்டுவந்து திருவிளையாட் டினினின்று
மாற்றுறுசெம் பொன்குளத்து வருவியா தொழிந்தருள
"ஆற்றினிலிட் டுக்குளத்திற் றேடுவீ ரருளிதுவோ?
சாற்று"மெனக் கோற்றொடியார் மொழிந்தருளத் தனித்தொண்டர்,

3286. "முன்செய்த வருள்வழியே முருகலர்பூங் குழற்பரவை
தன்செய்ய வாயினகை தாராமே தாரு"மென
மின்செய்த நூன்மார்பின் வேதியர்தா முதுகுன்றிற்
"பொன்செய்த மேனியினீ" ரெனப்பதிகம் போற்றிசைத்து, கஙஉ

3287. முட்டவிமை யோரறிய முதுகுன்றிற் றந்தபொருள்
சட்டநான் பெறுதொழிந்த தளர்வினாற் கையறவாம்
"இட்டளத்தை யிவளெதிரே கெடுத்தருளு" மெனுந்திருப்பாட்
டெட்டளவும் பொன்காட்டா தொழிந்தருள வேத்துவார், கஙங

3288. "ஏத்தாதே யிருந்தறியே" னெனுந்திருப்பாட் டெவ்வுலகுங்
காத்தாடு மம்பலத்துக் கண்ணுளனுங் கண்ணுதலைக்
"கூத்தா! தந் தருளாயிக் கோமளத்தின் முன்" னென்று
நீத்தாருந் தொடர்வரிய நெறிநின்றார் பரவுதலும், கஙச

3289. கொந்தவிழ்பூங் கொன்றைமுடிக் கூத்தனார் திருவருளால்
வந்தெழுபொன் றிரளெடுத்து வரன்முறையாற் கரையேற்ற,
அந்தரத்து மலர்மாரி பொழிந்திழிந்த தவனியுள்ளோர்
"இந்தவதி சயமென்னே! யார்பெறுவா" ரெனத்தொழுதார்.

3284. (இ - ள்) மற்றதனில்...வந்தருளி - அக்குளத்தின் வடகிழக்குப் பக்கம் உள்ள கரையின்மேல் வந்தருளி; முற்றிழையார் தமை நிறுத்தி - பரவையாரை நிறுத்தி; முனைப்பாடித் திருநாடர் - திருமுனைப்பாடி நாடராகிய நம்பிகள்; கற்றை வார்...தடவுதலும் - கற்றையாகிய நீண்ட சடையினையுடைய சிவபெருமானைக்

கைதொழுது திருக்குளத்தினுள்ளே இறங்கி அன்று அப்போதுதானே போகவிட்டு எடுப்பவர்போல அங்குத் தடவுதலும், கஅ0

3285. (இ - ள்) நீற்றழகர்...ஒழிந்தருள - திருநீற்றழகராகிய இறைவர் நம்பிகளது பாட்டினை உவந்தாராகித் திருவிளையாட்டினை உட்கொண்டு மாற்றுப் பொருந்திய செம்பொன்னினைத் திருக்குளத்தில் வருவிக்கா தொழிந்தருள ; ஆற்றினிலிட்டு...மொழிந்தருள - "ஆற்றினிற் போட்டுக் குளத்தினிலே தேடுவீர் ! அருள் இருந்தது இவ்வாறுதானோ ? கூறுவீர் !" என்று கோற்றொடியாராகிய பரவையம்மையார் மொழிந்தருளவே ; தனித் தொண்டர் - ஒப்பற்ற தொண்டராகிய நம்பிகள், கஅக

3286. (இ - ள்) "முன் செய்த...தாரும்" என - மணம் அவிழும் பூக்களை முடித்த குழலினையுடைய பரவையாரது சிவந்த வாயின் நகை செய்யாதபடி, முன்னர்த் திருமுதுகுன்றத்திற் செய்த அருளின்படியே பொன்னினைத் தந்தருள்வீர் என்ற கருத்துடன் ; மின்செய்த...வேதியர்தாம் - விளங்கும் பூணூலை அணிந்த மார்பினையுடைய நம்பிகள் ; முதுகுன்றில்...போற்றிசைத்து - திருமுதுகுன்றத்திலே எழுந்தருளிய பொன்போன்ற திருமேனியுடையவரே என்று தொடங்கிய திருப்பதிகத்தினாற் றுதிசெய்து, கஅஉ

3287. (இ - ள்) முட்ட இமையோர்...எனும் - தேவர்கள் எல்லாரும் அறியும்படி திருமுதுகுன்றத்திலே தந்தருளிய பொருளினை விரைவில் நான் பெறாது விட்டதளர்ச்சியினால் வந்த செயலற்ற தன்மையதாம் துன்பத்தை இந்தப் பரவையின் எதிரிலே தீர்த்தருளும் என்னும் கருத்துடைய ; திருப்பாட்டு...எத்துவார் - எட்டாவது திருப்பாட்டின் அளவும் பொன்னை இறைவர் அங்கு வருவித்துக் காட்டாமல் ஒழிய மேலும் துதிப்பாராகி, கஅங

3288. (இ - ள்) ஏத்தாதே...திருப்பாட்டு - எப்போதும் ஏத்தாமல் இருந்தறியேன் என்ற கருத்துடன் அத்தொடக்கமுடைய திருப்பாட்டினை ; எவ்வுலகும்... கண்ணுதலை - எல்லாவுலகங்களையும் காத்து ஆளுகின்றாராய்த் திருவம்பலத்தின்கண் உள்ளாராகிய கண்ணுதற் பெருமானை ; கூத்தா!...என்று - அருட்பெருங் கூத்தனே! இந்தக் கோமளமாகிய பரவையின் முன்னே தந்தருள்வாயாக ! என்று ; நீத்தாரும்... பரவுதலும் - நீத்தார்களாகிய துறவிகளாலும் தொடர்தற்கரிய நெறியில் நின்ற நம்பிகள் துதித்தலும், கஅச

3289. (இ - ள்) கொந்தவிழ்பூ...திருவருளால் - கொத்துக்களாக மலர்கின்ற கொன்றைப்பூக்களை முடித்த அருட்கூத்தப் பெருமானது திருவருளினாலே ; வந்தெழு......கரையேற்ற - வந்தெழுந்த பொற்குவையினை எடுத்து முறைப்படி நம்பிகள் கரையேற்ற; அந்தரத்து...இழிந்தது - தேவர்களுலகத்தினின்றும் பூமழை பொழிந்து வீழ்ந்தது ; அவனியுள்ளோர்...தொழுதார் - இந்நிலவுலகத்திலுள்ளோர்கள் இந்த அதிசயம்தான் இருந்தவாறென்னே! இவ்வாறு வேறு யார்தாம் பெறவல்லர் ? (ஒருவருமிலர்) என்று கூறித் தொழுதார்கள். கஅரு

இந்த ஆறு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபுகொண்டன.

3284. (வி - ரை) "வடகீழ்பாற் கரையின்மீது - இது திருக்கோயிலினின்றும் நம்பிகள் போந்தருளிய மேலைத் திருவாயிலினுக்கு அணிமையில் உள்ளது ; ஈசானனுக்குரிய வடகிழக்காகிய பெருமையும் உடையது ; இங்கு மாற்றுரைத்த

பிள்ளையார் என்று இச்சரித சம்பந்தமாகிய பெயருடன் பிள்ளையார் கோயில் உள்ள தும் காணலாம்.

முற்றிழையார் - தொழில் நிரம்பிய அணிகளை அணிந்த பரவையம்மையார் : தொழில் முற்றிய இழை ; வினைத்தொகை.

கற்றைவார் சடையாரைக் கைதொழுது - திருவருள் வெளிப்பட உள்ள பெருஞ் செயலிற் புகுகின்றாராதலின் இறைவரைத் தொழுது புகுகின்றார். இஃது எஞ்ஞான்றும் சிவனை மறவாது தம் செயலற்ற பெரியோர் நிலை - "தழைத்த வஞ் செழுத் தோதினர் எறினர் தட்டில்" (544) ; "உலகுய்ய நடமாடுங் கழலுன்னி யழல்புக்கார்" (1072) ; "அஞ்செழுத் தோதிப் பாந்ற டம்புனற் பொய்கையில் மூழ்கினர் பணியால்" (1635) என்பன முதலியவை காண்க.

அற்றைநாள் இட்டு எடுப்பார்போல் - அங்குத்தடவுதல் - அன்றே அப்பொழுது தான் புகவிட்டுத் தடவி எடுக்க முயலும் பாவனை போல்.

இழிந்து - உள்ளிறங்கி.

தடவுதலும் (3284), ஒழிந்தருள - மொழிந்தருளத் - தனித் தொண்டர் (3285), போற்றிசைத்து (3286), எத்துவார் (3287), என்று - பரவுதலும் (3288), எடுத்துக் - கரையேற்றப், பொழிந்திழிந்தது - தொழுதார் (3289) என்று இந்த ஆறு பாட்டுக் களையும் கூட்டி முடிபுகொள்க. 130

3285. (வி - ரை) நீற்றழகர் - சிவபெருமான். நீறு - சங்காரக் குறிப்பு ; சங்காரத்தின்பின் புனருற்பவம் நிகழ்தல்போல ஈண்டு முன் மறைந்த பொன் மீளத் தரப்படும் நிலைக்குறிப்பு.

பாட்டு உவந்து - நம்பிகள் இனிப்பாடும் திருப்பதிகத்தினைக் கேட்டலில் விருப்ப முற்று ; "பண்ணி னேரு மொழியாளென் றெடுத்துப் பாடப் பயன்றுய்ப்பான்" (1533) என்பது முதலியவை காண்க. "படியிலா நின்பாட்டிற் பெருவிருப்பன் பரமனென்ப, தடியனே னறிந்தனன்" (நால்வர் - நான்மணிமாலை) என்றும், "உறழ்ந்த கல்வி யுடையானு மொருவன் வேண்டு மெனவிருந்து...நினைத்தோழமை கொண்டான்" என்றும் இதனை விதந்து போற்றினர் பிற்காலத்து விளங்கிய சிவப் பிரகாசர்.

திருவிளையாட்டினினின்று - வருவியா தொழிந்தருள - சிறிது தாமதித்தலே ஈண்டுத் திருவிளையாட்டு எனப்பட்டது ; அதன் பயனாவது பரவையம்மையார் தாம் கொண்ட கருத்தினையே உறுதி என்றுகொண்டு மீண்டும் "ஆற்றினில்...சாற்றும்" என மகிழ்ந்து கேட்கும் இன்பம் சிறிதுநேரம் பெறவைத்தலும், பின்னர் நம்பிகள் பொன் பெற வேண்டிப் பதிகம் பாட வைத்தலும், அதனால் உலகின்புற வைத்தலும், பிறவு மாம்.

மாற்றுறு செம்பொன் - உயர்ந்த மாற்றினை உடைய - "ஆயிரத்தெட்டு மாற்றாக வொளிவிடும் பொன்" (தாயுமா). மாற்று உறு - முன் கொடுத்ததனிலும் உறை தாழ்ந்து சிறிது மாறுதல் பெறும் பெயன் என்ற பிற் சரிதக் குறிப்பும் ஆம்.

வருவியா தொழிதல் - சிறிது நேரம் தாழ்த்தல்.

ஆற்றினில்...அருளுவோ ? - இஃது ஆற்றிலிட்டுக் குளத்திற்றேடுதல் என்ற பழமொழியை உள்ளடக்கி வினவியபடி ; வீண் காரியம் என்றது உட்கோள் ; ஆற் றினில் புக இட்டபொருள் ஆற்றினில் அவ்விடத்துத் தேடினும் அகப்படுதல் அரிதா யிருக்க, அங்கு விட்டு முற்றும் வேறாகிய குளத்திற்கிட்டுதல் இயலாத காரியம் என்ற படி பழமொழி ஈண்டு முதுகுன்றின் மணிமுத்தாறும் ஆரூரின் கமலாலயக் குளமுமாக

மேலும் மிகவும் பொருத்தமாய்ப் பரவையாரது நகைக்கிடமாதல் காண்க; "ஆற்றிற் கெடுத்துக் குளத்தினிற் றேடிய ஆதரைப் போல்" (திருநல்லூர் - திருவிருத்தம்.) என்று இதனை வீண் காரியத்துக்கு உவமித்தல் காண்க.

அருள் இதுவோ? - உமது அருள் எம்பால் நிகழ்வது இவ்வாறோ? "அவ ரருளாலே" (3281) "என்னுடைய நாதனருளால்" (3282) என்று விதந்து பேசிய அருளின் தன்மை இதுதானோ என்ற குறிப்பும்படக் கூறியது.

மொழிந்தருள - பரவையம்மையார் மொழிந்தமையே பின்னர் வரும் அரிய திருப்பதிகத்துக்குக் காரணமாகி உலகமுய்யும் வழியாய் வருதலின் அருள என்றார்.

தனித்தொண்டர் - இருவருள்ளே பரவையார் அவ்வாறு கூறத் திருவருளுண் மையில் தனித்து நின்ற என்றதும் குறிப்பு; தனி - ஒப்பற்ற 131

3286. (வி - ரை) நகை தாராமே - முன் செய்த அருள் வழியே - தாரும் - என்று கூட்டுக. முன்செய்த அருளாவது "செழுமணி முத்தாற் றிட்டிப், பொரு ளினை முழுது மாரூர்க் குளத்திற்போய்க் கொள்க" (3262) என்று முன்னர்த் திரு முதுகுன்றிற் பொன் தந்து சொல்லியருளிய திருவாக்கு. அருள் வழியே - அவ் வருளின்படியே; முன்செய்த அருள்வழியன்றியும் எஞ்ஞான்றும் எவ்விடத்தும் தோழமைத் திறத்தினால் நம்பிகள் வேண்டிய வேண்டியாங்குத் தருபவர் இறைவர்; எனினும், முன்செய்த அருளின் வழியே தாரும் என்றது ஈண்டுப் பொன் தருவது இறைவரது திருவாக்கு நிறைவேறுதலுமாகும் என்று இறைவர்பால் இரட்டைக் கடமையாதல் நினைவூட்டியவாறும். நம்பிகள் பொன்பெறுதல் திருவாரூர்ப் பெரு மான்பால் வேண்டாது பிற பதிகளில் வேண்டிப் பெறுவது பற்றி முன் உரைத் தவை பார்க்க; ஈண்டுத் திருமுதுகுன்றரைப் போற்றுதல் அக்கருத்தும் பற்றியது.

முருகலர் பூங்குழல் - மலர்களை அலரும் பருவத்தே அணிதலும், அவை குழ லில் அணிந்தபோது புதுப்பூவாய் அங்கு மலர்தலும், மரபும் பயனும் பற்றியன - "வம்பமருங் குழலாள் பரவை" (2); "பூத்தாருங் குழலாள்" என்பது பதிகம்.

பரவைதன் செய்யவாயின் நகைதாராமே தாரும் - என்றதனால் பரவையார் நம்பிகளுடனே நின்று நகைத்துப் பரிகசித்து மொழிந்தமை பெறப்படும்; "பரவை யிவடன்முகப்பே" என்ற பதிகம் இதற்கு அகச்சான்று.

நகை தாராமே - நகை செய்யாதபடி; தாராமே தாரும் - என்றது சொல் அணிநலம்; முரண்தொடை என்பர்.

"முன் செய்த...தாரும்" என - இது பதிகக் கருத்தும் குறிப்புமாம்.

மின்...வேதியர் - நம்பியாரூரர்.

"பொன் செய்த மேனியினீர்" என - பதிகத் தொடக்கமாகிய முதற் குறிப்பு. பொன் செய்த - செய்த - உவமவுருபு; மின் செய்த - செய்தல் - புலப்படுத்துதல்- விளைத்தல்.

சாராமே தாரும்—என்பதும் பாடம். 132

3287. (வி - ரை) முட்ட இமையோர் அறிய முதுகுன்றில் தந்த பொருள் - முட்ட - எல்லாரும்; தேவர்கள் அறியத் திருமுதுகுன்றத்திற் பொன் தந்தமை "உம்பரும் வானவரும் முடனே நிற்கவே யெனக்குச், செம்பொன்னைத் தந்தருளித் திருமுதுகுன்றமர்ந்தீர்" (2) என்ற பதிகத்தால் விளங்கும் அகச்சான்றுடையது; இதனால் நம்பிகள் இறைவரைப் பொன் வேண்டிய செயலும் அவர் அருளியதும் உல கினர் எவரும்அறிய நிகழ்ந்தனவல்ல என்பதும் பெறப்படும்; ஆயின் "இங்கு உம்பரும் வானவரும் அறிய" என்று கூறியது "இறைவரே! உமது அருளுக்கும் திருவாக்

குக்கும் சான்றாக மண்ணவ ரன்றி விண்ணவர் உள்ளார்; நீர் மறுக்க இயலாது" என்று தோழமைத்திறத்தால் அவருக்கு நினைவூட்டுவார் போன்ற குறிப்புடையது.

சட்டநான் பெறதொழிந்த தளர்வினால் - சட்ட - செப்பமாக - செவ்விதாய்; "சட்டவினியுளது சத்தேகாண்" (போதம். 9 - 2); "சட்ட என்பது செப்பப் பொருட்டாயதோர் அகரவீற் றிடைச்சொல்" (போதம் - மாபாடியம்); சட்ட - விரைவாக என்றலுமாம்; "சட்ட நேர்பட வந்திலாத சழக்கனேன்" (திருவா.)

பெறதொழிந்த தளர்வு - பெருமை காரணமாக வந்த தளர்ச்சி.

கையறவாம் இட்டளம் - கையறவு - செயலற்ற தன்மை; இட்டளம் - துன்பம்.

இவள் எதிரே - இவள் - என்ற அணிமைச் சுட்டுப் பரவையாரும் அங்கு உடனிருந்தலைக் குறிக்கும். "இவள் தன் முகப்பே" "இவள் வாடுகின்றாள்" என்பன பதிகம்; எதிரே - இவள் கண் முன்னே - இவள் காணும்படி; இவள் கொண்ட ஐயப்பாடும் (3282) துணிவு (3285) மாகியவற்றுக்கு மாறாக உணர்ந்துகொள்ளும்படி.

பொன்பெறாத - கையறவாம் - இட்டளத்தைக் கெடுத்தருளும் - துன்ப நீங்குமாறு பொன் கொடுத்தருளும் என்றபடி. "தந்தருளாய்" என்பது பதிகம்.

எனும் - என்ற கருத்துடைய.

திருப்பாட்டு எட்டளவும் - "உம்பரும்" என்ற 2-வது பாட்டு முதல் "பாசாருங் காவா" என்ற எட்டாவது பாட்டுவரை; இப்பாட்டுக்கள் எல்லாம் இக்கருத்துடையன என்பது இட்டளங்கெடவே (பநுளீர்) என்ற பதிக மகுடத்தினால் அறியப்படும். இங்கு எட்டுப் பாட்டளவும் இறைவர் பொன் காட்டா தொழிந்தருளினர் என்பதும், அதன் மேல் ஒன்பதாவது பாட்டில் அரிது வேண்டின அளவிற் பொன் கொடுத்தருளினர் என்பதும் மேல் வரும் பாட்டிற் கூறுவார். இவ்வாறு ஒரு பதிகத்தினுள் இன்னின்ன பாட்டில் இன்னின்ன நிகழ்ச்சிகள் நிகழ்ந்தன என்று எடுத்துக் காட்டியருளுதல் ஆசிரியரது தெய்வ வருட்கவி நலம்; "பண்ணினேர் மொழி" என்ற பதிகம் பற்றி "உண்ணீர்மை" (1533) என்ற விடத்தும், "மட்டிட்ட புன்னை" என்ற பதிகம் பற்றி "எடுத்த பாட்டினில்" (2987) என்ற இடத்தும் ஆசிரியர் உரைத்தவையும், பிறவும் ஒப்பு நோக்குக.

காட்டா தொழிந்தருள - பொன் காட்டாமையும், பின்னர்க் காட்டுவது போலவே அருளிப்பாடேயாம் என்பது, "எக்கிர மத்தி னாலு மிறைசெய லருளே யென்றும்" என்று வருவனவாதி ஞான நூன்முடிபுகளாற் கண்டுகொள்க.

ஏத்துவார் பரவுதலும் - என்று மேல்வரும் பாட்டுடன் கூட்டுக; ஏத்துவார் - ஏத்துவாராகி - முற்றெச்சம். 133

3288. (வி - ரை) "ஏத்தாதிருந்தறியேன்" என்னும் திருப்பாட்டு; இது பதிகத்துள் ஒன்பதாவது திருப்பாட்டு. அதன் கருத்தினை இங்கு ஆசிரியர் உரைத்தருளுகின்றமை காண்க.

"எனும்" திருப்பாட்டு - என்று தொடங்கும் பாட்டு; முதற் குறிப்பு.

எவ்வுலகும் காத்து ஆடும் - இறைவரது ஆடல் எல்லா வுலகங்களையும் சிருட்டி முதலிய ஐந்தொழில் செய்து காத்தலேயாம் என்பது.

அம்பலத்துக் கண்ணுளன் - அம்பலம் - திருமன்று; (1) கண்ணுளன் - அத்திருமன்றத்தின் கண்ணே உள்ளவன். கண் - ஏழனுருபு; (2) கண்ணுள் - கூத்து; கண்ணுளன் - கூத்தாடுபவன்; (3) கண் - அருட்கண்; கண்ணுளன் - அருட்கண், அருணோக்க முடையவர் என்று மூன்று பொருளும் பெற வைத்த தமிழ் நலம் கண்டு கொள்க.

கண்ணுளானுங் கண்ணுதல் - சொல்லணி.

கூத்தா ! - கூத்தனே ! ; திருவாக்கு அருளியபடி செய்யாது தாழ்க்கும் இது வும் உமக்கு ஓர் கூத்தா ? என்ற வினாக் குறிப்பும் காண்க.

இக்கோமளத்தின்முன் தந்தருளாய் - என்க ; தந்தருளாய் என்ற முற்றுவினை யினை முன் வைத்தது விரைவுக் குறிப்பு. கோமளம் - மென்மை, அழகு, இளமை என்றவற்றின் தொகுதி. இத்தன்மைகள் எல்லாங் கொண்ட அருமைப்பாடுடைய பரவையார் ; கோமளம் - கோமளத்தினை உடையாளைக் குறித்து நின்றது. "பரவையிவள் தன் முகப்பே கூத்தா தந்தருளாய்" என்பது பதிகம்.

நீத்தாரும் தொடர்வரிய நெறி நின்றார் - ஆரூர் நம்பிகள் ; ஈண்டு இவ்வாற்றாற் கூறியது, பொன் வேண்டுதலும் பெண்ணைப்பற்றி எடுத்துக் கூறுதலும் பற்றிப் பொன்னாசை பெண்ணாசைகளின் தொடர்புடையார் என்று கொண்டு தவறுபட்டு அபசாரப்படுவோ ருளராயின் அவர்களைத் தெருட்டி ஈடேற்றும் கருணைத்திறம்பற்றி என்க. நீத்தாருந் தொடர்வரிய நெறிநிற்றல் ; "எத்தா திருந்தறியேன்" என்ற பதி கத் திருப்பாட்டானும் பெறப்படும். "துறந்த முனிவர் தொழும்பரவை துணைவா" என்று இதனை எடுத்துக் கூறினர் சிவப்பிரகாசர். தொடர்வரிய - பின்பற்றுதல் அரி தாகிய ; இந்நெறி நிற்றற்கரிதாகிய என்றலுமாம். 134

3289. (வி - ரை) கூத்தனாற் பொன் வரப்பெறும் ; (9) திருப்பாட்டில் "கூத்தா" என்ற தன்மையால் நம்பிகள் இறைவரை விளித்து வேண்டிப் பெற்ற மையால் அப்பெயராலே கூறினார் ; விளித்து வேண்டிய அந்தக் கூத்தனார் என்று சுட்டு விரிக்க ; ஏனைப் பாட்டுக்களில் "அடியேன்" என்ற நம்பிகள் இப்பாட்டில் "கொடியேன்" என்றமை கருதுக.

திருவருளால் - "தந்து அருள்வாய்" என்ற அருள் ; "அருளால்" (3281-3282) என்றதும் கொள்க.

வந்தெழு பொன் - வந்தெழுந்தது - அவ்வாறு வந்த பொன்னை என்க ; பொன் வந்தமை வேறு கூறாது ஆற்றலாற் பெற வைத்தார் ; முன்னர்ப் பொன் தந் தமை உலகறியார் ; அதுபோல இங்கு வந்தமையும் உலகறியார் என்பார் வெளிப் படையாகக் கூறாராயினர்.

வரன்முறையாற் கரையேற்ற - 12000 பொன்னையும் எவ்வாறு எடுத்து ஏற்ற வேண்டுமோ அவ்வாற்றால் என்பதாம் ; வரப்பெற்ற அந்த முறை.

மாரி - பொழிந்திழிந்தது - மலர் மழை வீழ்ந்தது ; இழிந்தது - உயர்வுப் பொருள் குறித்தது ; "வீழ்க தண்புனல்" (தேவா).

இந்த...பெறுவாரென - இது பொன் வரக்கண்ட உலக மக்கள் கூற்று ; தொழுதார் - திருவருள் வெளிப்பாட்டினை வணங்கினர்.

வருமுறையால்—என்பதும் பாடம். 135

## திருமுதுகுன்றம்

திருச்சிற்றம்பலம் பண் - நட்ட ராகம்

பொன்செய்த மேனியினீர் புலித்தோலை யரைக்கசைத்தீர்,
முன்செய்த மூவெயிலு மெரித்தீர்முது குன்றமர்ந்தீர்
மின்செய்த நுண்ணிடையாள் பரவையிவ டன்முகப்பே
என்செய்த வாறடிகே ளடியேனிட் டளங்கெடவே (1)

உம்பரும் வானவரும் முடனேநிற்க வேயெனக்குச்
செம்பொன்னைத் தந்தருளித் திகழும்முது குன்றமர்ந்தீர்
வம்பம ருங்குழலாள் பரவையிவள் வாடுகின்றாள்
எம்பெரு மானருளீ ரடியேனிட் டளங்கெடவே (2)

பரசா ருங்கரவா பதினெண்கண முஞ்சூழ
முரசார் வந்ததிர முதுகுன்ற மமர்ந்தவனே
விரைசே ருங்குழலாள் பரவையிவ டன்முகப்பே
அரசே தந்தருளா யடியேனிட்ட ளங்கெடவே. (8)

ஏத்தா திருந்தறியே னிமையோர்தனி நாயகனே
மூத்தா யுலகுக்கெல்லா முதுகுன்ற மமர்ந்தவனே
பூத்தா ருங்குழலாள் பரவையிவ டன்முகப்பே
கூத்தா ! தந்தருளாய் கொடியேனிட் டளங்கெடவே. (9)

பிறையா ருஞ்சடையெம் பெருமானருளா யென்று
முறையால் வந்தமரர் வணங்கும்முது குன்றர்தம்மை
மறையார் தங்குரிசில் வயனாவலா ரூரன்சொன்ன
இறையார் பாடல்வல்லார்க் கெளிதாஞ்சிவ லோகமதே. (10)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—3286, 3288 பாட்டுக்களில் ஆசிரியர் காட்டியருளியபடி கண்டுகொள்க. எனக்குத் தந்த பொன்னைப் பரவை வாடாது காண இவடன் முகப்பே கூத்தா ! தந்தருள்வாய் என்பது ; " எம்பெருமானருளாய் " (பதிகம்-10); குறிப்பு - இப்பதிகம் திருவாரூர்க் கமலாலயத் திருக்குளக் கரையில் வடகீழ்ப்பக்கம் திருப்படியில் நீரினுள் நின்றபடி நம்பிகள் திருமுதுகுன்றத் திறைவரை நோக்கிப் பாடியருளியது.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) பொன் செய்த மேனி - பொன்போன்ற திருமேனி ; செய்த-உவமவுருபு ; "பொன்னார் மேனியனே" (தேவா) "பொன்வண்ண மெவ்வண்ண மவ்வண்ண மேனி " ; முன் செய்த - முன்னர் வரம் பெற்று உலகை அழிவு செய்த; மின் செய்த - விளக்கமுடைய; முகப்பே - முன்பு ; கண்காண; என் செய்தவாறு - பொன்வரத் தாழச் செய்து நகைக்கிடமாகும்படி செய்தபடி என்னே ! கெடவே - கெடச் செய்யும் ,—(2) உம்பரும்...தந்தருளி - " முட்ட இமையோரறிய முதுகுன்றிற்றந்த பொருள் " (3287) என்று இதனை ஆசிரியர் விரித்தருளினர் ; இவ் வானவர் இங்கு வழிபட வந்திருப்போர்; வம்பமருங் குழலாள்- "முருகலர் பூங்குழற் பரவை " (3286) என்று இதனை உரை வகுத்தருளினர் ஆசிரியர். " விரை சேருங் குழலாள் " (8) " பூத்தாருங் குழலாள் " (9) என மேலும் வருவன காண்க. கூந்தலின் இயற்கைமணங் குறித்த தொனியுமமையும். அப்பொருளில் பூ - என்பது பூவின் மணம் என்றுரைத்துக் கொள்க ;—(3) பத்தா - பத்தி செய்தற்கிடமான வரே! ; முத்தர்-இயல்பாகவே பாசங்களினீங்கியவரே! ; மைத்தாரும் - மைதீட்டிய; மைபோன்ற கரிய என்றலுமாம் ; "வாடாமே" என்பன தந்தருளப் பெற்ற பொருள் கைக்கு வரப் பெறாது அடியார் பணி முட்டுப்பாடு பெறுதல் வாட்டம். " துணம் " என மேற்பாட்டில் வரும் குறிப்பு மிது ;—(4) அங்கணனே - அங்கண்மையுடைய வரே ! அங்கணனுதலில் எனக் காரணக் குறிப்புப் படக்கூறியது ;—(5) " மையா ரும் மிடறு...செய்யார் மேனி " - விரோத அணி ;—(6) நெடியான்...இறைஞ்ச -

முன் "உம்பரும் வானவரும் உடனே நிற்க" (2) என்று குறித்த இவ்வானவர்கள் இறைஞ்சுதற் பொருட்டு இங்கு வந்துள்ளோர் என்பது; படியாரும் இயலாள் - படி - இதன்படி என; உயர்ந்த இலக்கணத்துக் குதாரணமாகக் கூறும் இயல்;—(7) கோந்து - பூங்கொத்துக்கள்; வந்தணவும் - அணவுதல் - அருகுசார்தல்;—(8) பதினெண்கணம் - அமரர் முதல் போக பூமியர் ஈறாக வகுக்கப்படும் பதினெட்டு வகைத் தேவச் சாதியர். "உம்பரும் வானவரும்" என்று கூறிய இருவகையுள் மேல் "நெடியா னென்முகனும்" என்ற விடத்து உம்பரும் - ஈண்டு "வானவரும்" குறிக்கப்பட்டனர்; முரசார் - முரசு முழக்குவோர்; அதிர - அதிர்க்க - முழக்க - எனப் பிறவினைப் பொருள் கொள்க; ஆர் - சிறப்பு விகுதி என்று கொண்டு முழவுகள் இயற்றுபவரின்றியும் தாமே வந்ததிர என்றலுமாம்; விரை - மலர் மணம்; இயற்கை மணம் என்றலுமாம்; இவ்வெட்டாவது பாட்டளவும் இறைவர் பொன் வருவியா தொழிந்தனர் என்பது ஆசிரியர் (3287) காட்டக் காணப்படும் பொருள்;—(9) எத்தாதிருந்தறியேன் - இங்கு இதன் பொருட்டன்றி, என்றும் எங்கும் எத்துதலை மறந்தறியேன்; ஆதலின் பாட்டுக் கேட்பதற்காக நீர் தாழ்க்க வேண்டா என்பது குறிப்பு; "பாதமே மனம் பாவித்தேன்" "நான் மறக்கினுஞ் சொல்லுநா நமச்சிவாயவே" முதலியவை காண்க; மூத்தர்யுலதுக் கெல்லாம் முன்னே தோன்றியதனால் முதுகுன்ற மெனப்படும் பொருள் குறித்தது; கூத்தா - 3288ன் கீழ் உரைத்தவை பார்க்க; கோடியேன் - முன் எல்லாப் பாட்டுக்களிலும் அடியேன் என்ற நம்பிகள் ஈண்டுக் கோடியேன் என்றது அடியேனாயின் முன்னரே வரப் பெற்றிருப்பேன்; அடியேனாதலன்றி, நான் கொடியேனாதலின் இதுவரை பெற்றிலேன் என்பது குறிப்பு. இப்பாட்டிற் பொன்வரப் பெற்றனர் என்பது ஆசிரியர் (3288 - 3289) காட்டக் கண்டுகொள்க;—(10) முறையால்... வணங்கும் - 6 - 8 - 9 பார்க்க; முறையாவது அவ்வவர்க் கேற்ற வான்முறை. மறையார் - மறையவர்; தூரிசில் - மேம்பட்டவர்; இறையார் - இறை - மேன்மை; இறை - "(அருளாய்" என்று செய்த) விண்ணப்பம் என்றலுமாம்.

தலவிசேடம் :—திருமுதுகுன்றம் - முன் III - பக்கம் உகஎ - பார்க்க.

3290. ஞாலம்வியப் பெய்தவரு நற்கனக மிடையெடுத்து
மூலமெனக் கோடுபோந்த வாணியின்முன் னுரைப்பிக்க,
நீலமிடற் றவாருளா லுரைதாழப், பின்னுநெடு
மாலயனுக் கரியகழல் வழுத்தினார் வன்றொண்டர். கஙஙக

(இ - ள்) ஞாலம்...எடுத்து - முன் கூறியபடி உலகத்தார்கள் எல்லாம் வியந்து அற்புதமடையும்படி வந்த நல்ல பொன்னில் இடையில் எடுத்து; மூலமென...உரைப்பிக்க - மாற்றுக்கு மூலமாகத் தாம் மச்சம் எடுத்து வந்த மாற்றாணியோடு ஒப்பிடும்படி உரைத்துப் பார்க்க; நீலமிடற்றவர்...தாழ - திருநீலகண்டராகிய சிவபெருமானது திருவருளினாலே மாற்றுத் தாழ்ந்திருக்க; பின்னும்...வன்றொண்டர் - நெடுமாலுக்கும் பிரமனுக்கும் அரிய திருவடிகளை வன்றொண்டராகிய நம்பிகள் பின்னரும் துதித்தனர்.

(வி - ரை) ஞாலம் வியப் பெய்திய செயல் முன் பாட்டிற் கூறினார்.

நற்கனகம் - இறைவர்பாற் பெறுதலானும் அடியார்களுக்குப் பயன்படுதலானும் நற்கனகம் என்றார்; ஏனையோர்பால் எல்லாம், கனகம் மாயாகாரியப் பண்ட

மாய் மயக்கத்துக்கும் பிறவிக்கும் ஏதுவாய் நிற்கும்; ஆளுடைய அரசுகள் திருப்புகலூரில் திருமுற்றத்தில் திருவருளால் வந்த செம்பொன்னு நவமணியும் ஆகியவற்றையெல்லாம் கையாலும் தீண்டாது திரு உழவாரத்தினில் ஏந்திப் பூங்கமல வாவியினிற் புக எறிந்தருளிய வரலாறு இங்கு நினைவு கூர்தற்பாலது; ஆனால் அங்கு அரசுகளது நன்னிலைமையினை உலகுக்குக் காட்டுவாராகி இறைவர் அவ்வாறு உழவாரம் நுழைந்த விடமெல்லாம் பொன்னும் மணியும் வர அருள் செய்தார்; அத்திருவருள் வழியே அரசுகளது நன்னிலையாகிய உண்மை நிலை காட்டப் பட்டு உலகமறிந்து உய்திபெற்றது; ஈண்டும் திருப்பங்குனி உத்திரத் திருநாளின் அடியார் பொருட்டு நம்பிகள் வேண்ட இறைவர் அருளிய பொன், ஆற்றிலிட்டுக் குளத்தில் எடுக்கப் பெற்று உலகமறிந்து உய்தி பெற்றது; முன்னரும் "நன்னிதியம்" (3281) என்றமை காண்க.

இடை எடுத்து - பொன்னில் இடையே எடுத்து; நிறுத்து எடுத்து என்பர் முன் உரைகாரர்.

மூலம் எனக் கோடுபோந்த ஆணி - உரைத்துப் பார்த்து மாற்றறியும்படி வெட்டிக்கொண்ட உரையாணி. மூலம்; இதனைக் கொண்டு மீதப் பொன்னை மாற்று அளவு காண்பதால் இது மூலம் எனப்பட்டது; ஆணி - உரையாணி - "தொண்டர்க் காணி" (1896); "தொண்டராணிப் பொன்" (அரசு. தேவா); ஆணி எனக் கோடுபோந்தமை - "மச்சம் வெட்டிக் கைக்கொண்டு" (3263) என்ற விடத்துக் காண்க.

ஆணியின்முன் உரைப்பிக்க - வந்த பொன்னிடை எடுத்து ஆணியினையும் அதனையும் உறைகல்லில் தனித்தனி உறைப்பித்து ஒப்புப் பார்க்க; இது பொன்னினை உயர்வு தாழ்வு காணும் முறை.

அருளால் உரைதாழ - திருவருளாற் பெற்ற பொருள் திருவருளால் ஆற்றில் இட்டுக் குளத்திற் பெறும்போது அவ்வாறே தரப்படும் என்று கொள்ளாது தாம் உரை பார்க்க மச்சம் வெட்டிக் கைக்கொண்டமையாலே உரைதாழச் செய்தருளினர் இறைவர்; "இத்தந் திரத்திற் காண்டுமென் றிருந்தோர்க், கத்தந் திரத்தி னவ்வயி னொளித்தும்" ... "அருந்தவர் காட்சியுட் டிருந்த வொளித்தும்" ... "பற்றுமின் னென்றவர் பற்று முற்றொளித்துந், தன்னே ரில்லோன் றானே யான தன்மை" (திருவா - அண்டப்பகுதி. 130 - 145); இனித், திருவிளையாட்டினின்று பொன் றரத் தாழ்த்தமை போலவே நம்பிகள் பாட்டுவந்து ஈண்டும் உரைதாழ அருளினர் என்றலுமாம்; "அடங்காத ஆதரவான், மகவுமகிழ்ந் துவப்பார்கள் வன்மைபுரி செயலினல், இகழ்வனவே செய்தாலு மிளம்புதல்வர்க் கின்பமே, நிகழுமது போல்" (சாக். நாய - புரா - 10) என்னும் கருத்து ஈண்டு வைத்துக் காணற்பாலது; "பாட்டுவந்து" (3285 - 3291).

பின்னும் வழுத்தினர் - என்று கூட்டுக; வரப் பொன்பெற முன்னர் வழுத்தியது போலவே, மாற்றுயர்ந்துவரப் பின்னரும் வழுத்தினர் என்று உம்மை இறந்தது தழுவிய எச்சவும்மை; "மீட்டும்" (3291) வழுத்திய பதிகம் கிடைத்திலது!

மாலயனுக்கரிய பிரான்-திருவருட் செயல் அறியவரியது என்பதுகுறிப்பு. 136

3291\. மீட்டுமவர் பரவுதலு மெய்யன்ப ரன்பில்வரும்
பாட்டுவந்து கூத்துவந்தார் படிவாசி முடிவெய்தும்
ஓட்டறுசெம் பொன்னொக்க ஒருமாவுங் குறையாமற்
காட்டுதலு மகிழ்ந்தெடுத்துக் கொண்டுகரை யேறினார். கஙஎ

(இ - ள்) மீட்டும் அவர் பரவுதலும் - மீண்டும் நம்பிகள் அதுபற்றித் துதித்த லும்; மெய் அன்பர்...காட்டுதலும் - மெய் அன்பராகிய அவரது அன்பினில் ஊற் றெடுத்து வருகின்ற பாட்டினை மகிழ்ந்து கூத்துவந்த பெருமானார் உண்டாகிய குறைவு நீங்கிய மாற்றுயர்ந்த செம்பொன்னை ஒரு மாப்பொன் தன்மையும் குறையா மல் காட்டுதலும்; மகிழ்ந்தெடுத்துக் கொண்டு கரை ஏறினார் - மகிழ்ச்சியுடன் கைக் கொண்டு குளத்தின் கரையினை ஏறியருளினார்.

(வி - ரை) மீட்டும் அவர் பரவுதலும் - பின்னும் "வழுத்தினார்" என்றபடி மேலும் பரவியவுடனே.

மெய் அன்பர் - "மெய்யுணர்ந்தார்" (3282) என்றவிடத் துரைத்தவை பார்க்க; மெய் - இயற்கை யடைமொழி.

அன்பில் வரும் பாட்டு - அன்பே காரணமாக ஊறி வெளிவரும் பாட்டு.

பாட்டுவந்து கூத்துவந்தார் - பாட்டுக் கேட்கும் காரணமாக ஓர் திருவிளை யாட்டினை மேற்கொள்பவர். உவந்து - உவத்தலினால்; "பாட் டுவந்த திருவிளை யாட்டினினின்று" (3285) என்று முன்னர்ப் பொன் வருவியா தொழிந்த நிலையிற் கூறியதும் காண்க; "கூத்தா" என்ற பதிகமும், அது குறித்தே முன்னரும் (3288) கூறியதும் காண்க.

படுவாசி - உளதாக்கிய மாற்றுக் குறைவு; வாசி - குறைவு என்ற பொருளில் வந்தது; "வாசி தீரவே" (தேவா).

வாசி துறைவெய்தும் - மாற்றுக் குறைவு நீங்கிய.

ஒட்டுஅறு - ஓட்டு என்பது எதுகை நோக்கி ஒட்டு என நின்றது; ஒட்டு - ஒப்பு.

ஒருமாவும் குறையாமல் - மா - மிகச் சிறிய அளவு. ஒன்றில் இருபதில் ஒரு பங்கு 1/20 கொண்ட அளவு என்பர்.

காட்டுதலும் - எனவே முன்னர் உரைதாழ் நின்றது அவ்வாறு காட்டிய அளவேயன்றிப் பொன்னின் தன்மையிற் குறைவின்று என்றபடி. இறைவர் உண் ணின்று காட்டிய அளவே உயிர் காணவல்லது என்பது ஞான நூன்முடிபு.

எடுத்துக்கொண்டு கரை ஏறினார் - அதுவரை குளத்தின் வடகீழ்பாற் படித் துறையில் நீரினுள் நின்றிருந்த நம்பிகள் கரை ஏறினார் என்பதாம். இந்த இடத் தில் இப்போது "மாற்றுரைத்த பிள்ளையார்" கோயில் விளங்குகின்றது.

கரைஏறினார் - நம்பிகள் கரை ஏறியவதனால் உலகம் உண்மை அருள் நெறியினை உணர்ந்து கரையேறிற்று; ஆதலின் ஏறினார் என்பது ஏற்றினார் எனப் பிறவினைப் பொருள் கொள்ளவும் நின்றது.

பாட்டுத் தந்த கூத்தனார்—என்பதும் பாடம். 137

3292 கரையேறிப் பரவையா ருடன்கனக மானதெலாம்
நிரையாளிற் சுமையேற்றி நெடுநிலைமா ளிகைபோக்கித்
திரையேறும் புனற்சடிலத் திருமூலட் டானத்தார்
விரையேறு மலர்ப்பாதந் தொழுதணைந்தார் வீதியினில். கஙஅ

(இ - ள்) கரையேறி - கரையினில் ஏறிப்போந்து; பரவையாருடன்... போக்கி - பொன்னெல்லாம் வரிசைப்பட ஆள்களின்மேற் சுமையாக ஏற்றுவித்துப் பரவையம்மையாருடனே நீண்ட நிலையினையுடைய திருமாளிகையிற் செல்லவிடுத்து; திரையேறும்...தொழுது - அலை வீசும் கங்கையைத் தாங்கிய சடையினையுடைய திருமூலட்டானேசுவரரது மணமுடைய மலர் போன்ற திருவடிகளைச் சென்று

தொழுது (அதன்பின்); வீதியினில் அணைந்தார் - (நம்பிகள்) திருவீதியில் எழுந்தருளி வந்தனர்.

(வி - ரை) கனகமான தெல்லாம் - சுமை ஏற்றிப் பரவையாருடன் - மாளிகை போக்கி என்க.

நிரை ஆளிற் சுமையேற்றி - 12000 பொன் பெரும்பார மாதலின் ஒருவராற் சுமக்கலாற்றாது ஆளிற் சுமை ஏற்றல் வேண்டப்பட்டது. நிரை - ஒழுங்குபட; சுமையின் ஒழுங்கு; பல ஆட்களின் மேல் என்ற குறிப்புமாம்; சுமை - பாரம்.

கனகமானதெல்லாம் சுமை ஏற்றி மாளிகை போக்கிப் பரவையாருடன் தொழுது என்று கூட்டி உரைத்தலுமாம். பொன்னைத் திருமாளிகையிற் சேர்த்தலுக்கு பணி ஆட்களே போதும் என்பது; என்னை? "செம்பொன் இட்டிகைகள் ஆள்மேனெருங்கி யணியாரூர் பரவையார்தம் மாளிகையிற்புகத் தாமும்...பெருமானூர் தம்மை வணங்கி யுவந்தணைந்தார்" (3208) என்ற வரலாறு போலக் காண்க.

திருமுலட்டானத்தார் - பாதம் தொழுது - "புராதனரைப் புக்கிறைஞ்சி" (3283)ப் போந்து அருள் வழியே பொன்வாப் பெற்றாராதலின், மீண்டு திரும்பும் போதும் அவரைத் தொழுது திருமாளிகையிற் சேர்தல் மரபு. இவை, எல்லாம் இறைவர் செயலேயாய்க் காணும் பெரியோர் செய்கை.

வீதி-இறைவர் கோயிலின்புறம் உள்ள வீதி; பரவையாரது திருமாளிகைக்குச் செல்லும் வழி பூங்கோயிலின் தெற்குத் திருவாயிலின் புறத்துத் தெற்கு நோக்கிச் செல்லும் திருவீதியில் உள்ளது.

நிரையேயாளிற் சுமத்தி—என்பதும் பாடம். 138

3293. வந்துதிரு மாளிகையி னுட்புகுந்து மங்கலவாழ்த்
தந்தமிலா வகையேத்து மளவிறந்தா ரொலிசிறப்பச்
சிந்தைநிறை மகிழ்ச்சியுடன் சேயிழையா ருடனமர்ந்தார்
கந்தமலி மலர்ச்சோலை நாவலர்தங் காவலனார். கங்கூ

(இ - ள்) வந்து...புகுந்து - வந்து பரவையம்மையாரது திருமாளிகையினுள்ளே புகுந்து; மங்கல வாழ்த்து...சிறப்ப - அளவற்ற பேர்கள் எல்லையற்ற வகையால் ஏத்துகின்ற மங்கல வாழ்த்தின் ஒலி சிறந்து ஏங்க; கந்தமலி...காவலனார்-மணம் பொருந்திய மலர்கள் நிறைந்த சோலைகள் சூழ்ந்த திருநாவலூரவர்களின் காவலராகிய நம்பிகள்; சிந்தை நிறை...அமர்ந்தார் - மனநிறைவாகிய மகிழ்ச்சியோடும் பரவையாருடனே விரும்பி எழுந்தருளி யிருந்தனர்.

(வி - ரை) வந்து - முன் பாட்டிற் கூறியவாறு திருவீதியிலணைந்து வந்து.

அளவிறந்தார் அந்தமிலா வகை ஏத்தும் மங்கலவாழ்த்து ஒலி சிறப்ப - என்று கூட்டுக.

சேயிழையார் - பரவையம்மையார்.

நாவலர் - நாவலூரார் என்றது நாவலர் என நின்றது.

காவலனார் - தலைவர். 139

3294. அணியாரூர் மணிப்புற்றி னமர்ந்தருளும் பரம்பொருளைப்
பணிவாரங் கொருநாளிற் பாராட்டுந் திருப்பதிகந்
தணியாத வானந்தந் தலைசிறப்பத் தொண்டருடன்
பணிவாய்ப்பே ரருள்வினவித் தொழுதாடிப் பாடுவார், கச0

3295. பண்ணிறையும் வகை“ பாறு தாங்கி ”யென வெடுத்தருளி
உண்ணிறையு மனக்களிப்பா லுறுபுளக மயிர்முகிழ்ப்பக்
கண்ணிறையும் புனல்மொழியக் கரையிகந்த வானந்தம்
எண்ணிறந்த படிதோன்ற வேத்திமகிழ்ந் தின்புற்றார். கசுக

3294. (இ-ள்) அணியாரூர்...ஒருநாளில் - அழகு பொருந்திய திருவாரூரில் மணிப்புற்றினிடமாக விரும்பி எழுந்தருளிய பெருமானை நியதமாகப் பணிவாராகிய நம்பிகள் அங்கு ஒரு நாளில்; பாராட்டும்...தலைசிறப்ப - இறைவரைப் போற்றுகின்ற திருப்பதிகத்தின்கண் தணிதலில்லாத ஆனந்தம் மேலிட; தொண்டருடன்...பாடுவார் - திருத்தொண்டர்களுடனே துணிவுபடப் பொருளின் திறங்களைத் தனித்தனி வினவுகின்ற வகையாலே தொழுதும் ஆடியும் பாடுவாராகி (நம்பிகள்), கசுo

3295. (இ-ள்) பண்ணிறையும்...எடுத்தருளி - பண்ணின் இசை நிறைவு கொள்ளும் வகையாலே “பாறுதாங்கி” என்று தொடங்கியருளி; உண்ணிறையும்... தோன்ற - மனத்தின் உள்ளே நிறைகின்ற மகிழ்ச்சியினாலே திருமேனியில் மயிர்ப் புளகாங்கிதம் கொள்ளவும் கண்கள் நிறைய நீர்பொழியவும் எலலையில்லாத ஆனந்தம் எண்ணிறைந்தபடி தோன்றவும்; ஏத்தி மகிழ்ந்து இன்புற்றார் - துதித்து மகிழ்ந்து இன்பமடைந்தனர். கசுக

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3294. (வி-ரை) அணி ஆரூர் - “அணியாரூர் கோயிலாக் கொண்டநாளே” என்பது முதலாக வரும் திருத்தாண்டகங்கள் பார்க்க.

அமர்ந்து அருளும் - விரும்பி யிடங்கொண்டிருந்து உயிர்களுக்கு அருள்புரியும்.

பணிவார் - பாடுவார் - என்று கூட்டுக; பாடுவார் - ஏத்தி - இன்புற்றார் என வரும்பாட்டுடன் முடிக்க. பாராட்டும் - திருவருள் நிலைகளைப் பலவாறும் எடுத்துத் துதிக்கின்ற.

தணியாத...வினவி - இது பதிகக் கருத்தாகிய குறிப்பு; பலபடப் பாராட்டுதலும் பொருள் வினவுதலும் பதிகப் பாட்டுத்தோறும் கண்டுகொள்க.

தணியாத ஆனந்தம் தலைசிறப்ப - குறைவுபடாத சிவானந்தமாகிய பெருமகிழ்ச்சியின் அனுபவம் மேன்மேலும் சிறந்தோங்க; தலை சிறத்தல் - ஓங்குதல்.

தொண்டருடன் - பொருள் வினவி - தொண்டர்களுடன் கலந்து இறைவரது பெருமைகளை அறியார் போன்று வினவிப்பாடுதல் திருவருளிற்றிளைக்கும் வகைகளுட் சிறந்தது; “அன்பரொடுமரீஇ” என்பது (போதம் - 12 சூத்.) ஞான நூன் முடிபு.

இது சீவன்முத்தர்களது தன்மைகளுள் ஒன்றாகப் பேசப்படும். திருக்கண்டியூர் பிள்ளையார் பதிகமும், திருவாரூரில் முதன் முறை சாரும்போது மூவர் பதிகங்களும் பார்க்க. திருத்தொண்டின் சிறப்புடைய பதி திருவாரூர் என்பதும் குறிக்கொள்ளத் தக்கது; “பத்தர் காள்பணிந் தேத்தி னேன்பணி யீர்” என்ற பதிக அகச்சான்று காண்க.

துணிவாய பொருள் - முடிந்த முடிபாகிய பொருளாவது சிவனருள் வகையேயாம்; துணிவு - முடிந்த முடிபு.

துணிவாய பொருள் வினவி—என்பதும் பாடம், 140

3295. (வி - ரை) பண் நிறையும் வகை - பண் - பதிகப் பண்ணாகிய கொல்லிப் பண் ; பண் - இசைப் பொருமை உணர்த்திற் றென்றலுமாம்.

"பாறு தாங்கி' என - இது பதிகத் தொடக்கமாகிய முதற் குறிப்பு. பாறு - பேய்.

உண்ணிறையும்...தோன்ற - மயிர்ப்புளகமுண்டாதல் - கண்ணீர் பொழிதல் - ஆனந்தம் வெளித் தோன்றுதல் இவை உள்ளே நிறைந்த மனக்களிப்பினால் வரும் மெய்ப்பாடுகள். கரை இகந்த ஆனந்தம் உள் நிறைந்தபடி தோன்ற - மிக்கஆனந்தம் உள்ளே நிறைந்தபடியினை வெளித் தோற்றத்தால் கருதலளவையால் அறியும்படி வெளிப்பட ; எண் - எண்ணம்.

ஏத்தி - மகிழ்ந்து - இன்புற்றார் - ஏத்துதல் - வாக்கின் தொழில் ; மகிழ்தல் - மனத்தின் றொழில் ; இன்புறுதல் - உள்ளே நிறைந்து புறத்தில் நிகழும் மெய்ப்பாடுகளாலாகிய மெய்யின் றொழில் என மூன்று காரணங்களும் கொள்க. 141

திருவாரூர்

"நமக்கடிகளாகிய அடிகள்" என்ற பதிகம்.

திருச்சிற்றம்பலம் பண் - கொல்லி

பாறு தாங்கிய காட ரோபடு தலைய ரோமலைப் பாவையோர்
கூறு தாங்கிய குழக ரோகுழைக் காத ரோகுறுங் கோட்டிள
ஏறு தாங்கிய கொடிய ரோசுடு பொடிய ரோவிளங் கும்பிறை
ஆறு தாங்கிய சடைய ரோநமக் கடிக ளாகிய வடிகளே. (1)

படிசெய் நீர்மையிற் பத்தர் காள்பணிந் தேத்தி னேன்பணி மீரருள்
வடிவி லான்றிரு நாவ லூரன் வனப்ப கையப்பன் வன்றொண்டன்
செடிய னாகிலுந் தீயனாகிலுந் தம்மை யேமனஞ் சிந்திக்கும்
அடிய னூரனை யாள்வ ரோநமக் கடிக ளாகிய வடிகளே. (10)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—தொண்டருடன் துணிவாய பொருள் வினவித் திருஅருளினைப் பாராட்டி மகிழ்ந்தின்புற்றது. 3294 - 3295-ல் ஆசிரியர் காட்டியருளியபடி.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) பாறு - பேய் ; தாங்கிய - தங்கிய ; படுதலையர் - பிரமனது மண்டை ஓட்டினைப் பலிப்பாத்திரமாக ஏந்தியவர் ; இறந்த பிரம விட்டுணுக்களது தலைகளை மாலையாக உடையவர் என்றலுமாம். குறுங்கோட்டு இள ஏறு - குறுகிய கொம்பினையுடைய இள எருது ; சுடு பொடியர் - உலகம் சங்கரிக்கப்பட்டதனா லுளதாகும் நீறு ; பிறை ஆறு - பிறையும் (கங்கை) ஆறும் தாங்கிய சடை என்க ; நமக்கு அடிகளாகிய அடிகள் - மிகப் பெரியோர் ; நமக்கடிகளாகிய அடிகள் - நம்மைக் காப்பதே தொழிலாகக் கொண்டவராகிய நாம் பரவும் அடிகள். பதிக முழுதும் ஓகாரங்கள் எல்லாம் வினா ; ஆனந்த அநுபவ மிகுதியில் வரும் அறிவினாக்கள் ; "பணிந்தேத்தினேன்" (10) என்றபடி இவை "பாராட்டும்" வகைகள் (3294) ;—(2) இட்டிதாக - விரைவாக ; நமக்கு...ஏத்துவீர் - அவ்வவரும் மனங்கொண்டவாறு அன்பு செய்வீர்; பட்டி ஏறு - கூட்டத்தில் உள்ள ஏறு; பட்டி - அடங்காது தனிச் செல்லும் என்ற குறிப்பும் சிலேடை ; அட்டி ஆளவும் - படிறுடி ஆட்கொள்ளவும் ; கிற்பர் - வல்லவர் ;—(3) குன்றிபோல்வதோர் உருவர் - குன்றி -

குன்றிமணி ; ஒருபுறம் சிவப்பும் ஒருபுறம் கருமையும் (அம்மை - கரிய - பசிய ; அப்பர் - சிவப்பு) கொண்ட வடிவமாதலின் குன்றி போல்வது என்றார். குறிப்பாகி - சங்கார காரணனாகியவதனால் - முழுமுதல்வனாகிய தலைவர் தாமே என்ற குறிப்பு. "இன்றியே...உடையராயிலராவரோ-இலர் - பொருளில்லவர்ஐயமேற்பவர் ; இவர் இலாதல் உண்மையில் பொருளில்லாமை பற்றியோ அன்றி எல்லாமுடையராயும் இல்லவராகியோ ; பின் கூறியதே பொருள் என்றது வைப்பு முறையாற் பெற வைத்தார் ; " பரந்தலை கேழும் படைத்த பிரானை, யிரந்துணி யென்பர்க ளெற்றுக் கிரக்கும் " (திருமந்), அன்றியே - இலாதலன்றி ; மிகஅறவர் - எல்லா அறங்கட்கும் இடமாகுவர் ;—(4) சேயியர் - வெள்ளை நீற்றர் - விரோதவணி ; மானை மேவிய - மான் கண் போன்ற ; மேவிய - உவம உருபு ;—(5) கோணல் - வளைவுடைய ; கொடுகொட்டி...காலர் - கொடுகொட்டி - திரிபுரமெரித்த காலையில் சிவனாடிய கூத்து ; பதினோராடல்களுள் ஒன்று ; காலர் - ஆடும் காலினை உடையவர் ; நாணதாக - அரைச்சாத்தும் கயிறாக ; அரைநாண் ;—(6) சாபி - அம்பு - திரிபுரமெரித்த நாள் அம்பாக வந்த கருவியின் தன்மை குறித்ததுபோலும் ; மூடனேனுக்கு திருத் தொண்டர்களின் முன்னே தம்மைச் சிறியராயொழுகும் நிலை;—(7) நமரங்காள் - நம்மவர்களே ;—(8) நீடு வாழ்பதி - நிலைத்த இருப்பிடம் ; இலயம்பட ஆடுவார் - கூத்தின் பாகுபாடுகள் அனைத்தும் ஒன்றிக்கைபட ஆடுதல் ;—(9) நமண நந்தியும் - தருமசேனனும் - சமண குருமார் பெயர் மேற்கொள்ளும் வகை ; அவை நந்தி - வீரன் - சேனன் - என்ற முடிபுகள் கொள்ளும் வழக்கு ; (பிள் - ஆலவாய் - கொல்லி - 4, 6 பார்க்க.) குமண மா மலை - பெருமலை ; குமணம் - அழகில்லாத ; விகாரமாகிய ; குமணனது மாமலை என்பாருமுண்டு ; மலைக் குன்று - பெருமலையின் சாரலில் உள்ள சிறு குன்று - உருவுஉவமம் ; கூறைபோன்று இன்றியே - சமண குருமார் உடையின்றி நக்க உருவத்துடன் சரித்தல் குறிப்பு ; ஏமண...ஞோண மென்றோதி - சமணர் மந்திரங்களின் வகைக் குறிப்பு ; மூக்கினால் உச்சரிக்கும் மெல்லெழுத்துக்களா லாகியவை; "மூக்கினன் முரன் றோதி"(தேவா); யாரையுநாணிலாயார் பக்கமும் நாணமில்லாதொழுகும்; ஆளுடைய அரசுகள், பிள்ளையார் இவர்களது அருட் செயல்களால் முன்னரே பெரும்பான்மை அழிவுபட்டொழிந்த சமணம் முற்றும் அழியாது அதற்கு ஏறக்குறைய மூந்நூறாண்டுகளின் பின் நம்பிகளின் நாளினும் அங்கங்கும் சிறிது சிறிது தலைகாட்டிச் சைவத்தினைப் பழித்துத் திரிதந்ததென்பது சரித வரலாற்றானறியப்படும். அகச்சான்று ; இந்நாளினும் அத்தகைய சமணம் உளது என்பதும் கருதுக. சமணரால் பழிப்பு - புறச்சமயங்களுட் பெரும்பான்மை பற்றிச் சமணத்தைக் கூறினும் இனம் பற்றி ஏனைய புத்தம் முதலியன வேதாகமநிந்தகரையும் உடன் கொள்க ;—(10) படி செயி - நீர்மை - இதன்படி என்று உலகர் படியெடுத்து ஒழுகும் மேல் வரிச் சட்டமாகக் கொள்ளும்படி அன்பு செய்யும் தன்மை ; அருள் பணியீர் - என்க ; அருள் - அருளின் வண்ணங்கள் ; வடிவிலான் - உருவில்லவன்; சேடியன் - இழி செயல் செய்வோன்; தீயன் - தீமை செய்வோன் ; தம்மையே - அடிகளையே.

3296. இன்புற்றங் கமர்நாளி லீறிலரு மறைபரவும்
வன்புற்றி னரவணிந்த மன்னவனை யருள்பெற்றே
அன்புற்ற காதலுட னளவிறந்த பிறபதியும்
பொன்புற்கென் றிடவொளிருஞ் சடையாரைத் தொழப்போவார் ;

3297. பரிசனமு முடன்போதப் பாங்கமைந்த பதிகடொறுங்
கரியுரிவை புனைந்தார்தங் கழறொழுது மகிழ்ந்தேத்தித்
துரிசறுநற் பெருந்தொண்டர் நள்ளாறு தொழுவதற்குப்
புரிவுறுமெய்த் திருத்தொண்ட ரெதிர்கொள்ளப் புக்கணைந்தார்.

3296. (இ - ள்) இன்புற்று அங்கு அமர்நாளில் - இன்பம் பொருந்தி அங்கு விரும்பி எழுந்தருளியிருக்கும் நாட்களிலே ; ஈறில்...அருள் பெற்றே - அளவில்லாத அரிய வேதங்கள் துதித்தேத்துகின்ற வலிய புற்றின் அரவினை அணிந்த மன்னவனாரது திருவருள் விடைபெற்றே ; அன்புற்ற காதலுடன் - அன்பினுனிறைந்த பெரு விருப்பத்திேனாடும் ; அளவிறந்த...தொழப் போவார்-அளவில்லாத பிற பதிகளிலும் பொன்னொளியும் கரிது என்று சொல்லும்படி ஒளிமிக்கு விளங்கும் சடையினையுடைய இறைவரைத் தொழுவதற்குப் போவாராகி ; கசஉ

3297. (இ - ள்) பரிசனமும் உடன் போத - பணி செய்யும் பரிசனங்களும் தம்முடன் வர ; பாங்கமைந்த...மகிழ்ந்தேத்தி - பக்கத்தில் உள்ள பதிகளிலெங்கும் சென்று யானைத் தோலினைப் போர்த்த இறைவரது திருவடிகளைத் தொழுது மகிழ்ச்சியுடன் துதித்து ; துரிசறுநற் பெருந் தொண்டர் - குற்றந் தீர்க்கும் நல்ல பெரிய தொண்டராகிய நம்பிகள் ; நள்ளாறு...புக்கணைந்தார் - திருநள்ளாற்றினைத் தொழுவதற்கு நினைந்து சென்று சிவ சிந்தனை மறவாத உண்மைத் திருத்தொண்டர்கள் எதிர்கொள்ள அங்குப் புகுந்து அணைந்தருளினர். கசங

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டுரைக்கின்றன.

3296. (வி - ரை) ஈறில்அருமறை - "வேதங்கள் அநந்தம்" எனப்படும் ; அளவில்லாத சாகை, உபசாகைகளோடு கூடியன.

வன்புற்றின் அரவு அணிந்த மன்னவனார் - வலியபுற்றில் வாழும் அரவு என்பது அரவுகளின் இயல்பு குறித்தது ; இறைவர் பூணும் அரவுகள் புற்றில் வாழ்வன என்பதன்று ; அரவணிந்த வன்புற்றின் மன்னவனார் என்று மாற்றி புற்றிடங்கொண்டார் எனப் பொருள் கொள்ளுதலுமாம்.

அருள் பெற்றே-அருள் விடைபெற்றே. பிறபதியும்-போவார்-என்று கூட்டுக.

பொன்புற்கென்றிட ஒளிரும்சடை - புற்கென - ஒளி குறைந்து வறிதாகக் காட்ட ; சடை பொன்னினும் மிக்கு விளங்கும் என்பது. 142

3297. (வி - ரை) பரிசனமும் உடன்போத - பரிசனம் - பணி செய்யும் ஏவலாளர்கள் ; சுவாமிகளுடன் பரிசனங்கள் செல்வதனை முன் "புடையெங்கு மிடைகின்ற பரிசனமுந் துயில்கொள்ள" (230) என்ற விடத்துக் குறிப்பாலுணர்த்தினர் ஆசிரியர். இங்கு இவர்களை மீண்டும் எடுத்து விதந்து கூறவேண்டுவதென்னையோ ? எனின் உலக நிலையில் பரிசனங்கள் ஓரளவு பணி செய்து துணையாவதன்றி வேண்டிய அங்கங்கும் முற்றத் துணையாய் வருவதில்லை ; நம்பிகள்பால் முற்றவும் உள்ளும் புறம்பும் வழித்துணையாய் நின்று வேண்டிய இடத்தெல்லாம் துணை செய்து உதவுபவர் இறைவர் தாமேயாம் என்பதனை இனி வரும் வரலாற்றில் திருக்குருகாவூரில், பொதி சோறளித்தும், திருக்கச்சூ ராலக்கோயிலில் சோறிரந்து கொணர்ந்தளித்தும் அருளுமாற்றால் விளங்க வைக்கின்றார் இறைவர் என்பது குறிப்பால் அறிக. பரிசனமும் - உடனின்று உதவும் துணையாய் எண்ணப்படும் பரிசனமும் என்று உம்மை சிறப்பு.

பாங்கு அமைந்த பதிகள் - பாங்கு-பக்கம்; இவை முன்னர் உரைக்கப்பட்டன. திருவிளமர், திருப்பள்ளியின் முக்கூடல் முதலாயின என்பது கருதப்படும்.

துரிசறு நற் பெருந் தொண்டர் - திருவாரூர் நம்பிகள். துரிசு அறும் - வந்து அடைந்து வழிபடும் மக்களது துரிசுகள் அறுதற் கேதுவாகிய ; அறுவிக்கும்.

புரிவுறும் - இறைவரது பணிகளையும் அடியார் பணியினையுமே எப்போதும் நினைந்திருப்பவர்; புரிதல் - இடைவிடாது செய்தல் ; திருத்தொண்டர் - திருநள்ளாற்றில் உள்ள தொண்டர்கள் ; எதிர்கோள்ள - வந்து எதிர்கொள்ளச் சென்று.

புக்கு - திருநள்ளாற்றினுள்ளே புகுந்து. 143

3298. விண்டடவு கோபுரத்தைப் பணிந்துகர மேற்குவித்துக்
கொண்டுபுகுந் தண்ணலார் கோயிலினை வலஞ்செய்து
மண்டியபே ரன்பினொடு மன்னுதிரு நள்ளாறர்
புண்டரிகச் சேவடிக்கீழ்ப் பொருந்தநில மிசைப்பணிந்தார். கசச

(இ - ள்) விண்தடவு...புகுந்து - ஆகாயத்தை அளாவிய திருக்கோபுரத்தின் முன்பு நிலமுறப் பணிந்து எழுந்து கைகளை உச்சிமேற் குவித்துக்கொண்டு உள்ளே புகுந்து ; அண்ணலார்...வலஞ் செய்து - நம்பிகள் திருக்கோயிலினை வலமாக வந்து ; மண்டிய...பணிந்தார் - மிக்கெழுந்த பேரன்பினோடும் நிலை பெற்ற திருநள்ளாற்றிறைவரது தாமரை போன்ற அழகிய திருவடிகளிலே பொருந்தும்படி நிலமுற வீழ்ந்து வணங்கினார்.

(வி - ரை) விண் தடவுதல் - விண்ணின்மேல் மிக உயர்தல்.
அண்ணலார் - நம்பிகள் ; அண்ணலார் கோயில் என்று கூட்டி இறைவரது கோயில் என்றுரைப்பாரு முண்டு ;

மண்டிய - செறிந்து மிக்கு மேலெழுந்த.

நள்ளாறர் - "நள்ளாறனை அமுதை" என்பது பதிக ஆட்சி.

சேவடிக்கீழ்ப் பொருந்த நிலமிசைப் பணிந்தார் - அடி யென்பது நிலமுற உள்ள தென்பது ஏனையோர்க்கு ஒக்குமாயினும் இறைவர்பால் உபசார மாத்திரையாய் நிற்கும்; அவ்வுபசார வழக்கே பற்றி இவ்வாறு கூறினார். இறைவர் திருமுன்பு நிலமுற வீழ்ந்து பணிதல் தம்மை முழுதும் அவர் வசமாக்கும் நிலை காட்டுவதாம். 144

3299. அங்கணரைப் பணிந்தேத்தி யருளினாற் றொழுதுபோய்
மங்குலணி மணிமாடத் திருக்கடவூர் வந்தெய்தித்
திங்கள்வளர் முடியார்தந் திருமயா னமும் பணிந்து
பொங்குமிசைப் பதிக"மரு வார்கொன்றை" யெனப்போற்றி, கசரு

3300. திருவீரட் டானத்துத் தேவர்பிரான் சினக்கூற்றின்
பொருவீரந் தொலைத்தகழல் பணிந்து "பொடி யார்மேனி"
மருவீரத் தமிழ்மாலை புனைந்தேத்தி மலைவளைத்த
பெருவீரர் வலம்புரத்துப் பெருகார்வத் தொடுஞ்சென்றார். கசசு

3299. (இ - ள்) அங்கணரை...போய் - இறைவரை வணங்கித் துதித்துத் திருவருள் விடை பெற்றுத் தொழுது சென்று ; மங்குலணி...வந்தெய்தி - மேகங்கள் தவழும் அழகிய மாடங்கள் நிறைந்த திருக்கடவூரில் வந்து சேர்ந்து ; திங்கள்... பணிந்து - சந்திரன் வளர்தற்கிடமாகிய திருமுடியினை உடைய இறைவரது திருக்

கடவூர்த் திருமயானத்தினையும் வணங்கி ; பொங்கும்...போற்றி - மேன்மேல் பொங்கும் இசையினையுடைய திருப்பதிகத்தினை " மருவார் கொன்றை " என்று தொடங்கிப் போற்றி, கசரு

3300. (இ - ள்) திரு வீரட்டானத்து...பணிந்து - திருக்கடவூர்த் திருவீரட்டானத்திலே அமர்ந்தருளும் தேவதேவரது, கோபமுடைய கூற்றுவனுடைய பொருவீரத்தினைத் தொலைத்த திருவடியினைப் பணிந்து " பொடியார் மேனி " என்று தொடங்கும் அன்பு மிக்க தமிழ்மாலையினைப் புனைந்து துதித்து ; மலைவளைத்த...சென்றார் - பொன் மலையினை வில்லாக வளைத்த பெரு வீரராகிய சிவபெருமான் எழுந்தருளியுள்ள திருவலம்புரத்திலே பெருகிய ஆர்வத்தோடும் சென்றருளினர். கசசு

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3299. (வி - ரை) அங்கணர் - திருநள்ளாறர் ; அருளினால் - அருள்விடை பெற்று.

ஏத்தி - இப்பதிகம் இப்போது கிடைத்துள்ள பதிகத்தின் வேறு என்பது கருதப்படும்.

திருமயானமும் பணிந்து - உம்மை - திருக்கடவூரினைப் பணிந்ததன்றித் திருமயானத்தினையும் என இறந்தது தழுவிய எச்சவும்மை.

திருமயானம் - திருக்கடவூரும் திருமயானமும் ஒரே பதியின் இரு கூறுகளாக அமைந்து வழிபடப்படுவன ; " திருக்கடவூர் மயானம் " என்ற வழக்கும் காண்க. கடவூர் என்பது ஊர் ; பதி ; அதனுள் திருமயானம் ஒருதலம் ; வீரட்டம் ஒரு தலம். " கடவூர் மயானத்து " என்றும், " கடவூர்தனுள் வீரட்டத்து " என்றும், " கடவூரின் மறையோ ரேத்தும் மயானத்து " என்றும் வரும் பதிகம் பார்க்க.

பொங்கும் இசை - இசை வளரப் பயிலப்படும் தன்மை குறித்தது.

மருவார் கொன்றை - இது பதிகத் தொடக்கமாகிய முதற் குறிப்பு.

போற்றி - பணிந்து - ஏத்திச் - சென்றார் - என மேல்வரும் பாட்டுடன் முடிக்க.

3300. (வி - ரை) திருவீரட்டானம் - திருக்கடவூரில் கால சங்காரம் செய்த இறைவர் எழுந்தருளியுள்ள கோயில் ; " யமன் கடவூர்."

சினக்கூற்றின் பொரு வீரம் தொலைத்த கழல் - கூற்று - காலன் - இயமன் ; பொருவீரம் - பொருகின்ற வெற்றியுடைய வீரம் - ஆண்மை.

பொடியார் மேனி - பதிக முதற் குறிப்பும் தொடக்கமுமாம்.

மருவு ஈரம் தமிழ்மாலை - ஈரம் - குளிர்ச்சி ; ஈண்டு அன்பு குறித்தது ; " என்னமுதே எனக்கார்துணை நீயலதே " என்ற பதிக மகுடத்திற் போதரும் அன்பு நிறைந்த நிலைக் குறிப்பு.

மரு - வீரத் தமிழ்மாலை - என்று வீரம் பொருந்திய என்றலுமாம் ; வீரமாவது அன்பின் முதிர்ந்த விளைவு - " ஈர வன்பினர் யாதும் குறைவிலார், வீர மென்னால் விளம்பும் தகையதோ ?" (144) என்ற கருத்துக் காண்க.

மலைவளைத்த பெருவீரர் - வளையாத மலையை வளைத்த பெரு வீரமன்றி, அவ்வாறு வளைத்த வில்லின் சேவகம் செய்யாமலே சிரித்து வெற்றிகொண்ட பெரு வீரமும் குறித்தது ; வளைத்த - வளைத்த மட்டேயன்றிப் பயன்படுத்தாத என்ற குறிப்பும் காண்க.

இப்பதிகக் குறிப்பு ஒன்றும் ஈண்டு ஆசிரியர் காட்டியருளவில்லை. இப்பதிகத்திற் காணப்படும் "அடியேற் கெளிவந்த தூதனை" "செய்ததுரிசுகள் பொறுக்கும்" என்பவை இனிமேல் வரும் நிகழ்ச்சிகளைக் குறிப்பன; ஆதலின் இப்போது உள்ள "செம்பொன்மேனி" என்ற (தக்கேசிப் பண்) இப்பதிகம் பின்னர் வேறொரு சமயம் பாடியருளப்பட்டதென்பது கருதப்படும்; ஆயினும் அவ்வாறுள்ள வரலாறு ஆசிரியர் கூறியருளாமையானும், திருநள்ளாற்றுக்கு நம்பிகள் பதிகம் இஃதொன்றே கிடைத்துள்ளமையானும் இப்பதிகம் ஈண்டுத் தந்து குறிப்புகளும் தரப்படுவன. 146

திருநள்ளாறு

*திருச்சிற்றம்பலம்* பண் - தக்கேசி

*செம்பொன் மேனிவெண் ணீறணி வானைக் கரிய கண்டனை மாலயன் காணச்*
*சம்பு வைத்தழ லங்கையி னானைச் சாம வேதனைத் தன்னொப்பி லானைக்*
*கும்ப மாகரி யின்னுரி யானைக் கோவின் மேல்வருங் கோவினை நங்கள்*
*நம்ப னைநள் ளாறனை யமுதை நாயி னேன்மறந் தென்னினைக் கேனே.* (1)

*மறவ னையன்று பன்றிப்பின் சென்ற மாயனை நால்வர்க் காலின்கீ ழுரைத்த*
*அறவ னையம ரர்க்கரி யானை யமரர் சேனைக்கு நாயக னை* [தும்
துறவர் மங்கைதன் கேள்வனைப் பெற்ற கோனை நான்செய்த குற்றங்கள் பொறுக்
*நறைவி ரியுநள் ளாறனை யமுதை நாயி னேன்மறந் தென்னினைக் கேனே.* (7)

*மாதி னுக்குடம் பிடங்கொடுத் தானை மணியி னைப்பணி வார்வினை கெடுக்கும்*
*வேத னைவேத வேள்வியர் வணங்கும் விமல னையடி யேற்கெளி வந்த*
தூத னைத்தன்னைத் தோழமை யருளித் தொண்ட னேன்செய்த துரிசுகள் பொறுக்கும்
*நாத னைநள் ளாறனை யமுதை நாயி னேன்மறந் தென்னினைக் கேனே.* (8)

*செறிந்த சோலைகள் சூழ்ந்தநள் ளாற்றெந் சிவனை நாவலூர்ச் சிங்கடி தந்தை* [டன்
" மறந்து நான்மற்று நினைப்பதே" தென்று வனப்ப கையப்ப னாரன்வன் றொண்
*சிறந்த மாலைகொ டைஞ்சினோ டைஞ்சுஞ் சிந்தை யுள்ளுரு கிச்செப்ப வல்லார்க்*
கிறந்து போக்கில்லை வரவில்லை யாகி யின்ப வெள்ளத்து ளிருப்பர்க ளினிதே. (10)

*திருச்சிற்றம்பலம்*

பதிகக் குறிப்பு :—*திருநள்ளாற் றிறைவரை நாயினேன் மறந்து என்னினைக்கேன். "மறந்து நான்மற்று நினைப்பதேது"* (பதிகம் 10)

**பதிகப் பாட்டுக் குறிப்பு** :—(1) செம்மை - வெண்மை - கருமை - *விரோத அணி; முரண்டொடையுமாம்.* கும்பமாகரி - கும்பம் போன்ற மத்தகத்தையுடைய பெரிய யானை; கோவின் மேல்வரும் கோ - கோ - பசு; எருது; கோ - தலைவர்;—(2) பரசுவார் - *துதிப்பவர்;* துரை...கோனை - கடலேழு; வரை ஏழு; உலகேழு; என்பது;—(3) பூவில் வாசம் - பூவில் மணம் போல எங்கும் *அத்துவிதமாகப் பரந்து கலந்திருப்பவன்;* புவியை...வெளி - ஐம்பூதங்கள்; காமரம்-சீகாமரப் பண்;—(4) நீங்ககில்லானை - *நீங்கமாட்டாதானை*;—(5) ஏழையேற்கெளி வந்த பிரானை - *நம்பிகள் சரித அகச்சான்று;* மேல் 8-வது பாட்டுப் பார்க்க;—(6) காமகோபன் - *காமனைச் சினந்து எரித்தவன்.* இவ்வரிய சொற்றொடரின் *தமிழ்ச்சுவை அநுபவிக்கத் தக்கது;* சொற்பதப் பொருள்...சோதியை - சொற்பதம் - சொல்லா

யும் அதன் காரணமாயும் உள்ள உரைகள் ; சத்தப் பிரபஞ்சம் என்பர் ; பொருள் - உரையால் குதலப்படும் பொருட் பிரபஞ்சம் ; " உரையின் வரையும் பொருளி னளவும் இருவகைப் பட்ட எல்லை " (பட்டினத்து அடிகளார் - கோயி னான்மணி மாலை) ; இருள் அறுத்தலாவது இவை மயக்கங்களை உணர்த்தாது உண்மைஞான முணர்த்தும்படி காட்டுதல் ; வெண்ணெய்நல்லூரில்...ஆளது கொண்டநற்பதம் - நம்பிகளைத் தடுத்தாட் கொண்ட சரிதவரலாற்றின் அகச்சான்று ; நற்பதம் - திருவடி; பதம் - சொல் என்று கொண்டு, " இவன் என் அடியான் " என்று சொன்ன நல்ல திருவாக்குடையவன் என்றலுமாம் ;—(7) மறவன் - வேடன் ; பன்றிப்பின் சென்ற - அருச்சுனன் பொருட்டு வேடனாகிப் பன்றியைத் துரத்தி ஓடியவரலாறு ; நால்வர் - சனகாதி முனிவர்கள் ; அறவன் - அறமுரைத்தவன் ; அறம் உரைத்தவனை என்று விகுதி பிரித்துக் கூட்டுக. அமரர் - சேனைக்கு நாயகன் - முருகப் பெருமான் ; தேவசேனாபதி ; நான் செய்த குற்றங்கள் பொறுக்கும் - " துரிசுகள் " என மேற்பாட்டிற் கூறுவதும், " யான் செய்யுந் துரிசுகளுக் குடனாகி " (தேவா) என்பதும் காண்க ;—(8) உடம்பு - இடம் - உடம்பில் ஒரு இடம் என்றும், இடப் பாகம் என்றும் சிலேடை நயம்பட உரைக்க நின்றது ; வேதன் - வேதங்களைச் சொன்னவன், வேதங்களாற் சொல்லப்பட்டவன் என்றும், வேதிப்பவன் என்றும் உரைக்க நின்றது ; வேதித்தல் - வினைகெடுத்து உயிரைத் தன் மயமாக்குதல் ; அடியேற் கேளிவந்த தூதன் - பரவையார் ஊடல் தீர்க்கத் தூது சென்ற வரலாறு ; இது பின்னர் நிகழ்வது ; துரிசுகள் - குற்றங்கள் ; இப்பதிகம் பின்னர் அருளப் பட்டதாமென்று கொள்ள நின்ற ஆதாரவுகள் இவை ;—(9) நாமம் - இராவணன் (அழுபவன்) என்ற பெயர் ;—(10) " மறந்து...நான்மறந்து - நினைப்பதேது " என்று பதிகக் கருத்தும் குறிப்புமாம் ; சிந்தை வல்லார்க்குப் பதிகத்தினைப் பயிலும் முறை ; இறந்துபோக்கு - இறப்பு ; வரவு - பிறவி ; இன்ப வெள்ளம் - மீளா நெறியில் துய்க்கப்படும் சிவானந்தம்.

**தலவிசேடம் :—திருநள்ளாறு - III - பக்கம் சOஎ. பார்க்க.**

## திருக்கடவூர்த் திருமயானம்

*திருச்சிற்றம்பலம்* பண் - பழம்பஞ்சுரம்

மருவார் கொன்றை மதிசூடி மாணிக் கத்தின் மலைபோல
வருவார் விடைமேல் மாதோடு மகிழ்ந்து பூதப் படைசூழத்
திருமால் பிரம னிந்திரற்குந் தேவர் நாகர் தான வர்க்கும்
பெருமான் கடவூர் மயா னத்துப் பெரிய பெருமா னடிகளே. (1)

மாட மல்கு கடவூரின் மறையோ ரேத்து மயானத்துப்
பீடை தீர வடியாருக் கருளும் பெருமா னடிகள் சீர்
நாடி நாவ லாரூ ரனம்பி சொன்ன நற்றமிழ்கள்
பாடு மடியார் கேட்பார்மேற் பாவ மான பறையுமே. (10)

*திருச்சிற்றம்பலம்*

**பதிகக் குறிப்பு** :—அடியார்க்குப் பீடை தீர அருளுபவர் திருக்கடவூர் மயானத்துப் பெரிய பெருமானடிகளே, (பதிகம் - 10 பார்க்க.)

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) மரு - மணம்; வாசனை; விடைமேல் வரு வார் - பிள்ளையார் பதிகமும் பார்க்க; பெரிய பெருமானடிகள் - இப்பதியிற் சுவாமி பெயர்; பதிக மகுடம் இதுவே யாதல் காண்க;—(2) உமை ஓர் பாகம் பெண் - ஒரு பாகம் ஆண் என்று கூட்டுக;—(3) பல்லுயிர்க்கும் தாயும் தந்தையும் ஆய - என்க; பேய்கள் - சிவபூதங்களாகிய. நற்கணங்கள்;—(4) இறையராவர் எல் லார்க்கும் - சங்கார காரணராகிய முதல்வரே உலகிற்கு முழுமுதல்வர் என்ற ஞான நூல் முடிபு உணர்த்தியது. (போதம். 1. சூத்.); எல்லார்க்கும் - எல்லா உயிர் களுக்கும் தேவர்களுக்கும்; இல்லையென்னாது அருள்செய்வார் - "பின்னை என்னார் பெருமா னடிகளே" (தேவா)—(5) கொத்தார் கொன்றை - சரக்கொன்றை; மருப் பும் ஆமைத்தாலியார் - யானைக் கொம்பும் ஆமை ஓடும் அணிந்தவர்: தாலி - பூண் என்ற பொருளில் வந்தது;—(6) துணி வார் - துணித்து நீளமாக வளர்ந்து கிழிக்கப் பட்ட; துதைந்து - உடுத்து; பஞ்சவடி - மயிர்ப்பூணூல்; மாவிரதியர் என்னும் உட்சமயத்தார் அணிவது; மானக்கஞ்சாற நாயனர் புராணம் பார்க்க; பணி மேலிட்ட பாசுபதர் - பாம்புகளைப் பூண்ட பாசுபத வேடத்தார்; பணி - பாம்பு; பாசுபதம் - உட்சமயங்களா றனுள் ஒன்று; பிணிவார் - பிணித்து நீண்ட; ஊர் தான்...ஆருர்-ஏழுலகும் தம்முடையனவாகவுடைய அவருக்கு ஊர் ஒற்றியூரும் ஆரூரு மாவன; ஒற்றியூர் - ஒற்றி வைத்த ஊர்; ஆரூர் - ஊரை உடையவர் இன்னாரென் றறிய வாராது யாருடைய ஊர் என்று வினவப்படும் குறிப்புடன் கூறியது காண்க; நம்பிகளது பிராட்டியர் இருவருள் ஒருவர் திருவாரூரிலும், மற்ற ஒரு வர் திருவொற்றியூரிலுமாக வந்த குறிப்பும் காண்க;—(8) இப்பாட்டு அம்மையா ருடன் வேடனாய் வந்து அருச்சுனனது தவநிலை கண்டு அவனுடன் போர் செய்து பாசுபதம் அளித்த வரலாறு குறித்தது; நாடாவண்ணம் செருச்செய்து - அவன் தம்மை அறிந்து கொள்ளாதவாறு போரிட்டு; ஆவநாழி - அம்பறாத் தூணி; இனம் பற்றிப் பாசுபதாத்திரமும் உடன் கொள்க;—(9) வேள்வி - தக்கன் வேள்வி; ஏழைத் தலைவர்-ஐயமேற்றுண்ணும் தன்மையராயினும் தலைவர்; பேழை- பெரிய— (10) பீடை தீர - துன்பம் நீங்க; பீடை - கோள்களின் கேட்டினாற் பீடிக்கப்படும் நிலை; பீடை...சீர் - பதிகக் கருத்தும் குறிப்புமாம்.

தலவிசேடம்:—திருக்கடவூர் மயானம்—காவிரித் தென்கரை - 48வது பதி; III சசகசு பக்கம் பார்க்க.

### திருக்கடவூர்

திருச்சிற்றம்பலம் பண் - நட்டராகம்

பொடியார் மேனியனே புரி நூலொரு பாற்பொருந்த
வடியார் மூவிலைவேல் வள ரங்கையி னங்கையொடுங்
கடியார் கொன்றையனே கட வூர்தனுள் வீரட்டத்தெம்
அடிகே ளென்னமுதே யெனக் கார்துணை நீயலதே. (1)

காரா ரும்பொழில்சூழ் கட வூர்த்திரு வீரட்டத்துள்
ஏரா ரும்மிறையைத் துணை யாவெழி லாவலர்கோன்
ஆரூ ரன்னடியா னடித்தொண்ட னுரைத்ததமிழ்
பாரோ ரேத்தவல்லார் பர லோகத் திருப்பாரே. (10)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—" என் அமுதே ! எனக் கார் துணை நீயலதே " என்ற பதிக மகுடம் காண்க ; " துணையா - உரைத்த " (பதிகம், 10)

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) பொடி - திருநீறு ; வேல் வளர் - வேலினை யுடைய ; அங்கையின் - கையினுடனே ; மங்கை - உமை அம்மை ; வளர் கங்கை யின் மங்கையோடும் - என்பதும் பாடம் ; அமுதே - கால சங்காரம் செய்து உயிர் தருதலின் அமுதம் போன்றவர் ; இங்குச் சுவாமி பெயர் (அமுத கடேசர்) கலயர் - என்பதும் குறிப்பு. ஆர் துணை நீயலதே - எதிர்மறையாற் கூறியது உறுதிப் பொருள் குறித்தது ; இறப்பு வாராமல் அதனால், பிறப்பும் வாராமற் காத்தலின் உயிர்களுக்கு உற்ற துணையாவார் இவ்விறைவரே என்பது;—(2) கறை - விடம் ;—(3) உயிர்-நடுநிலைத்தீபம்; காலனுயிர் கொன்றாய் ; மறையோனுக்குயிர் கொடுத்தாய் என முன்னும் பின்னுமாக இருவழியும் கூட்டுக;—(4) என் ஆராவமுதே-என்க; ஆரா- என்றும் நிறைவு பெறாத ;—(5) உயிருட் புகுந்தாயின்னம் போந்தறியாய் - புகுதல் - நீக்கமின்றி உயிர்க்குயிராய் உள்ளே நிறைதல் ; போந்தறியாய் - எங்கும் நிறைதலில் விட்டு அறியாதவர் என்றதாம் ;—(6) மண்...கால் - ஐம்பூதங்கள் ;—(7) எரியார் - தீப்போன்ற செம்மையுடைய ; இளநாகம் - " முற்ற லாமையிள நாகம்" (தேவா) நரியாரும் சுடலை - சுடலையின் இயற்கையடை ;—(8) வேறு உன் அடியேன் - " திருவின் மிக்கார் யாவரையும் வேறடிமை யாவுடைய" (183) ; தேறேன் - பொருளென்று மதியேன் - கொள்ளேன் ;—(9) கயம் - நீர் ; நீர் நிலை என்றலு மாம் ; அயனே - ஐயன் என்பது அயன் என நின்றது ;—(10) துணையா - துணை என்று போற்றி ; துணையா உரைத்த - என்று கூட்டுக ; துணையாக என்பது துணையா என நின்றது.

தலவிசேடம் :—திருக்கடவூர் - காவிரித் தென்கரை - 47வது பதி. III பக் கம் சகஎ பார்க்க.

3301\. வரையோடு நிகர்புரிசை வலம்புரத்தார் கழல்வணங்கி
உரையோசைப் பதிக " மெனக் கினி " யோதிப் போய்ச்சங்க
நிரையோடு துமித்தூப மணித்தீப நித்திலப்பூத்
திரையோதங் கொண்டிறைஞ்சுந் திருச்சாய்க்கா டெய்தினர். கசஎ

(இ - ள்) வரையோடு...கழல் வணங்கி - மலையோடொத்த மதிலையுடைய திரு வலம்புரத்தில் எழுந்தருளிய இறைவரது திருவடிகளை வணங்கி ; உரை...போய் - சொல்லும் பொருளும் ஒத்தியையும் " எனக்கினி " என்று தொடங்கும் திருப்பதி கத்தினைப் பாடியருளி மேற்சென்று ; சங்க நிரையோடு...கொண்டிறைஞ்சும் - சங்கு வரிசைகளாகிய வாத்தியங்களுடனே, அலைநுரைத்திவலைகளாகிய தூபத்தையும், நவமணிகளாகிய தீபத்தையும், முத்துக்களாகிய பூக்களையும், அலைகளாகிய கைகளினாற் கடல் ஏந்திக்கொண்டு வழிபாடு செய்தற்கிடமாகிய ; திருச்சாய்க்காடு எய்தினர் - திருச்சாய்க்காட்டினை அணைந்தனர்.

(வி - ரை) வரையோடு நிகர் - ஒடு - மூன்றனுருபு வரையை நிகர் என இரண்டனுருபாய் வந்தது.

உரை ஓசைப் பதிகம் - உரை - பொருள் ; ஓசை - சொல் ; சொல்லும் அதன் பொருளும் ஒத்தியைந்து நடக்கும் பதிகம். உரைக்கப்படும் பண்ணமைதி யாகிய ஓசையினை உடைய என்றலுமாம் ; இப்பொருளில் ஓசை பதிகப்பண்ணாகிய காந்தாரப் பண் குறித்தது.

பதிகம் "எனக்கினி" - ஓதி - எனக்கினி என்று தொடங்கும் பதிகம் பாடியருளி ; முதற் குறிப்பு.

போய் - அத்திருப்பதியினை அகன்று மேற் சென்று ;

சங்கநிரையோடு...கொண்டிறைஞ்சும் - சங்கநிரை - வாத்தியமாக ; இது வழிபாட்டு முறையில் வரும் ஒரு உபசார வகை ; தூபம், தீபம், பூ இவை இன்றியமையாத வேறு வகை ; இன்றியமையாத உபகரணங்களின் வகையாம். ஆதலின் முன்னதனை ஒடு உருபு தந்து வேறு பிரித்துக் கூறினார்.

துமித்தூபம் - அலைநீர்த் திவலைகள் தூபப் புகையாகவும், மணித்தீபம்- நவ - மணிகள் தீபங்களாகவும், நித்திலப்பூ - முத்துக்கள் வெண் மலர்களாகவும், திரை - இவற்றை ஏந்தும் கைகளாகவும், ஓதம் - வழிபடும் அன்பராகவும் உருவகப் படுத்தினார் ; இஃதேகதேசவுருவகம். சிவமயமாகிய தெய்வக்கண் கொண்டு காண்பார்க்கே இவ்வுருவக நிலை காணப்படும் ; 1905 - 1907 முதலியவை பார்க்க. ஓதம் - பூசைக்குரிய நீரும் குறித்தது. "வம்பு லாமலர் நீரால்வழிபட்டு...இறைஞ்சலின்" (57) என்று காவிரிக்குச் சொல்லியவை இங்கு நினைவு கூர்தற்பாலன. தற்குறிப்பேற்ற அணியும் உருவகமும் விரவி வந்தது.

ஓதம் தூப தீபம் பூக்கொண்டிறைஞ்சும் - திருச்சாய்க்காடு - இப்பதி கடற் கரையில் உள்ள நிலையும் உணர்த்தப்பட்டது. 147

### திருவலம்புரம்

திருச்சிற்றம்பலம் பண் - காந்தாரம்

எனக்கினித் தினைத்தனைப் புகலிட மறிந்தேன்
பனைக்கனிப் பழம்படும் பரவையின் கரைமேல்
எனக்கினி யவன்றமர்க் கினியவ னெழுமையும்
மனக்கினி யவன்றன திடம்வல புரமே. (1)

வருங்கல மும்பல பேணுதல் கருங்கடல்
இருங்குலப் பிறப்பர்த மிடம்வலம் புரத்தினை
அருங்குலத் தருந்தமி ழூரன்வன் றொண்டன்சொற்
பெருங்குலத் தவரொடு பிதற்றுதல் பெருமையே. (11)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு - "எழுமையும் எனக்கினியவன் றன திடம்வலம்புரமே" என்ற பதிக மகுடம் பார்க்க.

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) இனி எனக்குத் தினைத்தனைப் புகலிடம் - இது வரை எனக்குப் பற்றுக்கோடாகிய புகலிடம் காணாதிருந்த நான் ஒரு சிறிது பற்றுக் கோடு உள்ளதென்று ; தினைத்தனை - தினையின் அளவு ; "தினைத்தனையுள்ளது" (திருவா) தனை-அளவு ; பனைக்கனிப் பழம்-பனையின் கனிந்த பழம்; பரவை - கடல்; எழுமை - எழுவகைப் பிறப்பு ; மனக்கு - உயிருக்கு ; மனம்-உயிர்; "மனமணி யிலிங்கமாக" (தேவா) வலம்புரமேயிடம் என்க ; இடம் வலம்புரம் - சொல்லணி ; பனை - நெய்தற்கரு ;—(2) வளைந்த - பயன்படுத்தப் படாது வளைந்த மட்டில் அமைந்து புரம் எரிதர ; அரவுரியிரந்தவன் - பாம்பும் யானை உரியும் அணிந்து பிச்சை ஏற்பவன்? (3) நெருப்புமிழ் - தீப்போன்ற மூச்சுக்காற்று ; தீவிடம் என்றலுமாம் ; கூறணி கோடுமழு - துண்டப் படுத்தும் வளைந்த வடிவுடைய மழுவாயுதம் : அழல்வளர் -

தீயை ஒரு கையில் வளர்க்கின்ற ; —(4) கோங்குஅணை சுரும்புண நெருங்கிய - கோங்கு - தேன். வண்டுகள் தேன் உண்ணும்படி நெருங்கிய பாளைகளையுடைய ; புடைதர-மோத-ஒரு சொல்; புடைத்தல்-மோதுதல்; பக்கத்தில் தர - புடை - பக்கம் - என்றலுமாம். அலைகள் மோத ;—(5) கோடுமழுவிரதினன் - கொடிய மழுவினை ஏந்திய தொழில் உடையவர் ; கோடு - வளைந்த வடிவு என்றலுமாம் ; விரது - தொழிலுபாயம்; சிறுமையில் - சிறிய செயலினாலே; ஈண்டுச் சிரித்தே எரித்த செயல் குறித்தது ; நிரவ்வல்லவன்-அழிக்க வல்லவன் ; வல்லமை - வேறெவர்க்கு மியலாத ஆண்மை; படுமணி...அடைகரை - மணிகளும் முத்தும் பவளமும் மணலுடன் கலந்து அடையும் கரையினையுடைய ; படுதல் - உண்டாதல் ;—(6) கடம் - மதம் ; கயல்... அணைகரை - கூட்டமாக நெருங்கிய நெடிய பனைகளுடன் அடம்புக் கொடி படர்ந்து பொருந்திய பக்கங்களில் கயல் மீன்கள் வலம்புரி சலஞ்சலம் என்ற சங்குகளோடு கூடி வாரிக்கொண்டு பெரிய கடல் அணைகின்ற கரையினையுடைய; கயல் - வலம்புரி சலஞ்சல மணம் புணர்ந்து என்று கூட்டுக ; மருங்கொடு - மருங்கின் கண் - ஒடு - ஏழனுருபுப் பொருளில் வந்தது ; கடவுளிடம் கரையிடத்தையுடைய வலம் புரம் என்று கூட்டுக ;—(7) வரி - இசைப்பாட்டு ; புரி - சூழ்ந்து ; ஆலாபனம் என்பர் ; நரிபுரி - புரிதல் - வாழ்தல், நாடியடைதல் ; புரிசுரிவரி - புரி - பின்னிய; சுரிவரி - சுழல் வண்டு ; எரிஎரி - உலகம் எரிகின்ற தீ ; சங்கார காலத்தின் வரும் தீ-ஊழித் தீ ;—(8) பாறு - பேய் - பாறணிமுடைதலை - பேய்கள் கொண்டு விளையாடும் முடைநாற்ற முடைய மண்டை ஓடு; கலன் - அணிகலம்; மாறணி வேலுடை ஒன்றற்கொன்று மலைத்து அழகு பொருந்த வரும் அலைகளையுடைய இடமும், வயலும் அழகிய பொழிலும் வெவ்வேறாகப் பொருந்த உடைய ; அது-பகுதிப்பொருள் விகுதி ; நெய்தலும் மருதமும் மயங்கிய திணை மயக்கம் குறித்தது ;—(9) சட சட விடுபேனை - சல சல என்ற சத்தமுடைய பனந்தோப்பு ; இடவகை பட - இடத்திற் பொருந்த ; பாப்பாக ; வடகம் - மேலாடை ; வடகத்தோடு பலிகலந் துலவிய - என்பது இறைவர் பிட்சாடனராகப் பலிக்கு வந்தபோது பலியிட வந்த தாருக வனத்து இருடி பன்னியர் மால்கொண்டு மேலாடை நழுவநின்ற நிலை குறித்தது ; வடகத்தோடு பலி கலந்துலவிய-இடவந்த பலியுடனே மேலாடையினையும் கலந்து வீழ்த்து உலாவும் ; கடை கடை - முன் கடைதோறும் ; இடிகரை - அலைகளால் இடிக்கப்பெற மணற்கரை;—(10)இப்பாட்டின் கருத்து விளங்கவில்லை;—(11)வரும் கலம் - கடலில் வரும் மரக்கலம் ; மணிகள் என்றலுமாம் ; கருங்கடலிறங்குறப் பிறப்பர்- கடல் வாழ்நர் ; நெய்தனில மக்கள் ; பெருந்தலம் - சிவனடியார் கணம்.

தலவிசேடம் :—திருவலம்புரம்—காவிரித் தென்கரை 44-வது பதி ; IV பக்கம் கசஎ பார்க்க.

3302\. தேவர்பெரு மான்றன்னைத் திருச்சாய்க்காட் டினிற்பணிந்து
பாவலர்செந் தமிழ்மாலைத் திருப்பதிகம் பாடிப்போய்
மேவலர்தம் புரமெரித்தார் வெண்காடு பணிந்தேத்தி
நாவலர்கா வலரடைந்தார் நனிபள்ளித் திருநகரில். கசஅ

(இ - ள்.) தேவர் பெருமான் தன்னை...பாடிப்போய் - தேவர்களுடைய பெருமானைத் திருச்சாய்க்காட்டினிலே வணங்கிப் பாக்களின் தன்மை விளங்கும்செந்தமிழ் மாலையாகிய திருப்பதிகத்தினைப் பாடியருளி மேற்சென்று ; மேவலர்தம்...ஏத்தி - பகைவர்களது திரிபுரங்களையும் எரித்த இறைவரது திருவெண் காட்டினை வணங்கித்

துதித்து அதன் பின்பு ; நாவலர் காவலர்...திருநகரில் - நாவலர் பெருமானாகிய நம்பிகள் சென்று திருநனிபள்ளித் திருநகரத்தினை அடைந்தருளினார்கள்.

(வி - ரை) பாவலர் செந்தமிழ் மாலைத் திருப்பதிகம் - பா - அலர் - பா - பாட்டின் தன்மைகள் ; அலர் - விளங்கும் ; இஃது இத்திருப்பதிகத்தின் தன்மை குறித்தது. இத்திருப்பதிகம் இப்போது கிடைத்திலது !

மேவலர் - பகைவர் ; முப்புரவாணர்களாகிய அரக்கர்.

பணிந்தேத்தி - " படங்கொணாகம் " என்ற திருப்பதிகம் போற்றிசைத்து.

நாவலர் காவலர் - தமிழ் நாவலர் பெருமான் ; திருநாவலூரார் தலைவர் என்றலுமாம். 148

திருச்சாய்க்காடு - நம்பிகள் பதிகள் கிடைத்திலது ! தலசேடம்-காவிரி வடகரை 9-வது பதி ; IV பக்கம் ௫௦ பார்க்க.

திருவெண்காடு

திருச்சிற்றம்பலம் பண் - இந்தளம்

படங்கொ ணாகஞ் சென்னி சேர்த்துப் பாய்பு லித்தோ லரையில் வீக்கி
அடங்க லாரூ ரெரியச் சீறி யன்று மூவர்க் கருள்பு ரிந்தீர்
மடங்க லானைச் செற்று கந்தீர் மனைக டோறுந் தலைகை யேந்தி
விடங்க ராகித் திரிவ தென்னே வேலை சூழ்வெண் காட னீரே. (1)

விரித்த வேத மோத வல்லார் வேலை சூழ்வெண் காடு மேய
விருத்த னாய வேதன் றன்னை விரிபொ ழிற்றிரு நாவ லூரன்
அருத்தி யாலா ரூரன் றொண்ட னடியன் கேட்ட மாலை பத்துந்
தெரித்த வண்ண மொழிய வல்லார் செம்மை யாளர் வானு ளாரே. (10)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—வேலை சூழ் வெண்காடனீரே ! தலை கையேந்தி விடங்கராகித் திரிவதென்னே ? விழித்துகந்த வெற்றி யென்னே ? என்பன முதலியனவாக இறைவரது அருட் செயல்களை வினாவும் வகையாற் பாவியது. " அடியன் கேட்ட மாலை."

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) அடங்கலார் - பகைவர் ; மூவர் - முப்புரங்களின் அரக்கர்களுள் அன்பர் மூவர் ; மடங்கலான் - நரசிங்கம் ; விடங்கர் - அழகிய நக்க உருவம் ; தாமாகவே மேற்கொண்ட தென்பதும் குறிப்பு ;—(2) முன்னை வேடம் இழித்துகந்தீர் - சிவனும் சத்தியுமாய் முன்கொண்டவேடத்தை மாற்றினீர் ; இமையவர்க்கும்...உகந்தீர் - மோனநிலை மேற்கொண்டீர் ; உயர் தவம் - கல்லாலின் கீழ் அமர்ந்த குரு மூர்த்த வேடம் ; தாதை காண அழிந்துகந்த - தாதை - விட்டுணு ; வெற்றி- காத்தற் கடவுளான விட்டுணுவும் காக்க மாட்டாமையால் தாமே முழுமுதல்வர் என்றறிவித்தமை ;—(3) பாரிடம் - பூதகணம் ; பாரிடம் உம் - பாதம் போற்ற என்க ; பாரிடமும் போற்ற என்றலுமாம். உம்மையன்றே - வாய் திறவாமல் வாளா இருத்தலின் உம்மைத் தானே வினவுகின்றேன் என்று அவரது கவனத்தைப்பெறக் குறித்தழைக்கும் மொழி; கரணம்-படிறு செய்யும் கோலம்.—(4) பண்ணுளிராயிப் பாட்டு மானீர் - " பாட்டிற் பண்ணும் " (தேவா) " இன்னிசை வீணையி லிசைந்தோன் காண்க, அன்னதொன் றவ்வயி னறிந்தோன் காண்க"(திருவா); "அறிவானுந் தானே அறிவிப்பான் றானே, அறிவா யறிகின்றான்

றுனே " (அம்மையார் - அற் - அந்) ; பாட்டினிற் பண் உள்ளது ; பண்ணினுள்ள வர் பாட்டிலும் உள்ளவர் இறைவர் ; அத்துவிதக் கலப்பு உணர்த்தியபடி ; " அவையே யாய் " நிற்கும் நிலை ; கண்ணுளீராய் - உள்ளே விரவியிருப்பவராக ; காணும் வண்ணம் மண்ணுணீராய் - உலகில் வெளிப்படக் காணும்படி ; மதியம் வைத்தீர் - பிறையினைக்காணும் தோறும் அதுகொண்டு இறைவரையும் அங்கே காணும்படி பிறையினைக் காணவைத்தீர் ;—(5) குடம் - திருமஞ்சனக் குடம் ; வடம் அணிகலம் (6) மாறுபட்ட - பகைத்த ; கூறு - ஒரு பாகம் ; கொடி - கொடி போல்வாராகிய உமையம்மையார் ; வேறுபட்டு - வேற்றுக்கோலம் காட்டி ; (7) ஏழில் - இசை ; ஏழு சுரங்களை உடையது;—(8) குரவு - குராமலர் ; கோங்கை மாதர் கங்கை - மாதராகிய கங்கை ; பழிகள் - குற்றங்கள் ; முன் வந்தனவும் இனி வருவனவுமாகிய பழிச்சொற்கள்; " பட்ட வார்த்தை படநின்ற வார்த்தை வாராமே தவிரப் பணிப்பானை " (நம்பி - ஆரூர் - தக்கேசி - 2); " கட்டமும் பிணியும்...விட்ட வேட்கை வெந்நோய்" - என்பனவும் காண்க ;—(9) நிச்சயத்தால்...நினைப்புளார் - பிறழாத உறுதியாகிய பற்று ;—(10) வேலைசூழ் - கடற்கரையின் அணிமையில் உள்ள ; கேட்ட மாலை பத்தும் - என்னே ? என்று வினவாகக் கேட்டுப் பாவிய ; மாலை பத்து - ஒவ்வொரு பாட்டும் தனித்தனி மாலை எனப்படும் ; " பனுவல் " என்றும் கூறுப.

தலவிசேடம் :—திருவெண்காடு—காவிரி வடகரை 11வது பதி ; IV -பக் கம் கீள பார்க்க.

3303. நனிபள்ளி யமர்ந்தபிரான் கழல்வணங்கி நற்றமிழின்
புனிதநறுந் தொடைபுனைந்து திருச்செம்பொன் பள்ளிமுதற்
பனிமதிசேர் சடையார்தம் பதிபலவும் பணிந்துபோய்த்
தனிவிடைமேல் வருவார்தந் திருநின்றி யூர்சார்ந்தார். கசுசுகூ

(இ - ள்) நனிபள்ளி...புனைந்து - திருநனிபள்ளியில் விரும்பி எழுந்தருளியுள்ள பெருமானது திருவடிகளைப் பணிந்து நல்ல தமிழின் இனிய தூய நறிய மாலையினைப் புனைந்து ; திருசெம்பொன்பள்ளி...பணிந்துபோய் - திருசெம்பொன்பள்ளி முத லாகக் குளிர்ச்சி பொருந்திய சந்திரனை முடித்த சடையினையுடைய இறைவரது பதிகள் பலவற்றையும் வணங்கிச் சென்று ; தனிவிடைமேல்...சார்ந்தார் - ஒப்பற்ற இடபத்தின்மேல் வரும் இறைவரது திருநின்றியூரினைச் சார்ந்தருளினர்.

(வி - ரை) நற்றமிழின் புனித நறுந்தொடை - நன்மை, இனிமை, தூய்மை, நறுமை என்பன இப்பதிகச் சிறப்புக்கள். இவற்றைத் தனித்தனி இப்பதிகத்தினுள் வைத்துக் கண்டுகொள்க ; " காதிலன் " " நாடுடை நம்பெருமான் ", " நானுடை மாடு ", " நங்கட்கருளும் ", " காலமு நாழியையும் நனிபள்ளி மனத்தினுள்கி " என்பன முதலியவை சிந்திக்க.

பதி பலவும்-இது திருப்பறியலூர், திருவிளநகர், திருமயிலாடுதுறை, திருக்கஞ் சாறு முதலாயின என்பது கருதப்படும்.

தனிவிடை-தனி-ஒப்பற்ற ஒன்று என்றலுமாம். "நரை வெள்ளேறொன்றுடை யானை " " ஊர்வதோர்விடை யொன்றுடையான் " " ஒன்று கொலாமவ ரூர்வது தானே " (தேவா).

### திருநனிபள்ளி

*திருச்சிற்றம்பலம்* பண் - பஞ்சமம்

*ஆதியன் ஆதிரையன் னயன் மாலறி தற்கரிய*
*சோதியன் சொற்பொருளாய்ச் சுருங் காமறை நான்கினையும்*
*ஓதிய னும்பர்தங்கோ னுல கத்தினு ளெவ்வுயிர்க்கும்*
*நாதிய னம்பெருமா னண்ணு மூர்நனி பள்ளியதே.* (1)

*காலமு நாழிகையுந் நனி பள்ளி மனத்தினுள்கிக்*
*கோலம தாயவனைக் குளிர் நாவல வூரன்சொன்ன*
*மாலை மதித்துரைப்பார் மண் மறந்துவா னோருலகிற்*
*சாலநல் லின்பமெய்தித் தவ லோகத் திருப்பாரே.* (10)

*திருச்சிற்றம்பலம்*

**பதிகக் குறிப்பு** :—"*நம்பெருமான் நண்ணுமூர் நனிபள்ளியதே*" என்ற பதிக மகுடம் காண்க.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—**ஆதிரையன்**- " *ஆதிரை நாளுகந்தான்*" (தேவா); **சொற்பொருளாய்** - சொல்லுக்கெல்லாம் பொருளாயுள்ளவன் ; **ஓதியவன்...உலகத் தினுளெவ் வுயிர்க்கு நாதியன்** - எண்பத்துநான்கு நூறாயிரமாம் யோனிபேதம்...... உயிர்க்குயிராய் அங்கங்கே நின்றான்" (தேவா) ; **நாதியன்** - நாதன் ; தலைவன் ; ஆதரவு தருபவன் ;—(2) **உறவிலி** - " *ஆருற்றார்* " (திருவா) ; **அற இலகும்** - *அறமுற்றி* ; இலகுதல் - விளங்குதல் ; வண்டு மருளார் மொழி அறையும் " *வண்டு மருள்பாடும்* " மருள் - இசை வகை ; நற(வு) - தேன் ; (3) **அமர்ந்தான்** - விரும் பினான் ; **தீ...புகுந்தான்** - உடலில் உயிர்த் தீ உருவாய்ப் போந்து உயிருள்ளளவும் நிற்பவன் ; **மாடு** - செல்வம் ;—(4) **இடமாமலை...நானுடை** - ஏழ்மலையு மேழ் கடலும் சூழ்ந்த எல்லா நாடுகளையும் தன்னதாகவுடையவன் ; —(5) **பண்ணற்கரிய**- கால்விரலால் வட்டமாகக்கீறி எடுக்கப்பட்ட ஆழியாதலின் வேறு யாவராலும் செய்தற்கரிய ; **படைத்து** - கால்விரலால் வட்டங்கீறி உளதாக்கி ; **கண்ணற்கருள் புரிந்தான்**—"*சலந்தரனைப் பிளந்த சுடராழி செங்கண்மலர் பங்கயமாச் சிறந்தானுக் கருளி* " (தேவா - நம்பி - கலயநல்லூர் - 2); **கருதாதவர்** - தக்கன் ; **உண்ணற்கு** - உண்டதன் பொருட்டு ; **ஒட உதைத்துகந்து**-வீரபத்திரரால் தக்கயாக சங்காரம் நிகழ்த்தி ;—(6) **ஆரணன்** - வேதங்களின் பொருளானவர் ; (8) **நுண்ணியனாய்** - *யானேது மறியாமே என்னுள் வந்து* " (தேவா). ஏழ்பிறப்பும்...நங்கட் பிணிகளை வானாகிய அருமாமருந்து என்க ; (9) **ஞானம்** - சிவஞானங் குழைத்த அமுது ; (10) காலமு நாழிகையும்...உள்கி - இடை விடாது எக்காலமும் நினைந்து ; **தவ லோகம்** - சிவனுலகம் ; தவத்தின் பயனாகிய உலகம் ; தவம் - சிவபூசை.

**தலவிசேடம்**:—**திருநனிபள்ளி** – காவிரித் தென்கரை 43-வது பதி ; III பக்கம் உஅச பார்க்க.

**3304.** நின்றியூர் மேயாரை நேயத்தாற் புக்கிறைஞ்சி
ஒன்றியவன் புள்ளூருகப் பாடுவா ருடையவர
சென்றுமுல கிடர்நீங்கப் பாடியவே ழெழுநூறும்
*அன்றுசிறப் பித்தஞ்சொற் றிருப்பதிக மருள்செய்தார்.* கஉ0

(இ - ள்) நின்றியூர்...இறைஞ்சி - திருநின்றியூரில் எழுந்தருளிய இறைவரை அன்பினாலே திருக்கோயிலினுள்ளே புகுந்து வணங்கி ; ஒன்றிய...பாடுவார் - ஒன்று பட்ட அன்பு நிறைய உள்ளுருகும்படி பாடுவாராகி ; உடைய அரசு...அருள் செய் தார் - ஆளுடைய அரசுகள் எக்காலத்திலும் உலகம் துன்பம் நீங்கி யின்பமடையும்படி பாடியருளிய ஏழெழுநூறு பதிகங்களைப் பற்றி அன்று பாராட்டிப் போற்றி அழகிய சொற்களானமைந்த திருப்பதிகத்தினை அருளிச் செய்தனர்.

வி - ரை) பாடுவாராகி - அருள் செய்தார் எனக்கூட்டி முடிக்க. உடைய அரசு-ஆளுடைய அரசுகளாகிய திருநாவுக் கரசர்.

என்றும் உலகு இடர் நீங்கப்பாடிய - உலகம் என்றென்றும் இடர் நீங்கியுய்யும் பொருட்டே அரசுகள் பாடியருளினார் என்பது ; என்றும் - பாடிய அற்றை நாளில் பற்பலவாறும் உலகம் இடர்நீங்கினமை சரித வரலாற்றினு லறியப்படும். அற்றை நாள் மட்டிலன்றி அன்று போலவே பின்னர் எக்காலத்தும் அப்பயனை உலகம் பெற்றுவரும் என்பதாம். அன்று உலகம் இடர் நீங்கியமை அப்பூதியார் திருமகனு ராவுவிடந் தீர்ந்துய்ந்தது ; திருவீழிமிழலையிற் படிக்காசு பெற்றுப் பஞ்சம் தீர்ந்தது ; திருமறைக்காட்டிற் கதவம் திறந்தது ; திருப்பழையாறை வடதளியில் சமணர் செய்த மறைப்பு நீங்கி ஈசர்க்கு விமானமாக்கியது ; என்பனமுதலியவாற்றானறிக. அவ்வாறுள்ள பயன் ஏற்ற பெற்றி இத்திருப்பதிகங்களை அன்புடன் பயிலும் அன்பர்கள் இன்றும் பெற்று வருதல் கண்கூடு.

ஏழெழுநூறு - $7 \times 700 = 4900$ பதிகங்கள் ; " பதிகமே ழெழுநூறு பகருமா கவி யோகி"(11-ம் திருமுறை-திருநாவுக்கரசர் திருவேகாதசமாலை)என்ற நம்பியாண்டார் நம்பிகள் திருவாக்குக் காண்க ; " ஏழெழு நூறிரும் பனுவ லீன்ற வன்திரு நாவினுக் கரையன் " என்பது நம்பிகள் பதிகம் 2.

சிறப்பித்து - திருப்பதிகத்துட் போற்றி ; பனுவல் - பதிகம். திருமுறை கண்ட புராணத்தினுள் (15) " ஒரு நாற்பத்தொன்பதனுயிரமதாக " என்பது பதி கப் பாட்டுக்கள். 150

## திருநின்றியூர்

திருச்சிற்றம்பலம் பண் - தக்கேசி

திருவும் வண்மையுந் திண்டிற லரசுஞ் சிலந்தி யார்செய்த செய்பணி கண்டு
மருவு கோச்செங்க ணன்றனக் களித்த வார்த்தை கேட்டுநுன் மலரடி யடைந்தேன்
பெருகு பொன்னிவந் துந்தபன் மணியைப் பிள்ளைப் பல்கணம் பண்ணையு ணண்ணித்
தெருவுந் தெற்றியு முற்றமும் பற்றித் திரட்டுந் தென்றிரு நின்றியூ ரானே (1)

அணிகோ ளாடையம் பூணணி மாலை யமுது செய்தமு தம்பெரு தண்டி
யிணைகோ ளேழெழு நூறிரும் பனுவ லீன்ற வன்றிரு நாவினுக் கரையன்
கணைகொள் கண்ணப்ப னென்றிவர் பெற்ற காத லின்னரு ளாதரித் தடைந்தேன்
திணைகொள் செந்தமிழ் பைங்கிளி தெரியுஞ் செல்வத் தென்றிரு நின்றியூ ரானே (2)

காது பொத்தரைக் கின்னர ருழுவை கடிக்கும் பன்னகம் பிடிப்பருஞ் சீயங்
கோதில் மாதவர் குழுவுடன் கேட்பக் கோல வாலிழற் கீழறம் பகர
ஏதஞ் செய்தவ ரெய்திய வின்ப மியானுங் கேட்டுநின் னிணையடி யடைந்தேன்
நீதி வேதியர் நிறைபுக ழுலகி னிலவு தென்றிரு நின்றியூ ரானே (6)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—சிவபெருமானது அருட்பெருஞ் செயல்களை எடுத்துப் போற்றி, "அச்செயல்களைக் கேட்டு நானும் வந்தடைந்தேன்" என்றது ; குறிப்பு-ஒவ் வொரு திருப்பாட்டிலும் ஒன்றும்பலவுமாகச் சிவனது அருட்செயல்களின் சரிதங்கள் அருமைப்பட விரிக்கப்பட்டுள்ளன. மிகவும் அரிய பதிகம். முழுதும் பாராயணஞ் செய்யத்தக்கது. இதனுள் இறுதி மூன்று பாட்டுக்கள் கிடைத்தில ! சிதலரித்தொழிந் தன போலும் !

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) சிலந்தி - கோச்செங்கணன் வரலாறு பற்றி யது - தேவாரங்கள் பலவும், கோச்செங்கட் சோழ நாயனார் புராணமும் பார்க்க. சிலந்தியார் - செய்த பணி கண்டு - கோச்செங்கணன்றனக்குத் திருவும் வண்மை யும் - அரசும் அளித்த - என்று கூட்டுக ; சிலந்தியார் - பன்மை சிவன்பாலடிமை செய்த சிறப்புணர்த்திற்று ; செய்பணி - செய்யத்தக்க பணி ; சிலந்தியாராக நின்ற போது செய்த என்றும், அதுவே கோச்செங்கணனானபோது அளித்த என்றும் உரைக்க ; மருவு - சிலந்தியாயிருந்த உயிரே கோச்செங்கணனுள் பொருந்திய ; பெருகு...திரட்டும் நீர்ச் சிறப்புக் குறித்தது ; தேற்றி - திண்ணை ; பற்றி - பற்றி யிருந்து —(2) அணிகோள் - இறைவர் அணிந்தனவும் கொண்டனவுமாகிய; ஆடை, பூண்-அணி - மாலை அணிந்தன ; அமுது-உட்கொண்டது; "உண்ட கலமு முடுப்பன வுஞ் சூடுவனவு முனக்காகச்" செய்தமையால் ; (4261) ; செய்து - உரிமையாகச் செய்யப் பெற்றமையால் ; அமுநம் - வீடுபேறு ; முத்தி - தண்டி, சண்டீசர் ; இணை கோள்-தமக்குத் தாமே இணையான; வேறு இணையிலாத; இணைகோள்...திருநாவினுக் கரையன் - இதனை ஆசிரியர்முன் (3304) எடுத்துக்காட்டி யருளினர் ; கணைகோள்- கண்ணையிடந்த கணை - (அம்பு) ; முன்னை நிலையில் அருச்சுனனுகித் தவம் செய்து கணை - பாசுபதம் - இறைவர்பாற் கொண்ட என்ற குறிப்புமாம்; காதல் இன் அருள் - காதல் காரணமாகப் பெற்ற இனிய அருள் ; ஆதரித்து - ஆதாரவாகக் கொண்டு ; திணைகோள்செந்தமிழ் - செந்தமிழுக்கே சிறப்பாயுரிய அகம் புறம் என்ற பாகுபாடு ; இச்சிறப்பு ஏனை - எம்மொழிக்கு மில்லாமை எடுத்துக்காட்டியபடி ; பைங்கிளி தேரிதல் - மக்கள் பயில்வது கேட்டுக் கிளிகள் தெரிதலாம். " பாரிசையும் பண்டிதர்கள் பன்னாளும் பயின்றோது மோசை கேட்டு, வேரிமலி பொழிற்கிள்ளை வேதங்கள் பொருட்சொல்லு மிழலை " (தேவா) ; தேரியும் ; " பெரிதிலங்கும் மறை கிளைஞரோ தப்பிழை கேட்டலாற், கருதுகிள் ளைக்குலந் தேரிந்து தீர்க்குங் கடற் காழியே " (தேவா) ;—(3) முந்நூற்றறுபது வேலி...பரசிராமர் - பரசிராமர் இங்கு வழிபட்டு இறைவருக்கு 360 வேலி நிலமும், பூசிக்க 300 வேதியர் குடிகளையும் கலசநீர் வார்த்துக் கொடுத்தனர் என்றது வரலாறு; இங்குக் கூறிய பரசிராமர் "இதழி வேணி யார்தங் கழல்பரவிப், பரசு பெறுமா தவமுனிவன் பரசி ராமன் பெறுநாடு" (491) என்ற இடத்துக் கூறப்பட்ட முனிவரோ அல்லது அப்பெயருடைய வேறொரு வரோ என்பது ஐயப்பாடு ;—(4) காமதேனு வழிபட்டுப் பேறு பெற்ற வரலாறு குறித்தது ; இரவி நீள்சுட ரேழுவதன் முன்னம் - இரவி எழுவதன் முன் என்னுது இரவி நீள்சுடர் - எழுவதன்முன்னம் - என்றது அருணோதயத்தின் முன்னர் என்ற படி ; இது சூரியனுதிக்க ஐந்து நாழிகையாயுள்ளபொழுது ; மூலைக்கலசங்கள் - மூலையாகிய கலசங்கள் ; திருமஞ்சன மாட்ட உதவுதலின் கலசம் எனப்பட்டது ; வடிவு ஒருபுடை ஒப்புமையுங் குறிப்பு ; நான்கு மூலைக்காம்புகள் தற்புருட முதலிய நான்கும், பால்மடி ஈசானமுகமுமாகச் சிவாகமங்களுள் விதித்த ஸ்நபன அங்கம் காட்டும் குறிப்புமாம் ; தேனு முத்திரை என்னும் சிவ முத்திரை வழக்கும் காண்க.

தொடர்ந்த - வழிபட்ட ; பரவி உள்கி வன்பாசத்தை அறுத்து - பரவுதலாலும் உள்குதலாலும் பாச நீக்கமும், வந்து நுன்பாதத்தை யடைந்தேன் - என்றலால் சிவப்பேறும் குறிப்பாலுணர்த்தப்பட்டன ; " ஏக னாகி யிறைபணி நிற்க " என்றும், " அயரா அன்பி னரன்கழல் செலுமே " என்றும் வரும் போதம் 10 - 11-ம் சூத்திரக் கருத்துக்கள் காண்க ; மொழி மனம் மெய் என்ற மூன்றானும் ஒன்றித்த வழிபாடும் குறிக்கப்பட்டது கண்டுகொள்க. அத்தரு - அத்தகுதி ; அகரம் பண்டறிசுட்டு ; சிறப்புணர்த்திற்று ;—(5) சந்தி - மூன்றிலும் - நல்கிய - காலை - நண்பகல் - மாலை என்ற மூன்றும் சந்தி எனப்படும்; தாபர நிறுத்தி - தாபரத்தினுல்- விதித்த மண் முதலியவற்றால் - சிவலிங்கம் தாபித்து ; சகளி செய்து இறைஞ்சு - அத்தாபரத்தின்கண் பாவனை, மந்திரம், செயல் என்ற மூன்றானும் அகமும் புறமும் சிவாகம விதிப்படி பூசிக்கும் ; போதியிற் சேர்வு - பொதிகையிலிருக்கையும் அங்குக் காட்சி காண வரமும் ; இந்திரர்களுள் ஒருவன் வழிபட வாணுட்சி யருளியதும் தல வரலாறுகளுள் ஒன்று ;—(6) ஆலநிழலில் அறமுறைத்த வரலாறு குறிக்கப்பட்டது ; காது பொத்தரைக் கின்னரர்-இறைவரது உபதேச மொழிகள் சிறிதும் புறஞ் செல்லாது முழுதும் செவிப்புலனுழையும்படி காதுகளைப் பொத்தியபடியிருந்த கின்னரர்; பசுக்கள் முதலியவை, சத்தம் கேட்கும்போது செவிகளை ஒருமுகமாகக் குவித்துக் கொள்ளும் இயல்பும் காண்க. உழுவை - புலி; பன்னகம் - பாம்பு; சீயம் - சிங்கம்; மாதவர் தொழ - முனிவர்கள் ; (நால்வர் ?) ஆல்நிழற் கீழறம் பகர - இவ்வாறு புலி முதலியவையும், கின்னரர் முனிவர்களும் கேட்க ஆலநிழலில் இறைவர் அறம் சொன்ன வரலாற்றுக் கேற்ப உள்ள திருவுருவம் பாதகண்டத்தின் வடக்கில் சிந்து நதிக்கரையில் புதைந்திருந்து அகழ்ந்தெடுக்கப்பட்ட மொகஞ்சோதாரோ ஹரப்பா என்ற மிகப் பழ நகரங்களிற் கண்ட சிலாவுருவங்களுட் பெறப்பட்டுள்ளன ; தென்னாட்டில் உள்ள கோயில்களுள் இத்தகைய உருவம் காணப்படவில்லை காது பொத்தரைக்கின்னரர் என்றது " போர்த்த நீள்செவி யாளரந் தணர்க்குப் பொருள்கொளானிழற் கீழறம் புரிந்து " (திருப்புன்கூர்-7) என்றவிடத்து நம்பிகள் அருளியவாற்றாலும் ; ஏனைப், புலி நாகம் முதலியவற்றுக்கும் கின்னரர் முதலியோர்க்கும் அருளியது " இயக்கர் கின்னரர் நமனொடு வருண ரியங்கு தீவளி ஞாயிறு திங்கள், மயக்கமில்புலி வானரர் நாகம் வசுக்கள் வானவர் தானவ ரெல்லாம், அயர்ப்பொன் றின்றி நின் றிருவடி யதனை யர்ச்சித் தார்பெறு மாரருள் " (ஷை - 6) என்றதனாலு மறிக. போர்த்த - பொத்திய ; நீள்செவி - உபதேசங் கேட்கும் வசதிப் பொருட்டு நீண்ட செவியினைப் பெற்றனர் என்பர். ஏதஞ் செய்தவர் - ஏதம்-நன்மை - நற்செயல் என்ற பொருளில் வந்த அரிய வழக்கு ; " ஏத நன்னில மீரறு வேலி " (தேவா) என்றது காண்க. இதனை வகர உடம்படு மெய்யாய் வந்தமை எண்ணாது, வேதம் செய்தவர் என்று பிழைபடக்கொண்டு, வேதங்கள் இறைவர் வாக்கன்று-இருடிகள்-முனிவர்கள் வாக்கு என்ற தமது பிழைபட்ட நவீனக் கொள்கைகளுக்குத் தேவார ஆதரவு தேடி அபசாரப்படுவோரு முளர் ; ஏதம் என்றதற்குரிய மோனையாக எய்திய - இன்பம் - இயானும் இணையடி என்று மேல் வருவனவற்றையும் அவர் ஓராராயினர்;—(7) ஐராவதம் வழிபட்டுப் பேறுபெற்ற வரலாறு ; கோடு நான்குடைக் குஞ்சரம் - நான்கு கொம்புகளையுடைய யானை ; ஐராவதம் ; இந்திரனது யானை ; பீடும் வான்மிசைப் பெருமையும் - பீடு - மண்ணின்மேல் காட்டானையாகத் திரிக என்ற துர்வாசரது சாப விமோசனம் ; விண்மிசைப் பெருமை - மீளவும் தேவலோக இருப்பு ; பேடை..., கிள்ளையுமென - மஞ்ஞை - மயில் ; கன்று - யானைக்கன்று ; பிள்ளைக்

கிள்ளை - கிளிப்பிள்ளை ; இவை இயலாலும் நடையாலும் பேச்சாலும் பெண்களுக்கு உவமமாயின ; என - போல ; உவமவுருபு ; என்று சொல்லும்படி ; என நிலாவு - என்று கூட்டுக.

தலவிசேடம்:—திருநின்றியூர்—III-பக்கம் உஅந பார்க்க. காவிரி வடகரை 19-வது பதி.

3305. அப்பதியி லன்பருட னமர்ந்தகல்வா ரகலிடத்திற்
சேப்பரிய புகழ்நீடூர் பணியாது செல்பொழுதில்
ஒப்பரிய வுணர்வினு னினைந்தருளித் தொழலுறுவார்
மெய்ப்பொருள்வண் டமிழ்மாலை விளம்பியே மீண்டணைந்தார். கஙக

(இ - ள்) அப்பதியில்...அகல்வார் - அப்பதியின்கண் அன்பர்களுடன் கூடி விரும்பி எழுந்தருளியிருந்து மேற்செல்வாராகி ; அகலிடத்தில்...செல்பொழுதில் - சொல்லுதற்கரியதாகிய புகழ் நீடூரினைப் பணியாமற் செல்லும்போது ; ஒப்பரிய... தொழலுறுவார் - ஒப்பில்லாத மெய்யுணர்வினால் நினைந்தருளி வந்து தொழுவதனை மேற்கொள்வாராகிய நம்பிகள் ; மெய்ப்பொருள்...மீண்டணைந்தார் - மெய்ப் பொருளை விரிக்கும் வளப்பமுடைய தமிழ்மாலைத் திருப்பதிகம் பாடியே மீண்டு வந்து அணைந்தருளினர்.

(வி - ரை) அகலிடத்தில் சேப்பரிய புகழ் நீடூர் - அகலிடம் — இடமகன்ற நிலவுலகம் : புகழினையுடைய நீடூர் என்றும், புகழ் நீடும் ஊர் என்றும் சிலேடை நயம் படக் கூறிய கவிநலம் காண்க. "செல்வ நீடூர் திருநீடூர்" (முனையடுவார் புரா. 1)

பணியாது செல்பொழுதின் - திருநின்றியூரினின்றும் செல்லும்பொழுது அணிமையில் உள்ள திருநீடூரிற் சென்று பணியாது மேலே செல்லத் தொடங்கியபோது ;

ஒப்பரிய உணர்வினுல் உணர்ந்தருளி - ஒப்பரிய உணர்வு - மெய்யுணர்வு ; இது எஞ்ஞான்றும் சிவனை மறவாத நிலையினால் உண்டாவது ; செல்லும் வழியில் ஒரு சிவாலயம் இருப்பின் அடியார்கள் அதனைச் சென்று வழிபட்டன்றி மேற் செல்லலாகாது என்பது விதி ; அவ்விதி கடந்து செல்வது பிழையாமென்பது உணர் வினில் தானே உணர வருவது மெய்யுணர்வின் இலக்கணம். "நானேது மறி யாமே யென்னுள் வந்து நல்லனவுந் தீயனவுங் காட்டா நின்றாய்" (தேவா).

தொழல் உறுவார் - தொழுவதனை மேற்கொண்டார்.

மெய்ப்பொருள் வண் தமிழ்மாலை - உண்மைப் பொருளைப்பற்றி வெளிப் போந்த வளப்பமுடைய திருப்பதிகம் ; மெய்ப்பொருள் - மெய்யுணர்வினால் வரு வது; வண்மை - அதனை உலகுக்கறிவித்து உய்விப்பது. விளம்பியே - பாடி யருளிய வாறே ; ஏகாரம் அதன் வண்மை உணர்த்திற்று; மேற்பாட்டும் பார்க்க. இப்பதிகம் மீண்டணையும் வழியில் அருளியது. 151

3306. "மடலாரும் புனனீடூர் மருவினர்தாள் வணங்காது
விடலாமே" யெனுங்காதல் விருப்புறுமத் திருப்பதிகம்
அடலார்சூ லப்படையார் தமைப்பாடி யடிவணங்கி
உடலாரு மயிர்ப்புளகம் மிகப்பணிந்தங் குறைகின்றார், கஙஉ

3307. அங்கணினி தமர்ந்தருளாற் றிருப்புன்கூ ரணைந்திறைஞ்சிக்
கொங்கலரு மலர்ச்சோலைத் திருக்கோலக் காவணையக்

கங்கைசடைக் கரந்தவர்தா மெதிர்காட்சி கொடுத்தருளப்
பொங்குவிருப் பாற்றொழுது திருப்பதிகம் போற்றிசைப்பார், கநிரு

3308. திருஞான சம்பந்தர் திருக்கைக ளாலொற்றிப்
பெருகார்வத் துடன்பாடப் பிஞ்ஞகனூர் கண்டிரங்கி
அருளாலே திருத்தாள மளித்தபடி சிறப்பித்துப்
பொருண்மாலைத் திருப்பதிகம் பாடியே போற்றிசைத்தார். கநிசு

3306. (இ - ள்) மடலாரும்...திருப்பதிகம் - "இதழ்களையுடைய பூக்கள் நிறைந்த நீர்வளமுடைய திருநீடூரில் பொருந்தி எழுந்தருளியுள்ள இறைவரது திருவடிகளை வணங்காமல் விட்டுச்செல்லலாமோ?" என்னும் ஆசையினைப் புலப்படுக்கும் விருப்பம் பொருந்திய அந்தத் திருப்பதிகத்தினால்; அடலார்...அடிவணங்கி - வல்லமையுடைய சூலப்படையினையுடைய இறைவரைப் பாடி அவர் திருவடிகளை வணங்கி; உடலாரும்...மிக - திருமேனி முழுதும் மயிர்ப்புளகம் மிகுதியும் உண்டாக; பணிந்து-நிலம் பொருந்த வணங்கி; அங்கு உறைகின்றார் - அப்பதியில் தங்கியருளுகின்றாராகி, கநிஉ

3307. (இ - ள்) அங்கண் இனிதமர்ந்து - அங்கு இனிதாக அமர்ந்தருளி; அருளால் - அருள் விடைபெற்று; திருப்புன்கூர் அணைந்திறைஞ்சி - திருப்புன்கூரினில் அணைந்து வணங்கி மேற்சென்று; கொங்கலரும்...அணைய - மணமிகுந்த சோலைகள் சூழ்ந்த திருக்கோலக்காவினை அணையவே; கங்கை...கொடுத்தருள—கங்கையினைச் சடையிலே கரந்த இறைவர் தாம் நகர்ப்புறத்திலே எதிர்காட்சி கொடுத்தருள; பொங்கு...போற்றிசைப்பார் - மேன்மேல் அதிகரிக்கின்ற மிக்க விருப்பத்துடனே தொழுது திருப்பதிகம் பாடித் துதிப்பாராகி, கநிரு

3308. (இ - ள்) திருஞான சம்பந்தர்...அளித்தபடி சிறப்பித்து - திருஞான சம்பந்த நாயனார் திருக்கைகளாலே தாள இசை ஒத்தறுத்துப் பெருகும் ஆர்வத்துடனே பாட இறைவனார் அது கண்டு இரங்கித் திருவருளாலே திருப்பொற்றாளம் கொடுத்தருளிய படியினைப் பாராட்டித் துதித்து; பொருள் மாலை...போற்றிசைத்தார் - மெய்ப்பொருள் விளங்கும் மாலையாகிய திருப்பதிகத்தினைப் பாடியே துதித்தருளினார். கநிசு

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3306. (வி - ரை) "மடலாரும்...விடலாமே" எனும் - இப்பதிகக் கருத்தாகிய குறிப்பு-"நிறை புனற்கழ னிச்செல்வ நீடூர்ப், பாரு ளார்பர வித்தொழ கின்ற பரம னைப்பணி யாவிட லாமே" என்பது பதிகம். பதிக மகுடம் பார்க்க; மடல் - இதழ்கள்; இங்கு இதழ்களையுடைய மலர் என்ற பொருளில் வந்தது.

புனல் - நீர்ச்சிறப்பு; வணங்காது விடலாமே - பணியாது மேற்செல்லலாகுமோ? ஆகாது என்றபடி.

காதல் விருப்புறும் - காதலாய் விளையும் பெருவிருப்பம் பொருந்திய; பதிகப் பாட்டுப் பொருள்களும் குறிப்பும் பார்க்க.

உடலாரும் மயிர்ப்புளகம் மிக - திருமேனி முழுதும்நிறைந்த புளகாங்கித மிகப் பொருந்த; மிக - மிகும்படி.

உறைகின்றார் - அமர்ந்து என மேல்வரும் பாட்டுடன் கூட்டுக; உறைகின்றார் - முற்றெச்சம்.

3307. (வி - ரை) அருளால் - அருள் விடைபெற்று மேற்சென்று.

கொங்கலரும் மலர்ச்சோலைக் கோலக்கா - தலப்பெயரைப் பொருள் விரித்த படி; கொங்கு - மணம்; அலர்தல் - விரிந்து வீசுதல்; கோலம் - அழகு; கா - சோலை; காரணப்பெயர் என்றதற்கேற்ப இன்றும் விளங்குவது காண்க; அணைய - அணையும்போது

எதிர் காட்சி கொடுத்தருள - "கோலக் காவினிற் கண்டுகொண் டேனே" என்ற பதிக மகுடம் இதற்கு அகச்சான்றாகும்.

போற்றிசைப்பார் - போற்றிசைத்தார் என மேல்வரும் பாட்டுடன் முடிக்க. போற்றுவார் அருளிப்பாட்டினைப் போற்றிப் பாடினார் என்க.

திருப்புன்கூர் அணைந்திறைஞ்சி - இதுபோழ்து நம்பிகளருளிய பதிகம் கிடைத்திலது! "அந்தணாளன்" என்ற பதிகம் பின்னர் அருளியது. 153

3308. (வி - ரை) திருஞான சம்பந்தர்...அளித்தபடி - திருத்தாளம் பெற்ற வரலாறு முழுமையும் சுருக்கிக்கூறிய கவிநயம் கண்டு கொள்க; திருஞான சம்பந்தர் திருக்கைகளா லொற்றி - "தாவில் தனிச் சிவஞான சம்பந்த ராயினார்" (1967) என்ற நிலை பெற்ற நாளை அடுத்த நாள் தாளம் பெறுதலால் திருஞான சம்பந்தர் என்ற இப்பெயராற் கூறினார். நம்பிகள் பதிகத்துள் இத்திருப்பெயராற் கூறியமையும் குறிப்பு.

ஒற்றி - ஒத்தித் தாள ஒத்தறுத்தது.

இரங்கி - பிள்ளையாரது பங்கயத்தினின் மிக்க மென்மையான கைமலர்கள் நோம் என்று இரங்கி; "பாடலுக் கிரங்கும்" நம்பிகள் பதிகம் (8) பார்க்க.

திருத்தாளம் அளித்தபடி சிறப்பித்து - அளித்த வரலாற்றினைப் பாராட்டி. பதிகம் (8) பார்க்க. திருத்தாளமுடையார் கோயில் எனப் பெயர் இன்றும் வழங்குதல் காண்க. இத்தலத்தில் நிகழ்ந்த அற்புதமாதலின் அதனைக் கூறிப் போற்றினார்; அவ்வற்புத அருள்நிகழ்ச்சி நடந்தது என்ற உண்மை பற்றிய தேவாரச் சான்றுமாம்.

பொருள்மாலைத் திருப்பதிகம் - இறைவரது பெருந்தன்மைகளும் அவர் நம்பிகளை ஆட்கொண்ட வண்ணங்களும் பொருள்களாக எடுத்துக்கூறிய திருப்பதிகம். 154

## திருக்கோலக்கா

திருச்சிற்றம்பலம் பண் - தக்கேசி

புற்றில் வாளர வார்த்த பிரானைப் பூத நாதனைப் பாதமே நினைவார்
பற்று வான்றனை யெனக்கெளி வந்த பாவ நாசனை மேவரி யானை
முற்ற லார்திரி புரமொரு மூன்றும் பொன்ற வென்றிமால் வரையரி யம்பாக்
கொற்ற வில்லங்கை யேந்திய கோனைக் கோலக் காவினிற் கண்டுகொண் டேனே.

அன்று வந்தெனை யகலிடத் தவர்முன் னாள தாகவென் றவணங் காட்டி
நின்று வெண்ணெயிநல் லூர்மிசை யொளித்த நித்தி லத்திரட் டொத்தினை முத்திக்
கொன்றி னான்றனை யும்பர் பிரானை யுயரும் வல்லர ணங்கெடச் சீறுங்
குன்ற வில்லியை மெல்லிய லுடனே கோலக் காவினிற் கண்டுகொண் டேனே. (5)

நாளு மின்னிசை யாற்றமிழ் பரப்பு ஞான சம்பந் தனுக்குல கவர்முன்
றாள மீந்தவன் பாடலுக் கிரங்குந் தன்மை யாளனை யென்மனக் கருத்தை

யாளும் பூதங்கள் டாடகின் றடு மங்க ணன்றனை யெண்கண மிறைஞ்சுங்
கோளி லிப்பெருங் கோயிலு ளானைக் கோலக் காவினிற் கண்டுகொண் டேனே. (8)

கோட ரம்பயில் சடையுடைக் கரும்பைக் கோலக் காவுளெம் மானைமெய்ம் மானப்
பாட ரங்குடி யடியவர் விரும்பப் பயிலு நாவலா ரூரன்வன் றொண்டன்
நாடி ரங்கிமுன் னறியுமந் நெறியா னவின்ற பத்திவை விளம்பிய மாந்தர்
காட ரங்கென நடநவின் றான்பாற் கதியு மெய்துவர் பதியவர்க் கதுவே (10)

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு :**—இறைவர் எதிர்காட்சி கொடுத்தருளப் பெருவிருப்பாற் கண்டுகொண்டு அவரது அருளிப்பாடுகள் பலவற்றையும், தமக்கெளிவந்தருளிய தன்மையினையும், திருஞானசம்பந்த நாயனாருக்குத் தாளமீந் தருளிய கருணையினையும், மற்றும் மெய்ப்பொருள் பலவற்றையும் போற்றியது.

**பதிகப் பாட்டுக் குறிப்பு:**—(1) பாதமே தொழுவார் பற்றுகின்ற பெரிய துணைவர் ; பாதமே தொழுவார்க்குத் துணைவராயும் எனக்கும் எளிவந்தவர். **அவ்வாறல்லாத எனக்கும் என்க ;** உம்மை தொக்கது ; **வான்** - பெரிய ; பாதமே - ஏகாரம் பிரிநிலை ; **மேவரியான்** - ஆன்ம முயற்சி-போதங்களாற் சென்று பொருந்தலரியவர் ; "சென்றடையாத திருவுடையான்" (தேவா); **மூற்றலர்** - பகைவர் ; **வரை வில்லாக, அரி அம்பாக** - அங்கை ஏந்திய என்று கூட்டுக ; "எயிலார் சாய எரித்த" (பிள். தேவா - கோலக் : 5) ; **அம்பர்** - அம்பாக ; **அரி** - விட்டுணு ; **கோலக் காவினிற் கண்டு கொண்டேனே** என்ற குறிப்பு நகர்ப்புறத்து எதிர்காட்சி கொடுப்பக் கண்ட சரித நிலை குறித்தது. "கழுமல வளநகர்க் கண்டுகொண்டேனே" என்றது கருதத்தக்கது ;—(2) **தோளி** - தோள்களையுடைய உமை அம்மையார் ; **தழல்மதி** - கயநோயுடைய மதி ; சந்திர சாபம் குறித்தது ; **தழல்** - தீ - தீப்போல உள்ளிருந்து அழிக்கும் என்ற பொருளில் வந்தது ; பிரிந்தார்க்குத் தழல் போல வெம்மைதரும் என்றலுமாம் ; தனக்கென்று வேறு ஒளியின்றித் தழலுருவாயின இரவியினால் ஒளிபெற்று விளங்கும் மதி என்றலும் பொருந்தும் ; **குர** - குரா மலர் ; **வெறி** - மணம் ;—(3) **பாட்டகத்து இசையாகி** - "பாட்டிற் பண்ணும்" (தேவா) ; **பரிவு இனியான்** - அன்பினுள் இனிக்கின்றவன் ; அன்பு செய்யச் செய்யச் சுவை தருபவன் ; **நாட்டகத் தேவர் செயிகையுளான்** - **நாட்டகம்** - வான நாட்டில் ; எங் நாட்டிலுமுள்ள என்றலுமாம். "நாடிரங்கி முன்னறியுமந் நெறியால்" (10); "நாட்டகத் தேவர்கள் நாடரும் பொருளே" (திருவா) ; **கோட்டகம்** - கரைகளிடையே; **கோடு**-கரை ;—(4) **ஆத்தம் ஆளுகந்தானை** - நம்பிகள் சரித அகச்சான்று ; **ஆத்தம்** - அன்பு உரிமை ; ஆப்தம் என்றது ஆத்தமென நின்றது ; **மடமான்** - மான் போன்ற உமையம்மையார்; **குருமாமணி** - குருவாகி வந்தருள்பவர் ;—(5) **அன்று...ஒளித்த** - மணப்பந்தலில் யாவருங் காணவந்ததும், **ஆளதாக என்று** - "என் அடியாள் இந் நாவலா ரூரன்" என்றதும், **ஆவணங் காட்டி** - ஆளோலை காட்டிய வரலாறும், **நின்று வெண்ணெயி நல்லூர்மிசை ஒளித்த** - வெண்ணெய் நல்லூரில் வழக்குவென்று திருக்கோயிலில் போய் ஒளித்ததும் ஆகிய நம்பிகள் சரிதப் பகுதிக்குப் போரதாவாகிய அகச்சான்று ; **முத்திக் கொன்றினான்** - முத்தி நிலையில் முத்தான்மாக்களுடன் பிரிப்பின்றி ஒன்றித்து நிற்பவர் ; **மெல்லியலுடனே** - தாமும் தேவியாருமாக எதிர் காட்சி கொடுப்பக் கண்ட குறிப்பு ;—(6) **காற்று...நின்றானை**-ஐம்பூதங்களுள் நிறைந்த

நிலை; மால்விடையான் - காத்தற்றொழில் குறித்தது; நீற்றுத் தீயுரு-ஊழித்தீ; நீற்று-நீற்றுகின்ற தீ ; தோழமவன் - மார்க்கண்டர் ; போக்குவான் வந்த கூற்றை என்று கூட்டுக. வந்த - சொல்லெச்சம் ; போக்குவான் - போக்கும் பொருட்டு ; கூற்றை உயிர் நீக்கிடத் தாளால் தீங்கு செய் என்று கூட்டுக ; கழல் - வெற்றிக் குறிப்பு ;—(7) குழகன் - அழகன் ; "குழகன் கோலக்கா" (பிள். தேவா - 3) ;—(8) திருஞான சம்பந்த நாயனாருக்கு இப்பதியிற் றிருப்பொற்றாளம் அளித்த சரிதம் போற்றப்பட்டது. ஆசிரியர் (3308) எடுத்துக்காட்டி யருளினர் ; சரித ஆதரவு. ஆளும் பூதங்கள்-சிவபெருமானால் ஆளப்படும் எனப் பிறவினைப் பொருள் கொள்க ; "குழுக்கொள் பூதப் படையான்" (பிள். தேவா. கோலக். 4); இறைவராணைப்படி உலகை ஆளும் என்றலுமாம் ;—(9) இரங்கியவென்றி - ஆற்றல் அழித்ததற்கு மேலாய், இரக்கங் கொண்டதே பெருவெற்றி என்பது குறிப்பு. பாரத்தும்...அரியானை - பாரளிக்கும் அரசர் தமது உலகபோக உயர்வு தோன்றச் செயல் செய்கின்றமையால் அவர்கள் வந்து பணிதற்கரியவன் என்றார் ; உலகபோகம் நிலையழிந்தபோதே இறைவர்பாற் பணிவு வரும் என்பது ; சிரக்கண்...தீர்த்த - சிரம் கண் வாய் செவி மூக்கு என்ற அவயவங்களைக் கொண்ட உடம்பினைக் கொடுத்து, அதனுள்ளே வாழும் உயிருடன் அறியவாராதபடி தாமும் பிணைந்து நின்று, தீவினைகளைப் பயன் துய்ப்பித்துத் தீர்க்கும் ; தக்க யாகத்தில் தேவர்கள்பால் செய்த வீரங்கள் என்றலுமாம் ;—(10) கோடரம் - கோடர் - சிகரம் ; (குவடு ?) அம் - சாரியை ; கோடரம்பயில் - சிகரமாக முடித்துக் கட்டிய ; மெய்ம்மானப் பாடர் - உண்மையும் பெருமையும் கொண்ட பாட்டுக்களைப் பாடுபவர்களாகி ; பாட்டர் - என்பது பாடர் என நின்றது. பாடு - பெருமையெனக் கொண்டு பெருமையையுடையோர் என்றலுமாம். இப்பொருளில் மானப்பாடு - இருபெயரொட்டு ; அம்குடி அடியவர் - அழகிய குடிமைக் கண் அடியினை அடைந்தவர் ; அடியே குடியாக அடைந்தவர் ; அம் - அழகிய ; நாடிரங்கு...நெறியால் - உலகம் உய்ய ; இரங்கி - அன்பினாற் குழைந்து ; காடு அரங்கென - சுடுகாடே ஆடரங்காக ; நடநவிலுதல் - கூத்தாடுதல். நவிலுதல் - மரபு வழக்கு ; பதி - நிலையான இருப்பிடம் ; பதி - பதிந்த என்றதும் குறிப்பு ; அது - நடமுடையான்பாற் சாருநிலை.

தலவிசேடம் :—திருக்கோலக்கா—காவிரி வடகரை 15வது பதி ; III-பக்கம் கஙஉ-A பார்க்க. (பாட்டு 2002-ன் கீழ்.)

3309. மூவாத முழுமுதலார் முதற்கோலக் காவகன்று
தாவாத புகழ்ச்சண்பை வலங்கொண்டு தாழ்ந்திறைஞ்சி
நாவார்முத் தமிழ்விரகர் நற்பதங்கள் பரவிப்போய்
மேவார்தம் புரஞ்செற்றார் குருகாவூர் மேவுவார், கடுரு

3310. உண்ணீரின் வேட்கையுட னுறுபசியான் மிகவருந்திப்
பண்ணீர்மை மொழிப்பரவை யார்கொழுநர் வரும்பாங்கர்க்
கண்ணீடு திருநுதலார் காதலவர் கருத்தறிந்து
தண்ணீரும் பொதிசோறுங் கொண்டுவழிச் சார்கின்றார், கடுசு

3311. வேனிலுறு வெயில்வெம்மை தணிப்பதற்கு விரைகுளிர்மென்
பானன்மலர்த் தடம்போலும் பந்தரொரு பாலமைத்தே

ஆனமறை வேதியரா யருள்வேடங் கொண்டிருந்தார்
மானமருந் திருக்கரத்தார் வன்றொண்டர் தமைப்பார்த்து. கஙஎ

3309. (இ - ள்) மூவாத...அகன்று - எஞ்ஞான்றும் மூப்படையாத முழு முதல்வராகிய சிவபெருமானது சிறந்த திருக்கோலக்காவினை நீங்கி; தாவாத... இறைஞ்சி - கெடாத புகழினையுடைய சண்பை என்னும் சீகாழிப் பதியினை வலமாகச் சுற்றிவந்து நிலமுறத் தாழ்ந்து வணங்கி; நாவார்......பரவிப்போய் - நாவார்ந்த முத்தமிழ் விரகராகிய திருஞான சம்பந்த நாயனாரது திருவடிகளைத் துதித்துச் சென்று; மேவார்தம்...மேவுவார் - பொருந்தாத பகைவர்கள் வாழும் முப்புரங்களையும் அழித்த சிவபெருமானது திருக்குருகாவூரினைச் சார்வாராகி, கஙரு

3310. (இ - ள்) உண்ணீரின்.....வரும்பாங்கர் - உண்ணும் நீரின் வேட்கையுடனே பொருந்திய பசியினாலும் மிகவும் வருந்திப் பண்ணின் நீர்மை பொருந்திய மொழியினையுடைய பரவையம்மையாரது கணவராகிய நம்பிகள் வரும் பக்கத்திலே; கண்ணீடு...கருத்தறிந்து - கண்பொருந்திய திருநெற்றியினையுடைய சிவபெருமான் தம்பாற் காதலுடைய நம்பிகளது கருத்தினை யறிந்தாராதலின்; தண்ணீரும்...சார்கின்றார் - தண்ணீரினையும் பொதிசோற்றினையும் உடன்கொண்டு அவ்வழியிலே சார்கின்றாராய், கஙசு

3311. (இ - ள்) வேனிலுறு...அமைத்தே - வேனிலினில் பொருந்தும் வெயிலின் வெப்பத்தினைத் தணிப்பதற்கு மணமும் குளிர்ச்சியும் உடைய மெல்லிய செங்கழுநீர்த் தடாகம் போலும் பந்தரை ஒருபால் உண்டாகச் செய்தே; மானமரும் திருக்கரத்தார்-மான் பொருந்திய கையினையுடைய இறைவர்; ஆனமறை...கொண்டு- ஆயின மறைவேதியராக அருளுடைய திருவேடத்தினை மேற்கொண்டு; வன்றொண்டர் தமைப்பார்த்து - நம்பிகள் வருகின்றதை எதிர்பார்த்து; இருந்தார் - எழுந்தருளியிருந்தார். கஙஎ

இந்த மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3309. (வி - ரை) மூவாத - மூப்படையாத; மூப்படைதல் அழிவுகாட்டும். எனவே இறப்பும், அதனைத் தொடர்ந்து பிறவியும் வரும்; மூவாத எனவே அழிவில்லாது என்றும் ஒரு தன்மையாயிருத்தல் குறிப்பு.

முழுமுதலார் - தமக்கு மேற்பட்ட முதன்மை யுடையார் இலராவர்; முதலாருடைய என ஆறனுருபு தொக்கது.

முதற் கோலக்கா - முதல் - சிறப்பு

தாவாத புகழ்ச்சண்பை - தாவாத - கெடாத; சண்பை - சீகாழியின் 9வது பெயர்.

சண்பை வலங்கொண்டு தாழ்ந்திறைஞ்சி - சீகாழிப் பதியினுள்ளே மிதிக்காது நகரினையே வலம் வந்து வணங்கி என்க; ஆளுடைய "பிள்ளையார் திருவவதாரஞ் செய்த பெரும்புகலி, யுள்ளுநான் மிதியேனென் றாரெல்லைப் புறம்வணங்கி" நம்பிகள் அப்பதியினை வணங்க இறைவர் எதிர்காட்சி கொடுத்தருளினர் (258) என்பது முன்னர்க் கூறப்பட்டது; அவ்வாலாற்றினை இங்கு நினைவு கூர்க.

நாவார் முத்தமிழ் விரகர் - முத்தமிழும் பிள்ளையாரது திருவாக்கிற் பொலிவெய்தின என்பார் நாவார் என்றார்.

முத்தமிழ் விரகர் நற்பதங்கள் பரவிப்போய் - பிள்ளையார் அவதரித்த தலம் என்றதனாலே அங்கு மிதித்து உட்செல்லாது போந்தாராதலின், அவரது திருவடி களைத் துதித்து மேற்சென்றருளினர் என்க.

மேவார்...மேவுவார் - மேவார் - பகையினர் ; முப்புரவாணர்.

மேவார்...மேவுவார் - விரோதவணி என்னும் சொல்லணி. மேவுவார் - மேவு வாராகி; முற்றெச்சம்; பரவையார் கோழநர் என்ற எழுவாய் மேற்பாட்டிலுள்ளத னுடன் கூட்டுக.

நற்பதிகம்—என்பதும் பாடம். 155

3310. (வி - ரை) உண்நீரின் வேட்கை - தாகம் என்பர். நீர்வேட்கை என் பதே யமையும் ; உண் - என்பது மிகையாம் பிறவெனின் ? உண்ணும் நீர் தக்கபடி வேருயமைக்கவும் கொள்ளவும் படுதல் வேண்டிய நிலை குறிக்க உண்ணீர் எனப் பட்டது; " வெயிலின்வைத், தாற்றிய தெண்ணீர் நாற்றமிட் டிருப்ப, மடாஅ வொருவன் விடாஅ வேட்கை, தெண்ணீர்க் குற்றமன்று " (திருவிடை - மும். கோவை 16) என்ற பட்டினத்து அடிகளார் திருவாக்கும் காண்க; "தண்ணீரமுதம்" (புராண வரலாறு - 72) என்று இதனை விதந்து வேறு கூறியதும் கருதுக.

உறுபசி - உறு - பெரியோரிடத்தும் ஓரோர்பொழுது வந்து தாக்கும் தன்மை யுள்ள ; கனல் வாதை வந்தேய்தின் " (தாயுமா) என்று பெரியோர்களிடம் ஓரோர் கால் வந்து தோற்றப்படுவதன்றி ஏனையோரிடத்துப்போல எப்பொழுதும் உண்பதே தொழிலாயிருக்கும்படி வாராது என்ற குறிப்புப்படக் கூறியது ஈண்டு நினைவு கூர்தற்பாலது.

பண்ணீர்மை மொழி - உயர்ந்த சாதிப் பெண்களின் குரலில் பண் அமைந் திருத்தலின் மொழிகள் பண்ணின் தன்மை பொருந்தி வெளிவரும் என்பது.

வருந்தி - பசியும் நீர்வேட்கையும் வருத்தினும் அவற்றை அறியாது - பொருட் படுத்தாது - சிவத்தொண்டிற் பிறழாது செல்லுதல் பெரியோரியல்பு ; " வழிபோம் பொழுது மிகவிளைத்து வருத்த முறநீர் வேட்கையொடும், அழிவாம் பசிவந்தணைந் திடவு மதற்குச் சித்த மலையாதே, மொழிவேந் தருமுன் னெழுந்தருள " (1569) என்ற அரசுகள் சரிதப்பகுதி ஈண்டு நினைவு கூர்தற்பாலது.

கண்நீடு திருநுதலார் - கண்நீடு - என்பது அருட்கண் நீடியிருப்பவராதலின் என்று காரணக் குறிப்புப் பெறநின்றது.

காதலவர் - எஞ்ஞான்றும் மறவாது தம்பாற் பெருவிருப்புடையவர்.

கருத்தறிந்து - கருத்து - உடல் வருத்தம் நோக்காது பணியினிற்கும் கருத்து ; பசி நீர்வேட்கை வருத்தத்தினை நம்பிகள் அறியாது பணியினின்றூராதலின், அவரது கருத்தினுள் இருந்து உயிர்க்குயிராகிய இறைவராதலின் அவற்றையெல்லாம் அறிந் தருளி என்பது ; " கண்டு காட்டலின் " (போதம் - 11- சூ.) என்றவிடத்து "ஈண்டு அவனும் அவற்றது (உயிர்களது) விடயத்தை யுணரும் " என்று மேற்கோள் எடுத் துக் கூறி யதிகாரணம் வகுத்தருளியதும், "முதல்வனும் உயிர்களா னுணரப்படும் விட யத்தை உடனின் றுணருவன் " என்று உரைவகுத்து விரித்தமையும், ஆண்டுரைத்த வையும் இங்கு வைத்துக் கண்டுகொள்க.

தண்ணீரும் போதிசோறும்-நீர்வேட்கை தீர்க்கத் தண்ணீரும், உறுபசி தீர்க்கச் சோறும் என்று நிரனிரையாக் கொள்க ; போதிசோறு - கறியும் கூட்டு உணவு வகைகளும் கூட்டிக்கட்டியசோறு. கட்டுசோறு என்பது உலக வழக்கு ; பசியினும் கொடியதாய் வருத்தும் சிறப்புப்பற்றி நீர் வேட்கையும், நீரும் முன்வைக்கப்பட்டன ;

வழிச்சார்கின்றர் - வழி - நம்பிகள் எழுந்தருளி வரும் வழியில் ; சார்கின்றராகி-முற்றெச்சம். சார்கின்றார் - வேடங்கொண்டிருந்தார் என மேல்வரும் பாட்டுடன் முடிக்க. "தன்கடன் அடியேனையுந் தாங்குதல், என்கடன் பணிசெய்து கிடப்பதே" என்று ஆண்டானுக்கும் அடிமைக்கும் முறையே கடமைகள் வகுத்த அரசுகள் திருவாக்கும், ஆண்டவன் கடமையை முன்வைத்த வைப்பு முறையும் கருதுக.

கண்ணுதலார் - சார்கின்றர் - வேதியராய் - வரவு பார்த்து இருந்தார் என்று மேற்பாட்டுடன் கூட்டி அமைத்துக்கொள்க.

காதல் வர - என்று பாடங் கொள்வாருமுண்டு. 156

3311. (வி - ரை) வேனிலுறு வெயில் வெம்மை தணிப்பதற்கு - வேனிற் காலமாதலின் வெயிலில் நடந்துவந்த வெப்பத்தினையும், இங்குத் தங்கிப் பொதி சோறுண்டு இளைப்பாறுதற்குரிய நேரத்தில் மூளும் வெப்பத்தினையும் தணிக்க.

தடம் - தடாகம் ; மலர்வாவி; தடம் போலும் பந்தர் - குளிர்ச்சிதரும் தொழில் பற்றிய உவமம் ; ஒருபால் - நம்பிகள் வரும் வழியில் ஒரு பக்கம் ; வரும் வழியில் அவர் உட்புகும்படி அமைத்தார் என்பது ; அமைத்து - எண்ணமாத்திரையில் உளதாகக் கண்டு.

ஆன மறைவேதியராய் - ஆன - விதி முறைப்படி அமைவதான ; மறைவேதியர் - மறை என்பது தொழில் முதலிய பண்பினைப் புலப்படுக்கஎன்றும், வேதியர் - என்பது சாதியினையும் உணர்த்தலிற் கூறியது கூறலன்மையுணர்க ; மறை - உண்மை நிலையினை மறைக்கும் என்றலுமாம் ; இப்பொருளில் மறை ஆன என்று கூட்டி உரைத்துக் கொள்க ; ஆன - மேற்கொண்ட

அருள் வேடம் கொண்டு - கருணை புலப்படக் கொள்ளும் திருவேடத்தினை மேற்கொண்டு ; இவ்வேடம் ஏனையோர் வேடம்போல மாயாகாரிய உருவமன்று ; கருணையே திருமேனியாகக் காட்டி என்பது; "குறித்ததொன் றாக மாட்டாக் குறைவில ளுத லானும்...நிறுத்திடு நினைந்த மேனி நின்மல னருளி னாலே" (சித்தி 1. 95) என்பது ஞானநூலின் முடிபு.

பார்த்து இருந்தார் - என்று கூட்டுக. இறைவர் செயலை முன்னும், வன்றொண்டர் தமை என்று தொண்டர் செயலைப் பின்னும் வைத்து வினைமுற்றினையும் முன் வைத்த வைப்புமுறை குறிக்கற்பாலது. "அவனரு ளாலே அவன்றாள் வணங்கி" (திருவா) ; "ஆட்டுவித்தா லாரொருவ ராடா தாரே" (தேவா) என்பன முதலிய திருவாக்குக்களா லறியப்படுமாறு இறைசெயல்......உயிரின் செய லிரண்டனுள் இறைவரருளும் செயலே முன்னிகழ்வதாம் என்பது உண்மை ; "குழகர் வழி பார்த்திருப்ப" "...தம்பிரான் தோழர் புகுந்து இருந்தார்" என மேல்வரும் பாட்டிற் கூறும் முறையும் காண்க.

வன்றெண்டர் - வலிமையாய்ப் பேசினும் விடாது தாமே வலிந்து தொண்டாக ஆளாகக் கொண்டமையால், அவர் வருந்தாமைக் காத்தல் தமது கடமையாயிற்று என்ற குறிப்புப் பெற இப்பெயராற் கூறினர். "வன்மைகள் பேசிட வன்றொண்டனென்பதோர் வாழ்வு தந்தார்" (நம்பி - திருவெண்ணெய் நல்லூரும் திருநாவலூரும் - 2)

வன்றெண்டர் தமைப் பார்த்து - "தம்மை யடைந்தார் வினைதீர்ப்ப தன்றோ தலையா யவர்தங் கடனு வதுதான்" (அரசு) என்ற இறைவர் கடமையும் காண்க. 157

3312. குருகாவூ ரமர்ந்தருளுங் குழகர்வழி பார்த்திருப்பத்
திருவாரூர்த் தம்பிரான் றோழர்திருத் தொண்டருடன்

வருவாரப் பந்தரிடைப் புகுந்துதிரு மறையவர்பாற்
பெருகார்வஞ் சேலவிருந்தார் " சிவாயநம " வேனப்பேசி. கரு௮

(இ - ள்) குருகாவூர்...இருப்ப - திருக்குருகாவூரில் விரும்பி வீற்றிருந்து அருள்புரியும் குழகராகிய இறைவர் முன்கூறியவாறு வன்றொண்டர் வரும் வழியைப் பார்த்திருந்தாராக; திருவாரூர்த் தம்பிரான் றோழர்...புகுந்து - திருவாரூரில் உள்ள தம்பிரான் தோழராகிய வன்றொண்டர் திருத்தொண்டர்களோடும் வருவார் அந்தப் பந்தருள்ளே புகுந்து; திருமறையவர்பால்......எனப்பேசி-திருமறையவராய் அங்கிருந்தவரிடம் மிக்க ஆர்வஞ் சென்றமையாலே அவரருகு " சிவாயநம " என்று சொல்லி யமர்ந்தனர்.

(வி - ரை) குருகாவூர்...இருப்ப - முன் கூறியவாறு இருப்ப என்க. வழி பார்த்தல் - அவ்வழியே நம்பிகள் வருவதனை எதிர்பார்த்தல்.

திருவாரூர்த் (தம்பிரான்) தோழர் - திருவாரூரில் வாழும் தோழர் என்க. தம்பிரான்றோழர் - நம்பிகளுக்கு அடியார் வழங்கிய பெயர். (273 - 275)

திருவாரூர்த் தம்பிரான் என்று கூட்டி யுரைப்பினும் அமையும்.

அப்பந்தரிடைப் புகுந்து - அவ்வழியிற் பந்தரினுள்ளே புகுந்து; அப்பந்தர் உருவாலும் திருவாலும் இடத்தாலும் அவ்வழி வருவார் உட்புகாமல் போக இயலாதபடி அமைக்கப்பட்ட நிலை குறித்தது. அப்பூதி நாயனாரது தண்ணீர்ப் பந்தரினுள் அவ்வழிப்போந்த ஆளுடைய அரசுகள் புகுந்தமை பற்றிய நிகழ்ச்சிகள் ஈண்டு நினைவுகூர்தற்பாலன.

திருமறையவர் - முன் " மறைவேதியர் " (3311) என்றதனையே தொடர்ந்து கூறியது; மறையவர் - வேடத்தினுள் மறைந்து நின்றவர்; மறைகளுக்குப் பொருளாவார் என்ற குறிப்பும் காண்க.

மறையவர்பால் - இருந்தார் என்று கூட்டுக.

பெருகார்வஞ் சேல - " நேசமுன் கிடந்த சிந்தை நெகிழ்ச்சி " (186), "கண்டதோர் வடிவா லுள்ளங் காதல்செய் துருகா நிற்கும் " (188) என்றவையும், பிறவும் பார்க்க; தம்மை யறியாமலே அவர்பால் நம்பிகளின் ஆர்வஞ் சென்றது.

"சிவாயநம" எனப் பேசி - பெரியோர்கள் சந்தித்தபோது முதலில் இறைவர் பெயர் சொல்லித் துதித்துப் பின் அளவளாவத் தொடங்குதல் மரபு. இங்கு இம்மரபு, தம்மை யறியாமலே முன்னின்ற இறைவரை நம்பிகள் துதித்ததாகிப், பயன் தந்தமை குறிக்கொள்க. பெரியோர் மரபுகள் எல்லாம் இவ்வாறு வரும் பயன் பற்றியன என்க.

பேசி - சொல்லி. 158

3313\. ஆலநிழற் கீழிருந்தா ரவர்தம்மை யெதிர்நோக்கிச்
" சாலமிகப் பசித்தீரிப் பொதிசோறு தருகின்றேன்;
காலமினித் தாழாமே கைக்கொண்டிங் கினிதருந்தி
ஏலநறுங் குளிர்தண்ணீர் குடித்திளைப்புத் தீரு"மென, கருகூ

3314\. வன்றொண்ட ரதுகேட்டு " மறைமுனிவர் தரும்பொதிசோ
றின்றுநமக் கெதிர்விலக்க லாகா"தென் றிசைந்தருளிப்
பொன்றயங்கு நூன்மார்பர் தரும்பொதிசோ றதுவாங்கிச்
சென்றதிருத் தொண்டருடன் றிருவமுது செய்தருளி, கசுO

3315. எண்ணிறந்த பரிசனங்க ளெல்லாரு மினிதருந்தப்
பண்ணியபின் னம்மருங்கு பசித்தணைந்தார் களுமருந்த
உண்ணிறைந்த வாரமுதா யொருகாலு முலவாதே
புண்ணியனார் தாமளித்த பொதிசோறு பொலிந்ததால். கசுக

3313. (இ - ள்) ஆலநிழல்...எதிர் நோக்கி - வடவாலமரத்தின் கீழ் எழுந்தருளியிருந்த இறைவர் முன் சொன்னவாறு இருந்த நம்பிகளை எதிர் நோக்கி, "சால மிக...தீரும்" என - நீர் மிக அதிகமாய்ப் பசித்தீர் ; என்னிடம் உள்ள இந்தப் பொதிசோறு தருகின்றேன் ; இனியும் காலம்தாழ்க்காமல் இதனை ஏற்றுக்கொண்டு இங்கு இனிமையாய் உண்டு பொருந்தும்படி நல்ல குளிர்ந்த தண்ணீரினைக் குடித்து இளைப்பைத் தீர்வீராக" என்று சொல்ல, கஙுஅ

3314. (இ - ள்) வன்றொண்டர்...இசைந்தருளி - வன்றொண்டர் அதனைக் கேட்டு "மறைவேதியராகிய இவர் தருகின்ற இந்தப் பொதிச்சோற்றினைக் கைக்கொள்ள இசையாது இன்று மறுப்பது நமக்குத்தகாது" என்று கருதி இசைந்தருளிச் செய்து ; பொன்தயங்கு...வாங்கி - பொன் விளங்கும் நூலணி மார்பினையுடைய இறைவர் தருகின்ற பொதிசோற்றினை வாங்கிக்கொண்டு ; சென்ற...செய்தருளி - உடன்சென்ற திருத்தொண்டர்களுடனே திருவமுது செய்தருளி, கசு௦

3315. (இ - ள்) எண்ணிறந்த...பண்ணியபின் - அளவில்லாத பரிசனங்கள் எல்லாரும் இனிதாக உண்ணும்படி செய்த பின்பு ; அம்மருங்கு...அருந்த - அந்தப் பக்கத்துப் பசித்து வந்தணைந்தவர்களும் உண்ண ; உண்ணிறைந்த...பொலிந்தது - உள்ளே நிறைந்த இனிய அமுதம் போல ஒரு சிறிதும் எவ்வாற்றானும் குறைவில்லாதபடி புண்ணிய மறைவேதியர் தாம் கருணையுடன் தந்த பொதிசோறு விளங்கிற்று ; (ஆல் - அசை) கசுக

இந்த மூன்று பாட்டுகளும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3313. (வி - ரை) ஆல நிழற் கீழ் இருந்தார் - மறையவராகிய சிவபெருமான்; வினைப்பெயர் ; அங்கு ஏனையோர் பந்தரின்கீழ் இருந்தார். இவர் ஆலநிழற்கீழ் இருந்தார் என்றதொரு தொனியும் காண்க.

அவர் தம்மை - சிவாயநம எனப்பேசித் தம்பால் வந்திருந்த நம்பிகளை : அவர் - முன்னறிசுட்டு.

சால மிகப் பசித்தீர் - சால மிக - மிகவும் அதிகமாக; ஒருபொருட் பன்மொழி மிகுதி குறித்தது. பசியினை, முகவாட்டம் - மேனியிளைப்பு - முதலிய புறத்தே தோற்றும் மெய்ப்பாடுகளாலன்றி உள்ளே நின்றபடி அறிந்தார் என்பது முன்னர்க் கருத்தறிந்து என்றதனால் அறியப்பட்டது.

இப்பொதிசோறு - தம்முன் இருந்த பொதி சோற்றினைக் காட்டி இப்பொதி என்றார் ; தருகின்றேன் - தருதல் ஒப்பவனது உரை ; நான் அநாதிசைவன் ; நீர் நம்மருளால் அதிகரித்து வழிவழிவரும் ஆதிசைவர் ; இவ்வொப்புமையால் நான் தரும் சோறு கொள்ளத்தகும் என்பது குறிப்பு ; மறையவர் சொல்லியவாறே மேல் நம்பிகளும் "மறை முனிவர் தரும் பொதிசோறு" (3315) என்பதும் காண்க.

காலம் இனித்தாழாதே - இனியும் தாழ்த்தலால் பசியும் அதனால்வரும் வருத்தமும் மிகும் என்று பரிவுடன் கூறிய கருணைமொழி.

கைக்கொண்டு - ஏற்றுக்கொண்டு; கையில் ஏற்றுக்கொண்டு என்பதும் குறிப்பு; இங்கு - இப்பந்தரிடையே: இது வழியிடை உணவு கொள்ளத்தக்க இடம் இது என்ற குறிப்புமாம்.

ஏல நறுங் குளிர் தண்ணீர் குடித்து - ஏல - பொருந்த; பொதிசோற்றுண வுக்குப் பொருந்த உள்ள: நறுமை - இனிமை; குளிர் தண்ணீர் - குளிர்ந்த நீரே குடிக்கத்தக்கது என்பது மருத்துவ நூல் விதி; நோய் கொண்டவர்க்கே வெந்நீர் விதிக்கப்படும். இங்குக் கூறிய நீர் மறையவனார் உடன்கொண்டு வந்தது (3310).

இளைப்புத் தீரும் - இளைப்பு - பசி - தாகம் - வெயில் வெப்பம் - வழிநடை முதலிய பலவற்றாலும் நேர்ந்த இளைப்பு; தீரும் - இளைப்பினின்றும் நீங்குவீராக.

என - என்று சொல்ல. 159

3314. (வி - ரை) வன்றொண்டர்......இசைந்தருளி - வன்றொண்டர் - முன் "வன்றொண்டர்" (3311) என்றதும் காண்க. மறை முனிவர் - மறையவர் வேடத்துள் மறைந்து நின்ற முனிவர்.

பொதிசோறு...ஆகாது - இது நம்பிகள் மனத்துள் எண்ணியது. திருவருட் குறிப்பினால் எழுந்த கருத்து.

எதிர் விலக்கல் - மறுத்து ஏதேனும் சொல்லி இசையாது விலக்குதல். இன்று...ஆகாது - வரும் வழியிடையிலும் முன் அறியாதாரிடத்தும் இவ்வாறு தரப் படும் சோற்றினை ஏதேனும் காரணம்பற்றி விலக்குதலன்றி, ஏற்பது பெரியோரது மரபன்றாயினும், இன்று இஃது அவ்வாறு மறுக்கற்பாலதன்று என்பதாம். இஃது இறைவரது அருட்பார்வையாலும் சொல்லாலும் ஆகியதேயன்றி நம்பிகளது பசி வருத்தத்தா லாயதன்று.

பொன் தயங்கு நூன்மார்பர் - மறையவராய் நின்ற இறைவனார்; பொன் - பொன்ஒளி; தயங்குதல் - விளங்குதல்; பொன்னூர் மார்பர் - நூன்மார்பர் - என்று தனித்தனி கூட்டுக; சோறு அது - அது - பகுதிப் பொருள் விகுதி.

சென்ற - உடன்வந்த; சென்று - என்ற பாடம் சிறப்பிலது. 160

3315. (வி - ரை) எண்ணிறந்த பரிசனங்கள் - நம்பிகளுடன் அளவில்லாத பரிசனங்கள் யாத்திரையில் தொடர்ந்து சென்றார்கள் என்பது விளங்குகின்றது; ஆளுடைய அரசுகளது தனித்த யாத்திரை இதனுடன் ஒப்பு நோக்கி உணரற்பாலது. நம்பிகளின் பரிசனங்களைப் பற்றிப் பின் 3329லும் பார்க்க.

எல்லாரும் - உடனிருந்த தொண்டர்களும் பரிசனங்களல்லாத பிறரும்; பரி சனங்களாய் வந்த எல்லாரும் என்றலுமாம்.

அம்மருங்கு பசித்தணைந்தார்களும் - வழிக்கரையில் தண்ணீர்ப்பந்தருடன் பொதிசோறு மருத்தலின் அவ்வழியே செல்வோர்களுட் பசித்து வந்தவர்கள். இவ்வாறாகிய பசு தர்மங்களும் செய்யத்தக்கவை என்ற நிலையினை அறஞ்சொன்ன இறைவர் தாமே செய்து காட்டியவாறாம்; நம்பிகள் பரிசனங்கள் இவர்கள்பாற் பட்டபோது இதுவே பதி தருமமாகும்; பசித்தணைந்த ஏனையோர்பாற்பட்ட போது அதுவே பசு தருமமாகும். இறைவர் செய்தமையால் இவற்றின் பயன்கள் முறையேஅவை செய்யப்பட்டார்பாற் சார்ந்தன. இறைவர் தந்த பொதிசோறு ஒன்றேயாயினும் அதனை உண்டார் பிறரெல்லாம் நம்பிகள்போலப் புனிதர்களா யுயர்ந்தாரலர் என்பதும் காண்க; மேல் வருவதன் கருத்தும் கருதுக.

உண்ணிறைந்த......பொலிந்ததால் - உண்ணிறைந்த ஆரமுதாய் - உலவாக் கோட்டையாகிய அமுதமாகி.

உண்ணிறைதல் - எடுக்க எடுக்கக் குறையாது உள்ளே நிறைந்து பொலிதல்; ஆரமுது - பொதிசோறு.

அமுதாய் - அமுதம்போல என்றலுமாம்.

புண்ணியனார் - எல்லாப் புண்ணியங்களின் பயனானவர் சிவபெருமான்.

அளித்த பொதிசோறு - தண் அளியுடன் கொடுத்தருளிய சோறு; ஈண்டு, நீர்வேட்கையாலும் பசியாலும் மிக வருந்திவரும் தம் அடியாராகிய நம்பிகளுக்கு அளித்தது சாலும்; ஏனைப் பரிசனங்களும் மற்றும் அணைந்தோர்களுக்கும் அளித்த தன் இயைபு என்னை? எனின், அவர்களும் பசியான் வருந்தி யணைந்தமை காரணமாக நம்பிகள் பொருட்டு வந்த தண்ணளி எல்லார்க்குமாயிற்று என்க; புவனத்தில் உண்மையில் நீரும் உணவுப்பொருளும் உளவாக்கி எல்லாவுயிர்க்கும் பசிதீர்க்க வுதவுபவர் இறைவரேயாம் என்பது மறக்கற்பாலதன்று; ஆயின் ஈண்டுப் பொதிசோறேயாகி உண்ணப்பெற்றது நம்பிகளது சார்பினாலும் அங்கு அவ்வவர் வந்து சார்ந்த ஊழ்வினையாகிய நியதியாலுமாம்; ஏனையோர் பக்கல் பயன் வேறு என்பது அணைந்தார்களும் என்ற உம்மையாலும் பெறப்படும். 161

3316. சங்கரனார் திருவருள்போற் றண்ணீரின் சுவையார்ந்து
பொங்கிவரு மாதரவா லவர்நாமம் புகழ்ந்தேத்தி
அங்கயர்வாற் பள்ளியமர்ந் தருகணைந்தார் களுந்துயிலக்
கங்கைசடைக் கரந்தாரப் பந்தரொடுங் தாங்கரந்தார். கசுஉ

(இ - ள்) சங்கரனார்...ஆர்ந்து - சங்கரனாருடைய திருவருளினைப் போலப் பெற்ற தண்ணீரையும் அருந்தி அதன் சுவையும் நிறைந்து; பொங்கிவரும்...புகழ்ந்தேத்தி - மேன்மேலும் அதிகரித்து மிகுகின்ற அன்பினாலே அவரது திருநாமமாகிய திருவைந்தெழுத்தினையே புகழ்ந்து துதித்து; அங்கு...துயில - அவ்விடத்தில் உடல் இளைப்பினாலே நம்பிகள் பள்ளிகொண்டு துயிலவும், பக்கத்தில் அணைந்தவர்களும் துயிலவும்; கங்கை...கரந்தார் - கங்கையைச் சடையிலே ஒளித்தவராகிய சிவபெருமான் அந்தப் பந்தருடனே தாமும் ஒளித்தருளினார்.

(வி - ரை) சங்கரனார் - சுகத்தைச் செய்பவர் என்பது சொற்பொருள்; இங்கு வழியிடை எதிர்பார்த்திருந்து பொதிசோறும் தண்ணீரும் கொடுத்து இளைப்பு நீக்கிச் சுகம் செய்தவர் என்ற காரணக் குறிப்புப்பட இப்பெயராற் கூறிய நயம் காண்க.

திருவருள் போற் - சுவை ஆர்ந்து - அருள் இனிப்பது போலத் தண்ணீரும் இனிப்பது என்பதாம்; சோறு அருந்திய அளவெல்லாம் முன்கூறி முடித்தபின், நீரின் சுவை ஆர்தலைக் கூறியது, உணவு உண்டு முடிந்த நிலையினன்றி, உணவு கொள்ளும் இடையில் நீர் உண்ணலாகாது என்ற மருத்துவ நூலோர் முடிபு குறித்தற்கு.

அவர் நாமம் புகழ்ந்து ஏத்தி - அவர் நாமமாவது திருவைந்தெழுத்து; "ஆலைப் படுகரும்பின் சாறு போல வண்ணிக்கு மைந்தெழுத்தின் நாமத் தான்காண்" (தேவா); முன்பு, இருந்தார் "சிவாயநம" வெனப்பேசி (3312) என்றது காண்க. நம்பிகள் தமையறியாமலே அச்சிவ மறையவரது நாமத்தையே துதிக்கின்றார்; யாது நன்மை யாவர்மூலம் வரினும் அவை யாவும் சிவனருள் என்று கொண்டு சிவனைத் துதித்தல் பெரியோரியல்பு. "வழுக்கி வீழினுந் திருப்பெய ரல்லால் மற்று நானறி யேன் மறு மாற்றம்" (நம்பி - தேவா) என வருவதும், "நான் மறக்கினுஞ் சொல்லுநா நமச்சி வாயவே" (நம்பி) என்றதும் கருதுக.

அங்கு அருளாற் பள்ளி அமர்ந்து - அருளால் - அருள்வயப்பட்டு ; அருள் வயத்தாலன்றி, அது துயிலுதற் கான இடமும் காலமுமல்ல என்பது குறிப்பு. " அருளேயோ ?" (3202) என்றதும், ஆண்டுரைத்தவையும் பார்க்க ; அங்கு - வரும் வழியிடைக் கண்ட அப்பந்தரிடையே : பள்ளி அமர்ந்து - துயின்று ; நம்பிகள் என்ற எழுவாய் தொக்குநின்றது. அருகணைந்தார்களும் - உம்மை இறந்தது தழுவிய எச்சவும்மை.

சடைக்கரந்தார்...தாம்கரந்தார் - கரந்தார் - முன்னையது வினைப்பெயர் ; பின்னையது வினைமுற்று ; சொற்பின் வருநிலை. 162

3317. சித்தநிலை திரியாத திருநாவ லூர்மன்னர்
அத்தகுதி யினிற்பள்ளி யுணர்ந்தவரைக் காணுமை
" இத்தனையா மாற்ற மறிந்திலே " னெனவெடுத்து
மெய்த்தகைய திருப்பதிகம் விளம்பியே சென்றடைந்தார். கக௬௩

(இ - ள்) சித்தநிலை...பள்ளியுணர்ந்து - மனநிலையின் ஒருசிறிதும் திரிதல் இல்லாத திருநாவலூர்த் தலைவராகிய நம்பிகள் அவ்வாற்றினிலே துயிலுணர்ந்து ; அவரைக் காணுமை-அந்த மறைவேதியரைக் காணுமையால்; "இத்தனையாம்...எடுத்து" - " இத்தனை யாமாற்றம் அறிந்திலேன் " என்று தொடங்கி ; மெய்த்தகைய... சென்றடைந்தார் - சத்தாந் தன்மையுடைய திருப்பதிகத்தினைப் பாடியருளியவாறே திருக்குருகாவூரினைச் சென்றடைந்தார்.

(வி - ரை) சித்தநிலை திரியாத - துயிலும்போதும் சித்தம் திரியாது அறிதுயில் கொண்டு சிவயோக நிலையில் சிவனை மறவாநிலையில் உள்ள ; திரியாதவராயினும் இறைவர் காட்டினாலன்றி அறியுமாறில்லை என்பது குறிப்பு.

அத்தகுதியினிற் பள்ளி உணர்ந்து-அந்த நிலையில் நின்றவாறே துயிலுணர்ந்து.

காணுமை - காணுதபடியால் ; அவரை - மறைவேதியராய்க் காணநின்று பொதிசோறும் நீரும் அளித்த அவரை ; முன்னறிசுட்டு.

" இத்தனையா மாற்ற மறிந்திலேன்" என - இப்பதிகத் தொடக்கமாகிய முதற் குறிப்பு ; மாற்றம் - மாறுதல் ; எடுத்து - தொடங்கி.

மெய்த்தகைய - மெய்விளங்கும் தன்மையுடைய ; சென்று - அவ்விடத்தினின்றும் திருக்குருகாவூருக்குச் சென்று. 163

திருக்குருகாவூர் வெள்ளடை

திருச்சிற்றம்பலம் பண் - நட்டராகம்

இத்தனையா மாற்ற மறிந்திலே னெம்பெருமான்
பித்தரோ வென்றும்மைப் பேசுவார் பிறரெல்லாம்
முத்தினை மணிதன்னை மாணிக்க முளைத்தெழுந்த
வித்தனே குருகாவூர் வெள்ளடை நீயன்றே. (1)

ஆவியைப் போகாமே தவிர்த்தென்னை யாட்கொண்டாய்
வாவியிற் கயல்பாயக் குளத்திடை மடைதோறுங்
காவியுங் குவளையுங் கமலஞ்செங் கழுநீரும்
மேவிய குருகாவூர் வெள்ளடை நீயன்றே. (2)

பாடுவார் பசிதீர்ப்பாய் பரவுவார் பிணிகளைவாய்
ஓடுநன் கலனுக வுண்பலிக் குழல்வானே

காடுநல் லிடமாகக் கடுவிருள் நடமாடும்
வேடனே குருகாவூர் வெள்ளடை நீயன்றே. (3)

வளங்கனி பொழின்மல்கு வயலணிந் தழகாய
விளங்கொளி குருகாவூர் வெள்ளடை யுறைவானை
இளங்கிளை யாரூரன் வனப்பகை யவளப்பன்
உளங்குளிர் தமிழ்மாலை பத்தர்கட் குரையாமே. (10)

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு** :—இறைவரே! இத்தனையாம் மாறுதல் அடியேன் அறிந்திலேன்; தேவரீர் குருகாவூர் வெள்ளடை நாதர் நீரே யன்றோ? தேவரீர் எனது பசியினைப் போக்கினீர்; ஆவியைப் போகாமே தடுத்து ஆண்டருளினீர். இது சரித ஆதாரவான பதிகம்.

**பதிகப் பாட்டுக் குறிப்பு** :—(1) இத்தனை ஆம் மாற்றம் - இவ்வளவும் ஆகும் மாறுதல்; முன்கூறிய சரித வரலாறு காண்க; இத்தனையாமாற்றை - என்பது பாடமாயின் ஆற்றை - ஆற்றினை (வழியை) என்க; அறிந்திலேன் - சித்தநிலை திரியா திருப்பினும் உமது திருவருள் காட்டினாலன்றி யறியுமாறில்லை; ஆதலின் அறிந்திலேன் என்றதாம்; பிறரெல்லாம் - பிறர் உம்மைப் பித்தர் என்னினும் நான் இனி அவ்வாறு சொல்லமாட்டேன் என்பது குறிப்பு; முத்தினை...வித்தனே- அருமைப்படப் பாராட்டிப் போற்றியது; வெள்ளடை - சுவாமி பெயர்;—(2) ஆவியை...ஆட்கொண்டாய் - இச்சரித வரலாற்றுக் குறிப்பாகிய ஆதரவு;—(3) பாடுவார் பசிதீர்ப்பாய் - சரித ஆதரவு; பாடுவாரது பசியினைத் தீர்ப்பீராயினும் நீர் உண்ணப் பலிதிரிவீர் என்று பாராட்டியது;—(3) வெப்பொடு பிணியெல்லாம் - பிறவிப்பிணி யுள்ளிட்ட எல்லாம்; மேல் (5) வரும்பழி என்றதும் காண்க;—(5) வரும் - வரக்கடவதாகிய; பழி - பிறவியால் வரும் கேடு;—(6) பண்ணிடைத் தமிழ் ஒப்பாய் - பண் - தமிழ் மொழியின் சிறப்பியல்பாகிய பண்; பழத்தினிற் சுவை - அத்துவிதக் கலப்பு; கண்ணிடை மணி - காணுமுபகாரம்; கடுவிருட் சுடர் - காட்டுமுபகாரம்; பாடும் தமிழ் காரணமாகச் சுவை அமுது தந்து கண் காண நின்று ஒளித்தபின் உமது தன்மை விளங்க அறியவைத்தீர் என்றதொரு குறிப்பாகிய உள்ளுறையும் காண்க; மண்ணிடை...வாராமே - சரித ஆதரவு;—(7) போந்தனை - மறைந்து போயினை; நோந்தனை - வருந்துமளவு; நுன்னலது - உன்னையல்லாமல் வேறொன்றினையும் "மற்றுப் பற்றெனக்கின்றி" "மற்று நானறியேன் மறுமாற்றம்" முதலியவை காண்க; சாந்தனை வரும் மேலும் - மேலும் மேலும் இறத்தல் பிறத்தல்; தடுத்தாட்கொண்ட வரலாறும் குறிப்பு: இச்சரித வரலாறும் குறிப்பு; மேல் வரும் இரண்டு பாட்டுக்களும் பார்க்க;—(8) மலக்கு - துன்பம்; சலச்சல மிடுக்கு - மிகவும் துன்பம் செய்யும் வன்மை; கடுந்துயர் - மரணத் துன்பம்;—(9) படுவிப்பாய் - ஆளாக்குவாய்; அல்லாதாரது (தொடக்கினைக்) கெடுவிப்பாய் என்க; தொடக்கினை என்பது சொல்லெச்சம்; "மறைப்பித்துத் தம்மை மலங்களின் வீழ்க்குஞ், சிறப்பில்லார் தந்திறத்துச் சேர்வையற" என்பது சிவஞானபோதம்; விடுவிப்பாய் - செல்லவிடுத்தல்;—(10) இளங்கிளை - சிறுவன்; இளையவன்; உரை - உரைக்கத்தக்க பொருள்.

தலவிசேடம் :—திருக்குருகாவூர் – IV-பக்கம் கசுக பார்க்க; காவிரி வடகரை, சோழநாட்டு 13-வது தலம்.

3318. குருகாவூ ரமர்ந்தருளுங் குழகனார் கோயிலினுக்
கருகார்பொற் கோபுரத்தை யணைந்திறைஞ்சி யுள்புக்கு
வருகாதல் கூரவலங் கொண்டுதிரு முன்வணங்கிப்
பருகாவின் னமுதத்தைக் கண்களாற் பருகினார் கசுச

(இ - ள்) குருகாவூர்...அணைந்திறைஞ்சி - திருக்குருகாவூரின்கண் விரும்பி யிருந்து அருள் புரிகின்ற இறைவரது திருக்கோயிலினுக்கு அருகே சார்ந்து நிறைந்த அழகிய திருக்கோபுரத்தை அணைந்து வணங்கி; உள்புக்கு...வணங்கி - உள்ளே புகுந்து நிரம்பின பெருங்காதல் கூர வலம்வந்து இறைவரது திருமுன்பு வணங்கி; பருகா...பருகினார் - முன் பருகப்படாத இனிய அமுதம்போலும் சிவபெருமானைக் கண்களினாலே பருகினார்.

(வி - ரை) வருகாதல் - இறைவர் தம்பாற் செய்த பேரருள் காரணமாக வரும் பேரன்பு.

பருகா இன்னமுதத்தைக் கண்களாற் பருகினார் - பருகாத இனிய அமுதமாவார் இறைவர்; முன்னர் இவ்விறைவரே மறை வேதியராய்க் கண்முன் வந்தருளியும் அவரை அவரே யென்று காணாமையின் அவரளித்த அமுதத்தினைப் பொதிசோறென்று பருகினாரே யன்றி அவரது திருவருளை இறைவரதென்று கண்டு பருகினாரல்லர்; அவ்வாறு அவர் வெளிப்பட்டு நின்ற பந்தரின் இடத்திற் பருகாது இங்குப் பருகினார் என்க. பருகுதல் - வாயின் றொழில் இங்கு அநுபவம் நுகர்ச்சி என்ற பொருளில் கண்களின் றொழிலாகக் கூறப்படுதலின் கண்களால் என விசேடித்தார்; அமுதம் தேவர்கள் வாயினாற் பருகினாற் போலப் பருகப் படாமையின் பருகாவின்னமுதம் என்றும், காட்சி வாயிலாகத் தரிசித்துப் பேரானந்த மடைதல் பருகுதலோ டொத்தலின் கண்களாற் பருகினார் என்றும் கூறினார் என்பது ஈண்டு ஆறுமுகத் தம்பிரானார் உரைக்குறிப்பு. இக்கருத்தையே தொடர்ந்து மேற்பாட்டிற் " கண்ணார்ந்த வின்னமுதை " என்பதுங் காண்க.

குருகாவூர் மணிவயிரக் கோழுந்தனார்—என்பதும் பாடம். 164

3319. கண்ணார்ந்த வின்னமுதைக் கையாரத் தொழுதிறைஞ்சிப்
பண்ணார்ந்த திருப்பதிகம் பாடியே பணிந்தேத்தி
உண்ணாடும் பெருங்காத லுடையவர்தாம் புறத்தெய்தி
நண்ணார்வத் தொண்டருட னங்கினிது நயந்திருந்தார். கசுரு

(இ - ள்) கண்ணார்ந்த...தொழுதிறைஞ்சி - கண்ணிறைந்து நுகர நின்ற இனிய அமுதமாகிய இறைவரை; கையாரத் தொழுதிறைஞ்சி - கைகள் குளிரத் தொழுது வணங்கி; பண்ணார்ந்த...பணிந்தேத்தி-பண்ணிறைந்த திருப்பதிகத்தினைப் பாடியே வணங்கித் துதித்து; உள்நாடும்...புறத்தெய்தி - உள்ளத்தினுள்ளே சிவயோகநிலையில் நாடி நுகரும் பெருங்காதலுடையவராகிய நம்பிகள், புறத்திலே வந்து; நண் ஆர்வம்...இருந்தார் - பொருந்திய பெரிய அன்பு மிகுதியும் உடைய திருத்தொண்டர்களுடனே கூடி அத்திருப்பதியினிடத்து இனிதாக விரும்பி எழுந்தருளியிருந்தார்.

(வி - ரை) கண் ஆர்ந்த இன்னமுதை - கண் ஆர்தல் - கண்களால் நிறையக் கண்டு நுகர்தல்; அமுது - அமுது போல்வாரை அமுதென்றதுபசாரம்.

கண்ணார்ந்த - கையார - "கண்ணாரக் கண்டுமென் கையாரக் கூப்பியும்" (அம்மை. அற். அந்.); "கையாரத் தொழுதருவி கண்ணாரச் சொரிந்தாலும்" (திருவிசைப்பா)

பண்ணார்ந்த திருப்பதிகம் பரிடியே - இப்பதிகம் கிடைத்திலது !

உள்நாடும் பெருங்காதலுடையவர் - உள் நாடுதல் - சிவயோக நிலையில் இறைவரை உள்ளத்தில் கண்டு கூடிச் சிவாநந்த நுகர்ச்சியில் திளைக்கும் பேரார்வமுடையவர் நம்பிகள்; "பன்னாளும் பயில்யோகம் பரம்பரையின் விரும்பினார்" (327) என்றதும், ஆண்டுரைத்தவையும் பார்க்க; "தேடுவன் றேடுவன் றிண்ணெனப் பற்றிச் செறிதர, ஆடுவ னாடுவ னாமாத் தூரெம் மடிகளைக், கூடுவன் கூடுவன் குற்றம தற்றென் குறிப்போடே" "ஓர்ந்தன னோர்ந்தன னுள்ளத்துள் ளேநின்ற வொண்பொருள்" "தேடுவன் றேடுவன் செம்மலர்ப் பாதங்க ளுடோறும், நாடுவ னாடுவ னாபிக்கு மேலேயோர் நால்விரல்...மகிழ்ந்தனே யாடுவ னாடுவன்" (திருவாமாத்தூர்) என்பனவாதி நம்பிகள் திருவாக்குக்கள் காண்க; "தன்னையா ளுடைய பிரான் சரணார விந்தமலர், சென்னியிலுஞ் சிந்தையிலு மலர்வித்து" (328) முதலியவையும் பார்க்க.

பெருங் காதலுடையவர் - இது நம்பிகளது இயல்பு குறித்தது.

நண் ஆர்வத் திருத்தொண்டர் - நண் - நம்பிகளுடன்கூட இறைவர்பாற் பொதிசோறுண்டு இறைவர் கரந்தமை யறிந்து கூடவே வந்து பொருந்திய; ஆர்வம் - இறைவரது அந்த அருளிப்பாட்டில் ஈடுபட்டதனால் அன்புமிக்க. உடன் நண்ணிய.

நயந்து - விரும்பி; இனிது - இன்பம் பொருந்தி. 165

3320. அந்நாளிற் றம்பெருமா னருள்கூடப் பணிந்தகன்று
மின்னார்செஞ் சடைமுடியார் விரும்புமிடம் பலவணங்கிக்,
கன்னாடு மெயில்புடைசூழ் கழிப்பாலை தொழுதேத்தி,
தென்னாவ லூர்மன்னர் திருத்தில்லை வந்தடைந்தார். கசுசு

(இ - ள்) அந்நாளில்...அகன்று - அந்நாளிலே தமது பெருமானது திருவருள் விடை பெற்றுப் பணிந்து அங்கு நின்றும் நீங்கிப் போய்; மின்னார்...வணங்கி - ஒளி விளங்கும் சிவந்த சடையினையுடைய இறைவர் விரும்பி வீற்றிருக்கும் இடங்கள் பலவற்றையும் வணங்கிக்கொண்டு; கல்நாடும்...ஏத்தி - கல்லினாலியன்ற அழகிய மதில் பக்கத்திற் சூழ்கின்ற திருக்கழிப்பாலையினைத் தொழுது துதித்து; தென்நாவலூர்...அடைந்தார் - தென்நாவலூரில் அவதரித்த தலைவராகிய நம்பிகள் திருத்தில்லை நகரின்கண் வந்து அடைந்தனர்.

(வி - ரை) அருள்கூட - திருவருள் பொருந்த விடைபெற்று; அருள் - கூடும்படி பணிந்து என்று கூட்டி உரைத்தலுமாம்.

இடம்பல வணங்கி - இவை (தென்) திருமுல்லைவாயில், திருமயேந்திரப்பள்ளி, திருநல்லூர்ப் பெருமணம் முதலாயின என்பது கருதப்படும். இவற்றிற்கு நம்பிகள் பதிகங்கள் கிடைத்தில! இவற்றை வணங்கிக் கொள்ளிடத் திருநதி கடந்து நம்பிகள் வடக்கு நோக்கிச் சென்றருள்கின்றார்.

கல்நாடும் எயில் - கல் எயில் - நாடும் எயில் - என்று தனித்தனிக் கூட்டுக; கல்எயில் - கல்லாலியன்ற மதில். நாடும் - நாடத்தக்க; அழகிய.

கழிப்பாலை - திருக்கழிப்பாலையினை; கன்னாடு மெயில் புடைசூழ் கழிப்பாலை - இத்திருக்கோயில் முன்னர்ப் பெருந் திருக்கோயிலாகக் கொள்ளிட நதியின் வட

கரையில் இருந்தமை அறியப்படும்; அஃது ஆற்றின் வெள்ளத்தில் அழிவு பட்டமையால் இப்போது சிவபுரியில் (3 திருநெல்வாயில்) சிறு தனியாலயமாகத் தாபிக்கப்பட்டுள்ளது. தலவிசேடம் பார்க்க. "கழியார் செல்வமல்கும்" (10) என்ற பதிகம் இதன் முன்னாட் பெருமை குறிப்பது. ஏத்தி - திருப்பதிகம் பார்க்க.

அருள்கூர—மருங்கணைந்தார்—என்பனவும் பாடங்கள். 166

திருக்கழிப்பாலை

திருச்சிற்றம்பலம் பண் - நட்டராகம்

செடியேன் றீவினையிற் றடுமாறக் கண்டாலும்
அடியா னாவவெனா தொழிதல் தகவாமே?
முடிமேன் மாமதியும் மரவும் முடன்றுயிலும்
வடிவே தாமுடையார் மகிழுங் கழிப்பாலையதே. (1)

பரிசே ரில்புகழான் பரமன் பரமேட்டி
கழியார் செல்வமங்குங் கழிப்பாலை மேயானைத்
தொழுவா னூலர்கோ னாரூ னுரைத்ததமிழ்
வழுவா மாலைவல்லார் வானோருல காள்பவரே. (10)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—என்னை விலை ஆவணமுடையான்; என் வினை தீர்த்தாட் கொண்டவன்; அவனது இடம் கழிப்பாலையதே.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) செடியேன் - குற்றமுடையவன்; ஆவ - இரக்கச்சொல்; தகவாமே - தகவன்று; வினா எதிர்மறை குறித்தது; மதியும் அரவும் உடன் துயிலும் - துயிலுதல் - ஈண்டுத் தங்குதல் என்ற பொருளில் வந்தது; பகைப்பொருள்களைப் பகைதீர்த் துடனிருக்கவைத்தல் இறைமைக்குணம்; "பாம்போடு திங்கள் பகை தீர்த்தாண்டாய்" (தேவா); அதுபோல் என்வினையின் கொடுமை தீர்த்து உடன் வைக்கவேண்டும் என்பது குறிப்பு; வடிவே - ஏகாரம் தேற்றம்; மேல் 3-5-பாட்டுக்களு மிக்கருத்தன;—(2) இறைவர் தமக்குச் செய்த பேரருளை வியந்து போற்றியது;—(3) நின் அருளில் ஒறுத்தாய் - அருட்குணங் காரணமாக என் குற்றங் கண்டபோது ஒறுத்தாய் - தண்டித்தாய்; ஒறுத்தல் - அருட்குணம்; "ஒறுத்தா லொன்றும் போதுமே" (திருவா); மேல் 5-வதுபாட்டும் பார்க்க; "தந்தைதாய்...அடித்துத் தீய பந்தமு மிடுவர்...இந்த சீர் முறைமை யன்றோ வீச னார் முனிவு மென்றும்" (சித்தி. 2-15); அறியாமல் - பிறர் அதன் கொடுமையினை அறியாதபடி;—(4) சுரும்பார்...அடியார் - அடியார்களிலக்கணம்; அடியாரோடும் - தொண்டரோடு கூடுதல் - அணைந்தோர் தன்மை; (போதம்-12 சூத்) சைவத்திறத்தின் ஞானநூல்க ளுட்கண்ட அரிய உண்மைகளுள் ஒன்று; விரும்பேனுன்னை யல்லால் - எதிர்மறை உறுதி குறித்தது;—(5) விலை ஆவணமுடையாய் - ஆவணங் காட்டி ஆட்கொண்டமை; "மோதுவிப்பா யுகப்பாய் முனிவாய்" தேவா); வினைகளவை போகக் காத்தாய் - என்க; பார்த்தாயுனக்கு என்பது பார்த்தானுக்கு - என நின்றது;—(7) பருத்தாள் வன் பகடு - யானை; பரு - பரிய; வன் - வலிய; பகடு - ஈண்டு யானை என்றபொருளில் வந்தது; படம் - போர்வை;—(8) உடைத்தாய் - அழித்தாய்;—(9) மெய்யே நின்றெரியும் விளக்கு - சத்துச் சொரூபமாக நிலை பெற்று ஒளிவிடும் விளக்கு;—(10) சேர்இல் - சேர்தல் இல்லாத; சேர் - முதனிலைத்

தொழிற் பெயர்; சேர்தல் ; கழியார் செல்வம் - கடற்கழியின் வழி வந்து சாரும் முத்து-பவளம் முதலிய மணிகளும் ஏனைக் கடல்படு பண்டங்களாகிய செல்வங்களும்.

தலவிசேடம்:—திருக்கழிப்பாலை - சோழநாட்டுக் காவிரி வடகரை 4-வது பதி ; III பக்கம் உசறு பார்க்க.

IIIவது முறை - தில்லை வழிபட்டது.

3321\. சீர்வளருந் திருத்தில்லைத் திருவீதி பணிந்துபுகுந்
தேர்வளர்பொற் றிருமன்று ளேடுத்தசே வடியிறைஞ்சிப்
பார்வளர மறைவளர்க்கும் பதியதனிற் பயின்றுறைவார்
போர்வளர்மே ருச்சிலையார் திருத்தினைமா நகர்புகுந்தார் கசுஎ

(இ - ள்) சீர்வளரும்...புகுந்து - சிறப்புக்கள் பெருகும் திருத்தில்லைப்பதியின் திருவீதியினை வணங்கி உள்ளே புகுந்து ; ஏர்வளர்...இறைஞ்சி - அழகு வளரும் திருப்பொன்னம்பலத்தில் ஆடுகின்ற தூக்கிய திருவடியினைப் பணிந்து ; பார் வளர ...உறைவார் - உலகம் வாழும்பொருட்டு வேத ஒழுக்கங்களை வளர்க்கின்ற அத்திருப் பதியில் பணிந்து தங்குவாராகிய நம்பிகள் ; போர்வளர்...புகுந்தார் - போரில் மிக விளங்கிய மேருமலையாகிய வில்லினையுடைய சிவபெருமானது திருத்தினைமா நகரி னுள்ளே சென்று புகுந்தருளினர்.

(வி - ரை) சீர்வளரும்...புகுந்து - இது நம்பிகள் தில்லையிற் சென்று வழி பட்டமை மூன்றாவது முறையாகும். திருமுதுகுன்றினின்றும் வரும் வழியில் பேரூர்ப் பெருமானை நினைந்து பாடி வழிபட்டது இரண்டாவது முறையாகும். 3264 முதல் 3270 வரை பார்க்க.

ஏர்வளர்...இறைஞ்சி - பொற்றிருமன்று - பொன்னம்பலம் ; எடுத்த சேவடி - தூக்கிய திருவடி ; (குஞ்சித பாதம்) ; "இனித்த முடைய எடுத்தபொற் பாதம்" (தேவா). உயிர்களைப் பிறவிக்குழியினின்றும் எடுத்த திருவடி என்பதுமாம்.

பார்வளர மறைவளர்க்கும் பதி - மறை - மறையொழுக்கமாகிய எரி வளர்த்தல் முதலியவை ; ஆகுபெயர் ; "கற்றாங்கு எரியோம்பிக் கலியை வாராமே செற்றார்" (தேவா) ; "வருமுறை யெரிமூன் றோம்பி மன்னுயி ரருளான் மல்க... அருமறை நான்கி னோடா றங்கமும் பயின்று வல்லார்" (354) ; "அறுதொழில் ஆட்சி யாலே யருங்கலி நீக்கி யுள்ளார்" (355); "முழுதுல கினையும் போற்ற மூன் றெரி புரப்போர்" (855) என்பன முதலியவை காண்க.

பதியதனிற் பணிந்து உறைவார் - அப்பதியிலே வந்து வணங்கி அதன்புறத்து உறைவார் என்க. 2063 - 2064 பார்க்க. பணிதல் மட்டும் தில்லையின் கண்ணும், உறைதல் அதற்குத்தக்க வேறு இடத்தினுமாகக் கொள்பவர் ; உறைவார் - வினைப் பெயர் ; உறைவாராகிய நம்பிகள் ; உறைவார் - புகுந்தார் என்று கூட்டி முடிக்க ; இவ்வாறு கூறியதனாலும் உறையுமிடம் வேறென்பது குறிப்பாலுணர்த்தப்பட்டது.

போர்வளர் மேருச் சிலையார் - போரின் பொருட்டு வளர்ந்த மலை ; வளர்தல் - ஈண்டு விளங்கிய என்னும் பொருட்டு.

திருத்தினைமா நகர் புகுந்தார் - முதன்முறை திருத்தினை நகரினின்றும் கிழக்கு நோக்கித் திருத்தில்லையில் எழுந்தருளினர் ; இம்முறை திருத்தில்லையினின்றும் மேற்குநோக்கிச் சென்று திருத்தினை நகரினிற் புகுந்தனர். திருத்தினை நகர்வழிபாடு இஃது இரண்டாவது முறை.

தில்லை...இறைஞ்சி - முதன்முறை மிக விரிவாகவும், இரண்டாம் முறை அத னிற் சுருங்கவும் அருளினார். இது மூன்றாம் முறையாதலின் அதனினும் சுருங்க இரண்டு பாட்டுக்களாற் கூறி யமைந்தார்.

தில்லை - திருத்தினை நகர் - இம்முறையில் நம்பிகள் அருளிய பதிகங்கள் கிடைத்தில ! 167

3322. திருத்தினைமா நகர்மேவுஞ் சிவக்கொழுந்தைப் பணிந்துபோய்
நிருத்தனா ரமர்ந்தருளு நிறைபதிகள் பலவணங்கிப்
பொருத்தமிகுந் திருத்தொண்டர் போற்றுதிரு நாவலூர்
கருத்தில்வரு மாதரவாற் கைதொழச்சென் றெய்தினார். கசுஅ

(இ - ள்) திருத்தினைமா நகர்...போய் - திருத்தினைமா நகரத்திற் பொருந்த அமர்ந்தருளும் சிவக்கொழுந்தாகிய இறைவரை வணங்கிச் சென்று ; நிருத்தனார்... வணங்கி - ஆனந்தக் கூத்தனாராகிய இறைவர் விரும்பி எழுந்தருளியிருக்கும் நிறைந்த பதிகள் பலவற்றையும் வணங்கிக்கொண்டு சென்று ; பொருத்தமிகும்...எய்தினார் - மிகப்பொருத்தமுடைய திருத்தொண்டர்கள் போற்றுகின்ற திருநாவலூர் மனத்தி னுள்ளே வருகின்ற அன்பினாலே அங்குச் சென்று தொழுது வணங்கும் பொருட்டுப் போய் அதனை அடைந்தனர்.

(வி - ரை) திருத்தினைமா நகர்...பணிந்துபோய் - இம்முறையிற் பாடிய பதி கம் கிடைத்திலது ! ; முன்முறை அருளிய பதிகம் - பதிகக் குறிப்பு - தலவிசேடம் முதலியவை I பக்கம் உஎ௬ - உஎசு பார்க்க. தலமரம் கொன்றை; திருத்தினைநகர் - இத்தலம் தீர்த்தனகிரி என்று மருவி வழங்கப்படுகிறது. ஜாம்புவர் பூசித்துப் பேறு பெற்றனர். அவர் பூசித்தலிங்கம் அம்மை கோயிலில் உள்ளது. பெரியான் - ஜங் கமர்-(இறைவர் கொண்டு எழுந்தருளிய கோலம்.) இவை கோயிற் சுவரில் உள்ளன. பச்சந்த தேசிக ராதீனத்துக் குமாரமலை மருந்தர் இத்தல புராண மியற்றியுள்ளார் என்பர்.

நிறைபதிகள் பல-இவை திருச்சோபுரம், திருமாணிகுழி, திருப்பல்லவ னகரம், திருமுண்டீச்சுரம், திருக்குணபர வீச்சுரம், திருவதிகை வீரட்டம், திருவாமூர், சித்த வடம், திருமணம் வந்த புத்தூர் முதலியன என்பது கருதப்படும். இவற்றுள் திரு வதிகையினை வழிபடுதல் முன்முறையிற் போலவே கொள்ளப்படுதல் வேண்டும்.

229 - 230 - பாட்டுக்கள் பார்க்க : அப்பதிகம் முன்னர்க் குறிக்கப்பெற்றது ; I பக்கம் உகசு - உஎ௦ பார்க்க. ஏனையவற்றின் நம்பிகள் பதிகங்கள் கிடைத்தில !.

பொருத்தமிகும்...திருநாவலூர் - பொருத்தமிகும் - நாவலூர் என்றும், திருத் தொண்டர் போற்று திருநாவலூர் என்றும் தனித்தனிக்கூட்டுக.

பொருத்தமிகுந் திருநாவலூர் - கருத்தில் வரும் - ஆதரவு - பொருத்தமாவது - திருநாவலூரினின்றும் திருமணத்தின் பொருட்டுப் புறப்பட்ட நம்பிகள் திருவெண் ணெய் நல்லூரிலே தம்மை இறைவர் தடுத்தாட்கொண்ட நிலையில் அங்கு நின்றும் மீண்டும் திருநாவலூர் பணிந்து பணிமேற் சென்றனர். ஈண்டு, மீண்டும் வந்தது தாம் அவதரித்த பதி என்ற அபிமானம் பற்றியதனா லன்றித் தலயாத்திரையில் கண்ட கண்ட இடங்களெங்கும் சென்று வணங்கும் முறை பற்றியதென்பது பொருந்த மெனப்பட்டது. கைதொழ - என்றதமிக் குறிப்பு.

திருத்தொண்டர் போற்றும் திருநாவலூர் - ஆளுடைய நம்பிகள் திருவவதரித்த பதியாதல் பற்றி அடியார்கள் போற்றும் என்க.

கருத்தில் வரும் ஆதரவால் - நினைவில் வந்த மிக்க அன்பினாலே ; பதியின் அணிமையில் வந்தபோது முன்னினைவுகள் எல்லாம் திருவுள்ளத்தே வந்தன. 168

3323. "திருநாவ லூர்மன்னர் சேர்கின்றா" ரெனக்கேட்டுப்
பெருநாமப் பதியோருந் தொண்டர்களும் "பெருவாழ்வு
வருநா"ளென் றலங்கரித்து வந்தெதிர்கொண் டுள்ளணையச்
செருநாகத் துரிபுனைந்தார் செழுங்கோயி லுள்ளணைந்தார். ௧௬௯

(இ - ள்) திருநாவலூர் மன்னர்...கேட்டு - திருநாவலூர்த் தலைவராகிய நம்பிகள் வருகின்றாரென்ற செய்தியினைக் கேட்டு ; பெருநாமம்...உள் அணைய - பெரிய புகழினையுடைய அந்தப் பதியில் உள்ளவர்களும் திருத்தொண்டர்களும் தங்களுக்குரிய பெரிய வாழ்வு வருகின்ற திருநாள் என்று கொண்டு பதியினை அலங்கரித்து நகர்ப்புறத்தே வந்து எதிர்கொண்டழைத்துக் கொண்டு உள்ளே செல்ல; செருநாகத்து ...அணைந்தார் - போர் வல்ல யானையின் தோலைப்போர்த்த இறைவரது செழுங் கோயிலினுள்ளே அணைந்தருளினர்.

(வி - ரை) திருநாவலூர்...கேட்டு - இஃது அவ்வூரவரும் தொண்டர்களும் கேள்விப்பட்ட செய்தி.

பதியோரும் தொண்டர்களும் - பதியோர் வேறு ; தொண்டர்கள் வேறு ; பதியோர் தமது அந்தப் பதியினுக்கும் நம்பிகளுக்கும் உள்ள உலகியற் றொடர்பு பற்றி வருபவர்கள் ; தொண்டர்கள் அவ்வாறன்றி நம்பிகளுக்கும் தமது இறைவராகிய சிவபெருமானுக்கும் உள்ள உயிரியற் றொடர்பு பற்றித் திருத்தொண்டெனு நிலையில் உரிமை பூண்டு வருபவர்கள்.

" பெருவாழ்வு வருநாள் " என்று - வரவு தமக்குப் பெரியதோர் சிறப்பாகிய வாழ்வு வரும் நாளாகும் என்று உட்கொண்டு.

செருநாகம் - போர் குறித்து வந்த யானை ; நாகம் - யானை.

பெருநாமப் பதியோர் - நாமம் - புகழ் ; பெருமை என்றலுமாம். இப்பதி திருநாமநல்லூர் என வழங்கும் வழக்கும் கருதத்தக்கது. 169

3324. மேவியவத் தொண்டர்குழா மிடைந்"தர" வென்றெழுமோசை
மூவுலகும் போயொலிப்ப முதல்வனார் முன்பெய்தி
ஆவியினு மடைவுடையா ரடிக்கமலத் தருள்போற்றிக்
"கோவலனான் முக"னெடுத்துப் பாடியே கும்பிட்டார். ௧௭0

(இ - ள்) மேவிய...ஒலிப்ப - எதிர்கொள்ளப் பொருந்திய அந்தத் தொண்டர் கூட்டம் நெருங்கி " அரகர " என்று முழக்குதலாலுளதாகிய ஓசை மூன்றுலகங் கங்களிலும் சென்று ஒலி செய்ய ; முதல்வனார் முன்பு எய்தி - இறைவரது திருமுன்பு சார்ந்து ; ஆவியினும்...அருள்போற்றி - உயிரினும் சிறந்தவராய் அடைதற்குரிய சிவபெருமானது திருவடிக் கமலங்களின் அருளினைப் போற்றி ; கோவலனான்முகன் "...கும்பிட்டார் - " கோவலனான்முகன் " என்று தொடங்கித் திருப்பதிகத்தினைப் பாடியே கும்பிட்டருளினர்.

(வி - ரை) அர என்று எழும் ஓசை - நம்பிகளது வரவு தமது பெருவாழ்வு ஆகும் என்றும், அது சிவபெருமான் திருவருளாலே வந்தது என்றும், கொண்

டார்களாதலின் அரனும முழக்கம் செய்து போற்றினர் ; எழும் - எழுப்பிய ; முழக்கிய என்று பிறவினைப் பொருள் கொள்க.

மூவுலகும் போய் ஒலிப்ப - ஒலி அலைகள் பரம்பரையிற் சேணிலும் சென்றொலிக்குமென்பது இற்றைநாள் வானொலி இயக்கத்தினால் நேரே அறியப்படுதலின், இஃது உண்மை நவிற்சியேயாம். அன்றியும் இம்முழக்கத்தின் பயன் மூவுலகும் பெற நிற்பதும் குறிக்க.

மூவுலகு - மேல் நடுக் கீழ் உலகங்கள்.

ஆவியினும் அடைவுடையார் - ஒருவர்க்குத் தன் உயிரினும் சிறந்து பயன் செய்பவர் இறைவர் என்பதாம். "என்னில் யாரு மெனக்கினி யாரில்லை, யென்னினும்மினி யாமொரு வன்னுளன், என்னு ளேயுயிர்ப் பாய்ப்புறம் போந்துபுக், கென்னுளேநிற்கு மின்னம்ப ரீசனே" (தேவா) என்று இக்கருத்தினைத் தேற்றம்பட ஆளுடைய அரசுகள் அருளுதல் காண்க ; அடைவு - அடையத்தக்க சார்பு. "அடைவு திருத்தாண்டகம்" என்பதும், அத்திருப்பதிகக் கருத்தும் கருதுக.

"கோவல னான்முகன்" எடுத்து - பதிகத்தின் தொடக்கமாகிய முதற்குறிப்பு ; போற்றி எடுத்து - என்க. கோவல னான்முகன் - என்று தொடங்கும் திருப்பதிகம்.

திருநாவலூர் பண் - நட்டராகம் - இத்திருப்பதிகம் இப்போது அருளியது. பிற பதிப்புக்களில் குறித்திருந்தவாறே மூன்முறை நம்பிகள் இப்பதியினை வழிபட்ட வரலாறு கூறுமிடத்தில் தவறாகத் தரப்பட்டது ; பதிகப் பாட்டுக் குறிப்புக்களும், தலவிசேடமும் I-பக்கம் உருஎ-உருஅ பாட்டு 224-ன் கீழ்ப் பார்க்க. இத்தலத்திற் சுக்கிரன் வழிபட்டுப் பேறு பெற்றனன். சுவாமி பெயர் - பக்தசனேசுவரர் என்றும், அம்மை பெயர் மனோன்மணியம்மை என்றும் வழங்குவர். நம்பிகள் சந்நிதி தனிக் கோயிலாக வெளிச்சுற்றில் தென்கிழக்கில் உள்ளது ; வரதராசர் என்ற பெயரால் விட்டுணு சந்நிதியும் உண்டு. கோயிலுக்கும் மேற்புறம் கோமுகி தீர்த்தம் என்ற சிற்றோடையும், தெற்கில் ½ நாழிகையளவில் திருக்கெடில நதியும் உள்ளன ; இத்தலபுராணம் திருவெண்ணெய் நல்லூர் இராசப்ப கவிராயர் இயற்றியுள்ளார். 170

3325. நலம்பெருகு மப்பதியி னாடியவன் போடுநயந்து
குலம்பெருகுந் திருத்தொண்டர் குழாத்தோடு மினிதமர்ந்து
சலம்பெருகுஞ் சடைமுடியார் தாள்வணங்கி யருள்பெற்றுப்
பொலம்புரிநூன் மணிமார்பர் பிறபதியுந் தொழப்போவார், கஎக

3326. தண்டகமாந் திருநாட்டுத் தனிவிடையார் மகிழ்விடங்கள்
தொண்டரெதிர் கொண்டணையத் தொழுதுபோய்த் தூயநதி
வண்டறைபூம் புறவுமலை வளமருதம் பலகடந்தே
எண்டிசையோர் பரவுதிருக் கழுக்குன்றை யெய்தினார். கஎஉ

3325. (இ - ள்) நலம் பெருகும்...நயந்து - நன்மைகள் பெருகுதற்கிடமாகிய அத்திருப்பதியிலே நாடிய அன்பினாலே விரும்பி ; குலம்...அமர்ந்து - குலம் மிகுகின்ற திருத்தொண்டர் கூட்டங்களுடனே இனிதாக வீற்றிருந்தருளி ; சலம்... அருள் பெற்று - கங்கையாறு பெருகுதற்கிடமாகிய சடைமுடியினையுடைய இறைவரது திருவடிகளை வணங்கி அருள் விடை பெற்று ; பொலம்புரி நூல்...போவார் - அழகு விளங்கும் பூணூல் அணிந்த மணிமார்பினை உடைய நம்பிகள் பிற பதிகளையும் சென்று தொழுவதற்குப் போவாராகி, கஎக

3326. (இ - ள்) தண்டகமாந் திருநாட்டில்...போய் - திருத்தொண்டை நன்னாட்டிலே ஒப்பற்ற இடபத்தையுடைய சிவபெருமான் எழுந்தருளியுள்ள இடங்கள் பலவற்றையும், அங்கங்கும் திருத்தொண்டர்கள் எதிர்கொண்டு அழைத்துக் கொண்டு உள்ளே செல்லத், தொழுதபடியே சென்று ; தூயநதி...கடந்தே - தூய நீரினையுடைய ஆறுகளும், வண்டுகள் சத்திக்கும் பூக்களையுடைய முல்லைப்புறவு நிலங்களும், மலைகளும் மருத நிலங்களும் ஆகிய பலவற்றையும் கடந்து சென்றே ; எண்டிசையோர்...எய்தினர் - எண்டிசையோர்-எட்டுத்திசைகளினுமுள்ள மக்களும் துதித்துப் பாராட்டும் திருக்கழுக் குன்றத்தினை அடைந்தருளினர். களஉ

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபுகொண்டன.

3325. (வி - ரை) நலம் பெருகும் - நன்மைகள் பெருகுதற்குக் காரணமாகிய பெருகும் - பெருக்கும் - பெருகச்செய்யும் எனப் பிறவினையாகக் கொள்வதுமாம்.

நாடிய அன்பு - நாடி வந்தடைந்த அன்பு.

குலம் பெருகும் திருத்தொண்டர் குழாம் - குலம் - இனமாவது ஈண்டு அவ்வவர் செய்யும் சரியையாதி தொண்டுகளின் வகை குறித்தது. குழாம் - எல்லாம் கூடிய தொகுதி ; குலம் - உலகியற் குலமரபு குறித்ததாகக்கொண்டு பல குலத்தவரும் என்ற குறிப்புப்பட உரைத்தலுமாம் ; "நாடவர் நாடறி கின்றகுலமில ராகக் குலமதுண்டாக" (தேவா) ; "தேவர் பெருமா னெழுச்சி...யாவ ரொன்று துடன்சேவித் தெல்லாக் குலத்தி லுள்ளோரு, மேவ வன்பர் தாமுமுடன் சேவித்து" (1887) ; "எழுச்சி சேவித் துடனண்ண, வெங்கு மெல்லா ரும்போத விழிவு தொடக்கிற் றெனையென்று" (1889) "ஆத லாலே குளித்தடுத்த தூய்மை செய்தே யகம்புகுந்து, வேத நாதர் பூசையினைத் தொடங்க வேண்டும்" (1890) என்ற வரலாற்றின் கருத்துக்களை எற்ற பெற்றி ஈண்டு வைத்துக்காண்க. குலம் - பெருமை என்றலுமாம்.

சலம் பெருகும் - சலம் - கங்கையாறு ; பெருகுதலாவது பெருகிப் புகுந்து, சிறு பனி போலாகச் செறிந்து, பின் உலகிற் கேற்கப் பெருகி வீழ்தல் ; "சலமுகத்தா லவன்சடையிற் பாயுமது" (திருவா - சாழல் ?).

பொலம்புரி நூல்மணி மார்பர்-பொலம் - அழகு ; மணி - நவமணி மாலைகள் ; "மன்னவர் திருவுந் தங்கள் வைதிகத் திருவும் பொங்க" (165) ; "சுடர்மணிக் கலன்கள் சாத்தி" (330) ; "மெய்யினிற் றவளு நூலும்" (331) என்றபடி திருமணக்கோலத்துடனே சரிப்பவர் நம்பிகள்.

போவார்-தொழுது-கடந்தே-எய்தினர் - என மேல்வரும் பாட்டுடன் முடிக்க.

3326. (வி - ரை) தண்டகமாந் திருநாடு - தொண்டை நாடு ; (2858 பார்க்க.)

தனிவிடையார் - தனி - ஒப்பற்ற ; ஒன்று என்றலுமாம். "ஊர்வதோர் விடையொன் றுடையானை" "நரைவெள்ளே றொன்றுடை யானை" (தேவா).

மகிழ் விடங்கள் தொழுது - இவை திருப்புறவார் பனங்காட்டூர், திண்டீச்சரம், திருஅச்சிறுபாக்கம், உருத்திரகோடி முதலாயின என்பது கருதப்படும். இவற்றுள் முன்னையவிரண்டும் நடுநாட்டுத் தலங்கள் ; திருநாவலூரினின்றும் திருக்கழுக்குன்றம் செல்லும் வழியிடையில் உள்ளன.

நதி - புறவு - மலை - வளமருதம் - பல - நதியும், புறவும், மலையும், மருதமும் ஆகிய பலவற்றையும் என்று எண்ணும்மை விரிக்க; நதி - பெண்ணையாறு, வராகநதி பாலாறு முதலியன : புறவு - இடையே பார்த்துகாணும் சிறுகாடுகள் ; மலை - திண்டிவனம், செஞ்சிமலை, அச்சிறுபாக்கம்,

திருவெண்குன்றம் முதலியவற்றின் தொடர்பாய் அங்கங்கும் சிதறிக் காணும் சிறு குன்றுகளின் வெளி.

வள மருதம் - வளம் - அடைமொழி, முன்கூறிய இடையில் உள்ள ஏனைப் புறவுமலை முதலியவை அத்துணை வளமுடையனவல்ல என்ற குறிப்புடன் நின்றது ; மருதம் - நாட்டின் பகுதி.

எண்டிசையோர் பரவு - எல்லாத் திசையினின்றும் மக்கள் வந்து வழிபடும் நிலை குறித்தது ; இது இந்நாளினும் கண்கூடாகக் காணப்படும் உண்மை. தல விசேடம் பார்க்க. III-பக்கம் ருருசு. 172

3327. தேனார்ந்த மலர்ச்சோலைத் திருக்கழுக்குன் றத்தடியார்
ஆனாத விருப்பினொடு மெதிர்கொள்ள வடைந்தருளித்
தூநாண்வெண் மதியணிந்த சுடர்க்கொழுந்தைத் தொழுதிறைஞ்சிப்
பாநாடு மின்னிசையின் றிருப்பதிகம் பாடினார். கஎக

(இ - ள்) தேனார்ந்த...அடைந்தருளி-தேன் நிறைந்த மலர்களையுடைய சோலைகள் சூழ்ந்த திருக்கழுக்குன்றத்தில் உள்ள அடியவர்கள் குறைவுபடாத விருப்பத்தினோடும் வந்து எதிர்கொண்டு அழைத்துச்செல்ல அணைந்தருளி ; தூநாள்... இறைஞ்சி - தூய புதிய வெள்ளிய பிறையினைச் சூடிய சுடர்க்கொழுந்து போல்வாராகிய சிவபெருமானைத் தொழுது நிலமுற வணங்கி ; பாநாடு...பாடினார் - பாக்களின் பண்பு நாடும் இனிய இசையினையுடைய திருப்பதிகத்தினைப் பாடியருளினார்.

(வி - ரை) தேன் - தேன் வண்டுகள் ; தேன் - மது என்றலுமாம்.

ஆனாத விருப்பு - என்றும் குறையாது மேன்மேல் மிகுகின்ற பெருவிருப்பம்.

தூ - நாள் - வெண் - மதி - பிறைச் சந்திரன் ; தூ - தூய்மை ; தூய்மையாவது முன் மனைவியர்பால் அபசாரமும், அது காரணமாகச் சாபமும், அதனால் உடல் தேயும் நோயும், கொண்டு, மாயும் நிலையினின்றும் சிவபெருமானை அடைந்தமையால் அவை யாவும் நீங்கித் தூய்மை யாக்கப்பட்ட நிலை. நாள் - புதிதாக முளைக்கும் நிலை.

சுடர்க் கொழுந்து - சுடர்க்கொழுந்து போல்வாரைச் சுடர்க்கொழுந்தென்றார். வேதங்களே குன்றமாய் நிற்றலின், அதன் உச்சியில் விளங்குதலின், ஞானச்சுடரின் உச்சி என்பதாம்; "வேத வாகமச் சென்னியில் விளைபொருள்"(திருவிளை-புரா); மதியணிந்த சுடர் - என்றதனால் இரவி - மதி-முதலிய ஒளிகளுக்கு ஒளிதரும் பொருள் என்பதும் குறிப்பு ; "வெளிறு தீரத் தொழுமின்"(4) " ஞானமூர்த்தி " (7) என்ற பதிகக் கருத்துக்கள் காண்க.

தொழுதல் - கைகளாற்றொழுதல் ; இறைஞ்சுதல் - நிலமுற வீழ்ந்து வணங்குதல்.

பாநாடு மின்னிசை - பா - பாக்களின்-செய்யுட்டிறங்களின்-மேன்மைப் பண்பு ; நாடுதலாவது உத்தமமான பண்புகள் எல்லாம் தாமே தேடிவந்தடைதல் ; சொற்பண்பும் இசைப்பண்பும் ஒத்திசையும் தன்மை ; இசை - இங்குப் பதிகப் பண்ணாகிய நட்டபாடைப் பண் குறித்தது. 173

## திருக்கழுக்குன்றம்

திருச்சிற்றம்பலம் பண் - நட்டபாடை

கொன்று செய்த கொடுமை யாற்பல சொல்லவே
நின்ற பாவம் வினைக டாம்பல நீங்கவே

சென்று சென்று தொழுமின் றேவர் பிரானிடங்
கன்றி னோடு பிடிசூழ் தண்கழுக் குன்றமே. (1)

பல்லில் வெள்ளைத் தலையன் றான்பயி லும்மிடங்
கல்லில் வெள்ளை யருவித் தண்கழுக் குன்றினை
மல்லின் மல்கு திரடோ ளூரன் வனப்பினாற்
சொல்லல் சொல்லித் தொழுவா ரைத்தொழு மின்களே. (10)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—எங்கள் பிரானதிடம் திருக்கழுக்குன்றமே; "பாவம் வினைக டாம்பல நீங்க, வெளிறு தீரச் சென்று சென்று தொழுமின்" என்று கருணையினால் உலகத்தவரை வழிப்படுதியது ; (ஆற்றுப்படை.)

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) கொன்று செய்த - கொடுமை - கொன்ற கொடுமையால் வந்த பாவம் ; நின்ற பாவம் வினைகள் தாம்பல - வேறெவ்வாற்றா லும் வரும் ஏனைப் பாவமும் தீவினைப் பயனும் ; கொலைப்பாவம் ஒன்றே ஏனை எல்லாப் பாவங்களும் கூடிய தொகுதிக்கும் சமமாகும் எனக், கொன்ற கொடுமை என்றும், பாவம் வினைகடாம்பல என்றும் பிரித்துக் காட்டியவாறு: சென்று சென்று - அடுக்குப் பலமுறையும் சென்று என்றதாம். இயன்ற அளவிற் சென்று என்றலு மாம் ; தொழுமின் - ஏனை உலக மக்களை நோக்கிக் கூறியது ; ஆற்றுப்படுத்த வகை ; மேல்வருவனவும் இவ்வாறே கண்டுகொள்க ; கன்று - யானைக் கன்று ; கன்று - பிடி - குறிஞ்சிக் கரு ;—(2) இறங்கி - ஆணவமுனைப் பெழுச்சியினின்றும் கீழிறங்கி- வணங்கி ; நிறங்கள் செய்த மணிகள் - பலநிறமுடைய மணிகள் ; இவை நித்தில மொழிந்த ஏனையவை ; நித்திலம் - முத்து ; பிரித்துக் கூறியது சிறப்பு நோக்கி ; இவை மலையிற் படுவன ; வெள்ளை யருவி - தெளிந்த நீருடன் வீழும் அருவி ;— (3) நீள- மிகவும்; ஆளும் - உயிர்களை அடிமைப்படுத்தி ஆளும்; அல்கி - வலிகுன்றி;— (4) வெளிறு - அறியாமை. "அரியகற் றாசற்றார்...அரிதே வெளிறு" (குறள்) ; இங்கு அறியாமையைச் செய்யும் ஆணவமலங் குறித்தது ; ஆகுபெயர் ; ஒளிறு - ஒளி ; கூர்மை என்றலுமாம் ; பிளிறு - யானையின் முழக்கம் ; களிற்றினோடு என் பது எதுகைநோக்கிக் களிறினோடு எனவந்தது ;—(5) புலைகள் - கொலை முதலாகிய குற்றங்கள் ; குட்டியோடுமுசு - பாயும் - குரங்குகள் குட்டியோடு தாவிப் பாய்ந்து செல்லு மியல்பு குறித்தது; புறவு-முல்லைப்புறவு ;—(6) மடம்-ஈண்டு ஏழைமை; ஏனை யவற்றை உணராமை குறித்தது; "ஏழையடி யாரவர்கள்" (தேவா) உற - கொள்ள ; மனத்தே யுற - மனத்தில் பொருந்தவைக்க ; உறப் பயிலும் - என்று கூட்டுக ; மேல் வரும் பாட்டும் பார்க்க ; கடம் - காடு ; அரவு-பாம்பு ; அரவன் - பாம்பினைப் பூண்ட வன் ;—(7) உற-ஆடி-என்று கூட்டுக; உற - உறும்படி ; பொருந்த ; ஆடி-ஆடுபவர்; பெயர் ; நவிலும் - விளங்கும் ; ஊனம் - பிறவி பற்றிய அறியாமை ; ஞானமூர்த்தி - ஊனத்தை ஒழிப்பவன் என்றது குறிப்பு ; தேன் - வண்டு வகை ; கானமஞ்ஞை - மஞ்ஞை - மயில் ; குறிஞ்சிக் கரு ; கானம் - முல்லையிற் கூடுதல் திணைமயக்கம் ;— (8) அந்தமில்லா அடியார் - எல்லையில்லாத அடிமைத் திறம் பூண்ட அடியார்கள் ; "அந்தமில் புகழா னன்புக் களவின்மை கண்டேன்" (593) ; மடமுடைய என்றும், ஊனமில்லா என்றும், அந்தமில்லா என்றும் அடியார் தன்மைகளைப் பற்றி எடுத்துப் பாராட்டியவாறும் காண்க ; உற - வந்து - சேர என்று கூட்டி முடிக்க. "நாடி நாரண னான்முக னென்றிவர், தேடி யுந்திரிந் துங்காண வல்லரோ ?......அம்பலத்

தாடி பாதமென் னெஞ்சு ளிருக்கவே" (அரசுகள் - கோயில்-குறுந்) என்ற கருத்து ஈண்டு வைத்துச் சிந்திக்கத் தக்கது ; மலர்கள் - பாதமலர்கள் ; மாலொடு நான்முகன் சிந்தை செய்த மலர்கள் அடியார் மனத்தே உறவந்து - சேரவே என்க ;—(9) பிழைகள் - வினைப்பன்மைகளும், மலமும், மலவாதனையும் ; மழைகள் - மேகங்கள் ; தழை - வளைதல் ; கலித்து - இடித்து ; மழைகள் - சொரியும் - மேகங்கள் செறிந்து மிக்கு இடித்து உயர்ந்த மூங்கில்களும் வளையும்படி முத்துப்போன்ற பரிய நீர்த் துளிகளைப் பெய்யும் என்க. முத்தம் - முத்துப்போன்ற பரிய வெள்ளிய நீர்த் துளிகள் ; ஆகுபெயர் ; மழைகள் கலித்துச் சொரியும் என்று கூட்டுக ; இவ்வா றன்றிக் கலித்து - கலித்தலால் - இடித்து மழைகள் சொரிதலால் என்று காரணப் பொருளில் வரும் வினையெச்சமாகக் கொண்டு, மழைகள் கலித்து மூங்கில்கள் முத்தஞ் சொரியும் என்றுரைத்தலுமொன்று ; இப்பொருளில் தழை - தண்ணென்ற குழைவு காட்டும் ஒளி ; தழை - துளை ; தழைகோள் - இனித் துளைபட நின்ற ; இப்போது துளைபடாத என்று கொள்க ; (தழை - துளை என்பதற்குக் கோடிநுண் டுகிலுங்குழையும் (சீவக - 1369) என்ற வழக்குக் காண்க ;—(10) தலையன் - தலையை ஏந்தியவன்; வெள்ளையருவி (2); மல் - வலிமை ; சொல்லல் - சொன்னவை ; பாட் டுக்கள் ; வனப்பு - அழகு ; இசைப் பாகுபாடு என்ற குறிப்புமாம் ; "பாநாடு இன் னிசையின் " (3327) "வனப்பு" - இசைப் பாகுபாடு - 953-ல் உரைத்தவை பார்க்க.

தலவிசேடம் :—திருக்கழுக்குன்றம்—III பக்கம் ருஙசு பார்க்க.

3328. பாடியவப் பதியின்க ணினிதமர்ந்து பணிந்துபோய்
நாடியநல் லுணர்வினொடுந் திருக்கச்சூர் தனைநண்ணி
ஆடகமா மதில்புடைசூ ழாலக்கோ யிலினமுதைக்
கூடியமெய் யன்புருகக் கும்பிட்டுப் புறத்தணைந்தார். களச

(இ - ள்) பாடிய...போய் - முன் கூறியவாறு பாடிய அந்தப் பதியினிடத்து இனிதாக விரும்பிச் சிலநாள் எழுந்தருளி யிருந்து வணங்கி அருள்விடை பெற்றுச் சென்று ; நாடிய...நண்ணி-இறைவரையே நாடியிருக்கும் நல்ல உணர்வினோடு திருக் கச்சூரினை அடைந்து; ஆடகமாமதில்...புறத்தணைந்தார் - பொன் வேலைப்பாடமைந்த பெரிய மதில் புடையிலே சூழ்ந்த திரு ஆலக்கோயிலில் எழுந்தருளிய அமுதம் போன்ற இறைவரைக் கூடிய மெய்யன்பினாலே உள்ளமுருகக் கும்பிட்டுப் புறத் திலே அணைந்தருளினார்.

(வி - ரை) பாடிய - பாடப்பட்ட என்று பிறவினையாகக் கொள்க. பாடுதற்கிட மாகிய - பாடுதற்குப் பொருளாகிய என்றலுமாம். பாடிய அப்பதி - அத்திருப்பதிகம் " இடம் - கழுக்குன்றமே " என்று பதியினைப் பற்றியே போற்றியவாறு காண்க.

இனிதமர்ந்து - சிலநாள் என்பது இசையெச்சம்.

நாடிய நல்லுணர்வு - சிவனையே உள்ளத்தில் எப்போதும் நாடிக் கண்டுகொண் டிருந்த நல்லஉணர்வு; " நாடிய அன்பொடு " (3325) என்றதும், ஆண்டுரைத்தவை யும் பார்க்க ; சிவயோகத்திற் றிளைக்கும் உள்ளுணர்வு.

நாடிய...நண்ணி - சிவயோக நினைவினில் அழுந்திய உணர்ச்சியோடு சென்றா ராதலின் உலகியல் நிகழ்ச்சிகளை மறந்த நிலையினின்றார் என்பதாம் ; பின்னர், நம்பி களைத் தொடர்ந்தோ அன்றி முன்சென்றோ நிற்கும் முறையினையுடைய பரிசனங்கள் நம்பிகள் திருக்கோயிலினில் வழிபட்டுப் புறத்தணைந்தபின் அமுது செய்யும் பொழு

தாகவும் குறுகாராயினர் எனவரும் மேற் சரித வரலாற்றுக்குக் காரணம் உணர்த்தப் பட்டது; நம்பிகள் உலகை மறந்த யோகத்திற் சிவனைக் கண்டுகொண்டவாறே விரைவிற் சென்றருளினர் என்பதாம்.

ஆடகம் - பொன்னுலியன்ற வேலைப்பாடுடைய மதிற் பகுதிகள்.

ஆலக்கோயிலின் அமுதை - கச்சூர் – ஊர்ப்பெயரும், ஆலக்கோயில் - கோயி லின் பெயருமாம்; பூங்கோயில், பெருங்கோயில் என்றாற்போல்; அமுது - என்றது பின்னர்ப் பசிதீர நம்பிகளுக்குக் கருணையினால் அமுதளித்தருளும் வரலாற்றுக் குறிப் புப்படக் கூறியதாம். ஆலக்கோயிலுளிருப்பினும் அவர் அமுதமேயாவர் என்ற நயம் படக் கூறியதுமாம். (ஆலம் - விடம்.)

கூடிய - மனத்துள்ளே கண்டவாறே புறத்திலும் கிடைக்கும்படி வந்து கூடிய.

3329. அணைந்தருளு மவ்வேலை யமுதுசெயும் பொழுதாகக்
கோணர்ந்தமுது சமைத்தளிக்கும் பரிசனமுங் குறுகாமைத்
தணந்தபசி வருத்தத்தாற் றம்பிரான் றிருவாயிற்
புணர்ந்தமதிற் புறத்திருந்தார் முனைப்பாடிப் புரவலனார். கஎரு

(இ - ள்) அணைந்தருளும்......பொழுதாக - கும்பிட்ட பின் திருக்கோயிற் புறத்தில் அணைந்த அந்நேரத்தில் திருவமுது செய்தருளும் காலம் ஆயிடவும்; கொணர்ந்து......குறுகாமை - கொண்டுவந்து திருவமுது ஆக்கி உதவும் பரிசனங் களும் வந்து சேராமையினாலே; முனைப்பாடிப் புரவலனார் - திருமுனைப்பாடி நாட் டின் தலைவராகிய நம்பிகள்; தணந்த...புறத்திருந்தார்-நீக்கிய பசியினால் வந்த வருத் தத்தினாலே தமது பெருமானது திருவாயிலினுடன் கூடிய திருமதிலின் புறத்தே தங்கியருளினர்.

(வி ரை) அமுது செயும் பொழுது ஆக - அமுது செய்தற்குரிய காலம்; இது "கடும்பகற்போது" (3330) என்றும், "உச்சம்போது" (பதிகம்) என்றும் ஈண்டு அறியப்படும். காலைக் கடன்களும், இறைவர் வழிபாடும் முடித்தபின் நண் பகல் என்னும் உச்சிப்போதி லன்றி உணவு கொள்ளாமை நமது முன்னையோர் கொண்ட நல்வழக்கு என்பது ஈண்டு அறிவிக்கப்பட்டமை காண்க; இஃது உட லுக்கு நல்வாழ்வும் நீடிய ஆயுளும் தருவது என்பது மருத்துவ நூலோர் கண்ட உண்மை. Noon breakfast System-நண்பகலுக்கு முன் உண்ணாமை - என்று இதனைப் புதியதோர் முறையாகக் கொண்டுகையாளுவர் சில நவீனர். ஆக - ஆக வும்; சாரவும்; சிறப்பு உம்மை தொக்கது.

கோணர்ந்து அமுது சமைத்து அளித்தும் பரிசனமும் குறுகாமை - அமுது கொணர்ந்தாயினும் சமைத்தாயினும் அளிக்கும் என்க; சமைத்தளித்தற்குப் போதிய இடையிருப்பின் சமைத்தும், அஃதில்லையேல் கொணர்ந்தும் அளிக்கும் என்க; கோணர்தல் - பின்னர் இறைவர் செய்தருளியபடி அந்தணர் மனைகளி லிருந்து வேண்டிப் பெற்றுக் கொணர்தல். உணவு அமைத்தற்குரிய சாதனங்களைக் கொண்டுவந்து என்றலுமாம். சோறு விலைக்கு வாங்கிக் கொணர்தல் என்பது முன் நாளில் இல்லை; சோற்று வாணிபம் பிற்காலத்தில் வந்து முளைத்துப் பரவிக் கேடுகள் பலவற்றுக்கும் காரணமாகும் தீய வழக்கங்களுள் ஒன்று; பரிசனம் - நம்பிகளுடனே தலயாத்திரையில் இத்தகைய சமையற் பரிசனமும் ஏவலாளரும் உடன் சென்றனர்; ஆளுடைய பிள்ளையாருடன் பல்லாயிரம் பரிசனமும் பிறரும் உடன் சென்றமையும்,

துறவற நிலையின ராதலின் ஆளுடைய அரசுகளுடன் அவ்வாறு பரிசனங்கள் தொடராமையும் ஈண்டு நினைவுகூர்க. குறுகாமை - குறுகாமையால்; வராத காரணத்தால்.

தணந்த பசி வருத்தம் - தணந்த-நீக்கிய; சிவயோகத்தின் நிலைத்த காரணத்தால் முன்னர்த் தம்மை அணையாது நீக்கிய என்பதாம். "பசி வந்திடப் பறந்துபோம்" என்ற உலகியல் நீதிக்கு மாறாக நீக்கிய என்க; "கனல்வாதை வந்தெய்தி னள்ளிப் புசித்துநான் கண்மூடி மவுனியாகித், தனியே யிருப்பதற் கெண்ணினேன்" (தாயுமானார்) என்று யோகிகள் பாலும் ஓரோர்கால் வந்து வருத்தம் செய்வது பசிநோய் என்று காட்டியநிலை காண்க; "பசிநோய் செய்த பறிதான்" "பாடுவார் பசிதீர்ப் பாய்" (நம்பி, தேவா.) என்று நம்பிகள் இதனை எடுத்துக் கூறுதல் காண்க. "வழி போம் பொழுது மிகவிளைத்து வருத்த முறநீர் வேட்கையொடும், அழிவாம் பசிவந் தணைந்திடவு மதற்குச் சித்த மலையாதே, மொழிவேந் தருமுன் னெழுந்தருள" (1569) என்ற அரசுகள் வரலாறும் காண்க; "ஓவா - தழுவான் பசித்தானென் றுங்கிறைவன் காட்டத், தொழுவான் றுயர்தீர்க்குந் தோகை...அப்ப, னருளாலே யூட்டுதலும்" (ஆளுடைய பிள்ளையார் திருத்தொகை), "தாதையொடு வந்த வேதியச் சிறுவன், றளர்நடைப் பருவத்து வளர்பசி வருத்த, வன்னா யோவென் றழைப்ப" (கழுமல மும்மணிக்கோவை-1) என்று வரும் ஆளுடைய பிள்ளையார் வரலாறுகளும் கருதுக; (குறிப்பு - ஈண்டுக் குறித்த பசி வேறு என்பது.)

திருவாயிற் புணர்ந்த மதிற் புறத்திருந்தார் - உச்சிக்கால வழிபாடு முடிந்தவுடன் கோயில் திருக்கதவம் திருக்காப்பிடும் நிலையும், அதன்பின் பசி முதலிய வேட்கையுடையோர் மற்றெவரும் திருக்கோயிலினுள்ளே தங்கலாகாத நிலையும் காரணமாக மதிற்புறத்தே திருவாயிலில் இருந்தனர் என்பதாம்.

முனைப்பாடிப் புரவலனார் - புரவலனாரேனும் என்று சிறப்பும்மை விரித்துரைத்துக் கொள்க; புரவலனாராயினும் தமக்குப் பசி வந்தடரும் நியதியின்பாற் படுவர் என்பதும், எவ்வுயிரினுள்ளும் உயிர்க்குயிராய் நிற்கும் இறைவர் அதனை அறிந்து ஊட்டினாலன்றி உயிர்கட்குச் செயலில்லை என்பதும், புரவலனார் என்று குறிப்பா லுணர்த்தியருள இப்பெயராற் கூறினார். "வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி, தொகுத்தார்க்குந் துய்த்த லரிது" (குறள்); ஈண்டு நம்பிகள் பரிசன முதலியனவாகிய அரசர் திருவெல்லா முடையாராயினும் பசியால் வருந்தியிருக்க நேர்ந்தது திருவருள் புலப்படுக்கும் நியதி. 175

3330. வன்றொண்டர் பசிதீர்க்க மலையின்மேன் மருந்தானார்
பின்றங்கு வெண்டலையோ டொழிந்தொருவெற் றோடேந்தி
அன்றங்கு வாழ்வாரோ ரந்தணராய்ப் புறப்பட்டுச்
சென்றன்பர் முகநோக்கி யருள்கூரச் செப்புவார், கஎசு

3331. "மெய்ப்பசியான் மிகவருந்தி யிளைத்திருந்தீர்; வேட்கைவிட
இப்பொழுதே சோறிரந்திங் கியானுமக்குக் கொணர்கின்றேன்;
அப்புறநீ ரகலாதே சிறிதுபொழு தமரு"மெனச்
செப்பியவர் திருக்கச்சூர் மனைதோறுஞ் சென்றிரப்பார், கஎஎ

3332. வெண்டிருநீற் றணிதிகழ விளங்குநூ லொளிதுளங்கக்
கண்டவர்கண் மனமுருகக் கடும்பகற்போ திடம்பலிக்குப்

புண்டரிகக் கழல்புவிமேற் பொருந்தமனை தோறும்புக்குக்
கொண்டுதாம் விரும்பியாட் கொண்டவர்முன் கொடுவந்தார். கஎஅ

3330. (இ - ள்) வன்றொண்டர் பசிதீர்க்க - வன்றொண்டரது பசியினைத் தீர்க்கும் பொருட்டு; மலையின்மேல் மருந்தானார் - மலையின்மேல் உள்ள மருந்து ஆகிய இறைவர்; மின்தங்கு......புறப்பட்டுச் சென்று - ஒளியுடைய வெண்டலையாகிய கபாலமாகிய பலிப்பாத்திரத்தை ஒழித்து வெறும் ஒரு திருவோட்டினை ஏந்திக்கொண்டு அன்று அவ்வூரில் வாழ்பவராகிய ஒரு அந்தணர்போலக் கோலங் கொண்டு புறப்பட்டுப் போய்; அன்பர்முக நோக்கிச் செப்புவார் - அன்பராகிய நம்பிகளது முகத்தைப் பார்த்துச் சொல்லுவாராய், கஎசு

3331. (இ - ள்) மெய்ப்பசியால்...இளைத்திருந்தீர்; மெய்யால் வரும் பசியினால் மிகவருந்தி இளைப்படைந் திருந்தீர்; வேட்கைவிட....கொணர்கின்றேன் - உமது பசித்தாபம் நீங்கும்படி இப்பொழுதே சோறு இரந்து உமக்குக் கொண்டுவருகின்றேன்; அப்புறநீர்...அமரும் எனச் செப்பி - நீர் இங்கு நின்றும் அப்புறம் நீங்காமல் சிறிது நேரம் இங்கு அமர்ந்திரும்'' என்று சொல்லி; அவர்...இரப்பார் - அவ்வந்தணர் திருக்கச்சூரின் மனைகள் தோறும் போய் இரப்பாராகி; கஎஎ

3332. (இ - ள்) வெண்திருநீற்று...துளங்க - வெள்ளிய திருநீற்றின் அழகு விளங்கவும், விளங்கிய முந்நூலின் ஒளி அசைந்து வீசவும்; கண்டவர்கள் மனமுருக - காணப்பெற்றவர்கள் மனமெல்லாம் உருகவும்; கடும் பகற்போது...பொருந்த - கடிய உச்சிப்போதில் இடப்பெறும் பிச்சைக்காகத் தாமரைபோன்ற திருப்பாதங்கள் நிலத்தின்மேற் பொருந்தவும்; மனைதொறும் புக்குக்கொண்டு - வீடுகள்தோறும் சென்று சென்று இரந்த சோற்றினை எடுத்துக்கொண்டு; தாம்...கொடுவந்தார் - தாமே விரும்பித் தடுத்து ஆட்கொண்டருளிய நம்பிகள் முன் கொண்டுவந்தருளினர். கஎஅ

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன. இறைவர் ஓர் அந்தணராய் வந்ததும், நம்பிகளிடம் சொல்லிச் சென்றதும், சோறிரந்து கொடு வந்ததும் விரைந்து தொடர்ந்து நிகழ்ந்த செய்திகளாதலின் இம்மூன்று பாட்டுக்களையும் ஒரு முடிபுபடக் கூறிய கவிநயம் கண்டுகொள்க.

3330. (வி - ரை) மலையின்மேல் மருந்தானார் - மலைகளில் உள்ள மருந்துகள் சிறந்த குணமுடையவை எனப்படும். இங்குப் பசிநோய் தீர்த்தலின் இறைவரை மருந்தென்ற குருவகம். முன்னர் அமுது - (மரணந் தவிர்ப்பது) (3328) என்றதும் காண்க; இங்கு இறைவர் மலையின்மேல் எழுந்தருளியிருப்பதும் குறிப்பு; மருந்தானார் - ஆக்கச்சொல் இயல்புகுறித்த அளவில் நின்றது. ''மலைமேல் மருந்தே'' (பதிகம் - 5) என்ற பதிக ஆட்சி போற்றப்பட்டது.

வெண் தலை ஓடு ஒழிந்து - இறைவர் பலியேற்கும் பலிப்பாத்திரம் பிரம கபாலமாகிய மண்டையோடு என்பர்; இங்கு அதனை விட்டு என்க.

ஒரு வெற்று ஓடு - வெறும் ஓர் ஓடு; உலகர் அறியாமைப் பொருட்டு வெற்றோடேந்தி வந்தார்.

அன்று அந்த வாழ்வார் ஓர் அந்தணராய்-அன்று-காலம்; அந்த-இடம். வாழ்வார்-வாழ்பவராகிய; அவ்வூராராகிய; அந்தணராய் - அந்தணர் வேடம்பூண்டு; அந்தணர் போல. புறப்படுதல் - மறைந்த நிலையினின்றும் வெளிப்படுதல்; 3334-ம் பார்க்க.

முக நோக்கி - பசியின் வருத்தமும் இளைப்பும் முகத்தின் பொலிவினாற் றெரிந்தார் போன்று நோக்கிக் கூறுவார்.

அருள் கூர - அருள் மிகத் தோன்ற ; " ஓதக்கண்டேன் " (9) என்றது பதிகக் குறிப்பு ; ஓதல் - அருள்மொழி கூறல்.

சேப்புவார் - செப்புவாராகி ; முற்றெச்சம் ; செப்புவார் - செப்பி - இரப்பார் - புக்கு - கொண்டு - கொண்டுவந்தார் என்று இம்மூன்று பாட்டுக்களையும் சேர்த்து வினைமுடிபு கொள்க.

ஒரு வேற்றேடு—என்பதும் பாடம். 176

3331. (வி - ரை) " மெய்ப்பசியால்...அமரும் " என - இஃது இறைவர் நம்பிகளை முகநோக்கிக் கூறியது ; நம்பிகளது பசியின் முடுகிய நிலையினைத் தாம் அறிந்துகொண்ட தன்மையினையும், ஆதலின் அதற்கேற்பச் சோறு கொணர்தல் மிக விரைவில் நிகழும் நிலையினையும், வேறெங்கும் போந்தால் தாமதமும் மேலும் இளைப்பும் உளதாம் என்று தாம் அளிகூரும் தன்மையினையும் புலப்படுத்தக் கூறியபடி காண்க.

மெய்ப்பசி - மெய் - உடம்பு ; உடம்பின் உபாதிகளுள் ஒன்றாகிய பசி ; நோய் கொண்டார்பால் சிலபோது பசியெனப் போலித்தோற்ற முண்டாவது போலன்றி, உண்மையான பசியின் நிலை ; இப்பொழுதே - விரைவு, நம்பிகளை ஆற்றுவிக்கும் குறிப்பு.

சோறு இரந்து - அந்தணர் மனைகளில் உச்சிப்போதிற் பிரமசாரிகள் முதலாயினோர் சோறு இரக்கும் வழக்குண்மை புலப்படுத்துதல் காண்க; வழக்குண்மையாலே தான் நம்பிகள் ஐயப்படாது உடன்பட்டிருந்தருளினர் என்க.

அகலாதே...அமரும் - சிறிது பொழுது - தாம் தாமதமின்றி விரைவில் வரும் குறிப்பு ; அப்புறம் அகலாது - என்றதும் வேகமாய் வந்து அவரைக் கண்டுகொள்ளுதல் பிழையாத இடம் குறித்தது.

மனைதோறும் சென்றிரப்பார் - அந்தணர்கள் மனைகள்தோறும் என்க ; "ஊரூர் திரிய" - பதிகம்.

வேட்கைவிட-வேட்கை - சோற்றின் விருப்பம் ; விட - நீங்க. 177

3332. (வி - ரை) வெண் திரு நீற்று...துளங்க - திருநீறும் புரிநூலும் சைவ அந்தணரின் தோற்றமாகிய அடையாளம் ; திகழ - துளங்க - மிக விளக்கமாகக் கண்டோர் மனங் கவர ; துளங்குதல் - உடலசையுந்தோறும் பூணூலும் துவண்டு அசைதல்.

கண்டவர்கள் மனமுருக - " கண்டா லடியார் கவலாரே " " ஊரூர் திரியக் கண்டா லடியார் உருகாரே " - (பதிகம்)

கடும் பகற்போது - " உச்சம்போது " - (பதிகம்)

கடும் பகற்போது இடும்பலிக்கு - மனை வாழ்வினர், ஒருவர் வந்து கேளாமல் தாமாகவே உச்சிப்போதில் பலியிடும் மரபும் குறித்தது.

புண்டரிகக் கழல் புவிமேற் பொருந்த - வெயிலில் கால்தேய நடந்து சென்று.

புக்கு கொண்டு - (வீடுதோறும்) உள்ளே புகுந்து இடும் பலியினை ஏற்றுக் கொண்டு.

தாம் விரும்பி யாட்கொண்டவர்பாற் கொடுவந்தார் - சோறிரந்தும் கொடுவந்ததன் காரணம் தாம் விரும்பி வலிய ஆட்கொண்டமையால் எனக் கூறியபடி. 178

3333. இரந்துதாங் கொடுவந்த வின்னடிசி லுங்கறியும்
"அரந்தைதரும் பசிதீர வருந்துவீ " ரெனவளிப்பப்

பெருந்தகையார் மறையவர்தம் பேரருளின் றிறம்பேணி
நிரந்தபெருங் காதலினு னேர்தொழுது வாங்கினர். கஎசு

(இ - ள்) இரந்து...அளிப்ப - மறையவர்தாம் இரந்துகொண்டு வந்த இனிய சோறும் கறிகளுமாகிய அவற்றை "வருத்தம் செய்யும் பசி தீரும்படியாக உண்பீராக!" என்று அளிக்க; பெருந்தகையார்...வணங்கினர் - பெருந்தகையாராகிய நம்பிகள் அம்மறையவருடைய பெருங் கருணையின் திறத்தினைப் பாராட்டி வரன் முறையால் திருவுள்ளத்து எழுந்த பெரிய காதலினாலே அவர் முன்பு வணங்கி வாங்கினர்.

(வி - ரை) இரந்து...கறியும் - இரந்து கொண்டுவந்தவை இனிய சோறும், அதற்கு வேண்டும் கறி முதலியவைகளும், உண்ணுதற்கு வேண்டும் பிற சாதனங்களுமாம் என்பது.

அரந்தை தரும் பசி - அரந்தை - துன்பம்; முன்னர்த் "தணந்த பசி" (3329) "மெய்ப்பசியான் மிகவருந்தி" (3331) என்றவை காண்க.

அரந்தை...அளிப்ப - கருணையுடன் இன்சொற் கூறிக் கொடுக்க என்றது குறிப்பு. அளியின்றித் தரும் பண்டம் எத்துணைச் சிறந்தனவாயினும், இன்றியமையாதனவுமாயினும் உயர்ந்தோர் விரும்பார்; அவை பயனும் படாது.

பேரருளின் றிறம்பேணி - வாங்கினர் - "மனைவியார் தாம் படைத்த மதுர மிக வாய்ந்த கனி" (1740) என்றவிடத் துரைத்தவை பார்க்க; "முகந்திரிந்து, நோக்கக் குழையும் விருந்து" "முகத்தா னமர்ந்தினிது நோக்கி யகத்தானு, மின்சொ லினதே யறம்" (குறள்) என்பன முதலிய நீதிநூல் வகுத்த உண்மைகள் காண்க; "கேளல் கேளிர் வேளாண் சிறுபத, மதுகை யின்றி வயிற்றுத்தீத் தணியத், தாமிரந் துண்ணு மளவை, யீன்ம ரோவிவ் வுலகத் தானே"(புறம்-74) எனச், சிறையிற் கிடந்து, தண்ணீர் தாவென்று பெறாது, பெயர்த்துப் பெற்றுக், கைக்கொண்டிருந்து, உண்ணான் சொல்லித் துஞ்சிய சேரமான் கணைக்காலிரும்பொறையின் பாட்டின் உள்ளுறை ஈண்டுக் கருதத்தக்கது.

பெருந்தகையார்...பேணி வாங்கினர் - அம்மறையவர் கொணர்ந்த இரப்புச் சோற்றைத் தமது பசிதீர்த்தல் கருதி வாங்கினாரல்லர்; அவரது பெருங் கருணையின் றிறம் பாராட்டி அவர்பொருட்டே வாங்கினர் என்பது குறிப்பு; தாமே யிரந்து பெறுதலும், தமக்காகச் சென்று பிறர் இரந்துபெறுதலும் தன்மையால் ஒன்றேயாமாதலின், "இரந்து முயிர்வாழ்தல் வேண்டிற், பரந்து கெடுக வுலகியற்றியான்" என்றபடி எமது பரமாசாரியராகிய தமிழ் நாவலர் பெருமான் இரப்புச்சோற்றினால் தம் பசிதீர வயிறு நிரப்பவேண்டி வாங்கினாரல்லர் என்பது பெறப்படும். பெருந்தகையார் - என்ற குறிப்புமது; முன்னரும் "மறைமுனிவர் பொதிசோறு - எதிர் விலக்கலாகாது" (3314) என்ற கருத்தினால் பொதிசோறு வாங்கி உண்ட நம்பிகளது செயல் ஈண்டு நினைவு கூர்தற்பாலது.

நிரந்த பெருங்காதல் - இவ்வாறு வரும் நினைவுகளால் வரன்முறையே நம்பிகளது திருவுள்ளத் தெழுந்த பேரார்வம். 179

3334. வாங்கியவத் திருவமுது வன்றொண்டர் மருங்கணைந்த
ஓங்குதவத் தொண்டருட னுண்டருளி யுவந்திருப்ப
ஆங்கருகு நின்றார்போ லவர்தம்மை யறியாமே
நீங்கினா ரெப்பொருளு நீங்காத நிலைமையினார் கஎO

(இ - ள்) வாங்கிய...உவந்திருப்ப - மறையவனார் அளிப்ப அவ்வாறு வாங்கிய அத்திருவமுதினை வன்றொண்டராகிய நம்பிகள் தம்பக்கல் அணைந்த மிக்க பெருந் தொண்டர்களுடனேகூடத் திருவமுது செய்தருளி மகிழ்ந்திருக்க; ஆங்கருகு நின்றார் போல் - அங்கு அருகிலே நின்றவர் போலவே; அவர் தம்மை...நிலைமையினார் - எந்தப் பொருளினின்றும் நீங்கலாகாத முழுநிறைவுடைய நிலைமையினாராகிய அம் மறையவர் தம்மை அவ்வன்றொண்டர் அறியாதபடி அங்கு நின்றும் மறைந்தருளினார்.

(வி - ரை) வாங்கிய அத்திருவமுது - வாங்கிய - முன்கூறியபடி தொழுது வாங்கிய; அகரம், மறையவனார் இரந்து கொடுவந்து அருந்துவீர் என அளிக்கத் தாம் வாங்கிய என முன்னறிசுட்டு; அமுது - அமுதினை; இரண்டனுருபு விரிக்க; அமுதினை - உண்டருளி என்க.

மருங்கு அணைந்த ஓங்குதவத் தொண்டருடன் - முன்னர்த் திருக்குருகாவூரில் உடன் வந்தணைந்ததுபோல ஈண்டும் நம்பிகள் மருங்கு அங்குத் தொண்டர் வந்தணைந்தனர் என்க; ஓங்கு தவம் - நம்பிகளின் பொருட்டு இறைவரே கடும்பகற்போது பாதம் வருந்த மனைதோறும் சென்று இரந்த சோற்றினை, அவர் உண்பதுபோலவே தாமும் உண்ணும் பேறு பெரிய மிக்க முன்னைத் தவத்தானன்றி இயலாதென்பது குறிப்பு.

தொண்டருடன் உண்டருளி - அன்பர்களாவார் தொண்டர்களுடனன்றித் தனித் துண்ணலாகாதென்பது குறிப்பு. "கண்ணுதற் கன்பரோடும், விதிமுறை தீபமேந்தி மேவுமின் னடிசி லூட்ட" (851); "ஈங்கு நமக்குத் தனியுண்ண வொண்ணாதீச னடியாரிப், பாங்கு நின்றார் தமைக்கொணர்வீர்" (சிறுத். புரா. 76) என்பன முதலியவை பார்க்க; முன்னர்த் திருக்குருகாவூரிலும் "பொதிசோ றதுவாங்கிச், சென்றதிருத் தொண்டருடன் றிருவமுது செய்தருளி" (3314) என்றதும் கருதுக.

ஆங்கருகு நின்றார்போல் அவர் தம்மை அறியாமே நீங்கினார் - அங்கு நின்றவர் போல இருந்த மறைவர்; நின்றவர்போலிருந்தவாறே மறைந்தனர்.

போல் நீங்கினார் - அருகு நின்றபோதும் அவர் இன்னாரென்று அறியவில்லை; அதுபோலவே அவர் நீங்கினபோதும் உருக் காணவில்லை.

தம்மை அவர் அறியாமே - அவர் - நம்பிகள்; அவர் தம்மை அறியாமே அருகு ஆங்கு நின்றார் என்றும், அவர் தம்மை அறியாமே ஆங்கு நீங்கினார் என்றும் முன்னும் பின்னுமாக ஈரிடத்தும் கூட்டுக. நேரில் நின்றபோது காண இயலாது, மறைந்து நீங்கியபோது அவர்தான் எனக்காணச் செய்வது இறைவரது அருட்டிறம்; "மறையவனா ரிறையவனா ரெனமதித்தே" என மேற்பாட்டிற் கூறுதல் காண்க.

அறியாமே நீங்கினார் எப்பொருளும் நீங்காத நிலைமையினார் - நீங்கினார் - வெளிப்பட்ட நிலையினின்றும் மறைந்த நிலையில் நின்றார் என்பது பொருள்; எங்கும் நிறைந்தவர் இறைவராதலின் நீங்கமாட்டாதவர் ஆதலின் வெளி உருவம் காட்டாது மறைந்தனர் என்று கொள்க என எச்சரிப்பார் போன்று "எப்பொருளும் நீங்காத நிலைமையினார்" என்று அறிவித்தமை ஆசிரியரது தெய்வக் கவிநலம்.

நீங்கினார் - நீங்காத நிலைமையினார் - முரண் அணிச் சுவைபடக் கூறியபடியுமாம். 180

3335. திருநாவ லூராளி சிவயோகி யார்நீங்க
வருநாம மறையவனா ரிறையவனா ரெனமதித்தே

"பெருநாதச் சிலம்பணிசே வடிவருந்தப் பெரும்பகற்கண்
உருநாடி யெழுந்தருளிற் றென்பொருட்டா" மெனவுருகி, கஅக

வேறு

3336. "முதுவா யோரி" யென்றெடுத்து முதல்வ னார்தம் பெருங்கருணை
"யதுவா மிது"வென் றதிசயம்வந் தெய்தக் கண்ணீர் மழையருவிப்
புதுவார் புனலின் மயிர்ப்புளகம் புதையப் பதிகம் போற்றிசைத்து
மதுவா ரிதழி முடியாரைப் பாடி மகிழ்ந்து வணங்கினார். கஅஉ

3335. (இ - ள்) திருநாவலூராளி...மதித்தே - சிவயோகியாராய் மறையவர் வேடங் கொண்டுவந்த இறைவர் மறைந்து நீங்கத் திருநாவலூர்த் தலைவராகிய நம்பிகள் முன்வந்த புகழுடைய மறையவனார் இறைவனாரேயாவர் என்று துணிந்து; பெருநாதச் சேவடி...உருகி - பெரிய நாதமுடைய சிலம்பினை அணிந்த செம்மையாகிய திருவடியிணை வருந்த உச்சிப்போதில் உருவு தாங்கி என் பொருட்டாக எழுந்தருளி நடந்து எழுந்தருளிற்றே! என்று மனமுருகி, கஅக

3336. (இ - ள்) முதுவாயோரி...இதுவென்று - முதுவாய் ஓரி என்று தொடங்கி, இறைவனாரது பெருங் கருணைத் திறம் அதுவேயாகும் இச்செயல் என்ற கருத்துடன்; அதிசயம்...போற்றிசைத்து - அதிசயம் பொருந்தக் கண்ணீர் மழையருவிபோலப் பெருக, வார்ந்த அப்புதுப் புனலில் திருமேனி முழுதும் மயிர்க்கூச்சினாலே மூடத், திருப்பதிகம் பரவித் துதித்து; மதுவார்...வணங்கினார் - தேன் பொருந்திய கொன்றை சூடிய முடியினையுடைய சிவபெருமானைப் பாடி மகிழ்ச்சி பொருந்த வணங்கினார். கஅஉ

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3335. (வி - ரை) சிவயோகியார் - மறையவராய் வந்த சிவபெருமான்; யோகம் - கூடுதல்; சிவயோகியார் - அந்தணர் வேடத்துடன் கூடிய சிவபெருமான்.

நாமம் - புகழ்; நாமமறையவனார் - பெயர் மாத்திரையால் மறையவரெனப் பட்டார் என்ற குறிப்புமாம்.

மதித்தே - கண்ட செயல்களால் காணாத சிவனைத் துணிந்தே; மதித்தல் - காரணங்களால் பொருணிச்சயம் செய்தல்.

பெருநாதச் சிலம்பு - நாதம் - சுத்த மாயையாகிய குடிலை; பெருமையாவது மறை முதலிய எல்லாவற்றுக்கும் காரணமாயிருத்தல்; இச்சிலம்பொலிவழியே சென்றால் சிவனை அடையலாம் என்று "திருச்சிலம் போசை ஒலிவழி யேசென்று, நிருத்தனைக் கும்பிடென் றுந்தீபற" என ஞானசாத்திரம் முழக்குதல் காண்க. திருச்சிலம்போசை கேட்கப் பெற்றதனாலே கழறிற்றறிவார் நாயனார் இறைவரது திருவருள் கூடிய துணிபினைத் தினமும் பெற்றுவந்த வரலாறும் கருதுக.

பெருநாத...பொருட்டாம் - "கழலுஞ் சிலம்புங் கலிக்கப் பலிக்கென், றுச்சம் போதா லூரூர் திரியக் கண்டா லடியா ருருகாரே" என்ற பதிகக் கருத்து; ஈண்டுப் "பெருநாதச் சிலம்பணி சேவடி" என்று நாதச் சிலம்பு பற்றிக் கூறியது, "இவர் இறைவர் தாமே" என்று காணத் துணையாயிருந்தமை குறிப்பா லுணர்த்தற்கென்க.

பெரும் பகல் - நண்பகல்; "உச்சம் போதால்" பதிகம்.

உருநாடி - "ஒருநாம மோருருவ மொன்று மில்லா"த இறைவர் மறையவராகிய ஓர் உருவத்தை மேற்கொண்டு; அகண்டிதமாகியவர் கண்டிதப்படக் காணப்பட்டு,

எழுந்தருளிற்று - எழுந்தருளிய பெரிய அருள் இருந்தவாறுதானென்னே என்று அதிசயப்பட்டது.

என் பொருட்டாம் - மிக எளியனாகிய என் பொருட்டு என்பது.

என் பொருட்டா மேனவுருகி - அவாது அளவிடற்கரிய பெருமையும் தமது அளவிடற்கரிய சிறுமையும் எண்ணவே மனமுருகி; "இத்தனையு மெம்பரமோ வைய வையோ வெம்பெருமான் றிருக்கருணை யிருந்த வாறே" (தேவா). 181

3336. (வி - ரை) "முதுவாய் ஓரி" என எடுத்து - இது பதிகத் தொடக்கமாகிய முதற்குறிப்பு.

"முதல்வனார்தம்...இது" என்று - இது பதிகக் கருத்தாகிய குறிப்பு. "அதுவே யாமா றிதுவோ" என்ற பதிகத்துக்குப் பொருள் காட்டியவாறு.

பெருங்கருணை - முன் பாட்டிற் கூறிய செயல்கள் கருணைத் திறத்தை எடுத்துக் காட்டின; சேவடி வருந்த வருதல், உருவெடுத்து வருதல், பெரும் பகற்கண் வருதல், மனைதோறும் சென்று வருதல், மிகப் பசித்தீர் என்று இன்மொழி கூறிச் சோறு கொண்டுவந்து ஊட்டுதல், "ஆவிற்கு நீரென் றிரப்பினு நாவிற், கிரப்பி னிளிவந்த தில்" (குறள்) என்று வகுத்த இழிவுபடும் இரப்புத் தொழிலும் செய்தல் முதலாயின.

அதிசயம் - இத்துணையும் அடியான் பொருட்டு ஆண்டான் செய்தமை உணர்ந்ததனால் வரும் பெருமிதமாகிய மனநிலை.

கண்ணீர் மழையருவிப் புதுவார் புனலின் - மிக்க கண்ணீர் பொழிதலினால் உடல் முழுதும் நனைதல் குறித்தது.

புனலின் மயிர்ப்புளகம் புதைய - புளகம்படச் சிலிர்த்துநின்ற மயிர், கண்ணீர் அருவியினால் நனைந்து கவிய.

கண்ணீர் மழையும் புளகமும் - அதிசயத்தின்கண் வந்த மெய்ப்பாடுகள்.

போற்றிசைத்து - வாக்கின் றொழில். மகிழ்ந்து - இவ்வாறு மன மெய்ம் மொழி என்ற மூன்றினாலும் வழிபட்டதனால் வரும் ஆனந்தம். 182

## திருக்கச்சூர் ஆலக்கோயில்

திருச்சிற்றம்பலம் பண் - கொல்லிக் கௌவாணம்

முதுவா யோரி கதற முதுகாட் டெரிகொண் டாடல் முயல்வானே
மதுவார் கொன்றைப் புதுவீ சூடு மலையான் மகடன் மணவாளா
கதுவாய்த் தலையிற் பலிநீ கொள்ளக் கண்டா லடியார் கவலாரே
அதுவே யாமா றிதுவோ! கச்சூ ராலக் கோயி லம்மானே. (1)

கச்சே ரரவொன் றரையி லசைத்துக் கழலுஞ் சிலம்புங் கலிக்கப் பலிக்கென்
றுச்சம் போதா லூரூர் திரியக் கண்டா லடியா ருருகாரே
இச்சை யறியோ மெங்கள் பெருமா னேழேழ் பிறப்பு மெனையாள்வாய்
அச்ச மில்லாக் கச்சூர் வடபா லாலக் கோயி லம்மானே. (2)

பிறவா யிறவாய் பேணா யூவாய் பெற்ற மேறிப் பேய்சூழ்தல்
துறவாய் மறவாய் சுடுகா டென்று மிடமாக் கொண்டு நடமாடி
ஒறுவாய்த் தலையிற் பலிநீ கொள்ளக் கண்டா லடியா ருருகாரே
அறவே யொழியாக் கச்சூர் வடபா லாலக் கோயி லம்மானே. (6)

காதல் செய்து களித்துப் பிதற்றிக் கடிமா மலரிட் டுனையேத்தி
யாதல் செய்யு மடியா ரிருக்க வையங் கொள்ள வழகிதே

ஓதக் கண்டே னுன்னை மறவே னுமையாள் கணவா வெனையாள்வாய்
ஆதற் பழனக் கழனிக் கச்சூ ராலக் கோயி லம்மானே. (9)

அன்ன மன்னும் வயல்சூழ் கச்சூ ராலக் கோயி லம்மானை
யுன்ன முன்னு மனத்தா ரூர னூந ரன்பேர் முடிவைத்த
மன்னு புலவன் வயனு வலர்கோன் செஞ்சொ னவன் வன்றொண்டன்
பன்னு தமிழ்நூன் மாலை வல்லா ரவரெந் தலைமேற் பயில்வாரே. (10)

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு** :—முன்னர் (3336) ஆசிரியர் காட்டி யருளியவாறு. இறைவர் தம்பாற் செய்த பெருங் கருணையிற் றிளைத்து மகிழ்ந்து வணங்கியது.

**பதிகப் பாட்டுக் குறிப்பு** :—(1) முதுவாய் ஓரி கதற முதுகாட் டெரிகொண் டாடல் முயல்வானே - ஓரி - குள்ளநரி. நண் பகற்பொழுது பாலைக்குரியது; "கால வேனிலிற் கடும்பகற் பொழுதினைப் பற்றிப், பாலையுஞ் சொல்ல லாவன" (1092). இங்கு நண்பகற் பொழுதின்கண் இறைவர் போந்து திருவருட் செய்கை செய்கின்றாராதலின் அந்நிகழ்ச்சிக்குரிய எரிகாடு - ஓரி - பேய் (6) முதலியவை பற்றிக் கூறுகின்ற தமிழ்மணமும், இறைவரையேபற்றிக் கூறுகின்ற சிவமணமும் கண்டுகொள்க. "புலவன் - செஞ்சொல்" "தமிழ்நூல் மாலை" (10) புதுவீ - புதிய பூ; முயலுதல் - ஈண்டுச் செய்தல் என்னும் பொருளில் வந்தது; கது வாய் - விரிந்தகன்ற வாய்; அடியார் கவலாரே - ஏகாரம் வினு; கவல்வார் என உடன்பாடு குறித்தது; இரக்கச் சுவை; உருகாரே (2); (4); அடியாரிருக்க ஐயங் கொள்வதழகிதே (9); இப்பதிகம் இச்சரிதப் பகுதிக்கு மிக்க அகச்சான்றாகிய ஆதரவு தருவது; "அதுவே யாமா றிதுவோ?" பெருங்கருணை யதுவாம் இது (3336) என்று ஆசிரியர் இதன் பொருளை விரித்துக் காட்டி யருளினர்; மேற்பாட்டிலுமிவ்வாறே; அது - கருணை; இது - காட்டிச் செய்த செயல்; கச்சூர் - ஊர்ப் பெயர்; ஆலக் கோயில் - கோயிலின் பெயர்; 3-ம் பாட்டுப் பார்க்க;—(2) கச்சேர் அரவு-கச்சாகிய அழகிய பாம்பு; கழலும் சிலம்பும் கலிக்க - "உருநாதச் சிலம்பணி சேவடி" (3335); உச்சம் போதால்-இறைவர் போந்து மனைதோறும் சோறிரந்த நேரம்; ஊநூர்- மனைதோறும்; உருகாரே - மனமுருகி வருந்தாரோ; இச்சை - இவ்வாறு செய்ய லாகாத செயலை அருள் பற்றிச் செய்வதற்குரிய உமது இச்சா சத்தி; ஏழேழ் பிறப்பு - ஏழுலகத்தும் வரும் எழ்வகைப் பிறப்பு; எழுகின்ற எழுவகை என்றலு மாம்; எழுதல் - பிறத்தல். வடபால் - கோயில் ஊரின் வடக்கிருப்பது. "வட பாலை" ;—(3) சால - மிகுதியாக; அவை...துரந்தேன் - திருக்கோயில்களின் வழி பாட்டினால் வரும் பயன் கூறப்பட்டது; மால் - மயக்கம்; ஆணவ மறைப்பு; வினை - கன்மமலம்; வாசனு மலமும் மூலகன்மமும் உள்ளிட்டுக் கூறியவாறு; கோலக்கோயில்...ஆலக்கோவில்-இக்கோயிலின் அழகும் சிறப்பும்எடுத்துப் போற்றி யனுபவித்தவாறு; கல்லால் - இத்தல மரம் ஆல்; அதனல் இப்பெயர் பெற்ற தென்பர். ஆல் நிழற்கீழ் அறங்களுரைத்த - தலம் பற்றிய இக்குறிப்புப்படக் கூறி யருளியது;—(4) சடையும்...ஒளியானே - இறைவரைப் போற்றியது; கடையும் ...கலந்தேங்கும் - நகரச் சிறப்பினையும், புடையும்...கழனி - நாட்டு வளத்தினையும் போற்றியபடி; மேல் 5-9-10-பார்க்க. திருமாமகள் புல்கியடையும் - இவ்வளங் களை இந்நாட்டுக்கும் நகருக்குத் தருவதற்கன்றி, அவ்வாறு தந்து தழுவித் தான் பயன் பெறுதற்குத் திருமகள் வந்தடைகின்ற என்பதாம்; கழனி - வயல்; பழனம் -

வயல் சூழ்ந்த சோலை ;—(5) விதி - வினையின் பயன் - விதி - நியதி ; விதிப்பவர் பயனை ஊட்டுபவர் என்க ; விரவார் - பகைவர் ; எழுந்து - எழுந்தவுடன் முதற் கடமையாக ; காலை - அதிகாலை ; புலர்காலை ; மாலை மதியே - இன்பப் பொருள் என்றது. " மாசில் வீணையும் மாலை மதியமும் " (தேவா) ; மலைமேல் மருந்தே - " வன்றொண்டர் பசி தீர்க்க மலையின்மேன் மருந்தானார் " (3330) என்று ஆசிரியர் இதனை எடுத்தாண்டு இதன் அருமைப் பாட்டினைக் காட்டி யருளுதல் காண்க ; மறவேன் அடியேன் - அடியான் பொருட்டு ஆண்டவன் செய்த இவ்வருளிப்பாடு எந் நாளும் மறக்க முடியாதது என்றதாம் ;—(6) பிறவாய்...மறவாய் - சிவபெருமானது இறைமைக் குணங்கள் ; பேணாய் - விருப்பு வெறுப்பில்லாதவர் ; மறவாய் - உயிர்களுக்கு ஆவனவற்றையே எப்போதும் செய்தலை மறவாய் ; ஒறுவாய்த்தலை - ஒறு - செத்த ; வாய் - பிளந்த வாய் ; அற - அறுதல் ; நீங்குதல் ; அறவே - நீங்குதலை ; ஒழியாய் - நீங்கமாட்டாய் ; இங்கு இறைவர் வந்து உடனாகி இருந்து காட்சி தந்தும் செய்துமிருந்தவர் காணாது நீங்கினாராதலின் அதுபற்றி உடனாயிருந்து நீங்கி வேறாக உள்ள நிலையினையும் நீங்கமாட்டாய் என்றபடி. அறவே - முற்றும் என்றலுமாம்; கண்ணாற் காணாவிடினும் வந்தநீ இறைவன்என்று காட்டி நிற்கின்றவதனால் முற்றும் நீங்காய் என்க ; இக்கருத்தை " நீங்கினா ரெப்பொருளு நீங்காத நிலைமையினார் " (3334) என்று ஆசிரியர் முன் விரித்துக் காட்டியருளியமை காண்க :—(7) பொய்யே...கொள்வானே - பாசாங்கு செய்து பொய்யாகப் புகழ்ந்தாலும் அப்புகழ்ச் சிக்குரிய அம்மட்டில் பயன் தருபவர் ; இது நம்பிகள் தம்மைப் பற்றிக் கூறிய நிலைக் குறிப்பு; மெய்யே...நினைகண்டாய்-அவ்வாறிருப்பவும் மெய்யாக நினைக்கும் மெய்யடியார்களை நினைப்பினுள் நின்று அருள வேண்டுமென்பது மிகையன்றோ ? என்றபடி ; இஃது அடியார்பொருட்டுச் செய்துகொண்ட விண்ணப்பம்; அரசுகளது "பசுபதி"த் திருவிருத்தப் பதிகம் பார்க்க ; நினை கண்டாய் - இறைவர் நினைப்பதுவே அருள் செய்தலாம் என்பது; செய்யாய் - செம்மையுடையவன் ; வெளியாய்-ஞானவெளியில் இருப்பவன்;—(8) ஊனை.. உணர்வில்லேன்-பசியே பெரிதாக எண்ணிச் சோற்றினை உண்டேன் ; அதனைத் தந்தவனை இன்னென்று நினைவுகொள்ளும் உணர்வில்லாதவனானேன்என்ற சரிதக்குறிப்பும் காண்க; நாறு - நாற்றம் ; மணம்; மானை - மான்விழியினை; மறைத்திட்ட-மேனியை மறையப் போர்த்த;—(9) காதல்...அடியார்-உண்மையடியா ரிலக்கணம் ; சரித ஆதரவாகிய அகச்சான்று ; ஆதல் - ஏவலாகும் தொழில்கள் ; ஓதக்கண்டேன் - நீ சொல்லிய சொற்களை ; இன்மொழிகள் ஓதுதலை : (3331) (3333) ; " இதனை அருள் கூரச் செப்புவார் " (3330) என்றருளினர் ஆசிரியர். ஆதல் - விளைவு மிகுதியும் ஆக்கமுடைய ; ஏனை ஆள்வாய் - சரிதக் குறிப்பு ;—(10) அன்ன மன்னும் - நீர்வளம் குறித்தது ; உன்ன முன்னும் - நினைக்க முற்படும் ; ஆரூரன்பேர் முடிவைத்த - ஆரூரர் என்ற பேரைத் தாய் தந்தையாற் சூட்டப்பெற்ற ; பேர் முடிவைத்தல் - பெயர் சூட்டல் ; நாமகரணம் செய்தல் ; குலதெய்வமாகிய திருவாரூர்ப் பெருமானது பெயராதலின் அதனை முடியில் சூட்ட என்றார் ; ஆரூரர் என்ற பெயர்க் காரணம் கூறியவாறு ; " அடிப் போராரூரன் " (தேவா) ; புலவன் செஞ்சொல்-தமிழ்நூல்; நண்பகற் பொழிதினைப் பற்றிப் பாலைத்திணையைக் கொண்டு தமிழ் வளம் பற்றி இறைவர் தன்மைகளை அவர் செய்த பேரருள் விளங்கப் பாடிய திறம் ; வன்றொண்டன் - இப்பெயரையே குறிக்கொண்டு ஈண்டு " வன்றொண்டர் பசிதீர்க்க " (3330) என்று இவ்வருளின் பகுதியினைத் தொடக்கம் செய்து காட்டிய திறம் காண்க : மாலை வல்லார் அவர் எம்தலைமேற் பயில்வாரே - இது அன்பர்கள் பொருட்டுப் பயன் கூறியமொழி.

**தலவிசேடம் :—திருக்கச்சூர் ஆலக்கோயில்**—தொண்டை நாட்டு 26 வது பதி. ஊர்ப்பெயரும் கோயிற் பெயரும் சேர்ந்து வழங்கும் பெயர் ; நன்னிலத்துப் பெருங்கோயில், வைகன் மாடக்கோயில் என்பன போல. விட்டுணு அமுதம் பெறும்பொருட்டுக் கச்சபமாய் - (ஆமை) - இருந்து வழிபட்ட ஊராதலின் கச்சூர் எனப்படும் ; கோயிலினுள் ஆல் - தலமரம் ஆதலின் ஆலக்கோயில் எனப்படும் ; கச்சப ஊர் என்பது கச்சூர் என்று மருவி வழங்கியது போலும் ; தீர்த்தம் - கூர்மதீர்த்தம் (கூர்மம் - ஆமை) எனப்படுதலும் காண்க ; இங்கு ஆரூர் நம்பிகள் பொருட்டு இறைவர் அந்தணராய் வந்து ஊரில் அந்தணர் மனைதோறும் நண்பகற் போதில் சென்று சோறிரந்து கொண்டுவந்து ஊட்டி மறைந்த வரலாறு மேலே புராணத்திலுரைக்கப்பட்டது ; பதிகம் அப்போது அருளப்பட்டது ; கோயிலுக்கு மேற்கே மலையடிவாரத்தில் விட்டுணுவுக்கு (அமுதம்) மருந்தளித்த மருந்தீசர் எழுந்தருளியுள்ளார் ; நம்பிகளுக்கு விருந்திட்ட இலிங்க மூர்த்தி கோயிலினுள் தரிசிக்க உள்ளார் ; மலைமேல் விருந்திட்ட நாதர் கோயில் ; மலைமேல் மருந்தே என்று நம்பிகளால் இவரும் மருந்து என்று போற்றப்பட்டனர் ; தொண்டைநாட்டிலுள்ள தியாகராசர் சந்நதிகள் பலவற்றுள் இஃது ஒன்று ; சுவாமி - விருந்திட்ட நாதர் ; அம்மை - உமையம்மை ; தியாகர் - அமுதத்தியாகர் ; தீர்த்தம் - கூர்மதீர்த்தம் - மரம் - ஆல் ; பதிகம். 1

இப்பதி சிங்கப்பெருமாள் கோயில் நிலையத்தினின்றும் வடமேற்கில் 1 நாழிகை யளவில் அடையத்தக்கது.

3337. வந்தித் திறைவ ரருளாற்போய் மங்கை பாகர் மகிழ்ந்தவிடம்
முந்தித் தொண்ட ரெதிர்கொள்ளப் புக்கு முக்கட் பெருமானைச்
சிந்தித் திடவந் தருள்செய்கழல் பணிந்துசெஞ்சொற்றொடைபுனைந்தே
அந்திச் செக்கர்ப் பெருகொளியா ரமருங் காஞ்சி மருங்கணைந்தார். கஅ௩

(இ - ள்) வந்தித்து...போய் - வணங்கி இறைவரது அருள்விடை பெற்று அங்கு நின்றும் போய் ; மங்கை பாகர் மகிழ்ந்த இடம் - உமைபாகராகிய சிவபெருமான் மகிழ்ந்து எழுந்தருளியிருக்கும் பிறபதிகளை; முந்தி...புக்கு - அங்கங்கும் முன்பு தொண்டர்கள் வந்து எதிர்கொண்டு அழைத்துச் செல்லப்புகுந்து ; முக்கட் பெருமானைச் சிந்தித்திட...புனைந்தே - நினைக்க முன்வந்து அருள்புரியும் முக்கட்பெருமானது திருவடிகளைப் பணிந்து செஞ்சொற்றொடை மாலைகளாகிய திருப்பதிகங்களைப் பாடியருளி ; அந்தி......மருங்கணைந்தார் - மாலைச் செவ்வந்தி போலும் பெருகும் ஒளி பொருந்திய திருமேனியினையுடைய திருவேகம்பவாணர் விரும்பி எழுந்தருளியுள்ள திருக்காஞ்சிபுரத்தின் பக்கம் வந்தணைந்தனர்.

(வி - ரை) வந்தித்து - முன் கூறியபடி வணங்கி ; வந்தித்தல் - என்பது நன்றி பாராட்டும் வகையில் செய்யும் வணக்கம் என்ற குறிப்புடன் நின்றது ; அருளால் - அருள் விடைபெற்று ; போய் - மேலே மேற்றிசை நோக்கிச் சென்று.

மங்கை பாகர் மகிழ்ந்த இடம் - இறைவர் மகிழ்ந்து அருளிய பிற பதிகள். இவை திருக்கச்சூராலக் கோயிலுக்கும் திருக்காஞ்சிபுரத்துக்கும் இடையில் பாலாற்றின் கரையிலும் கரை அணிமையிலும் உள்ளவை ; இவை பாலாறும் சேயாறும் கூடுதுறையில் உள்ள திருமுக்கூடல், திருவில்வலம், திருமாகறல், திருக்குரங்கணில் முட்டம் முதலியன என்பது கருதப்படும்.

சிந்தித்திட வந்து அருள்செய் பெருமானைக் கழல்பணிந்து - என்று கூட்டுக.

சிந்தித்திட வந்தருளும் கழல் - என்று வருதல் திருவடியின் செயலாக வைத்து உரைப்பினுமமையும் ; சிந்தித்திட - நினைத்த அளவில் ; திருவருளின் விரைவு குறித்தது ; சிந்தித்தல் - ஒன்றே திருவருள் பெறுதற்கு மூலம் என்பதாம். சிந்தித்திடவே என்க ; "ஏதும் பெறுவிடில் நெஞ்சுண்டன்றே - அடித்தாமரை சென்று சேர்வதற்கே" (கழுமல-மும் - கோவை - 12.)

சேஞ்சோற்றேடை - திருப்பதிகங்கள் ; இவை கிடைத்தில.

அந்திச் சேக்கர்ப் பேருத ஒளியார் - அந்திச் செக்கர் வானம்போதும் திருமேனியின் பெருகும் ஒளி : பெருதும் - அந்திச் செக்கர் ஒளி காலம் செல்லச் சிறுகிக் கழிந்து இருள் பரவும் ; இறைவர் திருமேனிச் செக்கர் அவ்வாறன்றி நினைப்பின் அளவுக்கேற்பப் பெருதும் என்பதாம். 183

3338. "அன்று வேண்ணெய் நல்லூரி லரியு மயனுந் தொடர்வரிய
வென்றி மழவெள் விடையுயர்த்தார் வேத முதல்வ ராய்வந்து
நின்று சபைமுன் வழக்குரைத்து நேரே தொடர்ந்தாட் கொண்டவர்தாம்
இன்றிங் கெய்தப் பெற்றேறே"மென் றெயில்சூழ் காஞ்சி நகர்வாழ்வார், கஅச

3339. மல்கு மகிழ்ச்சி மிகப்பெருக, மருகு மணித்தோ ரணநாட்டி
அல்கு தீப நிறைகுடங்க ளகிலின் றூபங் கொடியெடுத்துச்
செல்வ மனைக ளலங்கரித்துத் தெற்றி யாடன் முழவதிரப்
பல்கு தொண்ட ருடன்கூடிப் பதியின் புறம்போ யெதிர்கொண்டார்.

3338. (இ - ள்) வெளிப்படை - திருமாலும் பிரமதேவனும் தொடர்ந்து அறிதற்கரியவராய் நீண்டு நின்ற வெற்றியுடைய இளைய இடபத்தைக் கொடிமேல் உயர்த்திய இறைவர் முன்னாளில் அன்று திருவெண்ணெய் நல்லூரிலே வேதியர் தலைவராக வெளிவந்து நின்று சபையார் முன்பு வழக்குப் பேசி, நேரே முன்னைத் தொடர்புபடத் தடுத்து ஆட்கொள்ளப் பெற்றவராகிய நம்பிகள் தாமே இன்று இப் பதியினில் எழுந்தருளும் பெரும்பேறு பெற்றோம்" என்று உட்கொண்டு மதில் சூழ்ந்த காஞ்சிபுர நகரில் வாழ்வார்கள், கஅச

3339. (இ-ள்) வெளிப்படை. பொருந்திய மகிழ்ச்சி மேலும் மிகப் பெருக வீதிகளில் அழகிய தோரணங்களை நாட்டியும், பெருகும் தீபங்களும் நிறைகுடங்களையும் அகிலின் தூபங்களையும் கொடிகளையும் ஏந்தியும், செல்வமுடைய மனைகளை அலங்கரித்தும், தெற்றிகளில் ஆடல் முழவுகள் சத்திக்கப், பெருகிய தொண்டர்களுடனே கூடி அப்பதியின் புறத்திலே போய் நம்பிகளை எதிர்கொண்டனர். கஅரு

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3338. (வி - ரை) இப்பாட்டினால் நம்பிகளின் நல்வரவு கேட்ட காஞ்சிபுர நகர மாந்தரின் மிக்க மன மகிழ்ச்சியும் அதன் காரணமும் கூறப்பட்டது. மேல் வரும் பாட்டினால் அம்மகிழ்ச்சியாகிய மனநிலை புறச் செயல்களாக உருப்பட்ட நிலை கூறப்பட்டது.

"அன்று...பெற்றேம்" என்ற-இது காஞ்சி நகர வாணர்கள் மனத்துள் எண்ணி மகிழ்ந்த கருத்து.

அன்று - உலக மறியவந்த முன்னை ஒரு நாள் ; உலகமறிசுட்டு ; நாடிக்காண மாட்டாப் பொருள் நேரில் தாமே உலகர் யாவரும் காணும்படி வந்து ; நம்பிகளது

சரித வரலாறுகளில் இறைவர் நேரே வந்து வழக்குரைத்து நம்பிகள் மறுக்கவும் ஆளாகக் கொண்ட பகுதியே மக்களது உள்ளத்தைக் கொள்ளைகொண்டு அவரைப் போற்ற நின்றது; அரசுகள் சரிதத்தில் சூலை தந்து நேரே யாட்கொண்டருளிய பகுதி மக்களை அவர்பாற் பிணித்தமை போல; "நீண்டவரை வில்லியார் வெஞ் சூலை மடுத்தருளி நேரே முன்னு, ளாண்டவரசு" (1446) என்று ஆளுடைய பிள்ளை யார் உட்கொண்டமை காண்க.

வேத முதல்வராய் - மறைபயிலும் அந்தணர் பெருமானாக.

தொடர்ந்து - கயிலையில் செய்த முன்னை அடிமைத் திறத்தினால் அதனையே தொடர்ந்து.

ஆட்கொண்டவர் - ஆட்கொள்ளப் பட்டவர். பிறவினை தன்வினையாக வந்தது; தாம் - தாமாகவே.

எய்தற் பெற்றேம் - எய்தும் பெரும்பேறு பெற்றோம். 184

3339. (வி - ரை) மணித்தோரணம் - மணி - அழகிய; மணி மாலைகள் தூக்கிய என்றலுமாம்.

அல்குதீபம் - ஒளிமிகும் விளக்குக்கள்; அல்குதல் - பெருகுதல்; நிறைகுடம் - புண்ணிய நீர் நிறைந்த குடங்கள்; பூரண கும்பங்கள் என்பர்.

எடுத்து - தீபம், குடம், தூபம், கொடி இவற்றை ஏந்தி.

தெற்றி - சித்திரக்கூடங்கள்; முற்றத்தில் நீண்ட திண்ணைகள் என்றலுமாம். ஆடல் முடிவு அதிர்தல் - மங்கலங் காட்டும் உபசார வகைகளுள் ஒன்று; "நடமாட முழவதிர, தேந்தாமென்று அரங்கேறிச் சேயிழையார் நடம்பயிலும்" (தேவா); ஆடல் முழவு - ஆடலுக் கேற்ப முழக்கும் முழவு; ஆடலும் முழவும் என்றலுமாம்.

பல்கு தொண்டர் - பல்குதலாவது சரியை வகைகள் முதலாகப் பற்பல தொண்டுகளிலும் பயிலுதல்; தொண்டர்கள் என்ற இவர்கள் வேறு; முன்கூறியபடி மங்கலஞ் செய்த காஞ்சி நகர் வாழ்வார் வேறு; அவர்கள் நகர மாந்தர்.

வாழ்வார் தொண்டருடன் கூடி - எதிர் கொண்டார் - என்க; சிறப்புப்பற்றி உடன் உருபைத் தொண்டர்களுடன் சேர்த்தி ஓதினர். 185

3340. ஆண்ட நம்பி யெதிர்கொண்ட வடியார் வணங்க வெதிர்வணங்கி
நீண்ட மதிட்கோ புரங்கடந்து நிரைமா ளிகைவீ தியிற்போந்து
பூண்ட காதல் வாழ்த்தினுடன் புனைமங் கலதூ ரியமொலிப்ப
ஈண்டு தொண்டர் பெருகுதிரு வேகாம் பரஞ்சென் றெய்தினர். கஅசு

(இ - ள்) ஆண்ட....வணங்கி - இறைவரால் தடுத்தாட் கொள்ளப்பட்ட நம்பிகள் தம்மை எதிர்கொண்டு அழைத்த அடியார்கள் வணங்க, அவர்களைத் தாமும் எதிர் வணக்கம் செய்து; நீண்ட....போந்து - நீண்ட மதிலையும் கோபுரத்தையும் கடந்து வரிசையாகிய மாளிகைகள் பொருந்திய மாடவீதியிற் போய்; பூண்ட.... ஒலிப்ப மேற்கொண்ட பெருவிருப்பத்தோடு பொருந்திய மங்கல இயங்கள் ஒலி செய்ய; ஈண்டு...எய்தினர் - நெருங்கிய தொண்டர்களின் கூட்டம் பெருகும் திரு வேகாம்பரத் திருக்கோயிலினைச் சென்று அடைந்தருளினர்.

(வி - ரை) எதிர்கொண்ட அடியார் வணங்க - நம்பிகளும் எதிர் வணங்கி என்க; நம்பிகள் வணங்கி என்ற வாக்கியத்தினுள் அடியார் வணங்க என்று வைத்துக் கூறிய தமிழ்நயம், நம்பிகள் அடியார்களை வணங்க முற்பட, அவர் அவ்வாறு

வணங்குமுன் அடியார்கள் வணங்க, அதனுல் நம்பிகளின் வணக்கம் எதிர் வணக்கமாயிற்று என்ற குறிப்புடன் நின்றது ; "வந்தெதிர் கொண்டு வணங்கு வார்முன் வன்றொண்ட ரஞ்சலி கூப்பி வந்து" (269) என்று திருவாரூரில் அடியவர் எதிர் கொண்டது பற்றிக் கூறியதும், "அன்பின் வந்தெதிர் கொண்டசீ ரடியா ரவர்களோ நம்பி யாரூரர் தாமோ, முன்பி றைஞ்சின ரியாவரென் றறியா முறைமை யாலெதிர் வணங்கி" (244) என்று திருத்தில்லையில் அடியார்கள் எதிர்கொண்ட முறைபற்றிக் கூறியதும் ஈண்டு நினைவு கூர்தற்பாலன.

நீண்ட - என்பதனைக் கோபுரத்துடனும் கூட்டுக.

நிரை மாளிகை வீதி - வரிசையாக விளங்கும் மாளிகைகளையுடைய மாடவீதி ; இறைவர் திருத்தேர் விழாவில் உலாப் போதும் திருவீதி.

வாழ்த்தினுடன் தூரியம் ஒலிப்ப - காதல் வாழ்த்தினுடன் ஒத்தியைந்து மங்கலப் பொருள் புலப்படுத்துதலால் தூரியம் ஒலிப்ப என்றூர்.

காதல் வாழ்த்து - நம்பிகள்பாற் கொண்ட காதலால் மக்கள் வீதியில் இருமருங்கும் வாழ்த்தும் ஒலி.

ஈண்டு தொண்டர் பெருக திரு ஏகாம்பரம் - ஈண்டுதல் - திருக்கோயிலில் வந்து கூடுதல் ; பெருக - பலவாறும் வருதலால் பெருகும் ; காஞ்சிபுரமும் திருவாரூரினைப் போலவே தொண்டர் கூட்டம் பெருகும் சிறப்புடையது என்ற குறிப்புமாம்.

திருஏகாம்பரம் - திருஏகம்பர் எழுந்தருளியுள்ள திருக்கோயில் ; திரு ஏகம்பம் எனப்படும் ; இது வேறு ; திரு ஏகாம்பரம் என்ற பெயர் வழக்கு வேறு ; ஏகாம்பரம் - ஆம்பரம் - மாமரம்; ஏகம் - ஒப்பற்றது - ஒன்று; ஏகம் ஆம்பரம் - ஏகாம்பரம் என மருவி வழங்குவது. இத்திருக்கோயிலில் உள்ள அம்மை தவமிருந்த மாவடி என்னும் மாமரத்தினுற் போந்த பெயர் ; ஏகம்பம்-கம்பம் - இறைவர் எழுந்தருளிய இடம் - கோயில் ; கம்பர் - கம்பன் - "கச்சி மாநகர்க் கம்ப மிருப்பதே" - கம்பவாணர் என்பன முதலிய வழக்குக்கள் காண்க. 186

3341. ஆழி நெடுமா லயன்முதலா மமரர் நெருங்கு கோபுரமுன்
பூழி யுறமண் மிசைமேனி பொருந்த வணங்கிப் புகுந்தருளிச்
சூழு மணிமா ளிகைபலவுந் தொழுது வணங்கி வலங்கொண்டு
வாழி மணிப்பொற் கோயிலினுள் வந்தா ரணுக்க வன்றொண்டர்.

(இ - ள்) ஆழி...புகுந்தருளி - சக்கரத்தினையுடைய நெடிய விட்டுணு பிரமன் முதலாகிய தேவர்கள் நெருங்கியிருக்கும் திருக்கோபுரத்தின் முன்பு புழுதி படிய நிலத்தின்மேல் தமது திருமேனி பொருந்தும்படி வணங்கி உள்ளே புகுந்தருளி ; சூழும்...வலங்கொண்டே - சூழ்ந்துள்ள அழகிய திருமாளிகைகள் பலவற்றையும் தொழுது வணங்கிக்கொண்டு சுற்றி வலமாக வந்து ; வாழி...வன்றொண்டர் - திருவணுக்கன் றொண்டராகிய வன்றொண்டர் வாழ்வுடைய மணிப்பொற் கோயிலாகிய திருவேகம்பர் திருமாளிகையினுள் வந்தருளினர்.

(வி - ரை) ஆழி...அமரர் நெருங்கு கோபுரம் - அமரர்கள் கோபுரவாய்தலில் உட்புகும் காலம் பார்த்துத் திருநந்திதேவ ராணையினை எதிர் நோக்கிக் காத்திருக்கின்றனர் என்பது. "வாய்தல் பற்றித், துன்றிநின்றூர் தொல்லை வானவ ரீட்டம் பணியறிவான், வந்துநின் றூரய னுந்திரு மாலும்" (கச்சி - திருவிருத்தம்).

பூழி பொருந்த - கோபுரத்தின் முன்பு திருமேனி நிலம் பொருந்துதலாற் பூழி படிய வணங்கும் நிலை குறித்தது.

சூழமணி மாளிகை பலவும் தொழுது வணங்கி - கச்சித் திருக்கோயிலினுள் புறச்சுற்றிலே திருக்கச்சி மயானம் முதலாகிய பல திருமாளிகைகள் உள்ளனவாதலின் அவற்றைத் தனித்தனி வணங்கிக்கொண்டு திருக்கோயிலை அவ்வாறு வலமாக வந்தருளினர் என்பதாம்.

மணிப்பொற் கோயில் - திருவேகம்பர் திருமாளிகை.

வாழி - வாழ்வு தருவது என்ற பொருளில் நின்றது ; அசையெனினுமாம்.

அணுக்க வன்றொண்டர் - முன்னைய நிலையிற் றிருக்கயிலையினும், இந்நிலையில் வழியடிமைசெய்யும் வேயதிர் குலத்துட் டோன்றிய நிலையினும் அணுக்கன் றொழில் செய்யும் உரிமையுடையவர் என்பதாம்.

வந்தார் - பயணிலை முன்வந்தது விரைவு குறித்தது. 187

3342. கைகள் கூப்பி முன்னணைவார் கம்பை யாறு பெருகிவர
ஐயர் தமக்கு மிகவஞ்சி யாரத் தழுவிக் கொண்டிருந்த
மையு லாவுங் கருநெடுங்கண் மலையா ளென்றும் வழிபடுபூஞ்
செய்ய கமலச் சேவடிக்கீழ்த் திருந்து காத லுடன்வீழ்ந்தார். கஅஅ

(இ - ள்) கைகள்...அணைவார் - கைகளைச் சிரமேற் கூப்பிக் கொண்டு திருமுன்பு அணைவாராகிய நம்பிகள் ; கம்பையாறு...சேவடிக்கீழ் - கம்பை நதி பெருக்கெடுத்து வரக்கண்டு இறைவரது திருமேனிக்காக மிகவும் பயந்து தமது திருஉடம்பு நிறையத் தழுவிக்கொண்டிருந்த மை பொருந்திய கரிய நீண்ட கண்களையுடைய மலைமகளாகிய அம்மையார் நித்தமாக வழிபடுகின்ற செம்மையுடைய தாமரை போலும் சேவடிகளின் கீழே ; திருந்து...வீழ்ந்தார் - திருந்தும் பெருவிருப்புடனே வீழ்ந்தனர்.

(வி - ரை) முன் - திருமுன்பு ; திருஏகம்பர் சந்நதியின் முன்பு.

அணைவார் வீழ்ந்தார் - என்று கூட்டி முடிக்க ; அணைவார் - அணைவாராகிய நம்பிகள் ; வினைப்பெயர்.

பெருகிவர ஐயர் தமக்கு மிக அஞ்சி - பெருகி வருதலால் இறைவர் திருமேனிக்கு வெள்ளத்தாற் பழுது நேரும் என அஞ்சி ; ஐயர் தமக்கு - ஐயரது திருமேனிக்காக.

ஆரத் தழுவிக்கொண்டிருந்த - ஆர - நிறைய ; முழுதும்.

தழுவிக்கொள்ளுதல் - வெள்ளத்தால் அலைக்கப்படாதபடி காக்கத் தாமே தழுவிக் காவலாக மறைத்துக் கொள்ளுதல்.

என்றும் வழிபாடு - சேவடி - உன் பூசை எப்போதும் நம்பால் முடிவதில்லை என்று பெருமான் அருளியபடி நித்தமாக நிகழும் பூசை ; இவ்வரலாற்றைத் திருக்குறிப்புத் தொண்ட நாயனார் புராணத்துட் (1134—1145) காண்க. 188

3343. வீழ்ந்து போற்றிப் பரவசமாய் விம்மி யெழுந்து மெய்யன்பால்
வாழ்ந்த சிந்தை யுடன்பாடி மாறா விருப்பிற் புறம்போந்து
சூழ்ந்த தொண்ட ருடன்மருவு நாளிற் றொல்லைக் கச்சிநகர்த்
தாழ்ந்த சடையா ராலயங்கள் பலவுஞ் சார்ந்து வணங்குவார், கஅகூ

3344. சீரார் காஞ்சி மன்னுதிருக் காமக் கோட்டஞ் சென்றிறைஞ்சி,
நீரார் சடையா ரமர்ந்தருளு நீடு திருமேற் றளிமேவி

ஆரா வன்பிற் பணிந்தேத்தி யளவி "னுந்தா வொண்சுட"ராம்
பாரார் பெருமைத் திருப்பதிகம் பாடி மகிழ்ந்து பரவினார். ககூ0

3343. (இ - ள்) வீழ்ந்து...புறம்போந்து - முன்கூறியவாறு நிலமுற விழுந்து துதித்துப் பரவசப்பட்டு விம்மி மேலெழுந்து மெய்யன்பினாலே வாழ்வடைந்த மன நிறைவுடனே பாடியருளியபின் மாறுதல் இல்லாத விருப்பினுடனே புறத்திலே போந்தருள ; சூழ்ந்த...நாளில்-தம்மைச் சூழ்ந்த திருத்தொண்டர்களுடனே கூடியிருக்கும் நாள்களிலே ; தொல்லை...வணங்குவார் - பழைமையாகிய கச்சிமா நகரத்திலே தாழ்ந்த சடையினையுடைய இறைவனார் எழுந்தருளியுள்ள ஆலயங்கள் பலவற்றையும் சார்ந்து வணங்குவாராகி, கஅகூ

3344. (இ - ள்) சீரார்...இறைஞ்சி - சிறப்புப் பொருந்திய திருக்காஞ்சிபுரத்தில் நிலைபெற்ற திருக்காமக் கோட்டத்தில் அணைந்து பணிந்து ; நீரார்... மேவி - கங்கையைச் சூடிய சடையினையுடைய இறைவர் விரும்பி எழுந்தருளியிருக்கும் நீடிய கச்சித் திருமேற்றளியினை அடைந்து ; ஆரா...பரவினார் - நிறைவுபடாது பெருகும் அன்பினாலே பணிந்து துதித்து அளவற்ற பெருமையுடைய "நுந்தா வொண்சுடரே !" என்று தொடங்குகின்ற உலக நிறைந்த பெருமையுடைய திருப்பதிகத்தைப் பாடி மகிழ்ந்து போற்றினார். ககூ0

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3343. (வி - ரை) வீழ்ந்து போற்றிப் பரவசமாய் விம்மி எழுந்து - அம்மையார் " என்றும் வழிபடுஞ் சேவடி"கள் என்ற எண்ணம் கொண்டு அத்திருவடிக்கீழ் வீழ்ந்தபோது அந்த அருளிப் பாட்டினை எண்ணப் பரவசமாய்க் கிடந்து விம்மினார் ; அதன்பின் எழுந்து பாடினார்.

மாறவிருப்பிற் புறம்போந்து - புறம் போகுதல் விருப்பம் நிறைந்த பின்னர் நிகழ்தல் இயல்பாம். ஆயின் இங்கு நம்பிகள் விருப்பம் மாறாதவாறே - நிறைந்த விருப்பில் நின்றவாறே - புறம் போந்தனர் என்பது.

சூழ்ந்த தொண்டர் - நம்பிகளுடன் வந்தாரும், அங்கு வந்து சூழ்ந்தாரும்.

தொல்லை - மிகப் பழமை ; கச்சிமா நகரின் அழியாத தொன்மை.

ஆலயங்கள் பலவும் - கச்சியில் உள்ள எண்ணிறந்த சிவாலயங்கள். 189

3344. (வி - ரை) திருக்காமக் கோட்டஞ் சென்றிறைஞ்சி-"அறப்பெருஞ் செல்வக் காமக் கோட்ட மணைந்திறைஞ்சினார் " (2897) எனப் பிள்ளையார் வழிபட்டமை கூறியது காண்க. ஆண்டுரைத்தவை பார்க்க. சத்திபீடம். கச்சி எல்லையில் எல்லாக் கோயில்களுக்கும் இஃதொன்றே அம்மை ஆலயம். அம்மையாரது தவத்திற் குறிக்கொண்ட பொருளாய் இறைவர் இருத்தலில் இதுவும் "சடையா ராலயமா"யிற்று.

திருமேற்றளி - திருவேகம்பத்தின் மேற்றிசையில் உள்ள தனிக்கோயில் ; முன் உரைத்தவை பார்க்க.

" நுந்தா ஒண்சுடர் "ஆம் திருப்பதிகம் - பதிகத் தொடக்கமாகிய முதற்குறிப்பு. பதிகமே கெடாத ஒள்ளிய ஞானச் சுடராம் என்றதும் குறிப்பு.

ஆரா அன்பு-குறையாத அன்பு; பாரார் பெருமை-உலகம் போற்றும் பெருமை. பணிந்தேத்தும் அளவில்—என்பதும் பாடம். 190

## திருக்கச்சிமேற்றளி

திருச்சிற்றம்பலம் பண் - நட்டராகம்

நுந்தா வொண்சுடரே நுனையே நினைந்திருந்தேன்
வந்தாய் போயறியாய் மனமே புகுந்துநின்ற

சிந்தா யெந்தைபிரான் றிருமேற் றளியுறையும்
எந்தா யுன்னையல்லா லினியேத்த மாட்டேனே. (1)

பாரூர் பல்லவனூர் மதிற்காஞ்சி மாநகர்வாய்ச்
சீரூ ரும்புறவிற் றிருமேற் றளிச்சிவனை
ஆரூரன் னடியா னடித்தொண்ட னாரூரன் சொன்ன
சீரூர் பாடல்வல்லார் சிவலோகஞ் சேர்வாரே. (10)

திருச்சிற்றம்பலம்

**பதிகக்குறிப்பு** :—நுந்தா வொண்சுடரே ! எந்தாய் ! ஏறே ! ஐயா ! மலையே ! உன்னையல்லால் இனியேத்த மாட்டேனே. உனையே நினைந்திருந்தேன் ; நினைதலும் இவ்வூனுடலம் புகுந்தாய்; போயறியாய் ; நினையாதிருந்தாலும் வேறா வந்தென்னுள்ளம் புகவல்ல மெய்ப்பொருள்; அடியார்க்குத் தொண்டுபட்டு இனிப் பிறவாமை கேட்டொழிந்தேன் ; நுன் அடைந்தேன் ; எற்றாலென்குறை ? என் இடரைத் துறந்தொழிந்தேன் ; நீ மாலாயின தீர்த்தருள் செய்யு மெய்ப்பொருள் ; நின்னை நினைதலுமே நின்னினையப் பணித்தாய் ; உன்னையல்லா லுடலில் உயிருள்ளளவும் நாவதனால் வேறுரையேன் — என்றிவ்வாறு இறைவனை நினையும் தன்மைகளும் அவர் அருளுந் தன்மைகளும் பயனும் தூக்கி உலகரை வழிப்படுத்தி உரைத்தது ; இச்சிறப்புப் பற்றியே ஆசிரியர் இதனைப் பாரார் பெருமைத் திருப்பதிகம் என்றருளினர்.

**பதிகப் பாட்டுக் குறிப்பு** :—(1) நுந்துதல் - தூண்டுதல் ; நுந்தா ஒண்சுடர் - தூண்டாவிளக்கு, சுயஞ்சோதி ; "ஒண்சுடரே" (6) நுனையே நினைந்திருந்தேன்-வேறொன்றையும் எண்ணாது உன்னையே மனத்துட் கொண்டிருந்தேன்; "ஒன்றி யிருந்து நினைமின்கள்" (தேவா) ; இது சிவயோக நிலை ; வந்தாய் போயறியாய் - நிலையாகக் குடிகொண்டாய் ; போயறிதல் - மறைதல்;—(2) ஆள்தான்...பட்டு - உனக்கு ஆளான காரணத்தால் உன் அடியார்க்குத் தொண்டு செய்யும் பெரும்பேறு பெற்றேன் ; ஆண்டானுக்கு அடிமை செய்தலின் பயன் அடியார் பணி என்பதாம். "கும்பிட்ட பயன்" (3921) ; திருத்தொண்டத் தொகை பாடி அருளிய வரலாறு இங்கு நினைவு கூர்தற்பாலது ; கேட்டேன்...ஒழிந்தேன் - இனிப்பிறவா வரம் ஒன்றையே கேட்டமைந்தேன் ; வேறொரு வரமும் வேண்டுதலின்று ; சேடு - ஆர் - சேடு - பெருமை ; மாட்டே - மாடு - செல்வம் ; எதுகை நோக்கி ஒற்றிரட்டித்தது ;—(3) யோறந்து - சோம்பியிருந்து ; வேறு - தனியாக ; அறியாவாறு ; "நினையாவென்னெஞ்சை நினைப்பிப்பானை" (தேவா) —(4) உற்றார்...அடைந்தேன் - நம்பிகள் சரிதக் குறிப்பு ; "ஆளாயினியல்லே னெனலாமே" ; உலகியல் வாழ்வைத் துறந்து சிவனடிமையே செய்யப் புகுந்த நிலை ; தவநெறி ;—(5) மெய்ம்மால் - உடம்பு முதலியவற்றின் வைத்த மயக்கம் ; ஆணவமல மறைப்பு ; மெய்ப்பொருள் - மெய்யல்லாதவற்றை மெய்எனக் கொண்ட மாலினைத் தீர்த்து மெய் இது என்று உணர்த்தும் பொருள் என்றது ; எம்மான் ..ஒழிந்தார் - இது உலகரை நோக்கி உலகியல்பு கூறியது ;—(6) நானேல்...புகுந்தாய் - 1-ம் பாட்டுப் பார்க்க. ஊனுரிவ் வுடலம் புகுந்தாய் - ஊனுட் புகுந்தாய் ; நினைவு - மாயையினுலான காணம் ; இவ்வாறு வருவது இறைவரது கருணைத்திறம் என்பது ;—(7) சேய் - வயல் ; சேய்யார் பைங்கமலம் - சேய் - சிவந்த நிறமுடைய எனலுமாம் ;—(8) இனி...உயிருள்ளளவும் - உலகரை வழிப்படுத்திக் காட்டிய அருளிப்பாடு ;—(9) நிலையாய்...பணித்தாய் - "பொதுநீக்கித் தனைநினைய வல்லார்க் கென்றும் பெருந்துணை" (தேவா) ; உலகப் பற்றுவிட்டுச் சிவனையே நினைவோர்க்கு அந்நினைவு மாறாதிருக்கும் சிவயோக

நிலையினைக் கூட்டுவிப்பார் என்பது ; மலையே - சலியாத பெருந்துணையே ; மலை போன்றவரை மலை என்றார் ;—(10) பல்லவன் ஊர்-நம்பிகள்காலத்தில் காஞ்சிபுரம் பல்லவர்களது ஆட்சிக்குட்பட்டிருந்தது என்ற அகச்சான்று. "உரிமையாற் பல்லவர்க் குத் திறை கொடா மன்னவரை மறுக்கஞ் செய்யும், பெருமையார்" (நம்பி-கோயில்).

தலவிசேடம் :—திருக்கச்சி மேற்றளி—III ௫௫௦-ம் பக்கம் பார்க்க.

3345. ஓண காந்தன் றளிமேவு மொருவர் தம்மை யுரிமையுடன்
பேணி யமைந்த தோழமையாற் பெருகு மடிமைத் திறம்பேசிக்
காண மோடு பொன்வேண்டி "நெய்யும் பாலுங்" கலைவிளங்கும்[௧௧௯௧
யாணர்ப் பதிக மெடுத்தேத்தி யெண்ணி னிதிபெற் றினிதிருந்தார்.

(இ - ள்) வெளிப்படை - திருவோண காந்தன்றளியில் எழுந்தருளிய இறைவரை உரிமையினோடு விரும்பிக் கொண்ட தோழமைத்திறம் பற்றிப் பெருகி வளரும் அடிமைத் திறத்தினைச் சொல்லி, காணத்தினோடு பொன்னை விரும்பி, " நெய்யும் பாலும் " என்று தொடங்கும் கலைகளின் தன்மை விளங்குகின்ற அழகிய திருப்பதிகத்தினை எடுத்துப் போற்றி எண்ணில் நிதியங்களைப் பெற்று இனிதாக எழுந்தருளியிருந்தார்.

(வி - ரை) ஓணகாந்தன்றளி மேவும் ஒருவர் ; திருஓண காந்தன்றளி என்னும் திருக்கோயிலில் எழுந்தருளிய சிவபெருமான்.

உரிமையுடன்...அடிமைத்திறம் - உரிமையுடன் பேணி யமைந்த தோழமை - இறைவர் தாமே விரும்பி எடுத்துக்கொண்ட தோழராந் தன்மை ; " தோழமையாக வுனக்கு நம்மைத் தந்தனம் " (273) என்று இறைவர் பேணிக்கொண்ட தோழராந் தன்மை ; பேணி - இறைவர் விரும்பி ; உரிமையுடன் - என்பதனை அடிமைத்திறம் என்றதுடனும் கூட்டுக.

பெருகும் அடிமைத்திறம் - பெருகுதல் - அடிமை செய்தற்கண் சோர்வுபடாது மேலும் மேலும் ஆர்வமிகுதல்.

தோழமையாற் பேசி - என்று கூட்டுக ; அடிமைத்திறம் பேசுதலாவது அடிமைத் திறம்பற்றிப் பேசினும் அப்பேச்சுத் தோழராந் தன்மைபற்றிக் கொண்ட அமைப்பினையுமுடையதா யிருத்தல். பதிகப் பாட்டுக்கள் பார்க்க.

காணம் - காசு ; பொன் - அணிகளுக்காகத்தக்க படிக்குள்ள பொன் ; "காண மில்லை " (பதிகம்)

நெய்யும் பாலும் - கலை விளங்கும் யாணர்ப் பதிகம் - " நெய்யும் பாலும் " - பதிகத் தொடக்கமாகிய முதற்குறிப்பு ; கலை - கலைகளின் பொருளும் கலையமைதியும் ; யாணர் - அழகு.

எண்ணில் நிதி - அளவில்லாத நிதியம் ; இரட்டுற மொழிதலால் எண்+நில் என்று பிரித்து, தமது எண்ணத்தில் - கருத்தில் - நின்ற என்றலுமாம். நிதி பெறக் கருதிப் பாடியமை பற்றிப் பதிகக் குறிப்புப் பார்க்க.

திறம் பேருக—என்பதும் பாடம். 191

திருவோண காந்தன்றளி

திருச்சிற்றம்பலம் பண் - இந்தளம்

நெய்யும் பாலுந் தயிருங் கொண்டு நித்தல் பூசனை செய்ய லுற்றார்
கையி லொன்றுங் காண மில்லைக் கழல டிதொழு துய்யி னல்லால்

ஐவர் கொண்டிங் காட்ட வாடி யாழ்கு ழிப்பட் டழுந்து வேனுக்
குய்யு மாறென் றருளிச் செய்யீ ரோண காந்தன் றளியு ளீரே. (1)

ஓவ ணமே லெருதொன் றேறு மோண காந்தன் றளியு ளார்தா
மாவ ணஞ்செய் தாளுங் கொண்டு வரைது கிலொடு பட்டு வீக்கிக்
கோவ ணமேற் கொண்ட வேடங் கோவை யாகவா ரூரன் சொன்ன
பாவ ணத்தமிழ் பத்தும் வல்லார் பறையுந் தவஞ்செய்த பாவந் தானே (10)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—காணமோடு பொன்வேண்டி எடுத்து உரிமையுடன் பேணி யமைந்த தோழமையாற் பெருகும் அடிமைத்திறம் பேசியது ; ஆசிரியர் காட்டி யருளியபடி. (3345)

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) நெய்யும்...செய்யலுற்றல் - நெய், பால், தயிர் திருமஞ்சனப் பொருள்கள் ; பூசனை - திருமஞ்சனம் பூசைத் தொடக்கம். தொடக்கம் கூறவே ஏனை அலங்காரம், திருவமுது, புகை, ஒளி, அருச்சனை முதலியவை எல்லாங் கொள்ளப்படும் ; நித்தல் பூசனை - என்றதனால் நம்பிகள் நாடோறும் உடையவர் பூசையாகிய பெருந் தவநெறி கைக்கொண்டொழுகிய நிலை புலப்படும். " சந்தி மூன்றிலுந் தாபர நிறுத்திச் சகளி செய்திறைஞ்சு " (திருநின்றியூர் 5) ; " காலையிலு மாலையிலுங் கடவுளடி பணிந்து கசிந்தமனத் தவர் பயிலும் " கலயநல்லூர் (8) ; " வேண்டிக் கொள்வேன் றவநெறியே " (துறையூர்) ; " ஆகம சீலர்க் கருணல்கும் பெம்மானே " (பாவையுண் மண்டளி) முதலியனவாய் வரும் நம்பிகள் திருவாக்குக்கள் காண்க ; நித்தல் பூசனை செய்யலுற்றல் கையிலொன்றும் காண மில்லை - நம்பிகள் பொன் வேண்டுவதெல்லாம் ஆண்டவரது சிவபூசைக்கும் அடியார் பூசைக்குமேயாம் என்பதற்கு அகச்சான்று ;—(2) இப்பாட்டிலும் மேல்வருவன வற்றிலும் தோழமை உரிமையினாலே நிந்தைத் துதியாக வரும் தன்மை கண்டு கொள்க ; வாயி திறவாள் - பேசமாட்டாள் ; சிறு துளியாக வருதலின்றி, வாய் திறந்து பெருவெள்ளமாக ஆரவாரித்து வரமாட்டாள் என்பது சிலேடை ; வயிறுதாரி - வயிறு பெருத்தவர் ; பேருண்டி உண்பவர் ; குமரன் பிள்ளை - சிறுவர் ; சிறுபிள்ளை ; தேவியார் கோற்றட்டி ஆளார் - பணியாளரின் தாரதரம் தெரிந்து ஊட்டி உதவமாட்டார். உங்களுக்காட் செய்ய மாட்டோம் - ஒரு வீட்டில் ஆளாக நன்கு பணி செய்வதென்றால், அது, மனைவியர் பிள்ளைகள் என்றவர்களின் நலம் பற்றி நடைபெறல் வேண்டும் ; இங்கு உமது வீட்டில் இருமனைவியருள் ஒருவர் வாய் திறவார் ; மற்றொருவர் கோற்றட்டி ஆளார் ; பிள்ளைகளுள் ஒருவர் மூத்தவர் பெருத்த பேருண்டியாளர் ; ஏனையவர் சிறுபிள்ளை ; இத்தகைய குடும்பமாகிய உங்களுக்கு ஆளாகப் பணிசெய்ய மாட்டோம் என்பது. இவ்வாறே மேல் " மதியுடையவர் செய்கை செய்யீர் " " ஆபத் காலத் தடிகே ளும்மை ஒற்றி வைத்திங் குண்ண லாமோ ?" (3) " இல்லை யென்னீர் - உண்டுமென்னீர் " (4) " ஓடிப் போகீர் பற்றுந்தாரீர் " (5) ; " உலகுய்ய வைத்த - காமக்கோட்ட முண்டாக நீர் போய் ஊரிடும் பிச்சை கொள்வ தென்னே ?" (6) ; " மெய்ம்மை சொல்லி ஆள மாட்டீர் ; ஏதும் வேண்டீர் ஏதுந் தாரீர் ; ஏது மோதீர் ; உம்மை யன்றே " (7) ; "வாழ் வதாரூர்; ஒற்றி யூரே லும்ம தன்று...ஊருங்காடு; உடையும் தோலே" (9) ; " கோவணமேற் கொண்ட வேடங் கோவையாக " (10) என்பவற்றின் பொருள்களும் கண்டுகொள்க ;—(3) பெற்றபோதும் பெறாத போழ்தும் - இன்பத்திலும் துன்பத்திலும் ; பேணி - ஒன்று போலவே விரும்பி ; மற்றோர் பற்றிலர் -

உம்மையன்றி வேறொருவரையும் பற்றாகக் கொள்ளார் ; மதியுடையவர் செய்கை செய்யீர் - இப்போது வேண்டியது தாராது நீர் வாளா இருப்பது மதியுடையவர் செய்கையன்று என்பது ; சொல்லாமற் சொல்லியபடி ; அற்ற - செல்வமற்ற ; அலந்த - துன்பப்பட்ட ; ஆபத்(துக்)காலத்து...உண்ணலாமோ - நீர் தாராவிடில் உம்மை ஒற்றிவைத்துப் பொருள் பெற்றுச் சீவிக்கலாமோ ? ஒற்றி - கடன் பெற வைக்கும் ஈடு - பணயம் ;—(5) பாணி - தாள ஒத்து ;—(6) உலகுய்யவைத்த காமக் கோட்ட முண்டாக - காமக் கோட்டத்தினுள் அம்மையார் 32 அறங்களையும் செய்து உலகு புரக்கும் நிலை குறித்தது ; காமக்கோட்டம் போற்றிய நிலை - 3344 பார்க்க ; மார்பு நீங்கா - மேனியில் ஒரு கூறுகொண்ட ; உண்டாக - உம்முடையதாயிருக்க வும்; சிறப்பு உம்மை தொக்கது ;—(7) பொய்ம்மையாலே போது போக்கி - அழியுந் தன்மையுடைய மாயை காரியங்களைத் தந்து காலம் பார்த்திருந்து ; புறத்துமில்லை அகத்துமில்லை - அகம்புற மென்றதே நிற்கு நிலை - மெய்ம்மை சொல்லி - மெய்ப் பொருளை உபதேசித்து; ஏதும் வேண்டீர் - எம்மிடத்தில் எதனையும் விரும்புவதில்லை; உம்மையன்றே - பாராமுகமாய் வாளா இருப்பாரை முகத்தில் இடித்துக் காட்டிக் கூறும் மொழி ; " உம்மைத்தானே :" என்பது ;—(8) வலையம் - உயிர்கொள்ளும் பாசம் ; ஈவான் - மரணத்தைக் கொடுக்கும் பொருட்டு ; ஈதல் - செய்தல் என்னும் பொருளில் வந்தது ; ஈர்வான் - என்பது ஈவான் என நின்றதெனினுமாம். சிலை யமைத்த - சிலை - கல் ; சிலை அமைத்த - கல்போன்று இளகுதலில்லாத ; சிலை - சிலையின்றன்மை குறித்தது. ஆகுபெயர் ; கலையமைத்த - கலைகளில் விலக்குக என்று கூறப்பட்ட ; வநடை - மாச்சரியம்; பொறாமை ; உலை யமைத்து - கொதிக் கும்படி வைத்துக்கொண்டு ;—(9) வாரம் - அன்பு ; ஒற்றியூர் - ஒற்றி - பணயம் வைத்த ஊர் ; ஆநூர் - யாருடைய ஊர் ; இவை சிலேடை. ஊரும் காடு - ஊர் ஊராதலின்றிக் காடாயிற்று ; ஊர் - உறையும் இடம் ;—(10) ஏவணம் - போழுகு: ஆவணஞ்செய் தாளுங் கொண்டு - ஆவணம் - ஓலை ; அடிமையோலை; தடுத்தாட் கொண்ட சரிதக் குறிப்பாகிய அகச்சான்று ; கோவண மேற்கொண்ட - வேடம் - பலிக்குச் செல்லும் பிச்சை வேடம் ; கோவையாக - அதனையே பொருளாகக் கொண்டு.

தலவிசேடம் :—திருஓணகாந்தன்றளி - தொண்டை நாட்டு 3-வது பதி ; ஓணன் காந்தன் என்னும் அசுரர்கள் பூசித்தமையால் இப்பெயர் பெற்றது ; இரண்டு சந்நிதிகள் தனித்தனியாய்த் தனிப்பிராகாரத்துடன் ஒரே ஆலயத்துள் உள்ளன." அரு ளிச்செய்யீர்; தளியுளீரே!" என்ற பன்மைகள் இக்குறிப்புடையன போலும் ; (கச்சி வனைய பதிகங்கள் பார்க்க) ; ஆளுடைய நம்பிகள் இங்குப் பதிகம் பாடிப் பொன் பெற்ற வரலாறு புராணத்துட் காண்க ; சுவாமி - ஓணேசுவரர் - காந்தேசுவரர் ; அம்மை-காமாட்சி யம்மை; பதிகம் 1; இத்தலத்துள் சலந்தரன் பூசித்த மூர்த்தி தென் புரம் தனியாலயத்தில் உள்ளார். நம்பிகள் பதிகம் பாடியபின் சந்நிதியின் முன்புற முள்ள மாமரத்தினின்றும் பொன் உதிர்ந்ததாக ஐதிகம் கூறுவர்.

இத்தலம் திருக்கச்சி யேகம்பத்துக்கு மேற்கில் சர்வ தீர்த்தத்திலிருந்து சிறிது வடமேற்காக ½ நாழிகை யளவில் உள்ளது.

3346. அங்க ணமர்வா ரனேகதங்கா பதத்தை யெய்தி யுள்ளணைந்து [தமிழ்
செங்கண்விடையார் தமைப்பணிந்து "தேனெய்புரிந்"தென்றெடுத்த
"தங்கு மிடமா" மெனப்பாடித் தாழ்ந்து பிறவுந் தானங்கள் [ககூஉ
பொங்கு காத லுடன்போற்றிப் புரிந்தப் பதியிற் பொருந்துநாள் ;

3347. பாட லிசையும் பணியினாற் பாவை தழுவக் குழைகம்பர்
ஆடன் மருவுஞ் சேவடிகள் பரவிப் பிரியா தமர்கின்றார்
நீட மூதூர்ப் புறத்திறைவர் நிலவும் பதிக டொழவிருப்பால்
மாட நெருங்கு வன்பார்த்தான் பனங்காட் டூரில் வந்தடைந்தார்.

3346. (இ - ள்) அங்கண் அமர்வார் - அப்பதியில் விரும்பி எழுந்தருளி யிருப்பவராகிய நம்பிகள் ; அனேகதங்காபதத்தை...தாழ்ந்து - திருக்கச்சி அனேக தங் காபதத்தினைச் சேர்ந்து திருக்கோயிலினுள்ளே அணைந்து சிவந்த கண்ணையுடைய இடபத்தை உடையாராகிய இறைவரை வணங்கித் " தேனெய் புரிந்து " என்று தொடங்கிய திருப்பதிகத்தினை " இறைவர் தங்குமிடமா மிது " என்ற கருத்துப் போதப் பாடியருளி வணங்கி; பிறவும் போற்றி - இறைவரது தானங்கள் பிறவற்றை யும் மேன்மேல் அதிகரிக்கும் பெருவிருப்புடன் சென்று துதித்து ; புரிந்து...பொருந் தும் நாள் - இடைவிடாத நினைவுடனே அந்தக் கச்சித் திருப்பதியிலே பொருந்த வீற்றிருக்கும் நாள்களில், கசுஉ

3347. (இ - ள்) பாட இசையும் பணியினால் - பாடுதற்கு இசைகின்ற பணி செய்யப் பெற்றதனால் ; பாவை தழுவ...அமர்கின்றார் - அம்மையார் தழுவக் குழைந்து காட்டிய திருவேகம்பரது அருட்கூத்தாடுந் திருவடிகளைத் துதித்துப் பிரி யாது விரும்பி எழுந்தருளி யிருக்கின்ற நம்பிகள் ; நீட....விருப்பால் - மிகப் பழமை யாகிய அந்தக் கச்சிமூதூரின் புறத்திலே நிலவுகின்ற பதிகளைத் தொழும் விருப்பத்தி னாலே சென்று ; மாடம்...வந்தடைந்தார் - மாடங்கள் நெருங்கி விளங்கும் வன்பார்த் தான் பனங்காட்டூரிலே வந்தடைந்தருளினர். கசுரு

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3346. (வி - ரை) அங்கண் - கச்சிமா நகரத்திலே ; அனேகதங்காபதம் - இது திருக்கச்சி அனேகதங் காபதம் என்ற தலம் ; வடநாட்டில் உள்ள இப்பெயர் கொண்ட பதியுடன் மயங்கற்பாலதன்று ; " கச்சி யனேதங்காபதமே " என்ற பதிக மகுடம் பார்க்க.

" தேனெய் புரிந்து " என்றெடுத்த தமிழ் - இப்பதிகத் தொடக்கமாகிய முதற் குறிப்பு ; எடுத்த - தொடங்கிய.

" தங்குமிடமாம் " எனப் பாடி - இப்பதிகக்கருத்தும் குறிப்புமாம் ; எம்பெரு மானதிடம் - எரியாடியிடம் என்பன வாதியாகப் பதிகப் பாட்டுக்களில் வருவன காண்க ; இறைவரது "இடம் திருக்கச்சி யனேகதங்காபதமே" என்பது.

பிறவும்...போற்றி - இவை கச்சி யெல்லையில் உள்ள அளவில்லாத தானங்கள்- பதிகள் ; தானங்கள் - கச்சிப் பதியில் உள்ள தனிப் பதிகளின் பெயர் வழக்குப் பார்க்க. காஞ்சித்தானம், இறவாத்தானம், முதலியவை காண்க ; இறைவர் தாமகிழ்ந் தருளிய பதிக ளெண்ணி றந்தவத் திருநக ரெல்லை " (1153) என்றது பார்க்க.

அப்பதி - திருக்கச்சிப்பதி : பொருந்தும் - விரும்பி அமர்ந்த.

பொருந்துநாள் - அமர்கின்றார் - வந்தடைந்தார் என மேல்வரும் பாட்டுடன் முடிக்க. 192

3347. (வி - ரை) பாடவிசையும் பணியினால் - பிரியா தமர்கின்றார் - என்று கூட்டுக. அங்குப் பிரியாதமர்கின்ற நிலை பாட்டுப்பாடப் பொருந்தும் தன்மை காரண மாம். பாடும் பண்பு பெறப்பட்டமையாலே அங்குநின்றும் பிரியாது தங்கி யருளினர்

என்க ; ஏகம்பரைப் பாடுதலில் அத்துணை விருப்பமும் ஆர்வமும் கொண்டிருந்தனர் என்பதாம். "பாட இசையும்" - பாடப் பணித்து ஆட்கொண்ட திறம் காண்க (216). அமர்கின்றார் - அமர்கின்றாராகிய நம்பிகள் ; வினைப்பெயர் ; அமர்தல் - விரும்பி வீற்றிருத்தல்.

பாவை தழுவக் குழைகம்பர் ஆடல் மருவும் சேவடிகள் - கம்பர் - திருவேகம்பர்; ஏகம்பரின் கருணையின் எளிமை குறித்தது ; ஆடல் - உலகை ஆளும் ஐந்தொழில் அருட்கூத்து ; 1140—1141 பார்க்க.

பரவி - அரிய இப்பதிகங்கள் கிடைத்தில !

நீட மூதூர் - மிக நீண்டு செல்லும் பழைமையுடைய கச்சிமாநகர். "தொல்லைக் கச்சிநகர்" (3343) ; தனது சூக்கும ரூபம் பிரளயங்களினும் அழியாதிருக்கும் நிலை ; "பல ஊழிக ணின்று நினைக்குமிடம் வினை தீருமிடம்" (10) என்ற பதிகம் பார்க்க ; (நம்பி - அனேகதங் காவதம்)

புறத்திறைவர் நிலவும் பதிகள் - இவை காஞ்சி நகருக்கு அப்பாற்பட்ட பல பதிகள் ; முன் "பிறவும் தானங்கள்" (3346) என்றவை அவ்வெல்லைக்குட் பட்டவை ; "இருந்து காதநான் குட்பட வகுத்து" (1162) என்று இதன் எல்லை வகுத்தது காண்க.

பாடலிசையும்—புனற்புறத்திறைவர்—என்பனவும்பாடங்கள். 193

## திருக்கச்சி அனேகதங் காவதம்

திருச்சிற்றம்பலம் பண் - இந்தளம்

தேனெய் புரிந்துழல் செஞ்சடை யெம்பெரு மான திடந்திக ழைங்கணையக்
கோனை யெரித்தெரி யாடி யிடங்குல வான திடங்குறை யாமறையா
மானை யிடத்ததோர் கைய னிடம்மத மாறு படப்பொழி யும்மலைபோல்
யானை யுரித்த பிரான திடங்கலிக் கச்சி யனேகதங் காவதமே. (1)

வீடு பெறப்பல ஊழிக ணின்று நினைக்கு மிடம்வினை தீருமிடம்
பீடு பெறப்பெரி யோர திடங்கலிக் கச்சி யனேகதங் காபனிடம்
பாடு மிடத்தடி யான்புக லூர னுரைத்தவிம் மாலைகள் பத்தும்வல்லார்
கூடு மிடஞ்சிவ லோக னிடங்கலிக் கச்சி யனேகதங் காவதமே. (10)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—அனேகதங் காவதம் இறைவர் தங்குமிடமாம். ஆசிரியர் (3346) காட்டி யருளியவாறு. தங்குமிடம் என்று பாட்டுத்தோறும் பலபடப் பாராட்டிய தன்மை கண்டுகொள்க ; குறிப்பு : இப்பதிகம் மிக எளிய இனிய தாள வொத்துடன் சிறுவர் சிறுமியர் பாடி யாடி மகிழத்தக்க சிறந்த அமைப்புடன் விளங்குகின்றது.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) புரிந்து உழல்-எம்பெருமான் - என்று கூட்டுக; தேன் - நெய் - திருமஞ்சனப் பண்டங்கள் ; இனம் பற்றி ஏனைய எல்லாங் கொள்க. புரிந்து - இடைவிடாது எண்ணி ; உழல் - என்ற இலேசால் மிகவிருப்பமுடைய செயல் குறிக்கப்பட்டது ; ஐங்கணை அக்கோன் - மன்மதன் ; குலவான் - மேன்மை யுடையவர் ; மறையாம் மானை - மறைஒலி செய்யும் மான் ; மறைகள் துதிக்கும் என்றலுமாம் ; மானை...கையன் - மானேந்திய கையினை உடையவர் ; ஆறுபட - ஆறுபோற் பெருக ; மலைபோல் - மலையினைப் போற்பெரிய ; கலி - ஆரவாரம்

மிக்க ;—(2) ஒரி - நரி ; குடகத் தி(ல்)லை - மேலைச் சிதம்பரம் என்னும் பேரூர் ; இத்தலம் கொங்கு நாட்டில் கோவன்புத்தூருக் கருகில் உள்ளது ; 3242—3245 பாட்டுக்களும், ஆண்டுரைத்தவையும் பார்க்க ;—(3) கோடிகள் - மல்லிகை முல்லை முதலிய பூங்கொடிகள் செறிந்த சோலையகம் ; கோடி - காக்கை என்று கொண்டு, " குயிற்குஞ்சு முட்டையைக் காக்கைதன் கூட்டிட்டால், அயிர்ப்பின்றிக் காக்கை வளர்க்கின் றதுபோல் " (திருமந்திரம் - 2 - 152) என்றபடி, காக்கையின் கூட்டில் இனம் பிரித்தறிய வாராத பருவத்தே அக்காக்கைகளிடையே குயில் (குஞ்சு) கூவும் என்றுரைத்தலுமாம் ; சேடி கோள் - தீமைமிக்க ; தீய ; வினைப்பகை தீரும் என்றது பாச நீக்கமும், திருவாரும் என்றது சிவப்பேறும் குறித்தன ; திருமார்பு அகலத்து - உமை அம்மை கூறுகொண்ட மார்புடைய ; வரும் பாட்டுப் பார்க்க ; அம்மையின் முலைச் சுவடணிந்த மார்புடைய என்றலும் ஆம் ;—(4) கோங்கு-மணம்; சங்கு......கொண்டு - சங்கக் குழையணிந்த செவிபோன்ற சங்கங்களைக் கொண்டு ; கொண்ட அருவி என்றது கொண்டருவி என நின்றது. அருவித் திரள் பாய வியர்த்து அழல் போலுடைத்து - அம் மழு - அழல்போல எரித்தலால் அருவிபோல வியர்வை பாய ;—(5) பயில...வைத்தவிடம் - பயிலப் புகுதல் - சிவன் பணி - சிவயோகம் - நெறி பயிலத் தொடங்குதல் : ஒருநெறி சித்தம் வைத்த - என்க ; மனம் ஒன்றிய - வேறொன்றிலும் செல்லாத - நெறி ; திருவர்ன் - முத்தித் திருவின் தலைவர் - சிவபெருமான்; மனங்கோள வைத்தவிடம் - மனம் பதிந்து நிற்கும் பண்பு கொளச் செய்த ;— (6) தண்டமுடை...துயர் தீர்க்கும் - இறப்பின் (மரணம்) துன்பம் போக்கும் ; தண்டம் - தண்டு ஆயுதம் ; தண்டனை என்றலுமாம் ; " இவர் செய்திக் குத் தக்க செயலுறுத்துவீர் என்று, வெய்துற்றுரைக்க...மறம் போற்றி (போற்றிப் பஃறொடை - 40—53) ; தமர்-இயமன் தூதர் ; "கால பாசம் பிடித்தெழு தூதுவர்" (தேவா) ; அமரைச் சேயும் வன்றுயர் - அமரிற் செய்வதுபோன்ற வலிய துன்பம். பிண்டமுடை...ஆக்கையை நீக்குமிடம் - ஆக்கை - உடல் ; நீக்கும் - மேல் வாரா மற் செய்யும் - பிறவியில் வாராமே தடுக்கும் - இடம் என்றபடி ; அண்டமுடை - எல்லா அண்டங்களையும் உடைமையாக ;—(7) கட்டு மயக்கம் - மலத்தினால் வரும் அறியாமை ; " பொருளல் லவற்றைப் பொருளென் றுணரும், மருள் " (குறள்) வீட்டும் என்பது எதுகை நோக்கி விட்டும் என நின்றது ; வீட்டும் - இருளைப் போக்கும் ; துயிற்பேடை...மணம்புணரும் - நிலவளம் குறித்தது; வரும் பாட்டும் பார்க்க ; —(8) புல்லி - பெயர்; எல்லா வுயிர்களுள்ளும் "தாவியவ னுடனிருந்தும்" (தேவா) என்றபடி தழுவியவன் ; புல்லியிருப்பவர் ; புல்லியிடமாதலின் நாம் தொழுது உய்வோ மென்னுது பகைத்தவர் என்க ; வில்லி - வில்லை ஏந்தியவர் ; கொல்லி - கொன்றவர்; (9) சங்கையவர்-சிவனே பதி என்ற உறுதியறி வில்லாதவர்; சங்கை- ஐயப்பாடு ;—(10) பலவூழிகள் நின்று - பலவூழிகளிலும் அழியாது நிலைபெற்று.

தலவிசேடம் :—திருக்கச்சி அனேகதங் காவதம்—தொண்டை நாட்டு 4வது பதி ; திருக்கச்சியிலுள்ள (அனேகதம்-யானை) விநாயகர் பூசித்த தலம் என்பது பொருள் : இங்குக் குபேரன் முதலியோரும் வழிபட்டுப் பேறு பெற்றனர்; " ஆனை யுரித்த பிரான திடம் " (பதிகம்) என்றதற்கேற்ப "ஆனையுரித்தான் வயல்" என்று பெயர் வழங்கும் வயல்கள் கோயிலுக்கு மேற்கே உள்ளன ; சுவாமி - அனேகதங் காபதேசுரர் ; அம்மை - காமாட்சியம்மையார் ; பதிகம் 1.

இது திருக்கச்சி யேகம்பத்திற்குத் தென்மேற்காய்ப் புத்தேரித் தெருவுக்கு மேற்கில் வயல் வெளியில் உள்ளது ; வடநாட்டு இப்பெயருள்ள திரு அனேகதங்கா

வதத்துடன் மயங்கா திருத்தற் பொருட்டு இது கச்சி யனேகதங்காவதம் என்று கச்சியுடன் சேர்த்துப் பெயர் வழங்கப்படும்.

3348. செல்வ மல்கு திருப்பனங்காட் டூரிற் செம்பொற் செழுஞ்சுடரை
அல்ல லறுக்கு மருமருந்தை வணங்கி யன்பு பொழிகண்ணீர்
மல்க நின்று "விடையின்மேல் வருவா" ரெனும்வண் டமிழ்ப்பதிகம்
நல்ல விசையி னுடன்பாடிப் போந்து புறம்பு நண்ணுவார், கசகச

3349. மன்னு திருமாற் பேறணைந்து வணங்கிப் பாவித் திருவல்லந்
தன்னு ளெய்தி யிறைஞ்சிப்போய்ச் சாரு மேல்பாற் சடைக்கற்றைப்
பின்னன் முடியா ரிடம்பலவும் பேணி வணங்கிப் பெருந்தொண்டர்
சென்னி முகிறோய் தடங்குவட்டுத் திருக்கா ளத்தி மலைசேர்ந்தார்.

3348. (இ - ள்) செல்வ மல்கு...வணங்கி - செல்வம் நிறைந்த திருப்பனங் காட்டூரிலே எழுந்தருளிய செம்பொன் போன்ற ஒளியுடைய செழுஞ்சுடரைப், பிறவித் துன்பத்தினை அறுக்கும் அரிய மருந்துபோல்பவரைப் பணிந்து; அன்பு... நின்று - அன்பு மேலீட்டினாலே பொழியும் கண்ணீர் பெருக நின்று; விடையின் மேல்...பாடி - "விடையின்மேல் வருவானை" என்று தொடங்கும் வண்மையுடைய பதிகத்தினை நல்ல இசை பொருந்தப் பாடி; போந்து புறம்பு நண்ணுவார் - புறம்பு போந்து சேர்வாராகி, கசகச

3349. (இ -ள்) மன்னு...போய் - நிலைபெற்ற திருமாற் பேறு என்னும் பதியினை அணைந்து வணங்கிச் சென்று, திருவல்லத்தினைச் சேர்ந்து வணங்கிப் போய்; சாரும் மேல்பால்...வணங்கி - சார்கின்ற மேற்குப் பக்கத்தில் சடைக் கற்றை பின்னி விளங்கும் முடியினையுடைய இறைவர் எழுந்தருளிய இடங்கள் பல வற்றையும் விரும்பி வணங்கி; பெருந்தொண்டர்...சேர்ந்தார் - பெருந்தொண்ட ராகிய நம்பிகள் உச்சியில் மேகங்கள் தோய்கின்ற பெரிய முடிகளையுடைய திருக் காளத்தி மலையினைச் சேர்ந்தருளினர். கசகூ

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3348. (வி - ரை) செல்வம் - அருட் செல்வம்; திருப்பனங்காட்டூர் - திரு வன்பார்த்தான் பனங்காட்டூர்.

செம்பொற் செழுஞ்சுடர் - செம்பொன் போன்ற செழிய சுடர் போன்றவர்.

அல்லல் - துன்பங்களுள் எல்லாம் மிக்க கொடுமையுடைய பிறவித் துன்பம்; மருந்து - மருந்து போன்றாரை மருந்தென்ற துபசாரம்.

அன்பு பொழி - அன்பு காரணமாக வருகின்ற; "அன்பிற்கு முண்டோ வடைக்குந் தாழ்" (குறள்)

"விடையின்மேல் வருவான்" இது பதிகத் தொடக்கமாகிய முதற்குறிப்பு.

வண் தமிழ்ப் பதிகம் - வண்மையாவது சிறந்த உறுதிப் பொருள் பயத்தல். சாராதார் சார்வென்னே - உணராதார் உணர்வென்னே - அறியாதார் அறி வென்னே - என்பன முதலிய உறுதிப் பொருள்களை உணர்த்துதல் காண்க.

நல்ல இசை - பதிகப் பண்ணாகிய இனிய சீகாமரப் பண்.

செல்வச் செழுஞ்சுடர்—பிறவும் நண்ணுவார்—என்பனவும் பாடங்கள். 194

3349. (வி - ரை) மன்னு...இறைஞ்சிப் போய்-திருச்கச்சியினின்றும் தென் மேற்காகச் சென்று திரு வன்பார்த்தான் பனங்காட்டூரினை வழிபட்டு, அங்கு நின்றும் மீண்டு திருக்கச்சி வழியே வடக்கில் சென்று திருமாற்பேறு வணங்கி, அங்குநின்றும் மேற்பாற் சென்று திருவல்லத்தினை வணங்கினார் என்க.

மேல்பால்...இடம் பலவும் - இவை திருக்காரபுரம் முதலியவை.

பின்னல் - புரித்ததுபோலும் உருவுடைய.

சென்னி முகில் தோய் தடங்குவட்டு - மேகங்கள் தவழ்தற்கிடமாகிய பெரிய சிகரங்கள் ; மலையின் உயர்ச்சி குறித்தது

திருக்காளத்தி மலை சேர்ந்தார் - திருவல்லத்தி னின்றும் மேல்பாற் போய்ப் பல பதிகளை வணங்கினார் என்றதனால் நெடுந்தூரம் சென்று அங்குநின்றும் வடகிழக் காகப் போய் நேரே திருக்காளத்திமலை சேர்ந்தருளினர். ஆளுடைய பிள்ளையாரும் அரசுகளும் திருக்காரிகரை இறைஞ்சித் திருக்காளத்திமலை சேர்ந்த வழி வேறு. 195

## திருவன்பார்த்தான் பனங்காட்டூர்

திருச்சிற்றம்பலம் பண் - சீகாமரம்

விடையின்மேல் வருவானை வேதத்தின் பொருளானை
அடையிலன் புடையானை யாவர்க்கு மறியொண்ணா
மடையில்வா ளைகள்பாயும் வன்பார்த்தான் பனங்காட்டூர்ச்
சடையிற்கங்கை தரித்தானைச் சாராதார் சார்வென்னே. (1)

பாரூரும் பனங்காட்டூர்ப் பவளத்தின் படியானைச்
சீரூருந் திருவாரூர்ச் சிவன்பேர்சென் னியில்வைத்த
ஆரூரன் னடித்தொண்டன் னடியான்சொ லடிநாய்சொல்
ஊரூர னுரைசெய்வா ருயர்வானத் துயர்வாரே. (10)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—சிவபெருமானையே சார்தல் வேண்டும் ; உணர்தல் வேண் டும் ; அறிதல் வேண்டும் ; அவனடிமைக்கட் குழைதல் வேண்டும் ; அவ்வாறு சாரா தார் சார்வு, உணராதார் உணர்வு முதலியவை பயனற்றவை ; அவை பொருளல்ல.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) அடையில் அன்புடையான் - வந்து சரணடைந் தவர்பால் அன்பு கொண்டு உய்யச் செய்பவன். சார்ந்தாரைக் காப்பவன் சிவன் ; அவ்வாறு சாராதார் சார்வென்னே? வேறு எச்சார்பும் சார்பன்று. இவ்வாறே மேல்வரும் பாட்டுக்கள் எல்லாம் கொள்க ; "மடையில் வாளை பாய" (தேவா - கோலக்கா); நீர்வளம் குறித்தது ;—(3) எண்ணார் நாண்மலர் - எண் ஆர் - விதிப்படி கொய்து பொருந்திய ; எண் - எட்டு ; அட்டபுட்பம் என்ற குறிப்பும், எண் - நினைவு - அகம் என்று கொண்டு கொல்லாமை, வாய்மை முதலிய அகப்பூசை விதி யில் நினைக்கத்தக்க என்ற குறிப்பும் பட நின்ற நயம் காண்க ; படிறன் - நிந்தைத் துதி ;—(4) கோணுதார் - வஞ்சம் முதலிய தீமைகளில்லாதவர் ; பேற்று - எருது ; (5) உரம் - மனத்திண்மை ; உரமென்னும் பொருளானை - அன்பின் உறைப் பினையே பொருளாகக் கொள்பவர் ; உருகில் உள் வறைவான் - "உள்ள முருகி லுடனாவர்" (தேவா) ; சிரம் - தலை ஓடு ; சிரமாலை ; கலன் - அணிகலன் ; பலிப்பாத்திரமுமாம் ;—(6) எயிலார் - மும்மதிலுடைய புரவாணர் ; போக்கம் - பொய்மை - தீமை ; வெயிலால்...தீ - உயிர்கள் வாழ்ந்து கன்மானுபவங்களால் வினை

தீர்ந்துய்த்தற் பொருட்டுப் புவனங்களைத் தந்தவன் என்பது; வெயில் காற்று மின் தீ என்பன போகந் துய்த்தற் குதவுவன; ஆறும்-இவற்றுள்ளும் நிறைந்து நின்று உதவுபவர். ஆறும் - என்ற சொல் கொண்டு வெவ்வேறு பொருள் கொள்ளும் மதாந்தரங்கள் கூறுவன பொருளல்ல; ஈண்டு, நின்றதிருத்தாண்டகம், திருவுருத்திரம் இவற்றின் கருத்துக்கள் கருதி உணரத்தக்கன; பயில்வான் - விளங்கி வீற்றிருந்தருள்பவர்; அடிமைக்கட் பயிலாதார் - அடிமை செய்தலே பழக்கமாகக் கொள்ளாதார்;—(7) காலம் - ஆயுள்; அறியாதார் - அறிவில் எப்போதும் கொள்ளாதார்;—(8) வஞ்சமற்ற மனத்தாரை மறவாத - வஞ்சம் - பொய் - கடலை - முதலிய தீக்குணங்கள்; இவை இல்லாத மனத்துடன் அடிமை செய்வார்பால் எப்போதும் அருள் புரிபவன் சிவன்; மஞ்சுற்ற - மேகங்கள் தவழும்படி உயர்ந்த; எங்கள் நெஞ்சத்துப் பிரானை - என்க; எங்கள் நெஞ்சில் நிலையாக வீற்றிருப்பானை; "என் நெஞ்சு நீங்கா இறைவன்" "பாதமென் நெஞ்சு ளிருக்கவே" (தேவா) என்பன முதலியவை காண்க; எங்கள் - உரிமை குறித்த சிறப்புப் பன்மை; சீரடியார்களை உளப்படுத்திய பன்மையுமாம்;—(9) மழையான்-மேகம்போன்ற கரியமேனி யுடையவன்; விட்டுணு; உழையா-பக்கத்தில்; உள்க - அடிமுடிஎல்லை காணாது நினைக்க; வானத்து - வானத்தின்மேலும்; குழையாதார் - அகங்குழைதல் அன்பின் உறைப்பினால் வருவது; அடிமைத்திறத்தில் குழையாதவர் - அன்பில்லாதவர்கள் என்றபடி; "ஈசனுக் கன்பில்லார்" (சித்தி) என்ற திருபாட்டுக் காண்க; இறைவன் அடிமைத் திறத்தன்றி வேறு உலகு உயிர்கள் மேற் செய்யும் குழைவுகள் பயனற்றவை; அவை பிறவிக்கே யேதுவாவன என்பது ஞான நூன்முடிபு; ஆதலின் அவை என்னே என்றார்;—(10) படி - திருமேனி நிறம்; சீரூரும்...ஆநரன் - ஆரூரர் என்ற நம்பிகளின் பெயர்க் காரணம் - உயிர் வானத்து உயர்வாரே - உயர் வானம் - சிவன் உலகம்; உயர்ந்த விண்ணுலகம் என்று கொண்டு அந்த விண்ணுலகினும் மேலாக என்றலுமாம்.

தலவிசேடம் :—திருவன்பார்த்தான் பனங்காட்டூர்—என்னும் திருப்பனங்காடு - தொண்டை நாட்டின் 9-வது பதி; வன்பாக்கம் என்னும் கிராமத்தினை அடுத்து இருத்தலாலும், பனை தலமரமாமாதலாலும் இப்பெயர் பெற்றது; அகத்தியர் புலத்தியர் என்ற இரண்டு பேரிருடியரும் பூசித்த தலம்; அந்த இரண்டு சந்நிதிகளும் உள்ளன; (1) அகத்தியர் - பூசித்தது; சுவாமி - தாளபுரீசுரர் - பனங்காட்டு நாதர்; அம்மை - அமிர்தவல்லி; (2) இதன் வடகிழக்கில் புலத்தியர் பூசித்தது; சுவாமி - கிருபாநாதேசுரர்; அம்மை - கிருபாநாயகி; மரம் - பனை; தீர்த்தம் - ஜடாகங்கை; பதிகம் 1.

இது திருக்கச்சி ஏகம்பத்தினின்றும் தெற்கே நாலு நாழிகையில் ஐயன்குளத்தை யடைந்து, மேற்கே திரும்பி ஆற்காட்டுப் பாதையில், 4 நாழிகை சென்று அங்கு நின்றும் வடக்கில் ¾ நாழிகை சென்று அடையத் தக்கது; பாலாறு, வேகவதி யிரண்டையும் இடையில் கடக்கவேண்டும்.

திருமாற்பேறு—திருவல்லம் இந்த இரண்டு பதிகளின் நம்பிகள் பதிகங்கள் கிடைத்தில!

3350. தடுக்க லாகாப் பெருங்காதற் றலைநின் றருளுங் கண்ணப்பர்
இடுக்கண் களைந்தாட் கொண்டருளு மிறைவர் மகிழ்ந்த காளத்தி
அடுக்கல் சேர வணைந்துபணிந் தருளா லேறி யன்பாறு [௧௧௬
மடுப்பத் திருமுன் சென்றெய்தி மலைமேன் மருந்தை வணங்கினார்.

(இ - ள்) தடுக்கலாகா...கண்ணப்பர் - தடுக்கமுடியாத பெரிய காதலிற் றலை சிறந்து நிற்கும் கண்ணப்ப நாயனாரது ; இடுக்கண்...அணைந்து - துன்பத்தை நீக்கி ஆட்கொண்டருளும் சிவபெருமான் மகிழ்ந்து எழுந்தருளிய திருக்காளத்தி மலையினைச் சார அணைந்து ; பணிந்து ஏறி - அம்மலையினை நிலமுற வணங்கித் திருவருள் பெற்று மேல் ஏறி ; அன்பு ஆறு...வணங்கினார் - அன்பு ஆறாகப் பெருகி மூழ்கு விக்க இறைவர் திருமுன்பு சென்று சேர்ந்து மலைமேல் மருந்து போன்ற இறைவரை வணங்கினார்.

(வி - ரை) தடுக்கலாகாப் பெருங்காதற் றலைநின்றருளும் - அணையை முறித் தோடும் பெருவெள்ளம் போல முழுதும் இறைவர்பாற் பெருங்காதல் மயமேயாகி, அதனை அளவுபடுத்தித் தடைசெய்து நிற்கும் உடலும் உட்கரண புறக்கரணங்களும் உலகச் சார்புகளும் முதலாகிய யாவும் வலியற் றொழிந்து நிற்கும் நிலையில் முதல்வ ராகிய ; " சிறை பெறா நீர்போல் " (திருவா) ; " அளவிறந்த காதலினா, லுண் ணிறையுங் குணநான்கு மொருபுடை சாய்ந்தன " (291) " மனக்காத லளவின்றி வளர்ந்து பொங்க, நின்றநிறை நாண்முதலாங் குணங்களுட னீங்கவுயி ரொன்றுந் தாங்கி " (319) முதலிய மன நிலைகள் காண்க.

தலை நின்றருளும் - ஒப்பாரும் மிக்காரு மின்றிச் சிறந்து மேனின்று ; "கண் ணப்ப னொப்பதோ ரன்பின்மை " (திருவா).

இடுக்கண் களைந்து - இறைவரது திருக்கண்களில் உதிரம் வடியக்கண்ட புண்ணினைப் பற்றிய துன்பம் ; 814 ; 818 - 822 ; 825 பார்க்க. " அளவிலாப் பரிவில் வந்த இடுக்கண் " (597) ; இடுக்கண் - " நிலைதளர்ந்தெ, னத்தனுக் கடுத் ததெ னத்தனுக் கடுத்ததென்னென் றன்பொடுங் கனற்றி, வித்தனை தரிக்கிலன் " (நக்கீரதேவர்-திருக்கண்ணப்ப தேவர் திருமறம்) ; இடுக்கண் களைந்து - " ஒல்லை நம்புண் ணொழிந்தது பாராய் " (கல்லாட தேவர்-திருக்கண்ணப்ப தேவர் திருமறம்) ஆட்கொண்டருளுதல் - "நல்லை நல்லை" எனப் பெறுதல் (ஷை திருமறம்) ; " நில்லு கண்ணப்ப நில்லு கண்ணப்பவென், னன்புடைத் தோன்ற னில்லு கண்ணப்பவென், றின்னுரையதனொடும் " (நக் - திருமறம்) ; " என் வலத்தில் மாறிலாய் நிற்க " என் றருளியதும் ஆம்.

அடுக்கல் - மலை ; சேர அணைந்து - அருகிற் சார்ந்து ; பணிந்து - மலையினை அடிபணிந்து ; ஆளுடைய பிள்ளையார் திருமலையினைக் கண்டு கேட் டறிந்த இடத்தி லேயே " அவனிமேற் பணிந்தெழுந் தஞ்சலி மேற்கொண்டு " திருப்பதிகம் பாடி யருளியதும், (2919), " மலையடிவா ரஞ் சாரவந்து தாழ்ந்தார் " (2920) என்றதும், ஆளுடைய அரசுகள் "காளத்தி மொய்வரையின் றாழ்வரையிற், சென்னியுறப் பணிந் தெழுந்து " (1609) என்றதும் காண்க.

அன்பு ஆறு மடுப்ப - " அன்பெனு மாறு கரையது புரள " (திருவா. போற்றித் திருவகவல் - 81) அன்பு ஆறு - உருவகம் ; கரை கடந்தோடுதலால் ஆறு எனப்பட்டது ; மடுத்தல் - அமிழ்த்துதல் ; "ஞான வாரி மடுத்த" (சி. சி. 8-16) ; செலுத்துதல் என்று கொண்டு ஆறு பெருகி ஈர்த்துச் செல்ல என்றலுமாம்.

மலைமேல் மருந்து - " மலையின்மேல் மருந்தானார் " (3330) என்றதும், ஆண் டுரைத்தவையும் பார்க்க ; " அங்கண் மாமலை மேல் மருந்தை " (1613) 196

3351. வணங்கி யுள்ளங் களிகூர மகிழ்ந்து போற்றி மதுரவிசை
யணங்கு "செண்டா" டேனும்பதிகம் பாடி யன்பாற் கண்ணப்பர்

மணங்கொள் மலர்ச்சே வடிபணிந்து வாழ்ந்து போந்து மன்னுபதி
இணங்கு தொண்ட ருடன்கெழுமி யின்புற் றிருக்கு மந்நாளில், ௧௧௯௭

3352. வடமா திரத்துப் பருப்பதமுந் திருக்கே தார மலையுமுதல்
இடமா வானார் தாமுவந்த வெல்லா மிங்கே யிருந்திறைஞ்சி
நடமா டியசே வடியாரை நண்ணி னார்போ லுண்ணிறைந்து
திடமாங் கருத்திற் றிருப்பதிகம் பாடிக் காதல் சிறந்திருந்தார். ௧௧௯௮

3351. (இ - ள்) வணங்கி...போற்றி - வணங்கி மனத்தின் கண்ணே களிப்பு மீக்கூர மகிழ்ச்சியுடன் பொருந்தத் துதித்து : மதுர இசை...பாடி - இனிய இசை மிகுந்த "செண்டாடும்" என்று தொடங்கும் திருபதிகத்தினைப் பாடி ; அன்பால்... போந்து - அன்பினாலே திருக்கண்ணப்ப தேவருடைய மணமுடைய தாமரை மலர் போன்ற செம்மை பெற்ற திருவடிகளைப் பணிந்து வாழ்வடைந்து புறம்பு போந்து; மன்னுபதி...நாளில் - நிலைபெற்ற அத்திருப்பதியிலே இணங்கு தொண்டர் களுடன் அன்பு பொருந்தக் கூடி இன்பமுற்று எழுந்தருளியிருக்கும் அந்நாள் களில், ௧௧௯௭

3352. (இ - ள்) வடமாதிரத்து...இறைஞ்சி - வடதிசையிலே உள்ள சீபர்ப்பதமும் திருக்கேதாரமலையும் முதலாகச் சிவபெருமான் விரும்பி எழுந்தருளும் இடமாகக் கொண்ட எல்லாவற்றையும் இங்கிருந்தபடியே வணங்கி; நடமாடிய... பாடி - ஆனந்தக் கூத்தாடும் சேவடியினையுடைய இறைவரை நேரே கண்டு பொருந்தியவர்போல உள்ள நிறைந்து உறுதிப்பாடுற்ற கருத்துடனே திருப்பதிகம் பாடியருளி ; களிசிறந்தார் - மிக மகிழ்ந்தருளினார். ௧௧௯௮

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3351. (வி - ரை) அணைந்த - கூடிய ; கலந்த ; விரும்பும் என்றலுமாம்.

மதுரவிசை - பதிகப் பண்ணுகிய இசை ; பண் நட்டராகம்.

அன்பால்...வாழ்ந்து - திருக்கண்ணப்ப தேவரை வணங்கி அதனால் தாம் பெரு வாழ்வடைந்து ; முன்னர் ஆளுடைய அரசுகளும் பிள்ளையாரும் இவ்வாறு வணங்கி யமை காண்க. நம்பிகளும் முன்னர்த் திருத்தொண்டத் தொகையுள் வைத்துப் போற்றி யருளினர் ; இங்கு நேரே வணங்கினர்.

இணங்கு தொண்டர் - இணங்குதல் - அன்பு பெருகச் சார்தல் ; பொருந்துதல் ; "அன்பரொடு மரீஇ" (12-சூத். போதம்) ; இணங்கத்தக்க என்றதும் குறிப்பு.

கெழுமுதல் - அன்பால் இன்பம் பெருகக் கூடுதல். உடன் இன்புற்று என்பதும் காண்க.

அந்நாளில் இருந்திறைஞ்சிப் - பாடிக் களிசிறந்தார் - என்று மேல்வரும் பாட் டுடன் கூட்டி முடிக்க.

பாடி அன்பர்—உடன் விரும்பி—என்பனவும் பாடங்கள். 197

3352. (வி - ரை) வடமாதிரம் - வடதிசை ; வடநாடு குறித்தது.

பருப்பதம் - சீபர்ப்பத மலை ; ஸ்ரீ சைலம் எனவும்படும் ; திருக்கேதார மலை - இமயமலைச் சாரலில் உள்ளது.

முதல் - முதலாக ; முதலியனவாக ; திருக்கயிலாயம், திருஅனேகதங்காவதம், திருஇந்திரநீலப்பருப்பதம் முதலியவை.

**இங்கே இருந்திறைஞ்சி** - இங்குத் திருக்காளத்தியிலிருந்தவாறே வணங்கி; ஆளுடைய பிள்ளையாரும் இவ்வாறே வடநாட்டுத் தலங்களையும், திருக்கோகரணத்தையும் இங்கிருந்தே வணங்கிப் பாடி யருளியமை காண்க. 2925 - 2926 பார்க்க. ஆளுடைய அரசுகளும் இங்கு வணங்கிய குறிப்பினாலே திருக்கயிலையினை நேரே கண்டு வணங்கக் காதலித்து வடநாட்டிற் சென்றருளியதும் நினைவு கூர்க. (1612)

**நண்ணினார்போல்...கருத்தில்** - இத்துணை நெடுந்தூரத்தின் இடை பிரிந்திருப்பினும் மனக்கண்முன் தியானத்தில் நேரே கண்டவாறு உறுதிப்பட்ட எண்ணத்திற் கொண்டு; "பொருந்திய தேச கால இயல்பகல் பொருள்க ளெல்லாம், இருந்துணர் கின்ற ஞானம் யோகநற் காண்ட லாமே" (சித்தி. அளவை - 13) என்றபடி ஞானயோகக் காட்சியில், மானதமாக வன்றி, நேரே புலப்படக் கண்டு என்க.

**காதல் சிறத்தல்** - மிக மகிழ்தல்.

மலைமுதலாம்—தாமகிழ்ந்த—என்பனவும் பாடங்கள். 198

## திருக்காளத்தி

திருச்சிற்றம்பலம் பண் - நட்டராகம்

*செண்டாடும் விடையாய் சிவ னேயென் செழுஞ்சுடரே*
*வண்டா ருங்குழலா ளுமை பாக மகிழ்ந்தவனே*
*கண்டார் காதலிக்குங் கண நாதனெங் காளத்தியாய்*
*அண்டா வுன்னையல்லா லறிந் தேத்த மாட்டேனே.* (1)

*காரா ரும் பொழில்சூழ் கண நாதனெங் காளத்தியுள்*
*ஆரா வின்னமுதை யணி நாவலா ரூரன்சொன்ன*
*சீரூர் செந்தமிழ்கள் செப்பு வார்வினை யாயினபோய்ப்*
*பேரா விண்ணுலகம் பெறு வார்பிழைப் பொன்றிலரே.* (10)

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு** :—காளத்திக் கணநாதரே! உம்மையல்லால் மற்றொருவரையும் அறிந்தேத்த மாட்டேன்!

**பதிகப் பாட்டுக் குறிப்பு** :—(1) **செண்டு ஆடும்** - கையில் செண்டினையுடைய; "காளையாந் திருவடிவாற், செங்கையினிற் பொற்செண்டும்" (கழறிற். புரா-112); செண்டினால் ஏவல் பெறும் (விடை) என்றலுமாம்; **வண்டாருங் குழலாள்** - இயற்கை மணமுடைய கூந்தலாதலின் சூடும் மலர்களானன்றி இயல்பாகவே வண்டுகள் நிறையும் என்க; "கொங்குதேர் வாழ்க்கை" என்ற இறைவரது பாட்டும், அதுபற்றிய திருவிளையாடற் சரித வரலாறும், அஃது இத்தல அம்மையின் கூந்தலின் இயற்கை மணத்தைப் பற்றி யெழுந்தமையும் ஈண்டு நினைவு கூர்தற்பாலன; **கண்டார் காதலிக்கும்** - "மேவினார் பிரிய மாட்டா விமலனார்" (818) என்று கண்ணப்ப நாயனார் கூறும் கருத்து; ஆண்டுரைத்தவை பார்க்க; மேவினார் பிரியாமைக்குக் காரணம் கண்டார் காதல் கொள்ளுதல்; **கண்டார்** - இவரது பரங்கருணைத் திறத்தினை உணர்ந்த பக்குவர்; இவரால் முன்பே காணப்பட்டவர் என்ற குறிப்புமாம். "இவர் காணு முன்னே அங்கணர் கருணை கூர்ந்த வருட்டிரு நோக்க மெய்த" (753) என்றும், அதன்பின் "ஏகநா யகரைக் கண்டார்" (754) என்றும் வந்த கருத்துக்கள் காண்க. இங்குக் கண்டார் என்பது கண்ணப்பர் என்ற குறிப்புடன் நிற்பதும் கண்டுகொள்க; "வந்தவர் குருதி கண்டார்" (874); "ஊனுக் கூனெனு முரைமுன் கண்டார்"(821);

"நின்றசெங் குருதி கண்டார்" (823) ; "குற்றிபாயக் கண்டனர்" (824); மருந்து கைகண்டேன்" (825) "காணும் நேர்பாடு" (826) என்பன முதலியவை காண்க. காணப்பட்ட "கணநாதன்" என்றது திருத்தாண்டகம். கணநாதன் - காளத்தி இறைவரது பெயர் கணநாதன் என்பது திருத்தாண்டகம். கணநாதனேங் காளத்தியாய் - "காளத்தி காணப்பட்ட கணநாதன்காண்" (தாண்); இப்பெயர் இன்றும் இத்தலத்தில் வழக்கில் உள்ளது ;—(2) இடர்த்துணை - இடர் நீக்கும் துணை ; "நோய் மருந்து" என்றாற்போல ; நான்கனுருபு தொக்கது ;—(3) படை - படையின் தன்மை ; பகலோன் - சூரியர்களுள் ஒருவன் ; "சூரிய னார்தொண்டை வாயினிற் பற்களை, வாரி நெரித்தவா றுந்தீபற" (திருவா) ; இது தக்கயாகத்தில் சிவனேவலால் வீரபத்திரர் செய்த வீரங்களுள் ஒன்று ;—(4) மறி - மான் ; நறி - குறிக்கோள் ; நரு - அறிவுச் சுடர் கொளுத்தி அஞ்ஞானத்தைப் போக்குபவன் ; அறிவே - ஞானமே திருமேனியாக உடையவர் ;—(5) நஞ்சேன் - நைந்தேன் என்பது எதுகை நோக்கி நின்றது ; துஞ்சேன் - இறவியில்லேன் ; நம்பிகள் திருக்கயிலைக்குச் சென்ற வரலாறு கருதுக ; ஒருகாற் றிருக்காளத்தியுட் டொழுதே (லாகலின்) துஞ்சேன் எனக் காரணக் குறிப்பும் தந்து நின்றது ;—(6) செய்யவன் - செம்மை செய்பவன் ;—(7) காதன்மையால்- காதல் கொண்டு - அறியேன் என்று கூட்டுக ; காதன்மையால் அறியேனாயினும் தூடியாக் கொண்ட என்று இறைவரது கருணைத்திறம் போற்றியவாறு ; முடியால்- முயங்கும் - முடிசாய்த்து அடி கூடுதல் ; முயங்குதல் - பொருந்துதல் ;—(10) பேரா விண்ணுலகம்-சிவனுலகம்; ஏனை விண்ணவருலகம் புக்கவர் பேர்தல் (பிறத்தல்) உடையவர்கள் என்பது குறித்தலின் பேரா என்பது பிறிதினியைபு நீக்கிய விசேடணம்.

குறிப்பு :—இப்பதிகத்து உன்னையல்லால் அறிந்தேத்த மாட்டேனே என்பன வாதியாக வரும் மகுடங்களில் எதிர்மறையாற் கூறியன உறுதி குறித்தன.

தலவிசேடம் :—திருக்காளத்தி—II-பக்-௬௦௬௦ பார்க்க. தொண்டைநாட்டுப் பதி.

### சீபர்ப்பதம்

திருச்சிற்றம்பலம் பண் - நட்டபாடை

மானும்மரை யினமும்மயி லினமுங்கலந் தெங்குந்
தாமேமிக மேய்ந்துதடஞ் சுனைநீர்களைப் பருகிப்
பூமாமர முரிஞ்சிப்பொழி லூடேசென்று புக்குத்
தேமாம்பொழி னீழற்றுயில் சீபர்ப்பத மலையே. (1)

நல்லாரவர் பலர்வாழ்தரு வயனாவல வூரன்
செல்லலுற வரியசிவன் சீபர்ப்பத மலையை
யல்லலவை தீரச்சொன்ன தமிழ்மாலைகள் வல்லார்
ஒல்லைச்செல வுயர்வானக மாண்டங்கிருப் பாரே. (10)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—இயற்கை வளங்கள் பலவற்றாலும் நிறைந்து மனித்தர் செல்லுதற்கரியதாய்ச் சிவன் உறைகின்ற பதி சீபர்ப்பத மலையே. இப்பதிகத்துள் இங்கு வாழும் மான், மயில், யானை, கிளி, ஏனம் முதலிய பிராணிகளின் செயல்கள் பற்றியே பதியின் வளம் போற்றப்பட்டிருத்தல், ஓர் ஆண்டின் பெரும் பாகமும் இங்கு மனித சஞ்சாரமின்றி இப்பிராணிகளே வாழ்தற்கிடமாவது இது என்ற குறிப்புத் தருவதாம். தலவிசேடம் பார்க்க.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) சுனை நீர்களை - இம்மலையில் இயற்கையா னமைந்த பல சுனைகள் உள்ள நிலைக்குறிப்பு; பூமா - தேமா - மாவின் வகைகள்;— (2) இனங்கள்-யானைகள் கூட்டம் கூட்டமாய்க் கூடி வாழ்ந்து திரியும் நிலைக்குறிப்பு; (3) புனம் - தினைப்புனம்; குறிஞ்சிக் கரு;—(4) புனம் - இதுவும் தினைப்புன நிகழ்ச்சி குறித்தது; அத்திணைக்குரிய மக்கள் தொழில் முதலாகியவையும் குறிப்பு; மேல்வரும் 7-வதுபாட்டும் பார்க்க;—(5) யானைக் குலம்- யானை ஏனம் முதலியவை குறிஞ்சிக் குரிய விலங்குகள்; சூளறுதல் - பிரமாணம் செய்தல் போன்ற நிகழ்ச்சி;—(7) அப் போது...தொழில் " என்று - இப்பாட்டுத் தினைப்புனங் காக்கும் வேடர் சிறுமியர் கிளிகளிடம் பேசும் முறையாக அமைந்த கவிநயமுடையது; அழையாது முன் இருந்தேன் - என வேடர் சிறுமியாது கருணைத்திறமும் குறித்த நயம் காண்க;— (8) இறைவனை அரியும் அயனும் அறியாராயினும் ஈண்டு கரியின் இனமும் பிடி யுடன் களித்துக் கண்டு மகிழும் என்பது;—(10) செல்லலுற அரிய என்றது இதில் மக்கள் சார்தற்கரிய நிலை குறித்தது.

தலவிசேடம் :—சீபர்ப்பதம்—III-பக். ௩அ௬ பார்க்க. வடநாட்டுப் பதி.

## திருக்கேதாரம்

திருச்சிற்றம்பலம் பண் - நட்டபாடை

வாழ்வாவது மாயம்மிது மண்ணாவது திண்ணம்
பாழ்போவது பிறவிக்கடல் பசிநோய்செய்த பறிதான்
தாழாதறஞ் செய்ம்மின்றடங் கண்ணான்மல ரோனுங்
கீழ்மேலுற நின்றான்றிருக் கேதார மெனீரே. (1)

நாவின்மிசை யரையன்னொடு தமிழ்ஞானசம் பந்தன்
யாவர்சிவ னடியார்களுக் கடியானடித் தொண்டன்
தேவன்றிருக் கேதாரத்தை யூரன்னுரை செய்த
பாவின்றமிழ் வல்லார்பர லோகத்திருப் பாரே. (10)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—இவ்வுலக வாழ்வு மாயம்; உள்ளது போலக் காட்டி ஒரு நாள் அழிவது திண்ணம்; சுருங்கிய இவ்வாழ்வினிடையேயும் துன்பங்கள் பல; ஆத லின் மரணம்வருமுன் இறைவனது திருக்கேதாரம் என்று சொல்லுங்கள். குறிப்பு:— என்னீரே-சேரிற் சென்று வழிபடுதல் அரிதாயினும் வாயினால் போற்றுங்கள். கருணை யினால், உலகரை வழிப்படுத்தியது; தாமும் திருக்காளத்தியி லிருந்தபடியே பாடிய குறிப்புமாம்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) வாழ்வாவது...திண்ணம் - வாழ்வு - இவ்வுலக வாழ்வு; ஒருநாள் அழிவது திண்ணம்; வாழ்வு ஆவது - ஆவது - என எண்ணப் படுவது; பாழ்போவது - பாழிற் கழிவது; இது - வாழ்வு; பறி - பறித்தல்; இடும்பை. ஆதலின் தாழாது என்க. ஆதலின் என்பது சொல்லெச்சம்; தடங் கண்ணன் - திருமால்;—(2) பறி - உடம்பு; உதிரம் நிறைத்த சால்போல்வதனால் பறி என்றார்; நீர் இறைக்கத் தோலினாற் றைத்த கூட்டினைப் பறி என்பது இந் நாளிலும் கொங்கு நாட்டில் வழங்கும் வழக்கு; நரி கீறுவது - இறந்தபின் இடுகாட் டில் நரி கீறித் தின்பது; குறிகூவிய...நாள்குறித்து - எடுத்துரைத்த வினைப்பயன் முடிவுறும் நாள் எல்லை; "வினைப்போக மேயொரு தேகங்கண் டாய்வினை தானொ

ழிந்தாற், றினைப்போ தளவு நில்லாது" ; அறமுளதால் - அந்நாள் வருமுன் செய்து கோடற்குரிய சிவதருமங்கள் உள்ளன ; அறிவானிலுமறிவான் - அறம் செய்ய அறிவோர்க ளுள்ளத்தினின்று அவ்விருப்பத்தினை அறிபவன்; "அறஞ் செய விரும்பு ;" நல் நீரோடு...இடுவார் - அன்னதானம் செய்வோர் ; நல் நறு நீரோடு - உண்பதற்கு நல்ல நறுநீர் தருதலின் இன்றியமையாமை கருதி வேறு பிரித்தும், முதலில் வைத்தும், சிறப்புக்காட்டும் ஒடு வுருபு தந்தும் ஓதினர் ;—(3) ஒருக்காலர் - தேவச்சாதியர்களுள் ஒரு வகையினர் ; கோம்பு - ஊன்றுகோல் ; இருக்கு - வேதப் பொதுமை குறித்தது ; இருக்கால் - வேத மந்திரங்களுடன் ; ஒருக்கால் - இருக்கால் - சொல்லணி ; பொற்பொடி - பொற்சுண்ணம் ; பொன் கலந்த சன்னம் என்றலுமாம் ;—(4) உழக்கே உண்டு - ஒருழக்கு அரிசி யளவு உணவு கொண்டு ; உணவின் அளவு குறித்தது ; "உண்பது நாழி" ; ஏகாரம் உலோபத்தினால் உணவும் குறைத்துண்டு என்ற குறிப்புப்படவும் நின்றது ; படைத்தீட்டி வைத்திழப்பார்கள் - படைத்தல் - தேடுதல் ; வைத்தல் - சேமித்து வைத்தல் ; இழப்பார் - கள்வர் அரசர் மரணம் முதலிய பல வகைகளால், தேடிய செல்வப்பயனை அனுபவியாமல் இழக்கும் உலோபியர் ; வழக்கே எனில் - செல்வமுள்ளவர் அறமியற்றுதல் வேண்டுமென்பது அறநூல் விதித்த வழக்கே என்று சொன்னால் ; பிழைக்கேம் - உயிர் வாழேம்; இறப்பேம் ; மதி மாந்திய - மந்தமதியுடைய ; சழக்கு - துன்பம் ; கிழக்கே சலமிடுதல் - கிழக்கு நோக்கி நின்று உரிய மந்திரங்களுடன் சூரியனுக்கு அர்க்கிய நீர் இறைத்தல் ; மறைவழி ஒழுகுவோர் ;—(5) நாளோடிய - ஆயுள் நாள் கண்டு உயிர்கொள்ள விரைந்து வருகின்ற ; நமனார்தமர் - இயமன்றூதுவர் ; அதுவே எனில் இதுவே - அது எனச் சேய்மையில் உள்ளது சொல்லும்போது இதுவே என அணிமைக்கண் வருவதாகும் என்பதாம். நம்பிகள் இப்பதிகத்தை இப்பதியினிற் செல்லாது இங்குத் திருக்காளத்தியினின்று கண்டவாறே அருளினர் என்ற வரலாற்றின் அகச்சான்று ; கீளோடு அரவு அசைத்தான் - அரவைக் கோவணமாகக் கீளுடனே சேர்த்துப் பூண்டவர் ;—(6) தவமாவது தம்மைப் பெறிலன்றே - "தன்னைப் பெறுவதன் மேற் றவமில்லை" ; தம்மைப் பெறுவதாவது ஆன்ம தத்துவ இயல்பினை யுள்ளபடி அறிந்து சாதனை வழியில் நிற்றல் ; ஆன்மரூபம், ஆன்மசுத்தி, ஆன்ம தரிசனம் என்ற மூன்று காரியங்கள். குளியீர்...குமரி - குருக்ஷேத்திரம், கோதாவரி, குமரி இவற்றில் மானசீகமாகக் கண்டு நீராடுங்கள் ; தெளியீர் உளம் - உள்ளத்திற் றெளியுங்கள். கோதாவிரி, தெற்கும் குருக்கேத்திரம் சீபர்ப்பதம் வடக்கும் எல்லையாகக் கொண்டு; "நண்ணி னூர்போ லுண்ணிறைந்து திடமாங் கருத்தில்" (3352) ;—(7) பண்ணின் தமிழ் - "பண்ணிடைத் தமிழொப்பாய்" (தேவா) என்றபடி தமிழுக்குச் சிறப்பாயுரியது பண்ணமைதி என்றதாம் ; கண்ணின் - கண்களுக்கு உரிய ; திண் என்று - ஒலிக்குறிப்பு ;—(8) இனமாய் நின்று - யானைகள் கூட்டமாய் நின்று ஒருமித்த கருத்துடன் தொழில் செய்யு நிலை ; (3)ம் பாட்டும் பார்க்க ;—(9) போதி - உடலாகிய சுமை ; அவம் - வீண் ; அவமாவது - இறப்பது ; மதிமாந்திய 4-வது பாட்டுப் பார்க்க; குழி-பாசத் தழுக்குழி ;—(10) இப்பாட்டில் தேவாரம் பாடி அருளிய மூவர் முதலிகள் பெயரும் வருதல் இதன் சிறப்பு ; நாவின்...சம்பந்தன் - முதன்மை பற்றி இவ்விருவரையும் கூறி, அவர் முதலாக யாவர் - (யாவராயினும்).

**தலவிசேடம்** :—திருக்கேதாரம்—முன் 2925-ல் உரைத்தவை பார்க்க.

**குறிப்பு** :—இந்த இரண்டு பதிகங்களும் அங்குச் சென்று கண்டவாறே இங்கே மனத்தால் கண்டு அருளப்பட்டன என்பது இவற்றின் அகச்சான்றுகளினால் நன்கு

புலப்படும். இதனை ஆசிரியர் 3352-ல் " இங்கே இருந்திறைஞ்சி, நடமா டியசே வடியாரை நண்ணி ஞர்போ லுண்ணிறைந்து, திடமாங் கருத்தில் " (3352) என்று காட்டியருளினர். இஃது " தேச கால வியல்பகல் பொருள்க ளெல்லாம், இருந் துணர்கின்ற " யோகக் காட்சிப்பாலது.

முதலாம் இடமா அரனு நுவந்த எல்லாம் (3352) - இவை வடநாட்டுப் பிற பதி கள் ; திருஇந்திரநீலபர்ப்பதம், திருஅனேகதங்காபதம் முதலாயின என்பது கருதப் படும் ; இவைகட்கு நம்பிகளது பதிகங்கள் கிடைத்தில ! திருநொடித்தான்மலை திருக் கயிலாயம்) பின்னர்க் காணலாம். (வெள்ளானைச் சருக்கம் இறுதி).

3353. அங்குச் சிலநாள் வைகியபின் னருளாற் போந்து பொருவிடையார்
தங்கு மிடங்க ளனைப்பலவுஞ் சார்ந்து தாழ்ந்து தமிழ்பாடிப்
பொங்கு புணரிக் கரைமருங்கு புவியுட் சிவலோகம் போலத்
திங்கள் முடியா ரமர்ந்ததிரு வொற்றி யூரைச் சென்றடைந்தார்.௧௧௯

(இ - ள்) அங்கு...பின் - அப்பதியில் (திருக்காளத்தியில்) சில நாள்கள் தங்கி யருளியபின் ; அருளாற் போந்து - அருள்விடையினைப் பெற்றுப் போய் ; பொரு விடையார்...தமிழ்பாடி - போர் விடைப்பாகராகிய சிவபெருமான் எழுந்தருளிய வனைப் பதிகள் பலவற்றையுஞ் சென்று சார்ந்து வணங்கித் தமிழ்ப்பதிகங்களைப் பாடித் துதித்தருளி ; பொங்கு...சென்றடைந்தார் - அலைகள் பொங்கி வருகின்ற கடலின் கரையின் பக்கத்திலே இந் நிலவுலகத்தினிலே சிவலோகத்திற் போலவே, சந்திரனை முடியிலேதரித்த இறைவர் விரும்பி எழுந்தருளிய திருவொற்றியூரைச் சென்று சேர்ந்தருளினர் (நம்பிகள்).

(வி - ரை) அருளாற் போந்து - திருவருள் விடைபெற்றுச் சென்று ; "தென் புவி மீது தோன்றி " (37) என்று திருக்கயிலையில் இறைவர் அருளிய ஆணையின் வழியே இப்புவியில் வந்த நம்பிகள் அவ்வாணைக்குக் காரணமாகிய இருவருள், முன், திருவாரூரிற் கண்ட அம்மையாரின் நிகழ்ச்சிகள் போக, எஞ்சிய ஒருவரைப் பற்றிய நிகழ்ச்சிகள் இனி இங்குத் திருவொற்றியூரிற் காணவேண்டிய தொடர்பு உள்ளமை யால், அவற்றின் பொருட்டுத் திருவருள் கூட்டுவிக்க அதன் வழியே போந்து என்ற குறிப்புங் கண்டுகொள்க.

இடங்கள் எனைப்பலவும் - இவை திருக்காரிகரை, திருக்கள்ளில், புண்ணிய கோடீசுவரர் கோயில் முதலியன என்பது கருதப்படும்.

தமிழ் பாடி - நம்பிகளது இப்பதிகங்கள் கிடைத்தில !

புவியுட் சிவலோகம்போல...அமர்ந்த - திருவாரூரிற் புற்றிடங் கொண்டெழுந் தருளுதல் போல, ஈண்டும் படம்பக்கம் இருக்கை கொண்டு புற்றிடங்கொண் டருளு தலும், தியாகேசரது சிறப்பும், தேவாரத் திருப்பதிகங்களிற் காட்டி யருளப்பட்ட சிவத்துவ விளக்கமாகிய எண்ணிறந்த பெருமைகளும் உட்கொண்டு கூறியபடி. இனித், திருக்கயிலையில் நின்றும் போந்த நம்பிகளின் சரிதப்பகுதிகளுள் தொடர் பாகி முன் திருவாரூர்க் கோயில் வாயிலில் கமலினியார் காட்சி தொடர்ந்த பகுதிகள் போக, எஞ்சிய அநிந்தியாரின் காட்சி முதலியன இங்குத் திருக்கோயிலி னுள் இறைவர் முன்பு நிகழ்வனவாதலின் அங்குத் திருக்கயிலையில் இறைவர் மகிழ்ந்தமைபோல இங்கும் விரும்பி யெழுந்தருளினர் என்ற சரிதக்குறிப்பும் காண்க; "தொடர்ந்து" என்ற மேற்பாட்டின் குறிப்பும் காண்க. 199

சிவமயம்

## பாட்டு 3352 - பக்கம் VI - உஉள.

### திருக்கேதாரம் :—தலவிசேடத்தின் கீழ்ச்சேர்த்து வாசிக்க.

1. சென்னையிலிருந்து, 1363 நாழிகை டெல்லி. அதினின்று 153 நாழிகை ஹரித்வாரம். அதுவரை ரயில் வண்டி பிரயாணம்.

2. ஹரித்வாரமிருந்து 16 நாழிகை ரிஷிகேசம், 44 நாழிகை தேவப்ரயாகை, 20 மைல் கீர்த்திநகர். இதுவரை சர்வீஸ் மோட்டார்.

3. கீர்த்திநகரிலிருந்து 3 நாழிகை ஸ்ரீநகர். நடை பிரயாணம். ஸ்ரீநகரிலிருந்து 23 நாழிகை ருத்ரப்பிரயாகை வரை சர்வீஸ் மோட்டார்.

4. ருத்ரப்ரயாகையிலிருந்து நடை பாதை. மலை யேற்றம் இறக்கம்.

ருத்ரப்ரயாகையிலிருந்து 5 நாழிகை சத்தோலி, 2 நாழிகை ராம்பூ, 4 நாழிகை அகஸ்த்தியமுனி. அங்கு அகஸ்த்தியர் கோயில் இருக்கிறது. அதினின்று சௌடி 2 நாழிகை, சந்திரபுரி 2 நாழிகை, குண்டுசட்டி 5 நாழிகை, குப்தகாசி 2 நாழிகை. இங்குச் சிவாலயம் நடராஜர் திருவுருவ தெரிசனம்.

5. அதினின்று நாலாசட்டி 1 நாழிகை, லவ்யூங்சட்டி 3 நாழிகை, மேகண்டா 2 நாழிகை, பாடா 2 நாழிகை, பதல்பூர் 3 நாழிகை, ராம்பூர் 2 நாழிகை. கௌரி குண்டம் 6 நாழிகை. இது அநேகதங்காபதம் என்று கயப்பாக்கம் சதாசிவச் செட்டியார் குறிப்பிடுகிறார். இங்கு அம்மை கோயிலும் உமாமகேசரும் இருந்து காட்சி அளிக்கிறார்கள். வெந்நீர் ஊற்று மகாவிசேஷமாக இருக்கிறது.

6. இதினின்று ஐங்கல்சட்டி 2 நாழிகை, ராம்பாடா 2 நாழிகை, கேதார நாத் 3 நாழிகை. இந்த ஏழுமைலும் கடுமையான ஏற்றம். கேதாரம் போனதும் கேதார நாதரைக் கண்டதும் அளவற்ற ஆனந்தம்.

இஃது, இதனை நேரிற் கண்டு வழிபட்ட அன்பர் திரு. ராம. சொ. திருநாவுக்கரசு செட்டியார் (முத்துப்பட்டணம் - காரைக்குடி) அன்புடன் அனுப்பி உபகரித்தனர். கேதாரநாதர் படமும், கோயில் படமும் அனுப்பி உதவினர். என் மனமார்ந்த பெருநன்றி அவர்க்கு உரியது. அந்தப் படங்கள் இப்பகுதியில் வருகின்றன.

3354. அண்ண ரேடார்ந்தா வணங்காட்டி யாண்ட நம்பி யெழுந்தருள
எண்ணில் பெருமை யாதிபுரி யிறைவ ரடியா ரெதிர்கொள்வார்
வண்ண வீதி வாயிறொறும் வாழை கமுகு தோரணங்கள்
சுண்ண நிறைபொற் குடந்தூப தீப மெடுத்துத் தொழவெழுங்கால்,

3355. வரமங் கலநல் லியமுழங்க வாச மாலை யணியரங்கிற்
புரமங் கையர்க ணடமாடப் பொழியும் வெள்ளப் பூமாரி
அரமங் கையரு மமரர்களும் வீச வன்ப ருடன்புகுந்தார்
பிரமன் றலையிற் பலியுகந்த பிரானார் விரும்பு பெருந்தொண்டர். ௨௦௧

3354. (இ - ள்) அண்ணல்...எழுந்தருள - இறைவர் தாமே வந்து தொடர்ந்து ஓலை காட்டித் தடுத்து ஆட்கொண்டருளிய நம்பிகள் எழுந்தருள அது கேட்டு; எண்ணில்...எதிர் கொள்வார் - அளவற்ற பெருமையுடைய ஆதிபுரி என்னும் திருவொற்றியூரில் இறைவரது அடியவர்கள் அவரை எதிர்கொள்வார்களாய்; வண்ண வீதி...தொழ எழுங்கால் - அழகிய வீதிகளில் வாயில்கள்தோறும் வாழையும் கமுகும் தோரணங்களுமாக நாட்டியும் தூக்கியும், சுண்ணமும் பொன்னாலியன்ற நிறைகுடங்களும் தூபதீபங்களும் ஏந்தியும், எதிர்சென்று தொழுவதற்கு எழுந்தபோது, ௨௦௦

3355. (இ - ள்) வர மங்கலம்...முழங்க - மேலான நல்ல மங்கல வாத்தியங்கள் முழங்கவும்; வாசமாலை...நடமாட - மணம் பொருந்திய மலர்மாலைகளால் அணி செய்யப்பட்ட ஆடரங்குகளில் அந்நகரத்தில் உள்ள ஆடற்பெண்கள் நடமாடவும்; பொழியும்...வீச - மேலிருந்து பொழிகின்ற வெள்ளமாகிய பூமழையினை வான் அரமகளிர்களும் தேவர்களும் வீசவும்; அன்பருடன்...பெருந்தொண்டர்-பிரமகபாலத்தில் விரும்பிப் பலிகொள்ளும் சிவபெருமான் விரும்பும் பெருந் தொண்டராகிய நம்பிகள் தம்முடன் வந்த அன்பர்களுடனே கூடி நகரத்தினுள்ளே புகுந்தனர்.

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3354. (வி - ரை) தொடர்ந்து - திருக்கயிலையில் தந்த வரமொழியினைத் தொடர்ந்து என்க; ஆளாந் தன்மையில் தொடர்பினைப்பற்றி என்ற குறிப்புமாம்; "ஆலுமறை சூழ்கயிலை யின்கணருள் செய்த, சாலுமொழி யால்வழி தடுத்தடிமை கொள்வான்" (174).

ஆவணங் காட்டி ஆண்ட நம்பி - இவ்வருளிப்பாடே உலகறியப் போற்றப் பட்டதாதலின் அதுவே அடியார் உள்ளத்தில் முற்பட எழுந்தது; ஆளுடைய அரசுகளை வெஞ்சூலை மடுத்தருளி நேரே ஆட்கொண்ட அருட் செயலும், பிள்ளையாரை ஞானஅமுது அருளி ஆட்கொண்டமையும் போல, முதற்கண் உலகறிந்து போற்ற நிற்கும் தன்மை; அண்ணலினால் ஆட்கொள்ளப்பட்ட; ஆண்ட - ஆட்கொள்ளப்பட்ட; செயப்பாட்டு வினையாகப் பொருள் கொள்க.

எண்ணில் பெருமை - எண் - நில் - எண்ணத்தில் நிற்க வரும் என்றலுமாம்.

ஆதிபுரி - திருவொற்றியூரின் திருப்பெயர்கள் பலவற்றுள்ளும் சிறந்த பெயர்.

அடியார் எதிர்கொள்வார் - எழுங்கால் - பெருந்தொண்டர் - புகுந்தார் - என்று மேல் வரும் பாட்டுடன் முடிக்க; எழுங்கால் என்ற எச்சம் பிறவினை முதல் வினையின் வினைகொண்டு முடிந்தது.

வீதி வாயில் தோறும் - வீதியின் மனைகளின் வாயில்கள்; வீதிகளின் முகப்புக்கள் என்றலுமாம்.

வாழை கமுகு நாற்றித், தோரணங்கள் நிரைத்து, என்று வினையெச்சங்களை இடத்துக்கேற்ப விரிக்க.

சுண்ணமும் தூடமும் தூபமும் தீபமும் என உம்மைகள் விரித்துரைத்துக்கொள்க. உம்மைத்தொகை.

எடுத்தல் - ஏந்துதல் ; தொழ - நம்பிகளை எதிர்சென்று தொழுவதற்கு. 200

3355. (வி - ரை) வரமங்கலம் - மேலான மங்கலம்.

வாசமாலை அணி அரங்கு - வாசமாலை - இந்நாளிற் காணப்படும் காகிதம் முதலிய போலிப் பொருள்களாலான மாலையன்றி, உண்மையான மணமுள்ள பூமாலைகள். புரம் - நகர் ; மேல் அரமங்கையர் செயல் கூறுதலின் அதனின் வேறு பிரித்துணர்தற்குப் புரமங்கையர் என்றடைமொழி தந்தோதினர் ; பிறிதினியைபு நீக்கிய விசேடணம்.

அரமங்கையர் - இவர்கள் வானில் உள்ளவர்கள் ; தேவச் சாதிப் பெண்கள். " வான்அர மகளிர்க்கு வதுவை சூட்ட " (முருகு).

அன்பருடன் - இவர்கள் நம்பிகளுடன் வந்த அடியார்கள்.

புகுந்தார் - பதியினுள்ளே புகுந்தார் ; அடியவர்கள் தொழ எழுவதற்கும் நம்பிகள் புகுதற்கும் நேரம் ஒத்திருந்த தென்பதாம் ; புகுந்தார் - பெருந் தொண்டர் என வினைமுற்று முன்வந்தமை ஆர்வத்தினால் வரும் விரைவு குறித்தது.

முன்பாட்டினால் அடியார் செயலும், இப்பாட்டினால் அவர்களின் வேறாகிய நகரமாந்தர் முதலியோரின் செயல்களும் குறிக்கப்பட்டன.

மங்கல இயங்கள் முழங்குதலும் - அரங்கில் - மங்கையர்கள் நடமாடுதலும் - நித்தியமாய் நிகழும் நகரமங்கலங்களும், நம்பிகள் வருகையின் பொருட்டு நிகழும்சிறப்பு மங்கலங்களுமாம், " தேந்தோமென் றரங்கேறிச் சேயிழையார் நடம்பயிலும் ", " வலம்வந்த மடவார்கள் நடமாட முழவதிர " (தேவா). 201

3356. ஒற்றி யூரி னுமையோடுங் கூட நின்று ருயர்தவத்தின்
பற்று மிக்க திருத்தொண்டர் பரந்த கடல்போல் வந்தீண்டிச்
சுற்று மணைந்து துதிசெய்யத் தொழுது தம்பி ரானன்பர்
கொற்ற மழவே றுடையவர்தங் கோயில் வாயி லெய்தினர். ௨0௨

(இ - ள்) ஒற்றியூரில்...தொண்டர் - திருவொற்றியூரிலே உமையம்மையாருடனே கூடி நிலைபெற்று வீற்றிருந்தருளும் சிவபெருமானாரது உயர்ந்த தவத்தில் மிகவும் பற்றுடைய திருத்தொண்டர்கள் ; பரந்த...துதிசெய்ய - பரவிய கடல் போல வந்து நெருங்கிக் கூடிச் சுற்றிலும் அணைந்து துதிக்க ; தம்பிரான் அன்பர் - சிவபெருமானன்பராகிய நம்பிகள் ; தொழுது - திருத்தொண்டர் கூட்டத்தினைத் தொழுது ; கொற்ற...எய்தினர் - வெற்றி பொருந்திய இளமையுடைய இடப வேற்றினை உடைய இறைவரது திருக்கோயில் வாயிலினை வந்தடைந்தனர்.

(வி - ரை) நின்றார் - நிலைபெறக் கலந்து வெளிப்பட வீற்றிருந்த இறைவர் ; படம்பக்க நாதர்.

நின்றார் உயர்தவம் - நின்றாருடைய உயர்ந்த தவம் ; தவமாவது சிவபூசை ; சரியையாதி நால்வகைப்பட்ட நெறிகள்; நின்றார் - நின்றார் வகுத்த ; நின்றாரைப் பற்றிய என்றலுமாம். உயர் - இதுவே ஏனை எல்லாச் சமயங்கள் வகுக்கும் எல்லாவற்றினும் உயர்வுடையது என்பது ; பற்று-அன்பும் அது காரணமாக வரும் ஒழுக்கமும்.

அணைந்து துதிசெய்ய - "தொழ எழுங்கால்" (3354) என்றபடி எழுந்து போந்து அணைந்து தொழுது துதிக்க எனக.

தொழுது - தொண்டர் கூட்டத்தினை நம்பிகள் தொழுது; அவர்கள் தொழுததனைக் கூறாது (நம்பிகள்) தொழுது என்றது, அவர்கள் தொழுததனைப் பற்றாமலே நம்பிகள் தொழுதனர் என்ற குறிப்புத் தருதற்கு. இவ்வாறே முன்னர்த் திருவாரூரிலும் "வந் தெதிர் கொண்டு வணங்கு வார்முன் வன்றொண்ட ரஞ்சலி கூப்பி வந்து" (269) என்ற குறிப்பும் காண்க; திருத்தில்லையில் "முன்பி றைஞ்சின ரியாவரென் றறியா முறைமை யாலெதிர் வணங்கி" (244) என்றதும் கருதுக.

பரந்த கடல்போல் - உரு வுவமம்; பரப்புப் பொதுத் தன்மை. கடல்போல் ஒலி எழத் துதிசெய்ய என்று கூட்டி உரைத்தலுமாம்; இப்பொருட்கு வினை பற்றி யெழுந்த உவமையாகக் கொள்க.

ஏறு உடையவர் - ஏற்றினைக் கொடியாகவும் ஊர்தியாகவும் உடைய சிவபெரு மான்; கொடி உயர்த்துதல் வெற்றிக்குறி யாதலின் கோற்ற - ஏறு என்றார். 202

3357. வானை யளக்குங் கோபுரத்தை மகிழ்ந்து பணிந்து புகுந்துவளர்
கூன லிளவெண் பிறைச்சடையார் கோயில் வலங்கொண் டெதிர்குறுகி
ஊனு முயிருங் கரைந்துருக வுச்சி குவித்த கையினுடன்
ஆன காத லுடன்வீழ்ந்தா ராரா வன்பி னாரூரர். உ0௩

(இ - ள்) வானை அளக்கும்...புகுந்து - ஆகாயத்தை அளப்பதுபோல நீண்டு மேலுயர்ந்த திருக்கோபுரத்தை மகிழ்ச்சியுடனே நிலமுற வீழ்ந்து வணங்கி உள்ளே புகுந்து; வளர்...எதிர்குறுகி - வளர்கின்ற வளைந்த இளைய வெள்ளிய பிறையினைச் சூடிய சடையினை உடைய இறைவரது திருக்கோயிலினுள்ளே திருமாளிகையினை வலமாக வந்து இறைவரது திருமுன்பு சார்ந்து; ஆரா அன்பின் ஆரூரர் - நிறைவு படாத பேரன்பின் பெருக்கினாலே நம்பியாரூரர்; ஊனுமுயிரும்...வீழ்ந்தார்-ஊனும் உயிரும் கரைந்து உருக உச்சியின்மேற் கூப்பிய கையினுடனே விளைந்த பெருவிருப்பி னோடும் நிலமுற வீழ்ந்தனர்.

(வி- ரை) அளத்தல் - அளப்பதுபோல் உயர்தல்; தற்குறிப்பேற்றம்.

வளர் - கூனல் - இள - வெண் - பிறை - வளர் - வளரும் தன்மை பெற்ற; கூனல் - வளைவுடைய; குறை நோயினால் உள்ளுடைந்து கூனியது போலும் என்றது குறிப்பு; கூன் - நல் என்று பிரித்து வளைவுடையதாயினும் நல்ல என்றலு மாம்; இளமை - இனிக் கலைபெற்று முதிரவுள்ள தன்மையும் புதிதின் தோன்றி யமையும் குறித்தது; வெண்மை - மறைவு பெற்ற இருளினின்றும் நீங்கி விளங்கும் வெள்ளிய கோலம்.

எதிர் - திருமுன்பு.

ஊனும் உயிரும் கரைந்து உருக - ஊன் உருகுதல்-அன்பின் விளைவாகிய மெய்ப் பாடு; உயிர் உருகுதல் - அன்பின் விளைவாகிய நிலை.

ஆனகாதல் - ஆதல் - விளைதல்; கூர்தல்.

வீழ்ந்தார் - காதல் தள்ளியதுபோல நிலமிசை விழுந்து பணிந்தார்.

அன்பின் வீழ்ந்தார் - அன்பினால் விழுந்தார் என்று கூட்டுக. அன்பினையுடைய ஆரூரர் என்று கூட்டினுமமையும். முன்பாட்டிற்போல ஈண்டும் பயனிலை முன் வந்தது ஆர்வத்தானாகிய விரைவுக் குறிப்பு. 203

3358. ஏட்டு வரியி "லொற்றிநகர் நீங்க" லென்னு் மெழுத்தறியும்
நாட்ட மலருந் திருநுதலார் நறும்பொற் கமலச் சேவடியிற்
கூட்டு முணர்வு கொண்டெழுந்து கோதி லமுத விசைகூடப்
"பாட்டும் பாடிப் பரவி"யெனும் பதிக மெடுத்துப் பாடினார். உ0௪

(இ - ள்) எட்டு வரியில்...திருநுதலார் - எட்டின் வரியினிடையே "ஒற்றி நகர் நீங்கலாக" என்னும் எழுத்தினைப் புகுத்தி எழுதும் எழுத்தறியும் பெருமானாகிய, கண்பூத்த திருநுதலினை உடைய பெருமானது; நறும்பொன்...எழுந்து - நறிய அழகிய கமலச் சேவடியிற் கூட்டுகின்ற உணர்ச்சியினை மேற்கொண்டு எழுந்து; கோதில்......பாடினார் - குற்றமில்லாத அமுத இசை பொருந்தப் "பாட்டும் பாடிப் பரவி" என்று தொடங்கும் முதலையுடைய திருப்பதிகத்தினைத் தொடங்கிப் பாடியருளினார்.

(வி - ரை) ஏட்டுவரியில்...எழுத்தறியும் - இஃது இத்தலத்தின் விளக்கமாய் வழங்கும் பழஞ்சரிதம்; முன், "வரியை, நெருக்கி முன்றிரு வொற்றியூர் நீங்கலென் றெழுது, மொருத்தர்" (1116) என்றதும், ஆண்டுரைத்தவையும் பார்க்க.

எழுத்தறியும்...திருநுதலார் - கண்ணின் பார்வை செய்து தெரிந்த பின்பே எழுத வேண்டுதலின் "நாட்ட மலரும்" என்ற குறிப்பாற் கூறினார்.

சேவடியிற் கூட்டும் உணர்வு - இறைவரது திருவடிச் சார்புபற்றியே கூறுதல் குறிக்கத்தக்கது.

உணர்வு கொண்டெழுந்து என்றது அன்புமீதூர்தலின் பரவசப்பட்டு வீழ்ந்தவர் பின்பு ஓர் உணர்ச்சி கொண்டனர்; அவ்வுணர்ச்சியாவது இறைவர் சேவடியிற் கூடும் உணர்வு; அது பற்றுக்கோடாகக் கொண்டு எழுந்தனர் என்றவாறும்.

கோதில் அமுத இசை கூடுதல் - பதிகப் பண்ணாகிய குறிஞ்சிப்பண் வந்து நேர்ந்து பொருந்துதல்; "கூடல் குறிஞ்சி" என்றபடி இனிக் கூடல் நிகழும் திணை ஒழுக்கக் குறிப்புமாம்; அமுத இசை என்றது இக்குறிப்பு.

பாட்டும் பாடிப் பரவி எனும் - பதிகத் தொடக்கமாகிய முதற்குறிப்பு.

எடுத்து - தொடங்கி.

என்ன எழுத்தறியும்—கூட்டுமுணர்வும்—என்பனவும் பாடங்கள். 204

3359. பாடி யறிவு பாவசமாம் பரிவு பற்றப் புறம்போந்து
நீடு விருப்பிற் பெருங்காத னிறைந்த வன்பர் பலர்போற்றத்
தேடு மயனுந் திருமாலு மறிதற் கரிய திருப்பாதங்
கூடுங் காலங் களிலணைந்து பரவிக் கும்பிட் டினிதிருந்தார். உ0௫

(இ - ள்) பாடி...புறம் போந்து - திருப்பதிகம் பாடித் தம் அறிவு ஆனந்த பரவசமாதற் கேதுவாகிய பேரன்பானது தம் உள்ளத்தினைப் பற்றிக் கொள்ளப் புறத்திற் போந்து; நீடு......போற்ற - நீடிய விருப்பினாலே பேரன்பு நிறைந்த அன்பர் பலர்களும் துதிக்க; தேடுமயனும்...கும்பிட்டு - தேடுகின்ற பிரமதேவரும் திருமாலும் அறிதற்கரியனவாகிய இறைவரது திருவடிகளை வழிபாட்டு நிலை கூடுகின்ற எல்லாக் காலங்களிலும் அணைந்து கும்பிட்டு; இனிது இருந்தார் - நம்பிகள் அத் திருப்பதியிலே இனிதாக எழுந்தருளியிருந்தார்.

(வி - ரை) அறிவு...பற்றுதலாவது - தமது அறிவு வசமிழந்து சிவானந்தத்தின் வசமாகத்தக்க அன்பு மீதூர்தல்; அந்நிலையினின்றும் மீண்டு புறம் போந்தனர் என்க,

கூடும் காலங்கள் - வழிபாட்டுக் குரிய பூசைக்காலங்கள்.

காலங்களிலணைந்து தும்பிட்டு - பூசைக்காலங்களில் எல்லாம் திருக்கோயிலில் அணைந்து வழிபட்டு.

இனிது இருந்தார் - மன ஒருமைப்பாட்டினில் மகிழ்ந்து அமர்ந்தருளினர்.

பரவசமாய் - என்பதும் பாடம். 205

I. திருவொற்றியூர்

*திருச்சிற்றம்பலம்* பண் - குறிஞ்சி

*பாட்டும் பாடிப் பரவித் திரிவார், ஈட்டும் வினைக டீர்ப்பார் கோயில்,*
*காட்டுங் கலமுந் திமிலுங் கரைக்கே, ஒட்டுந் திரைவா யொற்றி யூரே* (1)

*ஒற்றி யூரு மரவும் பிறையும், பற்றி யூரும் பவளச் சடையார்*
*ஒற்றி யூர்மே லூரா னுரைத்த, கற்றுப் பாடக் கழியும் வினையே.* (10)

*திருச்சிற்றம்பலம்*

**பதிகக் குறிப்பு:**—வினைகள் தீர்ப்பார் கோயில் திருவொற்றியூரே. பாடிப் பரவித் திரிவார் ஈட்டும் வினைகள் தீர்ப்பார் (1) ; தன்னை முன்னம் நினைக்கத் தருவான் (4) ; வினையை வீட்ட (7) என்பன நம்பிகளது முன்னை நிலைச் சரிதக் குறிப்பும், அதனைத் தொடர்ந்து இனி இங்கு நிகழவுள்ள நிகழ்ச்சிகளின் குறிப்பும் பட நிற்கின்றமை காண்க.

பதிகப்பாட்டுக் குறிப்பு :—(1) **பாட்டும் பாடிப் பரவித் திரிவார் - பாட்டும்** - சொலவல கீதம் பாடுதலன்றிப் பாட்டும் பாடி ; பரவி - பாட்டினாலும் உரையினாலும் துதித்து ; திரிவார் - அதுவன்றி வேறு தொழில் செய்யாது அதுவே தொழிலாய்த் தலங்கள் தோறும் திரிபவர் ; இது நம்பிகள் சரிதக் குறிப்புப்பட நிற்றல் காண்க ; **ஈட்டும் வினைகள்** - முன் ஈட்டியவையும் இனி ஈட்டப்படுவனவும் ஆகிய வினைகள் ; இதுவும் நம்பிகள் சரிதக் குறிப்புப்பட நிற்றல் கண்டுகொள்க ; கயிலையில் பெற்ற இறைவராணையின் வழிவந்த இப்பிறவியின் எஞ்சிய பகுதி இங்கு அனுபவித்துத் தீர்கின்றதும் காண்க. இக்கருத்தினை மேல் (3382-ல்) நம்பிகள் திருவாக்கில் வைத்து ஆசிரியர் விரித்தலும் காண்க. **காட்டும் கலமும் திமிலும் கரைக்கே ஒட்டும் திரை** - கலம் - மரக்கலம் ; திமில் - சிறு படகு ; திரை-இவற்றைக் கரையிற் செலுத்தும் அலைகள் ; காட்டும் - உலக அண்டம், கோள வடிவினதாதலால் கடல் வளைவுக்குள் நின்று மேலேறி வரவர முதலில் உச்சிமட்டும் தோன்றிப், பின்னர்ச் சிறிது சிறிதாக முழுமையும் தோன்றும் நிலைகுறித்தது. "விடுங்கலங்க ணெடுங்கடலி னின்று தோன்றும்" (ஒற்றி - தாண் 4) ; ஒட்டும் - செலுத்தும் ; **கரைக்கே திரை ஒட்டும்** - பிறவிக்கடலுட்பட்டு அலையும் உயிர்களைக் கரை சேர்த்தும் குறிப்பு ; திரையின்மேல் வைத்துக் கூறப்பட்டது. "மனமெனுந் தோணிபற்றி...கடலோடும்போது - உனையுனு முணர்வை நல்கா யொற்றியூ ருடைய கோவே" என்ற திருநேரிசை ஈண்டுக் கருதத்தக்கது ;—(2) **பந்தும்...பாவை சிந்தை கவர்வார்** - அகப்பொருட்டுறை ; தாய்கூற்று ; **பந்தும் கிளியும் பயிலுதல்** - இளமங்கைப் பருவம் குறித்தது ; "பூவைதந் தாள்பொன்னம் பந்துதந்தா ளென்னைப் புல்லிக் கொண்டு, பாவைதந் தாள்பைங் கிளியளித் தாளென்றன் பைந்தொடியே" (திருக்கோவை - 200) ; "கருந்தடங்கண் ணார்கழல்பந் தம்மானைப் பாட்டயரும்" (தேவா) ; "மாதாரள், பொற்கூட்டிற் பூவையை வாங்கி யதனோடுஞ், சொற்கோட்டிக் கொண்டிருந்த வேல்வைக்கண்—" (ஞானவுலா) ; **பாவை** - பாவைபோன்ற பெண் ; **பாவை சிந்தை கவர்வார் - எந்தம்**

அடிகள்-சங்கிலி யம்மையாரையும், நம்பிகளையும் குறிப்பா லுணர்த்தி நின்றன;—(4) என்ன தேழிலு நிறையுங் கவர்வான் - அகப்பொருட்டுறை ; தலைவிகூற்று ; புன்னை ...புறவு ; நெய்தற்கரு ; தன்னை முன்ன நினைக்கத் தருவான் - நான் நினைப்பதன் முன் தான் நினைத்துத் தன்னை நினைக்கு மருள் தருவான்; அவனை நினைத்தற்கும், முன்னர் அவன் அருள் புரியவேண்டு மென்பது ; நம்பிகள் சரிதக் குறிப்புமாம் ; உன்னப் படுவான் - தன்னை முன்னந் தந்தபின் நினைப்பினுள் வருபவன் ; — (5) உணங்கல் - பலிச்சோறு ; வணங்கும் (இடை) - துவளும் ; மெல்லிதாதலின் வளையும் ; வணங்கும் மடவார் என்று கூட்டியுரைப்பினுமமையும் ; (6) அடைவார்...உடையான் - நம்பிகள் சரித நிகழ்வும், மேல் விளைவும் குறிப்பு ;—(7) சென்ற - உலகை நாசம் செய்து மேற் சென்ற ; வினையை வீட்ட - நம்பிகள் சரிதக் குறிப்பு ;—(8) பவளப் படியான் - பவளம்போன்ற திருமேனி ; வினைகள் தீர்ப்பார் - சரிதக் குறிப்பு ; மேற் பாட்டிலும் எற்றும் வினைகடீர்ப்பார் என்பது காண்க ; ஓதம் - கடல் ; ஒற்றும் - மோதும் ;—(10) ஒற்றி ஊரும் - ஒன்றுபட்டு வாழும் ; உரைத்த - அகர வீற்றுப் பலவின்பாற்பெயர்.

தலவிசேடம் :—திருவொற்றியூர் III-பக்-ருஎச பார்க்க. தொண்டைநாட்டு 20-வது பதி.

சங்கிலியார் வரலாறு

3360. இந்த நிலைமை யாரிவரிங் கிருந்தார் ; முன்பே யிவர்க்காக
அந்தண் கயிலை மலைநீங்கி யருளாற் போந்த வநிந்திதையார்
வந்து புவிமே லவதரித்து வளர்ந்து பின்பு வன்றொண்டர்
சந்த விரைசூழ் புயஞ்சேர்ந்த பரிசு தெரியச் சாற்றுவாம். உ0௬

(இ - ள்) இந்த......இருந்தார் - மேற்கூறியவாறு இந்த நிலைமையராகி நம்பிகள் இங்குத் திருவொற்றியூரில் இருந்தருளினர் ; முன்பே...அநிந்திதையார் - (நம்பிகள் இவ்வாறு சேர்வதற்கு) முன்பாகவே இவர் பொருட்டு அழகிய குளிர்ந்த கயிலை மலையினை நீங்கி இறைவரது திருவருள் ஆணையின்படி தென்றிசைப் பிறவியிற் போந்த அநிந்திதையார் வந்து நிலவுலகத்தின் மேல் அவதரித்து, வளர்ந்து, பின்னர் (இந்நாள்) வன்றொண்டரது மணஞ் சூழ்ந்த புயத்தினைச் சேர்ந்த வரலாற்றினை யாவரும் அறியும்படி சொல்லப் புகுகின்றோம்.

(வி - ரை) இது கவிக்கூற்று ; இதுவரை நம்பிகளது சரித நிகழ்ச்சியில் உடன் போந்த நம் மனத்தை எச்சரித்து, இனி, முன்னைத் தொடர்புடைய மற்றொரு வரலாற்றில் புகுதற்குச் சித்தம் செய்தவாறு. இவ்வாறு முன்னர்ப் பரவையார் வரலாற்றுத் தொடக்கத்திலும் வேறு பிரித்துத் தொடங்கிய நிலை (277) யும் கண்டு கொள்க ; முன் சரித நிகழ்ச்சிகளைச் சுருங்கக்கூறித் தொடர்ந்துகொண்ட தன்மையும், இனிக் கூறும் சரிதத்துக்குத் தோற்றுவாய் செய்துகொண்ட தன்மையும் ஆகக் கவி யமைதியும் கண்டு களிக்கற்பாலது.

இந்த நிலைமை ... இருந்தார் - இதுவரை தொடர்ந்து கூறிவந்த சரிதப் பகுதியை முடித்து நிறுத்திக் கொண்ட நிலை ; இதன் தொடர்ச்சி மேலே (3378-ல்) வைத்துக் கண்டு கொள்க.

அந்தண் ... அநிந்திதையார் - திருமலைச் சிறப்புப் பார்க்க.

அருளால் - இறைவரது அருளாணையினால்; திருக்கயிலையினின்றும் பிரிந்து கன்ம பூமியாகிய நிலவுலகிற் பிறவியிற் செலுத்துதலும் அருளேயாம் என்பது.

அநிந்திதையார் - கயிலையில் முன்னை நிலையில் அம்மையாரின் பெயர். (நிந்தையில்லாதவர் என்பது பெயர்ப் பொருள்).

வந்து புவிமேல் அவதரித்து வளர்ந்து - நிலவுலகில் வந்தது முதல் நம்பிகள் அணையும் வரை உள்ள அம்மையாரின் சரிதப் பகுதி.

பின்பு...பரிசு - திருமண வரலாற்றுப் பகுதி.

தெரிய - யாவரும் அறியும்படி. 206

3361. நாலாங் குலத்திற் பெருகுநல முடையார் வாழு ஞாயிற்றின்
மேலாங் கொள்கை வேளாண்மை மிக்க திருஞா யிறுகிழவர்
பாலா தரவு தருமகளா ராகிப் பார்மே லவதரித்தார்
ஆலா லஞ்சேர் கறைமிடற்று ரருளான் முன்னை யநிந்திதையார். உ0எ

(இ - ள்) நாலாங்குலத்தில் - வேளாளர் மரபிலே; பெருகு...ஞாயிற்றின் - பெருகி வளர்கின்ற நன்மைகளையுடைய மக்கள் வாழ்கின்ற ஞாயிறு என்னும் பதியிலே; மேலாம்...மிக்க - மேன்மை பொருந்திய ஒழுக்கமுடைய வேளாண்மையிற் சிறந்த; திருஞாயிறு கிழவர்பால் - திருஞாயிறு கிழவர் என்னும் பெரியாரிடத்து; ஆதரவு தரும் மகளாராகி - அன்பு தரும் மகளாராக; முன்னை அநிந்திதையார் - முன்னை நிலையில் அநிந்திதையார் என்ற பெயருடன் விளங்கிய அம்மையார்; ஆலாலம்...அருளால் - ஆலாலவிடம் பொருந்தியதனாலே நீலகண்டராகிய சிவபெருமானது திருவருளாணையினாலே; பார்மேல் அவதரித்தார் - இவ்வுலகின்மேல் அவதாரஞ் செய்தனர்.

(வி - ரை) நாலாங்குலம் - அந்தணர் அரசர் வணிகர் வேளாளர் என்று முன்னை பழந்தமிழ் நூல்களில் வகுக்கப்பட்ட நான்கு குலங்களுள்ளே நான்காவதாக வகுக்கப்பட்ட வேளாளர் குலம்; இதற்கு இவ்வாறன்றிப் பிராமணன் முதலிய நாற்குலத்து - வகுப்பினுள் நாலாவது என்று கொண்டும், சூத்திரன் என்று வருவித்துக் கொண்டும், அப்பெயர்க்கு உரிமையில்லாது இந்நாளிற் கொள்ளப்படும் பல இழிவுப்பொருள்கள்கொண்டும் இடர்ப்பட்டு இந்நாட் பெரும்பூசலுக்கு இடம்செய்து இடர்ப்படுத்துவோர் பலர். "வேளாண் மாந்தர்க் குழுதூ ணல்லது, இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி" (தொல். பொருள். மரபியல் 80). இதுபற்றி 440ன் கீழ் உரைத்தவையும் பார்க்க.

பெருகுநலம் உடையார் - சிறந்த ஒழுக்க முடைய குடிமக்கள் என்பது. இங்குக் கூறியவர்கள் அந்தணர் வேளாளர் முதலிய குடிகள் பலரும்.

ஞாயிற்றின் - ஞாயிறு என்ற பதியிலே.

மேலாங் கொள்கை வேளாண்மை - மெய்ம்மையினிற் சிறந்த வேளாளரின் தன்மை. "மெய்ம்மைநிலை வழுவாத மேன்மைநெறி விழுக்குடிமைச், செம்மையினார்" (1606) "நம்பு வாய்மையி னீடு" (449) என்பன முதலியவை காண்க.

ஞாயிற்றின் மேலாம் கொள்கை-ஞாயிறு-சூரியன் என்று கொண்டு, சூரியனைவிட மேலாக விளங்கும் புகழுடைய என்ற குறிப்புமாம். "பலர்புகழ் ஞாயிறு" (முருகு).

திருஞாயிறு கிழவர் - கிழவர் - வேளாளர்களுக்குரிய சிறப்பாகிய மரபுப் பெயர்; இது கிழார் எனவழங்கும். கிழமையை உடையோர் என்பது பொருள். நிலத்திற்குரிய உரிமை குறித்தது; "செல்லான் கிழவ னிருப்பி னிலம்புலந், தில்லாளி

னூடி விடும்" (குறள்). இப்பெயர் பெரும்பாலும் ஊர்பற்றியே வழங்கப்படும்; செங்குன்றூர்க்கிழார் - கோவூர்க்கிழார் - குண்டையூர்க் கிழார் முதலியவை காண்க; அவ்வூரில் முதன்மைபெற்று எல்லாராலும் விளக்கமாயறியப்படுதல் கருத்து. ஞாயிறு என்னுமூரின் முதன்மையுடையோர் என்பதாம்.

ஆதரவு தரு மகளாராகி - ஆதரவு - அன்பு - மேம்பாடு என்றலுமாம். தரும் - அவரால் ஆதரவு பெறும் மகளார் என்பதன்றி, அவருக்கு ஆதரவு - பெருமை - சிறப்பு - தரும் மகளாராயினர் என்பதாம்.

பார் மேல் - கன்மபூமியாகிய நிலவுலகத்தில்; புவனியில்.

அருளால் முன்னை அநிந்திதையார் - முன்னர்த் திருமலைச்சருக்கத்திற் போந்த முன்னை வரலாற்றின் றொடர்பு முற்றும் அறிவித்த கவிநயம் கண்டுகொள்க; (33-37) இப்பாட்டால் ஊரும், மரபும், பெற்றோரும், முன்சரிதமும் கூறியவாறு. 207

3362. மலையான் மடந்தை மலர்ப்பாத மறவா வன்பின் வந்தநெறி
தலையா முணர்வு வந்தணையத் தாமே யறிந்த சங்கிலியார்
அலையார் வேற்கட் சிறுமகளி ராயத் தோடும் விளையாட்டு
நிலையா யினவப் பருவங்க டோறு நிகழ நிரம்புவார், உ0அ

3363. சீர்கொண் மரபில் வருஞ்செயலே யன்றித் தெய்வ நிகழ்தன்மை
பாரி லெவரு மதிசயிக்கும் பண்பில் வளரும் பைந்தொடியார்
வாரு மணிய வணியவாம் வளர்மென் முலைக ளிடைவருத்தச்
சாரும் பதத்திற் றந்தையார் தங்கண் மனைவி யார்க்குரைப்பார், உ0க

3364. "வடிவுங் குணமு நம்முடைய மகட்கு மண்ணு ளோர்க்கிசையும்
படிவ மன்றி மேற்பட்ட பரிசாம் பான்மை யறிகிலோம்;
கடிசேர் மணமு மினிநிகழுங் கால" மென்னக் கற்புவளர்
கொடியே யனைய மனைவியா "ரேற்கு மாற்றாற் கொடு" மென்றார்.

3362. (இ - ள்) மலையான்...நெறி - மலையரசன் மகளாராகிய உமையம்மையாரது மலர் போன்ற பாதங்களை மறவாத அன்பு பூண்டுவந்த ஒழுக்கத்தின்; தலையாம்...அணைய - முன்னை யுணர்வு வந்து பொருந்த; தாமே அறிந்த சங்கிலியார் - அதனைத்தாமே இயல்பில் அறிந்தவாறே வந்தவதரித்துச் சங்கிலியார் என்னும் திருநாமம் பூண்ட அம்மையார்; அலையார்...நிகழ - அலைத்தற்றொழில் பொருந்திய வேல் போன்ற கண்களையுடைய சிறு மகளிர் கூட்டத்தோடும் விளையாட்டுக்களின் நிலைமைகள் அவ்வப் பருவங்கள் முறையே வந்து நிகழ; நிரம்புவார் - வயது நிரம்புவாராக, உ0அ

3363. (இ - ள்) சீர்கொள்...அன்றி - (அவ்வாறு பருவ நிரம்புநாளில்) சிறப்புக்கொண்ட குல வொழுக்க நெறியில் வரும் செயல்களே யல்லாமல்; தெய்வ நிகழ் தன்மை - தெய்வத்தன்மை விளங்கும் பண்புகளும் (விளங்க); பாரில்...பைந் தொடியார் - உலகில் எல்லாரும் அதிசயப்படும் பண்பிலே வளர்ந்து வருகின்ற பைந்தொடியாராகிய சங்கிலியம்மையார்; வாரும்...பதத்தில் - கச்சுமணியும்படி சமீபித்த பருவமுடைய வளர்கின்ற தனங்கள் இடையினை அலைக்கும்படி சார்கின்ற பருவத்தில்; தந்தையார்...உரைப்பார் - அவரது தந்தையார் தமது மனைவியாருக்கு எடுத்துச் சொல்லுவாராய், உ0க

3364. (இ - ள்) நம்முடைய மகட்கு - நம்முடைய மகளுக்கு; வடிவும் குணமும் - வடிவமும் குணங்களும்; மண்ணுளோர்க்கு...அறிகிலோம் - உலகினர்களுக்குப் பொருந்தும் தன்மை யளவில் அமைவதன்றி மேம்பட்ட தன்மையால் அமைகின்ற நிலையினை என்னென்று அறிகிலோம்; கடிசேர்...காலம் என்ன - காப்பு அமைந்த திருமணமும் இனி நிகழ்தற்குரிய காலம் என்று சொல்ல; கற்பு... ...என்றார் - கற்புப் பெருக வளரும் கொடியே போன்ற மனைவியார் "நமக்குப் பொருந்தும்படியினால் திருமணஞ் செய்து கொடும்" என்று சொன்னார். உ௪0

இம் மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3362. (வி - ரை) மலையான்...வந்தநெறி - முன்னை நிலையில் திருக்கயிலையில் உமை அம்மையாருக்குத் திருப்பணி செய்த நிலையினை மறவாத முன்னுணர்வுடன் அம்மையார் இவ்வுலகில் அவதரித்தார் என்பது. இவ்வாறு முன்னை நிலை உணர்வுடன் உதித்தல் சிவனருளாலாவது. கோச்செங்கட் சோழ நாயனார், "ஆதி மூர்த்தி யருளான்முன் னறிந்து பிறந்து" (ஷை புரா. 12), "முன்னைப் பிறப் புணர்ந்து, பெற்ற முயர்த்தார்க் காலயங்கள் பெருக அமைத்து மண்ணண்ட" வரலாறு காண்க. இவ்வாறு வருதல் மிக அரியதாய்ச் சிவனை நோக்கி முயன்ற முன்னைப் பெருந்தவத்தால் அன்றி ஆவதன்று.

தலையாம் உணர்வு வந்தணைய - தலை ஆம் - மேன்மை பெறுகின்ற; சிறப்பு ஆகும். வந்தணைய - அருளால் வந்து பொருந்த.

தாமே யறிந்த - வேறொருவாற்றானும் பிறராலும் அறிவிக்கப்படாமல் தம் இயல்பினாலேயே உள்ளூற அறிந்த. பாவையார் திறத்தில் "தங்கள் பனிமலைவல்லி பாதங் கூடுமன் புருகப் பாடுங் கொள்கை" (281) என்றது காண்க.

சங்கிலியார் - முன்கூறியவாறு அவதரித்த அநிந்திதையாருக்குச் சங்கிலியார் என்று பெயரிட்டனர்; அந்தச் சங்கிலியார் என்க. இவ்வளவும் குறிப்பெச்சத் தான் வருவித்துரைத்துக் கொள்க.

அலையார் வேற்கண் - அலை - முதனிலைத் தொழிற்பெயர். அலைத்தலாகிய தொழில் பொருந்திய.

வேற்கண் - வேல் போன்ற கண்; மெய்யும் வினையும் பற்றிவந்த உவமத் தொகை.

விளையாட்டு நிலையாயின அப்பருவங்கள் - இவை, அம்மானை நீராடல் பொன்னூசல் முதலாகப் பிள்ளைத்தமிழ் நூல்களிற் பேசப்படுவன. தோணோக்கம், பூவல்லி முதலியனவாய்த் திருவாசகத்தில் வருமவற்றுள் இப்பருவநிலைக் கேற்ற பெற்றியும் கொள்க.

நிகழ - விளையாட்டுநிலை யாயினவை ஏற்ற அவ்வப்பருவங்களில் வந்து நிகழ; நிலையாயின-அகரவீற்றுப் பலவின்பாற் பெயர்; அப்பருவங்கள் - உரிய அவ்வப்பருவங்கள்; நிரம்புவார் - வயது கூடி வளர்வாராகி; நிரம்புவார் - சாரும் பதத்தில் - என மேல்வரும் பாட்டுடன் முடிக்க.

விளையாடும் - என்பதும் பாடம். 208

3363. (வி - ரை) மரபில் வரும் செயல் - மரபு - குலம்; இவர் அவதரித்த வேளாண் மரபுக்கேற்றவாறு; வருகின்ற பருவங்கள் எல்லாக் குலத்திலும் ஒப்ப நிகழ்வனவாயினும் அவற்றுக்கு உரியனவாய் வெளிப்பாடு பெறவரும் செயல்கள் மரபு ஒழுக்கத்துக் கேற்றவாறு நிகழ்வன என்பது; மரபு - முறை என்றலுமாம்.

தெய்வ நிகழ் தன்மை - தெய்வத்தன்மை வெளிப்படுதல். உலகியலின் நீங்கி இறைவன் பற்றாகிய செயல்கள் விளங்குதல்.

அதிசயிக்கும் - இப்பருவத்துக்கு மேற்பட்ட முதுக்குறைவும் இறைபாலன்பும் கண்டு உலகில் எவரும் பெருமிதப்பட்டு வியக்கத்தக்க.

வாரும் அணிய அணிய ஆம் - வார் - கச்சு ; வாரும் - மேலாடையே யன்றிக் கச்சும் என்று உம்மை எதிரது தழுவிய எச்சவும்மை ; வாரும் அணிய-மேலாடையும் கச்சும் அணியும்படி.

அணிய ஆம் - பருவ நெருங்கிய - சமீபித்த - நிலையினவாகிய ; அணிய ஆம் - முலைகள் - என்று கூட்டுக ; வளர் - பூரித்துப் பெருக்கும்.

முலைகள் இடைவருத்தச் சாரும்பதம் - முலைகள் பெருத்து வளர்தலால் அப் பாரம் தாங்க மாட்டாது இடை துவளச் சாரும் ; இடை - இடையை ; இரண்டனுருபு தொக்கது. "துணைமுலைகள் கொண்டதுசுப் பொதுங்குபதம்" (1721)

உரைப்பார் - உரைப்பாராகி ; உரைப்பார் - என்ன - என்று மேல்வரும் பாட்டுடன் முடிக்க. 209

3364. (வி - ரை) வடிவும்...அறிகிலோம் - இது தந்தையார் தமது மனைவியாருக் குரைத்தது.

வடிவும் குணமும் - புறமும் அகமும் ஒன்று போலவே ; வடிவம் - திருமேனி வனப்பின் சிறப்பு. குணம் - உட்பெருமை ; குணம் - நற்குணம்.

மண்ணுளோர் - மண்ணுலகத்தோராகிய ஏனைப் பெண்கள்.

மேற்பட்ட பரிசாம் பான்மை - மானிடத்தன்மையின் மேம்பாடு ; தெய்வப் பண்பு நிகழவுள்ள தன்மை ; Superhuman என்பர் நவீனர் ; பரிசும் ஆம்-பரிசு - புறத்திற் காண உள்ளது. பான்மை - அதற்குக் காரணமாகிய உள்நிலை ; முன் (3366ல்) தன்மை - பண்பு என்பனவும் இக்கருத்தன.

அறிகிலோம் - அதன் காரணம் அறியகில்லோம்.

கடிசேர்...காலம் - மணம் செய்தற்குரிய காலம் ; ஆதலின் மண்ணுளோரின் மேம்பட்ட பரிசாயினமையால் அதற்கேற்றபடி உள்ள மணமகனைத் தேடி மணஞ் செய்து கொடுத்தல் வேண்டுமே ; உனது கருத்து என்னை ? என்பது குறிப்பெச்சத் தாற் கொள்க. இதையறிந்த மனைவியார் "ஏற்குமாற்றால் கொடு" மென்றது காண்க.

ஏற்குமாறு - குலநலத்துக்கும் பண்புக்கும் குணநலத்துக்கும் ஏற்றபடி ; கொடும்- மணஞ்செய்து கொடுங்கள். கடிசேர்காலம் - பன்னீராட்டைப் பிராயம்." 210

3365. தாய ரோடு தந்தையார் பேசக் கேட்ட சங்கிலியார்
"ஏயு மாற்ற மன்றிது ; வெம் பெருமா னீசன் றிருவருளே
மேய வொருவர்க் குரியதியான் ; வேறென் விளையு ?" மெனவெருவுற்
றுய வுணர்வு மயங்கிமிக வயர்ந்தே யவனி மிசைவிழுந்தார். உ௧௧

(இ - ள்) தாயரோடு...சங்கிலியார் - தமது தாயாரும் தந்தையாரும் இவ் வாறு பேசுதலைக் கேட்ட சங்கிலியார் ; ஏயும்...விளையும் ? என - இது என்பாற் பொருந்தும் பேச்சன்று ; எம்பெருமானது திருவருளே முற்றும் பொருந்திய ஒருவருக்கு நான் உரியது ; இதனின் வேறாக இவர்கள் நினைப்பது என்னாய் விளையுமோ என்று ; வெருவுற்று...விழுந்தார் - வெருக்கொண்டு ஆகிய உணர்வு மயங்கி மிகவும் மூர்ச்சித்து நிலத்தின்மேல் விழுந்தார்.

(வி - ரை) தாயரோடு தந்தையார் பேச - தாயரும் தந்தையரும் பேசுதலை.

ஏயும் மாற்றம் - தம்பாற் பொருந்தும் சொல்.

எம்பெருமான்...உரியதியான் - இது முன்னையநிலை யறிவு பெற்ற தன்மையி னால் சங்கிலியார்தாமே யறிந்த (3364) நிலையிற் பெற்ற அறிவு. மேல் 3367 பார்க்க. இச்சொல் ஏற்றதன்று என்று துணிந்தமைக்குக் காரணம் கூறியபடி.

திருவருளே மேய - முழுதும் திருவருளே அடைந்த.

உரியது யான்-உரியனியான் என்னாது, உரியது என்று அஃறிணையிற் கூறியது நாயகி, தம்மை நாயகனது உடைப்பொருளாகவே வைத்துக் கொண்டொழுகும் தமிழ் வழக்குப் பற்றி என்க; "அந்தமுறை யாலவர்க்கே யுரியதுநான்" (1297) என்று திலகவதியம்மையார் கூறிய நிலையும், ஆண்டுரைத்தவையும் பார்க்க.

வேறென் விளையும் என - இவர் கூறிய மாற்றத்தினாலே வேறே எவ்வாறு என்ன தீமை விளையுமோ என்றஞ்சி; வேறென் விளையும் என்ற அதனின் வேறாக எது விளையும் ஒன்றும் விளையாது என்று எதிர்மறை வினாக்குறிப்புப்பட உரைத் தலும் குறிப்பு. 211

3366. பாங்கு நின்ற தந்தையார் தாயார் பதைத்துப் பரிந்தெடுத்தே
ஏங்கு முள்ளத் தினராகி, "யிவளுக் கென்னோ வுற்ற?"தெனத்
தாங்கிச் சீத விரைப்பனிநீர் தெளித்துத் தைவந் ததுநீங்க
வாங்கு சிலைநன் னுதலாரை "வந்த துனக்கிங் கென்?" னென்றார்.

(இ - ள்) பாங்கு...பரிந்தெடுத்தே - பக்கத்தில் நின்ற தந்தையாரும் தாயா ரும் (அது கண்டு) பதைத்துப் பரிவுடன் அவரை எடுத்தே; ஏங்கும்...தாங்கி - வருந்தும் உள்ளத்தை உடையாராய் இவளுக்கு என்னோ வந்தது" என்று கலங்கி அவரை அணைத்துத் தாங்கி; சீத...நீங்க - குளிர்ந்த மணமுடைய பனிநீரைத் தெளித்துத் தடவியிடவே அவரது மயக்கமும் அயர்ச்சியும் நீங்க; வாங்கு...என்றார் - வளைந்த வில் போன்ற நல்ல நுதலினையுடைய அவரை "இங்கு உனக்கு வந்தது யாது?" என்று கேட்டார்கள்.

(வி - ரை) பாங்கு நின்ற - தந்தையாரும் தாயாரும் முன்கூறியவாறு பேசும் போது சங்கிலியார் அடுத்து நின்று கேட்டிருந்தார் என்பது. இதனை முன்பாட்டிற் "பேசக் கேட்ட சங்கிலியார்" என்ற இடத்து வெளிப்படக் கூறாது விட்டனர், இவர் பக்கத்து நின்றதனை அப்பெற்றோர்கள் உட்கொண்டாரிலர் என்பதுணர்த்து தற்கு.

பதைத்தல் - பரிதல் - ஏங்குதல் - தம்மால் அன்பு செய்யப்பட்ட பொருளின் கண் சடுதியில் நேரும் சோர்வு கண்டபோது அன்புடையார்பால் நிகழும் நிகழ்ச்சிகள்; பதைத்தல் - அச்சத்தால் உடம்பு முழுதும் குலுங்கும் மெய்ப்பாடு - நடுக்கம்; பரிதல் - இரங்குதல்; ஏங்குதல் - மனம் வருந்துதல்; புறநிகழ்ச்சியாகிய பதைத்தல் கண்டவுடன் முதலில் நிகழ்வது; அதன் பின்னரே அதனை எண்ணு தலும் பரிவு கூர்தலும் உளவாகும்; ஆதலின் அம்முறையில் வைத்தார்.

எடுத்தே தாங்கி - கீழே விழுந்தாரை முதலில் எடுத்துத் தாங்குதல் முதற்கண் செய்யத்தக்க உதவி; First aid என்பர்.

நீர் தெளித்துத் தைவந்து - முகத்தில் குளிர்ந்த நீர் தெளித்தலும் கண்களையும் முகத்தையும் தடவுதலும் மூர்ச்சை யடைந்தாரை மீள உணர்ச்சி வரும்படி செய்யு

முதலிற்செய்யும் தீர்வு முறைகள் ; குளிர்ந்த நீர் தெளித்தலால் இரத்த ஓட்டத்தை உண்முகப்படுத்தி அதிகரிக்கச் செய்து அதன் மூலம் உணர்ச்சிக்குரிய நரம்புக் கருவிகளை ஊக்கப்படுத்துதல் மருத்துவ நூலோர் மரபு : தைவருதல் - நீர் தெளித்தலால் உளதாகும் பயனைப் பரவச் செய்தலும் உணர்ச்சி குன்றிய பகுதிகளை ஊக்குதலும் குறித்தது.

தந்தையார் தாயார் பதைத்துப் பரிந்துதெடுத்தே ஏங்கு முள்ளத்தினராகி - அப்பூதி நாயனாரின் மகனார் மூத்த திருநாவுக்கரசு, அரசுகளது திருவமுதுக்காகக் கொணர்ந்த இலையினைத் தாயார்பால் வைத்துத் தளர்ந்து படிமேல் வீழ்ந்தபோது அதுகண்டு இவ்வாறே அவரது தாயருந் தந்தையாரும் உளம் - பதைத்தனர் ; உற்று நோக்கி விளங்கிய குறிகளால் விடத்தினால் வீந்தானென்று துணிந்தனர்; ஆனால் துளங்குத லின்றித் தொண்டர் அமுது செய்வதற்குச் சூழ்வாராயினர் (1810) ; அங்கு அன்பரை அமுதூட்டும் ஆர்வமாகிய சிவன் பணியே அவர்களை விழுங்கி முன்னின்றது அதனில் உலகியல் உணர்வாகிய பற்றுக்கள் தாழ்ந்து மறைந்தன ; ஆதலின் அவர்கள் துளங்குத லிலராய் மேலே தொழில் செய்தனர். ஆண்டுரைத்தவை பார்க்க. இங்கு அவ்வாறு சிவன்பணி ஒன்றும் முன்னிற்காமையின் உலகப் பற்றாகிய மகண்மை ஆசையொன்றே நின்றது ; ஆதலின் இத்தந்தையார் தாயார் வருந்தினர் ; மேல்வரும் இவர்களது செயலும் அவ்வளவிலே நின்றமைந்தன ; "மற்ற மாற்றம் மறைத்தொழுக" (3368) ; "மனமருண்டார்" (3369) ; "அஞ்சி நங்கை செயலேயுடன் பாடுவார்" (3370) (3371) "ஈசர்க் கேற்ற பணிவிரும்பிக் கன்னிமாடத்தில் உறைகின்றீர்" என்று கண்கணீர்த் தாரை ஒழுக, உரைக்கின்றார், "போனார் தம் பதியில்" என்று வருவன வெல்லாம் காண்க. இவ்வேறுபாடுகள் உய்த்துணரத் தக்கன. தந்தையார் தாயார் - ஆர் - விகுதிகள் சங்கிலியாரை மகளாராகப் பெற்ற பெருந்தவச் சிறப்புணர்த்தின.

என்னோ உற்றது - என்னோ - யாது தீமையோ? ; என் - நோ - என்று பிரித்து என்ன நோய் என்றலுமாம்.

வந்தது - இடநோக்கி, உணர்வு மயங்கி அயர்ந்து விழுதற்குக் காரணமாக நேர்ந்தது என்ற பொருள் தந்தது.

அது நீங்க - அது - உணர்வு மயக்கம் - அயர்ச்சி - இவற்றால் படிமேல் வீழ்ந்த நிலை ; நீங்குதல் - முன்னை உணர்வுடன் எழுதல்.

வாங்கு சிலை நன்னுதலாரை - வாங்குதல் - வளைதல் ; வளைந்த வில் போன்ற நெற்றியுடைமை பெண்களிற் சிறந்த அழகும் அமைப்பும் குறிப்பது ; இங்கு முகத்தில் நீர் தெளித்துக் கண்களைத் தைவந்தமையால் அதன் விளைவாக நுதல் கோட்டி (வளைத்து) எழுந்தனர் என்ற குறிப்பும் தந்து நின்றது ; நுதல் வளைத்தல் கருத்து மாறுபாடு குறிப்பதுமாம் என்பர்.

வாங்கு நுசுப்பு நுதலாரை - வாங்கு நுசுப்பின் மகளாரை - என்பனவும் பாடங்கள்.

212

3367. என்று தம்மை ஈன்றெடுத்தார் வினவ மறைவிட் டியம்புவார்
"இன்றென் றிறத்து நீர்மொழிந்த திதுவேன் பரிசுக் கிசையாது
வென்றி விடையா ரருள்செய்தா ரொருவர்க் குரியே னியானினிமேற்
சென்று திருவொற்றி யூரணைந்து சிவனா ரருளிற் செல்வ" னென,

3368. அந்த மாற்றங் கேட்டவர்தா மயர்வும் பயமு மதிசயமும்
வந்த வுள்ளத் தினராகி மற்ற மாற்ற மறைத்தொழுகப்
பந்த நீடு மிவர்குலத்து நிகரா மொருவன் பரிசறியான் உகச
சிந்தை விரும்பி மகட்பேச விடுத்தான் ; சிலருஞ் சென்றிசைத்தார்.

3367. (இ - ள்) என்று...இயம்புவார் - தம்மைப் பெற்றெடுத்த தந்தையாரும் தாயாரும் முன்கூறியபடி கேட்கத், தங்கருத்தை மறையாமற் சொல்வாராய் ; இன்றென்...இசையாது - இன்று என்னைப் பற்றி நீர் சொல்லியவை என்து தன்மைக்குப் பொருந்தாது ; வென்றி...உரியேன் யான் - வெற்றி பொருந்திய இடபத்தினை உடைய சிவபெருமானார் திருவருள் செய்யப் பெற்றாரொருவர்க்கு நான் உரியவள் ; இனிமேல்...செல்வன் என - இனிமேற் போய்த் திருவொற்றியூரிற் சேர்ந்து சிவபெருமானாரது திருவருள் வழியிலே செல்வேன் " என்று சொல்ல,

3368. (இ - ள்) அந்த மாற்றம்...உள்ளத்தினராகி- அந்த மாற்றத்தினைக் கேட்டு அத் தந்தையாரும் தாயாரும் அயர்ச்சியும் பயமும் அதிசயமும் பொருந்திய மனத்தையுடையவர்களாகி ; மற்ற...ஒழுக - மற்ற அம்மாற்றத்தைப் பிறர் அறியாமல் மறைத்து ஒழுக; பந்த நீடும்...பரிசறியான்-பலவழிகளிலும் இவர்களுடன் குலப்பந்த மிகுந்து இவர்களது குலத்தால் ஒப்புடைய ஒருவன் இத்தன்மை யறியாதவனாய் ; சிந்தை விரும்பி மகட்பேச விடுத்தான் - மனவிருப்பத்தோடும் மகளை மணம் பேசச் சிலரை அனுப்பினான்; சிலரும் சென்றிசைத்தார் - (அவ்வாறு விடுக்கப்பட்ட) அந்தச் சில மக்களும் அவ்வாறே சென்று சொன்னார்கள். உகச

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3367. (வி - ரை) மறை விட்டு - இங்குத் தந்தை தாயர் கேட்ட வினாவுக்குத் தமது நாயகனைப் பற்றி விடைகூறவேண்டி வருவதால் நாணத்தால் அதனை மறைத்தலை விட்டு ; இஃது இந்நாட்டில் தமிழ் மக்களின் நாகரிக இயல்பு என்பது தமிழிலக்கணம் அகப்பொருணூல்களாலுமறிக ; தலைவியின் கருத்தினை உயிர்த்தோழி தானும் நாண நாட்டம், நடுங்க நாட்டம் முதலிய வகைகளால் உய்த்துணர்தலன்றி, நேரே மொழிய வாராத நிலைகளும், தலைவி கூற்றுக்களாக வருவனவற்றின் நுட்பங்களையும், குறிப்பறிதல் முதலிய துறைகளின் நயங்களையும் உணர்தல் ஈண்டுப் பயன் தரும்.

மறைவிட்டு இயம்புவார் - ஆனால் இங்குச் சங்கிலி அம்மையார் அவ்வாறுள்ள பெண்ணியல்பின் நீங்கியவரோ ? எனின், அற்றன்று ; தமது வாழ்க்கையின் உள்ளுறையினையே மாறுபடுத்தத்தக்க கேடு வரும்போது உண்மையை வெளிப்படக் கூறும் நிலை யிஃது ஆதலானும், கேட்பவர் தாயும் தந்தையுமே யாதலானும் இஃது தொக்கு மென்பது ; இவரது பெண்தன்மையின் சிறந்த பண்புகளை மேல்வரும் வரலாற்றின் பல பகுதிகளிலும் கண்டு கொள்க; " அவர்தாம் திருவாரூரின்கண்மகிழ்ந் துறைவது " (புரா.242), " பாங்கியர்க்கு மொழிய" (டி.254), " எதிர் விளம்பார் ஒன்றியநா ணொடும்மடவா ருடனொதுங்கி உட்புகுந்தார் " (டி.256) ; " பாவியே னிதுகண்டேன் " (டி. 261) என்பன முதலியவை காண்க.

இன்றேன்...இசையாது - வேறெவனுக்கும் ஏற்கும்படி மணமுடித்துக் கொடுத்தல் என் தன்மைக்குப் பொருந்தாது என்பதாம் ; இதனை மணமுடித்தல் என்னாது " நீர் மொழிந்தது " என்று கூறிய நிலை, பெண்ணியல்பாகிய நாணின் பகுதியாதலன்றியும் வேறொருவனின் மணம் என்றதனை வாயாலுஞ் சொல்லலாகாது என்ற கற்பின் பகுதியுமாம்.

ஒருவர்க் குரியேன்-இது இசையாது என்றதற்குக் காரணம் கூறியவாறு ; முன்னமே உரியேனாய் விட்டமையால் இசையாது என்றபடி ; ஒருவர் - ஒப்பற்றவர் என்ற குறிப்புமாம்.

அருள் செய்தார் ஒருவர்க்கு உரியேன் - எனது உரிமை நாயகர் முன்னமே சிவபெருமானால் அருளிச் செய்யப் பட்டுள்ளார் என்றது செய்தார் என்ற இறந்த காலக் கூற்றின் குறிப்பு.

இனிமேல்...செல்வன் - இனிமேல், அத்திருமணம் கூடும் வரையில் திருவொற்றியூரில் அணைந்து அருள்வழியே இருந்து அருள் வழியே அதனைப் பெறுவேன் என்பதாம். யான் - உரியேன் என்றும், (ஆதலின்), யான் செல்வேன் என்றும் இருவழியும் காரணப் பொருள்படக் கூட்டுக.

என - என்று சொல்ல 213

3368. (வி - ரை) மாற்றம் - சொல் ; விடை ; தாம் எண்ணிய நிலையினின்று மாறிய தன்மை என்ற குறிப்பும் காண்க ; தமது சுற்றப்பாசத் தொடர்பாகிய தன்மையினின்று மாறும் பண்பு என்றதும் குறிப்பு. மேலும் மற்ற மாற்றம் என்பது காண்க.

அயர்வும் பயமும் அதிசயமும் - " இது என் பரிசுக்கு இசையாது " என்று தொடர்பறக் கூறியமையால் அயர்வும்; "ஒருவர்க்குரியேன்" என்றமையால் அதனை யறியாது நாம் சொன்னவை சிவாபராதமாதலின் பயமும் ; " இனித் திருவொற்றியூர் சேர்ந்து சிவனருளிற் செல்லேன் " என்றது கேட்க அதிசயமும் முறையே விளைந்தன.

மற்ற மாற்றம் மறைத்தொழுக - உலகினர்க்கு இவை விளங்கலாகாமையின் உலகறியாதபடி மறைத்து ஒழுகினர் ; அம்மையார் விரும்பியவாறு திருவொற்றியூரில் அவரை வைத்துப் பிரிய மனம் ஒருப்படாமையானும் மறைத் தொழுகினர் என்க.

பந்தம் நீடும்...ஒருவன் - பந்தம் - சுற்றத் தொடர்பு மட்டும் ; பந்தம் - பாசத் தொடர்பு என்ற குறிப்புமாம். நீடுதல் - பலவாற்றானும் நீண்டு செல்லுதல் ; குலத்து நிகராம் - குலப்பெருமையளவில் ஒப்புடையவன் ; முன்னர் " அருள் செய்தார் ஒருவர் " (3367) என்றதனுடன் இதனை ஒப்புநோக்கி வேற்றுமை கண்டு கொள்க.

பரிசறியான் - பரிசு - அம்மையாரின் பண்புகள். அவையாவன: "மரபில் வருஞ் செயலே யன்றித் தெய்வ நிகழ்தன்மை, பாரி-லேவரு-மதிசயிக்கும் பண்பும் (3363); குணமும் - மண்ணுளோர்க்கிசையும் படிவமன்றி மேற்பட்ட பரிசாம் பான்மையும் (3364); முன் (3364—3367) உரைத்த நிகழ்ச்சியும் முதலியவை. இவற்றுள், முன் கூறிய நிகழ்ச்சியினை உலகறியாது மறைத்து ஒழுகினர் பெற்றோராதலின் அதனைப் பிறர் அறியாமை இயல்பேயெனினும், அதன் முன்னர்க்கூறிய பண்புகளும் பரிசும் உலகறியக் கிடந்தமையால் இவனும் அறிந்து தன்தகைமையேலாமை தெரிந்து அதனிற் கருத்துச் செலுத்தாது ஒதுங்க வேண்டியவன் எண்ணாது கருமந் துணிந் தமையின் அறியான் என்ற இக் குறிப்புப்படக் கூறினர் ; அம்மையார் பரிசேயன்றித் தன்பரிசுமறியான் என்பதும் குறிக்கப் பரிசு என்று பொதுமையிற் கூறினர் ; அறியாது துணிந்த இச்செயல் தன் உயிருக்கே யன்றித், தன்னேவல் வழிச்சென்றோர் உயிர்க்கும் கேடாய் விளையத்தக்க பரிசும் அறியான் என்ற குறிப்புமாம்.

சிந்தை விரும்பி மகட் பேச விடுத்தான் - மகட்பேச - மகளை மணம் பேச; சிந்தை விரும்பி - மகட்பெற்றோரிசைவு பெறும் வரை சிந்தையில் வைத்து விருப்பம் செலுத்துதல் மரபன்றென்பது குறிப்பு. விடுத்தான் - அம்மையாரின் பெற்றோரிடத்துச் சிலரைவிடுத்தான் என்று விரித்துக் கொள்க; விடுத்தார் என்பது பாடமாயின் விடுக்கப்பட்டாராகிய என்க. அவனது ஊரும் பேரும் முதலியவை கூற வேண்டாமையின் ஆசிரியர் கூறாது விடுத்தனர்; ஒருவன் பரிசறியான் என்ற இலேசானும் அவை ஈண்டு வேண்டத் தகாதனவென்பதும் அறியவைத்தார்.

சிலரும் - அவ்வொருவனால் விடுக்கப்பட்ட அந்தச் சிலரும் என்க; ஒருவன் என்றமையால் அவன் உற்றார் பிறரெவரையும் உசாவினவனன்று என்பதும்; சிலர்என்றமையால் மூதறிவோர் பலரது சார்பின்று என்பதும் குறிப்பு.

சென்று இசைத்தார் - தந்தையார்பாற்சென்று தாம் வந்த செய்தியை இசைத்தார் என்று விரிக்க.

சிந்தை மகிழ்ந்து—என்பதும் பாடம் 214

3369. தாதை யாரு மதுகேட்டுத் தன்மை விளம்பத் தகாமையினால்
ஏத மெய்தா வகைமொழிந்து போக்க, வவராங் கெய்தாமுன்
தீதங் கிழைத்தே யிறந்தான்போற் செல்ல விடுத்தா ருடன்சென்றான்;
மாத ராரைப் பெற்றார்மற் றதனைக் கேட்டு மனமருண்டார். உகரு

(இ - ள்) தாதையாரும்...போக்க - சங்கிலியம்மையாரது தந்தையாரும் அதனைக் கேட்டு இதுபற்றிய இங்கு நிகழ்ந்த முன்கூறிய தன்மைகளினால் இசையாமை வெளிப்படச் சொல்லக்கூடாமையினாலே, வந்த அவருக்கு மன வருத்த முதலிய சங்கடங்கள் வாராத வகையினாலே வேறு மொழிந்து அவர்களைச் செல்ல விடுக்க; அவர் ஆங்கு எய்தாமுன் - அவர்கள் தம்மைவிடுத்த அவனிடத்தே சென்று சேர்வதற்கு முன்னே; தீது அங்கு இழைத்தே யிறந்தான் போல் - அங்குத்தான் ஒரு பெருந்தீங்கு புரிந்ததனால் இறந்து பட்டவன் போல; செல்லவிடுத்தாருடன் சென்றான் - (அவன்) தான் செல்லும்படி விடுத்த அவர்களுடனே இறந்தொழிந்தான்; மாதராரை...மனமருண்டார் - அம்மையாரைப் பெற்றோர்களும் மற்ற அதனைக் கேட்டு மனம் மருட்சியடைந்தனர்.

(வி - ரை) தன்மை - இங்குச் சங்கிலியார்பால் உற்ற தன்மைகள்; முன் கூறிய பண்பும் குணமும் நிகழ்ச்சிகளும் ஆகியவற்றின் தொகுதி.

விளம்பத் தகாமை - மாற்றம் மறைத்தொழுகிய (3368) காரணத்தாற் சொல்லக்கூடாமை.

ஏதம் எய்தாவகை மொழிந்து போக்க - இஃது உலகியல் வழக்கு நெறி; தீமைபயக்காதவாறு உண்மையை ஒருவாறு மறைத்துப் பிறிது மொழியால் மறுத்தல்; ஏதம் - உறவினருள் நேரும் பிணக்கும் அதனால் வரக்கூடிய கேடுகளும்; இது பொய்ம்மை நெறியாகாதோ எனின் தீமைபயவாது குற்றமற்ற நன்மைபயத்தல் கருத்தாகலின் ஆகாதென்பது; "பொய்ம்மையும் வாய்மை யிடத்த, புரைதீர்ந்த, நன்மை பயக்கு மெனின்" (குறள்); அப்பூதி நாயனார் "இப்போ திங்கவ னுதவான்" என்றது போல வருவன இறை அன்புபற்றி நிகழ்வன இக்குறிப்புடையன; உலகியல் நல்வாழ்க்கை நெறியில் ஒப்புரவுபற்றி இவ்வழக்கு மிகவும் கையாளத்தக்கது; "ஈகை யரிதெனினு மின்சொலினு நல்கூர்தல், ஓகோ கொடிது கொடிதம்மா!" என்று இதனையே விரித்தல் காண்க.

அவர்...சென்றான் - விடுத்தார் தம்மை விடுத்தானிடம் சென்று சேர்ந்து சொல்வதன்முன் அவன் அவருடனே இறந்து பட்டான். அவர்கள் அங்குச் சேர்வதில்லையாதலின் எய்துமுன் என்னாது எய்தாமுன் என்றார்.

ஆங்கு - விடுத்தானிடம் இவ்வாறன்றி எய்த உடனே இறந்தான் என விரைவுப் பொருளில் வந்தது ; மருந்து தின்னுமுன் நோய் தீர்ந்தது என்புழிப்போல - என்பர் ஆறுமுகத்தம்பிரானார்.

தீது அங்கு இழைத்தான் போல் - அங்கு - சங்கிலியார் திறத்து ; மிக்க தீது பட ஒரு செயல் இழைத்தாரே மரணத் தண்டனைக்குள்ளாகுவர் ; இங்கு அவன் மரணத்திற் குள்ளாயினமையால் தீதிழைத்ததன் பயனாக இறந்தான் என்னும்படி தோன்றிற்று என்பார் போல் என்றார் ; இழைத்தான் போல் - அவன் செயல் அங்குச் சாராமையானும், தீமை என்று அறியாமையானும் போல் என்றார் ; அறியாது உண்ணினும் நஞ்சு கொன்றே விடுமாதலின் தீமை இழைத்ததே போலப் பலன் தந்தது என்க.

செல்ல விடுத்தாருடன் சென்றான் - விடுத்தார் - விடுக்கப்பட்டார் ; தன்னால் விடுக்கப்பட்ட அச்சிலருடன் தானும் இறந்தான் ; சென்றான்-இங்கு இயமனூருக்குச் சென்றான் - இறந்தான் - என்ற பொருளில் வந்தது ; மங்கல வழக்கு ; எண்ணத் தகாததை எண்ணியதும், அதனை ஏவல் வழி உடன்பட்டுச் சொல்லியதும் ஒன்று போலவே குற்றங்களாம்; ஈண்டுச் சிவாபராதமும் கற்புநிலை பற்றிய அபராதமும்கூடி உயிர் நீக்கும் தண்டத்திற் குள்ளாக்கின ; பேசத்தகா வார்த்தை, உய்யவேண்டு நினைவுடையா ருரையார் "என மேற்கூறுதல் குறிக்க.

மாதரார் - சங்கிலியம்மையார்.

உடன் சென்றார்—என்பதும் பாடம். 215

3370. "தைய லார்சங் கிலியார்தந் திறத்துப் பேசத் தகாவார்த்தை
உய்ய வேண்டு நினைவுடையா ருரையா" ரென்றங் குலகறியச்
செய்த விதிபோ லிதுநிகழச், சிறந்தார்க் குள்ள படிசெப்பி,
நையு முள்ளத் துடனஞ்சி, நங்கை செயலே யுடன்படுவார், உகசு

3371. "அணங்கே யாகு மிவள்செய்கை யறிந்தோர் பேச வஞ்சுவரால்;
வணங்கு மீசர் திறமன்றி வார்த்தை யறியாள் மற்றொன்றுங் ;
குணங்க ளிவையா ; மினியிவடான் குறித்தபடியே யொற்றிநகர்ப்
பணங்கொ ளரவச் சடையார்தம் பாற்கொண் டணைவோ"
மெனப்பகர்வார், உகஎ

3372. பண்ணார் மொழிச்சங் கிலியாரை நோக்கிப் பயந்தா ரொடுங்கிளைஞர்
"தெண்ணீர் முடியார் திருவொற்றி யூரிற் சேர்ந்து செல்கதியுங்
கண்ணார் நுதலார் திருவருளா லாகக் கன்னி மாடத்துத்
தண்ணார் தடஞ்சூ ழுந்நகரிற் றங்கிப் புரிவீர் தவ" மென்று, உகஅ

3373. பெற்ற தாதை சுற்றத்தார் பிறைசேர் முடியார் விதியாலே
மற்றுச் செயலொன் றறியாது, மங்கை யார்சங் கிலியார்தாஞ்
சொற்ற வண்ணஞ் செயத்துணிந்து, துதைந்த செல்வத் தொடும்,
புரங்கள்
செற்ற சிலையார் திருவொற்றி யூரிற் கொண்டு சென்றணைந்தார்.

3370. (இ - ள்) தையலார்...என்று - தையனல்லாராகிய சங்கிலியாரைப் பற்றிப் பேசத்தகாத வார்த்தையைச் சாவாமல் உய்ந்திருக்க வேண்டுமென்னும் எண்ணமுடையவர்கள் பேசமாட்டார்கள் என்று ; அங்கு உலகறிய - அங்கு உலகர் அறியும்படி ; செய்த...நிகழ - இறைவர் அமைத்த விதிபோல இது நிகழ்ந்ததாக ; சிறந்தார்க்கு...செப்பி - தங்குலத்திற் பெரியோர்களுக்கு நிகழ்ந்தனவற்றை உள்ளபடியே சொல்லி ; நையும்...உடன்படுவார் - வருந்திய உள்ளத்துடனே அச்சமடைந்து நங்கை சங்கிலியார் உரைத்த செயலினையே உடன்பட்டுச் செய்வாராகி, உகக

3371. (இ - ள்) அணங்கே...அஞ்சுவாராய் - தெய்வத் தன்மையே யாகும் இவளது செய்கையினை உணர்வுடைய மக்கள் பேசவும் பயப்படுவர் ; வணங்கும்...மற்றொன்றும் - தம்மால் வணங்கப்படும் சிவபெருமானது திறங்களைப் பற்றிய பேச்சுக்களையன்றி வேறு வார்த்தைகளைப் பேசுதலை இவர் அறியார் ; குணங்கள் இவை தாம் - இவரது குணங்கள் இத்தன்மையன ; இனி, இவள்தான்... அணைவோம் எனப் பகர்வார் - இனி, இவர் தாமே குறிக்கொண்டு சொல்லியபடியே திருவொற்றியூரில் பணத்தையுடைய பாம்பினை முடித்த முடியாராகிய இறைவர்பாலே கொண்டு செல்வோம் என்று உட்கொண்டு சொல்வாராய், உகஎ

3372. (இ - ள்) பயந்தாரொடும் கிளைஞர் - பெற்றவர்களோடும் சுற்றத்தார்களும் கூடி ; பண்ணார் மொழிச் சங்கிலியாரை நோக்கி - பண்ணீர்மை நிறைந்த மொழியினையுடைய சங்கிலியாரைப் பார்த்து ; தெண்ணீர்...சேர்ந்து - தெளிந்த நீரினை முடித்த இறைவரது திருவொற்றியூரினை அணைந்து ; செல்கதியும்...ஆக - இனிமேற் செல்கதியும் கண்பொருந்திய திருநுதலினையுடைய பெருமானது திருவருளே யாக ; கன்னிமாடத்து...தவமென்று - குளிர்ந்த தடங்கள் சூழ்ந்த அந்நகரிலே கன்னிமாடத்திலே தங்கியிருந்து தவம் புரிவீர் என்று கூறி, உகஅ

3373. (இ - ள்) பெற்ற தாதை...விதியாலே - ஈன்ற தாதையாரும் சுற்றத்தார்களும் பிறையைத் தரித்த முடியினையுடைய சிவபெருமான் விதித்ததிருவருளினாலே ; மற்றுச் செயலொன்றறியாது - வேறு செயலொன்றினையும் அறியாதவர்களாய் ; மங்கை...துணிந்து - மங்கையார் சங்கிலியார்தாம் சொன்ன வண்ணமே செய்யத் துணிவு கொண்டு ; துதைந்த...சென்றணைந்தார் - திரண்ட செல்வமுடனே கொண்டு, திரிபுரங்களை அழித்த வில்லாளியாராகிய சிவபெருமானது திருவொற்றியூரிலே அவரையும் உடன் அழைத்துக் கொண்டு சென்று அணைந்தார்கள் உகக

இந்நான்கு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3370. (வி - ரை) "தையலார்...உரையார்" என்று - இது உலகர் அறிந்துய்ந்து செல்லத்தக்கதொரு விளக்கமாகிய உண்மை என்றபடி : உய்ய வேண்டும் நினைவு உடையார்-உலகில் உயிருடன் இருக்க வேண்டும் என்றஎண்ணமுடையவர்கள்; உய்தல் -இங்குப் பிழைத்து உயிருடனிருத்தல் என்ற பொருளில் வந்தது ; இதனைப் உடன் பேசினால் அதன் பயனாக இறப்போம் என்பதுறுதியாதலின், அவ்வார்த்தை பேசாமலிருந்து இன்னும் சிலகாலம் உயிர்வாழ்வோம் என்று முடிவு கண்டு ; நினைவுடையார் - தகாத வார்த்தை - உரையார் - என்க.

அந்த உலகு அறியச் செய்த விதிபோல் - உலகு - உலகர் ; அறிவுறுத்திய விதி வாக்கியமாகிய உண்மை.

இது நிகழ - இது - இந்நிகழ்ச்சி ; மகட் பேசச் சிலரை விடுத்தவன் தானும் அச்சிலரும் ஒருங்கிறத்தல்.

அறியச் செய்த விதிபோல் இது நிகழ - இது நிகழ்ந்தது அவ்வவர் கன்மானு பவமேயன்றி உலகை அறிவுறுத்தற் பொருட்டன்று ; ஆனால் அதனால் உலகறிவுறுத் தப்பட்டது ; ஆதலின் அறியச் செய்த விதி போல நிகழ என்றார்.

சிறந்தார் - குல மரபிற் சிறந்த பெருமக்களும் அறிவின் முதியோர்களும் ; அந் நாளில் இவ்வாறு சிறந்தோர்களின் வழி உலகம் நடந்ததாதலின் அவர்க்குச் சொல் லின் அவரால் உலகம் வழிப்படும் என்பது கருதி அவர்க்குச் செப்பினார் என்க ; அன்றியும் குலமரபிற் சிறந்தோர்க்கு அந்நாளில் இத்தகைய மணப்பேச்சு முதலிய மரபுச் செயல்களை முறைபடுத்தத் தக்க சில உரிமைகளுமிருந்தன. உள்ளபடி - இதுகாறும் நிகழ்ந்தவற்றை எல்லாம் உள்ளவாறு ; முன்னர் "மறைத்தொழுக' (3368) என்றும், "விளம்பத் தகாமையினால் ஏதமெய்தா வகைமொழிந்து" (3369) என்றும் கூறியபடிக்கன்றி உள்ளதனை உள்ளபடியே செப்பினார் என்க.

நங்கை செயலே - முன்னர் நிகழ்ச்சிகளில் தம் எண்ணப்படி செய்தனர் : இங்கு அவ்வாறன்றி நங்கை செயலே உடன்பட்டனர் ; ஏகாரம் பிரிநிலை ; தேற்றமுமாம். நங்கை - பெண்ணிற் சிறந்தாரைக் கூறும் வழக்கு.

உடன் படுவார்-முற்றெச்சம் ; உடன்படுவார் - (3370) பகர்வார் (3371) என்று (3372) சென்றணைந்தார் (3373) என மேல்வரும் பாட்டுக்களுடன் முடிக்க.

செய்த விதுபோலது—உள்ளத்தினராகி—என்பனவும் பாடங்கள். 216

3371. (வி - ரை) அணங்கே - தெய்வமே ; ஏகாரம் தேற்றம். மானுட மன்றி அணங்கே என்றலுமாம்; இப்பொருளில் ஏகாரம் பிரிநிலை.

அறிந்தோர் இவள் செய்கை பேச அஞ்சுவர் - அறிந்தோர் - அவ்வாறுள்ள இவரது தெய்வத் தன்மையினை அறிந்தவர்கள் ; பேச - பேசவும் ; உம்மை தொக் கது ; பேச அஞ்சுதலாவது - பேசவொண்ணாப் பெருமை யாதலின் பேசினால் தவறு நேர்ந்து தீமைபயக்குமென்று கருதி அச்சங் கொள்ளுதல்.

ஈசர் திறமன்றி மற்றென்றும் வார்த்தை அறியாள் - என்க; "வண்டல் பயில்வன வெல்லாம், - அண்டர் பிரான் றிருவார்த்தை யணையவரு வனபயின்று" (1721).

குணங்கள் இவை - அறிந்தோர் இவளைப்பற்றி பேச அஞ்சுவர் ; இவள் பேசு வது ஈசர்திறம் ; இவையே இவளது குணங்களாம் ; ஆதலின் இவள் குறித்தபடியே கொண்டணைவோம் என்று தம் துணிபுக்குக் காரணங் கண்டவாறு.

குறித்தபடி - குறி வைத்து கூறியபடி ; குறித்த திறம் (3367) முன் உரைத்தவாறு.

என - என்று துணிந்து ; இப்பாட்டிற் கூறியவை தாதையரும் கிளைஞரும் துணிபு கொள்வதற் காதரவாய் எழுந்த குறிப்புக்கள்.

வணங்க—வணங்கி—என்பனவும் பாடங்கள். 217

3372. (வி - ரை) பயந்தார் பெற்றோர். பயத்தல்- ஈனுதல்; மகவுபெறுதல் ; பயந்தார் - அஞ்சினார் என்ற பொருளும் படநின்றது ; "நையுமுள்ளத் துட னஞ்சி" (3370)

செல்கதியும் திருவருளால் (அதுவே) ஆக - என்க.

செல்கதியும் - பெறவேண்டிய உறுதிப்பொருளும் ; வீடு பேறு ; மக்கள் கருதி யடையச் செல்லும் முடிந்த நிலையதுவே யாதலின் வீடுபேறே கதி எனப்பட்டது. "செல்கதி முன்னளிப்பார்" (1608).

கதியும் - மணமகனை யடையச் சாரும் நிலையே யன்றி, உயிர்க்கு உறுதியாகச் சாரும் நிலையும் என உம்மை இறந்தது தழுவிற்று. செல்கதியும் திருவருளாலாக

என்றது " அருள் செய்தா ரொருவர்க் குரியேன் " (3367) என்றமையால் நாயகனைப் பெறுதல் பெறப்பட்டது ; அவ்வருளே மேல் தொடர்ந்து அதுவாறாகவே " செல்கதி"க்கு வழியாக உதவ என்றதாம் ; இது பெற்றாரும் சுற்றமும் கொண்ட விருப்பம் ; " பந்தமு மாய்வீடு மாயினார்க்கு " (திருவா - பொற். 20) " பந்தமும் வீடும் பரப்புகின்றீர் " (தேவா).

செல்கதியும் அதுவாறகவே தங்கித் தவம் புரிவீர் என்க. அங்கு இறைவர் இக பர மிரண்டும் உறுதி பயப்பர் ஆதலின் தவம் செய்து இகத்தின் நன்மையும் இறுதியில் வீடும் பெறுவீராக என்றபடி.

என்று - என்று கூறி ; இது சங்கிலியாரை நோக்கிப் பயந்தாருடன் கிளைஞர் கூறியது.

திருவருளாகி—என்பதும் பாடம். 218

3373. (வி - ரை) விதியாலே ..அறியாது - சங்கிலியார் குறிப்பின்படிக்குச் செயல் செய்வதன்றி வேறொன்றினையும் இவர்கள் அறியமுடியாமற் செய்தது திருவருளின் நியதி - விதி - என்பதாம் ; அவ்விதியாவது மற்றுச் செயல் ஒன்றினையும் அறியாது மறைத்தது இறைவரது திரோதான சத்தியாதலின் முடியார் விதியாலே அறியாது என்றார்.

அறியாது...துணிந்து - அறியாமையால் துணிந்து என்று காரணப்பொருளில் நின்றது.

சோற்ற வண்ணம் - முன் (3367) உரைக்கப்பட்டது.

துதைந்த செல்வத்தோடும் - அவர் திருவொற்றியில் தங்கியிருக்கத் தக்க அமைப்புக்களும், வசதிகளும் அளித்தற்பொருட்டுத் திரண்ட செல்வம் கொண்டு சென்றனர். செல்வத்தோடும் - (அவரைக்) கொண்டு என்க.

கொண்டு - சொற்ற அந்தச் சங்கிலியாரையும் அழைத்துக்கொண்டு. 219

3374. சென்னி வளர்வெண் பிறை யணிந்த சிவனார் கோயி லுட்புகுந்து
துன்னுஞ் சுற்றத் தொடும்பணிந்து தொல்லைப் பதியோ ரிசைவினாற்
கன்னி மாட மருங்கமைத்துக், கடிசேர் முறைமைக் காப்பியற்றி,
மன்னுஞ் செல்வந் தகவகுத்துத் தந்தை யார்வந் தடிவணங்கி, உஉ0

3375. " யாங்க ளுமக்குப் பணிசெய்ய வீசர்க் கேற்ற பணிவிரும்பி
ஓங்கு கன்னி மாடத்தி லுறைகின் றீ"ரென் றுரைக்கின்றார்
தாங்கற் கரிய கண்கணீர்த் தாரை பொழுகத் தரியாதே
ஏங்கு சுற்றத் தோடுமிறைஞ்சிப் போனா ரெயில்சூழ் தம்பதியில்.

3374. (இ - ள்) சென்னி...பணிந்து - தலையிலே வளர்கின்ற வெள்ளைப் பிறையினைச் சூடிய சிவபெருமானாரது திருக்கோயிலினுள்ளே புகுந்து நெருங்கிய சுற்றத்தாரொடும் கூடி வணங்கி ; தொல்லை...அமைத்து - பழமையாகிய அந்தப் பதியவர்களுக்கு அறிவித்து அவர்களுடைய இசைவினாலே கோயிலின் பக்கத்திலே கன்னிமாடம் அமைத்து ; கடிசேர்...வகுத்து - காவல் பொருந்தும் முறைப்படி காப்புக்களையும் செய்து அதற்குமேல் ஆதரவுக்கு உரித்தாக நிலைபெற்ற செல்வங்களையும் தக்கபடி வகுத்து வைத்து ; தந்தையார்...வணங்கி - தாதையார் வந்து (சங்கிலியாரை) அடிவணங்கி,

**3375.** (இ - ள்) யாங்கள்...உரைக்கின்றீர் - நாங்கள் உமக்கு வேண்டிய பணிகளைச் செய்து கொண்டிருக்க, நீர் இறைவருக்கேற்ற பணி செய்தலையே விரும்பி ஒங்கும் கன்னிமாடத்தில் தங்குகின்றீர் " என்று சொல்கின்றாராகி ; தாங்கற்கரிய... தரியாதே - உள் அடக்குதற்கரியதாகிய கண்ணீர்த்தாரை கண்களினின்றும் பெருகி ஒழுகியிடத் தரிக்கலாற்றாதவராகி ; ஏங்கு...பதியில் - ஏங்குகின்ற சுற்றத்தாரோடும் கூடிச் சங்கிலியாரை வணங்கி மதில் சூழ்ந்த தமது பதியாகிய ஞாயிற்றினிடத்துப் போயினர். உஉக

இந்த இரண்டுபாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

**3374.** (வி - ரை) தோல்லைப் பதியோர் இசைவினால் - பதியோர் - ஊரவர் ; தொண்டைநாட்டில், கோட்டம், நாடு, நத்தம், ஊர் முதலிய பிரிவுகள் உண்டு ; அவ்வவற்றிலும், முற்றும் ஆணை செலுத்தும் பேரரசின் கீழே தம்மாட்சி முறையாக அவ்வவற்றையும் தனியாட்சிபுரியும் ஆட்சி முறைகளும் உண்டு ; ஒவ்வோர் ஊரிலும் ஊர்த்தலைவர் - ஊர்ச்சபையோரும் இதன் பொருட்டுத்தமக்குள்ளே நியமிக்கப்பெற்று ஊராட்சிபுரிந்து வந்தார்கள் ; அவ்வவ்வூரவரும் இனிதுண்டு தீங்கின்றி உலகியல் நல்வாழ்வு வாழும் நிலையில் ஊர்க்காவல் அமைத்து நடத்த வேண்டுவது அவர்களது பொறுப்பு. அவர்கள் நாட்டாண்மை ஊரார் முதலிய பெயர்களாலறியப் படுவர் ; பதியோரின் தேர்தல் முறை உரிமை முதலியவற்றை உத்தரமேரூர்ச் சாசனத்தாலும், பழங் கல்வெட்டுக்களாலும், பழஞ்சரிதங்களாலும், அத்தாபனங்களை நினைவூட்டி நின்று இந்நாளிலும் அரைகுறையாய் உயிரற்று அங்கங்கு வழங்கக் காணும் தொண்டைநாட்டு வழக்குக்களானும் அறிக ; பதியோர் என்பது ஊர்க்காவல் மேற்கொண்ட கிராமச்சமுதாயம் என்னும் ஊர்ச்சபையோர் என்ற பொருள் தந்து நின்றது ; வேற்றூரிலிருந்து நிலைக்குடியாக இவர்கள் இங்கு வந்து தங்குதலி னாலும், கோயில் மருங்கில் (பொதுஇடத்தில்) கன்னிமாடம் அமைப்பதனாலும், உலகியலில் ஊரவரின் பாதுகாவல் பெறவேண்டிய நிலைமையில் உள்ளதனாலும் பதியோர் இசைவினால் கன்னிமாடம் அமைத்தல் வேண்டப்பட்டதென்க. ஊரவரின் நல்லொழுக்க வாழ்க்கைக்குரிய இத்திட்டங்கள் இந்நாளில் சுதந்தரம் என்ற பெயரால் மறைந்து கேடுபட்டு வருதல் வருந்தத் தக்கது.

**கடிசேர் முறைமைக் காப்பு**-கடி - காவல் ; இது மாடத்தின் மதில் முதலியன வாகிப், பிறர்பார்வை செல்லாத அமைப்புக்கள்; முறைமைக் காப்பு-சேடியர், ஏவற் பெண்டிர் முதலிய உயிருள்ள காவல்முறை ; முறைமை - இக்காவலாளர் பெண்டிர் களேயாக நியமிக்கும் நகரப் பொதுக்காவல் அமைதி ; பதியோர் இசைவு என்றது பொதுவாக நாட்டின் அரசாங்கக் காவலாம் ; இங்குக் கூறியது சிறப்பாக அவ்வவர் தத்தமக்கேற்பத் தாம் தாம் வகுத்துக்கொள்ள வேண்டிய சிறப்புக் காவலமைதி ; வாழும் மாடம்மட்டுமன்றித், திருப்பணியும் திரைசூழ் ஒருபாலாவது எனவரும் மேற் பாட்டுப் பார்க்க.

**மன்னும் செல்வம் தகவதுத்து** - அம்மையாரது வாழ்வும், ஏவலாளர் முதலி யோரின் வாழ்வும் ஒழுங்குபட நடத்தற்கு வேண்டப்படும் செல்வம் ; இவை உணவுப்பண்டங்களும் உடை முதலியனவும் தவத்திற்குரிய பொருள்களும், பண்டங் களாகவும் பண்டமாற்றாற் பெறுவனவாகவும் விலைக்குப் பெறுவனவாகவும் வருவன; மன்னும் - இவற்றை இடையீடின்றிப் பெறுதற்குரிய ; தகவதுத்தலாவது அளவி னாலும், பெறவரும் நியமம் எளிமை முதலியவாற்றாலும் கன்னிமாடத்தின் செயல் முறைக்குத் தக்கவாறு அமைத்தல்,

தந்தையார் வந்து அடிவணங்கி - வந்து - கன்னி மாடத்துக்கு வந்து; அடி - அம்மையாரது திருவடிகளை; ஈண்டுப் பெற்ற தாதையார் ஐங்குரவருள் ஒருவராதலின் தமது மகளாரை அடி வணங்கல் தகுதியாமோ? எனின், தகுதியே என்க; ஈண்டு, அம்மையார் "இறைவர் அருள் செய்தார் ஒருவர்க்குரியேன்; இனிச் சென்று சிவனாருளிற் செல்வன்" என்று துணிந்து, பிறந்த இல்லின் தொடர்புகளை நீத்து வந்தாராதலின் தாதை மகளார் என்ற முறைமை யற்றுவிட்டது; மேல் சிவனருள் பெற்ற அடியார்க்குரியவராயும், உலக வாழ்வுவிட்டுச் சிவன் பணியே செய்யும் தவம் பூண்டவராயும் நின்றமையால் பணியத்தக்கவ ராயினர் என்பதாம்; இது பற்றியே, முன்னர் "இவளுக் கென்னோ வுற்றது? வந்த துணக்கிங்கென்?" (3366) என்று ஒருமையிற் கூறிய நிலையும், ஈண்டு, மேல், "உமக்கு"—"உறைகின்றீர்" (3375) என்று கூறும் சிறப்புப்பன்மையும் இக்கருத்தினை உணர்த்தும் கவிநலமும் கண்டுகொள்க.

கன்னிமாடம் - கன்னிப் பருவத்துள்ள பெண்கள் தவநிலை ஒழுக்கத்துடன் தனித்து வாழும் இடங்கள். 220

3375. (வி - ரை) யாங்கள்...உறைகின்றீர் - இது தாதையார் அம்மையாரிடம் விடைபெற்றுப் பிரியும்போது பிரிவாற்றா துரைத்த மொழிகள். இனி எமக்குள் தாதையார் மகளார் என்ற உறவு நிலை நீங்கியது; நாங்கள் உமது பணியாளராக நீர் இறைவர் பணியாளராக உள்ள தொடர்பு ஒன்றே உளதாக உலகப்பற்று விட்டது என்பதாம். கையறுநிலைத் துன்ப மொழிகள் போன்ற தன்மையும் மன வருத்தமும் காண உரைத்த கவிநலம் கண்டுகொள்க.

உரைக்கின்றார் - போனார் - துன்பமிகுதியினால் உரை முடிவு பெறாது பிரிந்து சென்றனர் என்பது குறிக்க உரைக்கின்றார், "தாங்கற்கரிய கண்கணீர்த் தாரை ஒழுகத் தரியாதே போனார் தம்பதியில்" என்று முடித்தருளினர்.

தாங்கற்கரிய...தரியாதே போனார் - பிரிவு தாங்க மாட்டா நிலைபற்றிக் கண்ணீர் பெருகியது; தரியாதே - பிரியவும் மாட்டாராய் நிற்கவும் மாட்டாராய்ப் போனார் என்றதாம்.

ஏங்கு சுற்றம் - தாதையாரின் நிலை அதுவாகச், சுற்றத்தார் பிரிவுநிலை ஏக்கம் என்றதாம்.

இறைஞ்சி - திருவருளை வணங்கி விடைபெற்று. 221

3376. காதல் புரிந்து தவம்புரியுங் கன்னி யாரங் கமர்கின்றார்
பூத நாதர் கோயிலினிற் காலந் தோறும் புக்கிறைஞ்சி
நீதி முறைமை வழுவாது தமக்கு நேர்ந்த பணிசெய்யச்
சீத மலர்ப்பூ மண்டபத்துத் திரைசூ ழொருபாற் சென்றிருந்து, உஉஉ

3377. பண்டு கயிலைத் திருமலையிற் செய்யும் பணியின் பான்மைமனங்
கொண்ட உணர்வு தலைநிற்பக் குலவு மலர்மென் கொடியனையார்
வண்டு மருவுந் திருமலர்மென் மாலை காலங் களுக்கேற்ப
அண்டர் பெருமான் முடிச்சாத்த வமைத்து வணங்கி யமருநாள்,

3378. அந்தி வண்ணத் தொருவர்திரு வருளால் வந்த வாரூரர்
கந்த மாலைச் சங்கிலியார் தம்மைக் காதன் மணம்புணர
வந்த பருவ மாதலால் வகுத்த தன்மை வழுவாத
முந்தை விதியால் வந்தொருநாள் முதல்வர் கோயி லுட்புகுந்தார்.

3376. (இ - ள்) காதல்...அமர்கின்றார் - பேரன்புடன் இடைவிடாது நினைந்து தவம் செய்யும் கன்னியாராகிய சங்கிலியம்மையார் அங்குக் கன்னிமாடத்தில் விரும்பித் தங்குவாராய்; பூதநாதர்...இறைஞ்சி - பூதநாதராகிய இறைவரது திருக்கோயிலில் வழிபாட்டுக்குரிய காலங்களிலெல்லாம் புக்கு வணங்கி; நீதிபணி... செய்ய - அமைத்த நீதி மரபு முறைமை வழுவாமல் தமக்கு நேர்ந்த திருப்பணியினைச் செய்யும் பொருட்டு; சீத...சென்றிருந்து - குளிர்ச்சியுடைய மலர்கள் நிறைந்த திருப்பூ மண்டபத்துள் சுற்றிலும் திரையாற் சூழப்பட்ட ஒரு பக்கத்தில் சென்று சேர்ந்து. உஉஉ

3377. (இ - ள்) பண்டு...தலைநிற்ப - முந்நாளில் கயிலைத் திருமலையிற் செய்யும் திருப்பணியின் தன்மையே தொடர்ந்து மனத்துட் கொண்ட முன்னை யுணர்ச்சி தம்முள் ஓங்கி நிற்க; குலவுமலர் மென் கொடியனையார் - விளக்கமுடைய மலர்கள் பூத்த கொடி போன்ற சங்கிலியார்; வண்டு...அமரும்நாள் - வண்டுகள் மொய்த்துப் பொருந்தும் திருமலர்களாலாகிய மெல்லிய மாலைகளைக் காலங்களுக்கு ஏற்றபடி தேவதேவரது திருமுடியிலே சாத்துதற்கு அமைத்துக் கொடுத்து விரும்பி வீற்றிருக்கும் நாளிலே; உஉ௩

3378. (இ - ள்) அந்தி...ஆரூரர் - அந்திபோலும் வண்ணமுடைய ஒருவராகிய இறைவரது திருவருளினாலே வந்த நம்பியாரூரர்; கந்தமாலை...ஆதலால் - மணமுடைய மாலையணிந்த சங்கிலியாரைக் காதல் மணத்தினாற்பொருந்த வந்த பருவம் இதுவாதலினால்; வகுத்த...விதியால் - இறைவர் வகுத்த தன்மையினின்று வழுவாத நியதியின்படி முந்தை விதியினாலே; வந்து...புகுந்தார் - ஒருநாள் தமது திருமாளிகையினின்றும் வந்து இறைவரது திருக்கோயிலினுள்ளே புகுந்தருளினர். உஉ௪

இம் மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3376. (வி - ரை) காதல் புரிந்து - காதலால் இடைவிடாது நினைந்து; புரிதல் - இடைவிடாது நினைத்தல்; விரும்புதல்; எப்போதும் சொல்லுதல் என்றலுமாம்; காதல் - பெருவிருப்பம்; அங்கு - கன்னிமாடத்தில்; சங்கிலியார் அங்கு அமருநாளில் செய்யும் செயல்கள் இரண்டுவகையின; அவை கன்னிமாடத்திலும் திருக்கோயிலிலும் செய்யப்படுவன; கன்னிமாடத்தில் செய்வது காதல் புரிந்து செய்யும் தவம்; இது சிவபூசை, தியானம், தோத்திரம் முதலாயின; கோயிலிற் செய்வது திருமாலைத்திருப்பணி; இவை இங்கு வேறுவேறாக வகுத்துக் காட்டப் படுதல் கண்டுகொள்க.

காலம் - வழிபாட்டுக்குரியனவாய்த் திருப்பள்ளியெழுச்சி முதல் திருப்பள்ளியறைக்காலம் வரையில் உள்ள காலங்கள்; காலந்தோறும் - புக்கு என்க; இக்காலங்களிலன்றி ஏனைக்காலங்களில் கன்னிமாடத்தில் அமர்ந்திருந்தனர் என்க.

நீதிமுறைமை - செய்ய - தமது மரபுக்கும் பருவத்துக்கும் தன்மை நிலைக்கும் நியமித்த முறை தவறாதபடி தமக்குக் கூடிய பணியினைச் செய்யும் பொருட்டு; சிவபெருமான் பணிகளும் அவ்வவர் நீதிமுறைப்படி இயற்றல் வேண்டுமென்க; "மறந்துமய னினைவின்றி வருபிறப்பின் வழிவந்த, அறம்புரிகொள் கையாராயே யடித்தொண்டி னெறிநின்றார்" (1052) என்றதும், ஆண்டுரைத்தவையும் பார்க்க; அவ்வாறே திருநாளைப்போவார் சென்ற அவ்வழியேநின்ற திருநீலகண்டர், கலியர், அதிபத்தர் முதலாகிய நாயன்மார்களும் செய்த திருப்பணி முறைகளின் தகுதிகளை

உய்த்துணர்ந்து கொள்க. செய்ய - செய்யும் பொருட்டு ; காரணப்பொருளில் வந்த வினையெச்சம்.

செய்யச் - சென்றிருந்து - என்று கூட்டுக.

சேர்ந்திருந்து—என்பதும் பாடம். 222

3377. (வி - ரை) பண்டு...பான்மை - திருமலைச் சருக்கத்துட்கூறிய வரலாறுகள் பார்க்க. "எமை யாளுடை நாயகி, கொங்கு சேர்குழற் காமலர் கொய்திட" (33) என்றது காண்க.

பான்மை...உணர்வு - சங்கிலியார், திரு அருளாலே முன்னையுணர்வுடன் வந்துதித்து வளர்ந்தனர் என்பது முன் (3362) உரைக்கப்பட்டது ; அவ்வுணர்வின் றொடர்ச்சியினாலே மனம் அதனை உட்கொண்டு விருப்பமீதூர்ந்தது ; தலைநிற்றல் - சிறத்தல்; முன்னிற்றல்.

மலர்மென் கொடியனையார் - மலர்களே அவயவங்களாகப் பூத்த கொடிபோன்றவர்; "திருவளர்தாமரை...தெய்வ, மருவளர் மாலையோர் வல்லியி னொல்கி" (திருக்கோவை-1) என்றது காண்க.

வண்டு மருவும் - புதிதின் மலரும் பூக்களாதலின் வண்டுகள் சூழ்ந்திருந்தன என்பது ; "வம்பலர் நறுந்தொடையல் வண்டொடு தொடுப்பார்" (1936) ; இவ்வாறு வண்டுகள் மொய்க்கப் பூமாலை தொடுத்தல் இன்றும் திருவாலவாயில் மீனாட்சி யம்மையார் சந்நிதியில் திருப்பூமண்டபத்தில் நேரே காணத் தக்கது.

மலர் மென்மாலை காலங்களுக்கேற்பச் - சாத்த - வைகறை முதலிய பூசைக் காலங்களில் அவ்வக்காலத்துக் கேற்றபடி மலர்கள் சாத்தும் விதிபற்றிப் புட்பவிதி முதலியவற்றுட் காண்க. சிவாகமங்கள் படிக்க. "அமைத்துச் சாத்துங்காலை" (560) ; "ஆங்கப் பணிக ளானவற்றுக் கமைத்த காலங் களிலமைத்து" (1026) என்றவையும், ஆங்காங்கு உரைத்தவையுங் காண்க.

அமைத்துச் - சாத்தி - வணங்கி - என்க.

தலைசிறப்ப—என்பதும் பாடம். 223

3378. (வி - ரை) அந்தி வண்ணத் தொருவர் - சிவபெருமான் ; அருளால் வந்த - அருளினாலே இவ் உலகில் திருநாவலூரில் வந்த - அவரித்த - என்பது; திருவொற்றியூருக்கு வந்த என்ற குறிப்புமாம்.

காதல் மணம் - இயற்கை மணம் ; தமிழ் அகப்பொருள் நூல்களுட் பேசப்படும் களவு - கற்பு என்பனவற்றுள் களவியலினுட் கொண்ட இயற்கைப் புணர்ச்சியின் பகுதி ; இது மனிதர் முயற்சியின்றி விதிகூட்ட வருவது ; முந்தை விதியால் என்பது காண்க. விதிமணம் தந்தை தாயர் சடங்குகளுடன் கொடுப்பக் கொள்வது.

பருவம் - நிகழ வேண்டும் காலம்.

வகுத்த - இறைவனாணையால் வகுத்த ; முந்தை விதியால் - திருமலைச் சிறப்பிற் கூறிய விதி.

வகுத்த தன்மை வழுவாத-நியதி பிறழாத. 224

3379. அண்டர் பெருமா னந்தணரா யாண்ட நம்பி யங்கணைப்
பண்டை முறைமை யாற்பணிந்து பாடிப் பரவிப் புறம்போந்து
தொண்டு செய்வார் திருத்தொழில்கள் கண்டு தொழுது செல்கின்றார்
புண்ட ரீகத் தடநிகர்பூந் திருமண் டபத்தி னுட்புகுந்தார். உ௨௫

(இ - ள்) அண்டர்...நம்பி - தேவதேவராகிய இறைவர் ஒரு வேதியராக வந்து நேரே ஆட்கொண்டருளிய நம்பிகள்; அங்கணரை...போந்து - சிவபெருமானை முன்னைய முறைமையினாலே வணங்கிப் பாடித் துதித்துப் புறத்திற் போந்து; தொண்டு...செல்கின்றார் - பலவகையாலும் திருத்தொண்டுகள் செய்வார்களாகிய அடியவர்களது திருத்தொழில்களைக் கண்டு வணங்கிச் செல்கின்றாராய்; புண்டரீகத்தடம்...புகுந்தார் - தாமரைப் பொய்கைபோன்ற திருப்பூமண்டபத்தினுள்ளே புகுந்தருளினர்.

(வி - ரை) அந்தணராய் ஆண்ட - கிழவேதியராகவந்து தடுத்தாட் கொண்டருளிய; தடுத்தாட்கொண்ட புராணம் பார்க்க.

பண்டைமுறைமையாற் பணிதலாவது முன்னர்த் "திருப்பாதங் கூடுங்காலங் களி லணைந்து பாவிக் கும்பிட்டு" (3359) என்றவாறு அம்முறைமைப்படியே வழிபட்டுவருதல்; பண்டை முறைமையால் - முறை - ஊழ் - நியதி - எனக்கொண்டு சிவனருளிய முன்னை விதியினாலே என்றும், முன் திருக்கயிலையிற்றொடர்ந்த மரபினாலே என்றும் கூடிய முற்குறிப்புக்களும் காண்க.

முன்னர் முந்தை விதியால் (3378) என்றதும், மேல் விதியால் (3380) என்பதும் காண்க; முன்கூறியது அந்த ஒரு நாள் கோயிலுள் வந்து புகுந்த செயலுக்கும், ஈண்டுக்கூறுவது பணிந்து திருத்தொழில் கண்டு செல்கின்ற செயலுக்கும், மேற்கூறுதல் சங்கிலியாரைக் காணலுறுதற்கும் ஆமாதலின் கூறியது கூறலன்மையும் உணர்க; அன்று நிகழ்ந்த அச்செயல்கள் ஒவ்வொன்றும் முந்தை விதி செலுத்த நிகழ்ந்தன என்பதாம்.

புறம் போந்து-இறைவரது திருமாளிகையின் புறத்தே சுற்றுமுள்ள புறத்திருமுற்றத்தினுள் சென்று.

தொண்டு செய்வார் திருத்தொழில்கள் கண்டு தொழுது - இறைவர்க்காகச் செய்யும் திருத்தொண்டின் தொழில்களும் கண்டு வணங்கற்குரியன என்பது; இவை திருநந்தனவனத் தொழில்கள்; திருமுற்றம் விளக்குதல், திருப்பரிவட்டம், பொற்புடைப்பணிகள், விளக்குக்கள், முதலியவற்றை விளக்குதல், திருவுழவாரமிடுதல், முதலாகவரும் சரியைத்திருத்தொழில்கள்; இவை வெவ்வேறுப் புறத்திரு முற்றத்தில் பல இடங்களில் நிகழ்வனவாகலின் தொழில்கள் என்று பன்மையாற்கூறியதுமன்றிக், கண்டு - தொழுது - என்று பிரித்துக்காட்டியருளிச், செல்கின்றார் என நிகழ்காலத்துத் தொடர்ந்த வினைமுற்றெச்சமுந் தந்தோதினர்.

புண்டரீகத்தடம் நிகர் திருப்பூமண்டபம் - என்க; பற்பல வகைப்பூக்களும் சேர்ந்திருப்பதாலும், எங்கும் நீருடன் படுத்துக் குளிர்ந்திருப்பதாலும், திருப்பூமண்டபம் தாமரைத்தடம் போன்றதென்றார்; வினையும் மெய்யும் பற்றி யெழுந்த உவமம். ஞானத்திருவாகிய அம்மையார் இருக்குமிடம் என்றதும் குறிப்பு.

திருப்பணிகள்—என்பதும் பாடம். 225

## திருப்பூமண்டபமும்; சங்கிலியாரைக் காணுதலும்

3380. அன்பு நாரா வஞ்செழுத்து நெஞ்சு தொடுக்க வலர்தொடுத்தே
என்புள் ளுருகு மடியாரைத் தொழுது நீங்கி வேறிடத்து
முன்பு போலத் திரைநீக்கி முதல்வர் சாத்தும் பணிகொடுத்து
மின்போன் மறையுஞ் சங்கிலியார் தம்மை விதியாற் கண்ணுற்றார்.

(இ - ள்) அன்பு...தொழுது நீங்கி-அன்பே நாராகத் திருவைந் தெழுத்தாகிய மலர்களை நெஞ்சம் தொடுக்கவும் தாம் கைகளால் அலர்களைத் தொடுத்தே உள்ளே எலும்பும் உருக மனமுருக நிகழும் அடியார்களைத் (நம்பிகள் கண்டு) தொழுது நீங்கிப் பின்பு; வேறு இடத்து-அங்குப்பிறிதோர் தனியிடத்தில்; முன்பு போல...கொடுத்து-முன்பு போலத் திரையினை நீக்கி இறைவர்க்குச் சாத்துகின்ற பணிகளாகிய மாலைகளைக் கொடுத்து வந்து; மின்போல்...கண்ணுற்றார் - மின்னலைப் போலக் கணத்தில் மறையும் சங்கிலியம்மையாரை விதியினாலே கண்ணுற்றனர்.

(வி - ரை) அன்பு நாரா...அடியார் - இது திருப்பூமாலை தொடுக்கும் பணி செய்யும் அடியாரியல்பைக் குறித்துக் காட்டியபடியும், அங்கு அந்த அடியார்கள் இத் தன்மையரா யிருந்தனர் என்றபடியு மாம். அன்புமாறாது மனத்தினுள் திருவைந் தெழுத்தை உரு எண்ணிக்கொண்டு வாய்பேசாமல் கைகளாற் பூமாலை தொடுத்தல் வேண்டு மென்பது விதி; இதுபற்றி முன்னர் "வாயும்கட்டி" (559) என்ற விடத்தும், பிறண்டு முரைத்தவை பார்க்க; அன்பு - நார் - என்பன ஒரு பொருட் கிளவி; நார்-ஈண்டு அன்புக்கும் பூத்தொடுக்கும் நாரினுக்கும் பொருந்தக் கூறியது சொல்லணிநயம். அன்புநார் என்றதற்கேற்ப ஐந்தெழுத்தாகிய மலர் என்க.

அஞ்சேழுத்தும் நேஞ்சு தோடுத்தலாவது - நெஞ்சினால் திருவைந்தெழுத்தினை யும் இடையறாது உருவெண்ணிக் கொண்டிருத்தல்; தியானித்தல்; இவ்வகை சிவாகமங்களுட் கண்டுகொள்க. இதுபற்றி முன்னர்ப் பலவிடத்தும் உரைக்கப்பட்ட வையும் நினைவுகூர்க. தோடுத்தல் - பற்றிக் கொண்டிருத்தல் என்க. தோடுக்கத் - தோடுத்தே - சொற்பின்வருநிலை; தோடுத்தே - கைகளால் என்பது சொல்லெச்சம்;

என்பும் உள்ளுருகும் என்க. என்பும் எனச் சிறப்பும்மை விரிக்க; "அன் புள்ளுருகி யழுவ னாற்றுவன், என்பு முருக விராப்பக லேத்துவன்" (திருமந் - 9-332); "குரம்பைகொண் டின்றேன் பாய்த்தி நிரம்பிய, வற்புத மான வமுத தாரைகள், ஏற்புத் துளைதொறு மேற்றின னுருகுவ, துள்ளங் கொண்டோ ருருச் செய்தாங்கு" (திருவா - அண்டப்பகுதி).

அடியாரைத் தோழுது - முன்னர்த் "திருத்தொழில்கள் கண்டு தொழுது" (3379) என்றதும், ஈண்டு "தொடுக்கத் - தொடுத்தே - உருகும் அடியாரைத் - தொழுது" என்றதும் காண்க; இங்குத் தொழிலும் பயனும் தொழில் செய்வோரும் ஒருங்கே தொழுதற்குரியன.

தோழுது - நம்பிகள் என்ற எழுவாய் முன்பாட்டிலிருந்து வருவிக்க.

வேறிடத்து - திருப்பூமண்டபத்தினுள் முன்னர்க்கூறியபடி தொழுதஅடியார்கள் தொழில் செய்த இடத்தினின்றும் வேறு தனியிடத்தில் என்க; "பூமண்டபத்துத் திரைசூழ் ஒருபாற் சென்றிருந்து" (3376) என்றமையால் அங்கு இது வேறு எவரும் பார்க்க முடியாத தனியிடம் என்றும், அதனைச் சுற்றிலும் திரை சூழ்ந் திருந்தது என்றும் அறிக.

முன்பு போல - முன்னாட்களின் வழக்கம் போல; திரைக்குள்ளாலிருந்து பணி செய்தலும், பணி முற்றியபின் காலங்களுக்கேற்பத் திரை நீக்கிப் பணிகள் கொடுத்துச் சென்று மறைதலும் போல; பணி - பணிசெய்த மாலைகள்; கோடுத்து- இறைவர்க்குச் சாத்தும்படி கொடுத்து.

நீக்கிக் - கோடுத்து - மறையும் - எனத் தொடர்ந்து கூறியது இச்செயல்கள் தொடர்ந்து விரைந்து நிகழ்ந்தன என்று குறித்தற்பொருட்டு; மின் போல் மறையும் என்ற உவமையும் இப்பொருட்டு; சடுதியில் தோன்றல் - நிற்றல் - மறைதல் என்ற

மூன்று செயலாலும் வினைபற்றி வந்தது; ஒளியும் நடங்குதலும் மெய்பற்றி வந்தது.

விதியால் - பண்டை விதியாகிய ஊழ்வினை கடைகூட்டியமையால்; திருமலைச் சருக்கம் பார்க்க; 3382ம் பார்க்க. இப்பாட்டுக் காட்சி என்னும் அகப்பொருட்டுறை; முன் பரவையார்பாலும் இவ்வாறே நிகழ்ந்த காட்சித் துறையும் (285) காண்க; இதுவும் கயிலையிற்கண்டு பிரிந்த காட்சியின் தொடர்ச்சி என்க.

என்புள்ளுருக்கும்—என்பதும் பாடம். 226

3381. கோவா முத்துஞ் சுரும்பேறுக் கொழுமென் முகையு மனையாரைச்
சேவார் கொடியார் திருத்தொண்டர் கண்ட போது சிந்தைநிறை
காவா தவர்பாற் போய்வீழத் தம்பாற் காம ணார்தூந்த
பூவா ளிகள்வந் துறவீழத், தரியார் புறமே போந்துரைப்பார், உஉஎ

3382. "இன்ன பரிசென் றறிவரிதா; லீங்கோர் மருங்கு திரைக்குள்ளாற்
பொன்னு மணியு மலர்ந்தவொளி யமுதி லளாவிப் புதியமதி
தன்னு ணீர்மை யாற்குழைத்துச் சமைத்த மின்னுக் கொடிபோல்வாள்
என்னை யுள்ளந் திரிவித்தாள்; யார்கொ" லென்றங் கியம்புதலும்,

3383. அருகு நின்றார் விளம்புவா "ரவர்தா நங்கை சங்கிலியார்;
பெருகுந் தவத்தா லீசர்பணி பேணுங் கன்னியா" ரென்ன,
"இருவ ராலிப் பிறவியையெம் பெருமா னருளா லெய்து வித்தார்;
'மருவும் பரவை யொருத்தி;யிவள் மற்றை யவளா" மெனமருண்டார்.

3381. (இ - ள்) கோவா...அனையாரை - கோக்கப்படாத முத்தினையும், வண்டுகள் மொய்த்துண்ணாத கொழுவிய மெல்லிய அரும்பினையும் போன்றாராகிய அவ்வம்மையாரை; சேவார்...கண்டபோது - இடபம்பொருந்திய கொடியினை யுடைய இறைவரது திருத்தொண்டராகிய நம்பிகள் கண்டபொழுது; சிந்தை...வீழ- தமது மனம் நிறையினாற் காக்கப் பெறாமல் அவர்பாற் போய் வீழவும்; தம்பால்... உறவீழ - தம்மிடத்து மன்மதன் விட்ட மலரம்புகள் வந்து உற வீழவும்; தரியார்... உரைப்பார் - ஆற்றமாட்டாதவராய்ப் புறம்போந்து சொல்வாராகி, உஉஎ

3382. (இ - ள்) இன்ன பரிசு என்று அறிவரிதால் - இதுதான் இன்ன தன்மையது என்று அறிதல் அரிதாயிருக்கின்றது; ஈங்கு...கொடிபோல்வாள் - இவ்விடத்தில் தனியாக ஒரு பக்கத்தில் திரையினுள்ளே, பொன்னும் மணிகளும் கூடி மலர்ந்த ஒளி அமுதத்துடன் கலந்து புதிய சந்திரனுடைய உண்ணீர்மையாலே குழைத்து ஆக்கிய மின்னற் கொடிபோலும் பெண்; என்னை...யார்கொல் - என்னை உள்ளந்திரியும்படி செய்தனள்; அவள் யார்?"; என்று அங்கு இயம்புதலும் - என்று அங்குக் கூறுதலும், உஉஅ

3383. (இ - ள்) அருகு நின்றார் விளம்புவார் - அங்கு அருகே நின்றவர்கள் சொல்வார்களாய்; "அவர்தாம்......கன்னியார்" என்ன - அவர்தாம் நங்கை சங்கிலியார் என்பவர்; பெருகும் தவத்தினாலே இறைவரது திருப்பணிகளை விடாது பற்றிச் செய்யும் கன்னியாராகும் என்று கூற; "இருவரால்...அவளாம்" என மருண்டார் - "இருவர் பொருட்டால் எமது பெருமான் திருவருளாலே இப் பிறவியை எனக்குக் கூட்டுவித்தருளினர்; முன் பொருந்தும் பரவை அவர்களுள்

ஒருத்தியாம்; இவள் அவ்விருவருள்ளே மற்றையவள் போலும்" என்று மன மருட்சி யடைந்தனர். உ௨௧

இம் மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3381. (வி - ரை) கோவா...அன்னையார் - சங்கிலியம்மையார்; கோவா முத்து - முத்து இப்பிகள் - மூங்கில் முதலிய எந்தப் பிறப்பிடத்திளின்று பிறந்தாலும், பிறந்தபோது தொளையின்றி இயல்பாகிய ஒளிவீசி முழுமையாய் நிற்கும். அதன் பின்னரே தொளையிட்டுக் கோத்து மாலையாக்கி மக்கள் அணிகுவர்; கோவா (கோக்கப்படாத) என்றதனாலும் பிறரால் விரும்பி அணியப்படாத என்றவாறும்.

சுரும்பு ஏறக் கொழுமென் முகை - வண்டுகள் மொய்த்து உண்ணுத கொழுவிய மெல்லிய அரும்பு.

கொழுமுகை - என்றதனுல் அணிமையில் அலர்ந்து மணந்தரும் பருவம் குறித்தபடி; சுரும்பு ஏற - என்றது பிறரால் மணநுகரப் படாமை குறித்தது; இவையிரண்டும் சங்கிலியாரது பெண்தன்மை நிறைந்த பருவமும், ஆயின், இன்னும் மணஞ் செய்யப்பெறுத கன்னியாராம் நிலையும் குறித்தன; இவ்வாறன்றி, இவை, சங்கிலியாரின் தூய்மை குறித்தன என்பாருமுண்டு.

இவ்வொருபொருட்கு இரண்டு உவமைகள் கூறியது என்னையோ? எனிற் கூறுதும்:—

முத்து - "தொடுகடன் முத்தும்...எங்ஙும் - விரும்பினர்பாற் சென்று மெய்க் கணியாம்" (திருக்கோவை - 248) என்றபடி சென்று பிறர் மெய்க்கணி யாகாநிலை குறித்து நின்றது.

கொழுமுகை - தான் இருக்குமிடத்து வண்டு தேடிவந்து மணநுகர்ந்து அலர்த்தித் தேனுண்ணும் நிலை போல, இங்குப் பிறனெவனும் மணந்த நிலையின்மை குறித்து நின்றது; எனவே அம்மையார் மனம் சென்று பிறர்க்குரிமை யாகாமையும், அம்மையார்பாற் பிறர் மனம் வந்து புகாமையும் ஆகிய நிலைகளுக்கு உவமையாயின; முத்து - தீட்டுதல் வேண்டாத இயல்பாகிய பிறப்பும் ஒளியும் குறித்தது; முகை மணம் குறித்தது; மெய்யும் வினையும்பற்றி எழுந்த உவமைகள்.

சுரும்பு ஏறக் கொழுமென் முகை - ஈண்டு, முன்னர், ஒருவன் பரிசறியான் அம்மையாரது பெற்றோர்பால் மகட்பேசிய நிலையுளதே? எனின்; அஃது இருபாலினு மன்றி, ஒருபால் நிகழ்ந்த செயலாதலின் ஒன்றும் பயனிலதாய் வீணுயொழிந்தது என்க; கணக்கில் வாராதென்றொழிக; "எந்தையுமெம் மனையுமவர்க் கெனைக் கொடுக்க விசைந்தார்கள், அந்தமுறை யாலவர்க்கே யுரியதுநான்" (1297) என்ற திலகவதியம்மையார் வரலாற்றின் நுட்பத்தினை ஈண்டுவைத்து நோக்கி வேற்றுமை கண்டு கொள்க. பெற்றோர் பேசிய மணப்பேச்சுக் கேட்ட அளவிலே அம்மையார் அது தம்பாற் சாராது விலக்கித் தாம் அருள் செய்தார் ஒருவருக்கு முன்னரே உரிமைப்பட்டவராய் நின்ற நிலையை உணர்த்தி விட்டமையும் காண்க. அதன் பின்னர்ப் பரிசறியான் மகட்பேசவிட்ட வார்த்தை பெற்றவர்கள்பாலன்றி அம்மையார்பாற் சாராமையானும், அது கேட்ட பெற்றோர் மனத்தின்பாலும் அது உட்புகாமையானும் அஃது ஈண்டைக்கு எண்ணவரும் பொருளன்றென்று விடுக்க; "தகுமகட் பேசினேன் வீயவே நூல்போன சங்கிலிபாற், புகுமணக் காதலினுல்... அருளாலிவ் வியனுலக, நகும்வழக் கேனன்மை யாப்புணர்ந்தான்" (திருத்தொண்டர் திருவந்தாதி - 69) - என்றது நம்பியாண்டார் நம்பிகள் திருவாக்கு; ஈண்டு, "மகட் பேசினேன் வீயவே நூல்போன" என்றது நூலிழந்த நிலை குறிக்குமென்று

கொண்டு, நம்பிகள் செயல், தாம் தாம் கொண்டொழுகும் அறுதலி மணம் முதலிய கோட்டிகளுக்கு ஆதாரவாகக்கூறிப் பிணங்குவாருமுளர் ; இதுபற்றி வாக்குவாதங்களும் பூசல்களும் தமிழறிந்தாரென்பவரிடை அணிமையில் மிகவும் நிகழ்ந்தன; இவை பொருந்தாமை முன் உரைக்கப்பட்டது ; நூல்போன - நூல்போன என்று உலகவர் பிழைபடக்கூறும் என்க. நூற்றுறை போகிய என்ற குறிப்புடனும் நின்றது. உலகநகும் வழக்கே நன்மையா - என்றது பரிசறியா உலகம் பழிச்சுதலை ஒரு பொருளாகக் கொள்ளாது நன்மையாம்படி என்றதாம். “ நாடவர் பழித்துரை பூணது வாக ” (திருவா) “ நாடவர் நந்தம்மை யார்ப்ப வார்ப்ப, நாமு மவர் தம்மை யார்ப்ப வார்ப்ப ” (திருவா).

கோவா முத்தும் - சுரும்பேறு முகையும் அனையாரை - மணஞ் செய்யப்பெறாத கன்னிகையார் என்று குறித்தபடியாம் ; என்னை ? நம்பிகளது செந்நெறிநிற்கும் திருவுள்ளம் பிறிதுவழியிற் செல்லாமை குறித்தற்கு எடுத்துக்காட்டியவாறு; இனிப், பெண்களைக் காமத்தோடு நோக்குதலும் எண்ணுதலும் திருக்கோயிற் குற்றங்களாம் என்று சிவாகமங்கள் விதித்திருப்பவும் பரமாசாரியாராகிய நம்பிகள்பால் இவ்வாறு நிகழ்ந்த தென்னையோ ? என்னின், அது முந்தை விதிப்பயனாகிய ஊழ்கூட்ட ஆகியது என்பதாம். “ முந்தை விதியால் ” (3378); “விதியாற் கண்ணுற்றார் ” (3380); “ சிந்தைநிறை காவாது ” (3381) என்றனவும் ; “ என்னை யுள்ளந் திரிவித்தாள் ” (3382); “ஆளாம் விதியால் வாழு மெனைவருத்தித், தன்னு ரருளால் வரும்பேறு தவத்தா லணையா வகைதடுத்தே ” (3386) என்பனவும், பிறவும், முன்னுரைத்தனவும், பின் நிகழ்ச்சிகளும் கண்டு கொள்க.

கண்டபோது - “விதியாற் கண்ணுற்றார்” (3380) என்றபடி கண்டபோது.

சிந்தை நிறை காவாது - சிந்தையானது நிறையினாற் காக்கப்படாமல்.

போய்வீழ - சென்று விருப்பத்தினுள் அழுந்த ; வீழ - இகழ்ச்சிக்குறிப்பும்பட நின்றது. வீழ்தல் - விரும்புதல் ; “ தாம் வீழ்வார் ” (குறள்)

சிந்தை - போய்வீழ - என்றும், வாளிகள் - வந்துற வீழ - என்றும் வரும் கவிநயம் காண்க; ஒன்று போகவும் மற்றொன்று அதனிடத்தில்வரவுமாக இவ்வாறும் நிகழ்வு என்றதும், போய் என்றதும் வந்து என்றதும் கவிநலம் ; வாளிகள் வந்து உறவீழ - இங்கு வீழ என்றது ஊறு செய்யாது கீழே வீழ என்ற குறிப்புப்பட நின்றது; என்னை? நம்பிகள்பால் மேல் நிகழ்வன காமன் வயப்பட்ட காமச் சேட்டைகளாகாது சிவபெருமானது திருவருள் வழியே ஊழ்வினையின் விளைவாக நிகழ்வனவாம் என்க.

தரியார் - தரியாராகி ; உரைப்பார் - உரைப்பாராய்.

உரைப்பார் - இயம்புதலும் (3382) - நின்றார் - விளம்புவார் - என்ன - என - மருண்டார் (3383) என்று இம்மூன்று பாட்டுக்களையும் கூட்டி முடிபு கொள்க. 227

3382. (வி - ரை) “ இன்ன...யார் கொல் ?” என்றது நம்பிகள் யாரையும் நோக்கி வினவாது தமக்குள் உரக்க எண்ணியது ; தமக்குத் தாமே சொல்லியதுமாம்; சொல்லாய்க் கேட்கப்படவே அருகு நின்றனர் விடைகூறினர் என்க ; முன்னர்ப் பரவையாரைக் கண்டபோதும் இவ்வாறே “ என்மனங்கொண்ட....இளங்கொடி தான் யார் ? என்ன ” (293) என்றதும் ஆண்டுரைத்தவையும் பார்க்க.

இன்ன பரிசு என்று அறிவரிதால் - முன்பாட்டிற் கூறிய காட்சியின் விளைவைத் தமக்குள் நினைந்து ஆராய்ந்துரைக்கும் கூற்று ; இது ஐயம் என்ற அகப்பொருட்டுறையின்பாற் படும் ; யார்கொல் ? என்று முடித்தலும் காண்க,

ஈங்கோர்...மின்னுக்கோடி போல்வாள் - காட்சிப்பொருளை விரித்தவாறு; போன் - மணி - மலர்ந்த ஒளி யாவது செயற்கையானன்றி இயல்பிற் பொருந்திய ஒளி; மலர்ந்த - தம் இயல்பால் உண்ணின்று வெளிப்பட என்பது குறிப்பு.

அமுதில் அளாவி - அமுதத்தினுட் பெய்து; அமுதத்தின் வழியே விரவி வரச் செய்து; அளாவுதல் - ஈண்டுத் தன்மை விரவச் செய்தல் என்ற பொருளில் வந்தது.

புதியமதி தன்னுள் நீர்மையாற் குழைத்து - புதியமதி - புதிதின் முற்றித் தோன்றும் முழுமதி; உள் நீர்மை - மதியினுள்ளீடாக நிற்கும் தட்பம்; குளிர்ச்சி.

நீர்மை - தன்மையென்றும், நீரின்குணம் என்றும் இருபொருளும்பட நின்றது; குழைத்தல் - வெப்பந்தணித்தல்.

சமைத்த மின்னுக் கோடிபோல்வாள் - இவ்வாறு பண்படுக்கப்பட்ட மின்னற் கொடிபோன்று தோன்றிய அம்மை; "மின்போல் மறையும்" (3380) என்று இதற்குத் தோற்றுவாய் செய்தமை காண்க; மின்னுக்கோடி - கண்டாரையும் தொட்டாரையும் உடன் கொல்லலும், கொடிய பேரொளியும், வெப்பமும், வேகமும் உடையது; ஆனால் இதுவும் அதுவே போன்ற ஒளியாயிருப்பினும் அதற்குமாறாகத் தட்பமும் அமுதநிலையும் கொண்டுள்ளது; இவ்வாறு அதன்தன்மைகள் மாறுதற் குள்ள காரணங்களைக் கற்பிக்கின்றார்; மின்னின், இறந்தலைச் செய்யுந்தன்மை மாற்ற அமுதில் அளாவி என்றும், வெப்பத்தினைக் குறைக்க மதிதன்னுள் நீர்மையாற் குழைத்து என்றும் கூறினார்; இந்நாளில் 40 ஆயிரம் 20 ஆயிரம் என்ற அளவுபடும் மின்சார சத்தியின் நாசகாரியம் மிக்க வேகத்தைக் குறைத்து 200 அளவுபடச் சுருக்கி இல்லங்களில் ஒளியும் வெப்பமும் தந்து உதவி உலவச் செய்வதற்கு அதனை அமுதம் போன்ற ஆமணக்கு விளக்கெண்ணெயின் வழிச் செலுத்தி வாங்கும் நிலைகள் ஈண்டுக் கருதத்தக்கன. சமைத்த - ஆக்கிய - அமைத்த.

என்னை - இறைவனுக் "காளாம் விதியால் வாழும் எனை" (3384) என்று இதன் கருத்தை மேல் விரித்தல் காண்க; வலிமிக்க என்னையும் என்று ஆணவச் செயற் குறிப்புப்பட உரைகூறுதல் தவறு.

உள்ளம் திரிவித்தாள் - முன் கூறியவாறுள்ள அன்பு நிலையிற்றிரியாத என் உள்ளத்தினை மாறுபடச் செய்தனள். "வானந் துளங்கிலென்...ஒருவனுக்காட் பட்ட உத்தமர்க்கே" என்றபடி சிவனன்பி னுறைப்பினால், வேறெதனாலும் திரியாத உள்ளத்தையும் என்று சிறப்பும்மை விரிக்க; "என் மனங்கொண்ட" (293) என்று இவ்வாறே முன் கூறியதும் காண்க. தவநெறி வேண்டிப் பெற்று அந்நெறியே பிறழாது நின்றவராதலின் இவ்வாறு கூறினார் என்க.

இயம்புதலும் - தமக்குத் தாமே கூறுதலும். 228

3383. (வி - ரை) அருகு நின்றார் - நம்பிகள் அவர்களை நோக்கி வினவா விடினும் நம்பிகள் கொண்ட ஐயப்பாட்டினைக் கேட்டு அருகுநின்றார், உலகியல்பின் வழித் தாமே விடைகூறுகின்றார்; இயம்பிய போது கேட்டு அங்கு அருகு நின்றார்கள்.

நங்கை சங்கிலியார் - "அவர்நங்கை பரவையார் சென்றும்பர் தாத்தார்க்குஞ் சேர்வரியார்" (293) என்று முன்னர்ப் பரவையாரையும் இவ்வாறே அங்கு முன்னின்றவர்கள் அறிவுறுத்தியமை காண்க.

நங்கை - பெண்களிற் சிறந்தாரை நங்கை என்பதும், ஆடவருட் சிறந்தாரை நம்பி என்பதும் மரபு.

பெருகுந் தவத்தாற்...பேணும் கன்னியார் - அவரது தவத்தினைப் பற்றிய அன்பின் குணநலனும் மணஞ் செய்யப் பெறாத கன்னிப்பருவமும் குறித்தபடி காண்க. இஃது மேலும் வினாவுக்கு இடமின்றி அறிவிக்கு முறையும் மரபுமாம். முன்னை நிலையின் தவத்தின்பயனாகிய அன்பு நெறியும், அது பற்றி ஈண்டும் நாளும் செய்து ஈட்டப்படும் தவநெறியும் கூடுதலின் பெருகும் தவம் என்றார்.

" இருவரால்...மற்றையவளாம் " என மருண்டார் - இது நம்பிகளின் அழுந்திய அறிவினுள்ளே முன்னை நினைவு தலைக்கூடத் தம்மனத்துட் கொண்ட தெளிவு. மருட்சி - காணாது கண்டு கொண்ட பொருளின் வழித் தோன்றும் பெரு வியப்பாகிய மனநிலை ; இருவர் - அநிந்திதையார் - கமலினியார் ; இப்பிறவியை எய்துவித்தார்- திருமலைச் சருக்க வரலாறு.

பிறவியை அருளால் எய்துவித்தார் - கன்மங்களை அனுபவித்துக் கழித்து வீடுபெற உதவுதலின் இறைவர் பிறவிதருதலும் அருளேயாம் என்பது ஞான நூற்றுணிபு; இனி அம்மட்டினுலன்றி நம்பிகளது இப்பிறவி அவ்விருவர் மட்டிலே யாக அமைந்து மேல் ஏதும் வினைச்சார்புக்கு இடமின்றி நிகழ அருள் பெற்றமையால் அச் சிறப்பு வகையானும் அருளால் என்றார். அருளால், நம்பிகளது திருவவதாரம் ஏனை உயிர்களின் கன்மவசமாகிய பிறவி போன்றதன்று ; தென்றிசை வாழவும் திருத்தொண்டத்தொகை தரவும் சிவத்திருவருள், அம்மையர் இருவரை முன் னிலையாக ஒரு காரணமாய்க் கொண்டு நிகழ்வித்த செயல் என்ற குறிப்புமாம். இருவ ரால் - இருவர் முகமாக ;

மருவும் - முன்னர் வந்து பொருந்திய. இப்பாட்டுத் தெளிதல் என்ற அகப் பொருட்டுறை யமைதி கொண்டது காண்க.

இம் மூன்று பாட்டுக்களும் முறையே காட்சி ஐயம் தெளிதல் என முன்னர்த் திருவாரூரில் பரவையார் திறத்தில் நிகழ்ந்தவையே போல முறையே அமைந்த ஒப்புமையும் கண்டு கொள்க ; இனி, அங்குப் பரவையார் திறத்தும் நம்பிகள் பால் நிகழ்ந்த அவ்வாறு காட்சி முதலிய துறைகளின் நிகழ்ந்தவை முன் உரைக்கப்பட்டன. 288 - 289 - 290 - 317 - 318 முதலியவை பார்க்க. ஆயின் ஈண்டுச் சங்கிலியம் மையார் திறத்து அவை நிகழ்ந்தமை ஆசிரியர் கூறாது, நம்பிகள் திறத்தின் நிகழ்ச்சி களையே பற்றிக் கூறித், திருமணம் வரை மேற் செல்லுதலின் அவை நிகழவில்லை என்பது கருதலளவையாற் றுணியக் கிடக்கின்றது ; இஃதென்னையோ நிலை ? எனின், சங்கிலியார் முன்னையறிவுடன் வந்து தாம், திரு அருள் பெற்ற ஒருவர்க்கு அருள்வழியே முன்பே உரிமையாயினமை உணர்ந்து, அவ்வாறே செயல்கள் நிகழ்ந்தமை முன் உரைக்கப்பட்டது ; ஆதலின் அத்துறைகளின் நிகழ்ச்சிகள் வேண்டப்படவில்லை என்பதாம். 229

3384· "மின்னார் சடையார் தமக்காளாம் விதியால் வாழு மெனைவருத்தித்
தன்னா ரருளால் வரும்பேறு தவத்தா லணையா வகைதடுத்தே
என்னா ருயிரு மெழின்மலருங் கூடப் பிணைக்கு மிவடன்னைப்
பொன்னா ரிதழி முடியார்பாற் பெறுவே" னென்று போய்ப்புக்கார்.

(இ - ள்) மின்னார்...வருத்தி - மின்போன்ற சடையினையுடைய இறை வருக்கே ஆளாகி ஒழுகுகின்ற விதியின்படி வாழ்வதே கருமமாகப் பூண்டு வாழும் என்னை வருத்தஞ் செய்து ; தன் ஆரருளால்...வகைதடுத்தே - இறைவரது திருவரு ளால் வருகின்ற பேற்றினை நான் அணையாதபடி தனது தவத்தினால் தடை செய்தே;

என்...இவள்தன்னை - எனது அரிய உயிரினையும் அழகிய மலர்களையும் ஒரு சேரக் கட்டுகின்ற இவளை ; பொன்னார்...புக்கார் - பொன் போன்ற நெருங்கிய கொன்றை மாலை சூடிய முடியினையுடைய இறைவரிடம் பெறுவேன் என்று சென்று மீண்டும் திருக்கோயிலினுள்ளே போய்ப் புகுந்தனர்.

(வி - ரை) சடையார்க்கு ஆளாம் விதியால் வாழும் எனை - முன்னை நிலையில் இறைவர் சாத்தும் மாலையும் நீறும் எடுத்துச் சாத்துகின்ற அணுக்கன் றொண்டராயிருந்த நம்பிகள் அவ்விதியின்படியே இப்பிறவியிலும் " மாதொரு பாகனார்க்கு வழி வழி யடிமை செய்யும், வேதியர் குலத்துட் டோன்றி"னார் ; அன்றியும் அதன்மேல் தவநெறியே வேண்டியவாறு பெற்று அவ்விதியால் வாழ்கின்றார் ; இவையெல்லாம் உள் அடக்கி ஆளாம் விதியால் வாழும் எனை - என்றார்.

தன் ஆரருள் - நிறைந்து பொருந்திய இறைவரது திருவருள் ; பேறு - தவநெறியில் இடையறாது நின்றிடலும் வழி பட்டுவருதலும் முதலியவைகள் காண்க.

தவத்தால் அணையா வகை தடுத்தே - தவத்தால் - இப்பெண் தான் செய்யும் தவத்தினாலே பேற்றினை அணையா வகை என்று கூட்டுக ; தவத்தினால் அணையா வகை தடுத்தலாவது, சங்கிலியாரது தவங்காரணமாக அவருடன் மணம் நிகழ, அது காரணமாக ஆளாம்விதியால் வாழும் சிவன் அடிமைத்திறத்திற்கு இடையூறு படவிளைத்தல்.

உயிரும் மலரும் கூடப்பிணைத்தலாவது - இறைவர்க்காக மலர்களைக் கூட்டிக் கட்டுதல் போல என்னையும் தன் வசத்தாக்கிக் கட்டுப்படுத்துதல்.

இவள் தன்னை இதழிமுடியார் பாற் பெறுவேன் - இவள் இதழி முடியாருடைய அடிமையும் அவரது உடைமையுமாதலின் இவளை ஆண்ட அவர்பால் பெறுவேன் என்றார். நம்பிகள் தாம் எதை வேண்டினும் அதைத், தமது முனைப்பு முயற்சியாற் பெறாது, சிவன் அருள்வழி நின்று பெறுவோர் என்றும், தமது உடல் பொருள் ஆவி மூன்றையும் சிவனுக்கு அர்ப்பணம் செய்தவர் என்றும், முன்னர்ப் பரவையாரையும், பொன் முதலியவற்றையும் சிவனருள் வழி நின்று பெற்றவர் என்றும் ஆதலின் சிவனிடம் போய் இவடன்னைப் பெறுவேன் என்று போனார் என்றும் ஈண்டு விசேட ஆராய்ச்சி செய்வாருமுண்டு ; நம்பிகளைச் சுற்றம் முதலிய உலகச் சூழல்கள் எல்லாவற்றினின்றும் பிரித்துச் சிவபெருமான் தனக்கே யாட்செய்யும்படி கொண்டு விட்டமையால் அவருக்கு நேரும் அவை யாவும் சிவனருள் வழியே நேர்வன ; அவற்றைச் சிவனே காட்டுவித்தலும் கூட்டுவித்தலும் வேண்டியது முறைமையாம்; "மற்றுப் பற்றெனக் கின்றி நின்றிருப் பாத மேமனம் பாவித்தேன்" என்றும், "திருவுமெய்ப் பொருளுஞ் செல்வமு மெனக்குன் சீருடைக் கழல்களென் றெண்ணி" (தேவா.) என்றும் வருவன நம்பிகளது சிவவாழ்க்கையின் நிலை ; ஆதலின் சிவனிடம் பெறுவேன் என்று சென்றார் என்பதாம். உலகில் எல்லாவுயிர்க்கும் வரும் அனுபோகங்களையும் வினைப்பயன்களையும் கூட்டுவிப்பவன் சிவனேயாம். ஆனால், அவை அவ்வுண்மையினை உணராது யாவும் தம துயிர்முயற்சியால் வருவன என்ற ஆணவ மறைப்பினால் மயங்கி உழல்வன ; நம்பிகள் முற்றும் உண்மையுணர்ந்த நிலையினராதலின் சிவனே தருபவன்; அவனே தலைவன் என்று ஒழுகிவந்தனர் என்பதும் உணரத்தக்கது. மேல் " உனக்குத் தருகின்றோம் " (3389) என்பதுங் கருதுக. இனி, நம்பிகள் தம்பிரான் றோழராதலின் ஈண்டு நிகழ்ந்த காட்சி முதலிய வற்றின்பின், பாங்கற் கூட்டம் என்ற அகப்பொருட்டுறைகளின்

முறையே தமது ஆருயிர்த் தோழராகிய சிவன் பாற் பெறுவேன் என்று போனுர் என்ற குறிப்புப்பட நிற்றலும் காண்க. மேல் "நண்பா னினைந்து" (3388) என்பதும் கருதுக. 230

3385. மலர்மே லயனு நெடுமாலும் வானு நிலனுங் கிளைத்தறியா
நிலவு மலருந் திருமுடியு நீடுங் கழலு முடையாரை
உலக மெல்லாந் தாமுடையா ராயு மொற்றி யூரமர்ந்த
இலகு சோதிப் பரம்பொருளை யிறைஞ்சி முன்னின் றேத்துவார், உ௩௧

3386. "மங்கை யொருபான் மகிழ்ந்ததுவு மன்றி மணிநீண் முடியின்கட்
கங்கை தன்னைக் கரந்தருளுங் காத லுடையீ ! ரடியேனுக்
கிங்கு நமக்குத் திருமாலை தொடுத்தேன் னுள்ளத் தொடையவிழ்த்த
திங்கள் வதனச் சங்கிலியைத் தந்தென் வருத்தந் தீரு"மென, உ௩௨

3387. அண்ண லார்முன் பலவுமவ ரறிய வுணர்த்திப் புறம்பணைந்தே,
"எண்ண மெல்லா முமக்கடிமை யாமா றெண்ணு மென்னெஞ்சிற்
றிண்ண மெல்லா முடைவித்தாள் ; செய்வ தொன்று மறியேனியான்
தண்ணி லாமின் னொளிர்பவளச் சடையீ! ரருளு" மெனத்தளர்வார்,

3388. மதிவாண் முடியார் மகிழ்கோயிற் புறத்தோர் மருங்கு வந்திருப்பக்,
கதிரோன் மேலைக் கடல்காண மாலைக் கிடலைக் கண்டயர்வார்,
முதிரா முலையார் தம்மைமணம் புணர்க்க வேண்டி முளரிவளை
நிதியா னண்பர் தமக்கருளு நண்பா னினைந்து நினைந்தழிய, உ௩௪

3389. உம்ப ருய்ய வுலகுய்ய வோல வேலை விடமுண்ட
தம்பி ரானுர் வன்றொண்டர் தம்பா லெய்திச் "சங்கிலியை
இம்ப ருலகி லியாவர்க்கு மெய்த வொண்ணு விருந்தவத்துக்
கொம்பை யுனக்குத் தருகின்றோம்; கொண்ட கவலை யொழி"கென்ன,

3390. "அன்று வெண்ணெய் நல்லூரில் வலிய வாண்டு கொண்டருளி
ஒன்று மறியா நாயேனுக் குறுதி யளித்தீ, ருயிர்காக்க,
இன்று மிவளை மணம்புணர்க்க வேண்டு நின்றீ !" ரெனப்போற்றி
மன்றன் மலர்ச்சே வடியிணைக்கீழ் வணங்கி மகிழ்ந்தார் வன்றொண்டர்.

3385. (இ - ள்) மலர்மேல்...உடையாரை - தாமரை மலரின் மேல் இருக்கும் பிரமதேவனும் நெடிய விட்டுணுவும் முறையே ஆகாயத்தினும் நிலத்தின் கீழும் கிளைத்து அறியமாட்டாத, பிறைவளர்கின்ற திருமுடியினையும் நீடிய கழலினையும் உடைய இறைவரை ; உலகமெல்லாம்...பரம்பொருளை-உலகங்களை யெல்லாம் தாம் உடையவராயிருந்தும் ஒற்றியூரில் விரும்பி எழுந்தருளிய விளங்குகின்ற ஒளிப்பிழம்பாகிய பரம்பொருளை வணங்கித் திருமுன்பு நின்று துதிப்பாராகி, உ௩௧

3386. (இ - ள்) மங்கை...உடையீர் ! - மலை மங்கையாராகிய உமையம்மை யாரை ஒரு பாகத்தில் மகிழ்ந்து வைத்ததுமல்லாமல் அழகிய நீண்ட திருமுடி யினிடத்தே கங்கை யம்மையாரையும் மறைத்து வைத்தருளும் பெரு விருப்பமுடை யீரே !; இங்கு...சங்கிலியை - இங்கு உமக்குத் திருமாலையினைத் தொடுத்துக் கட்டியும்

எனது கட்டுடனின்ற உள்ளமாகிய தொடையினை அவிழ்த்தும் செயல்புரிந்த சங்கிலியாரை ; அடியேனுக்கு - அடியேனாகிய எனக்கு ; தந்து...என - தந்தருளி எனது வருத்தத்தினைத் தீரும் என்று கூறி, உரு௨

3387. (இ-ள்) அண்ணலார்முன்...புறத்தணைந்தே - இவ்வாறு இறைவரது திருமுன் பலவற்றையும் அவர் அறியும்படி உணரச் செய்து புறத்திற் போந்து ; எண்ணமெல்லாம்...அருளும் எனத்தளர்வார் - நான் எண்ணுகின்ற எண்ணங்கள் எல்லாம் உமக்கு அடிமையே யாகும் நிலைகளேயே எண்ணுகின்ற எனது நெஞ்சினது உறுதிப்பாடாகிய வலிமை எல்லாமும் உடையும்படி செய்தனள் ; மேற் செய்யக் கடவது ஒன்றினையும் யான் அறியேன் ; குளிர்ந்த பிறைச் சந்திரன் விளங்குகின்ற பவளம் போன்ற சடையினை உடையவரே ! அருள் செய்யும் என்று எண்ணித் தளர்வாராய், உருரு

3388. (இ-ள்) மதிவாள் முடியார்...இருப்ப - சந்திரனது ஒளி வீசும் முடியினையுடைய இறைவர் மகிழும் திருக்கோயிலின் புறத்தே ஒருபக்கத்தில் (நம்பிகள்) தங்கியிருக்க ; கதிரோன்...அயர்வார் - சூரியன் மேல் கடலைச்சேரும் காலமாகிய அப்போது மாலையாகிய கடலினைத் தாம் கண்டு அயர்வாராய் ; முதிரா ...வேண்டி - முதிராத இளமுலையவராகிய சங்கிலியாரை மணம் புணர்தலை விரும்பி; முளரி...நினைந்து அழிய - பதுமநிதியும் சங்கநிதியும் உடைய குபேரனது நண்பராகிய சிவபெருமான் தமக்கு அருள்புரியும் தோழமையாகிய உரிமையினாலே நினைந்து நினைந்து மனமழிய, உருச

3389. (இ-ள்) உம்பர்...எய்தி - தேவர்கள் உய்யவும் உலகம் உய்யவும் ஒலிபொருந்திய கடலின்றும் எழுந்த விடத்தை உண்டருளிய தமது பெருமானார் (தாமே ஆட்கொண்டருளிய) வன்றொண்டரிடத்தில் எழுந்தருளி ; இம்பர்...ஒண்ணா- இவ்வுலகில் எத்தன்மையாருக்கும் அடைய முடியாத; இருந்தவத்துக் கொம்பைச் சங்கிலியை - பெரியதவமுடைய கொம்பு போன்ற சங்கிலியை ; உனக்கு...ஒழிக என்ன - உனக்குத் தருகின்றோம் ; நீ மனத்துக் கொண்ட கவலையினை ஒழிவாயாக ; என்று கூறியருள, உருரு

3390. (இ-ள்) அன்று...உறுதியளித்தீர் - முன்னைநாளில் அன்று திருவெண்ணெய் நல்லூரிலே நீரேவந்து வலிய ஆட்கொண்டருளி ஒன்றும் அறியாத நாயினேனுக்கும் உறுதிதந்தருளினீர் ; உயிர்காக்க - எனது உயிரினைப் போகாமே காக்கும் பொருட்டு ; இன்றும்...நின்றீர் - (அதுபோலவே) இன்றும் இவளை எனக்கு மணம் புணரச் செய்ய ஏற்றுக்கொண்டீர் ; எனப் போற்றி - என்று துதித்து; மன்றல்...வன்றொண்டர் - (அவரது) மணங்கமழும் தாமரை மலர்போன்ற சேவடிக்கீழே வீழ்ந்து வணங்கி மகிழ்ந்தனர் வன்றொண்டர். உருசு

இந்த ஆறுபாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3385. (வி-ரை) அயனும் மாலும் - முறையே - வானும் நிலனும் நினைத்து அறியா முடியும் கழலும் என்று நிரனிரையாகக் கொள்க ; கழல் - காலணி மணிவடம் ; அஃதணியும் திருவடிக்காகி வந்தது.

உலகமெல்லாம் - உடையாராயும் - ஒற்றியூர் அமர்ந்த - ஒற்றியூர் - ஒற்றி வைக்கப்பட்ட ஊர் என்ற சொற்பொருட் சிலேடை நயம்படக் கூறியது ; உம்மை உயர்வு சிறப்பும்மை; உலகமுழுதும் உடையாராயிருந்தும் திருவொற்றியூரினை விரும்பியருளினார் என்பது திருவொற்றியூரது தனிச் சிறப்பு உணர்த்திற்று. உலக முழுவதி

லும் நிறைந்து இருப்பினும் அங்கெல்லாம் இறைவர் பாலினெய் போல மறைந்து நிற்பர்; உத்தமப் பெருந்தலங்களிலும் சிவாலயங்களிலும் தயிரினெய்போல வெளிப்பட விளங்கிநிற்பர் என்பது ஞான சாத்திரம். அப்பொருட் குறிப்புப்பட "உலகமெல்லா முடையராயும், ஒற்றியூர் அமர்ந்த இலகு சோதி" என்றார். அமர்தல்-விரும்பி வீற்றிருத்தல். "அவன் மற்றிவ் விடங்களிற் பிரகாசமாய் நின்றே, அல்லாத விடத்து அப்பிரகாசமாய் நிற்றலான்" (போதம் - 12 சூத்). 231

3386. (வி - ரை) இப்பாட்டு நம்பிகள் இறைவர் பால் வேண்டிக் கொண்ட நிலை கூறிற்று.

மங்கை...உடையீர் - பரவையார் ஒருவர் முன்னமே மனைவியாராயிருக்க, மேலும் சங்கிலியாரையும் மணம்புரிய வேண்டிக் கொள்வது என்னை? என்று இறைவர் கேட்டருளி, அருள் செய்யாவிடின், அதற்கு விடையாக நீர் மங்கை ஒரு பால் இருக்கச் சடையுள் ஒருத்தியைக் கரந்த நிலை போல நானும் வேண்டுகிறேன்; உமக்கு ஏற்றதாயின நிலையே எனக்கும் ஏற்றதாகும், என இவ்வாறு நம்பிகள் தோழமை நிலையினால் கூறிய தன்மை கண்டு கொள்க; "நண்பால் நினைந்து" என்பதும், முன் "முடியார்பாற் பெறுவேன்" என்றதும் காண்க; "உம்மைப் போலென்னைப் பாவிக்க மாட்டேன்" "மூன்று கண்ணுடை யாயடி யேன்கண் கொள்வதே கணக்கு வழக்காகில்" (திருவொற்றியூர்) (நம்பி - தேவர்); கங்கை - கங்கை நங்கை. கரந்த - உமையம்மையார் அறியாமல் நீர் மறைத்து வைத்தமை போலவே யானும் பரவையார் அறியாமல் இந்த மணத்தை விரும்புகின்றேன் என்ற குறிப்பு.

காதல் உடையீர் - உமது அச் செயலுக்குக் காதல் காரணமாதல் போல ஈண்டு உம்பால் என் வேண்டுகைக்கும் அதுவே காரணமாமென்பது.

திருமாலை தொடுத்து-என் உள்ளத் தொடை அவிழ்த்த - ஒரே செயலில் ஒருபுறம் மாலை தொடுத்தலும் அப்போதே மற்றொருபுறம் தொடையைப் பிணிப்பு அவிழ்த்தலும் செய்யும் சதுரப்பாடு என்று சங்கிலியாரின் மேன்மை தம்மனத்துப், பதிந்தமை தோன்றக் கூறியதுடன், தமது உள்ளம் கட்டுடைந்து அவர்பாற் சென்ற நிலையும் கூறியபடியாம்.

திங்கள் வதனச் சங்கிலி-"புதியமதி தன்னு ணீர்மையாற் குழைத்துச் சமைத்த" (3382) என்றது காண்க. காதல் வெப்பத்தினால் உயிர்போம் நிலையினை வாராது காக்கும் அமுதகலைகளை உடையவர் என்பது குறிப்பு. மேல் "உயிர் காக்க" என்பதும் (3390) காண்க. உயிர் காக்க என்பது ஆண்டு நின்றீர் என்பதுடனும் கூட்டி யுரைக்க நின்ற நயம் கண்டுகொள்க.

தந்து - அவள் தம் சுற்றம் பற்று எல்லாந் துறந்து உமது உடைப்பொருளாய் நின்றமையால் அவளை நீரே தருதற்குரியீர் என்பதாம்; "முடியார்பாற் பெறுவேன்" (3384) என்றதும் இக்குறிப்பு; இவ்வாறே முன்னர் நம்பிகள் பரவையாரைத் திருவாரூர்ப் பெருமான்பால் வேண்டிப் பெற்ற நிலையும் ஈண்டுக் கருதத் தக்கது.

வருத்தம் - காதற்றுன்பம்; அனுபவித்துக் கழிக்க நின்ற கன்மசேடத்தால் வரும் துன்பம் என்று உலகைத் தெருட்டும் நிலையின் குறிப்பும் பட நின்றது. தீர்த்தல் - போக்குதல்; கழிப்பித்தல்.

இது நம்பிகள் இறைவர் திருமுன்பு நின்ற திருவாக்கினால் வேண்டிக் கொண்டது. 232

3387. (வி - ரை) எண்ண மெல்லாம்...அருளும் - என்று இப்பாட்டிற் கூறியது கோயிலின் புறத்தணைந்தே நம்பிகள் எண்ணமிட்டுச் சொன்னது.

அவர் அறிய உணர்த்தி - இறைவர் எல்லாவற்றையும் இருந்தாங்கு ஒருங்கே அறிபவர் ; ஆயினும் இவ்வாறு எடுத்து அவர் அறியும்படி உணர்த்துதல் அவர்பாற் கொண்ட அன்பினை உறுதிப்படுத்திப் பக்குவப் படுத்தும் பயன் தருவதாம் என்க. நம்பிகள் அவர்பாற் சென்று முறைப்பாடு சொல்லுதல் உலகினை அறிவுறுத்தும் பயன் கருதியதுமாம் ; அறிய உணர்த்தி - என்றதுபசாரம் ; "உணர்வினு லுணர வொண்ணு வொருவரை யுணர்த்த வேண்டி " (462)

புறத்தணைந்தே - புறம் - இறைவரது திருமாளிகையின் புறம் ; புறமுன்றில் ; இதன்மேல் மாலையில் நம்பிகள் சென்று ஒருமருங்கு இருந்து நினைந்து மனம் அழிந்தது கோயிலின் புறத்து உள்ள வேறிடம்.

எண்ண மெல்லாம்...என்நெஞ்சு - "நெஞ்சம் முமக்கே யிடமாக வைத்தேன்", "வைத்தனன் றனக்கே தலையுமென் னுவும் நெஞ்சமும் வஞ்சமொன் றின்றி" (நம்பி - தேவா) முதலியவை காண்க. எண்ணமெல்லாம் அடிமையாமாறு எண்ணுதலாவது இடையறாது சிவயோக நிலையில் நெஞ்சை நிறுத்துதல் ; " நான்மறக்கினுஞ் சொல்லுநா நமச்சிவாயவே " என்று இந்நிலையினைப் புறக்கருவிகளும் பயின்ற பண்பினை நம்பிகள் கூறுவது காண்க ; " நாடுவன் நாடுவன் நாபிக்கு மேலேயோர் நால்விரல் " என்ற திருவாமாத்தூர்த் திருப்பதிகமும் கருதுக; " மறக்குமா றிலாத வென்னை " (பிள்.); " எண்ணுகே னென்சொல்லி எண்ணுகேனோ, எம்பெருமான் திருவடியே யெண்ணினல்லால் கண்ணிலேன் " (அரசுகள்); " எண்ணு திரவும் பகலுநா னவையே யெண்ணு மதுவல்லால்" (திருவா) என்றிவ்வாறே எந்தம்பரமா சாரியர்கள் அருளியனவும் கருதுக ; எக்காலமும் இடையறாது சிவபெருமானே நமது தலைவர் என்பதும் அவருக்கு நாம் மீளா அடிமைகள் என்பதும், நாம் பிழையே செய்யினும் அவர் கணந்தோறும் எம்பால் அருளே செய்து வரும் பெருங் கருணை யாளர் என்பதும், எண்ணிக்கொண்டவாறே வாழ்தல் உய்யும் வழியாமென்பது காட்டப்பட்டவாறு.

திண்ணம் - திண்மை ; உறுதிப்பாடு ; சிவனையன்றிப் பிறிதொன்றிலும் எவ்வாற்றாலும் மனம் புகாத உறைப்பு ; நிறைகாவாது (3381) என்றது காண்க. உடைவித்தாள் - தீங்குநெறியடையாத தடையாய்க் காவல் புரிந்த நிறை என்னும் மதிலைத் தகர்த்தாள் ; சிவனடிமையே நினையும் நம்பிகள் மனம் இங்குப் பிறிதொன் றினிற் செல்ல வழியுண்டாயினதை நிறையாகிய மதில் உடைந்ததனுலாகியது என்றார். ஆயின், இது சிவனருளாகிய நியதியால் விளைந்தமையின் சிவனையன்றி நம்பிகள் மனம் ஈண்டும் புறத்திற் சென்றிலது என்பது உய்த்துணரத் தக்கது. சிவன்பாற் பெறுவேன் என்ற துணிபும், அவ்வாறே வேண்டி நின்றமையும் இந்நிலையினை மாறுபடுத்துவதன்றி அதனையே உறுதிப்படுத்துவதும் காண்க. நிறையின் றிண்மையினை மதிலாக வைத்து உரைத்தது உருவகம்.

நிலா - மின் ஒளிர் - சடையீர் - வருந்தி வந்தடைந்தாரைக் காத்து வளரச் செய்யும் அருட்டிறம் குறிப்பு ; நிலாவும் நெஞ்சமுடைந்து குறைந்தடைந்தனன் என்பது வரலாறு ; ஈண்டு நம்பிகளும் அந்நிலையின் அடைந்தனர் என்பது மேல் உயிர்காக்க (3390) என்றதனுற் பெறப்படும்.

புறம்பணைவார்—என்பதும் பாடம்.



3388. (வி - ரை) மதிவாழ் முடியார் - முன்பாட்டிற் கூறிய குறிப்பு.

கோயிற் புறத்தோர் மருங்கு - இது தமது திருமாளிகையினன்றி அன்றிரவு கோயிற்புறத்து நம்பிகள் தங்கிய தனியிடம். முன்னர்ப் பரவையார் திருமணத்தின் முன் திருவாரூரில் தேவாசிரியனில் நம்பிகள் தங்கி நின்ற வரலாறு ஈண்டு நினைவு கூர்தற் பாலது ; ஓர்மருங்கு - ஒருபுறமாக ஒதுங்கிய இடம் என்பதும் குறிப்பு.

கதிரோன்...அயர்வார் - கதிரோன் - சூரியன்.

மேலைக்கடல் காண - சூரியன் - மேல்பாற்புகும் மாலைக்காலம் வர ; மாலைக் கடலைக் கண்டு - அதன் மேல்வரும் மாலை இரவு என்ற கடத்தற்கரிய கடல் போன்ற துன்பந்தரும் காலம் ; மாலையினையும் கடலினையும் கண்டு என்றுரைத்தலுமாம் ; இவையிரண்டும் துணை பிரிந்தாரைத் துன்புறுத்துவன. நிலவு வெளிப்பட வருந்துதல், இரவுறுதுயரங் கடலோடு சேர்த்தல், கடலொடுபுலத்தல், பொழுதுகண்டு மயங்கல் முதலிய அகப்பொருட்டுறைகள் காண்க. அயர்வார் - முன்னர்த் திருவாரூரில் இக்கால நிகழ்ச்சிப்பண்புகளை விரிவுற (298 - 313) உரைத்தமையின் இங்கு அயர்வார் என்று குறிப்பிற் கூறிய மட்டினமைந்தார். மேல் நினைந்து நினைந்தழிய என்பது ஈண்டு விரித்துரைத்துக் கொள்ள வைத்த குறிப்பு.

முதிரா முலையார் - இளமையும் கன்னித் தன்மையும் குறித்தது.

முளரி வளை நிதியான் - குபேரன் ; முளரி நிதியான் - வளைநிதியான் - என்று தனித்தனிக் கூட்டுக ; முளரி - தாமரை, பதுமம் ; வளை - சங்கம் - "சங்கநிதி பதும நிதி யிரண்டும் தந்து" (தேவா); நிதியான் நண்பர் - குபேரன் றோழர் என்பது சிவபெருமான் பெயர்களுள் ஒன்று ; "மித்திரவச் சிரவணற்கு விருப்பன் றூன் காண்" (தேவா) ; - மித்திரவச்சிரவணன் குபேரன்.

நண்பால் நினைந்து - தம்பிரான் தோழர் என்ற நட்புரிமையினாலே இதனை வேண்டி நினைந்து ; "பாங்கனை யானன்ன பண்பனைக் கண்டிப் பரிசுரைத்தால், ஈங்கெனை யார்தடுப் பார்மடப் பாவையை யெய்துதற்கே" (திருக்கோவை - 19 - பாங்கற் கூட்டம்) என்ற நிலை ஈண்டு வைத்துணர்தற்பாலது.

நினைந்து நினைந்து - பலவாறும் எண்ணமிட்டு ; அழிதல் - நெஞ்சமுடைதல்.

3389. (வி - ரை) இப்பாட்டு முன் கூறியவாறு நம்பிகள் கூறியமுறை கேட்டு இறைவரது அருளிச்செயல் கூறிற்று.

உம்பர் உய்ய - உலகுய்ய - தேவர்களுய்ய - உலகத்தவர்களும் உய்ய - என்று பிரித்துக் கூறியது ஈண்டு இனி இறைவரருளால் நிகழவுள்ள திருமணத்தின் இரு பாலாருக்கும் நிகழும் அருட்பயனும் அதனால் உலகம் பெறும் பயனும் குறித்தது.

பிரானுர் - தொண்டர்பால் எய்தி - தலைவர் தமது தொண்டரிடம் நாடிப் போந் தமை அருளின் பெருமை ; வன்தொண்டராதலின் பிரானுர் எய்தினர் என்ற கடமை யும் குறித்தது; இங்கு நனவு நிலையில் இறைவர் நம்பிகளுக்கு நேரே காட்சி தந்தருளி னர் என்பது கருதத்தக்கது. சங்கிலியார் திறத்துக் கனவிற்றேன்றினர் (3391) என்றும், "உணர்ந்தெழுந்து அவ்விரவின் கண்...கண்துயிலார்" (3407) என்று விளங்கக் கூறுதல் காண்க.

இருந் தவத்துக் கொம்பைச் - சங்கிலியை என்று கூட்டுக.

கொம்பை - கொம்பு போன்றாரைக் கொம்பு என்றது உபசாரம்.

இம்பருலகில்...ஒண்ணு - முன்னர்ப் பரவையாரைச் "சென்றும்பர் தாத் தார்க்குஞ் சேர்வரியார்" (293) என்றது காண்க. அங்கு உரைத்தவர் முன்னே நின்ற மக்கள் ; இங்கு இறைவர் தமது திருவாக்கினாலே "யாவர்க்கு மெய்த வொண்ணு இருந்தவம்" எனப்பெற்றது சங்கிலியாரது பெருந்தவத்தின் சிறப்பு ;

"சங்கிலியார் வழியடிமைப் பெருமையோ" (3404) என்பது மிக்கருத்தது. அவரை அடைதற்கு உரிமை அவரினும் மேம்பட்ட தவத்தை உடைய நம்பிகளுக்கே உண்டு என்பார்போல "சால வென்பா லன்புடையான் - மேருமலையின் மேம்பட்ட தவத்தான்" (3393) என்று இறைவர் ஈண்டே நம்பிகளையும் தமது திருவாக்கி ுற் கூறியருளும் நிலையும் தவத்தின் சிறப்பாகும். 235

3390. (வி - ரை) அன்று...உறுதியளித்தீர் - இங்கு நம்பிகள் தம்மை இறைவர் திருவெண்ணெய் நல்லூரில் தடுத்தாட் கொண்டது பேர் அருளின் திறம் என்று போற்றுகின்றார். வலிய - ஆளல்லேன் என்று மறுப்பவும் வலிந்து வழக்கிட்டு என்றபடி; மணப்பந்தரில் "இவன் என் அடியான்" என்று இறைவர் கூறிய போது உலகச்சூழலின் மயக்குட்பட்டு ஒரு மணம் புரிய நின்ற மணமகனாகிய நம்பிகளும் சுற்றத்தாரும் அதனை வெறுத்துச் சினந்தனர்; பின்னர், வெண்ணெய் நல்லூரில் வழக்கு வென்று, மறைந்து, விடைமேற்றோன்றி உணர்த்தி ஆளாகக் கொண்ட போதே நம்பிகள் அஃது இறைவரது பேரருளிப்பாடு என்று மகிழ்ந்தனர். உலக மயக்கனின்றும் பிரித்துத் தம்மைத் தொடர்வறத்தொடர்ந்து வந்து ஆட்கொண்டதனையும், அது, கயிலையில் தந்த வரமென்பதனையும், அதுவே உயிர்க்குறுதியாவதென்பனைதயும் உணர்ந்தனர். இங்கும் அவ்வரத்தினையும், கயிலையில் பெற்ற ஆணையினையும், அவற்றின் தொடர்ச்சியாக இத்திருமணம் இனி நிகழ்வதாகும் என்பதனையும் உணர்ந்தனர். ஆதலின், அன்று - உறுதி அளித்தீர்; இன்றும் - என்று நின்றீர்" எனத் தொடர்புபடுத்திக் கூறினார்; இன்றும் - அது போலவே இன்றும் என உம்மை இறந்தது தழுவிய எச்சவும்மை.

உயிர்காக்க - உயிர்காக்க-உறுதியளித்தீர் என்றும், உயிர்காக்க-என்று நின்றீர் என்றும் முன்னும் பின்னும் கூட்டியுரைக்க இடையில் வைத்தருளினார்; இடைநிலைத்தீபம்.

ஒன்றும் அறியா - இறைவர் வந்து தடுத்த செயலினை அருள் என்று சிறிதும் அறியாத; இன்றும் இங்கும் இத்திருமணம் உமது ஆணைவழி நிகழ்வதாகிய நிலை என்றும் அறியாத என்று பின்னும் வருவித்துரைத்துக் கொள்க.

ஏன்று நின்றீர்-தருகின்றோம் என்று உடன்பட்டீர்; இசைந்து நின்றீர்.

ஏலுதல் - மேற்கொள்ளுதல்; உடன்படுதல்.

உயிர்காக்க - அன்று உயிர்காக்க உறுதியளித்தமையாவது உயிர் உலகச்சூழலிற் புறம் போகிக் கன்ம வீட்டம் கொண்டு பிறவிக்காளாகாது தடுத்துக் காத்த செயல். இன்று உயிர்காக்க என்று நின்றீர் என்றது காதல் காரணமாக உயிர்போகு நிலையினின்றும் காக்கும் செயல். "அவள்பா லின்று மேவுமா செய்யீ ராகில் விடுமுயிர்" (3509) எனப் பின்னர்க் கூறும் அத்தன்மை காண்க.

வன்றொண்டர் - முன்னரும் (3389) "வன்றொண்டர் தம்பால்" என்றார். இந்நிகழ்ச்சிகள் யாவும் அவரது வன்றொண்டாந் தன்மைபற்றியே வருவன என்பதுணர்த்தியபடி.

அன்று...உறுதியளித்தீர் - இதனை நம்பிகள் என்றும் மறவாது பலவிடத்தும் பன்னிப்பன்னிப் பாராட்டி மகிழ்ந்து துதிக்கின்றார்; "அன்று வந்தெனை யகலிடத் தவர்முன் னாள தாகவென் றுவணங் காட்டி, நின்று வெண்ணெய்நல் லூர்மிசை யொளித்த" (திருக்கோலக்கா - 5); "வெண்ணெய் நல்லூரி, லற்பு தப்பழ வாவணங் காட்டி, யடிய னாவெனை யாளது கொண்ட" (திருநள்ளாறு - 6) என்பன முதலியவை காண்க.

எத்துவாராய் (3385); - என (3386) - உணர்த்தி - தளர்வார் (3387) - இருப்ப - அயர்வார் - அழிய (3388) - எய்தி - என்ன (3389) - எனப்போற்றி - மகிழ்ந்தார் - வன்றொண்டர் (3390) என்று இந்த ஆறு பாட்டுக்களையும் கூட்டி முடிபுபடுத்திக் கொள்க. மருண்டார் - (3383) - புக்கார் (3384) என்று மன மருட்சியுடன் புக்க நம்பிகள்பால் அம்மருட்சி நீங்கி மகிழ்வுண்டாம் வரை இடையீடின்றி ஒரே தொடர்பாய்க் கூறும் கவிமரபும் நயமும் கண்டுகொள்க. 236

3391. ஆண்டு கொண்ட வந்தணனா ரவருக் கருளிக், கருணையினால்,
நீண்ட கங்குல் யாமத்து நீங்கி, வானில் நிறைமதியந்
தீண்டு கன்னி மாடத்துச் சென்று, திகழ்சங் கிலியாராந்
தூண்டு சோதி விளக்கனையார் தம்பாற் கனவிற் றோன்றினார். உ௩௭

(இ - ள்) ஆண்டு...அருளி - ஆளாகக் கொண்டருளிய அந்தணனாராகிய இறைவர் அவருக்கு அவ்வாறு அருளிச் செய்து ; கருணையினால் - பேரருளினாலே ; நீண்ட...நீங்கி - பொழுது நீண்ட இரவிடையே யாமத்தில் நீங்கி ; வானில்... சென்று - ஆகாயத்தில் நிறைந்த மதி தீண்டுகின்ற உயர்ந்த கன்னிமாடத்திலே சென்று ; சங்கிலியாராம்...தோன்றினார் - சங்கிலியாராகிய தூண்டும் சோதியினை உடைய விளக்குப் போன்ற அம்மையார்பால் கனவிலே தோன்றியருளினார்.

(வி - ரை) கருணையினால் - அருளி என்றும், கருணையினால் - நீங்கிச் - சென்று என்றும், கருணையினால் - தோன்றினார் என்றும் மூன்றிடத்தும் கூட்டுக.

நீங்கி - சென்று - நீங்குதலும் செல்லுதலும், இறைவர்பாற் கூறுவது உபசாரம்; அவர் எங்கும் நீக்கமற நிற்கின்றவர் ; போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியர். இவை, வெளிப்படாது மறைதல் வெளிப்படுதல் என்ற பொருள் அளவில் கொள்ளத் தக்கன.

தூண்டு சோதி விளக்கு அனையார் - "தூண்டா விளக்கன்ன சோதி" (1488 - III - பக் - ௩௫௭) என்ற விடத்துரைத்தவையும், "தூண்டு சுடரனைய சோதி" (III - பக் - ௪௮௭) என்றதும் பார்க்க ; தூண்டுசோதி -விட்டு ஒளிவிளங்கும் சோதி; உலகத்தாரை அறிவு கொளுத்தி நன்மையில் தூண்டும் என்ற குறிப்புமாம். இங்கு இறைவரால் தூண்டப்பட்டு இனி விளங்க உள்ள விளக்கு என்பதும் குறிப்பு.

தம்பாற் கனவில் தோன்றினார் - முன் "தம்பாலெய்தி" (3389) என்ற விடத்துரைத்தவை பார்க்க ; இறைவர் உயிர்களுக்கு அருள்புரிய வெளிப்பட்டுணர்த்தும் நிலைகள் பலவகைப்படும் ; மூவகைப்பட்ட பசுக்களுக்குத் தன்மை முன்னிலை படர்க்கை (குரு)யிடங்களில் வெளிப்பட்டு உணர்த்தும் நிலைகள் ஞானநூல்களில் விளக்கப்படுவன; இனி "நனவிலுங் கனவிலு நாளுந் தன்னொளி, நினைவிலு மெனக்கு வந் தெய்து நின்மலன்" (பிள் - தேவா. கருக்குடி - 1) ; "உன்னி யுன்னி யுறங்குகின் றேனுக்குத், தன்னை வாய்மூர்த் தலைவனு மாசொல்லி" (அரசு - வாய்மூர்) ; "கனவிலுந் தேவர்க் கரியாய் போற்றி, நனவிலு நாயேற் கருளினை போற்றி" (திருவா) என்பன முதலியவை கனவுநிலையினும் நனவிலும் இறைவரது வெளிப்பாடு உணர்த்தின ; இனி, அசரீரியாக விண்ணில் நிறைந்த ஒலியால் உணர்த்துவதும், வேற்றுக் கோலங்களில் வந்தருளுவது முதலியவையும் உண்டு; இவை அவ்வவர் நிலைகளுக்கேற்ப நிகழ்வன ; இவ்வேறுபாடு கொண்டு திருவருணிலையினும், உணர்த்தப் பெறுவோர் நிலையினும் ஏற்றத்தாழ்ச்சி காணுதல் பிழையாம் ; "ஆட்பாலவர்க் கரு

ளும் வண்ணமு மாதி மாண்பும், கேட்பான் புகிலளவில்லை ; கிளக்க வேண்டா" என்பது ஆணையாதலின். 237

3392. தோற் றும் பொழுதிற் சங்கிலியார் தொழுது விழுந்து பரவசமாய்
ஆற்ற வன்பு பொங்கியெழுந் "தடியே னுய்ய வெழுந்தருளும்
பேற் றுக்கென்யான் செய்வ?"தெனப், பெரிய கருணை பொழிந்தனைய
நீற்றுக் கோல வேதியரு நேர்நின் றருளிச் செய்கின்றார், உரு௩அ

3393. "சாருந் தவத்துச் சங்கிலிகேள் ! சால வென்பா லன்புடையான் ;
மேரு வரையின் மேம்பட்ட தவத்தான் ; வெண்ணெய் நல்லூரில்
யாரு மறிய யானாள உரியா ; னுன்னை யெனையிரந்தான்;
வார்கொண் முலையாய்! நீயவனை மணத்தா லணைவாய் மகிழ்ந்"தென்றார்.

3392. (இ - ள்) தோற்றும்...எழுந்து-அவ்வாறு இறைவர் தமது கனவிலே தோன்றக் கண்டபொழுது சங்கிலியார் தொழுது நிலமுறவிழுந்து பரவசராகி மிகவும் அன்பு வெள்ளமாகப் பொங்கி நிகழ எழுந்து ; அடியேன்...என - அடியேன் உய்யும் பொருட்டுத் தேவரீர் எழுந்தருளி வரப்பெற்ற பெரும் பேற்றுக்கு யான் என்ன கைம்மாறு செய்ய வல்லேன் என்று துதிக்க; பெரிய...அருளிச்செய்கின்றார்- பெரிய கருணையே மேலே பொழிந்தாற் போல விளங்கும் திருநீற்றுக் கோலத்தினை உடைய வேதியராகித் தோன்றிய இறைவரும் நேரே நின்று சொல்லியருள்கின் றாராகி; உரு௩அ

3393. (இ - ள்) வெளிப்படை. "சார்கின்ற பெரிய தவத்தினையுடைய சங்கிலியே ! கேட்பாயாக ; என்னிடத்தில் மிகவும் அன்புடையவன் ; மேருமலை யினும் மேம்பட்ட தவத்தினை உடையவன் ; திருவெண்ணெய் நல்லூரில் எல்லாரும் காண யான் ஆளாகக் கொள்ளும் உரிமைபெற்றவன் ; உன்னை வேண்டி என்பால் இரந்தனன் ; வாரணிந்த முலையுடையாய் ! நீ அவனை மணஞ் செய்து மகிழ்ந்து அணைவாயாக" என்று அருளிச் செய்தனர். உரு௩௯

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3392. (வி - ரை) தோற்றும்பொழுது...என - இந்நிகழ்ச்சிகளும் மேல் (3392 - 3396 ; 3405 - 3407;) வருவனவும் சங்கிலியார்பாற் கனுநிலையில் நிகழ்ந் தவை ; மேல் "எய்தியபே ரதிசயத்தா லுணர்ந்து எழுந்து" (3407) என்பது காண்க.

"அடியேனுய்யஎழுந்தருளும் பேற்றுக்கு என் யான் செய்வது ?" என - இது சங்கிலியார் கனவிற்கண்ட இறைவரை நோக்கிக் கூறியது ; யான் என் செய்வது என்க. கைம்மாறு என்பது சொல்லெச்சம் ; "எதிர் செய்குறை யென் கொல் ?" (1338).

கருணை பொழிந்தனைய நீற்றுக்கோல வேதியர் - இஃது இறைவர் காட்சி தந்த கோலம் ; ஆளுடைய அரசுகளுக்குத் திருமறைக் காட்டிலும் (1541 - 1541) திருக் கயிலையிலும் (1628), நம்பிகளுக்குத் திருவெண்ணெய் நல்லூரிலும், திருவாதவூரடி களுக்குத் திருப்பெருந் துறையிலும் கனவிற் காட்டிய திருக்கோலங்கள் இங்கு நினைவு கூர்தற்பாலன. இஃது அவருக்குக் கைவந்த பழங் கோலம் போலும்.

கருணைபொழிந்தனைய நீற்றுக் கோலம் - திருநீற்றின் பொலிவு, உள்ளிருக்கும் உருக்காணாத பெருங்கருணை பொங்கி யிடங்கொள்ளாது மேலே பொங்கி வழிவது போலிருந்தது என்பதாம். வெண்மை அருளாகிய சத்துத்தின் நிறம் என்ப. உருவும் பயனும் பற்றிவந்த உவமம்.

பொழிகின்ற—என்பதும் பாடம். 238

3393. (வி - ரை) "சாரும் தவத்துச் சங்கிலி கேள்......மகிழ்ந்து" இஃது இறைவர் அருளியது; சாரும் - சாரத்தக்க; "சார்புணர்ந்து சார்புகெட வொழுகின்" (குறள்); தவம் - சிவனை நோக்கிச் செய்யப்படுவது; மலச் "சார்பு கெட வொழுகுதல்"; தவம் சாரும் என்னின் வேறெவ்வகைகளையும் கொள்ளவரு மாதலின் தகாத ஏனையவற்றை விலக்கச் சாரும் தவம் என்றார்; பிறிதினியைபு நீக்கிய விசேடனம்.

சாரும் - தவம் - தமது கணவரைச் சார்தற்காகச் செய்யும் தவம் என்ற குறிப்பு மாம். முன்னர்ப் பரவையார் திறத்தும் "மணிகண்டர் கழல்வணங்கிக் கணவரை முன் பெறுவான் போல" (315) என்றது காண்க.

தவத்துச் சங்கிலி - தவத்தான் - என இருபாலும் தவம் பற்றிக் கூறியது இவர்களது நிலைகளும் தொடர்பும் தவத்தாற் சிவச் சார்பாகிய தவச் சார்புபற்றி நிகழ்வனவேயன்றி, ஏனை உலகவரிற்போலப் பவச்சார்புபற்றி நிகழ்வன அல்ல; என்றும், அவ்வாறு கருதுதல் அபசாரமென்றும் உணர்த்துதற்பொருட்டு.

சால என்பாலன்புடையான் - தவத்தான் - உரியான் - என்று இன்னார் எனக் கூறாது அருளியது முன்னமே சங்கிலியார் அறிந்த முன்னையறிவின் றொடர்புணர்வு பற்றி; 3395-ம் பார்க்க.

யான் ஆள உரியான் - "எம்பெருமா னீசன் றிருவருளே மேய வொருவர்க் குரியதியான்" (3365) எனவறிந்துள்ளாராதலின் அவ்வாறு "அருள் மேய ஒருவன் இவன்" என்றறிவித்தபடி.

உன்னைத் தரும்படி என்னை யிரந்தான் - என்க. இரத்தல் - வேண்டுதல்.

மணத்தால் அணைவாய் - விதிமணம் புரிந்து கொள்வாயாக; "தக்க விதி மணத்தால் - நல்கியருளும் பொழுது" (3395) என்று மேற் கூறுதல் காண்க.

மகிழ்ந்து - அணைவாய் என்க; மனமுவந்து ஏற்றுக்கொள்க என்றதாம். மகிழ்ந் திருந்து பின்பு நம்முலகில் அணைவாய் என்ற குறிப்புமாம். "கலந்தணைவாய்" (37).

அவனை - முன்னறி சுட்டு.

யாருங்காண—என்பதும் பாடம். 239

3394. ஆதி தேவர் முன்னின்றங் கருளிச் செய்த பெரிழுதின்கண்,
மாத ரார்சங் கிலியாரு மாலு மயனு மறிவரிய
சீத மலர்த்தா மரையடிக்கீழ்ச் சேர்ந்து வீழ்ந்து செங்கின்று
வேத முதல்வர் முன்னடுக்க மெய்தித் தொழுது விளம்புவார், உசுo

3395. எம்பிரானே! நீரருளிச் செய்தார்க் குரியேன் யானிமையோர்
தம்பி ரானே! யருடலைமேற் கொண்டேன்; றக்க விதிமணத்தால்
நம்பி யாரூ ரருக்கென்னை நல்கி யருளும் பொழுதிமயக்
கொம்பி னுகங் கொண்டவர்க்குக் கூறுந் திறமொன் றுளதென்பார்,

3396. பின்னும் பின்னன் முடியார்முன் பெருக நாணித் தொழுதுரைப்பார்
"மன்னுந் திருவா ரூரின்க ணவர்தா மிகவு மகிழ்ந்துறைவ
தென்னுந் தன்மை யறிந்தருளு மெம்பி ராட்டி திருமுலைதோய்
மின்னும் புரிநூ லணிமார்பீ!" ரென்றார் குன்றா விளக்கனையார், உசஉ

3394. (இ - ள்) ஆதி...பொழுதின்கண் - ஆதிதேவர் அவ்வாறு அருளிச் செய்த பொழுதில்; மாதரார்...சேர்நின்று - அழகுமிகுந்த சங்கிலியாரும் விட்டுணுவும் பிரமனும் அறிதற்கரிய குளிர்ந்த தாமரை மலர் போன்ற திருவடியின் கீழே பொருந்த விழுந்து நேர்நின்று; வேத முதல்வர்...விளம்புவார் - வேத முதல்வராகிய இறைவரது திருமுன்பு நடுக்கம் பொருந்தித் தொழுது சொல்வாராகி, உசo

3395. (இ - ள்) எம்பிரானே...உரியேன் - எமது பெருமானே! தேவரீர் அருளிச் செய்த அவருக்கு நான் உரியவள்; இமையோர்...மேற் கொண்டேன் - தேவர்கள் பெருமானே! தேவரீரது அருட் கட்டளையைத் தலைமேற் கொண்டு பூண்டேன்; தக்க...ஒன்று உளது என்றார் - தகுந்த விதிமணத்தின்படி நம்பியாரூரருக்கு என்னைக் கொடுத்தருளும் போது, இமயக் கொம்பாகிய உமையம்மையாரை ஒரு பாகத்தில் கொண்ட தேவரீருக்குச் சொல்கின்ற திறம் ஒன்று உள்ளது என்பாராய், உசக

3396. (இ - ள்) பின்னும்...உரைப்பார் - புரித்த சடைமுடியாராகிய இறைவர் திருமுன்பு மிகவும் நாணமுற்றுத் தொழுது மேலும் சொல்வாராகி; "மன்னும்...அணிமார்பீர்!" என்றார் - நிலைபெற்ற திருவாரூரினிடத்தே அவர் தாம் மகிழ்ச்சியுடன் நிரந்தரமாக எழுந்தருளுவர் என்னும் தன்மையினை அறிந்து அதற்கேற்றவாறு அருள் செய்தல் வேண்டும்; எமது பிராட்டியாராகிய மலைவல்லியாரது திருமுலை தோய்ந்த மின்னுகின்ற வெண்புரிநூலினை உடைய அழகிய மார்பினையுடையவரே! என்று கூறினார்; குன்றா விளக்கனையார் - குறையாத விளக்குப் போன்ற சங்கிலியார். உசஉ

இம் மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3394. (வி - ரை) ஆதிதேவர் - எல்லாத் தேவர்களுக்கும் முற்பட்டவர்; ஆதியாகிய - முதன்மையுடைய - தேவர் என்றபடியுமாம் "மூளைத்தானை யெல்லார்க்கு முன்னே தோன்றி" (தேவா); முன் - தமது முன்பு.

முன் நின்று - தாமே பொறுப்பு ஏற்றுக் கொண்டு முன்னின்று என்பதுமாம்.

மாதரார் - அழகு நிறைந்த - மாதர் - அழகு. மாதர் - பெண் என்றலுமாம். மேல் வருவன பெண்களி னியல்புபற்றியன என்பது குறிப்பு.

சேர்ந்து - திருவடியில் முடி பொருந்த.

சேர்நின்று - நேரே நின்று; இஃது இறைவர் முன்பும், சிவ பூசையிலும் உடம்பை நேரே நிறுத்த வேண்டும் என்னும் முறைபற்றியது; "தறியிருந்தாற் போலத் தம்மை நிறுத்தி" (திருமந்) "சுருட்குஞ்சி யுடனலையச் செந்நின்று" (1948).

நடுக்க மெய்தி - இறைவர் அறியாத தொன்றை அறிவிப்பார் போன்று விண்ணப்பிக்கத் தொடங்குதலின் நடுக்க மெய்தினார்; "வேண்டத் தக்க தறிவோய் நீ" என்ற உண்மையினை முற்றும் அறிந்தவர் சங்கிலியார்; ஆயினும் ஆர்வத்தினால் விண்ணப்பிக்கின்றாராதலின் நடுங்கினார் என்க; உண்மை அறிந்தோர்க்கே இவ்வாறு மெய்ப்பாடு உளதா மென்க.

விளம்புவார் - என்பார் (3395) - பின்னும் - உரைப்பார் - என்றார் (3396) என்று கூட்டிமுடிக்க. 240

3395. (வி - ரை) எம்பிரானே! - தம்பிரானே - முன்னர் உடன்பாட்டுக் குறிப்பும், பின்னர் அதனில் சில மாறுபாட்டுக் குறிப்பும் உணர்த்துகின்றாராதலின் இரண்டு விளிகள் பட அமைத்துக் கூறினார்; இது கவிநயம். இமையோர் தம்பிரான் - என்று வேறுபடுத்திய குறிப்புக் காண்க.

அருளிச் செய்தார்-உம்மால் அருளிச் செய்யப்பட்டார்; செயப்பாடுவினை; மணம் பற்றி முன்னர்க் கைலையில் அருளிப்பாடும், இன்று ஈண்டுக் கனவில் அருளிப்பாடும் உள்ளடக்கி நின்றது.

தக்க-விதி மணத்தால் - களவு கற்பு என்ற இருதிறத்தினுள் இது விதிமணம் எனப்படும். ஊரவரறிய ஈண்டுச் சிறப்பு உரிமையாளராகிய இறைவரால் தரப்பட்டுச் மேல்உரிய சடங்குடன் நிகழ்த்தப்படும் மணத்தின் மூலம்; "கண்ணிறைந்த பெருஞ் சிறப்பிற் கலியாணஞ் செய்தளித்தார்" (3420) என்பது காண்க.

என்னை நல்கியருளும் பொழுது - பெற்றோரையும் பதியையும் சுற்றத்தையும் விட்டுச் சிவனாருளிற் சென்றமைந்தாராதலின் அவரை மணஞ் செய்து கொடுக்கும் உரிமை பொதுவாயும் சிறப்பாயும் திருவொற்றியூர் இறைவர்பால தாயிற்று என்பார் நல்கியருளும் என்றார்; சிவனடிமையேயாந் திறம்.

இமயக் கொம்பின் ஆகங்கொண்டீர்க்கு - என்றும், மேல் "எம்பிராட்டி திருமுலை தோய் - மார்பீர்!" என்றும் இக்குறிப்புப்படக் கூறுதல் (3396) உமையம்மையாரை நீர்பிரியாது ஒருபாகத்து வைத்தல் போல் எனது நாயகராகும் நம்பியும் என்னைப் பிரியாதுடனிருக்க வைத்தல் முறை என்பது குறிப்பு. முன்னர் (3386) நம்பிகள் இவ்வாறே இறைவர்பால் வைத்துப் போற்றும் குறிப்பும் காண்க.

கூறும் திறன் ஒன்று உளது - திருமணத்தின் முன்னர்க் குறிக்கொள்ள வேண்டிக்கூறும் செய்தி ஒன்றுண்டு என்பதாம். 241

3396. (வி - ரை) பின்னும் பின்னல் - சொற்பின் வருநிலை என்ற சொல்லணி; பின்னல் - பின்னியது போன்று புரித்த சடை; பின்னும் - உரைப்பார் என்று கூட்டுக; பின்னும் - மேலும் தொடர்ந்து,

பெருக நாணி - மிகவும் நாணமடைந்து; நாண் - பெண்மையின் இயல்புக் குணங்கள் நான்கனுள் முதலாவது; தமது நாயகர் தம்மைப் பிரியாது தமக்கே உரியராய் உடனே இருக்க விரும்புதல் பெண்மையின் இயல்புக் குணம்; ஆயின், அதனைப் பிறர்பால் அறிவித்தலும், அதற்குத் துணை செய்யக் குறிப்பாற் கூறுதலன்றி வெளிப்படையாய்க் கூறுதலும் நாணத்தால் பெண்கள் செய்யார்; முன்னர் "மறைவிட் டியம்புவார்" (3367) என்ற குறிப்பும் காண்க. ஈண்டு அதனைக் குறிப்பாற் கூறும் திறம் மேற்காண்க. எம்பிராட்டி - மூன்னைநிலையின் றொண்டின் உரிமை.

மன்னும்...அறிந்தருளும் - திருவாரூரில் மிகவும் மகிழ்ந்துறைவது என்னும் தன்மையறிந்து அதற்கு ஏற்றபடி நெறிசெய்து அருளுவீர் என்றதனால் அவரது பிரிவும், திருஆரூரில் வேறுமொரு நாயகிக்கு உரியராந்தன்மையும், பிரியாமைக்குரிய நிபந்தனை அமைக்க வேண்டுதலும் குறிப்பால் உணர்த்திய நிலை கண்டுகொள்க. அதனை அவ்வாறே உட்கொண்ட இறைவர், மேல் "உனை இகந்து போகாமைக் கொரு சபதம்...அவன் செய்வான்" (3397) என்றருளுவதும் காண்க.

குன்ற விளக்கு அனையார் - குன்ற - கெடுதலில்லாத; வினைபற்றி வந்த உவமம்; முன்னர்த் தூண்டு சோதி விளக்கனையார் (3391) என்ற விடத்துரைத் தவை பார்க்க. தூண்டும் விளக்காயினும் குன்றுதலில்லாதது என்க. 242

வேறு

3397. மற்றவர்தம் முரைகொண்டு வன்றொண்டர் நிலைமையினை
ஒற்றிநக ரமர்ந்தபிரா னுணர்ந்தருளி யுரைசெய்வார்,
"பொற்றொடியா! யுனையிகந்து போகாமைக் கொருசபதம்
அற்றமுறு நிலைமையினா லவன்செய்வா னெனவருளி, உ௪௩

3398. வேயனைய தோளியார் பானின்று மீண்டருளித்,
தூயமன மகிழ்ந்திருந்த தோழனார் பாங்கணைந்து,
"நீயவளை மணம்புணரு நிலையுரைத்தோ; மதற்கவள்பால்
ஆயதொரு குறையுன்னா லமைப்பதுள" தென்றருள, உ௪௪

3399. வன்றொண்டர் மனங்களித்து வணங்கி "யடி யேன்செய்ய
நின்றகுறை யா"தென்ன, "நீயவளை மணம்புணர்தற்
கொன்றியுட னேநிகழ வொருசபத மவள்முன்பு
சென்றுகிடைத் திவ்விரவே செய்க"வென வருள்செய்தார். உ௪௫

3397. (இ - ள்) மற்று...கொண்டு - மற்று அவரது (சங்கிலியாருடைய) மொழிகளை ஏற்றுக்கொண்டு; வன்றொண்டர்...உரை செய்வார் - வன்றொண்டரது மன நிலையினையும் திருவொற்றியூரில் அமர்ந்தருளிய பெருமானார் திருவுளங்கொண் டருளி உரைப்பாராகி; பொற்றொடியாய்...என அருளி - பொன்னாலாகிய தொடி யினை அணிந்தவளே! உன்னைவிட்டுப் பிரிந்து போகாமலிருத்தற்கு அந்தரங்கமாகப் பொருந்தும் நிலையினாலே அவன் ஒரு சபதம் செய்வான் என்றருளிச் செய்து, உ௪௩.

3398. (இ - ள்) வேய் அனைய...மீண்டருளி - மூங்கில் போன்ற தோளினை யுடைய சங்கிலியாரிடத்தினின்றும் மீண்டு சென்றருளி; தூயமனம்...அணைந்து - தூய்மையுடைய மனத்தில் மகிழ்ச்சி கொண்டிருந்த தோழனாரிடத்து வந்து அணைந்து; நீ அவளை...என்றருளி - நீ அந்தச் சங்கிலியை மணம் செய்து கொள்ளும் நிலையினை அவளிடம் சொன்னோம்; அதற்காக அவளிடம் உன்னால் அமைக்க வேண்டிய தாகிய குறை ஒன்று உள்ளது" என்று அருளிச் செய்ய; உ௪௪

3399. (இ - ள்) வன்றொண்டர்...யாது? என்ன - வன்றொண்டராகிய நம்பி கள் மன மகிழ்ந்து பணிந்து அடியேனாற் செய்யப்பட வேண்டிய குறையாவது யாது? என்று வினவ; நீ அவளை...என அருள் செய்தார் - நீ அவளை மணஞ் செய்து கொள்வதற்கு, நீங்காது ஒன்றித்து அவளுடனே உறைவதாக ஒரு சபதத் தினை அவள் முன்பு நீ சென்று சேர்ந்து இவ்விரவிலேயே செய்வாயாக என்று அருளிச் செய்தார். உ௪௫

இம் மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3397. (வி - ரை) மற்று அவர் தம் உரை - மற்று - உரை - தமது இசை வினை ஒருவாறு அளவுபடுத்திய உரை என்ற குறிப்புடன் நின்றது; மற்று - மாறு படுக்கும்; கொண்டு - ஏற்றுக் கொண்டு; மேற்பூண்டு கொண்டு. வன்றொண்டர் -

முன்னும், இனியும் இப்பெயராற் கூறம் குறிப்புப்பற்றி முன் உரைக்கப்பட்டது. (3390 - 3399 - 3401).

வன்றெண்டர்...உணர்ந்தருளி - நிலைமை யாவது இறைவர்பதிகள் சென்று சென்று கும்பிட்டும் பாடியும் வரும் வாழ்க்கை; "பிறபதியும் நயந்த கோலஞ் சென்று தும்பிடவே கடவேனுக்கு" (3401).

உணர்ந்தருளி - எல்லாம் அறிந்த இறைவரை இங்கு உணர்ந்தருளி என்றரு ளியது என்னை? எனின், எல்லாமுணர்தல் பொதுவுணர்வு; ஈண்டுக் கூறியவுணர்வு ஆன்மாக்களின் அறிவிச்சை செயல்களைத் தொழிற் படுத்தற்காக இறைவர் தமது சத்தியை அதிட்டித்து நின்று மேற் கொள்ளும் சிறப்பு உணர்வு.

உரை செய்வார் - என அருளி - என்று கூட்டுக.

இகந்து போகாமைக்கு - இகத்தல் - நீத்தல் - விடுதல்; போகாமைக்கு - போகாதிருத்தற் பொருட்டு.

அற்ற முறு நிலைமையினுல் - தனித்த நிலைமை; அந்தரங்கமாகிய உண்மை நிலை. "அற்ற மெனக்கருள் புரிந்த" (3406). அற்றம் - வருத்தம் எனக்கொண்டு, இதனைச் சங்கிலியார்பாற் சேர்த்தி நீ வருந்தும் நிலையினுலே என்றுரைப்பர் இராம லிங்கத் தம்பிரானுர்; அற்றம் - விருப்பம் - காதல் எனக் கொண்டு உன்மேல் காதல் கொண்ட காரணத்தால் என்றதும் குறிப்பாம் என்பர் இராமநாதச் செட்டியார். "வம்பணிமென் முலையவர்க்கு மனங்கொடுத்த" என்பது காண்க.

அருளி - மீண்டருளி - அணைந்து - அருள - (3398) வன்றெண்டர் வணங்கி - என்ன - செய்க என - அருள் செய்தார் (3399) என்று இம் மூன்று பாட்டுக்களையும் கூட்டி வினை முடிபு கொள்க. 243

3398. (வி - ரை) வேயனைய தோளியார் - "வேயனைய தோளுமை" என்னும் தேவார ஆட்சி போற்றப்பட்டது; உமையம்மையாருக்குத் தொண்டு செய்தலின் அத்தன்மை பெற்றவர் என்ற குறிப்புமாம்.

மீண்டருளி - அணைந்து - அங்கு நின்றும் மறைந்து இங்கு வெளிப்பட்டு; மீளு தலும் அணைதலும் இறைவர்பாற் கூறுதல் உபசாரம்.

தூய மனம் - பின்னர் (3402) நம்பிகள் இறைவர்பால் வேண்டிக் கொள்வது பற்றி, நம்பிகள்பால் வேறுபடக் கூறி அபசாரப்படுவாரு முளராதலின், அவர்கள் அவ்வாறு அபசாரப்பட்டுச் சிவாபராதத்துக் காளாகி நரகிலழுந்தா வண்ணம் கருணை யினுல் ஆசிரியர் எச்சரித்துத் தெருட்டியருளியவாறு; நம்பிகளது திருவுள்ளம் எவ்விதமாகிய மாசுமற்று விளங்குவது என்க. இதுபற்றி மேலும் (1402) காண்க.

தோழனூர் - உயிர்ப்பாங்கர்; "முடியார்பாற் பெறுவேன்" (3384); "நண் பால்" (3388) என்ற விடங்களிலுரைத்தவை பார்க்க. ஈண்டும், பின்னர்ப் பரவை யார் திறத்தும் இறைவர் நிகழ்த்தும் அருள் விளையாடல்களைப் பற்றிப் பிழைபடக் கூறுவார் இத்தன்மையினைக் குறிக்கொள்ளக் கடவர். ஈண்டு இப்புராணமுடைய ஏயர்கோன் கலிக்காமர் சரிதவரலாற்றின் குறிப்பும் கண்டு கொள்க.

உன்னுல் அமைப்பது ஒரு துறை உளது - என்க.

அமைப்பது - நிறைவேறச் செய்வது; துறை - மேற் செய்ய நின்ற கடன்; அதற்கு - அது முடிப்பதற்கு; ஒருதுறை - என்றதனுல் அவ்வளவு மட்டிலன்றி வேறு தடையிலது என்பதும், மற்று அவளது இசைவும் குறிப்பிற் கூறியவாறு கண்டு கொள்க. மேலும் "துறை" (3398) என்பது காண்க. 244

3399. (வி - ரை) செய்ய நின்ற துறை - செய்யக் கடவதாய் எஞ்சிநின்ற செயல் - கடமை ; செய்து நிறைவாக்க நிற்பதாதலின் துறை எனப்பட்டது.

ஒன்றி உடனே நிகழ - ஒன்றுதல் - சேர்தல். உடனே நிகழ்தல் - பிரியாது உடனிருத்தல்.

ஒன்றுதல் - அகமாகிய மனவொருமைப்பாடும், உடனிகழ்தல் புறமாகிய உடனுறைதலும் குறித்தலின் கூறியது கூறலன்மை யுணர்க ; இது திருவொற்றியூரில் பிரியாது அமர்தல் குறித்தது ; 3414 பார்க்க.

அவள் முன்பு சென்று கிடைத்து இவ்விரவே செய்க - அவள் முன்பு - என்றது அவள் நேரில் கண்டும் கேட்டும் நிற்க என்றதாம் ; சென்று கிடைத்து என்றது முற்பட்டுச் செல்ல வேண்டியதும் கிட்டுவதும் உன் செயலாக நிகழ்தல் வேண்டுமென்றதாம்; இவ்விரவே என்றது சபதம் நிகழும் காலம் குறித்தது - "காலமது வாகவே" (3409) என்பது காண்க ; மணம் புணர்தற்குச் - சபதம் செய்க என்றது மணம் புணர்தற்கு இன்றியமையாத முற்செயலாக என்றதாம்.

நிகழ்வ தொரு—என்பதும் பாடம். 245

3400. "என்செய்தா லிதுமுடியு மதுசெய்வ னியா ;னதற்கு
மின்செய்த புரிசடையீ! ரருள்பெறுதல் வேண்டு"மென,
முன்செய்த முறுவலுடன் முதல்வரவர் முகநோக்கி
"புன்செய்கை தனக்கினியென் வேண்டுவ ?"தென் றுரைத்தருள,

3401. வம்பணிமென் முலையவர்க்கு மனங்கொடுத்த வன்றொண்டர்
"நம்பரிவர் பிறபதியு நயந்தகோ லஞ்சென்று
கும்பிடவே கடவேனுக் கிதுவிலக்கா" மெனுங்குறிப்பாற்
றம்பெருமான் றிருமுன்பு தாம்வேண்டுங் குறையிரப்பார், உ௪௭

3402. சங்கரர்தாள் பணிந்திருந்து தமிழ்வேந்தர் மொழிகின்றார்
"மங்கையவ டனைப்பிரியா வகைசபதஞ் செய்வதனுக்
கங்கவளோ டியான்வந்தா லப்பொழுது கோயில்விடத்
தங்குமிடந் திருமகிழ்க்கீழ்க் கொளவேண்டு" மெனத்தாழ்ந்தார்.

3400. (இ - ள்) என் செய்தால்...யான் - எந்தச் செயலைச் செய்தால் இத்திருமணம் முற்றுப்பெறுமோ அதனை யான் செய்வேன் ; மின்செய்த புரிசடையீர் - மின்னொளி விளங்கும் புரித்த சடையினையுடைய இறைவரே !; அதற்கு அருள் பெறுதல் வேண்டுமென - அதற்குத் தேவரீரது திருவருளை அடியேன் பெற வேண்டும் என்று சொல்ல ; முன் செய்த...முகநோக்கி - முன்னாற் றோன்றும் புன்சிரிப்புடனே முதல்வராகிய இறைவர் அவரது முகத்தினை நோக்கி ; உன் செய்கை...வேண்டுமென்று - சபதம் செய்வதாகிய உனது செயலை நீ முடித்தற்கு இனி என்ன வேண்டுவது என்று ; உரைத்தருள - வினவியருள, உ௪௬

3401. (இ - ள்) வம்பணி...வன்றொண்டர் - கச்சு அணிந்த இளமுலையாராகிய சங்கிலியாருக்குத் தம் மனத்தை ஒப்புக் கொடுத்த வன்றொண்டர் ; நம்பர் இவர்...குறிப்பால் - நம்பராகிய இறைவர் இவர் பிறபதிகளிலும் விரும்பி எழுந்தருளியிருக்கும் திருக்கோலங்களை அங்கங்கும் சென்று சென்று கும்பிடுதலே கடனாகவுடைய எனக்கு இது தடையாகும் என்று கொண்ட திருவுள்ளக் குறிப்

பினாலே ; தம் பெருமான்...இரப்பார் - தமது பெருமான் திருமுன்பில் தாம் வேண்டுகின்ற குறையினை இரப்பாராகி, உசஎ

3402. (இ - ள்) சங்கரர்...மொழிகின்றார் - சங்கராகிய இறைவரது திருவடிகளைப் பணிந்திருந்து தமிழ் வேந்தராகிய நம்பிகள் சொல்வாராய் ; மங்கைதனை ...வந்தால் - மங்கையாகிய சங்கிலியைப் பிரியாதிருப்பதற்குரிய சபதத்தைச் செய்வதற்காக அங்கு உமது திருமுன்பு நான் வந்தால் ; அப்பொழுது...வேண்டும் என - அப்பொழுது திருக்கோயிலினை விட்டு நீங்கித் தேவரீர் தங்கும் இடம் திருமகிழின் கீழே இடமாகக் கொண்டெழுந்தருள வேண்டும் என்று ; தாழ்ந்தார் - வணங்கினார்.

இம் மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3400. (வி - ரை) இது - இத்திருமணம் ; முடியும் - நிறை வேறும் ; அது - என்ன செய்தால் முடியுமோ அதனை ; " ஒரு சபதம் செய்க " என்று இறைவர் பணித்தாராதலின் இதனை முடித்தற்குச் சபதஞ் செய்ய வேண்டுவதுண்டாயின் அதனை என்பதாம் ; சபதம் செய்து மணம் பெறுதல் வழக்கில் இல்லையாதலின் இவ்வாறு உடன்பட்டு வினாவிக் கூறினார்.

அதற்கு...வேண்டும் - சடையீரே ! அதனுக்கு உமது அருள் பெற வேண்டும் ; சடையீராகிய உமது அருட்செயலின் துணையும் ஒன்று வேண்டும் என்பது.

முன் செய்த முறுவல் - முன் செய்த - முன்னே சிறப்பாகத் தோன்றும் ; முறுவல் - புன்னகை ; பின்னர்ச் சங்கிலியாருக்கு உணர்த்திய (3405) வகையால் நம்பிகள்பாற் செய்யும் இத்திருவருள் நிலை வேறு என்பது குறிப்பு.

உன்செய்கை...என்வேண்டுவது - இனி அவள்பால் சென்று சபதம் செய்து மணமுடித்துக் கொள்வது உன் கடமையும் பொறுப்புமாம் ; அவ்வாறிருக்க மற்றுச் செய்ய வேண்டுவதொன்று மில்லையே என்பது வினாவின் குறிப்பு.

முதல்வர் தாம்—என்பதும் பாடம். 246

3401. (வி - ரை) வம்பணி மென் முலையவர் - நங்கை சங்கிலியார் ; வம்பு - கச்சு ; மங்கைப்பருவம் குறித்தது ; மனங் கொடுத்தல் - மனமுழுதும் அவர்பால் வைத்துத் தம் வசமறுதல்.

" நம்பரிவர்......இது விலக்காம் " எனுங் குறிப்பால் - நம்பிகளது திருவுள்ளத்திற் சபதம் செய்வதனால் விளையும் விளைவுபற்றி எழுந்த குறிப்பு. இது - இவ்வாறு சபதம் செய்தல் ; விலக்கு - தடை ; குறிப்பு - மனநிகழ்ச்சி ; " அர்ச்சனை பாட்டே யாகு மாதலான் மண்மே னம்மைச், சொற்றமிழ் பாடு கென்றான்" (216) என்ற சிவனாணையின்படி அங்கங்கும் சென்று பாடிவருவதே கடமையாகவுடையேன்; சங்கிலியாரைப் பிரியாமைக்குச் சபதஞ் செய்தல் திருவொற்றியூரினைப் பிரியலாகாது என்றதாகும் ; அதனால் ஏனைப் பதிகளிற் சென்று கும்பிடுதலுக்குத்தடையாம் - என்று உட்கொண்டனர் ; சங்கிலியாரையும் உடனழைத்துப் பிறபதியும் கும்பிடலாமே எனின் ? அற்றன்று ; அவ்வாறு செய்தல் உலகவாழ்க்கையிற் கட்டுண்டுழலும் எம் போன்ற கடையேமாகிய ஏனமக்களுக்கே இயல்வதொரு செயலாம் ; முன்னரும், இனியும், பரவையாரையும் நம்பிகள் உடன்கொண்டு செல்லாமையும் கண்டுகொள்க ; நம்பிகள் இவ்விருவர்பால் நேர்ந்த விளைவு கழியும் வகையளவினால் உலகவாழ்விற் சென்றனரேயன்றி மற்றை அவரது வாழ்வெல்லாம் சிவவாழ்வேயாகி உலகுக் குறுதி பயத்தற்கே நிகழ்ந்தன என்பதும் உய்த்துணர்ந்து கொள்க ; " மாதவஞ் செய்த தென்றிசை வாழ்ந்திடத், தீதி லாத்திருத் தொண்டத் தொகைதரப், போது

வார் " (35) என்று நம்பிகள் திருவவதார உள்ளுறை விளக்கப்பட்டது; இரண்டு திருமணங்களும் அவ்வுள்ளுறைக்குத் துணையாய் நிற்குமளவே நிகழ்ந்தன; ஏனை உலகவாழ்வுகளின் நிகழ்ச்சிகள் எவையும் சாராமல் இறைவர் நடுத்தாட் கொண்டதும் காண்க. ஆதலின் உலகருள் ஒருவராகக், கடையேமாகிய எம்போலியர் வாழ்க்கையினுடன் ஒருங்கு வைத்து நம்பிகளது தூய சிவவாழ்க்கையினை எண்ணுதல் பெருஞ்சிவாபராதமாம்; "தூயமனம்" (3398) என்றதும் காண்க. இறைவரை மகிழின் கீழே தங்குமிடங் கொள்ளும்படி நம்பிகள் வேண்டிய திறத்தினையும் இக் கருத்துக்களின் றொடர்பு பற்றி உணர்ந்து கொள்க; ஈண்டும், பின்னர்ப், பரவையார் திறத்தும் நிகழ்பவைகளைப்பற்றி மாறுபாடாகச் சில மந்தமதிகள் கூறும் புறங்கூற்று மொழிகள் பொருளற்றன என்றொதுக்குக.

வேண்டும் துறை - தமக்குச் செய்ய வேண்டிய உதவி - உபகாரம்.

இரப்பார் - இரந்து வேண்டுவார்; உலகர்க்கு ஒவ்வாது போன்று உள்ள நிலையாதலின் இரந்து வேண்டுதல் வேண்டப்பட்டது.

உரைப்பார்—என்பதும் பாடம். 247

3402. (வி - ரை) சங்கரர் - சுகத்தைச் செய்பவர் என்ற காரணக் குறிப்புப் படக் கூறியவாறு.

தமிழ்வேந்தர் - நம்பிகள்; மேற்கூற நின்ற வேண்டுதலுள் தமிழ்வளமிக்க தன்மைக் குறிப்பு.

அங்கு - திருக்கோயிலிற் றிருமுன்பு; அப்பொழுது தங்குமிடம் கோயில்விடத் திருமகிழ்க்கீழ்க் கொள்ள வேண்டும் என்க. அவ்வொரு கணம் திருக்கோயிலி னின்று மறைந்து திருமகிழின் கீழ் விளங்கி நிற்க என்பதாம்; அப்பொழுது - அவளுடன் நான் வரும் அச் சிறிய நேரம் என்பதாம்; தங்குமிடம் - விளங்க வீற் றிருக்கும் இடம். கோயில்விட - மகிழ்க்கீழ் - என்றது சிவபெருமானது பொது வகையாகிய எங்கு நிறையும் தன்மையன்றிச் சிறப்பு வகையாற் சிவலிங்கக் குறியி னிடத்து விளங்கும் விளக்கம். விறகிற் றீப் போலவும், பசுவின் உடல் முழுதும் நிறையும் பால் முலையினிடத்து விம்மி வெளிப்படுவது போலவும் சிவக்குறியினிடத் துச் சிவனைக் கண்டார்க்குச் சிவன் விளங்குவன் என்பது ஆகமம். இங்கு நம்பிகள் வேண்டுவது அவ்வாறு விளங்காது மறைந்து நிற்றலையேயாம் என்க. இவ்வாறன் றிக், கோயிலின் அப்பொழுது இல்லாமல் மகிழ்க்கீழே இருப்பது வேண்டினர் நம்பிகள் என்னில் அஃது இறைமைக் குணங்களுள் இன்றியமையாது சிறந்ததாகிய, எங்கும் நீக்கமற நிறைகின்ற தன்மையுடன் மாறுபட்டு இறைவராலியலாத தொன் றாகும் என்க; "நீங்கினு ரெப்பொருளு நீங்காத நிலைமையினர்" (3334) என்ற கருத்துக் காண்க.

மகிழ்க்கீழ்த் தங்குமிடம் கோள வேண்டும் - எனத் தாழ்ந்தது, சங்கிலியாரை வஞ்சிக்கும் எண்ணமாம் என்று ஈண்டுச் சிலர் குறை காண்பர்; அற்றன்று; நம்பி கள் திருவுள்ளம் சங்கிலியாருடன் இன்பமுற்றிருப்பதினும், பதிதோறும் சென்று கும்பிடுதலிலேயே முனைந்திருந்ததாதலின் அதுவே அவரது உள்ளம் மிக நாடி அதற் குரிய வழி தேடியது என்க; இது சபதம் செய்தும் அதனைக் கடத்தலால் வாத்தக்க துன்பத்தையும் பொருட்படுத்தாது நீங்கியதனாலும், அதுபற்றிய துன்பங்களை மனமார அனுபவிக்கத் துணிந்ததனாலும் புலனாகும். 248

3403. தம்பிரான் றோழரவர் தாம்வேண்டிக் கொண்டருள
உம்பர்நா யகருமதற் குடன்பாடு செய்வாராய்

"நம்பிநீ சொன்னபடி. நாஞ்செய்து" மென்றருள
"எம்பிரா னே!யரிய தினியெனக்கென்?" எனவேத்தி, உசக

3404. அஞ்சலிசென் னியின்மன்ன வருள்பெற்றுப் புறம்போதச்
செஞ்சடையா ரவர்மாட்டுத் திருவிளையாட் டினைமகிழ்ந்தோ ?
வஞ்சியிடைச் சங்கிலியார் வழியடிமைப் பெருமையோ ?
துஞ்சிருண்மீ ளவுமணைந்தா ரவர்க்குறுதி சொல்லுவார். உருo

3403. (இ - ள்) தம்பிரான் தோழரவர்...கொண்டருள - தம்பிரான் றோழராகிய நம்பிகள் தாம் அவ்வாறு வேண்டிக் கொள்ள ; உம்பர்...செய்வாராய் - தேவர் தலைவராகிய இறைவரும் அதற்குத் தாம் இசைவாராகி; நம்பி...என்றருள - நம்பி ! நீ கூறியபடியே நாம் செய்வோம் என்றருளிச் செய்ய ; எம்பிரானே !... என் ? என ஏத்தி - எமது பெருமானே ! இனி எனக்கு எச்செயல்தான் அரிய தாகும் ; (கிடைத்தற்கரிய தொன்றுமில்லை) என்று துதித்து, உசக

3404. (இ - ள்) அஞ்சலி...போத - தலையின்மேற் கைகளை அஞ்சலியாகக் கூப்பி அருள் விடைபெற்றுப் புறம்பு போக ; செஞ்சடையார் - சிவந்தசடையினை யுடைய சிவபெருமான் ; அவர்...மகிழ்ந்தோ ? - அந்நம்பிகளிடத்து ஒரு திருவிளை யாட்டினை மகிழ்ந் தெண்ணியோ ?; (அன்றி,) வஞ்சியிடை...பெருமையோ ? - வஞ்சிக்கொடி போன்ற இடையினையுடைய சங்கிலியாரது இடைவிடாத வழியடி மைப் பெருமையினை எண்ணியோ ? (அறியோம்); துஞ்சிருள்...சொல்லுவார் - தூங்கும் இருளிலே மீண்டும் அவர்பால் அவர்க்குறுதி சொல்லுவாராகி ; மீளவும் அணைந்தார் - மீண்டும் அணைந்தனர். உருo

இந்த இரண்டுபாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3403. (வி - ரை) தோழரவர் - வேண்டிக் கொண்டருள - என்றருள - தோழராதலின் அவர் வேண்ட மறுது உடன்பட்டுரைத்தனர் என்பது குறிப்பு. முன்னர்த் " தோழனர் " (3398) ; "நண்பால் " (3388) என்றவை காண்க.

உடன்பாடு செய்வாராய் - உடன்படுவாராய் ; அதற்கு, உடன்...கூடவே - அதனுள்ளேயே ; பாடு செய்வாராகி - அதற்கு மாறுபாடும் உடன் செய்வாராகி என்ற பிற்சரித விளைவுக் குறிப்பும் ஆம் ; பாடு - மாறுபாடு ; இது கவிநயம்.

நம்பி...செய்தும் - நம்பி - நம்பியே ! விளி ; நம்பி - நம்புதல் கொண்டு என்ற தொனியும் காண்க.

எனக்கு இனி அரியது என் ? - ஒன்று மரியதில்லை என்று வினு எதிர்மறை குறித்தது.



3404. (வி - ரை) அருள்பெற்று - திருவருள் விடைபெற்று ; புறம் - தங்கிய கோயிற் புறமாகிய இடத்தின் புறத்தே தமது திரு மாளிகைக்கு.

அவர்மாட்டு - நம்பிகளிடத்து ; வழியடிமைப் பெருமையோ ? - முன்னர்த் திருக்கயிலையிற் செய்த அடிமைத்திறத்தின் பெருமைபற்றியோ ? ; வழி - அதன் வழியே நிலவுலகத்தில் அந்நிலைவோடும் செய்து வரும் " ஏகனுகி இறைபணி " நிற்கும் பெருமை ; மகிழ்ந்தோ ? பெருமையோ ? என்று இவ்வாறு ஐயவினுக்கள் போல இரண்டு வினுக்களை வைத்து, நிகழும் காரணம் இன்னதென்று உய்த்துணரத் தக்க இயல்புடன் அதனுள்ளே சரித நிகழ்ச்சிக் குறிப்பும் பெறக் கூறுதல் ஆசிரியரது சிறந்த தெய்வக் கவிநலங்களுள் ஒன்று ; " தம்மேலைச் சார்புணர்ந்தோ ? சாரும்

பிள்ளைமை தானோ?" (1961); "அருளாலேயோ? மேனியினி லேயு மசைவி னையர்வாலோ? அறியோம்" (1891) என்றவை காண்க; ஈண்டுச் சங்கிலியார்பால் தாமே மீளவுந் தருளிய செய்தியை நம்பிகள் பின்னர்ச் சரித விளைவானன்றி அறிய மாட்டாது நிற்றலின் சங்கிலியாரது வழியடிமைப் பெருமையே காரணம் என்று கருதி யுணரவைத்தார்; "அவர்க்குறுதி சொல்லுவார்" என்று மேல் விளக்குதலும் காண்க. வழியடிமை - சங்கிலியார் அவதரித்த வேளாளர் குலம் சிவனுக்கு வழிவழி யடிமை செய்யும் செம்மை யுடையது என்ற குறிப்பும் காண்க. "வல்லவா றதற்கே பிறந்தவே ளாளர் வழிவழி யடிமையா யுள்ளார்" (பேரூர்ப் புராணம் - பள்ளுப் படலம்-38); "மேலாங் கொள்கை வேளாண்மை மிக்க திருஞா யிறுகிழவர்" (3361) என்ற குறிப்பும் காண்க.

திருவிளையாட்டு - இறைவர் உயிர்களிடத்துச் செய்வன எல்லாம் ஐந்தொழில் திருவிளையாட்டின் பாற்படும் என்ப; உயிர்க்குறுதி செய்யும் பயத்தன என்றலும் உண்மைநூற் றுணிபாம்.

"சொன்னவித் தொழில்க ளென்ன காரணந் தோற்ற வென்னின் முன்னவன் விளையாட்டென்று மொழிதலு மாமு யிர்க்கு, மன்னிய புத்தி முத்தி வழங்கவு மருளான் முன்னே, துன்னிய மலங்க ளெல்லாந் துடைப்பதுஞ் சொல்ல லாமே"(சித்தி - 1-57). "திருவிளையாட்டு" (3505)

துஞ்சு இருள் - "பேயு முறங்கும் பிறங்கிருள்" (3476) "ஊரெலாந் துஞ்சி யுலகெலாம்...பாடவிந்த" (11-ம் திருமுறை - திருவாரூர் - மும் - கோ. 26)

துஞ்சுதல் - ஈண்டு உறங்குதல்; துஞ்சிருள் - இரவு நடுயாமவேளை; பின்னர்ப் பரவையாரிடம் நம்பிகளுக்காக இறைவர் இருமுறை தூது சென்ற காலமும் இதுவே யாதலும், ஆண்டு மிவ்வாறே இருமுறை சென்றருள்வதும் காண்க. தூங்கிருள் நடுநல் யாமம்" (திருவிசைப்பா)

அவர்க்குறுதி சொல்லுவார் - இறைவர் இவ்வாறு நம்பிகளது திருவுள்ளத்தின் அந்தரங்கத்தினை அவரறியாமே சங்கிலியார்பால் மீளவும் சென்றறிவித்தல் சங்கிலியா ருக்கு உறுதி கூறுதற் பொருட்டே என்று முன்கூறிய ஐயவினுக்களை விடுத்த முறை யும் காண்க.

சொல்லுவார் - அணைந்தார் - என்று கூட்டுக. 250

3405. சங்கிலியார் தம்மருங்கு முன்போலச் சார்ந்தருளி
"நங்கையுனக் காரூர னயந்துரூ ளுறக்கடவன்;
அங்குநமக் கெதிர்செய்யு மதற்குநீ யிசையாதே
கொங்கலர்பூ மகிழ்க்கீழே கொள்க"வெனக் குறித்தருள, உ௫௧

3406. மற்றவருங் கைகுவித்து "மாலயனுக் கறிவரியீர்!
அற்றமெனக் கருள்புரிந்த வதனிலடி யேனுகைப்
பெற்றதியா" னெனக்கண்கள் பெருந்தாரை பொழிந்திழிய
வெற்றிமழ விடையார்தஞ் சேவடிக்கீழ் வீழ்ந்தெழுந்தார். உ௫௨

3405. (இ - ள்) சங்கிலியார்...சார்ந்தருளி - சங்கிலியம்மையாரிடத்து முன்பு போலத் தோன்றியருளி; நங்கை...கடவன் - நங்கையே! நம்பி ஆரூரன் உனக்கு விருப்பத்துடனே சபதம் செய்வான்; அங்கு...குறித்தருள - ஆனால் அச்சப தத்தினை அங்குத் திருக்கோயிலில் நம் எதிரில் செய்வதற்கு நீ இசையாதே மணம்

விரியும் மலர்கள் நிறைந்த மகிழமரத்தின் கீழே கொள்வாயாக" என்று குறித்து அருள் செய்ய, உ௫௧

3406. (இ - ள்) மற்றவரும் கைகுவித்து - அதுகேட்ட அச்சங்கிலியாரும் கைகூப்பித் தொழுது; "மாலயனுக் கறிவரியீர்...பெற்றதியான்" என - மாலுக்கும் அயனுக்கும் அறிவதற்கரியவரே! உண்மையாகிய அந்தரங்கத்தை எனக்கு அருளிச் செய்த அதனால் அடியேனாக ஏற்றுக் கொள்ளப் பெற்றேன் யான் என்று கூறி; கண்கள்...எழுந்தார் - கண்களினின்றும் பெருந்தாரையாக நீர்பெருகி வழிய வெற்றியினையுடைய இறைவாது சேவடிக்கீழே விழுந்து பணிந்து எழுந்தனர். உ௫௨

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3405. (வி - ரை) முன் போலச் சார்ந்தருளி - முன் வந்த கோலத்திலே கனவிலே சேர்ந்தருளி.

சூளுறக்கடவன் - சபதம் செய்வான்; சூள் - சபதம்; சூள் உற-சபதம் செய்ய; உறக்கடவன் - செய்வான்; செய்ய இசைந்துள்ளான் என்பது.

அங்கு - நமக்கெதிர் - அங்கு - அப்போது - அவ்விடத்தில் - எனக் காலமும் இடமும் குறித்தது.

நமக்கு எதிர் - நமது எதிரிலே; திருமுன்பில்.

நமக்கு - நம்முடைய; வேற்றுமை உருபுமயக்கம்.

எதிர் - ஏழனுருபு விரிக்க.

இசையாதே - கோள்க - என்று கூட்டுக; இசையாதே - இசையாமல்; வினை எச்சமாயன்றி ஏவல் வினைமுற்றாகக் கொள்ளினுமாம்.

கொங்கு அலர் பூமகிழ் - மகிழமரத்தின் இயல்பினை விரித்தவாறு; "மகிழினிது கந்தம்" என்றபடி இனிய மெல்லிய மணம் விரிந்து வீசும்பூக்களை அளவிறப்பக் கொண்டு விளங்குவது மகிழ்; கொங்கு - மணம்; அலர் - விரிந்து வீசுதல். வாளும் பருவத்திலும் வீசுதல்.

கோள்க - சபதம் செய்யக் கேட்டு ஏற்றுக் கொள்க.

கோள்வதென—என்பதும் பாடம். 251

3406. (வி - ரை) மற்றவரும் - மற்றும் அதுகேட்ட சங்கிலியாரும்; மற்று - என்றது முன்னுரைத்ததனை ஒருவாறு மாற்றும் என்ற குறிப்புடன் நின்றது; இக் குறிப்புப்பட முன்னரும் மற்றவர்தம் (3397) என்றது காண்க.

அற்றம் - உண்மை - இரகசியம் - அந்தரங்கம்; முன், "அற்றமுறு நிலைமையினால்" (3397) என்றது காண்க.

அதனில் - அதனால்; அருளிய அச் செயலினால்; அதனில் அடியேனாகப் பெற்றது யான் - அருள்புரிந்த அச்செயலின் மூலம் யானும் ஒரு அடியேனாக ஏற்றுக் கொள்ளப் பெற்றனன் என்பது போதருகின்றது; அதனில் - அற்றம் அருள் புரிந்த அதனினும் - பேற்றினும் - அடியேனாகப் பெற்றது பெரும்பேறு என்ற குறிப்பும் காண்க.

கண்கள் பெருந்தாரை பொழிந்திழிய - இஃது இறைவரால் அடிமையாக ஏற்றுக் கொள்ளப் பெற்ற அருளின் செயல் கண்டபோது அவரது அளவிறந்த பெருங்கருணையினையும் தமது அளவிறந்த சிறுமையினையும் எண்ண எண்ணப் பெருகும் அன்புக் கண்ணீர்; "எத்தனையு மரியநீ யெளியை யானு யெனையாண்டு தொண்டிரங்கி யேன்று கொண்டாய்...இத்தனையு மெம்பரமோ வைய வையோ

வெம்பெருமான் றிருக்கருணை யிருந்த வாறே" (தேவா - தாண்) என்ற மனநிலை யினால் வருவது. இப்படி எப்போதும் எண்ணியதனால் அரசுகளது திருவடிவம் "மார்பாரப் பொழிகண்ணீர் மழைவாரும் திருவடிவும்", "வந்திழி கண்ணீர் மழை யும்", "மழைவாரு மிணைவிழியும்" என்று போற்றப்பட்டது.

கண்களி னின்றும் நீர் பெருந்தாரையாகப் பொழிந்து வழிய என்க. நீர் - சொல்லெச்சம்; பொழியப்பட்டு என்னும் செயப்பாட்டு வினை பொழிந்து எனச் செய்வினையாக நின்றது; கண்ணீர் பொழிதல் - பணிதல் இவை கனா நிலையினும் நிகழ்வன. 252

3407. தையலார் தமக்கருளிச் சடாமகுட னெழுந்தருள
எய்தியபோ ததிசயத்தா லுணர்ந்தெழுந்தவ் விரவின்கட்
செய்யசடை யாரருளின் றிறநினைந்தே கண்டுயிலார்
ஐயமுட னருகுதுயில் சேடியரை யணைந்தெழுப்பி, உருஙு

3408. நீங்குதுயிற் பாங்கியர்க்கு நீங்கலெழுத் தறியுமவர்
தாங்கனவி லெழுந்தருளித் தமக்கருளிச் செய்ததெலாம்
பாங்கறிய மொழியவவர் பயத்தினுட னதிசயமுந்
தாங்குமகிழ்ச் சியுமெய்தச் சங்கிலியார் தமைப்பணிந்தார். உருச

3407. (இ - ள்) தையலார்...எழுந்தருள - தையலாராகிய சங்கிலியாருக்கு முன் கூறியபடி அருளிச் செய்து சடை முடியினை உடைய பெருமான் மறைந்து நீங்க; எய்தியபோது அதிசயத்தால் உணர்ந்தெழுந்து - இந்நிகழ்ச்சி பொருந்தப் பெற்ற அப்போது அதிசயமாகிய மனநிலையினாலே துயிலுணர்ந்து எழுந்து; அவ்விர வின்கண்...கண்துயிலார் - அந்த இரவிலே சிவந்த சடையினையுடைய இறைவரது பெருங்கருணையின் றிறத்தினை எண்ணி எண்ணி நின்றமையால் உறக்கம் பெறாதவ ராகி; ஐயமுடன் - ஐயத்தினுடனே; அருகுதுயில்...எழுப்பி - தம்மருகே துயில் கின்ற சேடியர்கள் பாலணைந்து எழுப்பி; உருங

3408. (இ - ள்) துயில் நீங்கு பாங்கியர்க்கு - (இவ்வாறு) துயிலின் நீங்கும் சேடிமார்களிடம்; நீங்கல்...மொழிய - "நீங்கல்" என்ற எழுத்தினை எழுதி அதனால் எழுத்தறியும் பெருமான் எனப் பெற்ற திருவொற்றியூரிறைவர் தாமே தமது கனவில் இருமுறையும் எழுந்தருளித் தம்பால் அருளிச் செய்தவற்றை யெல்லாம் முறைமைபெற அறியும்படி சொல்ல; அவர்...பணிந்தார் - அச்சேடி யர்கள் அச்சத்துடனே அதிசயமும் பொருந்திய மகிழ்ச்சியும் கொள்ளச் சங்கிலி யாரைப் பணிந்தனர். உருச

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3407. (வி - ரை) எழுந்தருள - மறைந்தருள; எய்தியபோது - இவ்வாறு பொருந்தப்பெற்றபோது.

அதிசயம் - "அதிசயம் கண்டாமே" (திருவா.)

உணர்ந்து - எழுந்து - துயில்நீங்கி விழித்து எழுந்து.

உணர்தல் - துயில்நிலையினின்றும் நனவுநிலை யடைதல். முன்னது சொப் பனம் என்றும், பின்னது சாக்கிரம் என்றும் கூறப்படும் அவத்தைகள்.

அவ்விரவின்கண்...நினைந்தே - அவ்வோரிரவிலே இருமுறை தம் பொருட்டுத் தோன்றி யருள்புரிந்த கருணைப் பெருக்கினை எண்ணியதனால்.

அவ்விரவின்கண் - கண்டுயிலார் - என்று பின்னரும் கூட்டுக ; நினைந்தவை இரவின் முற்பகுதி நிகழ்ச்சிகள் ; துயிலாமை பிற்பகுதி வைகறைவரை நிகழ்ச்சி.

கண்டுயிலார் - துயிலார் என்றவே யமையுமாயினும், கண்மூடும் முயற்சி தானும் நிகழாமை குறிக்கக் கண் துயிலார் என்றார் ; நல்ல கனவு காணில் அவ்விரவு அதன்பின் துயில் கொள்ளாது திருநீறணிந்து சிவனை நினைந்திருத்தல் வேண்டு மென்பது விதி. ஈண்டும் அக்கனவின் நிகழ்ச்சிகளின் பின்னர்ச் சங்கிலியாரும் அவ்வாறே சிவனருளை நினைந்து துயிலாதிருந்தனர் என்பதாம்.

ஐயமுடன் - ஐயம் என்றது கனவின் நிகழ்ச்சிகள் உண்மையானவையோ ? அன்றி, நோய் - பிறழ்வுணர்ச்சி - முன்னினைவு - முதலியவற்றால் நிகழும் பொய்படும் காட்சியோ ? என்பது முதலிய ஐயப்பாடு ; மெய்யாயில் அவ்வாறே கொள்ளப் பட்டுப் பலன்தருவனவோ ?, பிறிதுபடப் பொருள்கொள்ளத் தக்கனவோ ? என்றலு மாம். கனவுடம்பிற்கு நனவுடம்பு வேறாதலின் இவ்வாறு நிகழ்ந்தது யாதெனை ஐயம் உண்டாயிற்றென்பர் இராமலிங்கத் தம்பிரானார்.

அருகுதுயில் சேடியர் - "கடிசேர் முறைமைக் காப்பியற்றி" (3374) என்றபடி பணிவிடைகளுக்கும் காவலுக்குமாக நியமம் பெற்ற சேடியர் ; அகப்பொருளியலில் இவர்கள் தோழி, உயிர்ப்பாங்கி முதலாகப் பேசப்படுவர் ; தலைவி தனது மணம் பற்றிய நிலைகளைத் தான் பிறர்பாற் கூறாது பாங்கியின் துணைகொண்டு நிறைவேறச் செய்தல் அகப்பொருட் டமிழிலக்கண வரம்பு ; இவ்வாறே, முன்னர்ப், பரவை யாரும் நம்பிகளைப் பற்றிய வரலாற்றினை அருகிருந்த சேடியை வினவி யறிந்த (317) வரலாற்றையும் இங்கு நினைவு கூர்க. தலைவன் தனது பாங்கனுக்கு அறிவித்துப் பாங்கற் கூட்டமாகிய நிகழ்ச்சிகள் நிகழப் பெறும் நிலையும் காண்க.

எழுப்பிப் - பாங்கறிய மொழிய என மேல்வரும் பாட்டுடன் முடிக்க ; கனா நிகழ்ச்சிகள் நனவில் உள்ளபடி நினைவு கூர்தலும், அவ்வாறு நினைக்க வரினும் எளி தின் மறத்தலும் இயல்பாதலின் சேடியர் தாமாகத் துயிலுணர்ந்து விழிக்கும் வரை யில்லாது உடன் அணைந்தெழுப்பி யறிவித்தனர் என்க. அன்றியும், அப்போது வைகறை அணுகும் வேளையாகத் திருப்பள்ளியெழுச்சிக்கு மலர் தொடுக்கும் பொழுது ஆக நின்றமை மேற்பாட்டிற் கூறுதல் காண்க ; அவ்விரவே சபதம் நிறை வேற உள்ளமையால் நம்பிகள் வருமுன்பே சேடியர் இவ்வரலாறுகளை உணர்ந் திருத்தல் வேண்டுவதும் அவசியமாயிற்று என்க. 253

3408. (வி - ரை) துயில் நீங்கு - என்க ; நீங்குதலை முன்வைத்தது அச் செயல் நிகழ்ச்சியின் விரைவுகுறித்தது ; சேடியர் தமது தலைவியின் ஏவலுக்குத் துயிலிலும் சாக்கிராவத்தையை ஒட்டியே நிகழ்ந்தனர் என்பதாம்.

"நீங்கல்" - "திருவொற்றியூர் நீங்கலாக" என்று வரிப்பிளந்து எழுதும் எழுத்தறிபவர் ; இதனால் அவர் எழுத்தறியும் பெருமானெனவும் வழங்கப்படுவர் ; இதுபற்றி முன் (1116) உரைத்தவை பார்க்க; "எழுத்தறியும் பெருமானை" (1600), "ஏட்டு வரியி லொற்றியூர் நீங்கவென்ன வெழுத்தறியு, நாட்ட மலருந் திருநுதலார்" (3358) ; இவ்வரலாறு முன் (1116ன் கீழ் II-பக் - கசஅ அ) உரைக்கப்பட்டது.

தாம் - தாமாகவே திருவருளால் முன்வந்து என்பதாம்.

அருளிச் செய்ததெலாம் - இருமுறையும் முன்கூறியவாறு நிகழ்ந்தவையும் சொல்லியருளியவையும் அடங்க எலாம் என்றார். அருளிச் செய்தவெலாம் என்று

பன்மையிற் கூறாது அருளிச் செய்தது என ஒருமையாற் கூறினார் ; அவை எல்லாம் அவரது ஒரே பொருள்பற்றிய அருளிப்பாடு என்னும் ஒன்றினுள் அடங்கி நிற்பது குறிக்க.

பாங்கு - முறைமை ; பாங்கு அறிய - பாங்காகிய (பாங்கு) தன்மையுடன் உட் கொள்ள என்ற குறிப்புமாம்.

பயம் - அதிசயம் - மகிழ்ச்சி-இறைவரது அருட்செயல்களைப் பற்றிய நிகழ்ச்சிக ளாதலின் அச்சத்துடன் மேற்கொள்ள வேண்டுதலால் பயமும் ; பெறற்கரிய பேர் அருளின் திறங் கண்டாராதலின் அதிசயமும் ; தமது தலைவிக்குத் திருமணம் நிகழ வரும் சிறப்பில் அவர்க்குத் தாம் பணி செய்யப் பெறுவதற்கு மகிழ்ச்சியும் கொண் டனர்.

பணிந்தார் - சங்கிலியார் நேரே இறைவரது திருவருளுக் கிலக்காய் நின்ற பெருமைபற்றிப் பணிந்தார். 254

3409. சேயிழையார் திருப்பள்ளி யெழுச்சிக்கு மலர்தொடுக்குந்
தூயபணிப் பொழுதாகத் தொழில்புரிவா ருடன்போதக்,
கோயிலின்முன் காலமது வாகவே குறித்தணைந்தார்
ஆயசப தஞ்செய்ய வரவுபார்த் தாரூரர். உ௫௫

(இ - ள்) திருப்பள்ளி எழுச்சிக்கு......பொழுதாக - இறைவரது திருப்பள்ளி யெழுச்சிக்கு உரிய மலர் மாலைகள் சாத்தத் தொடுக்கும் தூய திருப்பணிக்குரிய பொழுது ஆயினமையால் ; சேயிழையார் - சங்கிலியார் ; தொழில் புரிவார் உடன் போத - உடன் கூடித் தொழில் புரியும் சேடியர்கள் தம்முடனே செல்ல; கோயிலின் முன் - திருக்கோயிலின் முன்பு ; ஆரூரர் - நம்பிகள் ; வரவுபார்த்து - சங்கிலியாரின் வரவைப் பார்த்து ; ஆயசபதம் செய்ய - முன்னர் இறைவரது ஆணையினாலாகிய சபதத்தினைச் செய்வதற்காக ; காலமது...அணைந்தார் - ஏற்றகாலம் அதுவேயாக எண்ணிக் குறித்து வந்தணைந்தனர்.

(வி -ரை) திருப்பள்ளி எழுச்சிக்கு - திருப்பள்ளி எழுச்சி என்னும் வழி பாட்டுக் காலத்துக்குரிய ; இது வைகறைப் பொழுதிற் செய்யப்படுவது ; இதுபற்றி முன் ஆளுடைய அரசுகள் அருள்பெறு நேரமாகிய திருப்பள்ளி எழுச்சியினைப் பற்றி உரைத்தவை பார்க்க. (1333)

திருப்பள்ளி எழுச்சிக்கு மலர் தொடுக்கும் - அவ்வக் காலத்துக்கு ஏற்றனவாய் விதிக்கப்பட்ட அவ்வம்மலர்களைத் தொடுக்க வேண்டுதலின் ஈண்டுத் திருப்பள்ளி எழுச்சிக்கு என்றார்.

தூயபணி - மலர்தொடுத்தல் மிகத்தூய்மையுடைய பணி என்பதாம். இது பற்றி முன் முருகநாயனார் புராணத்தும், எறிபத்த நாயனார் புராணத்தும், முன் 3380 லும் உரைத்தவை பார்க்க.

பணிப்பொழுது ஆக - பணி செய்தற்கு உரிய பொழுது வர.

தொழில் புரிவார் - ஏவலராகிய சேடியர்கள் ; இவர்கள் சங்கிலியாரது கனா நிகழ்ச்சியை அவர் சொல்லக் கேட்டவர்கள் ; 3411 பார்க்க.

சேயிழையார் - போத - என்று கூட்டுக. சேயிழையார் கோயிலின்முன் போத என்றும், ஆரூரர் - கோயிலின்முன் அணைந்தார் என்றும் இருவழியும் கூட்டுக ; இருதிறமும் அங்குச் சந்திப்பது அவ்வோரிடமாதலின், அது குறிக்கும் கோயிலின் முன் என்றதொரு சொற்றொடர் ஈரிடத்தும் இயையும்படி இடையில் வைத்தார்.

காலமது ஆகவே குறித்து - "இவ்விரவே செய்க" (3399) என்று இறைவர் அருளினாராதலின், அதற்கிசைந்த நம்பிகள், நங்கை சங்கிலியாரைச் சந்தித்துக் கேட்டற்கும், இரவு கழியு முன் சபதம் செய்தற்கும் உரிய காலம் அதுவே பொருந்தியதென்று குறிவைத்து ; முன்னராயின் சங்கிலியார் கன்னிமாடத்திருப்பாராதலின் அங்குச் செல்ல இயலாது ; பின்னராயின் இரவு கழிந்துவிடும்; ஆதலின் ஏற்றகாலம் அதுவே என்று குறிவைத்தனர் என்க ; இனம் பற்றி இடமு மதுவாகவே குறித்து என்க. நம்பிகள் இறைவர்பால் வேண்டிக் கொண்ட செய்தியும் குறிக்கொண்டு என்பது.

வரவு பார்த்து - சங்கிலியார் மலர் தொடுக்கும் பணிக்கு வரும் வரவினை எதிர் பார்த்து ; சங்கிலியார் வருமுன்பே நம்பிகள் அணைந்தனர் என்க. மேற்பாட்டுப் பார்க்க.

அணைந்தார் - ஆநரர் - வினைமுற்று முன் வந்தது விரைவுக் குறிப்பு. 255

3410. நின்றவரங் கெதிர்வந்த நேரிழையார் தம்மருங்கு
சென்றணைந்து தம்பெருமான் றிருவருளின் றிறங்கூற,
மின்றயங்கு நுண்ணிடையார் விதியுடன்பா டெதிர்விளம்பார்
ஒன்றியநா ணுடுமடவா ருடனொதுங்கி யுட்புகுந்தார். உருசு

(இ - ள்) நின்றவர்...கூற - வரவுபார்த்து நின்றவராகிய நம்பிகள் அங்கு எதிரில் வந்த சங்கிலியார் பக்கத்திற் சென்று சேர்ந்து தமது இறைவரது திருவருளின் திறங்களை எடுத்துச் சொல்ல ; மின் தயங்கு...விளம்பார் - மின் போலத் துவளும் நுண்ணிய இடையினையுடைய சங்கிலியார் அவ்வாறு விதித்ததற்குத் தமது உடன்பாட்டினை அவர் எதிரே கூறாராகி ; ஒன்றிய...புகுந்தார் - இயல்பிற் பொருந்திய நாணத்துடனே சேடியர்களுடன் கூடி ஒதுங்கிச் சென்று கோயிலினுள்ளே புகுந்தனர்.

(வி - ரை) நின்றவர் - முன்கூறியபடி சங்கிலியாரது வரவை எதிர்பார்த்து நின்றவராகிய நம்பிகள்.

எதிர்வந்த நேரிழையார் தம்மருங்கு சென்றணைந்து - தம் எதிரில் முன்பு வந்த சங்கிலியாரிடம் தம் கருத்தினைக் கூறி வெளிப்படுக்கும் அளவு அணுகி ; இதனால் நம்பிகள் அவர்வரு முன்னரே அங்குச் சார்ந்தனர் என்பதும், அவர் வரும் போது நெருங்காது வழிதந்து ஒருபுறம் ஒதுங்க வேண்டியவர் இச் செய்தி அறிவித்து இசைவுபெற்று அவர் முன்பு சபதம் செய்ய வேண்டிய நிலையில் அவ்வளவிற்கு அவர் மருங்கு சென்றணைந்தனர் என்றும், "அவள் முன்பு சென்றுகிடைத் திவ்விரவே செய்க" (3399) என்று இறைவர் ஆணையிட்டருளினராதலின் தாமே முற்படச் சென்று பேசத் தொடங்கினர் என்றும் கொள்க.

தம் பெருமான் றிருவருளின் திறம் கூற - திறம் - சபதம் செய்க என்ற ஆணையும், மற்றும் அதன் வரலாறும் ; இருவர்க்கும் பெருமானுதலிற் தம் பெருமான் என்றார். இத்திறம் தமது செயலாயினும் இறைவர் அருளிய வழி நிகழ்வது என்பார் தம் பெருமான் திருவருளின் றிறம் என்று அவர்பாற் சார்த்திக் கூறினர்.

மின்தயங்கும் நுண்ணிடையார் - மின்போலத் துவளும் நுண்ணிய இடையினையுடைய சங்கிலியார்; இடை, மின்போலத் துவளுதலும், சிறிதாய் இருத்தலும் பெண்களின் உடற்கூற்றின் உயர்ந்த இலக்கணம் என்ப. தயங்குதல் - விளங்குதல் ; மயங்

குதல் என்று கொண்டு மின்னும் இடைக்கொப்பாகாது மயங்கும் என்றுரைத்தலு மாம்.

விதி உடன்பாடு எதிர் விளம்பார்...ஒதுங்கி - இஃது மிக உயர்வாகிய தன்மை நவிற்சியணி ; விதி - இறைவரது திருவருள் முறைமை ; விதிக்கு என நான்க னுருபு விரிக்க ; உடன்பாடு - அதற்குத் தாம் உடன்பட்ட நிலையினை ; உடன்பாட் டினை ; இரண்டனுருபு தொக்கது ; எதிர்விளம்பார் - தமது நாயகராக வரும் நம்பிகளின் எதிரில் வெளிப்படச் சொல்லாதவராகி ; விளம்பார் - எதிர்மறை வினை முற்றெச்சம்; சொல்லமாட்டாதவராய் என்றதும் குறிப்பு.

ஒன்றிய...ஒதுங்கி - எதிர் விளம்பாமைக்கும் ஒதுங்குதலுக்கும் காரணம் பெண் மைக் குணமாகிய நாணம் என்றதாம்; மடவார் - சேடியர். மடவாருடனொதுங்குதல்- அவர்கள் கூட்டத்தினுடன் ஒதுங்கி மறைந்து கொள்ளுதல்.

எதிர் விளம்பாமையும் நாணுடன் ஒதுங்குதலும் முதலியன தலைவனைக் கண்ட போது தலைவியர்கள்பால் நிகழ்வன ; ஈண்டு மொழிபெற வருந்துதல் - மொழி பெறுதுகூறல் - நாணிக் கண்புதைத்தல் - குறையுற்று நிற்றல் - முதலாக வரும் அகப்பொருட்டுறைகள் நினைவு கூர்தற்பாலன.

விதியுடன்பட்டெதிர் விளம்பார் - என்பது பாடமாயின், விதியினை உடன் பட்டாராயினும் அதனை எதிரிற் கூறமாட்டாராய் என்க. இதற்கு இவ்வாறன்றி, விதியாகிய உடன்படுதலும் எதிர்மறுத்தலும் கூறுதவராய் என்று உரைவகுத்தனர் இராமலிங்கத் தம்பிரானுர்.

“ விதியுடன் பாட் டேதிர் விளம்பார் - என்பது பாடமாயின் விதிப்படி உடன் பட்டமையால் எதிர் மொழி கொடாராய் என்றுரைக்க ” என்பதும் ஷை தம்பிரானு ருரை. 256

3411. அங்கவர்தம் பின்சென்ற வாரூர “ாயிழையீர்!
இங்குநான் பிரியாமை யுமக்கிசையும் படியியம்பத்
திங்கண்முடி யார்திருமுன் போதுவீ!” ரெனச்செப்பச்
சங்கிலியார் கனவுரைப்பக் கேட்டதா தியர்மொழிவார், உ௫௭

3412. “எம்பெருமா! னிதற்காக வெழுந்தருளி, யிமையவர்கள்
தம்பெருமான் றிருமுன்பு சாற்றுவது தகா” தென்ன
நம்பெருமான் வன்றொண்டர் நாதர்செய லறியாதே
“கொம்பனையீர்! யான்செய்வ தெங்?”கென்று கூறுதலும், உ௫௮

3413. மாதரவர் “மகிழ்க்கீழே யமையு”மென, மனமருள்வார்
“ஈதலரா கினுமாகு மிவர்சொன்ன படிமறுக்கில் ;
ஆதலினு லுடன்படவே யமையு”மெனத் துணிந்“தாகிற்
போதுவீ” ரெனமகிழ்க்கீ ழவர்போதப் போயணைந்தார். உ௫௯

மகிழின் கீழே சபதம்

3414. தாவாத பெருந்தவத்துச் சங்கிலியா ருங்காண
மூவாத திருமகிழை முக்காலும் வலம்வந்து
“மேவாதிங் கியானகலே” னெனநின்று விளம்பினுர்
பூவார்தண் புனற்பொய்கை முனைப்பாடிப் புரவலனுர். உ௬௦

3411. (இ - ள்) அங்கு...ஆரூரர் - அவ்விடத்துத் திருக்கோயிலினுள் அவர்கள் பின்னே சென்ற நம்பிகள்; "ஆயிழையீர்!...போதுவீர்!" எனச் செப்ப - "பெண்களே! இவ்வூரினின்றும் நான் பிரிந்து போகாத நிலையினை உங்கள் கருத்துக்கிசையும்படி சூளுரைத்துச் சொல்வதற்குச் சந்நிதியினைச் சூடிய முடியாரது திருமுன்பு வருவீர்களாக" என்று சொல்ல; சங்கிலியார்...மொழிவார் - சங்கிலியார் கண்ட கனவு வரலாற்றினை அவர் சொல்ல முன்னமே கேட்டிருந்த சேடிமார்கள் விடை சொல்வார்களாகி, ௨௱௭

3412. (இ - ள்) "எம்பெருமான்!...தகாது" என்ன - "எமது பெருமானுவாரே! இதன் பொருட்டுத் தேவரீர் எழுந்தருளிச் சென்று தேவர்களின் தலைவராகிய இறைவரது திருமுன்பு சொல்வது தகுதியன்று" என்று கூற; நம்பெருமான்...அறியாதே - நமது பெருமானாராகிய வன்றொண்டர் இறைவரது செயலினை அறியாதே; "கொம்பனையீர்...எங்கு?" என்று கூறுதலும் - "கொம்பு போல்பவர்களே! பின்னை யான் சபதம் செய்வதுதான் எங்கே?" என்று கூறுதலும், ௨௱௮

3413. (இ - ள்) மாதரவர்...மருள்வார் - அதற்கு அப்பெண்கள் திருமகிழின் கீழே செய்தலே பொருந்தும் என்று சொல்ல, அது கேட்டு மனமருட்சியடைவாராய்; ஈதலராகிலும்...அமையும் எனத்துணிந்து - இவர் சொன்னபடி செய்யமறுத்தால் ஈது பழிச்சொல் லாகிலுமாம்; ஆகையினால் அவ்வாறே செய்வதற்கு உடன் படுதலே பொருத்தம் என்று துணிவுகொண்டு; ஆகில்...போய் அணைந்தார் - அஃது உமது கருத்தாகில் அவ்வாறு நான் சபதம் செய்வதற்கு உடன் வருவீராக என்று கூறி அவர்கள் மகிழின் கீழே செல்லத் தாமும் போய் அணைந்தாராகி, ௨௱௯

3414. (இ - ள்) தாவாத...காண - கெடாத பெருந் தவமுடையாராகிய சங்கிலியாரும் காணும்படி; மூவாத...வலம் வந்து - என்றும் அழியாத திருமகிழினை மூன்று தாமும் வலமாகச் சுற்றி வந்து; மேவாதிங்கு...விளம்பினார் - இங்குப் பொருந்தியிராது நான் நீங்கமாட்டேன் என்று நின்று திருந்தச் சபதமாக எடுத்துச் சொன்னார்; பூவார்...புரவலனார் - பூக்கள் நிறைந்த குளிர்ந்த நீர்த்தடங்களை யுடைய திருமுனைப்பாடி நாட்டின் தலைவராகிய நம்பிகள். ௨௱௰

இந் நான்கு பாட்டுக்களும் செயலும் பொருளும் தொடர்ந்து ஒரு முடிபு படுத்தி உரைக்க நின்றன.

3411. (வி - ரை) அங்கு - அவர் கோயிலினுள் உட்புகுந்த அவ்விடத்து; அவர் - மடவாருடன் உட்புகுந்த சங்கிலியார் பின்.

ஆயிழையீர் - சங்கிலியார் மடவாருடன் கூடி ஒதுங்கிச் சென்றாராதலின் அவர் அனைவரையும் உள்ளடக்கிப் பன்மையிற் கூறினார்; முன்னர் நேரிழையார் (சங்கிலியார்) ஒருவர் தம்மருங்கு சென்றணைந்து கூறினார்; அவர் எதிர் விளம்பாமல் சேடியருடன் ஒதுங்கிச் சென்றாராதலின் அனைவரையும் பொதுவாகக் கூட்டி விளித்துப் பன்மையில் வினவினார்.

உமக்கு இசையும்படி - சங்கிலியாரையும் உள்ளிட்ட அவர் அனைவரையும் குறித்துக் கேட்பினும் சங்கிலியாரது இசைவினையே அவர்கள் வெளிப்படுப்பாராதலின், உமக்கு - என்றது உம்தலைவியாகிய சங்கிலியாருக்கு என்ற பொருள் குறித்து நின்றது; போதுவீர் - என்றதும் இக்கருத்து.

திங்கள் முடியார் திருமுன் - முன்னர் இறைவரிடம் தாம் வேண்டிக் கொண்ட தன் குறிப்பு உள்வைத்துக் கூறியபடி. (3402)

கனவுரைப்பக் கேட்ட தாதியர் - இது முன் உரைக்கப் பட்டது. 3407, 3408 பார்க்க.

ஆரூரர் - செப்பத் - தாதியர் - மொழி வா(ராய்) - என்ன, வன்றொண்டர் - என்று கூறுதலும் (3412), என - எனத்துணிந்து - என - போய் அணைந்தா(ராய்); காண - வலம்வந்து - என நின்று - (அப்) புரவலனார் விளம்பினார் (3414) என்று இந்நான்கு பாட்டுக்களையும் கூட்டி முடித்துக் கொள்க.

இவை குறையுற வுணர்தல் முதலிய அகப்பொருட் (துறைகளின்) இயல்பின் வருதல் காண்க. 257

3412. (வி - ரை) எம்பெருமான்! - இது நம்பிகளை நோக்கித் தாதியர் விளித்தது; தமது தலைவிக்கு நாயகராக வருபவர் என அறிந்தாராதலின் தங்களுக்குப் பெருமான் எனக் கூறியது அக்குறிப்பு. இது அண்மைவிளி யாதலின் இயல்பாயிற்று. தலைவியினது கருத்தினைக் குறிப்பாலுணர்த்தியபடி காண்க.

இதற்காக - இமையவர்கள் தம்பெருமான் - திருமுன்பு - சாற்றுவது தகாது - இது மிகச் சிறிய காரியம்; பெருமான் திருமுன்பு - அது மிகப் பெரிய உயர்ந்த இடம்; இச்சிறிய மொழிகளை அப்பெரிய திருமுன்பு சொல்வது தகுதியன்று - ஏற்ற தன்று என்பவை குறிப்பு. இறைவர் "அங்கு நமக் கெதிர்செய்யும் அதற்கு நீ இசையாதே" என்று முன் கட்டளை யிட்டதனைக் (3405) கேட்டு அறிந்துள்ளாராதலின் அவ்விடத்தினை மாற்றுதற்குத் தாதியர் கைக்கொண்ட உபாயம் இது; சபதம் செய்யும் இடம் எங்காயினும் அது செய்யும் செயலுக்கு உடன்பட்ட குறிப்பினாலும், பின்னர் "மகிழ்க்கீழே அமையு" மெனக் கூறலானும் தலைவியாரது உடன்பாடு குறிப்பா லுணர்த்தப்பட்டது காண்க. இவ்வாறுணர்த்துதலும், தலைவி தாமே கூறாது தோழியர் மூலம் உணர்த்துதலும் தமிழிலக்கணத்துள் அகப்பொருளி னிய லென்க.

நாதர்செய லறியாதே - உயர்ந்த தூய இடமாகிய இறைவர் திருமுன்பில் இது சாற்றத் தகாதென்றமையால் இதில் வேறுமொரு கருத்து இருத்தல் கூடு மென்பதுய்த்துணரத் தக்கது. என்னை? யாவரும் தத்தங் காரியத்தின் நலங் கருதி மிக உயர்வாகிய பொருளினையே நாடுவது இயல்பாதலான்; அன்றியும் எவ்விடமே யாயினும் இறைவர் எங்கும் நிறைந்துள்ளவராதலின் எவ்விடமும் அவர் திருமுன்பே யாதலும் உண்மை; இங்ஙனம் உய்த்துணரத் தக்கதாயினும், நம்பிகள் இவர் மொழி யினுள் நாதர் செயலினை அறியாது, மேல் "செய்வது யானெங்கு?" என்று வினவி யது மேல் விளைவு கருதி இறைவரது திரோதான சத்தியின் செயலாமென்க.

எங்கு - வேறு எங்கு? வேறு என்பது (இசையெச்சம்.)

கோம்பு அனையீர் - கோம்பு - பூங்கொம்பு. 258

3413. (வி - ரை) மாதரவர் - முன்கூறியவாறு மொழிந்த தாதியர்; அவர் - முன்னறி சுட்டு.

மகிழ்க்கீழே அமையும் - அமையும் - செய்தல் அமையும். அமையும் - சாலும் - போதும்; முன் இதற்காக - (3412) என்று இதனைச் சிறியகாரியம் என்ற குறிப்புப் படக் கூறியதனைத் தொடர்ந்து அதற் கிதுபோதும் என்ற பொருள்படக் கூறியதும் காண்க. மகிழ் - மகிழமரம். (3402)

மருள்வார் - தாம் இறைவரை வேண்டிய நிலை இவர்கள் திருவருளால் அறிய வந்து தமக்கே இடர்ப்பாடாக நேர்ந்ததனைக் குறித்து மனமருட்சி விளைந்தது; மருட்சி மேற் செயல் துணியமாட்டாது மனமயங்கும் உள்ள நிகழ்ச்சி.

"ஈது...அமையும்" எனத்துணிந்து - இது நம்பிகள் மனமருட்சியில் இருவழியும் எண்ண மிட்டு ஆய்ந்து ஒருவழி துணிபு கொண்ட நிலை ; அலர் - பழிச்சொல் ; பல ரறிந்து புறங்கூறுதல். ஈது - இந்நிகழ்ச்சி ; மறுக்கில் - ஈது அலராகிலுமாதும் என்க.

மறுத்தலாவது - அவர் குறித்தபடி மகிழ்க்கீழ்ச் சபதம் செய்யாமை ; மணம் நிறைவேறுமையுடன் அலரும் ஆகும்.

அலர் - பெண்களை வஞ்சிக்க முயன்றார் என்ற பழிச் சொல். குறித்தபடி செய் யின் பதிதோறும் கும்பிடும் கடமைக்கு விலக்காதல் ஒன்றுமே நிகழும் ; ஆனாலும் அதுபற்றி இறைவராருளை எவ்வாற்றானும் பெறலாம்; பழிச்சொல்லை மாற்றலரிது ; ஆதலின் உடன்படவே அமையும் என்றிவ்வாறெல்லாம் எண்ணி அவர் கூறிய அவ் வாறே செய்யத் துணிந்தனர் என்க.

ஆகில்-உமது கருத்து இதுவேயாகில் ; அவர்போத - அவர்களும் உடன்செல்ல.

அணைந்தார் - அணைந்தாராய் ; முற்றெச்சம் அணைந்தார் - விளம்பினார் என்று மேற்கூட்டுக. முற்றாகக் கொள்ளினும் இழுக்கில்லை. 259

3414. (வி - ரை) தாவாத பெருந்தவத்துச் சங்கிலியார் - முன்பு, "சாருந் தவத்துச் சங்கிலி " (3393) என்றதும் அவ்விடத்துரைத்தவையும் பார்க்க.

தாவாத - கெடாத - அழியாத ; இத்தன்மை பற்றி முன்னர்க் குறித்ததனோடு ஈண்டும் குறித்தமை அங்குத் தொடக்கம்பெற்ற நிகழ்ச்சி இங்கு இப்பாட்டின் நிகழ்ச்சி யுடன் முடிகின்றமையின் அது குறித்தற்கு. " தாவே வலியும் வருத்தமும் கேடும் ";

சங்கிலியாரும் காண - சேடியர் மட்டுமன்றிச் சங்கிலியாரும் என்று உம்மை இறந்தது தழுவிய எச்ச உம்மை. நம்பிகள் தம்பொருட்டு இது செய்யத் தாம் கண் ணுற் கண்டிருப்பதும் பாவமாம் என்று பின்னர் எண்ணி வருந்தும் சங்கிலியாரும் என்று உம்மை உயர்வு சிறப்பின்கண் வந்த தென்றலுமாம்.

மூவாத - மூத்தலில்லாத ; அழியாத ; பழையதாய் முற்றி அழியாது எந்நாளும் இருக்கின்ற. மூக்காலும் வலம் வருதல் - சபதம் செய்தற்குரிய முன்னங்கமாகிய சடங்கு ; நின்று விளம்புதல் - என்பதும் சடங்கு.

"மேவாது இங்கு...அகலேன்" என்றது சபதம்; வாயினாற் கூறும்பகுதி; மூன்று முறை வலம்வருதலும் நின்று கையுயர்த்திச் சூளுரைத்தலும் மெய்ச்சடங்கு ; மெய்ச் சபதவினை-என மேற்கூறும் குறிப்புங்காண்க. யான் இங்கு மேவாது அகலேன் என்க.

பூவார் தண்...புரவலனார்-இச்சபத வினை முடித்தலின், நம்பிகள்பால், உள் தடு மாற்றம் புறத் தடுமாற்றத்தை விளைக்க, அது கருவிகளின் தடுமாற்றத்தை விளைக்க, அது செயல் முறை மெய்ம்முயற்சியினை விரைந்து நிகழாது தடுக்கச் செயலில் தாமதம் நிகழ்ந்தமை குறிக்க, இப்பகுதி விரைந்து படிக்க இயலாதவாறு யாப்பும் சொல்லும் பொருளும் அமைதிபெற நிற்கின்றது ஆசிரியரது தெய்வக் கவிநலம்.*

விளம்பினார் - திருத்தமாக உரத்துக் கூறுதல் குறிப்பு. 260

3415. மேவியசீ ராரூரர் மெய்ச்சபத வினைமுடிக்கக்
காவியினேர் கண்ணாருங் கண்டுமிக மனங்கலங்கிப்

* இதுபற்றி எனது சேக்கிழார் பார்க்க.

"பாவியே னிதுகண்டேன் றம்பிரான் பணியா"லென்
றாவிசோர்ந் தழிவாரங் கொருமருங்கு மறைந்தயர்ந்தார். உ௬௪

(இ - ள்) மேவியசீர்...முடிக்க - பொருந்திய சிறப்பினையுடைய நம்பியாரூரர் மெய்ச்சபதமாகிய வினையினை இவ்வாறு நிறைவேற்ற; காவியினேர்...கலங்கி - நீலமலர்போன்ற கண்ணினையுடைய சங்கிலியாரும் அதனைக் கண்டு மனம் மிகவும் கலங்கி; பாவியேன்...என்று - தம்பிரானருளிச் செய்தமையினாலே பாவியேன் இதனைக்கண்டேன் என்று நினைந்து; ஆவி...அயர்ந்தார் - உயிர் சோர மனம் அழிவுறுவாராகி அங்கு ஒருபுறம் மறைந்து அயர்ந்தனர்.

(வி - ரை) மேவியசீர் - மேவிய - சிறப்புக்கள் இவரை நாடியடைந்து தாம் சிறப்புப் பெற்றன என்பது.

மெய்ச் சபத வினை முடிக்க - மெய் - உடம்பு என்ற குறிப்புத் தந்து நின்றது. கால்கள் வலம்வரக், கைதூக்க, வாய் சூளுறவு கூற என்றிவ்வாறு உடம்பின் புறக் கருவிகள் தம்மளவிலே தொழிற்பட, மனம் மருண்டு தடுமாறி ஒருவாறு தேறித் துணிந்தும் நிலை பெறாத அலையச், செயல் முற்றிய நிலைக்குறிப்பு. மெய் - உண்மை. நம்பிகள் வேண்டியவாறே இறைவர் அங்கு மகிழின் கீழ் வெளிப்பட வீற்றிருந் தமையின் இஃது அவர் திருமுன்பு செய்த உண்மைச் சபதமாய் முடிந்தது. இவ்வாறன்றி நம்பிகள் முன் எண்ணியருளியவாறு திருக்கோயிலில் இறைவரது திருமுன்பு செய்திருக்கக் கூடுமாயின் அதன் நிலை வேறாம் என்பது தொனி.

காவியினேர் கண்ணார் - சங்கிலியார்; இன் - சாரியை. நேர் - உவம உருபு. "காவியிருங் கருங்குவளை கருநெய்தல் கண்காட்டும்" (தேவா); கண்ணின் தன்மைகளாகிய அன்பு - மென்மை - இனிமை முதலியவை முற்றும் கொண்ட நோக்கமுடைமை குறிக்க இங்கு இவ்வுவமை கூறிஒதினர்; "பைங்குவளைக் கார்மலரால்... எங்கள் பிராட்டியு மெங்கோனும் போன்றிசைந்த" (திருவா. திருவெம்பாவை-13). என்னை? நம்பிகள்பால் வைத்த அன்பின் பெருக்கினாலே அவர் தம்மைப் பிரியாதிருக்க இச்சபத வினை முடியக் காண்டலான் என்பது.

கண்டு - வெறும் பார்வையளவானன்றி மனமுள்ளூறக் கண்டு என்பதாம். இஃது அனுபவம் கலந்தது; "கண்களா னந்தக் கலுழிநீர் பொழிதாக் கண்டார்" (3253); "சங்கிலியாருங் காண" (3414) என்றதும், பின்னர் "இது கண்டேன்" என்பதும் காண்க; காட்சி என்னும் அகத்துறையே அகப்பொருள் நிகழ்ச்சிப் பகுதிகளுக்கெல்லாம் தோற்றுவாயாகி முதலில் நிற்பதும் கருதுக.

மிகமனங்கலங்கி...அயர்ந்தார் - இறைவர் திருமுன்பு சபதவினை முடித்தல் என்பது இயல்புக்கு மாறாகியதொரு வலிந்த செய்கை; இதனைத் தமது நாயகர் தம் பொருட்டுச் செய்வதற்குத் தாம் காரணமாயிருந்தது கொடுமை என்று எண்ணிச் சங்கிலியார் வருந்தி மனம் அழிந்து அயர்ந்தனர். ஒருமருங்கு மறைதல் இத்தகைய தகாத செயலுக்குக் காரணமாயிருந்த தம்மை மறைத்துக் கொள்ளுதல் ஒரு குற்றம் செய்தார்பால் நிகழும் மெய்ப்பாடு. அழிதல்-மனமுடைதல்; இது - சபதவினை காணுதல்.

பாவியேன்-பாவம் செய்தேனாதலின் என்று தம்மைத்தாம் நொந்துகொண்டது. "பாவியேன் கண்டவண்ணம்" (818) என்று கண்ணப்பர் இரங்கியது காண்க.

தம்பிரான் பணியால் - "அவர் தாம் திருவாரூரின்கண் மிகவு மகிழ்ந்துறைவது" (3395) என்றது மட்டில் சங்கிலியார் கூறினாரன்றி, அதற்குப் பரிகாரம் ஒன்றும் கூறினாலர்; "பிரியாமைக்கு ஒரு சபதம் செய்வான்" என்றதும், "நமக்

கெதிர் செய்வதற்கு இசையாதே மகிழ்க்கீழே கொள்க" என்றதும் இறைவர் தாமே பணித்தவை. ஆதலின் அவர் பணியால் என்றார். இறைவர் பணித்திராவிடின் சங்கிலியாரது அன்பு கனிந்த திருவுள்ளம் இதில் தாழாது என்பதாம். ஆயின், இறைவர் இவ்வாறு கொடிய செயலினை நம்பிகள் செய்யவும், அதனைச் சங்கிலியார் காணவும் பணித்தது அருளுடைய பரமாகிய இறைவர்பாலருளின்மையோ? எனின், அற்றன்று; இருவர்பாலும் வைத்த பேரருளின் திறத்தாலே இவ்வாறு பணித்தருளினர் என்க; நோயின் தன்மைக் கேற்ப வலிந்த முறை செய்தும் தீர்க்கும் மருத்துவன் போல என்று கண்டு கொள்க; இம்மாபுராணத்தினுள் வருவனவாய் உலகர்க்கு மிகக் கொடியனவாகக் காண்பனவாகிய எத்துணையோ செயல்கள் எல்லாம் இறைவர் பணித்த வழியாகிய அருட்செய்கைகளேயாமாறும் இங்கு நினைவு கூர்க. இக்கருத்தினை மேற் பாட்டில் நம்பிகள் மகிழ்ந்து துதிக்குமாற்றாலும் கண்டுகொள்க.

அயர்தல் - அறிவழிதல். தம்பிரான் பணியென்று கண்டுவைத்தும் அயர்ந்தது பெண்மையின் இயல்பென்க. "மேற்றனி செய்வனகள் செய்யக் கண்டு வேதனைக்கே யிடங்கொடுத்து நாளு நாளு மாற்றேன்" (தாண்-ஆவடுதுறை). 261

3416. திருநாவ லூராளி தம்முடைய செயன்முற்றிப்
பொருநாகத் துரிபுனைந்தார் கோயிலினுட் புகுந்திறைஞ்சி
"அருணாளுந் தரவிருந்தீர் செய்தவா றழகி!"தெனப்
பெருநாம மெடுத்தேத்திப் பெருமகிழ்ச்சி யுடன்போந்தார் உசுஉ

(இ - ள்) திருநாவலூராளி...முற்றி - திருநாவலூர்த் தலைவராம் நம்பிகள் தமது செயலாகிய சபதவினையினை முடித்து; பொருநாகத்துரி புனைந்தார்...இறைஞ்சி-பொருகின்ற யானையின்தோலை அணிந்த இறைவரது திருக்கோயிலினுள்ளே புகுந்து வணங்கி; "அருள்நாளும்...அழகிது" என - நாளும் அருளைத்தர இருந்த இறைவரே! தேவரீர் செய்த ஆறு இது அழகாயிருந்தது என்று; பெருநாமம்...போந்தார் - அவரது உயர்ந்த நாமமாகிய திருவைந் தெழுத்தினை எடுத்து மிகத் துதித்துப் பெருமகிழ்ச்சியுடனே புறம் போந்தனர்.

(வி - ரை) தம்முடைய செயல் - தமக்கு இறைவர் பணித்த சபதவினை. "ஒருசபதம் அவள் முன்பு சென்றுகிடைத் திவ்விரவே செய்க" என்ற செயல்; (3399).

கோயிலினுள்புக்கு - கோயிலினுள்புக நின்ற நம்பிகள், அங்குப் போகாமல் சேடியர் கூறியபடி மகிழின் கீழ்ச் சபதம் செய்ய வந்தணைந்தனராதலின் அச் செயல் முற்றியபின் கோயிலினுள்ளே புகுந்தனர்.

நாளும் அருள் தர இருந்தீர் இது செய்தவாறு - அழகு! என்க. நாளும் - நாளுளும்; அனுதினமும்; எந்நாளும் என்றதனால் இனி, இச்சங்கட நிலைமையினின்றும் நீங்கப் பெறுதற்கும் என்றது குறிப்பு. தர என்றது மக்குறிப்பு; இது செய்தவாறு அழகு - இவ்வாறு மகிழ்க்கீழே கொள்ளும்படி அவர்களுக்குப் பணித்தது. இதனைக் கருதலளவையால் நம்பிகள் துணிந்து கொண்டனர் என்க. நம்பிகளுக்கும் இறைவர்க்கும் மட்டில் அமைந்த இச்செய்தியினை (மகிழின்கீழ் இறைவர் விளங்க வீற்றிருப்பதும் அங்குச் சபத முடிப்பதுமாகிய செய்தியினைச்) சங்கிலியாரும் தோழியருமறியச் செய்தல்.

அவர் பெருநாமம் மிகஏத்தி - இறைவரது பெருந் திருநாமமாகிய திருவைந்தெழுத்தினால் துதித்து; " ஆலைப் படுகரும்பின் சாறு போல, அண்ணிக்கு மஞ்செழுத்தி னாமத் தான்காண் " (தாண்). திருவருள் வெளிப்பாடு கண்ட போதெல்லாம் இவ்வாறு ஸ்ரீபஞ்சாக்கரத்தைப் பலமுறை செபித்தல் வேண்டுமென்பது விதியும் மரபுமாம்.

அழகு-இகழ்ச்சிக்குறிப்பு உட்கொண்ட புகழ்ச்சிமொழி. தோழமையாற் கூறியது.

பெருமகிழ்ச்சியுடன் போந்தார் - இப்போது இது நிகழ்ந்தது அருள்; இது போல இனித் தொடர்ந்து வரும் நிகழ்ச்சிகளிலும் காக்க நிற்பதும் அருளே ; என்ற துணிபு உணர்ந்தமையால் மகிழ்ந்தனர். குறித்த சபத முடிந்தமையால் திருமணமும் நிறைவாகப் பெறும் மகிழ்ச்சியுமாம். இவ்வாறன்றிச் சங்கிலியாரும் திருவருட் பணி என்றுணர்ந்திருந்தும் மனமழிந்தயர்ந்தது மென்மையாகிய பெண்மையின்பினியல்பு ; ஈண்டு நம்பிகளின் நிலை திருவருட்டுணிபுடைய ஆண்மையினியல்பு.

போந்தார் - தமது திருமாளிகையிற் சென்றனர்.

அழகிதென எடுத்தேத்தி - " பொன்னவிலுங் கொன்றையினாய் ; 'போமிமகிழ்க்கீ ழிரு ' வென்று, சொன்னவெனைக் காணுமே தூஉறவு மகிழ்க்கீழே, என்ன வல்ல பெருமானே " (திருவெண்பாக்கம் - 9) என்பது தேவார அகச்சான்று. 262

3417. வார்புனையும் வனமுலையார் வன்றொண்டர் போனதற்பின்
தார்புனையு மண்டபத்துத் தம்முடைய பணிசெய்து
கார்புனையு மணிகண்டர் செயல்கருத்திற் கொண்டிறைஞ்சி
ஏர்புனையுங் கன்னிமா டம்புகுந்தா ரிருள்புலர. உ௬௩

(இ - ள்) வார்புனையும் வனமுலையார் - கச்சணிந்த அழகிய முலையினையுடைய சங்கிலியம்மையார் ; வன்றொண்டர்...பணி செய்து - வன்றொண்டராகிய நம்பிகள் அவ்விடம் விட்டுச் சென்றபின்னர், மாலைகள் கட்டும் திருப்பூமண்டபத்திலே அணைந்து தமது திருப்பணியினைச் செய்து முடித்து; கார்புனையும்...இறைஞ்சி-மேகத்தை ஒத்த அழகிய கண்டத்தினையுடைய இறைவரது அருளிச் செயல்களைத் தமது கருத்தினுட் கொண்டு பணிந்து ; ஏர்புனையும்...இருள்புலர - அழகு பொருந்திய கன்னிமாடத்தினுள்ளே இருள் நீங்கி விடியும் பொழுது புகுந்தனர்.

(வி - ரை) இப்பாட்டு நம்பிகள் சபதம் முடித்தபின் நங்கை சங்கிலியாரது செயலைக் கூறிற்று; முன்பாட்டில் நம்பிகள் செயலைக் கூறியது போல; அதுமுன்னர் நிகழ்ந்ததனால் அந் நிகழ்ச்சி முறைபற்றி முன்னர் உரைத்தார்.

போனதற்பின் - என்றது காண்க ; மகிழின் கீழிருந்து முதலில் நீங்கியவர் நம்பிகள்.

வார்புனையும்...பணிசெய்து - சபதவினை முற்றியபின் நம்பிகள் திருக்கோயிலுட்சென்று விண்ணப்பித்துச் சென்றாராகச், சங்கிலியார் திருப்பூமண்டபத்தினுட் சென்று தமது நியதியாகிய பணிசெய்து முடித்துப் பின் இறைஞ்சிப் போந்தனர்.

தம்முடைய பணி - தாம் நியதியாய் அன்று வரை செய்து வந்த பூமாலைப்பணி; (3376 - 3377). தமக்கு உலகியலில் இன்பத்துன்பங்கள் நேரும்போது தாம் தாம் மேற்கொண்டுள்ள சிவப் பணி அடியார் பணிகளைக் கைநழுவ விடுவார் பலர் ; சங்கிலியாரது இந்தச் சிவவாழ்க்கை யொழுக்கம் உலகர் கண்டு பின்பற்றின் நலந் தரும்.

கார்புனையும் மணிகண்டர் - புனையும் - உவமஉருபு. கார் - மேகம்; கார் - கருமை நிறம் என்று கொண்டு கருநிறத்தைப் புனைந்து கொண்ட என்றலுமாம்; இப்பொருளில் புனையும் - என்பதற்கு வைத்த என்று பொருள் கொள்க.

செயல் - இருபாலும் இறைவர் செய்த அருளிப்பாடுகள்.

கருத்திற் கொள்ளுதல் - மறவாது மனத்தில் வைத்து எண்ணுதல்.

இருள்புலரப் - புகுந்தார் - என்று கூட்டுக; இருள்புலர்தல் - இருள் நீங்கிப் பொழுது விடிதல்; இருள் - புலரியிருள்; திருப்பள்ளி எழுச்சிக்கு மலர்தொடுக்கும் பொழுதாகிய வைகறையாமத்திற் சென்ற அம்மையார் தம் செயல் முற்றிப் புலரும்பொழுது மீண்டனர் என்க.

இனி, இருள் என்பது திருக்கயிலை நிகழ்ச்சி காரணமாக வந்த இவ்வுலக வாழ் வினைக் குறிப்பாலுணர்த்தியதாகக் கொண்டு, அவ்வினைப் பயன் அன்று முற்றி நீங்கச் சென்று புகுந்தார் என்றலும் குறிப்பு. அன்றே திருமண நிகழுநா ளாதலின், முன் னுட்களில் நாடோறும் பணிமுற்றி மீண்டு வந்து புகுந்தது போலன்றி அன்று இருள் புலரப்புகுந்தார் என்றதும் அக்குறிப்பு; இனிப், புலர - புலரும் பொருட்டு என்று கொண்டு, உலகத்தார் திருவருளின் உண்மை கண்டு அறியாமை நீங்க என்ற குறிப் புப்பட நின்றமையும் காண்க.

புனையும் - இப்பாட்டில் நான்கடிகளினும் புனையும் என்பது சொற்பின் வரு நிலை; அன்று கலியாணத்தின் பொருட்டுச் சங்கிலியாரைப் பூண்புனைந்து அலங்கரிக் கும் பொருள் நிகழ்ச்சிக்கேற்ப நின்ற சொல்லமைதி. 263

3418. அன்றிரவே யாதிபுரி யொற்றிகொண்டா ராட்கொண்ட
பொன்றிகழ்பூண் வன்றொண்டர் புரிந்தவினை முடித்தருள
நின்றபுகழ்த் திருவொற்றி யூர்நிலவு தொண்டர்க்கு
மன்றல்வினை செய்வதற்கு மனங்கொள்ள வுணர்த்துவார், உகூச

3419. "நம்பியா ரூரனுக்கு நங்கைசங் கிலிதன்னை
இம்பர்ஞா லத்திடைநம் மேவலினுன் மணவினைசெய்
தும்பர்வா ழுலகறிய வளிப்பீ"ரென் றுணர்த்துதலுந்
தம்பிரான் றிருத்தொண்ட ரருட்டலைமேற் கொண்டெழுவார், உகூரு

## சங்கிலியார் திருமணம்

3420. மண்ணிறைந்த பெருஞ் செல்வத் திருவொற்றி யூர்மன்னும்
எண்ணிறைந்த திருத்தொண்ட ரெழிற்பதியோ ருடனீண்டி
உண்ணிறைந்த மகிழ்ச்சியுட னும்பர்பூ மழைபொழியக்
கண்ணிறைந்த பெருஞ்சிறப்பிற் கலியாணஞ் செய்தளித்தார். உகூகூ

3418. (இ - ள்) அன்றிரவே - அன்றைய இரவிலே; ஆதிபுரி...முடித் தருள - ஆதிபுரியாகிய ஒற்றியூரை உடையவராகிய இறைவர் தாம் ஆட்கொண்ட பொன்விளங்கும் அணிகளை அணிந்த வன்றொண்டர் நினைந்த மணச் செயலை முடித் துக் கொடுக்கும் பொருட்டு; நின்ற புகழ்...உணர்த்துவார் - நிலைபெற்ற புகழினை யுடைய திருவொற்றியூரில் நிலவும் தொண்டர்களுக்கு அக்கலியாணத்தினைச் செய்து முடிக்கும்படி மனங்கொள்ளும்படி உணர்த்துவாராய், உகூச

3419. (இ - ள்) "நம்பியாரூரனுக்கு...அளிப்பீர்" என்று உணர்த்துதலும் - நம்பியாரூரனுக்கு நங்கையாகிய சங்கிலியை இவ்வுலகத்திலே நமது கட்டளையினாலே சடங்குகளுடன் கல்யாணஞ் செய்து தேவருலகத்துள்ளோரும் அறியும்படி கொடுப்பீர்களாக என்று உணர்த்தியருளுதலும்; தம்பிரான்...மேற்கொண்டெழுவார் - தம்பெருமானது திருத்தொண்டர்கள் அவ்வருளிப் பாட்டினைத் தலைமேலே தாங்கி எழுவார்களாகி, உ௬௫

3420. (இ - ள்) மண்ணிறைந்த...திருத்தொண்டர் - உலகில் நிறைந்த பெருஞ் செல்வத்தினை உடைய திருவொற்றியூரில் நிலைபெற்று வாழும் எண்ணிறைந்த திருத்தொண்டர்கள்; எழில் பதியோருடன் ஈண்டி - அழகிய அந்தத் திருப்பதியில் உள்ள வர்களுடனே கூடி வந்து; உள்நிறைந்த...செய்தளித்தார் - மனநிறைந்த மகிழ்ச்சியுடனே தேவர்கள் கற்பக முதலிய தேவதருக்களின் மலர்களை மழைபோலப் பொழியக் கண் களிகொள்ள நிறைந்த பெரிய சிறப்புக்களுடன் கல்யாணத்தைச் செய்து முடித்தனர். உ௬௬

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3418. (வி - ரை) அன்றிரவே - சபதவினை முற்றிய அன்றிரவிலேயே.

இரவு - வைகறையில் சபதவினை முற்றிய பின்னும் புலருமுன்னும் எஞ்சியிருந்த இராப்பொழுது.

வினைமுடித்தருள - ஒற்றிகொண்டார் - தொண்டர்க்கு - மன்றல் வினை செய்வதற்கு மனங்கொள்ள அன்றிரவே - உணர்த்துவார் - என்று கூட்டி உரைத்துக்கொள்க.

ஆதிபுரி - திருவொற்றியூரின் முதற்பெயர்; ஒற்றிகொண்டார் - ஆதிபுரியாயிருந்தும் அதனை ஒற்றியாக உகந்து கொண்டவர் என்றது கவிநயம்.

ஒற்றிகொண்டார் - ஆதிபுரியாகிய ஒற்றியூரை உகந்திடங் கொண்டவர் என்க. ஆதிபுரியை ஒற்றிகொண்ட சிவபிரானால் ஆட்கொள்ளப்பட்டவராகிய வன்றொண்டர்; ஆதிபுரி - திருவொற்றியூர் என்பது முன்னுங் குறித்தது காண்க. "எண்ணில் பெருமை ஆதிபுரி" (3359)

ஆட்கொண்ட - வன்றொண்டர் - புரிந்தவினை - முடித்தருள - தம்மால் வலிந்து ஆளாகக்கொள்ளப்பட்ட வன்றொண்டராயின காரணத்தால் அவர் எண்ணிய வினையை முடித்துக் கொடுத்தருள வேண்டிய கடமைப்பாடுபற்றி என்பது குறிப்பு.

தொண்டர்க்கு - மன்றல் வினை செய்வதற்கு - மனங்கொள்ள உணர்த்துவார் - முடித்தருளக்கொண்ட தமது அருளின் நினைவினை (சங்கற்பத்தை) நிறைவேற்றுவதற்காக அந்த மண வினையைச் செய்வதற்குத் தமது திருவொற்றியூர்த் தொண்டர்க்கு அறிய உணர்த்துவாராகி; மன்றல்வினை - கல்யாணச் சடங்குகள்; மனங்கொள்ள - தெளிவுபட; உணர்த்துவார் - கனவில் பலர்க்கும் ஒருங்கே தோன்றி ஆணையிடுதல்; 1068 - 2094 - 2097 - என்ற இவை முதலியவை பார்க்க.

உணர்த்துவார் - உணர்த்துவாராகி; முற்றெச்சம்.

உணர்த்துவார் - உணர்த்துதலும் - தொண்டர் - எழுவார் - (3419) - பதியோருடன் ஈண்டிச் - செய்தளித்தார் - (3420) என்று இம் மூன்று பாட்டுக்களையும் தொடர்ந்து முடித்துக் கொள்க. 264

3419. (வி - ரை) "நம்பி...அளிப்பீர்!"—இது இறைவர் திருவொற்றியூர்த் திருத்தொண்டர்களுக்குக் கனவில் உணர்த்தி யருளிய ஆணை; நம்பி - ஆடவரிற் சிறந்தோன்;

இம்பர் ஞாலத்திடை - மணவினை செய்து - அளிப்பீர் - திருக்கயிலையில் நம்பிகள் "அவர் மேன்மனம் போக்கிடக், காதன் மாதருங் காட்சியிற் கண்ணினார்" (35) என்ற வரலாற்றின்படி பெறநின்ற செயலாய் இவ்வுலகில் மணவினை நிகழச் செய்து என்றபடி.

நம் ஏவலினால் அளிப்பீர் - என்றது, "திருவொற்றியூர் அணைந்து சிவனாருளிற் செல்வன்" (3367), "செல்கதியும் கண்ணார் நுதலார் திருவருளாலாக" (3372) என்று நம்பால் தம்மை ஒப்புவித்தனராதலின் சங்கிலியாரை மணஞ் செய்தளிப்பது நமதுகடன்; ஆதலின், நம் ஏவலினால் நீர் அளிப்பீர் என்றபடியாம்.

மணவினை செய்து - கற்பியலின் விதித்தபடி நூல் விதிச் சடங்குகள் எல்லாம் செய்து.

உம்பர் வாழ் உலகறிய - மணவிதியின்படி உள்ள சடங்குகளில் தீக்கடவுள் முன்னர் உரிய அவ்வத் தேவர்களை அவ்வவர்க்கும் உரிய மந்திரங்களால் விளித்து அவிகொடுத்து வேள்வி நிகழ்த்துதலால் உம்பர் அறிய என்றார்.

உம்பரும் வாழ் உலகும் அறிய என்று பிரித்து தேவர்களும் இங்கு வாழும் நிலவுலகத்தவரும் அறியும்படி என்றுரைக்கவும் நின்றது-

உணர்த்துதல் - துயிலினிடையே உணரச் செய்து கட்டளை யிடுதல்.

தலைமேற் கொண்டு எழுவார் - தலைமேற் கொள்ளுதல் - முதற் பெருங் கடமையாகத் தாங்குதல்; எழுதல் - முயலுதல்; "உடனெழுந்தார்." 265

3420. (வி-ரை) மண்ணிறைந்த பெருஞ்செல்வம்-உலகிற் சிறந்த செல்வங்களை உடைய நகரச் சிறப்பு. "சுற்றிவண் டியாழ்செயுஞ் சோலையுங் காவுந் துதைந் திலங்கு, பெற்றிகண் டால்மற்றி யாவருங் கொள்வர் பிறரிடை நீ, ஒற்றிகொண் டாயொற்றி யூரையுங் கைவிட் டுறுமென்றெண்ணி, விற்றிகண் டாய்மற் றிதுவோப்ப தில்லிடம் வேதியனே" (திருவிருத்தம்) என்று அரசுகள் சுவைபட அருளுதல் காண்க.

எண்ணிறைந்த - இறைவரது திருவருள் தம்எண்ணத்தில் நிறைவித்த.

தொண்டர் எழிற்பதியோருடன் ஈண்டி - தொண்டர்கள் ஏனைய அந்நகர மாந்தருடன் பெருகக் கூடி. தொண்டர் வேறு; பதியோர் வேறு; தொண்டர் - இறைவரால் உணர்த்தப்பட்டோர். (3418) பதியோர் - மணவினைக் குடனிருந்து காரியம் செய்யும் ஊரவர்.

உம்பர் பூமழை பொழிய - "உம்பர்வா ழுலகறிய" (3419) மணவினைகள் செய்யப்படுதலின் அவர்கள் ஏற்றுப் பூமழை பொழிந்தனர்.

கண்ணிறைந்த பெருஞ்சிறப்பு - மணவினை செய்யும் அணிகள் முதலிய சிறப்புக்கள்.

கல்யாணம் - சுபங்களிற் சிறந்தது என்பது பெயர்ப் பொருள்; கல்யாண குணங்கள் என்புழிப் போல; அது மணத்திற் காகி வந்தது; இவ்வாறே பரவையார் திருமணமும் இறைவரது ஆணையினால் அடியார்கள் கூடிச் செய்தமை முன் உரைக்கப்பட்டது ஈண்டு நினைவு கூர்தற்பாலது (324 - 326)

எழிற்பதியோர் செய்தமைத்தார்—என்பதும் பாடம். 266

3421. பண்டுநிகழ் பான்மையினாற் பசுபதிதன் னருளாலே
வண்டமர்பூங் குழலாரை மணம்புணர்ந்த வன்றொண்டர்
புண்டரிகத் தவள்வனப்பைப் புறங்கொண்ட தூநலத்தைக்
கண்டுகேட் டுண்டுயிர்த்துற் றமர்ந்திருந்தார் காதலினால். உசுஎ

(இ - ள்) பண்டுநிகழ் பான்மையினால் - முன்னை நாளில் நிகழ்ந்த நியதியினாலே ; பசுபதிதன்...வன்றொண்டர் - பசுக்களுக் கெல்லாம் பதியாகிய சிவபெருமானது திருவருளினாலே, வண்டுகள் மொய்க்கும் மலர்களைச் சூடிய கூந்தலையுடைய சங்கிலியம்மையாரைத் திருமணம் செய்து கூடிய வன்றொண்டர் ; புண்டரிகத்தவள் ...தூநலத்தினை - திருமகளின் அழகமைப்பினை வென்ற அவரது தூய பெண் நலத்தினை ; கண்டு...காதலினால் - பெருவிருப்பத்தினாலேயே கண்டும் கேட்டும் உண்டும் உயிர்த்தும் உற்றும் அனுபவித்து விரும்பியிருந்தனர்.

(வி - ரை) பண்டு நிகழ் பான்மை - முன்னர்த் திருக்கயிலையின் நிகழ்ச்சியின் விளைந்த, நியதி ; ஊழ் ; "நற்பெரும் பான்மை கூட்ட " (285) ; " பண்டைவிதி கடைகூட்ட " (288) என முன்னர்ப் பரவையார் திறத்துக் கூறிய கருத்தினைத் தொடர்ந்து கூறியவாறு ; இரண்டற்கும் நிகழ்ச்சி ஒன்றாதலின் ; இது செய்யின் இது விளையும் என்று பண்டு தொட்டு நிகழும் விதியின்படி இதுவும் நிகழ்ந்தது எனப் பொது விதியினைக் குறித்த தென்றலுமாம். பான்மை - ஊழ் - "பான்முறை தின்று" (நீதி நெறி).

பசுபதி - பசு - உயிர்கள்; பசுபதி - உயிர்களுக்குத் தலைவர் என்ற இத்தன்மையாற்கூறியது, ஈண்டுச் சுந்தரரையும், அநிந்திதை கமலினி என்ற இருவரையும் இங்குச் செலுத்தி நுகர்வித்தும், மேல்வினைகள் ஏறாமற் காத்தும், தம்பாற் செலுத்தி யாட்கொண்ட நாயகராகிய நிலைபற்றி.

வண்டமர் பூங்குழல் - புதிய பூக்களைச் சூடிய கூந்தல் ; புதிய பூக்களாதலின் தேனுண்ண வண்டுகள் மொய்த்தன. இனி, உத்தம வியலுடையாராகலின் அவரது கூந்தலின் இயல்பாகிய நறு நாற்றங் கண்டு வண்டுகள் விரும்பி வரும்படி அழகிய கூந்தல் என்றலுமாம். " அஞ்சிறைத் தும்பி !...மொழிமோ...கூந்தலின் நறியவு முளவோ நீ யறியும் பூவே " என்ற இறையனார் திருவாக்கு காண்க. திருமணத்திலும், பின்னரும் பூக்கள் சூடி அலங்கரிக்கப் பெற்றவர் என்பதும் குறிப்பு.

மணம் - ஈண்டு விதிமணம் குறித்தது ; " தக்க விதிமணத்தால் " (3395).

புண்டரிகத்தவள் வனப்பை - புண்டரிகத்தவள் - ஈண்டுச் செந்தாமரையில் வீற்றிருக்கும் திருமகளைக் குறித்தது ; அவள் அழகிற் சிறந்தவள் என்பது மரபாதலின்; வனப்பை என்ற குறிப்புமது ; அழகினைப் பற்றிய அளவில் ஒப்புமை கொள்க என்றபடி ; வனப்பு - மேனியைப் பற்றிய பெண்மை நலங்களாகிய அமைப்பு முற்றுங் கொள்க. " கன்னிதன் வனப்பு " (2994) என்று தொடங்கிப் பூம்பாவையாரது வனப்பின் தன்மைகளை ஆசிரியர் (2995 - 3008) விரித்தருளிய வகை எல்லாம் ஈண்டு வைத்துக் கொள்ளத்தக்கன.

புறங்கண்ட - வெற்றி கொண்ட ; அதனினும் மேம்பட்ட

தூநலம் - தூய்மையாகிய பெண்மை நலங்களெல்லாவற்றின் றொகுதி ; தாம் வீழ்வார் மென்றோட் டுயிலி னினிதுகொல், தாமரைக் கண்ணா னுலகு " என்ற குறளின் கருத்து ஈண்டுணர்த்தப்படுதல் காண்க.

கண்டு......காதலினால் - காதல் - பெருவிருப்பம் ; பெண்ணின்பாற் பெறும் இன்பம் ஐம்புலவின்பங்க ளாதலின் காணுதல் முதலிய ஐம்பொறிகளின் விடய நுகர்ச்சிகளும் கூறினார் ; " கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனும், ஒண்டொடி கண்ணே யுள" என்ற திருக்குறளின் சொல்லும் பொருளும் போற்றப்பட்ட திறம் காண்க. இது தமிழ் அகப்பொருணயம் கூறியபடி. அமர்ந்திருத்தல் - விரும்பியிருத்தல் ; " பன்னாளும் பயில்யோகம் பரம்பரையின் விரும்பினார் " (327) என்

றதும் ஆண்டுரைத்தவையும் பார்க்க. காதலினால் - முன்னை நாட் கண்ட காதல் காரணமாக; "வேறு வேறு காலங்களில் வேறு வேறு பொருள்களா னனுபவிக்கப் படுவன ஒருகாலத்து இவள் கண்ணே யனுபவிக்கப்பட்டன என்பதாம்" என்பது பரிமேலழகருரை. "மண்ணின்மேற், கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு, மொண்டொடி கண்ணே யுளவென்று - பண்டையோர், கட்டுரையை மேம்படுத் தாள்" என்பது நம்பிகளின் தோழமை கொண்ட கழறிற்றறிவார் நாயனார் திருவாக்கு. (உலா)

அமர்ந்திருந்தார் - இதன் தன்மையினை மேல் 3423-ல் விரிக்கின்றார். 267

3422\. யாழின்மொழி யெழின்முறுவ லிருகுழைமேற் கடைபிறழும்
மாழைவிழி வனமுலையார் மணியல்குற் றுறைபடிந்து
வீழுமவர்க் கிடைதோன்றி மிகுபுலவிப் புணர்ச்சிக்கண்
ஊழியா மொருகணந்தா னவ்வூழி யொருகணமாம். உ௬அ

(இ - ள்) யாழின் ... துறை படிந்து - யாழினுமினிய மொழியினையும், அழகிய பல்வரிசையினையும், இரு காதுகளிலுமணிந்த மகரக் குழைகளின் மேலே கடைப் பார்வை பிறழ்ந்து செல்லும் மாவடுவைப் போன்ற கண்களையும், சந்தனக்கோல மெழுதிய தனங்களையும் உடைய, சங்கிலியாரது அழகிய அல்குலாகிய தடத்தின் துறையிலே முழுகி; வீழும் அவர்க்கு - அழுந்துகின்ற நம்பிகள் சங்கிலியார் என்ற இருவர்க்கும்; இடைதோன்றி மிகு புலவிப் புணர்ச்சிக்கண் - இடையே உண்டாகி மிகுகின்ற புலவியிலும் புணர்ச்சியிலும் (முறையே); ஊழியாம் ... கணமாம் - ஒரு கணம் ஒருழியாக நீட்டிக்கும்; அவ்வோரூழி ஒரு கணமாகச் சுருங்கும்.

(வி - ரை) மொழி - முதலியவை முன்பாட்டிற் "கண்டு கேட்டு" என்று குறித்த வெவ்வேறு அனுபவங்களுக்கிடமாகிய தானங்களைக் குறித்தன: மொழி - முறுவல் - விழி - முலை முதலியனவற்றை உடையார் என்க.

யாழின் மொழி - யாழ் - யாழொலியினைக் குறித்தது; ஆகு பெயர்; இன் - ஐந்தனுருபு. "முரன்றயா ழொலியினதாய்" (1393); யாழ்ஒலியி னினிய மொழி என்க; "குழலினிது யாழினி தென்பதம் மக்கண், மழலைச்சொற் கேளா தவர்" என்ற விடத்து யாழொலி மொழிக்கு உவமிக்கப் பட்டது காண்க.

முறுவல் - பல் வரிசை; முறுவல் - நகை; நகைக்குக் கருவியாகிய பல்வரிசைக்கு வந்தது.

குழைமேல்- காதுகளிலணிந்த குழைகளின்மேல் கடைவிழி பிறழும்படி கண்கள் நீண்டிருத்தல் பெண்களின் உத்தம இயல். கடை-கடைக்கண்; கடைக்கண் பார்வை என்ற பொருளில் வந்தது.

மாழை விழி - மாழை - மாவடு; மெய்பற்றி வந்த உவமை.

அல்குல் துறைபடிந்து - அல்குல் - கடிதடம்; துறை - படிந்து என்றதற் கேற்பத் தடமாகவைத்து துறை என்றார்; படிதல் - தோய்தல்; துறையின் அமர்ந்த வாறே மூழ்குதல்.

வீழும் - அழுந்தும்; வீழ்தல் - விரும்புதலுமாம்.

அவர்க்கு இடைதோன்றிமிகும் - இடை - ஏழனுருபு. அவர் - நம்பிகள் சங்கிலி யார் என்றிருவர்.

புலவிப் புணர்ச்சிக்கண் - புலவியும் புணர்ச்சியுமாகிய இரண்டு நிலைகளினும்,

புலவிக்கண் - ஒரு கணம் ஊழியாம் ; புணர்ச்சிக்கண் - அவ்வூழி ஒரு கண மாம் என்று முறை நிரனிறையாகப் பொருள் கொள்க. ஊழி - மிகநீடித்த காலக் கூறு ; கணம் - மிகக் குறுகிய காலக்கூறு.

புலவி - " அஃதாவது இருவர் நெஞ்சும் புணர்ச்சி விதும்பாது புலக்கக் கரு திய வழி ஒருவரோடொருவர் புலத்தல் " என்பர் பரிமேலழகர். உண்மையாகிய வேறு ஒரு காரணமுமின்றித் தாமே ஒரு காரணங் கற்பித்துக் கொண்டு ஊடுதல்.

படிந்து வீழுமவர்க்கிடை தோன்றி மிகு - இருவருள் ஒருவரிடை உளதாகி மற்றவரிடைச் சேறலால் இடை என்றும், காரணமின்றி வருவிக்க நிகழ்வதனால் தோன்றி என்றும், அவ்வாறு தோன்றிய தன்மை மிக்கவழி பயன்றருதலால் மிகு என்றும் கூறினார்.

படிந்து வீழுமவர் என்றதனால் முன்னர்ப் புணர்ச்சியும், மிகு புலவிப் புணர்ச் கண் - என்றலால் அதன் பின்னர்ப் புலவியும், அதன் பின்னர் அது தீர்ந்து புணர்ச்சி யும் கூறியவாறு ; அவ்வூழி என்ற முன்னறிசுட்டும் வைப்பு முறையும் இக்கருத்தன. இப்புலவி இன்ப நுகர்ச்சிக்குத் துணை நின்று அதனை மிகுவிப்பதென்பது தமிழ் அகப்பொருணூல்களிற் பேசப்படும் உண்மை; "துனியும் புலவியு மில்லாயிற் காமங், கனியுங் கருக்காயு மற்று", " ஊடுதல் காமத்திற் கின்ப மதற்கின்பங், கூடி முயங்கப் பெறின்" என்பவை காண்க; இன்னு மிவற்றின் இயல்பெல்லாம் அகப்பொருள்நூல் களினும் திருக்குறளினுள் புணர்ச்சி விதும்பல், புலவி, புலவி நுணுக்கம் முதலிய பகுதிகளிலும் கண்டுகொள்க.

புலவிக்கண் ஊழியாம் ஒருகணந்தான் - என்றது புலவி நிற்கும் காலம் ஒரு கணமே யாயினும் அது ஊழியேபோல நீடித்தது என்பது ; தானும் என்ற சிறப்பும் மையும் ஊழியே என்ற தேற்றேகாரமும் விகாரத்தாற்றொக்கன. ஆம் ஆக்கச் சொல் உவமை குறித்தது.

புணர்ச்சிக்கண் அவ்வூழி ஒருகணமாம் - புணர்ச்சி நிகழும் காலம் நீண்டதாயி னும் ஒரு கணமேபோல விரைந்து கழியும் என்பது; உலக இன்பங்கள் விரும்பியவழி நிகழ்ந்தபோது காலம் விரைந்து செல்லக் காண்டலும், விரும்பாத நிகழ்ச்சிகள் நேர்ந்தபோது காலம் மெல்லச் செல்வதுபோல் காண்டலும் கண்கூடு ; பேரின்பத்தி னும் மிவ்வாறே கண்டுகொள்க. உம்மையும் ஏகாரமும் முன்கூறியவாறே தொக்கன. அவ்வூழி - புலவியில் ஒரு கணம் ஊழியாகக் கண்ட அந்த என அகரம் முன்னறி சுட்டு. இதனால் புலவியின்பின் புணர்ச்சி நிகழ்ந்ததனைக் குறிப்பிற் கூறியவாறு. இவையெல்லாம் பெருங் காவிய மாதலின் தமிழ் அகப்பொருணலம் பற்றிக் கூறிய அளவாம். ஈண்டுச் சங்கிலியாருடன் கூடி யின்ப நிகழ்ந்தவை முன்பாட்டினாலும், அவ்வின்பம் பெருக நிகழ்ந்தமை இப்பாட்டினாலும் கூறினார் ; இவ்வாறே பரவையா ருடன் கூடிய நிலையினும் (327 - 329) இரண்டு பாட்டுக்களாற் கூறிய நிறையும் நியமமும் கவிநயமும் கண்டுகொள்க.

இனி, இவ் வின்பம் ஏனை உலகர் போன்று இழிந்த காமத்திற் சென்றொழிந்து மேல் வினைகள் பெருக ஏதுவாகக் கழியாது இறைவரது சிவயோகமாகிய பேரின் பத்துள் ளடங்கி உடனூழாய்க் கழிந்த நிலையினை மேல்வரும் பாட்டில் " இந் நிலை யிற் பேரின்ப மினிதமர்வார் " (3423) என்று தொடங்கிக் கூறும் திறனும், இது போலவே முன்னர்ப் பரவையார் கூட்டத்தின் நிகழ்ச்சியினைத் "தன்னையா ளுடைய பிரான் சரணார விந்தமலர், சென்னியிலுஞ் சிந்தையினு மலர்வித்து " (328) என்று கூறிய திறனும் கண்டு கொள்க.

நம்பிகள்பால் அறியாமையாற் பலசொல்லி அபசாரப்படும் மாக்கள் இந்நாட்பங் களைக் கண்டு உய்தி பெறுவாராக. 268

3428. இந்நிலையிற் பேரின்ப மினிதமர்வா ரிறையுறையும்
மன்னுபுக ழொற்றியூ ரதனின்மகிழ் சிறப்பினாற்
சென்னிமதி புனைவார்தந் திருப்பாதந் தொழுதிருந்தார்
முன்னியகா லங்கள்பல முறைமையினால் வந்தகல. உசுக

(இ - ள்) இந்நிலையில் ... இனிதமர்வார் - முன் கூறியபடி இவ்வாறுள்ள நிலைமையில் பேரின்ப நுகர்ந்து இனிதாக விரும்பி எழுந்தருள்வாராகிய நம்பிகள், மன்னு புகழ் ...தொழுது - நிலைபெற்ற புகழினையுடைய திருவொற்றியூரினில் தங்கி மகிழும் சிறப்பினாலே சிரத்திற் பிறை சூடிய இறைவரது திருப்பாதத்தினைத் தொழுது கொண்டு; முன்னிய ... அகல - எண்ணிய காலங்கள் பலவும் வருமுறையிலே தொடர்ந்து வந்து செல்ல; இருந்தார் - எழுந்தருளியிருந்தனர்.

(வி - ரை) இந்நிலையில் - முன் இரண்டு பாட்டுக்களிலும் கூறிய இந்தச் சிற்றின்பமாகிய நுகர்ச்சி நிலைமையிலே; பேரின்பம் இனிது அமர்வார் - பேரின்பத்தினை இனிதாக நுகர்ந்துகொண்டு விரும்பி எழுந்தருளியிருப்பாராகி; சிற்றின்ப நுகர்ச்சியினுள் பேரின்ப நுகர்தலாவது, "பெற்றசிற் றின்பமே பேரின்ப மாயங்கு, முற்ற வரும்பரி சுந்தீபற; முளையாது மாயையென் றுந்தீபற" என்ற திருவுந்தியாரினுள் விளக்கப்பட்ட நிலையின் அனுபவம்; "உடம்புடைய யோகிகடா முற்ற சிற் றின்பம், அடங்கத்தம் பேரின்பத் தாக்கிற்—றொடங்கி, முளைப்பது மொன் றில்லை முடிவதுமொன் றில்லை, யிளைப்பதுமொன் றில்லை யிவர்" (76) என்ற திருக்களிற்றுப் படியார் இதனை மேலும் விளக்குதல் காண்க. "ஏடுதரு மலர்க்குழலார் முலைத்தலைக்கே யிடைக்கே யெறிவிழியின் படுகடைக்கே கிடந்துமிறை ஞானங், கூடுமவர் கூடரிய வீடுங் கூடிக் குஞ்சித்த சேவடியுங் கும்பிட்டே யிருப்பர்" (சித்தி 10 - 5) என்ற ஞானநூல் முடிபு இதனை நன்கு விளக்குதலும் காண்க. முன்னர் 327 - 328 - 329 பாட்டுக்களின் கீழ் உரைத்தவையும் பார்க்க. அமர்தல் - விரும்புதல்; "பயில்யோகம் பாரம்பரையின் விரும்பினார்" (327)

இனிது அமர்வார் - இருந்தார் - என்று கூட்டுக.

சென்னி மதிபுனைவார் - தொழுது - சென்னியின்கண் மதிபுனைவாரது என்றும், மதிபுனைவார் பாதம் சென்னியாற் றொழுது என்றும் உரைக்க நின்றது; "சாரவிந்தமலர் சென்னியிலுஞ் சிந்தையிலு மலர்வித்து" (328) என்றது காண்க.

பல - காலங்கள் - வந்தகல இருந்தார் - என்று கூட்டுக. இருந்தார் - அப்போது பலகாலங்கள் வந்தகல என்று குளகமாக்கி அக்காலத்தில் தென்றல் வந்தணைய என்று மேற்பாட்டுடன் கூட்டிமுடித்தலுமாம்.

காலங்கள் பல - பருவகாலங்கள் பலவும்; பல என்றதனால் குறைந்தது மூன்று பருவங்களாயினும் குறித்தல் வேண்டும். பருவம் - பெரும் பொழுது என்பர்; "இல்லிருத்தல் முல்லை" "கூடல் குறிஞ்சி" என்பவாகலானும், "காரு மாலையு முல்லை குறிஞ்சி, கூதிர் யாம மென்மனார் புலவர்" (தொல். பொ. அகத். 6), "பனி யெதிர் பருவமு முரித்தென மொழிப" (ஷை - 7) என்றும், "நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு" (ஷை. 9.) என்றும் கூறுபவாகலானும், ஈண்டு இல்லிருக்கையும் - கூடலும் - பிரிவும் உரிப்பொருளாகக் கொண்ட முல்லை, குறிஞ்சி, பாலைத் திணையொழுக்கம் நிகழ்வன வாதலானும், அவற்றின் முதற் பொருளாகிய கார்



திருமயிலை - மேலைக் கோபுரமும்
அதனை அடுத்து (உட்புறமிருந்து பார்வை)
திருஞானசம்பந்த நாயனாரும்
பூம்பாவையாரும் உள்ள கோயிலும்
—பாட்டு - 2983



திருமயிலை - கீழைக் கோபுரம்
(உட்புறமிருந்து பார்வை)
—பாட்டு - 2975



திருமயிலை - வடக்குப் பிராகாரத்தில்
" மட்டிட்ட புன்னை " மரமும் அதன்கீழ்
அம்மையார் மயிலுருவுடன் பூசித்த
ஐதிகத் திருக்கோயிலும்



திருமயிலை-வாயிலார் நாயனர்
(மூலத்தானத் திருவுருவம்)
—பாட்டு - 4078



திருக்கேதாரம் (வடநாடு)
திருமூலட்டானேசுவரர் திருவுருவம்
—பாட்டு - 2824 – 3352




திருக்கேதாரநாதர் (வடநாடு)
திருக்கோயிலும் கோபுரமும்



திருவஞ்சைக்களம்
சேரமானார்-சுந்தரர் திருமடம்
(திருப்பனந்தாள் - ஸ்ரீகாசி மடத்தின் உபயம்)



திருவொற்றியூர்
சுந்தரர் - சங்கிலியம்மையார்
மூலத்தானத் திருவுருவங்கள்
—பாட்டு - 3423

காலம் முதல், இளவேனில் வரை உள்ள காலங்கள் அவ்வம் முறைமையின் வந்து கழிந்தன என்க ; எனவே நம்பிகள் சங்கிலியாரை மணம் புணர்ந்தது கார்காலமென் பதும், பிரிவுற்றது இளவேனிற் காலமென்பதும் கருத நின்றன. "பங்குனித் திருநா ளுக்குப் பண்டுபோல் வருவா ராக" (3497) என்றும் "வசந்தம்" (3425) என்றும் கூறுதலுங் கருதுக.

முன்னிய காலங்கள் பல - பெற்ற சிற்றின்பமே பேரின்பமாய் முற்றவரும் தன்மையில் இறைவர் பாதமே நினைந்திருந்த காலங்கள் என்க. முன்னுதல் - இடை விடாது நினைத்துச் சிவயோகம் கூடுதல் ; முறைமையாவது - காலப் பருவங்கள் தொடரும் முறைமை ; சிவயோக நிலைபேறு பெற்று நின்ற முறைமையில் என்ற லும் குறிப்பு. 269

3424. பொங்குதமிழ்ப் பொதியமலைப் பிறந்துபூஞ் சந்தனத்தின்
கொங்கணைந்து குளிர்சார லிடைவளர்ந்த கொழுந்தென்றல்
அங்கணையத் திருவாரூ ரணிவீதி யழகரவர்
மங்கலநாள் வசந்தமெதிர் கொண்டருளும் வகைநினைந்தார். உஎ0

(இ - ள்) பொங்குதமிழ்...தென்றல் - மேன்மேலும் பொங்கி வளர்கின்ற தமிழ்க்கிருப்பிடமாகிய பொதியமலையினிற் றோன்றி, பூஞ்சந்தன மரங்களின் மணத் தில் அளவளாவி குளிர்ந்த நீர்ச் சாரலின்கண் வளர்ந்த செழுமையுடைய தென்றற் காற்று ; அங்கணைய - அங்குத் திருவொற்றியூரில் வந்துசார ; திருவாரூர்...நினைந் தார் - திருவாரூரில் அழகிய வீதிவிடங்கப் பெருமான் மங்கலமாகிய திருவிழா நாட்களில் வசந்தவிழாத் திருவோலக்கத்தினைக் கொண்டருளும் தன்மையினை நினைந்தனர் (நம்பிகள்).

(வி - ரை) பொங்குதமிழ் - வழக்காறற்றொழிதலும், வளர்ச்சியின்றி நிற்ற லும், இலக்கண வரம்பின்றி நிகழ்தலும் முதலிய தடைகள் இல்லாமல் மேன் மேல் வளம் பெற்று வளரும் தமிழ் என்றதாம். ஏனைய மொழிகள் எல்லாவற்றினும் தமிழின் மேம்பாடு குறித்தது. "ஞால மளந்த மேன்மைத் தெய்வத் தமிழ்" (970) என்றதும், ஆண்டுரைத்தவையும் பார்க்க.

தமிழ்ப் பொதியமலை - தமிழுக்கிருப்பிடமாகிய தமிழ்முனிவர் அகத்தியனார் வீற்றிருக்கும் பொதிகைமலை; தமிழ்முனிவரது மலை என்க. தமிழ் - இனிமை என்று கொண்டு கண்ணுக்கும் கருத்துக்கும் இன்பம் தரும் பொதியமலை என்றலுமாம்.

பொதியமலைப் பிறந்து பூஞ் சந்தனத்தின் கொங்கணைந்து - "சந்தனப் பொதியச் செந்தமிழ் முனிவன்" என்பன முதலியவை காண்க. அணைந்து - விரவி ; கொங்கு - மணம் ; பிறந்து - பொதியமலையின் குளிர்ந்த சாரலினின்று தோன்றி ; பிறத்தல்- தோன்றுதல் - தொடங்குதல். "பிறந்த தெங்கள் பிரான்மல யத்திடை, சிறந்த ணைந் தது தெய்வநீர் நாட்டணி" (313) என்று முன்னர்ப் பரவையார் திறத்து நிகழ்ந்த கருத்துக்களை இங்குவைத்து ஒப்புமை கண்டுகொள்க. பிறந்து - கொங்கணைந்து என் றதனால் தண்மையும் மென்மையும் நறுமையுமுடைமை குறிக்கப்பட்டன. பூ-அழகு; மணமுமாம்.

குளிர் சாரலிடை வளர்ந்த - குளிர்சாரல் என்றது பொதியமலையே யன்றி ஏனைய குளிர்மிக்க மலைச் சாரல்களும், நீர்வளமிக்க சோலைப்பகுதிகளும், காவிரி நீர் நாட்டுப் பகுதிகளும் குறித்தது ; சாரல் - சார்ந்து வரும் இடங்கள் ; வளர்ந்த -

பிறந்த தன்மைக்கு மாறுபாடின்றி ஏற்றவாறே வளர்ச்சியும் பெற்று என்றது குறிப்பு. கொழுமை - மரந்திய முதலிய வளங்களை உடைமை.

அந்த அணைய - அங்குத் தொண்டை நாட்டில் திருவொற்றியூரில் அத்தென்றல் வந்து சார ; அணைய - நினைந்தார் - என்று கூட்டுக ; இவ்வாறன்றி அந்த - திருவாரூரில் என்று கொண்டு, அங்குத் தென்றல் அணைய அக்காலத்தில் வசந்தம் கொண்டருளும் வகை என்றுரைப்பாருமுண்டு.

திருவாரூர் அணிவீதி அழகர் - வீதி விடங்கப் பெருமான் ; தியாகேசர்.

மங்கலநாள் வசந்தம் எதிர்கொண்டருளும் - மங்கலநாள் - திருவிழா. வசந்தம் அத்திருவிழாவில் ஆறுவது திருநாள் என்பர்.

அங்கணைய - வகை நினைந்தார் - தென்றல் - பருவத்தையும் நீர் நாட்டையும் திருவாரூரினையும் நினைவூட்ட, அப்பருவம் திருவாரூரில் தியாகேசர் வசந்தங் கொண்டருளுவதை நினைவூட்ட இத்துணையும் நினைந்தனர்.

எதிர் கொண்டருளும் வகை - ஏற்றருளும் விழாச் சிறப்பு. இவ்வாறு உலகானுபவப் பொருள்கள் இறைவரது தொடர்பு பற்றி நினைவூட்டும் நிலை பெரியோர்களது செம்மை சேர் மனநிலை ; இத்தன்மையில் உலகின்பப் பொருள்களை இறைவர் பற்றாகக் காணும் தன்மை பெறப் பழகுதலே சிவயோகத்தின் பண்பு ; இப்பயிற்சி மிக்க நலம் தருவதொன்றாம். 270

3425. வெண்மதியின் கொழுந்தணிந்த வீதிவிடங் கப்பெருமாள்
ஒண்ணுதலார் புடைபரந்த வோலக்க மதனிடையே
பண்ணமரு மொழிப்பரவை யார்பாட லாடறனைக்
கண்ணுறமுன் கண்டுகேட் டார்போலக் கருதினார். உஎக

(இ - ள்) வெண்மதியின்...அதனிடையே - வெள்ளிய மதியின் கொழுந்தாகிய பிறைச்சந்திரனை அணிந்த வீதிவிடங்கப் பெருமானது அழகிய நெற்றியை உடைய பெண்கள் பக்கங்களிற் பரவிச் சூழ்ந்த திருவோலக்கத்தின்கண் ; பண் அமரும்... ஆடல்தனை - பண்ணினீர்மை பொருந்திய மொழியினையுடைய பரவையம்மையாரது பாடலினையும் ஆடலினையும் முறையே ; கண்ணுற...கருதினார்-நேரே கண்களிற் பொருந்தக் காணவும் கேட்கவும்பெற்றனர்போலவே கருதினர் (நம்பிகள்).

(வி - ரை) வீதிவிடங்கப் பெருமாள் - தியாகேசர் ; இப்பெயரின் பொருளும் வரலாறும் பற்றித் (130) திருவாரூர்த் திருநகரச் சிறப்புப் பார்க்க.

ஒண்ணுதலார் புடைபரந்த ஓலக்கம் - பெண்கள் பக்கங்களிலெல்லாம் பரவிச் சூழக் கொலு வீற்றிருக்கும் நிலை ; "பத்தர்களோடு பாவையர் சூழ" (அரசு. ஆரூர். குறிஞ்சி) ; இப்பெண்கள் கும்பிட வந்தாரும் ஆடல்பாடல்களியற்றி உபசரிப்பாருமாம். ஓலக்கம் - கொலு வீற்றிருக்கும் நிலை. கொலுமண்டபமுமாம்.

பண் அமரும் மொழி - பண்ணின் நீர்மை இயல்பாகவே அமைந்த மொழியினையுடைய ;

பாடல் தனையும் ஆடல்தனையும்- என்று தனை என்பதை இரண்டிடத்தும் தனித் தனிக் கூட்டியும் எண்ணும்மை விரித்தும் உரைத்துக் கொள்க.

ஆடல்தனைக் கண்டு பாடல்தனைக் கேட்டார் - என்று எதிர் நிரனிறையாகக் கூட்டிக்கொள்க ; ஆடலுடன் பாடல் ஒருசேர நிகழ்தலினால் தனை என ஒருமையாற் கூறியும், அதனை ஓரிடத்துக் கூட்டியும், ஒருவினை கொண்டு முடித்தும் வைத்தருளினார். இற்றைநாட் பேசும்படக் காட்சி அமைப்பினை நினைவுகூர்க.

கண்ணுற முன் - அகக்கண்ணினாலே யன்றிப் புறக்கண்ணாலும் முன் பொருந்த என்பது.

போலக் கருதினர் - கருத்தில் ஊன்றிய நோக்கினாலே அக்காட்சி புறக்காட்சி நிகழ்ந்தது போலவே யிருந்தது; உருவெளிப்பாடு முதலிய அகப்பொருட்டுறைகள் காண்க. மேல் இதனைத் தொடர்ந்து பிரிவாற்றா நிலையில் அருளும் திருப்பதிகமும், அதனை ஆசிரியரது "மிக நினைந்து ஏசறவாய்" என்று விளக்கியருளும் நிலையும் காண்க. "எத்தனைநாள் பிரிந்திருக்கே னென்னாரூ ரிறைவனையே" (தேவா).

கண்டுகொண்டார்—என்பதும் பாடம். 271

3426. பூங்கோயி லமர்ந்தாரைப் புற்றிடங்கொண் டிருந்தாரை
நீங்காத காதலினா னினைந்தாரை நினைவாரைப்
பாங்காகத் தாமுன்பு பணியவரும் பயனுணர்வார்
"ஈங்குநான் மறந்தே"னென் றேசறவான் மிகவழிவார், உஎஉ

3427. மின்னொளிர்செஞ் சடையானை வேதமுத லானானை
மன்னுபுகழ்த் திருவாரூர் மகிழ்ந்தானை மிகநினைந்து
பன்னியசொற் "பத்திமையு மடிமையையுங் கைவிடுவான்"
என்னுமிசைத் திருப்பதிக மெடுத்தியம்பி யிரங்கினார். உஎங

3426. (இ - ள்) பூங்கோயில்...நினைவாரை - பூங்கோயிலினுள் விரும்பி வீற்றிருப்பவரைப், புற்றினை இடமாகக் கொண்டு வீற்றிருப்பவரை, இடையறாத பெருவிருப்பத்தினாலே தம்மை நினைந்திருக்கும் அடியவர்களைத் தாம் நினைந்திருப்பவரை; பாங்காக...பயனுணர்வார் - முறைமையாகத் தாம் முன்னாட்களிற் பணிய அதனால் வரும் சிவானந்தமாகிய பெரும்பயனை உணர்ச்சியிற் கொள்பவராகி; ஈங்கு நான்...மிக அழிவார் - இவ்விடத்து நான் மறந்திருந்தேன் என்று வருந்தி மிகவும் மனமழிவாராகி. உஎஉ

3427. (இ - ள்) மின் ஒளிர்...மகிழ்ந்தானை - மின்போல ஒளிவிடும் சிவந்த சடையினை உடையவரை, வேதங்களின் முதல்வராக உள்ளவரை, நிலைபெற்ற புகழை உடைய திருவாரூரினை மகிழ்ந்தவரை; மிகநினைந்து - (பிரிவாற்றாமையால்) மிகவும் நினைந்து; பன்னிய சொல்...இரங்கினார் - பலமுறையும் அடுக்கிய சொற்களை யுடைய "பத்திமையும் அடிமையையும் கைவிடுவான்" என்று தொடங்கும் சொல்லும் பொருளுமுடைய பண் பழம்பஞ்சுரத்தின் இசைபொருந்திய திருப்பதிகத்தினை எடுத்துப் பாடி இரங்கினார். உஎங

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3426. (வி - ரை) பூங்கோயில்...நினைவாரை - ஈண்டுக் கூறியவை மூன்றும் புற்றிடங்கொண்ட பிரானாராகிய திருமூலட்டான நாதரை நினைந்த வகை; மேற் பாட்டிற் கூறும் (3427) மூன்றும் வீதிவிடங்கராகிய தியாகேசரை நினைந்த வகை. மேற்பாட்டில் (3427) வரும் மூன்றும் ஒருமையாற் கூறியது தோழமையால் தம்முடன் ஒன்றித்து நிகழும் தன்மையுடையார் என்ற குறிப்புமாம். பதிகத்துள் "இறைவனையே" என்று ஒருமையாற் போற்றியதும், "தூசிகளுக்கு உடனாகி" என்றதும், பிறவும் கருதுக.

நீங்காத... நினைவாரை-எல்லாவுயிர்களையும் பொதுவகையால் நினைந்தருள்பவராயினும் இடையறுக் காதலினா னினைவாரைச் சிறப்பு வகையால் நினைவார் இறைவர் என்பதாம். "சார்ந்தாரைக் காத்த றலைவர் கடனாதல், சார்ந்தாரைக் காத்துஞ் சலமிலனுய்ச்—சார்ந்தடியார், தாந்தானுச் செய்துபிறர் தங்கள்வினை தான்கொடுத்தல், ஆய்ந்தார்முன் செய்வினையு மாங்கு" (போதம் - 10) என்று இவ்வுண்மையினை ஞான சாத்திரம் விளக்குதல் காண்க. "மறந்தானைத் தன்னினையா வஞ்சர் தம்மை யஞ்செழுத்தும் வாய்நவில வல்லோர்க் கென்றுஞ், சிறந்தானை" (தாண் - திருநாகேச்சரம்- 6), "எத்தனையும் பத்தர்பத்திக் குளைவானை யல்லாதார்க் குளையாதானை" (தாண்-கீழ்வேளூர் 3.) "மறவாதே தன்றிறமே வாழ்த்துந் தொண்டர் மனத்தகத்தே யனவரத மன்னி நின்ற திறலானை" (தாண். திருமுதுகுன்றம் - 8) என்பன முதலிய எண்ணிறந்த திருவாக்குக்கள் காண்க.

நினைந்தாரை நினைவாரை-நினைந்தபின்னர் அவர் நினைந்தவற்றை யீய நினைவார் என்றபடி.

பாங்காக - ஆளாகும் முறைமையாலே ; பாங்கு - பண்பு ; பாங்கு - தோழமை என்ற குறிப்புமாம். "என்னுடைய தோழனுமாய்" என்ற பதிகம் பார்க்க.

பணிய வரும் பயன் உணர்வார் - பயன் - பணிந்தமையால் பெற்ற பெரும்பேறாகிய பொருளின் திறங்கள். சரித நிகழ்ச்சிகள் எல்லாம் காண்க.

முன்பு-முன்னைநிலையினும், அதனைத் தொடர்ந்த இந்நிலையினும் இதற்கு முன்னுக.

உணர்வார் - உணர்வாராகி ; முற்றெச்சம் ; உணர்வார் - மனம் அழிவார் - மிக நினைந்து - இயம்பி - இரங்கினார் என்று மேல்வரும் பாட்டுடன் முடிக்க. உணர்வாராகி அதனாலே அழிவார் - நினைந்து என்க.

ஈங்கு நான் மறந்தேன் என்று - பயனை உணர்ந்தமையால் இங்கு அவரை நான் மறந்திருந்தேன் என்று வருந்தினார் ; ஈண்டு மறந்தேன் என்பது பிரிந்திருந்தேன் என்ற அளவில் பொருடந்து நின்றது; நம்பிகள் எந்நாளும் திருவாரூரை மறந்திருக்கவில்லை யாதலின் ; "பிரிந்திருக்கேன்" என்ற தேவாரமும் பார்க்க.

ஏசறவு - பெறற்கரிய பொருளைப் பிரிந்திருந்தமையின் வரும் வருத்தம் ; திருவாசகத்தினுள் "திருவேசறவு" என்ற பகுதியின் திருப்பாட்டுக்கள் பார்க்க.

மிக அழிதல் - மனமிக அழிதல் - நைந்து படுதல். 272

3427. (வி - ரை) மிக நினைந்து - பலபடியாலும் அழுந்த நினைந்து.

மிக நினைந்து பன்னிய சொல் - பன்னுதல் - ஒரே பொருளைப் பல திறத்தாலும் அனுபவித்துச் சொல்லுதல் ; "எத்தனைநாட் பிரிந்திருக்கேன் என்னாரூ ரிறைவனையே" "எவ்வணநான் பிரிந்திருக்கேன்" "எங்ஙனநான் பிரிந்திருக்கேன்" "எப்பரிசு" "என்னுக" "என்செய" "எற்றுளனுய்" என்பனவாகப் பாட்டுத்தோறும் பன்னிவரும் முடிபுகளையும், அவற்றாற் றெரியவரும் மனமழிந்த நிலையினையும் காண்க; இப்பதிகம் நம்பிகளது பதிகங்களில் வழக்கமாக வரும் பத்துப்பாட்டுக்களின் மேலும் இரண்டு பாட்டுக்கள் கொண்டு விளங்குதலும், தேவிமார் இருவர் காரணமாக வந்த வினைநிகழ்ச்சிகளின் நினைவுகொண்டு விளங்குதலும் காண்க.

"பத்திமையும் அடிமையையும் கைவிடுவான் என்னும் - இது பதிகத் தொடக்கமாகிய முதற்குறிப்பும், பதிகக் கருத்துமாம் ; பத்திமை-அகநிலை ; அடிமை-புறநிலை ; கைவிடுவான் - நழுவ விடுவானுகி.

இசை - பதிகப்பண்ணாகிய பழம்பஞ்சரப் பண்ணிசை.

இரங்கினார் - இரங்குதல் - மனமழிந்து தந்நிலைக்குத்தாமே வருந்துதல். 273

திருவாரூர் - (திருவொற்றியூரிற் பாடியருளியது)

திருச்சிற்றம்பலம் பண் - பழம்பஞ்சுரம்

பத்திமையு மடிமையையுங் கைவிடுவான் பாவியேன்
பொத்தினநோ யதுவிதனைப் பொருளறிந்தேன் போய்த்தொழுவேன்
முத்தினைமா மணிதன்னை வயிரத்தை மூர்க்கனேன்
எத்தனைநாட் பிரிந்திருக்கே னென்னாரூ ரிறைவனையே. (1)

ஏழிசையா யிசைப்பயனா யின்னமுதா யென்னுடைய
தோழனுமா யான்செய்யுந் துரிசுகளுக் குடனாகி
மாழையொண்கண் பரவையைத்தந் தாண்டானை மதியிலா
ஏழையேன் பிரிந்திருக்கே னென்னாரூ ரிறைவனையே. (10)

வங்கமலி கடனஞ்சை வானவர்க டாமுய்ய
நுங்கியமு தவர்க்கருளி நொய்யேனைப் பொருட்படுத்துச்
சங்கிலியோ டெனைப்புணர்த்த தத்துவனைச் சழக்கனேன்
எங்குலக்கப் பிரிந்திருக்கே னென்னாரூ ரிறைவனையே (11)

பேரூரு மதகரியி னுரியானைப் பெரியவர்தஞ்
சீரூருந் திருவாரூர்ச் சிவனடியே திறம்விரும்பி
ஆரூர னடித்தொண்ட னடியன்சொ லகலிடத்தில்
ஊரூர னிவைவல்லா ருலகவர்க்கு மேலாரே. (12)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :— திருவாரூரிறைவனையே ஈங்கு நான் மறந்திருக்கேன் ; எத்தனைநாள் பிரிந்திருக்கேன் என்று ஏசறவால் மனமழிந்து இரங்கிப் போற்றியது.

குறிப்பு:— இத்திருப்பதிகம் நம்பிகளது திருவுள்ளக் குறிப்பேயன்றிச் சரித அகச்சான்று பலவும் பெற நின்ற பெருஞ்சிறப்புடையது. 10-11 பாட்டுக்களில் இறைவாது திருவருளின் ஆணைவழியே பரவையாரையும் சங்கிலியாரையும் மணந்துகொண்ட வரலாறுகள் பெறப்படுவன. "போய்மகிழ்க்கீ ழிருவென்று, சொன்ன வெனைக் காணுமே சூளுறவு மகிழ்க்கீழே, என்னவல்ல பெருமானே" "சார்ந்தனன் சார்ந்தனன் சங்கிலி மென்றோள்" "பண்மயத்த மொழிப்பரவை சங்கிலிக்கு மெனக்கும் பற்றாய பெருமானே" என்பன முதலிய தேவாரத் திருக்குறிப்புக்கள் பார்க்க.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) பொத்தினநோய் அதுஇதனை-நோயினை உள்ளே வைத்துப் பொதிந்த உடம்பினைக் கொண்ட பிறவி ; 3, 4 பாட்டுக்கள் பார்க்க. அது - உடம்பு என்ற உருவங் கொண்டு, மறைந்து நிற்கும் நோயே ஆகிய அது ; பண்டறி சுட்டு ; பொருள் அறிந்தேன் போய்த்தொழுவேன் - உண்மையினை அறிந்தேனாதலின் அதன் பற்றினை விட்டுப் போய் இறைவரைத் தொழும் நியமத்தில் நின்றேன் ; ஆதலின் என்பது சொல்லெச்சம் ; நோய் - வினைப்போகம் ; "மூலநோய்" (தேவா) ;—(2) ஐவணமாம்பகழி - காம னம்புகளாகிய ஐந்து மலர்கள்; வண்ணம் - வணம் என நின்றது ; வண்ணம் - வகை என்ற பொருளில் வந்தது ; வெவ்வணமாம் - சிவந்த தீயாகிய ; விழிசெய்த - விழித்த; அணவுதல் - பொருந்துதல் ;—(3) சங்கு அலக்கும் - அலக்குதல் - அலையச் செய்தல் ; அலக்கண் - துன்பம் ; அலக்கும்-துன்பம் செய்யும் ; உலக்க - அழிவு பெற - முடிவுபெற ; 11-வது பாட்டுப் பார்க்க.

செறிவு - சேர்தல் ;—(4) இங்ஙனம் - இவ்வுலகத்திடை ; அங்ஙனம் - முன் அருளிய அவ்வாறு ; எங்ஙனம் - எவ்வாறு தரித்து ;—(5) அப்பேரிய - அகரம் உலகறி சுட்டு; அணைவு - சேர்தல்; பரிசு - வகை - தன்மை ;—(6) வன்நாகம் நாண் ; வரை வில்; அங்கி கணை; அரி பகழி - நாகம் - வாசுகி என்னும் பாம்பு ; நாண் - வில்லின் கயிறாக ; வரைவில் - மேருமலையே வில்லாக ; அங்கிகணை - அக்கினியே கணையின் கூர் - நுனி - முனையாக ; அரிபகழி - விட்டுணு அம்பாக ; தன் ஆகம் உறவாங்கி - தனது மார்பு பொருந்த வளைத்து ; வாங்குதல் - வளைத்தல் ; வில்வாங்கி என்பது மரபு. "குன்ற வார்சிலை நாண ராவரி வாளி கூரெரி காற்றின் மும்மதில், வென் றவா றெங்ஙனே" (பிள். தேவா - சீகாமரம் - ஆமாத்தூர் -1) எரித்த தன்மையன் - தமது தன்மையா லெரித்த தன்றி, வில் முதலியவற்றானன்று என்பது குறிப்பு ; முன்னாக - முற்பட ; ஏனையவெல்லாம் பின்னாகவும் இதனையே முதன்மையாகவும் ; என்னாக - என்ன பயன் கருதி ;—(7) வன் சயமாய் - வலிய வெற்றி பொருந்த ; அடியான் - மார்க்கண்டேயர் ; சயம் - வெற்றி ; உரம் - மார்பு ; முனிந்து உகந்த - முன்னர் முனிவும் (சினம்), பின்னர் உவப்பும் கொண்டு ; உவத்தல் - கூற்றுவனை உயிர்தந்து ஆணையிட்டருளுதல் ; அடைவு - சார்தல் ; அடைதல் ;—(8) அந்நெறி - அகரம் - உயர்ந்தோர் செல்லும் அந்த என்ற உலகறி சுட்டு ; செந்நெறியை - செம்மை நெறி ; சிவநெறி ; நெறியாலடையப்படும் பொருளுக்கு வந்தது ; என் அறி வான் - வேறெதனை அறியும்படி ;—(9) கற்றவர் வான்கனி - "கற்றவனலாயபய" னாகிய பொருள். "ஈசனெனும் கனி" (அரசு) ; கருத்தார உற்று உள்ளூம் - உள்ள நிறைந்து ஒளித்திருந்த முதல்வனாகிய ; இருவர்- அயன் மால் ; எற்று உளனாய் எதனை உடையேனாகி ;—(10) ஏழ் இசையாய் இசைப்பயனாய் - இசையாயும் அதன் பயனாகவும் உள்ளவர். "இன்னிசை வீணையி லிசைந்தோன் காண்க, வன்ன தொன் றவ்வயி னறிந்தோன் காண்க" (திருவா ; அண்டப்பகுதி - 35 - 36) "அறிவானுந் தானே அறிவிப்பான் றானே, அறிவா யறிகின்றான் றானே" (அம்மை அற் அந். 20) என்றதும், அதனை எடுத்தாண்டு எமது மாதவச் சிவஞான முனிவர் போதம் 11-வது சூத்திர உரையில் விளக்குவதும் ஈண்டுவைத்துக் காண்க. என்னுடைய தோழனு மாய்-நம்பிகள் தம்பிரான் றோழராகிய வரலாறு ; "தோழமையாக உனக்கு நம்மைத் தந்தனம்" (273); ஆய் - ஆக்கச்சொல் இறைவர் தம்மை ஆக்கிக் கொண்டருளிய நிலை குறித்தது ; யான் செய்யும் துரிசுகளுக்குடனாகி - துரிசுகள் - குற்றங்கள் ; உடனாகி - உடனே நின்று ; உடன்பட்டு என்றலுமாம் ; எங்கும் நிறைந்தவராதலின் துரிசுகளிலும் உடனாகியே நிற்பர் என்பது ; மணவேள்விக் கோலத்துடன் மண் மேல் விளையாடுக என்றதும், தாம் வேண்டிக் கொண்டவாறே மகிழ்க்கீழே எழுந் தருளியதும் முதலிய அருளிப்பாடுகளைக் குறித்தது. மாழை - மாவடு ; பாவையைத் தந்தாண்டான் - என்றது பரவையார் திருமண வரலாற்றினையும், மேல் சங்கிலியோ டெனைப்புணர்த்த - என்றது சங்கிலியார் திருமணத்தின் வரலாற்றினையும் குறித்த சரித அகச்சான்றுகள்;—(10) நுங்கி - விழுங்கி ; விரைவாக உண்டு ; சழக்கனேன்- குற்றமுள்ளவன் ; எங்குலக்க - முன் 3-ம் பாட்டுப் பார்க்க.—(11) பேர் ஊரும் மதகரி - பெரிதாக வரும் மதத்தினையுடைய யானை ; திருவாரூர்ச் சிவனடியே திறம் விரும்பி - நேரில் காணாது மனத்தால் அந்த அடிமைத்திறத்தினை மிக நினைந்து ; இப் பதிகம் திருவாரூரைப் பற்றியதாயினும் அங்கு அருளப்படாது திருவொற்றியூரில் அதனை மிக நினைந்து பாடப்பட்டதென்பதற்குரிய அகச்சான்று ; குறிப்பு - இப் பதிகம் மிக மன உருக்கம் புலப்படும் அரிய கருத்தும் இசையமைதியும் கொண்டது ; முற்றும் மனனங்கொள்ளத் தக்கது.

3428. பின்னொருநா ளிருவாரூர் தனைப்பெருக நினைந்தருளி
உன்னவினி யார்கோயில் புகுந்திறைஞ்சி யொற்றிநகர்
தன்னையக லப்புக்கார் தாஞ்செய்த சபதத்தான்
முன்னடிக டோன்றாது கண்மறைய மூர்ச்சித்தார். ௨௭௪

(இ - ள்) பின்னொருநாள்...நினைந்தருளி - பின்னர் ஒரு நாள் திருவாரூரினை மிகவும் பெருக நினைந்து கொண்டு; உன்ன...இறைஞ்சி - நினைக்க இனிமை தருபவராகிய ஆதிபுரி ஒற்றிகொண்டாராது திருக்கோயிலினுட் புகுந்து வணங்கி; ஒற்றி நகர்...புக்கார் - திருவொற்றியூரினை நீங்கப் புகுந்தனர்; (அப்போதே); தாஞ் செய்த ...மூர்ச்சித்தார்; தாம் செய்த சபதத்தின் காரணத்தினாலே முன்னே செல்ல அடி வைக்கும் நிலைதோன்றாது கண் ஒளி மறைய மூர்ச்சித்தனர்.

(வி - ரை) பின் - முன்கூறியபடி திருவாரூரிறைவரை நினைந்து ஏசறவாற் றிருப்பதிகம் அருளிய பின்.

பெருக நினைந்தருளுதலாவது தடுக்கலாகாதபடி ஆசை தம்மை மேற்கொண்டு வலிந்தெழுமாறு நினைவு கூர்தல்.

உன்ன இனியார் - ஆதிபுரி இறைவர்; "எம்மானை மனத்தினால் நினைந்தபோதவர்நமக் கினிய வாறே" (தேவா - நம்பி - கருப்பறி); "நினைத்தொறும்...ஆனந்தத் தேன்சொரியும்" (திருவா). இனிப் பின்னரெல்லாம் இவரை நினைத்தலேயன்றி நேரே கண்டு வழிபடுமாறில்லை என்ற குறிப்பும் உன்ன என்றதனால் பெறப்படும்; மேல் "மீளா நிலைமை" என்பதும் காண்க.

புகுந்திறைஞ்சி-விடைபெற்றுச் செல்லும்வகையாற் கோயிலினுள்புக்கு வணங்கி.

அகலப்புக்கார் - திருவொற்றியூர் எல்லையினைக் கடந்து அடிபெயர்த்தார்.

தாஞ்செய்த சபதம் - மகிழ்க்கீழே தங்குமிடம் கொள்ளும்படி தாமே செய்து கொண்டவினை என்பது.

அடிகள் முன் தோன்றாது-அடிகள் பெயர்த்து முன்வைக்கும் நிலைதோன்றாதவாறு.

மூர்ச்சித்தார் - எதிர்பாராதவாறு சடுதியில் நேர்ந்த துன்பமாதலின் அவசமாயினர்; மூர்ச்சையுறுதல் சிறிது போது மயங்கும் நிலை. 274

3429. செய்வதனை யறியாது திகைத்தருளி நெடிதுயிர்ப்பார்
"மைவிரவு கண்ணார்பாற் சூளுறவு மறுத்ததனால்
இவ்வினைவந் தெய்தியதா" மெனநினைந்"தெம் பெருமானை
எய்தியவித் துயர்நீங்கப் பாடுவே" னெனநினைந்து, ௨௭௫

வேறு

3430."அழுக்கு மெய்கொ"டேன் றெடுத்தசொற் பதிக
மாதி நீள்புரி யண்ணலை யோதி
வழுத்து நெஞ்சொடு தாழ்ந்துநின் றுரைப்பார்
மாதொர் பாகனார் மலர்ப்பத முன்னி
"இழுக்கு நீக்கிட வேண்டு"மென் றிரந்தே
யெய்து வெந்துயர்க் கையற வினுக்கும்
பழிக்கும் வேள்கிநல் லிசைகொடு பாவிப்
பணிந்து சாலவும் பலபல நினைவார், ௨௭௬

3431. அங்கு நாதர்செய் யருள துவாக
வங்கை கூப்பியா ரூர்தொழ நினைந்தே
பொங்கு காதன்மீ ளாநிலை மையினாற்
போது வார்வழி காட்டமுன் போந்து
திங்கள் வேணியார் திருமுல்லை வாயில்
சென்றி றைஞ்சிநீ டியதிருப் பதிகஞ்
“ சங்கிலிக் காக வென்கணை மறைத்தீ ”
ரென்று சாற்றிய தன்மையிற் பாடி, உஎஎ

3432. தொண்டை மானுக்கன் றருள்கொடுத் தருளுந்
தொல்லை வண்புகழ் முல்லைநா யகரைக்
“ கொண்ட வெந்துயர் களை”கெனப் பரவிக்
குறித்த காதலி னெறிக்கொள வருவார்
வண்டு லாமலர்ச் சோலைகள் சூழ்ந்து
மாட மாளிகை நீடுவெண் பாக்கங்
கண்ட தொண்டர்க ளெதிர்கொள வணங்கிக்
காயு நாகத்தர் கோயிலை யடைந்தார். உஎஅ

3429. (இ - ள்) செய்வதனை...நெடிதுயிர்ப்பார் - மேற் செய்யப்படுவ தின்னது என்றதனை அறியாமல் திகைத்துப் பெருமூச்சு விடுபவராகிய நம்பிகள் ; மைவிரவு...என நினைந்து - மைதீட்டிய கண்களையுடைய சங்கிலியாரிடத்துச் செய்த சத்தியத்தினை மீறிய காரணத்தினாலே இந்தத் தீவினைப் பயன் வந்து பொருந்திய தாகும் என்று நினைந்து ; எம்பெருமானை...என நினைந்து - எமது பெருமானை என்பாற் பொருந்திய இத்துன்பம் நீங்கும்படி பாடுவேன் என்று எண்ணி, உஎ௫

3430. (இ - ள்) அழுக்கு மெய் கொடு என்று...ஓதி - “ அழுக்கு மெய் கொடு ” என்று தொடங்கும் சொற்பதிகத்தினை நெடிய ஆதிபுரி இறைவரைத் துதித்து ; வழுத்து...உரைப்பார் - போற்றுகின்ற மனத்துடனே நிலமுற வீழ்ந்து வணங்கி முன்பு நின்று சொல்வாராகி ; மாதொர்பாகனார்...உள்ளி - உமைபாகரது மலர்போன்ற பாதங்களை நினைந்து நினைந்து ; இழுக்கு...இரந்தே - குற்றத்தினை நீக்கிவிடவேண்டும் என்று வேண்டிக்கொண்டு ; எய்து...நினைவார் - அங்கு வந்து பொருந்திய கொடிய துன்பமுடைய கையறுநிலைக்கும் நேர்ந்த பழிக்கும் வெட்க மடைந்து நல்ல இசையினால் தோத்திரித்துப் பணிந்து மிகவும் பலபலவாறு நினை வாராகி, உஎசு

3431. (இ - ள்) அங்கு...அருள் அதுவாக - அங்கு அப்போது இறைவர் செய்யும் அருள் அதுவேயாகி அமைந்திட ; அங்கை கூப்பி - அழகிய கைகளைச் சிரமேற் கூப்பி வணங்கி ; ஆரூர் தொழ...போந்து - திருவாரூரினைச் சென்று தொழுவதற்கு நினைந்தவாறே பொங்கி எழுகின்ற பெருவிருப்பத்தினாலே திரு வொற்றியூரினில் மீளாத நிலைமையினை மேற்கொண்டு உடன் செல்வோர்கள் தமக்கு வழிகாட்டியிட முன்னே சென்று ; திங்கள்வேணியார்...இறைஞ்சி - சந்தி ரனைச்சூடிய சடையினை உடைய இறைவரது திருமுல்லைவாயிலிற் சென்று வணங்கி; நீடிய...பாடி - பெருமை நீடிய திருப்பதிகத்தினைச் “ சங்கிலியின் பொருட்டு என் கண்களை மறைத்தீர் என்று ஏத்திய தன்மை விளங்கும்படி பாடியருளி, உஎஎ

3432. (இ - ள்) தொண்டைமானுக்கு...பரவி - தொண்டைமானுக்கு முன்னாளில் அருள்கொடுத்தருளிய பழமையாகிய வள்ளன்மையும் புகழுமுடைய திருமுல்லைவாயி லிறைவரைக் "கொண்ட எனது வெவ்விய துயரினைக் களைந்திட வேண்டும்" என்று துதித்து மேற்சென்று; குறித்த...வருவார் - தாம் குறிக்கொண்ட பெருவிருப்பின் வழியே வழிச்செல்ல வருவாராகி; வண்டுலாம்...வணங்கி - வண்டுகள் மொய்க்கும் மலர்கள் நிறைந்த சோலைகள் சூழ்ந்து மாட மாளிகைகள் நீடி விளங்கும் திருவெண்பாக்கத்தினைக் கண்ட தொண்டர்கள் எதிர்கொள்ள அறிந்து வணங்கி; காயும்...அடைந்தார் - கோபிக்கும் யானையை உரித்தவராகிய இறைவரது திருக்கோயிலினை அடைந்தருளினார். ௨௭௮

இந் நான்கு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3429. (வி - ரை) செய்வதனை...நெடிதுயிர்ப்பார் - இவை மூர்ச்சை தெளிந்தபின் நம்பிகள் அடைந்த நிலைகள்; மேற்செய்வது தோன்றாமை - திகைத்தல் - நெடிதுயிர்த்தல் என்பவை ஒன்றன்பின் ஒன்றாக வருவன. நெடிதுயிர்த்தல் - பெருமூச்சு விடுதல்; உயிர்ப்பார் - உயிர்ப்பாராகிய நம்பிகள்; வினையாலணையும்பெயர்.

உயிர்ப்பார் - நினைந்து உரைப்பார் - பரவி - நினைவார் - போந்து - பாடி (3431) - வருவார் - அடைந்தார் (3432) என்று இந் நான்கு பாட்டுக்களையும் முடித்துக் கொள்க.

மைவிரவு...எனநினைந்து - சூளுறவு - சபதம்.

மறுத்தல் - மீறி நடத்தல்; மறுத்ததனால் இவ்வினைவந்தெய்தியதாம் என நினைந்து - சபதத்தைக் கடந்ததனால் இவ்வாறு கண் மறைந்தது என்று நினைந்து துணிந்து.

இனி, ஈண்டு, இவ்வாறு சபதத்துக்கு மாறாக நடந்தபோது கண்மறையுமோ? ஆயின், இந்நாளில் "நான் சொல்வது சத்தியம்; முழுதும் சத்தியம்; சத்தியமன்றி வேறில்லை; கடவுளறியச் சத்தியம்" என்று சூளுரைத்துப் பொய்யே யன்றிச் சிறிதும் மெய்யின் கலப்புமில்லாது மனமாரப் பொய்ச்சான்று கூறுவோர் அதனால் ஒருதுன்பமுமின்றிச் சுகமாய் மிக்கு நிகழும் காலத்தில் இதனை யார் நம்புவார்? என்று கூறி எக்கலிப்போர் பலருளர். அவரெல்லாம் காலத்தினியலும், அவ்வவர் நிலையும், காலமும் பிறவும் சார்ந்து செல்லும் கன்மநியதியும் அறிந்திலர். உண்மையின் விளக்கம் யுகந்தோறும் மாறுபடும் என்பது ஞான நூல்களின் துணிபு மட்டுமேயன்றி அனுபவத்தும் கண்டது. இதுபற்றியே தரும தேவதை முதல் யுகத்தில் நான்கு கால்களாலும், இரண்டாவதில் மூன்று கால்களாலும், மூன்றாவது நான்காவது யுகங்களில் முறையே இரண்டு கால்களாலும், ஒரு காலாலும் நடக்கும் என்பர். நான்காவதாகிய கலியுகத்தில் அதன் தன்மைக்கேற்றவாறு சத்தியத்தின் வெளிப்பாடு மெத்தென நிகழும்; ஆனாலும் எவ்வாற்றானும் நிகழ்ந்தே விடும்; பிறழாது. உடனே நிகழாமை கண்டு உண்மைக் கிடமில்லை என முடித்து வாய் வேண்டின சொல்லித் திரிதல் அடாது; "செம்பொன் மேனிவே றாகி நாலாம், பொய்யுகத் தவர்க்குத் தக்க பொருந்துரு வாகி மன்னும்" (திருவிளை. புரா - இரசவா - 30); "உவாவன ரனைய கானத் துறுகலி யுகத்தை யஞ்சித், துவாபர யுகவந் தத்திற் றொக்கனர் தவங்க ளாற்றும், அவாவறு வசிட்டர் வச்சி ரகத்தியர் வாம தேவர், தவாதநல் லொழுக்கஞ் சான்ற சவுனக ராதி யானோர்"(8); "பாவிய வாண்டு நூற்றுப் பத்தற முடிவு செய்யும், பிரம சத் திரயா கத்தைப் பேணினர் வளர்க்க லுற்றார்" (9) என்ற பேரூர்ப் புராணம் நைமிசப்படல வரலாறும், பிறவும் கருதுக. காலத்தினால் உண்மையின்நிலை மாறுமோ?

என்னின், மாறுதுதான்; ஆனால் அதன் வெளிப்பாட்டு நிலை மாறும் என்க; ஆண்டு தோறும் வரும் பெரும்பொழுது சிறுபொழுது என்ற காலக் கூறுபாட்டுக் கேற்ப உலகுயிர்களின் முயற்சி ஒழுக்கம் முதலியவை அவை தம்மாலன்றியே மாறுபடக் காண்டல் கண்கூடு; காலம் என்றதொரு தத்துவம் உண்டு; அது வித்தியா தத்துவங்க ளேழனுள் ஒன்று; "காரியங்கள், காலமே தரவே காண்டுங்; காரணன் விதியி னுக்குக், காலமுங் கடவு ளேவ லாற்றுணைக் கார ணங்காண்" (1 - 10) என்ற சிவஞான சித்தியாரும் காண்க; சபதம் பொய்த்து மாறுபட்டவர்களின் சரிதங்களையும் முடிவுகளையும் நன்கு தெரிந்து சென்றால் இவ்வுண்மை விளங்கும்.*

சூளுறவு மறுத்ததனால் இவ்வினை வந்து எய்தியதாம் - இது காட்சி, கருதல், உரை என்ற மூன்றளவைகளானும் தொகுத்துக் கண்ட முடிபு.

மைவிரவு கண்ணார் - சங்கிலியார்.

எய்திய வித்துயர் நீங்க எம்பெருமானைப் பாடுவேன் - என்க; எய்திய - வினைக்கீடாக வந்து பொருந்திய; எனது செயலின் விளைவாக வந்த.

இத்துயர் நீங்க எம்பெருமானைப் பாடுவேன் - தகாதவற்றைச் செய்து அதன் பயனாகத் துன்பம் வந்தபோது இறைவரைப் பாடினால் அது நீங்கி விடுமா? இவ்வாறாகிய கொள்கைகள் அல்லவை செய்தொழுகுவார் மறைந்து கொள்ளவும் தீயவற்றைத் துணிந்து செய்யவும் இடந்தருகின்றன என்று அறைகூவுவோர் பலர் இந்நாளிற் காணப்படுகின்றனர்; தீச்செயல்களில் உயிர்களைப் புகுத்துவது அறியாமை மயமாகிய இருள் மலத்தின் செயலாம்; அது தீச்செயல் என்று தெளிந்து தீர்வுதேடுதல் இறைவன் அறிவிக்க அறியப்படும் அறிவின் செயல்; ஆதலின் அவ்வறிவின் உதவி கொண்டே தீர்வுதேடுதல் அறிவு பெற்ற நியமமாகும். விதிகடந்து அல்லவை செய்து பிணிகளைத் தேடிக் கொண்டானொருவன் மருத்துவனை நாடி அவன் றுணை கொண்டு நோயினின்றும் நீங்க முயலுதல் போல, ஈண்டு இறைவரைப் பாடுதல் தமது தவறிய செயலால் விளைந்த துன்பம் நீங்குதற்கு மருந்தாருமென்பது உண்மை நூற்றுணிபு; நோயினையும் அது வந்த வாலாற்றினையும் உண்மைபெற மருத்துவனிடம் முறையிட்டபோது மருத்துவன் அதன்மூலம் வந்தவாற்றிற் கேற்றபடி மருந்தும் பாகமும் வகுத்துத் தீர்ப்பது போலக், கன்ம வைத்தியநாதராகிய இறைவரும் கன்ம விளைவாகிய நோயினை அனுபவித்துக் கழிப்பிக்க ஏற்ற காலம் முதலிய பாகங்களை வகுத்துத் தீர்ப்பர். அவரை எண்ணுதலும் துதித்தலும் அத்தீர்வுக்கு அவர் விதித்த பக்குவங்களும் மருந்துகளுமாகும். கன்மநோய் அனுபவித்தன்றிக் கழியாதென்பது உண்மை; மக்கள் தாங்கள் செய்த குற்றத்தை உணர்ந்து

---

*இதுபற்றி எனது அனுபவத்தில் கண்ட பலவற்றுள் சில உதாரணங்கள் இங்குச் சொல்லத் துணிகின்றேன். ஒன்று: ஒரு பெருஞ்செல்வர்; கிரிமினல் கோர்டில் சாட்சிப் பெட்டி ஏறிப் பொய்ச்சூள் உரைத்தார்; அது முடிந்து பெட்டியை விட்டுக் கீழிறங்கும் போதே கண் மறைந்துவிடப் பிறருதவி கொண்டு கையாலும் காலாலும் தடவி வழியறிந்து சென்றனர். கண் மறைந்தது மறைந்ததுதான். அவர் இறக்கும்வரை அவ்வாறே. இனி, மற்றொன்று: சிவில் கோர்டில் ஒரு பெருஞ் செல்வர் - சாட்சிப் பெட்டியேறிப் பொய்ச்சூள் உரைத்தனர்; அது வாறாக நோய் கிடந்து ஒரு மாதத்தில் இறந்து பட்டனர். இப்படி அனேக முண்டு. ஆதலின் உலகீர்! சபதம் பொய்த்த விளைவு உடன் காணாதது கொண்டு இல்லை என்று முடித்துத் திரிந்து கேடு சூழ்ந்துகொள்ளாது முன்னோர் கண்ட உண்மை நெறிநின்று ஒழுகி உய்யுங்கள்.

கழிவிரக்கங்கொண்டு உண்மையாகக் கசிந்து கசிந்து உருகி உருகி அவனை நோக்கி முறையிடுவரேல் அவன் இரங்கி அவர்தந் துயர் தீர்த்தல் ஒருதலை என்று ஈண்டு விசேட ஆராய்ச்சி செய்வாருமுண்டு. பாவமன்னிப்பு என்பது சைவசமயக் கொள்கைகளுக்கு உடன்பாடன்று; அது கிறித்துவம் முதலிய புறச்சமயிகள் கொள்கையாம்; அதுவே மக்களைத் தீய செயல்களுட் புகுத்தும் தூண்டுகோலாய் நிற்கும்; ஆனால் சைவசமயங் கண்டவுண்மையாவது இறைவரை எண்ணித் துதித்தலால் அஃது அந்நோய்க்கு மருந்தாக நின்று அதனுள் இறைவர் விளங்கிக் கன்மபரிபாகம் நிகழ அருளிக் கன்மானுபவத்தை உடலூழாய்க் கழியவோ, அன்றி விரைந்து அனுபவித்துக் கழியவோ, அன்றி வேறு அவ்வவர் துன்பம் அறியாமற் கழியவோ, அன்றி வேறெவ்வாறே ஊட்டுவித்து அருள் புரிவன் என்பதாம் "ஆட்பா லவர்க் கருளும் வண்ணமு மாதி மாண்பும், கேட்பான் புகி லளவில்லை கிளக்க வேண்டா!, கோட்பா லனவும் வினையுங் குறுகாமை யெந்தை, தாட்பால் வணங்கித் தலைநின் றிவை கேட்க தக்கார்" என்ற திருப்பாசுரமும், "சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடனாதல்" என்றற் றொடக்கத்த திருவாக்குக்களும் ஈண்டுக் கருதத் தக்கன. "தொழுவார் வினை மாயுமே", "வினை ஓடுமே" என வருவன எல்லாம் இவ்வா றறியத் தக்கன. ஈண்டும், மேல்வரும் வரலாறுகளிலும் பலபடியும் மனம்போனவாறு பிதற்றும் 'அறியா வாய்மை எண்டிசை மாக்கள்' இவற்றை யெல்லாம் உணர்ந்து உய்வார்களாயின் நலமாகும். 275

3430. (வி - ரை) "அழுக்கு மெய்கொடு" என்று - இது பதிகத் தொடக்கமாகிய முதற்குறிப்பு.

நீள் ஆதிபுரி அண்ணல் - என்க; திருவொற்றியூரிறைவர். இப்பதிகம் திருவொற்றியூ ரெல்லையினைக் கடந்து நின்ற இடத்திற் பாடிய குறிப்பு.

"இழுக்கு நீங்கிட வேண்டும்" என்று - இது பதிகக் கருத்தாகிய குறிப்பு என்று ஆசிரியர் காட்டியருளியவாறு.

எய்து வேந்துயர்க் கையற வினுக்கும் பழிக்கும் வெள்கி-கையறவு-பற்றுக்கோடிழந்த நிலை; கண்ணிழந்தமையால் தம்மைப் பாதுகாக்கவும் நெறி காணவும் தம்மால் இயலாது பிறருதவியை நாட நின்ற நிலை; பழி - சபதம் பிழைத்தமையாற் கண்ணிழந்தார் என்றும், மங்கையார்பாற் சூளுறவு பிழைத்த வன்கண்ணர் என்றும், பிறவாறும் உலகர் கூறும் பழிச்சொல்.

சாலவும் பலபல நினைவார் - பதிகத்துள் வரும் பற்பல வகைக் கருத்துக்களும் பார்க்க. 276

## திருவொற்றியூர்

திருச்சிற்றம்பலம் பண் - தக்கேசி

அழுக்கு மெய்கொடுன் றிருவடி யடைந்தே
னதுவு நான்படப் பாலதொன் றானால்,
பிழுக்கை வாரியும் பால்கொள்வ ரடிகேள்
பிழைப்ப னாகிலுந் திருவடிப் பிழையேன்
வழுக்கி வீழினுந் திருப்பெய ரல்லான்
மற்று நானறி யேன்மறு மாற்றம்
ஒழுக்க வென்கணுக் கொருமருந் துரையா
யொற்றி யூரெனு மூருறை வானே. (1)

கட்ட னேன்பிறந் தேனுனக் காளாய்க், காதற் சங்கிலி காரண மாக,
எட்டி னாற்றிக ழுந்திரு மூர்த்தி யென்செய் வானடி யேனெடுத் துரைக்கேன்,
பெட்ட னாகிலுந் திருவடிப் பிழையேன் பிழைப்ப னாகிலுந் திருவடிக் கடிமை,
யொட்டி னேனென்னை நீசெய்வ தெல்லா மொற்றி யூரெனு மூருறை வானே. (2)

" ...அத்தா வென்னிட ரார்க்கெடுத் துரைக்கேன்..." (3)

" ...மூன்று கண்ணுடை யாயடி யேன்கண் கொள்வதே கணக்கு வழக்காகில்,
ஊன்று கோலெனக் காவதொன் றருளாய்..." (4)

வழித்த லைப்படு வான்முயல் கின்றே னுன்னைப் போலென்னைப் பாவிக்க மாட்டேன்
சுழித்த லைப்பட்ட நீரது போலச் சுழல்கின் றேன்சுழல் கின்றதென் னுள்ளங்
கழித்த லைப்பட்ட நாயது போல வொருவன் கோல்பற்றிக் கறகற விழுக்கை
ஒழித்து நீயரு ளாயின செய்யா யொற்றி யூரெனு மூருறை வானே. (5)

மானை நோக்கியர் கண்வலைப் பட்டு வருந்தி யானுற்ற வல்வினைக் கஞ்சித்
தேனை யாடிய கொன்றையி னாயுன் சீல முங்குண முஞ்சிந்தி யாதே
நானு மித்தனை வேண்டுவ தடியே னுயிரோ டுநர கத்தழுந் தாமை
ஊன முள்ளன தீர்த்தருள் செய்யா யொற்றி யூரெனு மூருறை வானே. (6)

" ...முற்று நீயெனை முனிந்திட வடியேன் கடவ தென்னுனை நான்மற வேனேல்
உற்ற நோயுறு பிணிதவிர்த் தருளா யொற்றி யூரெனு மூருறை வானே " (7)

மகத்திற் புக்கதோர் சனியெனக் காணாய் மைந்த னேமணி யேமண வாளா
அகத்திற் பெண்டுக ளொன்று சொன்னா லழையேற் போதரு டாவெனத் தரியேன்
முகத்திற் கண்ணிழந் தெங்ஙனம் வாழ்கேன்? முக்க ணாமறை யோமறை யோதீ
உகைக்குந் தண்கட லோதம்வந் துலவு மொற்றி யூரெனு மூருறை வானே (9)

ஓலம் வந்தல வுங்கரை தன்மே லொற்றி யூருறை செல்வனை நாளும்
ஞாலந் தான்பர வப்படு கின்ற நான்ம றையங்க மோதிய நாவன்
சீலந் தான்பெரி தும்மிக வல்ல சிறுவன் வன்றொண்ட னூரனுரைத்த
பாடல் பத்திவை வல்லவர் தாம்போய்ப் பரகதி திண்ண நண்ணுவர் தாமே. (10)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—" இழுக்கு நீங்கிட வேண்டு மென்றிரந்தே யெய்து வெந்துயர்க் கையறவினுக்கும் பழிக்கும் வெள்கிச் சாலவும் பலபல நினைந்து பாடியது என்று ஆசிரியர் (3430) காட்டியருளினர்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) அழுக்கு மெய்கொடு உன்திருவடி அடைந்தேன்- அழுக்கு - பொய் முதலிய தூய்மையில் குப்பை செறிந்த நிலை ; உட்காரணங்களின் தூய்மையற்ற நிலையும், புறமாசுகளேயன்றி அவையும் கழுவப்படும் தன்மையிற் சிவனை எண்ணுதல் வேண்டும் நிலையும் குறித்தது ; " புறந்தூய்மை நீரா னமையு மகந்தூய்மை, வாய்மையாற் காணப் படும் " (குறள்) ; அதுவும் - அவ்வா றடைந்த அதன் பயனாகிய விளைவும் ; " பிழுக்கை...வாரியும் பால்கொள்வர் " - இஃதோர் பழமொழி ; ஆடுகளிற் பால் கறக்கும்போது அவை அதனிற் சிலபோது பிழுக்கை வீழ்த்திடும் ; அதனை வாரி எடுத்து விட்டுப் பாலினைக் கைக்கொள்ளும் வழக்குக் குறித்தது ; அதுபோல் எனது அழுக்குக்களை நீக்கித் தூய்மைப்படுத்தி என் அன்புடைய பணிகளை மட்டும் என்று கொள்ள வேண்டுமென்பது ; பிழைப்பன்...பிழையேன் -

கான் உலகநிலைத் திறத்திற் பிழை செய்யினும் உனது திருவடிக் கன்பின் திறத்தில் ஒரு பிழையும் செய்யேன் ; "ஒருவரை மதியா துறுமைகள் செய்து மூடியு முறைப் பணுய்த் திரிவேன்" "மிகைபல செய்தேன்" (திருமுல்லைவாயில்) என்ற செயல்கள் உலக நிலைபற்றிய பிழைகளாம் ; இவை சிவாபராதங்களாகா ; இவை ஏனை உயிர்களுக்கும் தமக்குமுள்ள உலக நிலைத் தொடர்புபற்றி ஒழிவன. சிவாபராதங்கள் வேறு ; அவை கழுவாயில்லாதவை ; இவற்றையே ஈண்டுத் "திருவடிப்பிழையேன்" என்றருளினர் நம்பிகள். "வேறு செய்வினை திருவடிப் பிழைத்தலொழிய விங்குளார் வேண்டின செயினும்" (1146) என்று இதனை முன்னர் வேறு பிரித்துக் காட்டியருளியமையும் காண்க. ஆண்டுரைத்தவையும் பார்க்க. (II பக். கசஎ0). புண்ணியங்களாகிய நல்வினைகளும் இவ்வாறே. சரியையாதி பதிபுண்ணியங்கள் வேறு ; கா வளர்த்தல், குளம் தொடுதல், தண்ணீர்ப்பந்தல் வைத்தல், மருத்துவச்சாலை வைத்தல், துணி அன்னம் முதலியவை கொடுத்தல் முதலாகிய பசுபுண்ணியங்கள் வேறாவன. பதிபுண்ணியங்கள் படிப்படியாகச் சிவனை நினைந்தவாறே சிவலோகம் பெறுவித்தல் முதலிய பயன்களைத் தந்து, முடிவில் திருவடி சார்தலாகிய வீடுபேறு பெறுவிக்கும்; பசுபுண்ணியங்களோ, அவ்வாறன்றிச் சுவர்க்காதி போகங்களைத் தந்து சிவனினைவின்றியே சென்று மீளப் பிறவிக் கேதுவாவன. இவையிரண்டன் வேற்றுமை அறியாத மாக்கள் பலர் இந்நாளில் இவையிரண்டும் ஒன்றென மயங்கியும், பதிபுண்ணியங்களைத் தத்தம் மனம்போனவாறே பசுபுண்ணியங்களோ டொப்ப மதித்து அந்த அளவை கொண்டளந்து இழித்தும் கொடும் பாவத்துக்காளாகி மீளா நரகடைவதற்கே விரைந்து திரிகின்றனர் ! அந்தோ ! இவர்களதறியாமை இரங்கற்பாலது !; வழக்கி...மறுமாற்றம் - இன்பதுன்பங்களில் எதுவரினும் எஞ்ஞான்றும் சிவனுமத்தை மறவாது இடைவிடாது சொல்லுதல் ஒரு நல்ல வழக்கு. அது செய்து பழகுதல் மிக்க நன்மை தரும். "நான் மறக்கினும் சொல்லுநா நமச்சி வாயவே" என்பது நம்பிகள் திருவாக்கு (திருப்பாண்டிக் கொடுமுடி) ; இது எளிதில் வருவதன்று. தவப்பயனுகை நீண்டநாட் பழக்கத்தால் அமைதல் வேண்டும். ஒழுக்குதல் - கண்ணுக்கு மருந்து இடுதல் ; கண்நோய் மருந்துகள் பெரும்பான்மையும் நீர்த்தன்மையாய் (துளிகளாய்) ஒழுக்க விடுதல் குறிப்பு ; உரையாய் - சொல்லி யருளுவீர் ;— (2) கட்டனேன் - துன்பமுடையேன் ; பெட்டன் - பொய்யன் ; பெட்டனுகிலும் திருவடிப் பிழையேன் - முன்பாட்டில் "பிழைப்பனுகிலும்" என்ற கருத்து ; ஒட்டினேன் - ஒட்டு - பிரிப்பின்றி ஒன்றுபடுதல் ; அத்துவிதமாதல் ; "உணரப் படுவாரோடொட்டி வாழ்தி" "ஒட்டிட்ட பண்பி னுருத்திர பல்கணத்தார்" (தேவா) ; எட்டினல் - திகழும் திருமூர்த்தி - அட்டமூர்த்தம் ;—(3) கலைகண் - ஆதரவு பற்றுக்கோடு ; அங்கை...அமுதே - அங்கையின் வைத்த நெல்லிக்கனி உள்ளீட்டின் வரந்தைகளை வெளியே அறிவித்து நிற்றல் போல, இறைவர் தமது அருளினைக் காண்பார்க்குப் புலப்படுத்தி நிற்கின்றார் என்பது ; "அங்கையி னெல்லிக் கனியெனக் காயினன்" (திருவா) ; அமுது - இறைவர் ; ஓங்கும் - ஓங்கும் என்பது ஓங்கும் என எதுகை நோக்கிக் குறுகி நின்றது ; செய்யுள் விகாரம் ; "ஒங்கு மாகட லோதநீராடிலென்" (அரசு) ;—(4) ஈன்று...அன்றல் - உலக நிலைத் தொடர்பாகிய சுற்றங்கள் இப்பிறவியில் தேடிக்கொள்ளப்பட்டவை யல்ல ; யாவராகிலேன்...சொல்லாய் - யாவரேயாயினும் அன்புடையவர்கள் தம்மை உம்வசமாக ஒப்புவித்திட்டால் அவர்கள் பக்கல் அல்லாத வார்த்தைகளைச் சொல்லமாட்டீர் ; இது இச்சரித நிகழ்ச்சிக் குறிப்புப் போலும் ; மூன்று...ஆகில் - தேவரீர் மூன்று கண்ணுடையீராயிருந்தும் அடியேனுக்கு உள்ள இரண்டு கண்களையும் ஒளியிழக்கச் செய்வதே

அருளாகில் ; ஊன்று...அருளாய் - கண்ணிழப்பித்த நீர் அதற்கு ஈடாக வேறு பற்றுக்கோடாவது அருளுவீர் ; ஊன்றுகோல் - இங்குப் பற்றுக்கோடு என்ற பொருளில் வந்தது ; ஊன்றிச் செல்வதற்கு ஒரு சிறு கோலினையும் தாமாத் தேடிக் கொள்ள இயலாது அதனையும் இறைவர்பாற் பெறவேண்டினர் நம்பிகள் என்பதன்று. "கண்ணைக் கெடுத்த தெய்வம் கோலைக் கொடுக்கும்" என்ற பழமொழிக் கேற்ப வேண்டியவாறு. திருவுள்ளக் குறிப்பின் வழி வேறு பற்றுக்கோடு தாரும் என்பதாம் ; நம்பிகளது வேண்டுகை மெய்த் திருவாக்காதலானும் அஃது இறைவரது திருவருள் வழியே நிகழ்வதாதலானும் இறைவர் ஊன்று கோலொன்றினையே அடுத்து அருளுதல் காண்க (3433);—(5) வழித்தலை...முயல்கின்றேன் - சூளுரைத்தவாறு இனி நான் இங்குத் தங்காது மேற்செல்ல முயல்கின்றேன் ; உன்னைப்போல்- நீர் இங்கு என்னைப் பாவித்தருளி நடைபெறுத்தியது போல் ; சுழித்தலைப்பட்ட நீரது போல - பழமொழி; நீர்ச் சுழியில் உள்ள நீரானது நிலைபெறின்றிச் சுழலுமாபோல; வினைபற்றி வந்த உவமம் ; சுழல்கின்றேன்...உள்ளம் - நான் மயங்கிச் சுழல என் மனமும் தடுமாறிச் சுழல்கின்றது ; கழித்தலைப் பட்ட நாயது போல - நாயினை ஒரு கோலினிற் பிணித்து இழுத்தல் போல ; இதுவும் வினைபற்றியெழுந்த உவமம் ; கையறு நிலைக்கேற்ப இப்பதிகத்தினுள் வரும் உவமை நயங்கள் காண்க ; ஆசிரியர் நம்பிகளைத் "தமிழ்நாதன்" "தமிழ் நாவலர் பெருமான்" என்று பாராட்டும் கருத்துக்களை ஈண்டுக் கருதுக.—(6) மானை நோக்கியர்...வேண்டுவது - சரித நிகழ்ச்சி குறித்த அகச்சான்று ; முன்னைக் கயிலை நிகழ்ச்சி வரலாற்றுக் குறிப்புமாம் ; மானை - மான்கண்ணினை ஒத்த ; உன் சீலமும் குணமும் சிந்தியாதே - யாவராயினும் வினைப்பயனை ஊட்டுவித்தே கழிப்பிக்கும் அருள் ; உயிரோடு நரகத் தழுந்தாமை - கண்ணொளி யிழந்து வாழ்தல் நரக வாழ்வேயாம் என்றது. ஊனம் - குற்றம் ;—(7) நெஞ்சினுரோடு வாழவும் - அவ்வாறு நான் மறவாமையேயன்றி மறந்த மனத்தவரோடு கூடி வாழவும் என்று உம்மை இறந்தது தழுவியது ; பெற்றிருந்து...அறியேன்- முன்னமே உனது அருளைப்பெற்றிருந்தும் இங்குப் பெறுதொழிந்த பேதை ; ஆனால் அவ்வாறு பெறுதொழிவதற்கும் கண்ணிழத்தற்கும் உரியதாக நான் செய்தபெரும் பிழை யின்ன தென்பதனை அறியேன் ; "சூளுறவு மறுத்ததனால் இவ்வினை வந்தெய்தியதா மென நினைந்து" (3429) என்றதனுடன் இது மாறுபடுகின்றதெனின் ; மாறுபடாது ; திருவடிப்பிழையேன் என்று பதிகத்தினுள் அருளிய வாற்றால் இது இத்தகைய துன்பம் வருவித்தற்குரிய தன்றென்பது நம்பிகளது துணிபாகிய திருவுள்ள மாதல் காண்க; அதுபற்றியன்றே அதனை நீக்கும்படி விண்ணப்பித்தவாறு மென்பதாம் ; மேல் முற்று நீயேனை முனிந்திட வடியேன் கடவதென் ? என்ற கருத்தும் காண்க ; மறவேனேல்......அருளாய் - என்றது தீர்வுபெறும் வகை ; —(8) கூடினாய்...புக்கால் - இதனை முன் (3386) விரித்தருளியது காண்க ; சொல்லலும் - அதுபோல அடியேனுக்கும் சொல்லுதலும் என்க ;—(9) மகத்தில்...சனி - மகநட்சத்திரத்தில் சனி சஞ்சரிக்கும் காலம் மிகத் துன்பம் தரும் காலமென்பது சோதிட நூற்றுணிபு. எனக்குச் சனி ஆனாய் - என்க. சனி - சனி போல ; வினைபற்றியெழுந்த உவமம் ; அவ்வாறு துன்பம் சேர்தலும் வினைபற்றியேயாம். அகத்தில்...வாழ்வேன் - நம்பிகள் தமது அற்றை நிலையினை உலக இல் வாழ்க்கை நிலையினில் வைத்து மேல்வரும் அனுபவமாக எண்ணியது;—(10) ஓலம் - ஒலிடும் ஒலியுடைய கடல் நீர் ; சீலம்...வல்ல - நம்பிகளது தூய சிவநிலை ஒழுக்கம் குறித்தது.

குறிப்பு:—திருவொற்றியூரின் எல்லை கடந்தவுடன் கண்ணிழந்த நம்பிகள் அங்கு நின்றவாறே வழித்தலைப்பட்டு மேற் சென்றனர். திருமுல்லைவாயிலை அடைந்து "அடியேன் படுதுயர் களையாய்" என வேண்டிக்கொண்டு, அந்நிலையே திருவெண் பாக்கம் சென்று முறையிட்டபோது இறைவர் அவருக்கு ஊன்று கோலருளி, "நாம் இங்கு உளோம் நீர்போகீர்" என்றருளினர். அதன்மேல் நம்பிகள், திரு வாலங்காடும் திருவூறலும் வணங்கித் திருக்கச்சி யேகம்பம் சென்று பணிந்தனர்; மறைந்த இடக்கண் பெற்றனர்; அங்கு நின்றும் போந்து திரு ஆமாத்தூர், திருநெல் வாயிலரத்துறை, திருவாவடுதுறை என்ற இவற்றைப் பணிந்து திருத்துருத்தியில் வணங்கித் தம் மேனியில் உற்ற புதிய பிணியினின்றும் நீங்கினர்; பின்னர்த் திரு வாரூர் சேர்ந்து வணங்கி வலக்கண்ணையும் பெற்றருளினர். இப்போதருளிய இத் தலப்பதிகங்கள் யாவும் மனத்தை மிக உருக்கும் தன்மை வாய்ந்தன. சோகச்சுவை யுட் கொண்ட தமிழ் வளமுடையனவாய்ச் சிறந்து விளங்குவன. சொல்லும் பொருளும் யாப்பும் சிறந்தன. சரிதத்திற்குச் சிறந்த அகச்சான்றாகவு முள்ளன. பெரும்பான்மை இவை தக்கேசிப் பண்ணில் அமைந்த நிலையும் காண்க. அரசுகள் பதிகங்களுட் டிருத்தாண்டகமும், பிள்ளையார் பதிகங்களுள் மேகராகக் குறிஞ்சிப் பண்ணில் வருவனவும், நம்பிகள் பதிகங்களுள் தக்கேசிப் பதிகங்களும் எத்தகையோ ரையும் மனமுருக்கும் தன்மையிற் பெரிதும் சிறந்தன என்பதும் கருதுக. இவற்றை அன்பர்கள் ஊன்றிப் பயின்று பயன்பெறுவார்களாக. நம்பிகளது திருவுள்ளமே தமது திருவுள்ளமாக நின்று ஆசிரியர் பெருமான் இப்பகுதியினை அதன் நிலைக்கேற்ற விரைவும் தகுதியும்பட 37 பாட்டுக்களிற் கூறிச்சென்றருளும்(274—311) கவியமைதி யும் கண்டு கொள்க.

3431. (வி - ரை) அங்கு...அருள் அதுவாக - நம்பிகள் விண்ணப்பித்தும் இறைவர் வாளா இருந்தனர்; அது - வாளா இருந்தமை; அதனையே அருள் என்றார்- இறைவர் செய்வன யாவும் அவ்வந் நிலையில் காணும் அருளேயாவன என்பது; "எக்கிர மத்தி னாலு மிறைசெய லருளே யென்றும்" (சித்தி - 2 - 15).

காதல் மீளா நிலைமையினால் - ஆரூர் தொழும் காதல் காரணமாகத் திருவொற்றி யூரின் மீண்டணைய எண்ணாது, கண்ணிழந்தமையும் பொருட்படுத்தாது மேலே தொடர்ந்து செல்லும் நிலையினை மேற்கொண்டு; மீளாநிலை - அன்று அந்நிலை யிற் றிரும்பாமையேயன்றி இனி, மேலும் மீண்டு வாராமையும் குறிப்பு; சரிதம் காண்க.

போதுவார் வழிகாட்ட - உடன் போதுவார்களாகிய பரிசனங்கள் கைப்பற்றி வழிகாட்டிச் செல்ல; இதனை "ஒருவன் கோல்பற்றிக் கறகற இழுக்கை" (பதி கம்) என்றிழிவு தோன்ற வருளினர் நம்பிகள்.

நீடிய திருப்பதிகம் - நீடிய - நம்பிகளது சரித நிகழ்ச்சியினைப் பற்றி உள்ள நிலையினையும் அன்பின் உறைப்பினையும் உள்ளவாறு பளிங்கு போலப் புலப்படுக்கும் பெருமையினால் நீடிய.

"சங்கிலிக்காக என்கணை மறைத்தீர்" என்று சாற்றிய தன்மை - பதிகக் கருத்தும் குறிப்புமாம்; [பதிகம் (2)] பதிகத்தின் மகுடமாகிய பிரார்த்தனையை மேற்பாட்டிற் கூறுவார்; தன்மை - குறிப்பு. 277

3432. (வி - ரை) தொண்டைமானுக் கன்று அருள் கொடுத்தருளும் - இது தல சரிதம்; "சொல்லரும் புகழான்" (10) என்ற பதிகமும் தல விசேடமும் பார்க்க.

தொல்லை வண்புகழ் - மிகப்பழமையும் வள்ளன்மையுமுடைய புகழ். திருக்குறிப்புத் தொண்ட நாயனார் புராணத்துள் முல்லைத்திணை பற்றிய கருத்துக்கள் காண்க.

" கொண்ட வேந்துயர் களைக " என - இது பதிகத்தின் பிரார்த்தனை ; " அடியேன் படுதுயர் களையாய் பாசுப தாபரஞ் சுடரே " என்பது பதிகத்தின் மகுடம்.

குறித்த காதலின் நெறிக்கொள - குறித்த காதல் - திருவாரூரினைச் சென்றடையும் பெருவிருப்பம் ; குறித்த - குறியாகக் கொண்ட; நெறிக்கொள - அவ்வழிச் செல்ல.

கண்ட தொண்டர்கள் எதிர்கொள - தாம் எழுந்தருளுதலைக் கண்ட அப்பதியில் தொண்டர்கள் வந்து எதிர்கொள்ள ; வெண் பாக்கம் - வணங்கி என்று கூட்டுக.

மாட மாளிகை நீடு வெண்பாக்கம் - இத்தலம் இப்போது பாண்டி நீர்த்தேக்கம் என்னும் பரந்த ஏரியினுள் அகப்பட்டு நீரினுள் மறைந்துள்ளது ; தல விசேடம் பார்க்க ; நீடு - என்பது பிற்றைஞான்று நீரினுள்ளே பொதிந்து நிலை பெற நின்ற என்ற குறிப்பும் தந்து நின்றது.

காயும் நாகத்தர் - காய்தல் - கோபித்தல் என்ற பொருளில் வந்தது ; காயும்- தம்மாற் காயப்படும் என்றலுமாம். நாகம் - யானை ; கோபமுடைய யானை என்க ; நாகம்-பாம்பு என்று கொண்டு பாம்பினை அணியாக உடையவர் என்றலுமாம் 278

(வட)திருமுல்லை வாயில்

திருச்சிற்றம்பலம் பண் - தக்கேசி

திருவுமெய்ப் பொருளுஞ் செல்வமு மெனக்குன் சீருடைக் கழல்கடோன் றெண்ணி
ஒருவரை மதியா துறமைகள் செய்து மூடியு முறைப்பனாய்த் திரிவேன்
முருகமர் சோலை சூழ்திரு முல்லை வாயிலாய்! வாயினு லுன்னைப்
பரவிடு மடியேன் படுதுயர் களையாய் பாசுப தாபரஞ் சுடரே. (1)

விண்பணிந் தேத்தும் வேதியா மாதர் வெருவிட வேழமொன் றுரித்தாய்
செண்பகச் சோலை சூழ்திரு முல்லை வாயிலாய் ! தேவர்தம் மரசே !
தண்பொழி லொற்றி மாநக ருடையாய்! சங்கிலிக் காவென்கண் கொண்ட
பண்ப! நின் னடியேன் படுதுயர் களையாய் பாசுப தாபரஞ் சுடரே. (3)

மற்றுநான் பெற்ற தார்பெற வல்லார்? வள்ளலே ! கள்ளமே பேசிக்
குற்றமே செயினுங் குணமெனக் கொள்ளுங் கொள்கையான் மிகைபல செய்தேன்
செற்றுமீ தோடுந் திரிபுர மெரித்த திருமுல்லை வாயிலா யடியேன்
பற்றிலே னுற்ற படுதுயர் களையாய் பாசுப தாபரஞ் சுடரே. (6)

"சொல்லரும் புகழான் றொண்டைமான் களிற்றைச் சூழ்கொடி முல்லையாற் கட்டிட்
டெல்லையி லின்ப மவன்பெற வெளிப்பட் டருளிய விறைவனே " யென்று
நல்லவர் பரவுந் திருமுல்லை வாயி லுதனே நரைவிடை யேறி !
பல்கலைப் பொருளே படுதுயர் களையாய் பாசுப தாபரஞ் சுடரே. (10)

விரைதரு மலர்மே லயனொடு மாலும் வெருவிட நீண்ட வெம்மானைத்
திரைதரு புனல்சூழ் திருமுல்லை வாயிற் செல்வனை நாவ லாரூரன்
உரைதரு மாலையோ ரைஞ்சினோ டஞ்சு முள்குளிர்ந் தேத்த வல்லார்கள்
நரைதிரை மூப்பு நடலையு மின்றி நண்ணுவர் விண்ணவர்க் கரசே. (11)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—ஆசிரியர் முன் (3431 - 3432) காட்டியருளினர்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) திருவு மெய்ப்பொருளும்...எண்ணி-இது நம்பி கள் உட்கொண்டு உலகிற் சரித்த நிலே; இறைவரையே தஞ்சமாக் கொண்ட உறைப் புடையவர்கள் உலகில் வேறெவரையும் பொருளாக மதித்து ஒழுக வேண்டியதில்லை; "உரையினார் மதயானை நாவலா ரூரன்" (நம்பி - கானாட்டு முள்ளூர் - 10) என்ற கருத்துமிது ; "நாமார்க்குங் குடியல்லோம்" "அஞ்சுவ தியாதொன்று மில்லை யஞ்ச வருவது மில்லை" என்பனவாதியாக அரசுகள் அருளியனவும் காண்க. திரு - அருட்டிரு; மெய்ப்பொருள் - ஞானம் ; செல்வம் - ஏனைப் பொருள்கள்; கழல்கள் - கழல்களே இவையாகக் கொண்டமையால் கழல்கள் இவற்றை யெல்லாந் தருவன ; ஒருவரை - வேறொருவரையும் ; உறமைகள்- உலகியலிற் பொருந்தாதன; ஊடுதல்- பிணங்குதல் ; உறைத்தல் - பிறர்சார்பின்றித் தம் வயமாய் முனைந்து ஒழுகுதல் ; இதனையே "மிகைபல செய்தேன்" (6) என்று மேற் கூறுதலும் காண்க.—(2) இலயம் - சதி. கூத்தின் அங்கங்களாகிய பாகுபாடு ; திருப்புகழ் - "இறைவன் பொருள்சேர் புகழ்"—(3) மாதர் - உமையம்மையார் ; செண்பகச் சோலைசூழ் - இத்தலம் சண்பகவனம் என்றும் வழங்கப்பெறும் ; ஒற்றி மர்நக நுடையாய் - திரு வொற்றியூரினின்றும் நேரே இங்கு எழுந்தருளியமை குறிப்பு ; சங்கிலிக்காவேன் கண் கொண்ட பண்ப - இதன் குறிப்பினை ஆசிரியர் பதிகத்தின் உட்குறிப்பாகக் காட்டியருளினர்.(3431) ; பண்ப - அருட்பண்புடையோய் ; கண்கொண்ட செயல் கொடியதாகக் காணினும் அஃது உனது அருட்பண்புக்கு மாறுபாடன்று என்பது குறிப்பு ;—(4) பொன்னலங் கழனி...செந்நெலங் கழனி - பாலியின் நீர்வளங் குறித் தது ; இவ்வளம் பாலியாற்றான் வருவதென்பது மேற்பாட்டிற் கூறுதல் காண்க ; விரைமருவி - வண் டிசைபாட - "சுரும்பல்லி குடைநீலத் துகளல்ல பகலெல்லாம்" (65) ; அலவன் - நண்டு ; அந்நலம்......உறங்கும் - நண்டுகளின் அனுபவ நல்லறிவு நுட்பம் காட்டியபடி; பல்நலம்-பலபல திறத்து நலங்களையும் ;—(5) சந்தன...பாலி- பாலியாற்றின் நீர்வளம் ; திருக்குறிப்புத் தொண்டர் புராணம் பார்க்க ; வடகரை முல்லைவாயில்-பாலியின் வடகரையில் உள்ள தலம் ; பந்தனை - வினையின் மூலம் ;—(6) மற்று...வல்லார் - சிவனது அருள்பெற்ற இறுமாப்பிற் றிளைத்தல்; "எனக் கருளி யவா றார்பெறுவா ரச்சோவே" (திருவா) "இறுமாந் திருப்பன் கொலோ?" (அரசு); கள்ளமே...கொள்கையால் - பித்தனென் றேசிய தனையே துதியாகக் கொண்டமை குறிப்பு ; பற்றிலேன் - "மற்றுப் பற்றெனக் கின்றி" (நம்பி) ;—(7) மணி கேழ... கண்ணார் - ஆடற் பெண்களின் வருணனை ; எல்லியும் பகலும் பணி - இரவும் பகலு மிடையறாது சிவனை நினைத்துத் துதிக்கும் பணி; "வாயினா லுன்னைப் பரவிடு மடியேன்" ; பணி அது - "இன்னும் பல்லாறல கினிநம்புகழ் பாடு" என்று அருள்செய்தான் (222) என்று பணித்த அந்த என்று அது - முன்னறிசுட்டு ; இதனை மேல்வரும் பாட்டில் "அன்று...ஆட்கொண்ட" என்று விரிப்பது காண்க ;—(8) அன்று...சம்புவே - நம்பிகள் சரித அகச்சான்று ; திரிதர்வேன் - திரிந் தலைவேன் ; கண்ட - கண்டு கொண்ட; பற்றிய ;—(9) மட்டுலா...இட்டனே - மார்க்கண்டேயர் வரலாறு ; மட்டுலா...மாணி - மார்க்கண்டேயர் ; மட்டு - வாசனை ; மாணி - பிரம சாரி ; வணங்கும் - வழிபாட்டின் உறைப்பு ;—(10) "சொல்லரும்...இறைவனே" என்று நல்லவர் பரவும் - இறைவர் இத்தலத்திற் செய்த அருளின் வெளிப்பாடு. தல விசேடம் பார்க்க. இந்த அருட்பெருமையைக் குறிக்கொள்ள ஆசிரியர் (3432) எடுத்துக் காட்டியருளியமை காண்க ; முல்லை - (கொடி) தலமரம் ; சூழ் கொடி

முல்லை - தன்னுள் இறைவரது திருமேனி மறையும்படி புதராகச் சூழ்ந்த முல்லைக் கொடி; கட்டிட்டு - கட்டும்படி - பிணிக்கும்படி - செய்து; பிணிப்பித்ததும், அது காரணமாகத் தாம் வெளிப்பட்டமையும் அருளிப்பாடு; எல்லையிலின்பம்-பேரானந்தப் பெருங்கடல்; வீடுபேறு மாம்; என்று - பரவும் - இறைவனை இவ்வருளிப்பாடு பற்றித் துதிக்கும்; நல்லவர் - தகுதியாலே நல்லவர்களே இவ்வாறு பரவுவர் என்பது; அருள் வெளிப்படக் கண்டும் அல்லவர் வினைவயத்தால் பரவமாட்டார் என்பது குறிப்பு; ஏறி - பெயர்; ஏறுபவர்; கலைப்பொருள் - எல்லாக் கலைகளும் முடிந்த முடிபாக நுதலும் பொருளாவார்—(11) நரை - திரை - மூப்பு - உடலின் புறத்து நலிவு நிலைகள்; நடலை - வஞ்சனை; அகத்தின் நலிவு; உள் குளிர்ந்து - மனமுவந்து; அரைசு - அரசாட்சி.

தலவிசேடம்:—வட திருமுல்லைவாயில்-தொண்டை நாட்டின் 22 வது பதி; சோழ நாட்டில் சீகாழிக் கருகு கடற்கரையில் உள்ள காவிரி வடகரை 7வது பதியாகிய (தென்) திருமுல்லை வாயிலின்று பிரித்தறியும்படி வடதிருமுல்லை வாயில் எனப்படும்; இங்கு முல்லைக்கொடியே தலமரமாதலின் முல்லைவாயில் எனப்பட்டது; முல்லையின் அடியில் அதுவாயிலாக இறைவர் வெளிப்பட்ட இடம் என்பது பொருள். சண்பக வனம் எனவும் பெயர் பெறுமென்பது "செண்பகச் சோலை சூழ்" (2) என்ற பதிகத்தாற் காண்க; இங்கு வேட்டையின் பொருட்டு யானையின் மேல் வந்த தொண்டைமான் என்ற அரசனது யானையினது காலில் முல்லைக் கொடி சுற்றியதனால் அது மேற்செல்லமாட்டாது தடைபடச் செய்தருளியபோது, அரசன் முல்லைக் கொடியை வாளினால் வீசியபோது, அது இறைவர் திருமேனியிற்பட்டு இறைவர் வெளிப்பட்டருள, அது கண்ட அரசன் கவன்றுவருந்த, அவனுக் கருள்கொடுத் தருளினார் என்பது தலவரலாறு. இது பதிகம் 10 வது திருப்பாட்டிற் போற்றப் பட்டது; வாளினால் வீசியதாற் சிதைவுண்ட வடு இன்றும் சிவலிங்கத் திருமேனியிற் காண உள்ளது. முருகப்பெருமான் பூசித்த பதி. திருமால் வழிபட்ட வாலாற்றினை முன்னர், "அங்கண் முல்லையின் றெய்வமென் றருந்தமி ழுரைக்கும், செங்கண் மால் தொழும்" (1095) என்று ஆசிரியர் அருளினர்; சோழன், காமதேனு, வசிட்டர் முதலியோரும் வழிபட்டுப் பேறுபெற்ற குறிப்புக்களும் காணப்படுவன; சுவாமி சந்நிதானத்தில் மிகப்பெரிய இரண்டு எருக்குத் தூண்கள் உள்ளமை காணப்படும். சுவாமி - பாசுபதேசுவரர்; இப்பெயர் பாசுபதா என்று பதிகத்துட் போற்றப் பட்டது; அம்மை-கொடியிடை நாயகி; தலமரம்-முல்லை; தீர்த்தம்-பாலி; பதிகம் 1.

இது அம்பத்தூர் (M.S.M.) நிலையத்தினின்றும் வடமேற்கே மட்சாலை வழி 1½ நாழிகையளவில் அடையத் தக்கது. ஆவடி நிலையத்தினின்றும் வடகிழக்காய் மட்சாலை வழி 2½ நாழிகை யளவில் அடையலாம்.

குறிப்பு:—தொண்டைமானுக்கு அருளிப் படைத்துணையாக நந்திதேவரை இறைவர் அனுப்பியருளினர் என்றும், கிழக்கு நோக்கி எழுந்தருளியிருக்கும் நந்தி அந்த வரலாறு குறிப்பதென்றும் கூறுவர். சுவாமி தீண்டாத் திருமேனி. சந்தனக் காப்பிடுதல் வழிபாட்டு முறை.

3433. அணைந்த தொண்டர்க ளுடன்வல மாக
வங்க ணாயகர் கோயில்முன் னெய்திக்
குணங்க ளேத்தியே பரவியஞ் சலியாற்
குவித்த கைதலை மேற்கொண்டு நின்று

வணங்கி "நீர்மகிழ் கோயிலு ளீரே"
யென்ற வன்றொண்டர்க் கூன்றுகோ லருளி
இணங்கி லாமொழி யா"லுளோம்; போகீ!"
ரேன்றி யம்பின ரேதிலார் போல. ௨௭௬

(இ - ள்) அணைந்த...எய்தி - முன்கூறியபடி எதிர்கொள வந்தணைந்த தொண்டர்களுடன் கூடி வலமாக வந்து அங்கண்மையுடைய இறைவரது திருக்கோயிலின் முன் வந்து சேர்ந்து ; குணங்கள்...வணங்கி - இறைவரது அருட்பெருங் குணங்களை எடுத்துத் துதித்தே போற்றி செய்து வணங்கி ; நீர்...வன்றொண்டர்க்கு - " தேவ ரீர் மகிழும் இத்திருக்கோயிலினுள் வீற்றிருக்கின்றீரோ ?" என்று கேட்ட வன்றொண்டருக்கு ; ஊன்றுகோல்...போல - இறைவர் ஊன்றுகோல் ஒன்று கொடுத்தருளி இணக்கமில்லாத மொழிகளால் " யாம் உள்ளோம் ; நீர் போகீர் " என்று அன்னியர் போலச் சொல்லியருளினர்.

(வி - ரை) அணைந்த - முன்பாட்டிற் கூறியபடி தாம் வருவதைக் கண்டு எதிர் கொள்ள வந்தணைந்த ; தொண்டர்களுடன் - கண்ணிழந்த நிலையாதலின் தொண்டர்கள் தம்முடன் முன்செல்ல என்பது குறிப்பு. கோயில் - இறைவரது திருமுன்பு.

" நீர் மகிழ் கோயிலுள்ளீரே ?" என்ற வன்றொண்டர்க்கு - இது இறைவனை நோக்கி நம்பிகள் வினவியது ; உள்ளீரே - என்றதனால் தாம் நேரே கண்களாற்காண இயலாமையினைக் குறிப்பினுணர்த்தியவாறு ; தமக்கு அருள் செய்யாமையில் அங்குக் கோயிலில் விளக்கமாக வீற்றிருத்தலில்லை என்று கூறியதும் குறிப்பு.மகிழ்-கோயில்-உள்ளீரே - திருவொற்றியூரிலும் பூ மகிழ்க்கீழும் கோயிலுள்ளும் மாறித் தங்கியதனை அறிந்தாராதலின் இங்கு மகிழடியிலா ? அன்றிக் கோயிலினுள்ளா ? என்றிரண்டிலொன்றனை உறுதிப்பட அறியவினவியது போன்ற குறிப்பும் காண்க ; மகிழ் - கோயில் - பழமொழி போல வழங்கியதாகக் கொள்க.

ஊன்றுகோல் அருளி - " ஊன்று கோலெனக் காவதொன் றருளாய் " (திருவொற்றி - 4) என்று கேட்ட அதுவேயாருக ஈண்டு ஊன்றுகோல் அருளினர் என்பதாம். ஊன்றுகோல் அருளுதல் - பற்றுக்கோடாகிய அருள் உள்ளமை காட்டுதலாம்.

இணங்கிலா மொழியால் ஏதிலார் போல உளோம் போகீர் என்றியம்பினர் என்க. இணங்கிலா மொழியாவது இணக்கமாக அன்பு காட்டாது அன்னியர்போலக் கூறுதல் ; " ஒன்னலரைக் கண்டாற்போல் உளோம் போகீர் என்றானே " என்ற நம்பிகள் திருவாக்கு இதற்குச் சிறந்த அகச்சான்று ; ஏதிலார் - ஏதும் பற்றில்லாத அன்னியர். போல - உண்மையாக ஏதிலார் அன்று என்பதாம்.

உளோம் போகீர்-கோயிலுளீரே என்று கேட்டமையின், நாம் இருக்கின்றோம் - நீர் போவீராக என்றது இறைவர் திருவாக்கு. இக்கோயில் இதனால் உளோம் போகீர்புரம் எனவழங்கும் வழக்கும் கல்வெட்டுக்களிற் காண உள்ளது. இது சரித அகச்சான்று.

ஏத்தியே பரவி - இப்பதிகம் வேறு ; இது கிடைத்திலது. மேற்பாட்டிற் கூறும் பதிகம் ஊன்றுகோலருளி உளோம் போகீர் என்ற பின்னர் அத்திருவருளை எண்ணிப் போற்றிப் பாடியது. 279

வேறு

3434." பிழையுளன பொறுத்திடுவே" ரென்றெடுத்துப் பெண்பாகம்
விழைவடிவிற் பெருமானை வெண்பாக்க மகிழ்ந்தானை

இழையெனமா சுணமணிந்த விறையவனைப் பாடினார்
மழைதவழு நெடும்புரிசை நாவலூர் மன்னவனார். உ௮௦

(இ - ள்) பிழை...எடுத்து - "பிழையுளன பொறுத்திடுவர்" என்று தொடங்கி; மழைதவழும்...மன்னவனார் - மேகங்கள் தவழ்தற்கிடமாகிய உயர்ந்த மதில்களையுடைய திருநாவலூரின் தலைவராகிய நம்பிகள்; பெண்பாகம்...பாடினார் - உமையம்மையாரை ஒரு பாகத்தில் இருத்தலை விரும்பிய பெருமானை, திருவெண் பாக்கத்தினை மகிழ்ந்தவரை, சங்காபரணம் என்று அடியார் போற்றப் பாம்பினை அணிந்த இறையவரைப் பாடினார்.

(வி - ரை) பிழை...எடுத்து - பதிகத் தொடக்கமாகிய முதற் குறிப்பு.

பெண்பாகம்...இறையானை - என்றது கருணைக் கிருப்பிட மாதலையும், வெண் பாக்கம் மகிழ்ந்தான் - என்றது வெளிப்பட்டருளியுள்ள இடத்தினையும், மாசுணம் அணிந்தான் - என்றது தீமையையும் நன்மையாக ஏற்றுக்கொள்ளும் நிலையினையும் உட்குறிப்பாகக் கொண்டு நம்பிகள் தமது குறையினை விண்ணப்பித்த குறிப்புக்களாம். "ஒண்ணுதலி பெருமானார்" (6), "சேயிழையோ டுடனாகி" (4), "நுண்ணிடை யாள் பாகமா" (5), "வாரிடங்கொள் வனமுலையா டன்னோடும்" (8), "கோயி லிங் கிருந்தாயோ" (9), "வெண்பாக்க மிடங்கொண்ட" (11), "விடநாகன்" "பையரவா" (2 - 3) என்பன பதிகம்; விழை - விரும்பும்; இழை - சங்கா பரணம்; மாசுணம் - பாம்பு.

மழை - அதற்குக் காரணமாகிய மேகம் என்ற பொருளில் வந்தது; ஆகு பெயர்; புரிசை - மதில். 280

## திருவெண்பாக்கம்

திருச்சிற்றம்பலம் பண் - சீகாமரம்

"பிழையுளன பொறுத்திடுவ" ரென்றடியேன் பிழைத்தக்காற்
பழியதனைப் பாராதே படலமென்கண் மறைப்பித்தாய்!
"குழைவிரவு வடிகாதா கோயிலுளா யோ?"வென்ன
உழையுடையா னுள்ளிருந்து "உளோம்போகீ" ரென்றானே. (1)

"பொன்னவிலுங் கொன்றையினாய்! போய்மகிழ்க்கீ ழிரு"வென்று
சொன்னவெனைக் காணாமே "சூளுறவு மகிழ்க்கீழே
என்னவல்ல பெருமானே! யிங்கிருந்தா யோ?"வென்ன
ஒன்னலரைக் கண்டாற்போ "லுளோம்போகீ" ரென்றானே (9)

மான்றிகழுஞ் சங்கிலியைத் தந்துவரு பயன்களெல்லாந்
தோன்றவருள் செய்தளித்தா யென்றுரைக்க "வுலகமெல்லா
மீன்றவனே! வெண்கோயி லிங்கிருந்தா யோ?"வென்ன
வூன்றுவதோர் கோலருளி யுளோம்போகீ ரென்றானே. (10)

ஏராரும் பொழினிலவு வெண்பாக்க மிடங்கொண்ட
காராரு மிடற்றானைக் காதலித்திட் டன்பினொடுஞ்
சீராருந் திருவாரூர்ச் சிவன்பேர்சென் னியில்வைத்த
ஆரூரன் றமிழ்வல்லார்க் கடையாவல் வினைதானே. (11)

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு** :—"நீர் மகிழ் கோயிலுளிரே!" என்று கேட்டதற்கு இறைவர் ஊன்றுகோல் அருளி உளோம் போகீர்" என்றியம்பின வரலாற்றினைப்பற்றிப் பாடியது (3434).

**பதிகப்பாட்டுக் குறிப்பு** :—(1) பிழையுளன...பிழைத்தக்கால் - என் செயலிற் பிழைகளிருந்தால் அவற்றைப் பொறுத்து அருளும் செய்வர் என்ற துணிவினால் பிழை செய்தால்; இது நம்பிகள் மனங்கொண்ட துணிபு; பழி-அடியானுடைய கண்களை ஒளியிழக்கச் செய்தது; படலம் - கண்ணினுள் பார்வைக்குதவும் பகுதி; மறைக்கும் பகுதி என்றலுமாம். இப்பொருளில் படலம் உண்டாக்கிக் கண்ணை மறைத்தாய் என்க; படலம் - படலத்தால்; குழை - காதணி; வடி(காது) - தொங்கிய; தொங்கிய காதுடைமை பழங்கால வழக்கு. கோயிலுளாயே - நம்பிகள் இறைவரைக் கேட்டது; உளோம் போகீர் - இறைவர் அருளிய விடை; இவையும் இப்பதிகத்துள் வரும் ஏனைவும் சரித ஆதரவுகளாகிய அகச்சான்றுகள்!. "ஊன்றுவதோர் கோலருளி" (10) "ஒன்னலரைக் கண்டாற்போல்" (9) என்பன முதலியவை பார்க்க;—(2) இடை - நிலை - பின்வருவன முன் இருந்தன; நடை - ஒழுக்கம்; சிவவாழ்வு;—(3) ஒன்று - வேறொன்றும்;—(4) சேயிழையோ டுடனாகியும் என்று உம்மை விரிக்க. இதனைப் "பெண்பாகம் விழைவடிவிற் பெருமானை" (3434) என்று சிறப்பாக வேறு எடுத்துக் காட்டினார்; சேயிழை-அருட்குறிப்பு-(5) (8) பார்க்க;—(5) பொன் இலங்கு-பொன்னின் நிறம்போல நிறம் விளங்கும்; இலங்கு-உவமவுருபு; இருபாலடியார் - இருபுறமும் ஒழுங்கின் நின்று என்க. நம்பிகளுடன் வந்தாரும் பதியி விருந்தாரும் என்றலுமாம்; உன்னதம் - பெருமிதமாகிய மகிழ்ச்சி;—(6) மலர் - விரிகின்ற; மலர்ந்த - விளங்கும்;—(7) இருந்தீரே - ஏகாரம் வினா;—(8) வார் இடங்கோள் - கச்சு அணிந்த; பாரிடம் - பூதம்;—(9) நவிலும் - போன்ற; உவம உருபு; "போய் மகிழ்க்கீழ் இரு" என்று சொன்ன - இது நம்பிகள் சபதத்திற்கு முன் இறைவனை வேண்டிக்கொண்டது (3402); சொன்ன எனைக் கணுமே - அவ்வாறு வேண்டிய நான் அறியாதபடி; சூளுறவு மகிழ்க்கீழே என்ன - இது இறைவர் சங்கிலியாருக்கு உணர்த்தியருளியது (3405); இது நம்பிகள் கருதலளவையால் அறிந்த நிலை. தாமும் இறைவருமே அறிந்ததன்றிப் பிறர் அறியாத இதனைச் சங்கிலியார் சேடியர் அறிய வந்தமையின் இறைவர் உணர்த்தினாலன்றி இது விளைந்திராது என்றறிதல். வெகுரேகச் சொல் என்ப; ஒன்னலரைக் கண்டாற்போல் - உளோம் போகீர் என்றுரைத்தல் அன்பிற்கு மறுதலைப்பட்டார்பால் நிகழும் சொல்லாதல் குறிப்பு; நம்பிகள் தோழமை முறையால் இறைவர் செயலை இவ்வாறு பகைமைத் திறம்படப் பொருள் கொண்டு பாடி அருளினும், ஆசிரியர், எல்லாவுயிர்களிடத்திலும் எஞ்ஞான்றும் கருணையே யன்றிப் பிறிது நிகழாத இறைவரது செயலை இவ்வாறு சொல்ல மாட்டாராய் அன்பின் ஏற்றம்பட "இணங்கிலா மொழியால் ஏதிலார் போல" (3433) என்று இதற்கு உரைவிரித்த நயம் கண்டு கொள்க; இப்பாட்டுச் சரிதத்தின் மிக உயர்ந்த அகச்சான்று; மேல்வரும் பாட்டும் பார்க்க;—(10) மான்திகழும்-மானின் மருண்ட பார்வைபோன்ற பார்வை விளங்கும்; மான்-மான்கண்: ஆகுபெயர்; திகழ்-உவம உருபு; வருபயன்கள் - இவ்வுலகில் வந்தவதரித்ததன் பயனாகிய கன்மானுபவம்; தோன்ற - பொருந்த; உலகமீன்ற - என்றது நிமித்த காரணமாந் தன்மை குறித்தது-வெண்கோயில் - திரு வெண்பாக்கக் கோயிலின் பெயர்;—(11) வெண்பாக்கம்: தலப்பெயர்; இவ்வொருபாட்டில் தெரியவைத்தார்; காதலித்திட் டன்பிறேடும் - நம்பிகளின் கண்ணிழந்த கடுந்துன்பத்தினும் பிறழாத அன்பின் உறைப்பு; சீராரும்

...ஆரூரன் - நம்பிகளுக்கு ஆரூரன் எனப் பெயர் போந்த காரணம் விளக்கிற்று ; திருவாரூர்ப் பெருமானது அடிக்குடியாகிய பரம்பரையாதலின் பெற்றோர்களால் இப்பெயர் சூட்டப்பட்டதென்பது. முன்னர், "ஆதி சைவ னாரூரன்" (205) என்றதனால் நம்பிகளது பேரனாரும் (பாட்டனார்) இப்பெயர் பூண்டவர் என்பது விளங்கும். ஆண்டும், 150ன் கீழும் உரைத்தவை பார்க்க.

தலவிசேடம்:—திருவெண்பாக்கம் - தொண்டை நாட்டில் 17வது பதி. நம்பியாரூரது சரிதநிகழ்ச்சிபற்றித் திருவுளம் பூதூர் - உளோம் போகிர்புரம் எனவும் அணிமைபற்றி வழங்கப்பட்டதொரு பதியுமுண்டு. வெண்பாக்கம் வேறு. இவையிரண்டும் இப்போது சென்னைக் குடிதண்ணீர்த் தேக்கமாக்கப்பட்ட பரந்த ஏரியாகிய பூண்டி நீர்த்தேக்கத்தினுள் அகப்பட்டுள்ளன. இங்கிருந்த சிவ மூர்த்திகளை எடுத்து வேறிடத்துத் தாபித்துள்ளனர். திருவுளோம் போகிபுரம் என்றது பழங் கல்வெட்டுக்களிற் கண்ட பெயர்; இக்கல்வெட்டுக்கள் அந்தப் பெயர்க் கோயிலினுட் பல இருந்தன. திருவொற்றியூரினின்றும் கண்ணிழந்த நிலையில் போந்த ஆளுடைய நம்பிகளுக்கு இறைவர் இங்கு ஊன்று கோலருளி "உளோம் போகீர்" என்று அருளி விடுத்த நிகழ்ச்சி புராணத்துட் காண்க. பதிகமும் பார்க்க. சுவாமி - வெண்பாக்க நாதர் ; அம்மை - மின்னலொளியம்மை, கனிவாய் மொழி யம்மை ; தலமரம் - இலந்தை ; பதிகம் 1. ஊன்று கோலுடன் நம்பிகள் திருவுருவம் உண்டு. நம்பிகளுக்கு மின்போல விட்டுவிட்டு அம்மை வழிகாட்டியருளினர் என்பர். இத்தலம் திருவள்ளூர் நிலயத்தினின்றும் வடமேற்காய்த் திருப்பாசூர் போகும் கற்சாலை வழி 3½ நாழிகை யளவில் வடக்கில் ஊற்றுக்கோட்டைக்குப் போகிற பாதையில் மட்சாலையில் 5 நாழிகை யளவில் அடையப்பட்டு வந்தது. இப்போது நீர்த்தேக்கத்தினுள் மூழ்கி விட்டபடியால் சென்றடையாத திருவுடனுகி விளங்குகின்றது.

3435. முன்னின்று முறைப்பாடு போன்மொழிந்த மொழிமாலைப்
பன்னுமிசைத் திருப்பதிகம் பாடியபின் "பற்றாய
என்னுடைய பிரானருளிங் கித்தனைகோ லா"மென்று
மன்னுபெருந் தொண்டருடன் வணங்கியே வழிக்கொள்வார், ௨௮௧

3436. அங்கணர்தம் பதியதனை யகன்றுபோ யன்பருடன்
பங்கயப்பூந் தடம்பணைசூழ் பழையனூ ருழையெய்தித்
தங்குவா ரம்மைதிருத் தலையாலே வலங்கொள்ளுந்
திங்கண்முடி யாராடுந் திருவாலங் காட்டினயல், ௨௮௨

3437. முன்னின்று தொழுதேத்தி "முத்தா"வென் றெடுத்தருளிப்
பன்னுமிசைத் திருப்பதிகம் பாடிமகிழ்ந் தேத்துவார்
அந்நின்று வணங்கிப்போய்த் திருவூற லமர்ந்திறைஞ்சிக்
கன்னிமதின் மணிமாடக் காஞ்சிமா நகரணைந்தார். ௨௮௩

3435. (இ - ள்) முன் நின்று...பாடியபின் - திருமுன்பு நின்று முறைப்பாடு உரைப்பார் போன்று மொழிந்த சொன்மாலையாகிய பன்னும் இசையுடன் கூடிய திருப்பதிகத்தினைப்பாடிய பின்பு ; என்னுடைய...என்று - "என்னுடைய பெருமானாரது திருவருள் இங்கு இத்தனை அளவே யிருந்தது போலும்" என்று உட்கொண்டு ; மன்னு...வழிக்கொள்வார் - நிலைபெற்ற பெரிய தொண்டர்களுடன் இறைவரை வணங்கி மேலே வழிச் செல்வாராகி, ௨௮௧

3436. (இ - ள்) அங்கணர்...போய் - அங்கண்மை யுடையாராம் இறைவாது அத்திருப்பதியினை நீங்கிச் சென்று; அன்பருடன்...எய்தி - அன்பர்களுடனே கூடி மேற்சென்று தாமரைகள் மலர்தற்கிடமாகிய தடங்களும் பணைகளும் சூழ்ந்த பழையனூரின்கண்ணே சேர்ந்து; அம்மை திருத்தலையாலே...அயல் - காரைக்காலம்மையார் திருத்தலையினாலே வந்து வலங்கொண்டருளும், சந்திரனை முடியிற் சூடிய இறைவர் திருக்கூத்தாடும் திருவாலங்காட்டின் பக்கத்து; தங்குவார்-தங்குவராகி, . ௨அ௨

3437. (இ - ள்) முன்னின்று...ஏத்துவார் - திரு முன்பு நின்று வணங்கித் துதித்து "முத்தா" என்று தொடங்கியருளிப் பன்னும் இசையினையுடைய திருப்பதிகத்தினைப்பாடி மகிழ்ச்சியுடனே துதிப்பாராகி; அந்நின்று...போய் - அந்நிலைக்கண் நின்று வணங்கி மேலே சென்று; திருவூறல் அமர்ந்திறைஞ்சி - திருவூறல் என்னும் பதியினை விரும்பிச்சென்று வணங்கி; கன்னி...அணைந்தார் - பகைவரால் அழிக்கப்படாத திருமதிலினையும் அழகிய மாடங்களையுமுடைய காஞ்சிமா நகரத்தினை வந்து அணைந்தருளினர். ௨அ௩

இம் மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபுகொண்டன.

3435. (வி - ரை) முறைப்பாடு போல் மொழிந்த தமிழ்மாலை - இப்பதிகத்தினை நம்பிகள் இறைவர்பால் தமது குறைகளை எடுத்தியம்பி முறையிட்டது போல அருளினான்றி, உண்மையில் அது மகிழ்ச்சியுடன் அன்பு ததும்ப இறைவரது அருளைப் போற்றிப் புகழ்ந்தபடியேயாம் என்று குறிக்கப் போல் மொழிந்த என்றார். "காதலித்திட் டன்பினொடும்" (11) என்றது காண்க; அன்றியும் இப்பதிகம் "கோயிலுளீரே" என்று நம்பிகள் கேட்க, அதற்கு ஊன்று கோலருளி "உளோம் போகீர்" என்று இறைவர் விடையும் அருளிய பின்னர், அவ்வருளிப் பாட்டினைத் தோழமை முறையினாற் பாராட்டிப் போற்றிய திறமும் கண்டு கொள்க.

பன்னுமிசை - பன்னுதல் - பலவாறும் எடுத்து இயம்புதல்; இசை - பதிகப் பண்ணாகிய சீகாமரம்; இசை - புகழ் என்றலுமாம்.

பற்றாய...என்று - ஊன்றுகோலருளி "உளோம் போகீர்" என்ற இந்த அளவே ஈண்டு இறைவரது அருள் போலும் என்று துணிந்து; "அங்கு நாதர்செயருளதுவாக" (3431) என்றவிடத் துரைத்தவை பார்க்க. பற்று - பற்றுக்கோடு; ஆதரவு. ஊன்றுகோல்தானும் ஓர் ஆதரவாக ஏற்றமை குறிப்பு.

பெருந் தொண்டர் - பெருமை - நம்பிகளுடன் பணி செய்துடனிருக்கும் பெரும் பேறு.

வழிக்கொள்வார் - மேலே திருவாரூரை நோக்கிய வழியிற் செல்வாராகி; முற்றெச்சம்; வழிக்கொள்வார் - போய் - எய்தித் - தங்குவார் (3436) - ஏத்துவார் - போய் - அணைந்தார் (3437) என்று மேல்வரும் பாட்டுக்களுடன் முடிக்க. 281

3436. (வி - ரை) பழயனூருழை - பழயனூரின்கண்; உழை - ஏழனுருபு; எய்தி - சேர்ந்து; பழையனூரும் திருவாலங்காடும் ஒருபதியாக ஒன்று சேர்த்துப் பாடப்பெறுவன; 1606 - 2909 பாட்டுக்களும் "பழனை யுடையார் தாமே" (அரசு - தாண்); "பழயனூ ராலங்காட்டெம் மடிகளே" (பிள்) என்ற தேவாரங்களும் பார்க்க. நம்பிகளும் "பழயனூர் மேய - ஆலங்காடா" என்பதும் காண்க.

தங்குவார்...திருவாலங்காட்டின் அயல் - பழயனூரினை எய்திய நம்பிகள் அங்குத் தங்காது, மேற்சென்று அணிமையில் உள்ள திருவாலங்காட்டினை நோக்கிச்

சென்று அதனுள்ளும் சென்று சேராது, அதன் அயலில் - (அருகாக) ஓரிடத்தில் தங்குவாராகி என்றபடி ; திருவாலங்காட்டிற் சேராமைக்குக் காரணம் அம்மை திருத்தலையாலே வலங்கொள்ளும் பெருமை பற்றி என்பார் உடம்பொடு புணர்த்தி ஓதியருளினர். இத்தன்மையினை முன்னர், ஆளுடைய பிள்ளையார் இப்பதியினுட் சேராது புறத்துத்தங்கிய சரிதநிகழ்ச்சி பற்றி அங்கு விரித்து விளக்கினாராதலின், ஈண்டுச் சுருக்கிச் சுட்டினமட்டி லமைந்தார். 2905-2909 பாட்டுக்களும் ஆண்டுரைத்தவையும் பார்க்க. அம்மை - காரைக்காலம்மையார் ; இவ்வாறு அம்மை என்ற மட்டில் கூறியமைவது சைவமரபு ; அவரது அளக்கலாகாப் பெருமைபற்றி அவர் பெயரைத்தானும் சொல்லாது அம்மை எனப் போற்றும் மரபு காட்டப்பட்டது காண்க ; முன்னர் "இம்மையிலே புவியிலுள்ளோர் யாருங் காண வேழுலகும் போற்றிசைப்ப வெம்மை யாளு மம்மைதிருத் தலையாலே நடந்து போற்று மம்மையப்பர் திருவாலங் காடாம்" (2907) என்று அருளிக் காட்டிவிட்ட படியால் ஆசிரியர் ஈண்டு அம்மை என்ற மட்டில் அமைத்துக் கூறியமைந்த மரபும் திறமும் கவிநலமும் காண்க. அம்மை மூத்ததிருப்பதிகம் என்ற பெயர்வழக்கும் காண்க. இம்மரபினை ஒட்டியே " 'அறிவானுந் தானே யறிவிப்பான் றானே' என்றோதிய அம்மை 'அறிவா யறிகின்றான் றானே' எனவு மோதியதூஉ மெண்க" என்று எமது மாதவச் சிவஞான முனிவர் சிற்றுரையில் கூறிப்போந்தனர் (போதம் - சூத்).

திருத்தலையாலே வலங் கொண்ட வரலாறு அம்மையார் புராணத்துட் காண்க. (1778); வலங்கொண்ட என்றது வலங்கொள்ளும் என்றது இன்றும் அங்கு அம்மை இறைவர் திருவடிக்கீழ்ப் பாடிக்கொண்டு ஆனந்தஞ் சேர்ந்தெழுந்தருளி யிருக்கின்ற நிலை குறித்தற்கு.

திங்கள் முடியார் ஆடும் - ஊர்த்துவ தாண்டவம் என்னும் திருவடியை மேலே உயரத்தூக்கி அண்டமுற நிமிர்ந்தாடும் திருக்கூத்தை இயற்றியருளி ; ஆடுதல் நித்தியமாய் நிகழ்தலின் ஆடும் என்றார். இத்தலம் இரத்தின சபை எனப்படும் ; இறைவரது ஐம்பெருமன்றுகளில் ஒன்று. தலவிசேடம் III - பக். ருஎகூ பார்க்க. 282

3437. (வி - ரை) முன்நின்று தொழுது - பதியின் புறத்து அயலில் திருக்கோயிலை நோக்கியவாறே திருமுன்பு நின்று வணங்கி ; முன்னரும் "முன்னின்று - மொழிந்த" என்றார் ; கண்ணொளி யிழந்த நிலையாதலின் முன்னிற்றல் மாத்திரையால் அமைந்து அகக்கண்ணாற் கண்டு வணங்கி என்பது குறிப்பு.

"முத்தா" என்று எடுத்தருளி - பதிகத் தொடக்கமாகிய முதற் குறிப்பு.

பன்னுமிசை - பன்னும் - 3435 பார்க்க. இசை - பதிகப்பண்ணாகிய பழம் பஞ்சுரம்.

அந்நின்று - அங்கு நின்றும் ; அந்நிலையினின்றவாறே ; என்றலுமாம்.

அந்நிலையே என்ற பாடமுமுண்டு.

திருவூறல் அமர்ந்து இறைஞ்சி - அமர்ந்து - விரும்பி.

கன்னிமதில் - பகைவரால் அழிக்கப்படாத மதில்; மதில் எடுத்த ஞான்று உள்ளவாறே உள்ளது.

காஞ்சிமா நகர் - முத்தித்தலங்கள் ஏழனுள் ஒன்றாகிய பெருநகர் ; தொண்டை நாட்டின் தலைநகர் ; என்பன முதலிய பெருமைகள் குறிக்க மாநகர் என்றார்.

குறிப்பு :—திருவொற்றியூர் எல்லையினைத் தாண்டியவுடன் கண்மறைந்த நிலையில் வழிக்கொண்ட நம்பிகளது அந்தத் துன்ப நிலையில் வழிச் செலவை இடையில் தங்கவைத்தல் முதலாகிய இடையீடின்றி துன்பம் நீடிக்காது வரலாறு கூறிப்போகும்

கவிநயம் கண்டுகொள்க ; நம்பிகள் திருவொற்றியூரினின்றும் புறப்பட்டுத் திருக்காஞ்சி மாநகரம் அணையும் வரையில், ஊன்றுகோ லருளப்பெற்ற திருவெண்பாக்கத்தில் அவ் வருளிப்பாட்டின் பொருட்டு ஒருவினை முடிபுகாட்டி, இயம்பினர் (3433) பாடினார் (3434) என்று வினைமுற்றுத் தந்து முடித்ததன்றி, ஏனைய பதிகளில் எல் லாம் வினையெச்சங்களால் கூறிக் கொண்டு செலுத்திக், காஞ்சியில் ஒரு கண் பெறும் அருளிப்பாடு குறிக்க அணைந்தார் என வினைமுற்றுந் தந்து முடித்தல் காண்க. 283

திருவாலங்காடு

திருச்சிற்றம்பலம் பண் - பழம்பஞ்சுரம்

முத்தா முத்தி தரவல்ல முகிழ்மென் முலையா ளுமைபங்கா
சித்தா சித்தித் திறங்காட்டுஞ் சிவனே தேவர் சிங்கமே
பத்தா பத்தர் பலர்போற்றும் பரமா பழைய னூர்மேய
அத்தா வாலங் காடாவுன் னடியார்க் கடியே னாவேனே. (1)

பத்தர் சித்தர் பலரேத்தும் பரமன் பழைய னூர்மேய
அத்த னாலங் காடன்றன் னடிமைத் திறமே யன்பாகிச்
சித்தர் சித்தம் வைத்தபுகழ்ச் சிறுவ னூர னொண்டமிழ்கள்
பத்தும் பாடி யாடுவார் பரம னடியே பணிவாரே. (10)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—பண்டை வினைக ளவைதீர்க்கும் குறிப்புப் பற்றிப் பரமன் அடிமைத் திறமே யன்பாகிப் பாடியருளியது; பதிகம் 3-4-7-8 பாட்டுக்களும், திருக் கடைக் காப்பும் (10) பார்க்க.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) முத்தா - இயல்பாகவே பாசங்களினீங்கிய வரே ; முத்தி - சிவானந்த பரபோகப் பெருவாழ்வு ; சிங்கமே - தலைமைபற்றிய உருவகம் ; சித்தித்திறம் - முத்திநெறி ; பத்தர் பலர் - அம்மையார் - ஆளுடைய அரசுகள் - ஆளுடைய பிள்ளையார் முதலாயின பெரியோர் ; அடியார்க் கடியே னாவேனே - அடிமைத் திறமே யன்பாகிப் போற்றும் நிலை;—(10) முத்தா - முத்தி - சித்தா - சித்தி, பத்தா - பத்தர் - சொற்பின் வரு நிலையாகிய சொல்லணி ; தமிழ் நயம் ;—(2) பொய்யே செய்து - பொய் வாழ்வு வாழ்ந்து ; திருவொற்றியூர் வர லாற்றுக் குறிப்பு ; மெய்யா மெய்யர் மெய்ப் பொருளே - சொற் பொருட் பின்வரு நிலை ;—(3) பாண்டாழ் வினைகள் - பண்டு என்பது எதுகை நோக்கி முதனீண்டு வந்தது ; செய்யுள் விகாரம் ; ஆழ் - ஆழ்த்தும் ; பிறவினை ; பாண் - தாழ்ச்சியுமாம். பண்டாழ் (7); பாழாம் வினைகள் (8) பாழாம் - பாழாக்கும் என்றதும் பார்க்க ; நம்பிகளது சரிதம் பற்றிய திருவுள்ளக் குறிப்பு ; " வேலங்காடு...மறந்தொழிந் தேன் " (5) என்றதும் காண்க ; ஆண்டா - ஆட்கொண்டவரே ;—(4) மறி - மான்; மான் கண்ணைக் குறித்தது ; ஆகுபெயர் ; மறிநேர்...அழிந்தேன் - நம்பிகளது சரித வினைவும் நிகழ்ச்சிகளும் பற்றிய குறிப்பு ; பறியா - பறிக்கலாகாத ; வலிய ; அறிவே - அறிவுத் திருமேனி ; (சித்) ;—(5) வேல் அந்த ஆடு - வேல் - வேலின் தன்மையாகிய கூர்மையும் கொலைத் தொழிலும் குறித்தது ; ஆகுபெயர் ; ஆடு - பொருந்தும் ; போலும் என வுவமவுருபாகப் பொருள் கொள்ளலுமாம் ; மறந் தொழிந்தேன் - முற்றவும் மறந்தேன் ; நெறிமறந்து - மறந்து -"உன் சீலமுங் குண மும் சிந்தியாதே " (தக்கேசி - ஒற்றி - 6) என்ற கருத்து ; இப்பகுதி சங்கிலியார் திறத்து நிகழ்ச்சியைச் சிறப்பாயு முணர்த்தி நின்றது ;—(6) எண்ணார் - சிவனைச்

சிந்தியாத பகைவர் ; முப்புரவாணர் ; கண்ணாய் உலகம் காக்கின்ற கருத்தா - கண்ணாய் - காட்டக்காணும் தன்மையுடைய கண் உருவத்தைக் காணும்படி அதனோ டொருங்கியைந்து நின்று காட்டி அவ்வுருவத்தைக் காண்கின்ற ஆன்மாப் போல, அறிவிக்க அறியு மியல்பையுடைய அவ்வான்மா, விடயத்தை யறியும்படி முதல்வன் அதனோடியைந்து நின்று அறிவித்து அறிந்து வருதலால் உலகத்தைக் காக்கின்றவன் (போதம் - 11 - சூத் - பிண்டப் பொழிப்பு); "காட்டக்கண் டிடுந்தன்மை யுடைய கண்ணுக் கேயுமுயிர் காட்டிக்கண் டிடுமா போல, வீசனுயிர்க் குக்காட்டிக் கண்டிடுவ னித்தை, ஆயுமறி வுடையனு யன்பு செய்ய...மாயமெலா நீங்கியரன் மலரடிக் கீழி ருப்பன் மாறாத சிவானுபவ மருவிக் கொண்டே" (சித்தி - 11 - 1); கண்ணாய் - ஆய் - ஆக்கச் சொல் போல என்று உவமவுருபாய் வந்தது : கண் - காட்டப்படும் தன்மை ; கருத்தா - கர்த்தரே - முதல்வரே ; காத்தலே கருத்தாக - தொழிலாக - உடையவரே என்றலுமாம் ; இமைகள் கண்ணைக்காத்தல் போல உலகத்தைக் காக்கும் இறைவரே என்றலுமாம் ; "கண்ணு மாவியு மாம்பெருங் காவலான்" (99) என்றதும், ஆண்டுரைத்தவையும் பார்க்க ; திருத்தலாகாதாய் - எவ்வாற்றானுங் குறைபாடெதுவும் இல்லாதவரே ! ; "ஒன்றானுங் குறை வில்லை" (தேவா - ஒற்றி - தாண்); பலரும் - "பலர் போற்றும்" (1); பண்ணா ரிசைகள் - அம்மை மூத்த பதிகங்கள் - அரசுகள் பிள்ளையார் இவர்களது தேவாரப்பதிகங்களாகியவற்றின் பண்கள்; அண்ணா - எல்லாருக்கும் மூத்தவரே; அணுகப் படாதவரே என்றலுமாம் ;—(7) வண்டார் குழலியுமை - தல அம்மைபெயர் ; விண்டார் - அறத்தின் வழுவியவர் ; (விள் - நீங்குதல்); பகைவர் ; (விள் - மாறுபடுதல்);—(8) பேழ்வாய் அரவு - திறந்த வாயினையுடைய பாம்பு ;—(9) ஏழேழ்படி கால் - எழுகின்ற எழுவகைப் பிறப்பும் ; ஈமப் புறங்காட்டில் ஆடல் புரிவான் - அம்மை மூத்த திருப்பதிகங்கள் பார்க்க;—(10) சித்தர் சித்தம் வைத்த - சித்தரை மனம்வைத்த; சித்தர் - இறைவர் ; சித்தி தருபவர்; (1) பார்க்க ; சிறுவன் - நம்பிகளது வயதின் இளமை குறித்தது ; பாடியாடுவார் - பாடி அவ்வானந்தத்தை நுகர்ந்தமையால் ஆனந்தக் கூத்தாடுபவர்.

தலவிசேடம் :—திருவாலங்காடு III - பக் ௩௭௧ - பார்க்க. திருக்குளம் பெரிது ; குளத்திற்கு வடகிழக்கு, கோயிலுக்கு வடமேற்காக இறைவருடன் ஆடிய காளி கோயில் உள்ளது; "ஆடினார் காளி காண வாலங்காட் டடிக ளாரே" (அரசு-திருநேரிசை); "கொடிய வெஞ்சினக் காளி...செருக்கழிவுற வழியாக், கடவு ளாடலால் வென்றதோர் வடவனங் கண்டான்" (கந்தபு. வழிநடை - 8); இதன் கிழக்கில் ஒரு நாழிகை யளவில் மட்சாலை வழிப் பழயனூர் உள்ளது ; இங்கும் சிவன் கோயில் உண்டு. நீலியின் வஞ்சனையால் உயிர்துறந்த வணிகனுக்குக் கூறிய சொற் பிழையாது 70 பேர் வேளாளர் தீப்பாய்ந்து உயிர் கொடுத்த தீக்குழி இப்போது நீலிகுளம் என்ற பெயருடன் ஒரு குளமாக உள்ளது. அதன் கரையில் 70 பேரின் உருவங்களும் நீலியின் உருவமும் உள்ளன. 1080-ம் ஆண்டுரைத்தவையும் பார்க்க.

3438. தேனிலவு பொழிற்கச்சித் திருக்காமக் கோட்டத்தில்
ஊனில்வள ருயிர்க்கெல்லா மொழியாத கருணையினால்
ஆனதிரு வறம்புரக்கு மம்மைதிருக் கோயிலின்முன்
வானில்வளர் திருவாயில் வணங்கினார் வன்றொண்டர். உ௮௪

(இ - ள்) தேன்நிலவு...கோட்டத்தில் - தேன் வண்டுகள் நிறைந்த சோலை தன் சூழ்ந்த திருக்கச்சிக் காமக்கோட்டத்தில்; ஊனில்வளர்...திருக்கோயிலின் முன்-

ஊன்பொருந்த வந்து வளரும் எல்லா உயிர்களிடத்தும் கொண்ட நீங்காத கருணையினாலே ஆயின தருமங்களை எல்லாம் வளர்த்து அருளுகின்ற காமாட்சி யம்மையாரது திருக்கோயிலின் முன்பு ; வானில்...வன்தொண்டர் - ஆகாயத்தில் உயர்ந்த திருவாயிலின் முன் வன்றொண்டராகிய நம்பிகள் வணங்கினார்.

(வி - ரை) திருக்காமக் கோட்டம் - காமாட்சி அம்மையார் தவஞ் செய்து அறம் வளர்க்கும் வளைவுட்பட்ட இடம். "புண்ணி யத்திருக் காமக்கோட் டத்துப் பொலிய முப்பதோ டிரண்டறம் புரக்கும்" (1148).

ஊனில்...அறம்புரக்கும் அம்மை - காமாட்சியம்மையார் ; இவ்வரலாறு முன்னர்த் திருக்குறிப்புத் தொண்ட நாயனார் புராணத்துட் கூறப்பட்டது காண்க.

ஊனில் வளர் உயிர்க்கெல்லாம் - சிருட்டியில் வந்த பலபல திறப்பட்ட பக்குவமுடைய உயிர்களுக்கெல்லாம் அவ்வவற்றின் தன்மைக் கேற்ப.

அம்மை திருக்கோயிலின் முன் - வாயில் - வணங்கினார் - எல்லாவுயிர்களுக்கும் ஒப்பக் கருணைபுரிந்து அறம் வளர்க்கின்றாராதலின் அவரது திருவருளை முதலில் நாடி வணங்கி நம்பிகள் பெற்றனர் என்க. ஆளுடைய பிள்ளையாரும் இங்கு வணங்கியமை முன் உரைக்கப்பட்டது (2897); வாயில் - கண்ணொளி யிழந்த நிலையாதலின் வாயிலினின்றவாறே வணங்கினர் என்க.

ஊனில்வளர்...அறம்புரக்கும் அம்மை - எண்ணிறந்த உயிர்த்தொகுதியுள் சிருட்டிக்குள்ளாக எடுக்கப்படும் உயிர்களைப் புவனபோகங்களைத் தந்து வளர்த்தல் அம்மையின் கருணைத் தொழில் ; ஆயின் அப்பனது தொழில், காத்தலுடன் அழித்தலும் மீள ஆக்கலும் முதலிய ஐந்தொழில்களுமாம் என்று உலகம் முழுதும் அளித்தழித்தாக்கும் என் மேற்பாட்டிற் கூறும் கருத்தினை உன்னுக ; மேல் முதல்வர் என்ற கருத்தும் காண்க. ஆயின் அத்தொழில்களுள்ளும் அவ்வத் தொழிலுக்கேற்பச் சிவ சத்தியும் விளங்குவதாம் என்க. 284

3439. தொழுதுவிழுந் தெழுந்தருளாற் றுதித்துப்போய்த் தொல்லுலகம்
முழுதுமளித் தழித்தாக்கு முதல்வர்திரு வேகம்பம்
பழுதிலடி யார்முன்பு புகப்புக்குப் பணிகின்றார்
"இழுதையேன் றிருமுன்பே யென்மொழிவே" னென்றிறைஞ்சி,

3440. "விண்ணுளா ரமுதுண்ண மிக்கபெரு விடமுண்ட
கண்ணாளா! கச்சியே கம்பனே! கடையானேன்
எண்ணாத பிழைபொறுத்திங் கியான்காண வெழிற்பவள
வண்ணா!கண் ணளித்தருளா!" யெனவீழ்ந்து வணங்கினார். ௨அ௬

3439. (இ - ள்) தொழுது...போய் - தொழுது நிலமுற விழுந்து எழுந்து அருளினாலே துதிசெய்து மேற் சென்று ; தொல்லுலகம்...புகப்புக்கு - பழமையாகிய உலகங்களை எல்லாம் காத்தும் அழித்தும் மீளப்படைத்தும் ஐந்தொழில் செய்யும் முதல்வருடைய திருவேகம்பத்தினுள்ளே குற்றமில்லாத அடியார்கள் முன்னே புகத் தாம் அவர் பின்னே சென்று புகுந்து ; பணிகின்றார் - வணங்குகின்றவராகி ; இழுதையேன்...என்று இறைஞ்சி - பொய்யனாகிய நான் தேவரீரது திருமுன்பு நின்று என்ன சொல்வேன் ! என்று வணங்கி, ௨அ௫

3440. (இ - ள்) - விண்ணுளார்...கண்ணாளா ! - விண்ணுலகத்தை ஆளும் தேவர்கள் அமுதத்தை உண்ணும் பொருட்டு மிக்க பெரிய விடத்தினை உண்டருளிய

கண்ணுளரே !; கச்சி ஏகம்பனே !- திருக்கச்சித் திரு ஏகம்பத்தில் வீற்றிருக்கின்றவரே !; கடையானேன்...என - கடையவனுகிய நான் எண்ணுமைற் செய்த பிழையினைப் பொறுத்தருளி இங்கு அடியேன் காணும்படி அழகிய பவளம் போன்ற வண்ண முடையவரே கண் அளித்தருள வேண்டும் என்று வேண்டிக் கொண்டு; வீழ்ந்து வணங்கினார் - நிலம் பொருந்த விழுந்து வணங்கினார். ௨அகூ

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3439. (வி - ரை) தொழுது...போய் - இது திருக்காமக் கோட்டத்திற் செய்த வழிபாடு.

அருளால் துதித்து - இறைவரை வணங்குதற்கும் அவரருள் வேண்டும் என்பதாம்; "அவனருளாலே அவன்றாள் வணங்கி" (திருவாசகம்); இனி, ஏனைய பதிகளில் இறைவரை முன்னர் வணங்கிப் பின்னரே அவ்வழிபாட்டின் றொடர்ச்சியாக இறைவியை வழிபடுதல் வழக்கும் விதி மரபுமாய் நிகழ்ந்தன: மேலும் சிவபெருமானைப் பற்றியன்றி வேறொருவரையும் வணங்காத நியமமுடையவர்கள் எந்தம் பெருமக்களாகிய பரமாசாரியர்கள்; ஈண்டு நம்பிகள் அம்மையாரைத் தனியாக முன்னர் வணங்கினர்; அது அவருக்குக் கண் கொடுத்தற் கேதுவாகத் திருவருளால், நிகழ்ந்த தென்பதுமாம்; "ஊனில்வள ருயிர்க்கெல்லா மொழியாத கருணையினால் ஆனதிரு வறம்புரக்கு மம்மை" என்ற குறிப்புமிது "நீடு காமங்க ளவரவர்க் கருளி" (1153)என்று இறைவரையும், அதன்முன் "மனையறம் புரக்குங் கருணையினால், நண்ணு மன்னுயிர் யாவையும் பல்க" (1148) என்று அம்மையாரையும் கூறிய தன்மைகள் இங்கு நினைவு கூர்தற்பாலன. "மங்கை தழுவக் குழைந்தார் மறைந்த விடக்கண் கொடுத்தார்" (3341) என்று இக்குறிப்பினை மேல் வரும்பாட்டிற் காட்டுதலும் காண்க.

தொல்லுலகம்...முதல்வர் - அளித்தல் - காத்தல் அளித்தலை முதலில் வைத்த குறிப்பு அம்மையாரது கருணையிடமாக இருந்து ஈண்டியற்றும் தொழிற் சிறப்பு. திரு ஏகம்பம் - இறைவர் கோயில். காமாட்சி அம்மையார் எழுந்தருளிய திருக்காமக் கோட்டம் வேறாகத் தனிக் கோயிலாகவும், இறைவர் எழுந்தருளிய திருவேகம்பம் வேறு தனிக்கோயிலாகவும் உள்ளன; வரலாறுகள் முன்னர்த் திருக்குறிப்புத் தொண்டநாயனார் புராணத்துட் கூறப்பட்டன. இரண்டிற்கு மிடையே ½ நாழிகையளவு இடை உண்டு.

பழுதில் அடியார் முன்பு புகப் புக்கு - பழுதில் அடியார் என்றது இழுதையேன் என்று நம்பிகள் தம்மை உட்கொண்டு கூறியமையால் அவ்வாறு ஏதும் பழுதில்லாதவர்கள் என்று அவர்கொண்ட கருத்து; நம்பிகளை உடன் கொண்டு முன் செல்லும் பேறு பெற்றவர்கள் என்ற குறிப்புமாம். பழுதினை இல்லையாகச் செய்யும் என்றலுமாம்; முன்பு புகப்புக்கு - கண்காணுமையால் அடியார்கள் வழிகாட்டி முன்னே செல்லத் தாம் அவர்கள் பின் சென்று; அடியார்களைப் பின்பற்றிச் செல்லும் முறைப்படி என்ற குறிப்புமாம். திருத்தொண்டத்தொகை யருளியவராதலின் என்ற கருத்தும் காண்க. இக்கருத்தினையே தொடர்ந்து மேல், திருவாரூரிலும் "திருத் தொண்டர் விரவுவா ருடன்கூடி - இடை தெரிந்து...அணைந்தார்" (3458) என்பதும் கருதுக. சிவஞான போதம் 12ம் சூத்திரக் கருத்தும் காண்க.

பணிகின்றார் - இறைஞ்சி - என - வீழ்ந்து வணங்கினார் எனமேற் பாட்டுடன் கூட்டி முடிக்க.

பணிகின்றார் - முற்றெச்சம் - பணிகின்றாராகி.

இழுதையேன் - இழுதை - பொய்; அறியாமை என்றலுமாம்; இழுதை - பேய் என்று கொண்டு பேயனேன் என்றுரைப்பாரு முண்டு.

இழுதையேன்...என்மொழிவேன் - பொய்யனாதலின் தேவரீரது திருமுன்பு நின்று ஏதும் சொல்லத் தகுதியுள்ளனல்லேன், என்று காரணக் குறிப்புப் படக் கூறியபடி: "தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின், றன்னெஞ்சே தன்னைச் சுடும்" (குறள்). தாம்செய்த பொய்யினையும் தாம் வேண்டுவதனையும் உயிர்க்குயி ராக உள்ளிருந்தே இறைவர் அறிவாராதலின், எடுத்து அவரறிய மொழிவதற்கு ஒன்றுமில்லை என்ற குறிப்புமாம். பிழையுடன்பட்டு அறிவித்தவாறு; என் - வினா ஒன்றுமில்லை என எதிர்மறை குறித்தது.

இறைஞ்சுதல் - அஞ்சலி கூப்பி வணங்குதல். 285

3440. (வி - ரை) விண்ணாள்வார்...கண்ணுளா! - விண்ணாள்வார் என்றது மேலாகிய விண்ணுலகத்தினை ஆள்வோராயினும் விடத்தினை மாற்றலாகாது வருந் தினர் என்பது குறிப்பு. மிக்கபெரும் - பெரிய கொடுமை குறித்தது.

மிக்கபெரு விடமாயினும் என்று சிறப்பும்மை தொக்கது.

கண்ணுளா - அருமைப்பாடு குறித்தது. அருளோக்கம் செய்பவர் என்ற குறிப்பு; "ஆலந் தானுகந் தமுதுசெய் தானை" என்ற பதிகம் பார்க்க. விடமுண்டு அமு தித்தமை போலப் பிழைபொறுத் தேன்றுகொண்டு கண்ணளிப்பாய் என்பது குறிப்பு.

கச்சி ஏகம்பனே - என்பது அவர் வெளிப்பட்டருளும் இடமும், பவள வண்ணா என்பது அவரது வண்ணமும், விடமுண்ட என்பது அவரது தன்மையும் குறித்தன; "முன்ன மவனுடைய நாமங் கேட்டாள்" (தேவா) என்ற திருவாக் குக் கருதுக. பின்னர்த் திருவாரூரிலும் இவ்வாறே இம் மூன்று தன்மைகளாற் பாவியமை யும் (3462) காண்க.

கடையானேன் எண்ணாத பிழை - பிழை செய்யும் நோக்கத்துடன் எண்ணிச் செய்த பிழையன்று என்பது; "புந்தி நண்ணாத வினை" (சிவப் - 30); "உன் சீலமுங் குணமும் சிந்தியாதே" (நம்பி - ஒற்றி - தக்கேசி - 6) என்றது காண்க. எண்ணிச் செய்த பிழையாயின் பொறுத்தலரிது; கன்மபலன் அனுபவிக்கச் செய்தே கழித்தல் வேண்டும்; இஃது எண்ணாத பிழையாதலின் அனுபவித்த அளவின்றி, இனிமேலு மனுபவம் வேண்டாது பொறுத்தல் கூடுமென்பது குறிப்பு.

இங்கு - இவ்விடத்து; முன் திருமுல்லைவாயில், திருவெண்பாக்கம் முதலிய இடங்களிற் போலன்றி, இங்கே என்பது.

காணப் பவளவண்ணா கண் அளிப்பாய்-மற் றொன்றன்பொருட்டுமன்றி உனது அழகிய பவள வண்ணத்தைக் காணும் பொருட்டுக் கண் அளிப்பாய் என்றது பவள வண்ணா! என்றழைத்த விளியின் குறிப்பு; "எம்மானைக் காணக் கண் அடியேன் பெற்ற வாறே" என்ற பதிகம் காண்க. "கண்காள் காண்மின்களோ?" (தேவா).

பிழை பொறுத்தின்றியான்—என்பதும் பாடம். 286

3441. பங்கயச்செங் கைத்தளிராற் பனிமலர்கொண் டர்ச்சித்துச்
செங்கயற்கண் மலைவல்லி பணிந்தசே வடிநினைந்து
பொங்கியவன் பொடுபரவிப் போற்றியவா ரூரருக்கு
மங்கைதழு வக்குழைந்தார் மறைந்தவிடக் கண்கொடுத்தார். ௨௮௭

(இ - ள்) பங்கயச் செங்கைத் தளிரால்...நினைந்து - தாமரைமலர் போன்ற செங்கைத்தளிர்களாலே குளிர்ச்சியுடைய மலர்களைத் தூவி அருச்சனை புரிந்து செங்

கயல் மீன்போன்ற கண்களையுடைய மலைவல்லியாகிய உமையம்மையார் பணிந்த திருவடிகளை நினைந்து ; பொங்கிய...ஆரூரருக்கு - மேன்மேல் மிக்கு எழும் அன்பி னோடு முன் கூறியவாறு பாவித் துதித்த நம்பியாரூரருக்கு ; மங்கை...கொடுத்தார் - உமை மங்கை தழுவக்குழைந்த திருமேனியினையுடைய திருவேகம்பர் மறைந்த இடது கண்பார்வையினைக் கொடுத்தருளினார்.

(வி - ரை) பங்கயம்...பணிந்த சேவடி - அம்மையார் சிவபூசை செய்து பணிந்த திருவடிகள் ; வரலாறு திருக்குறிப்புத் தொண்ட நாயனார் புராணத்துள் உரைக்கப் பட்டது.

பங்கயம் என்றது நிறமும் வடிவும், தளிர் - என்றது மென்மையுங் குறித்தன.

மலைவல்லி பணிந்த - மலையரசன் மகளாராகிய நிலையில் பணிந்த என்றது குறிப்பு ; பணிந்தமை - உலகுயிர்கள் கண்டு அவ்வாறு தாமும் ஒழுகி உய்யும் பொருட்டாம் ; தாம் ஈன்ற உயிர்களை நல்வழி காட்டி உய்விக்கும் கருணை என்பது.

அன்போடு பரவிப் போற்றிய - முன் பாட்டிற் கூறியபடி துதித்து ; பரவுதல்- குணங்களை எடுத்துக் கூறுதல் ; பரவிப் போற்றுதலாவது பரவும் வகையினால் துதித் தல் ; இப்பதிகம் கிடைத்திலது !

மங்கை தழுவக் குழைந்தார் மறைந்த இடக்கண் கொடுத்தார் - குழைந்தா ராதலின் எனக் காரணக் குறிப்புப்படக் கூறியபடி ; இடப்பாகம் அம்மை கூறாகலின் அம்மையாரை முன் வணங்கி அருள்பெற்ற நிலையால் இடக்கண் கொடுத்தார் போலும் ; "கண் அளித்து முலைச் சுவட்டுக் கோலந்தான் காட்டுதலும்" (3442) என்பது காண்க. "உமை நங்கை ஏத்திவழிபடப் பெற்ற" என்ற பதிகமும் பார்க்க. ஏனை வலக்கண் திருவாரூரிற் கொடுத்தருள நின்றமையும் காண்க.

குறிப்பு :—கண் மறைந்த இடம் திருவொற்றியூரும் ; இடக்கண் பெற்றது கச்சி ஏகம்பமும் ; வலக்கண் பெற நின்றது திருவாரூருமாம். இவை மூன்றும் பிருதிவித் தலங்களாவன. ஒடுங்கி(மலத்து)உளதாம் என்றபடி யாது யாண்டு ஒடுங்கியது, அஃது ஆண்டுநின்றே மீள உளதாம் என்பது உண்மை ; "முழுதும் அளித்து, அழித்து ஆக்கு முதல்வர்"(3430) என்ற குறிப்பும் காண்க. அன்றியும் மண் என்ற முதற்பூதத் தின் தன்மையே சிருட்டியாகிய தோற்றத்திற் குரியதாம் நிலையினையும் கருதுக. 287

3442. ஞாலந்தா னிடந்தவனு நளிர்விசும்பு கடந்தவனு
மூலந்தா னறிவரியார் கண்ணளித்து முலைச்சுவட்டுக்
கோலந்தான் காட்டுதலுங் குறுகிவிழுந் தெழுந்துகளித்
" தாலந்தா னுகந்தவ"னென் றெடுத்தாடிப் பாடினார். ௨அஅ

(இ - ள்) ஞாலந்தான்...அறிவரியார் - நிலத்தைக் கீண்டு தேடிய திருமாலும் குளிர்ந்த ஆகாயத்தைக் கடந்த பிரமதேவனும் முறையே அடிமுடிகளின் முடிபினை அறிதற்கரிய இறைவர் ; கண் அளித்து...காட்டுதலும் - அம்மை தழுவ முலைச்சுவ டணிந்த தமது கோலத்தை ஒரு கண் கொடுத்துக் காணும்படிக் காட்டுதலும் ;குறுகி... பாடினார் - அணுகி நிலமுற விழுந்து எழுந்து மகிழ்ந்து "ஆலந்தானுகந்தவன்" என்று தொடங்கித் திருப்பதிகம் பாடி ஆனந்தக் கூத்தாடினார்.

(வி - ரை) ஞாலந்தானிடந்தவன் - விசும்பு கடந்தவன்-இடந்ததனாலும் கடந்த தனாலும் அறிவரியார் என்பார் அவ்வச் செயல்களை அவ்வவரோடும் உடம்பொடு புணர்த்தி ஓதினார் ; முறையே அடிமுடிகளின் என்பது குறிப்பெச்சம்.

மூலச்சுவட்டுக் கோலம் - மூலச்சுவடணிந்தருளிய தமது திருக்கோலத்தை; "மாது மெய்ப்பயன் கொடுப்பவே கொண்டு வளைத்த மும்புடன் மூலச்சுவ டணிந்தார்" (1143) என்றவிடத் துரைத்த இவ் வரலாறு காண்க. இதனையே மேலும் (3444) கூறி முடித்தல் காண்க.

கண்ணளித்துக் - கோலம் - காட்டுதலும் - "காட்டுவித்தா லாரொருவர் காணாதாரே" (தேவா); புறக் கண்ணின்றியும் அகக்கண் கொண்டு சிவயோக நிலையிற் கண்டுகொண்டிருந்த நம்பிகளுக்குப் புறக்கண்ணுங் கொடுத்து அதனாலும் காணும்படி காட்டியருளினார் என்பதாம்; "காணக் கண்ணடியேன் பெற்ற வாறே" என்ற பதிகக்கருத்துக் காண்க; முதலில் அம்மையாரை வணங்கி யருள்பெற்றுப் (3439) போந்தமையால் அம்மையாரது மூலபின் சுவடணிந்த கோலமே காட்டினார் என்பதும் குறிப்பு. "மங்கை தழுவக் குழைந்தார்...கண் - கொடுத்தார்" (3341) என்ற குறிப்பும் காண்க. "தட மார்பு நீங்காத் தைய லாளுல குய்ய வைத்த, காரிரும் பொழிற் கச்சி மூதூர்க் காமக் கோட்ட முண்டாக" (ஓணகாந்தன்றளி - 6) என்று போற்றிய பெருமை காண்க. 288

திருக்கச்சியேகம்பம்

திருச்சிற்றம்பலம் பண் - தக்கேசி

ஆலந் தானுகந் தமுதுசெய் தானை யாதி யையம ரர்தொழு தேத்துஞ்
சீலந் தான்பெரி தும்முடை யானைச் சிந்திப் பாரவர் சிந்தையு ளானை
ஏல வார்குழ லாளுமை நங்கை யென்று மேத்தி வழிபடப் பெற்ற
கால காலனைக் கம்பனெம் மானைக் காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே. (1)

எள்க வின்றி யிமையவர் கோனை யீச னைவழி பாடுசெய் வாள்போல்
உள்ளத் துள்கி யுகந்துமை நங்கை வழிபடச் சென்று நின்றவா கண்டு
வெள்ளங் காட்டி வெருட்டிட வஞ்சி வெருவி யோடித் தழுவவெளிப் பட்ட
கள்ளக் கம்பனை யெங்கள் பிரானைக் காணக்கண்ணடியேன் பெற்ற வாறே(10)

பெற்ற மேறுகந் தேறவல் லானைப் பெரிய வெம்பெரு மானென்றெப் போதுங்
கற்ற வர்பர வப்படு வானைக் "காணக் கண்ணடி யேன்பெற்ற" தென்று
கொற்ற வன்கம்பன் கூத்தனெம் மானைக் குளிர்பொ ழிற்றிரு நாவலா ரூரன்
நற்ற மிழிவை யீரைந்தும் வல்லார் நன்னெ றியுல கெய்துவர் தாமே. (11)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—நம்பிகளுக்கு இடதுகண் கொடுத்துத் திருவேகம்பர் தமது கோலத்தைக் காணக் காட்டுதலும் களித்துக் கண்டு "காணக் கண் அடியேன் பெற்ற வாறே" என்று மகிழ்ந்து பாடியது. பதிக மகுடமும், 11வது பாட்டும் பார்க்க.

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) ஆலந்தான் - ஆலம் - விடம்; தான் - தன்னையும்; சிறப்பும்மை தொக்கது; சீலம் - இயல்பு - நற்குணம் - சரித்திரம் - அன்பர்கட்கெளியராந் தன்மை; ஏலவார் குழலாள் உமைநங்கை என்றும் ஏத்தி வழிபடப்பெற்ற - அம்மையார் வழிபட்டு வரம் பெற்ற வரலாறு; திருக்குறிப்புத் தொண்டநாயனார் புராணம் பார்க்க; தலவிசேடமாகிய சிறப்பாதலானும், உயிர்களெல்லாம் இன்பம் பெறும் பொருட்டு அம்மை அறம் வளர்க்கும் தலமாதலானும் அம்மையா ரருள் வழியே கண் பெற்றமையானும் பதிகப் பாட்டுத்தோறும் இதனைப் போற்றுதல் காண்க; என்றும் ஏத்தி வழிபடப் பெற்ற - "மாறிலாத இப்பூசனை யென்றும் மன்ன" (1146);—(2) உற்றவர்க்குதவும் - அல்லலுற்று வழிபடவர்

தற்று வேண்டியவர் ; சரிதக் குறிப்பு; : " பற்றினூர்க்கென்றும் பற்றவன் - பாவிப் பார் மனம்பாவிக் கொண்டானை " என்பதும் குறிக்கொள்க ; மகிழ்ச்சியாற் பலதிற மும் பாவியநிலை ; மேலும் " அல்லறீர்த்தருள் செய்யவல்லானை " (5) " நண்ணி னூர்க்கென்று நல்லவன்றன்னை " (7) பந்தித்த வினைப்பற்றறுப்பானை (8) என்பன வும் காண்க ;—(3) மால்விடை - திரிபுர மெரித்தபோது விட்டுணு விடையாகி இறை வரைத் தாங்கினர் என்பது வரலாறு ; " தடமதில்க ளவைமூன்றுந் தழலெரித்த வந்நாளில், இடபமதாய்த் தாங்கினான் திருமால்காண் சாழலோ" (திருவா); கனலா - கனலால் எரிய ; பெரியகம்பர் - அம்மையார் பூசித்த திருவேகம்ப நாதர் ; மேலும் நல்லகம்பன், கள்ளக்கம்பன், வெள்ளக்கம்பன் என்ற மூன்று மூர்த்திகளும் உண்டு. பிரமனாற் பூசிக்கப்பட்டவர் வெள்ளக்கம்பர் ; " மலர்ப்பொருட்டனை மேலவன் வழிபடும் வெள்ளக் கம்பனை " (காஞ்சிப்புரா ; திருவேகம்பப் படலம் - 86); விட்டு ணுவாற் பூசிக்கப்பட்டவர் கள்ளக்கம்பர்; "மருள்புரி கருத்தினன் மாய னேத்தலிற், கருதுமப் பெயரிய கள்ளக்கம்பனை " (ஷை 87); உருத்திரனாற் பூசிக்கப்பட்டவர் நல்லகம்பர். " உருத்திர னலத்தகு மொருமை பூண்டுயர், கருத்தொடும் வழிபடு நல்லகம்பனை " (88); இம்மூவரொடும் திருவேகம்பரும் கூடி ஒருவரே நால்வகை உருவத்துடன் இங்குத் தனித்தனி வீற்றிருந்தருள்கின்றனர். " கருதரு நல்லனே கள்ளன் வெள்ளனோர், தருதிருவேகம்ப னென்று தன்னொடு, மருமலர்க் கவிழிணர் மாவி னீழல்வா, மொருவனே நால்வகை யுருவ மேவினன் " (ஷை 89). மேல் " நல்ல கம்பனை" (5), "கள்ளக்கம்பனை" (10) என்று அருளுதல் இவ்வொற்றுமை கருதிய தென்க ;—(4) குண்டலம் - மகரக்குழை யெனும் காதணி ; வண்டு அலம்பு - அலம்புதல் - சத்தித்தல் ;—(5) அங்கம் - ஆறு அங்கங்கள் ;—(6) கடல் வளரும் சங்கம் - சங்குகள் உண்டாகும் பல விடங்களுள் கடலில் விளைவன சிறப்புடையன என்பது ; கங்கையாளன் - கங்கையைத் தரித்தவன் ; கம் - பிரம கபாலம் ; அதனைக் கையிலேந்தியவன் என்றலுமாம் ;—(7) நாம் - அடியவர்களுள்ளிட்ட நாம் ;—(8) சிந்தித்து...திகழ்வானை - கண்பெறும் முன் நம்பிகள் நினைந்து கண்ட நிலைக்குறிப்பு; கந்தவார் சடை-சடைக்குக் கந்தமாவது அதிற்கூடிய கொன்றை கூவிளம் முதலியவற்றா லாவது ; கந்தம் - மணம் ;—(9) வரங்கள் பெற்று உழல் - வரங்கள் பெற்றும் நல்வழிச் சேராது உழன்ற ; பெற்றும் என்க - சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது ; நிரந்தரம் - அழிவு இல்லையாக ; நீர்க்கண்டகன் - கடிய தண்டம் விதித்தவன். கரங்கள் எட்டு-"எண்டோள் வீசிநின் றாடும் பிரான்றனை";— (10) வழிபாடு செய்வாள் போல் - நித்தியமாய் நிகழும் அருட் பூசனையிருக்க, அற் றைக்கு ஒரு நிமித்தம் பற்றி வழிபடுவாள் போல என்க ; நின்றவாகண்டு...வெளிப் பட்ட - பூசித்துத் தழுவிய வரலாறு ;—(11) காண...என்று - பதிகக்குறிப்பு.

தலவிசேடம் :—கச்சித் திருவேகம்பம் - II - பக். கூ௫௭ பார்க்க.

3443. பாடிமிகப் பரவசமாய்ப் பணிவார்க்குப் பாவையுடன்
நீடியகோ லங்காட்ட நிறைந்தவிருப் புடனிறைஞ்சிச்
சூடியவஞ் சலியினராய்த் தொழுதுபுறம் போந்தன்பு
கூடியமெய்த் தொண்டருடன் கும்பிட்டங் கினிதமர்வார். ௨௮௯

3444. மாமலையாண் முலைச்சுவடும் வளைத்தழும்பு மணிந்தமதிப்
பூமலிவார் சடையாரைப் போற்றியரு ளதுவாகத்
தேமலர்வார் பொழிற்காஞ்சித் திருநகராங் கடந்தகல்வார்
பாமலர்மா லைப்பதிகந் திருவாரூர் மேற்பாவி, ௨௯௦

3445. "அந்தியுநண் பகலு"மென வெடுத்தார்வத் துடனசைவால்
"எந்தைபிரான் றிருவாரூ ரென்றுகொலெய் துவ"தென்று
சந்தவிசை பாடிப்போய்த் தாங்கரிய வாதரவு
வந்தணைய வன்பருடன் மகிழ்ந்துவழிக் கொள்கின்றார். உசுக

3446. மன்னுதிருப் பதிகடொறும் வன்னியொடு கூவிளமுஞ்
சென்னியிசை வைத்துவந்தார் கோயிலின்முன் சென்றிறைஞ்சிப்
பன்னுதமிழ்த் தொடைசாத்திப் பரவியே போந்தணைந்தார்
அன்னமலி வயற்றடங்கள் சூழ்ந்ததிரு வாமாத்தூர். உசுஉ

3443. (இ - ள்) பாடி...பணிவார்க்கு - முன் கூறியவாறு மிகக் களித்து மிகவும் பரவசப்பட்டுப் பணிவாராகிய நம்பிகளுக்கு; பாவையுடன்...காட்ட - அம்மையாருடன் கூடிய பழைமையாக நீண்ட திருக்கோலத்தை இறைவர் காட்டக் கண்டு; நிறைந்த...புறம்போந்து - நிறைந்த விருப்பத்துடனே வணங்கிச் சிரமேற் கூடிய அஞ்சலி செய்தாராகித் தொழுது திருக்கோயிலின் புறம்பேபோய்; அன்பு... இனிதமர்வார் - அன்பினுற் கூடிய மெய்யடியார்களுடனே கூடிக் கும்பிட்டுக் கொண்டு அப்பதியில் இனிதாக விரும்பி வீற்றிருப்பாராகிய நம்பிகள், உஅகூ

3444. (இ - ள்) மாமலையாள்...போற்றி - பெரிய மலைவல்லியாராகிய காமாட்சி யம்மையாரது முலைச்சுவடையும் வளைகளின் தழும்பையும் தாங்கிய மதியும் கொன்றைபூக்களும் மலிந்த நீண்ட சடையாரைத் துதித்து; அருள் அதுவாக - அங்கு இறைவர் செய்யும் திருவருள் அவ்வளவேயாகியிட; தேமலர்...கடந்து-தேன் பொருந்திய மலர்களையுடைய நீண்ட சோலைகள் சூழ்ந்த காஞ்சித் திருநகரத்தினைக் கடந்து; பாமலர்...பரவி - பாட்டுக்களின் தன்மைகள் விரிந்து கிடக்கும் மாலையாகிய திருப்பதிகத்தினைத் திருவாரூரின் மேற் பாடித் துதித்து; அகல்வார் - அங்கு நின்றும் மேற் செல்வாராகி, உசுO

3445. (இ - ள்) அந்தியும்...ஆர்வத்துடனசைவால் - அந்தியும் நண்பகலும் என்று தொடங்கி விருப்பத்தோடும்; எந்தைபிரான்...என்று - எமது பெருமானுடைய திருவாரூரினை என்றைக்குச் சென்று சேர்வேன் என்ற குறிப்புடனே; சந்த...போய் - சந்த நிறைந்த இசை பொருந்தப் பாடிச் சென்று; தாங்கரிய...வழிக்கொள்கின்றார் - தாங்குதற்கரிய பெருவிருப்பமாகிய பேரன்பு வந்து சேர்ந்தபடியால் அன்பர்களோடு மகிழ்ச்சியோடும் வழிச் செல்வாராகி, உசுக

3446. (இ - ள்) மன்னு...இறைஞ்சி - வழியிடையில் பொருந்திய திருப்பதிகள் தோறும் வன்னியொடு வில்வத்தினையும் தலையின்மேற் சூடி மகிழ்ந்தாராகிய இறைவரது திருக்கோயில்களின்முன் சென்று வணங்கி; பன்னு தமிழ்...போந்து - பன்னிய தமிழ் மாலைகளைச் சாத்தித் துதித்துச் சென்று; அன்னமலி...திருஆமாத்தூர் - அன்னங்கள் மலிந்த வயல்களும் தடாகங்களும் சூழ்ந்த திரு ஆமாத்தூரினை; அணைந்தார் - சேர்ந்தருளினர். உசுஉ

இந்நான்கு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3443. (வி - ரை) பணிவார் - நம்பிகள்; வினைப் பெயர்.

பாவையுடன் நீடிய கோலம் - அம்மையப்பராய் உள்ள நித்தியமாகிய கோலம்; "தொன்மைக் கோலமே நோக்கி" (திருவா - கோத்). முன்பாட்டிற் கண்கொடுத்

துக் காணக் காட்டியது மூலச்சுவட்டுக் கோலம்; அஃது ஒரு நிலையாகிய சிறப்புக் கோலம் ; இஃது என்றும் எங்கு முள்ள பொதுக் கோலம் ; " அம்மையப்ப ரே யுலகுக் கம்மையப்ப ரென்றறிக, வம்மையப்ப ரப்பரிசே வந்தளிப்பர் " (களிறு - 1).

அன்பு கூடிய - அன்பு பெருகிய ; அன்பினால் வந்து கூடிய ; அன்பினாற் பிணைக்கப்பட்ட என்ற குறிப்புமாம்.

மெய்த் தொண்டருடன் கும்பிட்டு - ; " அன்பரொடு மரீஇ " (போதம் - 12); இறை வழிபாட்டில் அன்பரொடு கூடியிருத்தல் பெரும் பயனும் சிறப்பும் தருவது.

அமர்வார் - நம்பிகள் ; வினைப்பெயர் ; அமர்வார் - போற்றிப் - பரவி - அகல்வார் (ஆகி) - (3444) - எடுத்து - என்று பாடிப் - போய் - வழிக்கொள்கின்றார் - (3445) - சென்றிறைஞ்சிப் போந்து - அணைந்தார் (3446) என மேல் வரும் பாட்டுக்களுடன் கூட்டி முடித்துக் கொள்க. 289

3444. (வி - ரை) மாமலையாள்...சடையாரைப் போற்றி - திரு ஏகம்பரைத் துதித்து ; இப்பதிகங்கள் கிடைத்தில !

அருள் அதுவாக - இறைவர் அங்குச் செய்த அருள் அதுவே - அம்மட்டே - அமைய ; அது - அதுவே ; பிரிநிலை ஏகாரம் தொக்கது ; அது - இடக் கண் கொடுத்த அந்நிலை என்று முன்னறிசுட்டு ; " அருளதுவாக " (3431) என்றதும், ஆண்டுரைத்தவையும் பார்க்க ; " அருள் இத்தனைகொலாம் " (3435) என்றதும் காண்க.

திருவாரூர் - மேற்பதிகம் - பரவி அகல்வார் என்க. பரவி - பரவிக் கொண்டவாறே ; அகல்வார் - பரவி - என்று வினையெச்சத்தினைப் பின்வைத்தார் அகல்வதாகிய செயலின் முன்னரே நினைதலும் பரவுதலுமாகிய செயல்கள் நிகழ்கின்ற விரைவினைப் புலப்படுத்தற்கு.

பாமலர் மாலைப்பதிகம் - மேல் வரும் பாட்டிற் கூறப்படும் பதிகம். " சொன் மலர்கொண் டிட்டன " (10) என்ற பதிகத்திற் கேற்பப் பாமலர்மாலை என்றார். 290

3445. (வி - ரை) " அந்தியு நண்பகலும் " என எடுத்து - இது பதிகத் தொடக்கமாகிய முதற் குறிப்பு.

" எந்தை பிரான் திருவாரூர் என்று கொலெய்துவது " என்று - இது பதிகக் கருத்தும் உட்குறிப்புமாம். " தென்திருவாரூர் புக்கு எந்தை பிரானாரை என்று கொலெய்துவதே " என்று வரும் பதிக மகுடம் காண்க ; எந்தை பிரானாரை - என்னுயிர்க்கின்னமுதை - இடுபலி கொள்ளியை - ஏழுலகாளியை - என் மணியை - எம்மிறையை - என்று பதிகத்துட் பலவாற்றாலும் பன்னி ஆரூரில் இறைவரை எய்துவதென்று கொல் ? என்றருளியிருப்பினும் பிரானது திருவாரூரினை எய்துவதென்பதே கருத்தாகக் காண்க என்று ஆசிரியர் காட்டியவாறு. என்னை ? " தென்திருவாரூர் புக்கு " என்றும், " எல்லை மிதித்து " என்றும், "என்றன் மனங்குளிர", "எண்ணிய கண்குளிர " என்றும் வருவனவற்றாலும், இடப்பெயர்ச்சியால் ஆரூர் என்ற ஊரினை நீங்கி நின்ற அளவே யன்றி, ஆரூர்ப் பிரானாரை ஒரு போதும் மறந்து நீங்கின ரல்லராகலானும்; [மிக நினைந்து (3427) - ஒரு நாள் மிக நினைந்த சிந்தையராய் (3903) - ஆரூரானை மறக்கலுமாமே " (பதிகம்).] தென் திருவாரூர் என்னும் ஊரினைச் சென்று எய்துவ தென்றுகொல் என்பதே பதிகக் கருத்தாம். இதுபற்றியே " பதிகம் திருவாரூர் மேற் பரவி " (3444) என்றும், " திருவாரூர் என்று தொல் எய்துவது என்று " என்றும் அருளினார். நம்பிகளது இத்திருவுள்ளக் கருத்து

"சடையான் மேவிய ஆரூரைப்...பன்னெடுஞ் சொன் மலர்கொண் டிட்டன பத்து" (10) என்ற திருக்கடைக் காப்பினில் விளங்குதலும் காண்க.

சந்த இசை பாடி - இசை - பண்; இசை அமைந்த பதிகம்; இசை- இப்பதிகப் பண்ணாகிய புறநீர்மை; இப்பண்ணுக் குரிய நேரம் விடியற் காலமாம்; எனவே நம்பிகள் காஞ்சிபுரத்தினின்றும் திருவாரூரை நோக்கி வைகறை யாமத்தில் புறப் பட்டு வழிக்கொண்டருளினர் என்பது கருதப்படும்; தமது எஞ்சிய இன்னலாகிய இருள் நீங்கும் காலம் என்ற குறிப்பும் தருவது. 1333-ம் பாட்டும் கருதுக.

தாங்கரிய ஆதரவு - உள்ளடக்கிப் பொறுத்தற்கரிய பேரன்பு - ஆசை.

அன்பருடன் - "தொண்டருடன்" (3443) என்றது காண்க.

வழிக் கோள்ளுதல் - பயணப்பட்டு மேற் செல்லுதல். 291

## திருவாரூர்

திருச்சிற்றம்பலம் பண் - புறநீர்மை

அந்தியு நண்பகலு மஞ்சு பதஞ்சொல்லி
முந்தியெ ழும்பழைய வல்வினை மூடாமுன்
சிந்தை பராமரியாத் தென்றிரு வாரூர்புக்
கெந்தை பிரானாரை யென்றுகொ லெய்துவதே. (1)

நின்ற வினைக்கொடுமை நீங்க விருபொழுதுந்
துன்று மலரிட்டுச் சூழும் வலஞ்செய்து
தென்றன் மணங்கமழுந் தென்றிரு வாரூர்புக்
கென்றன் மனங்குளிர வென்றுகொ லெய்துவதே. (2)

முன்னை முதற்பிறவி மூதறி யாமையினாற்
பின்னை நினைந்தனவும் பேதுற வும்மொழியச்
செந்நெல் வயற்கழனித் தென்றிரு வாரூர்புக்
கென்னுயிர்க் கின்னமுதை யென்றுகொ லெய்துவதே. (3)

மின்னெடுஞ் செஞ்சடையான் மேவிய வாரூரை
நன்னெடுங் காதன்மையா லூரன் சோனூரன்
பன்னெடுஞ் சொன்மலர்கொண் டிட்டன பத்தும்வல்லார்
பொன்னுடை விண்ணுலக நண்ணுவர் புண்ணியரே. (10)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :— "எந்தைபிரான் திருவாரூர் என்றுகொ லெய்துவது?" என்பதாம்; ஆசிரியர் (3445) காட்டியருளியவாறு; பதிகத் திருக்கடைக் காப்பும் பார்க்க; "மேவிய ஆரூரை - சொன்மலர் கொண்டிட்டன."

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) அந்தி - காலை - மாலை நேரங்கள்; இரவும் பகலும் சந்திக்கும் நேரங்களாதலால் இவை சந்தி எனவும் படும்; நண்பகல் - நடுப் பகல்; இதுவும் சந்தி எனப்படும்; "முட்டாத முச்சந்தி" "சந்தி மூன்றிலும் தாபர நிறுத்திச் சகளி செய்திறைஞ் சகத்தியர்" என்பன காண்க; அஞ்சுபதம் - திரு வைந்தெழுத்து; இதனுள் ஒவ்வோர் எழுத்தும் ஒவ்வோர் பதமாகப் பொருள் தருத லாற் பதம் என்றார்; "பதமஞ்சும்" (தேவா.); அந்தியும்...சோல்லி - சந்தி செய்து; "அந்தியுண் மந்திரம் அஞ்செழுத்துமே" (தேவா); முந்தி...மூடாமுன் - பழைய வினைப்பயத்தால் சிந்தை மறந்து இறப்பு வருதற்கு முன்; பழயவல்வினை -

சஞ்சிதம்; **பராமரியா** - ஆலோசித்து ; ஆராய்ந்து; **தென்றிருவாரூர்** - ஆரூரில் இறைவாது பூங்கோயில் இருக்கும் பகுதி தென்திருவாரூர் எனப்படும் ; “ செல்வ மல்கிய தென்திரு வாரூரான் ” “ செடிக ணீக்கிய தென்திரு வாரூரான் ” “ தேசமல்கிய தென்திரு வாரூரான்” எனவரும் பிள்ளையார் தேவாரங்களும், “ தேங்கமழ் சோலைத் தென்னூரூர்த் திருமூலட்டானன் ” என்ற அரசுகள் திருவாக்கும் காண்க ; **கோல்** - அசை ;— (2) **நின்றவினைக் கொடுமை நீங்க** - நம்பிகளது சரிதக் குறிப்பு ; **நின்ற** - எஞ்சி நின்ற ; **இருபோழுது** - காலை மாலைகள் ; “ காலையிலு மாலையிலுங் கடவுளடி பணிந்து ” (கலயநல்லூர், **தேன்றல்** - 3424 ;—(3) **முன்னை முதற்பிறவி** - இப்பிறவிக்குக் காரணமாய் அடுத்து முன்னின்ற பிறவி நிலை ; **முன்னை...ஒழிய** - நம்பிகளது சரிதக் குறிப்பு. **முதறியாமை** - முதுமை - தொன்மை ; அறிவில்லாமை ; **பேதுறவு** - மயக்கம் ; **பின்னை நினைந்தன** - கழிவிரக்கம் ;—(4) **கோல்ல நினைப்பனவும் குற்றமுமற்று** - கொல்ல நினைத்தல்தானும் ஐம்பெரும் பாதகங்களுள் ஒன்று ; ஏனைக் குற்ற மெனப் படுவன எல்லாம் ஒரு புறமும், கொலை நினைவு ஒன்று மற்றொரு புறமுமாக ஒப்புடையன என்பது ;—(5) **கடுவரிமா** - கொடிய நீண்ட மாமரம் ; **மா** - மாமரத்தினை ; **மாக்கடலுட் காய்ந்தவன்** - மாமரத்தைக் கடலினுள் துண்டப் படுத்தி வீழ்த்தியவன் ; முருகன் ; **வன்தலைவாய் அடு புலி** - தன்மை நவிற்சி அணி ; **அரி** - மாவயிரம் ; சிங்கம் என்று கொண்டு, சிங்கனையும், மாவாய் நின்ற சூரனையும் என்றலும் ஒன்று. **கடுமை** - உரம் - வேகம் ; **வரி** - பொரியுமாம். **சுடுபோடி** - ஊழியிற் சங்காரத்தில் வெந்த சாம்பல் ; “ வெந்த சாம்பல் விரை ” (தேவா) ; **கோள்ளி** - கொள்பவன் ; பெயர் ;—(6) **சூழ் ஒளி... கதிரோன்** - அட்ட மூர்த்தம் ; **உலகாளி** - உலகாள்பவர் ; **ஏழ் இசை** -**ஏழ்நரம்பின் ஓசை** - எழு இசைகளும் முறையே எழும் தானங்கள் ; **உலகாளி**-உலகை ஆள்பவர்; **ஆளி** - பெயர் ;—(7) **வம்பனை** - வம்பு - மணம் ; புதுமையுமாம். **வைப்பனை** - தம்முள் ஒடுங்குதற்கிடமானவரை ; **ஒப்பு அமரா** - ஒப்பில்லாத ;—(8) **பாறு** - பருந்து ; **பாறணி வேண்டலை** - கழுகுகள் வாழும் காட்டில் கிடக்கும் வெண்தலை ; கபாலம் ; மண்டையோடு ; **ஏறு** - இடபக்கொடி ;—(9) **எண்ணிய கண்தளிர** - காண எண்ணியவாறு கண்ணுற ;—(10) **ஆருரைச் - சோன்மலர் கோண்டிட்ட** - ஆரூரைப் பாடிய. “ ஆரூரைப் பத்தி மலர்தூவ ” (பிள்).

3446. (வி - ரை) **மன்னு திருப்பதிகள் தோறும்** - காஞ்சிபுரத்தினின்றும் திருவாரூர் போகும் வழியில் பொருந்திய பதிகளில் எல்லாம்; இவை திருவில்வலம், திருக்குரங்கணின் முட்டம், புரிசை நாட்டுப் புரிசை, திருவெண்குன்றம், திண்டீச்சரம், திருப்புறவார் பனங்காட்டூர் முதலாயின என்பது கருதப்படும். இவை காஞ்சிபுரத்தினின்றும் நேர் தெற்குநோக்கிச் செல்லும் சாலைவழியில் உள்ளன ; பெரும்பாலும் மட்சாலை வழியேயாம் ; இவைகட்கு நம்பிகள் பதிகம் கிடைத்தில !; இவை பெரும்பான்மை வைப்புத்தலங்கள். தேவாரப் பாடல் பெற்ற பதிகளும் சில ; நம்பிகள் பதிகங்களிலும் வைப்பாயுள்ளனவும் சில.

**பன்னுதமிழ்த் தோடை சாத்தி** - பதிகங்கள் பாடி ; இவை சிதலரித் தொழிந்தன போலும்!.

292

3447. அங்கணரை யாமாத்தூ ரழகர்தமை யடிவணங்கித்
தங்குமிசைத் திருப்பதிகம் பாடிப்போய்த் தாரணிக்கு
மங்கலமாம் பெருந்தொண்டை வளநாடு கடந்தணைந்தார்
செங்கண்வள வன்பிறந்த சீர்நாடு நீர்நாடு.

(இ - ள்) அங்கணரை...வணங்கி - அங்கண்மையுடையவரைத் திருஆமாத்தூரில் எழுந்தருளிய அழகராகிய இறைவரைத் திருவடியில் வணங்கி; தங்கும்... போய் - தங்கும் இசையினையுடைய திருப்பதிகத்தினைப் பாடி மேற் சென்று; தாரணிக்கு...கடந்து - உலகுக் கெல்லாம் மங்கலமாக விளங்கும் பெருமையுடைய தொண்டை வள நாட்டினைக் கடந்து மேற்சென்று; செங்கண்...நீர்நாடு - கோச் செங்கட் சோழநாயனார் திருவவதரித்த, சிறப்புக்கள் நாடிவந்தடைகின்ற நீர்நாடு என்னும் சோழ நாட்டினை; அணைந்தார் - சென்றணைந்தருளினர்.

(வி - ரை) அங்கணரை - பசுக்களுக்குத் தாயகமாய் விளங்குதல் குறிப்பு; ஆமாத்தூர் அழகர் - அழகர் - இத்தலத்துச் சுவாமிபெயர்; "அழகியரே யாமாத்தூரைய னாரே" (தாண்). தலச் சுவாமி பெயரும் அம்மைபெயருங் காண்க.

தங்கும் இசை - தங்குதல் - நிலை பெறுதல்; தங்கலோசையினை உடைய இசை என்ற குறிப்புமாம்; இங்குத் தங்கலோசையாவது பாட்டின் ஒவ்வோரடியிலும் முதற் சீர்கள் சொற்பொருட் பின்வருநிலையாய் இருமுறை அடுக்கி வருதலின் விரைந்து தொடர்ந்து பாட இயலாது ஓசை தங்கிச் செல்லுதல்; "காண்டனன் காண்டனன்" "பாடுவன் பாடுவன்"; "தேடுவன் றேடுவன்" என்பவை போல் எல்லாப் பாடல்களிலும் வருவனவும், அடிதோறும் இறுதிச் சீரில் ஓசை தங்குதலும் காண்க. இசை - பதிகப் பண்ணாகிய பண் - கொல்லிக் கௌவாணம் என்ற குறிப்புமாம்; சிவயோக நிலையில் இறைவர் திருவடிக் கூட்டத்திற் பிரியாது தங்கிய என்ற குறிப்பும் காண்க.

தாரணிக்கு மங்கலமாம் பெருந் தொண்டை வளநாடு - நிலமடந்தைக்கு மங்கலந் தரும் வளநாடு - தொண்டை நாடு என்பது; மங்கலமாவது ஒரு நாட்டினுக்கு இன்றியமையாது வேண்டப்படும் சீரும் சிறப்பும் தரும் இயல்பு; நாடுமுழுதும் சிவமயமாய் விளங்கும் சிறப்புப் பற்றித் திருக்குறிப்புத் தொண்ட நாயனார் புராணத்துள் உரைத்தவை பார்க்க; அம்மையார் தவஞ்செய்து வரம் பெற்ற தன்மையால் உலகுய்ய வைத்த அறங்கள் எல்லாம் வளர்க்கும் காமக் கோட்டத்தை உடையதாயிருத்தலும் குறிப்பு. தொண்டை நன்னாடு சான்றோ ருடைத்து என்றபடி சான்றோர்களை உடைமையாகிய தனிச் சிறப்பு முணர்த்தியபடி; "எவ்வழி நல்லவ ராடவர், அவ்வழி நல்லை வாழிய நிலனே" (புறம்); "உலகினிற் கெல்லா மங்கலந்தரு மழவிளம் போதகம்" (2046) என்றதும், ஆண்டுரைத்தவையும் பார்க்க.

வளநாடு - அந்நாளில் தொண்டை நாடு சோழ நாட்டின் ஒரு பகுதியாகச் செயங்கொண்ட சோழ வளநாடு என்று பெயர் பெற்றிருந்தது. வளநாடு - பெருநாட்டின் உட்பிரிவு; சோழர்களின் ஆட்சி பரவிய காரணத்தால் இப்பெயர் பெற்றது.

மங்கலமாம் - ஆக்கச்சொல் உவமை குறித்ததெனக் கொண்டு மங்கல நாண் போல என்றுரைப்பர் இராமலிங்கத் தம்பிரானார்.

செங்கண்...நீர்நாடு - சோழ நாட்டில் அவதரித்த பெரியோர் பலராயினும், அருளால் முன்னறிந்து பிறந்தமையாகிய பிறப்பின் சிறப்பும், சிவனுக்கு 78 மாடக் கோயில்கள் அமைத் தாசாண்ட சிவபுண்ணியச் சிறப்பும் பற்றிக் கோச்செங்கணாரின் பிறப்பினைப் பற்றி நாட்டுக்குச் சிறப்புக் கூறினார்; நீர்நாடு - காவிரி நாடு; சோழ நாடு. பிறந்த - நீர்நாடு என்றது படை எடுப்பென்றதாலன்றிப் பிறப்புரிமையால் சோழர்க்குரியது என்பது குறிக்கப் பிறந்த என்றதாம்.

**திருஆமாத்தூர்**

*திருச்சிற்றம்பலம்* பண் - கொல்லிக் கௌவாணம்

*காண்டனன் காண்டனன் காரிகை யாடன் கருத்தனாய்*
*ஆண்டன னாண்டன னாமாத் தூரெம் மடிகட்காட்*
*பூண்டனன் பூண்டனன் பொய்யன்று சொல்லுவன் கேண்மின்கள்*
*மீண்டனன் மீண்டனன் வேதவித் தல்லா தவர்கட்கே.* (1)

ஒர்ந்தன னோர்ந்தன னுள்ளத்துள் ளேநின்ற வோண்பொருள்
சேர்ந்தனன் சேர்ந்தனன் சென்று திருவொற்றி யூர்புக்குச்
சார்ந்தனன் சார்ந்தனன் சங்கிலி மென்றோ டடமுலை
ஆர்ந்தன னார்ந்தன னாமாத் தூரைய னருளதே. (4)

*தேடுவன் றேடுவன் செம்மலர்ப் பாதங்க ணாடொறும்*
நாடுவ னாடுவ னாபிக்கு மேலேயோர் நால்விரல்
*மாடுவன் மாடுவன் வன்கை பிடித்து மகிழ்ந்துளே*
*ஆடுவ னாடுவ னாமாத் தூரெம் மடிகட்கே.* (9)

*ஐயனை யத்தனை யாளுடை யாமாத்தூ ரண்ணலை*
*மெய்யனை மெய்யர்க்கு மெய்ப்பொரு ளான விமலனை*
*மையனை மையணி கண்டனை வன்றொண்ட னூரன்சொற்*
*பொய்யொன்று மின்றிப் புலம்புவார் பொற்கழல் சேர்வரே.* (11)

*திருச்சிற்றம்பலம்*

**பதிகக் குறிப்பு** :—*சிவயோக நிலையிற் பிரியாது* இறைவருடன் *கூடி நின்ற நிலை குறித்தது ; திருவொற்றியூர்ச் சரித நிகழ்ச்சியுள்ளும் திருவருளை நிகழக் கண்டு நின்ற நிலையும் குறிப்பு. இப்பதிகம் மிக அருமையான சிவயோகம் பற்றிய பெரும் பொருள்களை உடையது. நம்பிகளது நிலையினை நன்கு விளக்குவது.*

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) காண்டனன் - *கண்டான் ;* காண்டல் - *செய்தல்; படைத்தல் என்றதுமாம். "மூவனைவன்கண்டது"* காரிகை - *அம்மை ; கருத்தன்- தலைவன் ;* ஆண்டனனுதலாற் ஆட்பூண்டனன் *என்க ;* மீண்டனன் - *விலகினேன் ;* **வேதவித்து** - *வேத வொழுக்க முடையோர் ;* வித்து - *அறிஞர்.*—(2) கூடுவன் - *சிவயோக நிலை ;* குறிப்பு - *மனத்தினுள் தியான உறைப்புப் பற்றிய குறிக்கோள். " குறிப்பினாலே கூப்பினான் றாபாத்தை " (தேவா) " குறித்த பூசை "* (1241);—(3) ஆய்ந்தவன்-என்றால் *உள்ளே ஆராய்ந்த இடத்துத் தெளியப்பட்டவன்; செயப்பாட்டு வினை;*—(4) ஒர்ந்தனன்...ஒண்பொருள் - *சிவராஜயோகம்;* சேர்ந்தனன்...அருளதே- *நம்பிகளது சரித நிகழ்ச்சியும், அதனை அருள் நிகழ்ச்சியாகவே கண்ட நிலையும் குறிப்பு;* **அது** அருளே *என்க ; ஏகாரம் பிரிநிலை; ஏகாரம் பிரித்துக் கூட்டுக ;* ஆர்தல் - *நிறைவு பெற வினைப்போகம் நுகர்தல் ;*—(5) நீதி...செய்யருள் - *நீதி நிறைந்த அன்றே அருள் செய்யும் என்றபடி; நீதி-நியதி ; இறைவர் விதித்த ஒழுக்க நிலை ;* அன்றவன்- *அன்றே - அநாதியே - உள்ளவன்.*—(6) ஆமாத்தூரையும்...பூண்டவன் - *ஆமாத்தூரை விரும்பி வீற்றிருத்தல் போலவே என்னெஞ்சும் இடமாகக் கொண்டு என்னை ஆளாக ஏற்றவர் ; " கண்ணி னற்கழல் காண்பிட மேதெனிற், புண்ணி யன்புக லூருமென் னெஞ்சுமே " (அரசு) ;* புரளவே - பூண்டவன் - *என்க ;* நேடல் -

தேடுதல் ;—(7) உயிர்தங்கட்கு - எண்ணவன் என்றும், காண்டு மென்பாரவர் தங்கட்குக் கண்ணவன் என்றும் கூட்டுக ; எண் - மதிப்பு - எண்ணம் - எண்ணத்தி லுள்ளவன். பாகம் பெண்ணவன் என்க ; அண்ணவன் - உயிர்கட்கு அணிமையான வர் ;—(8) பொன்னை...போகவிடா - நம்பிகளது சரிதக் குறிப்பு ; அன்னவன் - அத் தன்மையுடையோன் ; என்னவன் - என்னை உடையோன் ; தலைவன் ;—(9) நாடுவன்...நால்விரல் - சிவராஜயோகம்; நாபிக்கு மேலேயோர் நால்விரல் - யோகத் தானங்களுள் ஒன்று ; அநாகதத்தானம் ; இருதயம் ; அங்குள்ள உருத்திர மூர்த்தியை நாடுவேன் என்றும் கூறுவர். "மூலத் திருவிரல் மேலுக்கு முன்னின்ற, பாலித்த யோனிக் கிருவிரற் கீழ்நின்ற, கோலித்த குண்டலி யுள்ளே செழுஞ்சுடர், ஞாலத்து நாபிக்கு நால்விரற் கீழே" (திருமந். 3 - 32) முதலாக வரும் திருமூலர் திரு வாக்குக்களும் கருதுக ; மாடுவன் - செய்வேன். மாடுதல் - செய்தல் ; சேரச் செய்தல். "வடுமலி கொன்றையரா விந்துவிள வன்னி, மாடவல செஞ்சடையெம் மைந்தனிடம்" (திருநள்ளாறு, திருவிரா - இந்த - 1), "அஞ்செழுத் தாலுள்ள மானுடைமை கண்டரனை யஞ்செழுத்தா லர்ச்சித் திதயத்தில் - அஞ்செழுத்தாற், குண்டலியிற் செய்தோமங் கோதண்டஞ் சானிக்கில் அண்டனாஞ் சேடனு மங்கு" (போதம் - 9 - 3); சிவோகம்பாவனை செய்தல் ; வன்கை......ஆடுவன் - பிராணயாமஞ் செய்து சிவோகம்பாவனையில் அரனை உள்ளே கண்டு கொண் டானந்தித் திருத்தல் ; நம்பிகள் சிவயோக நிலையினைப் பற்றி நின்று உலகுக்குதவ வந்தவர் என்னும் நிலைகுறித்தது; மேல்வரும் பாட்டும் பார்க்க ;—(10) உற்றவர் - உல கியற் பிறப்பினால் உறவாவார் ; ஒழிந்து (வந்து) உற்றனன் என்க ; தம்மை ஒழிந்து - உலகப்பற்று நீங்கி ; உள்பொருள் - உள்ளும் பொருள் என்பர். உள்ளத்துள் பொருள் பற்றுதலாவது - உயிர்க்குயிராய் ஒளித்து விளங்கும் இறைவனை உள்ளே சிவயோகத்தாற் கண்டு பற்றிக் கொள்ளுதல் ; "சிக்கெனப் பிடித்தேன்" (திருவா); "என்னுளே தேடிக் கண்டு கொண்டேன்" (தேவா); அற்றனன் - பிற பற்றெல் லாம் அற்றனன் ; "அற்றவர்க்கற்ற சிவன்" (தேவா); அடியார்கட் காட்பெற்ற னன் - அடியார்களுக்காட் செய்யப் பெறுதல் சிவனடிப் பேற்றினும் பெரும் பேறு என்பது ; பிறவாமைக்கே - இனிப் பிறவாமை பெறும் பொருட்டே ; பெயர்த்தும் பெயர்த்தும் - பிறவி ஒன்றினொன்று மேன்மேல் தொடர்ந்து வருதல் குறிக்க அடுக்கிக் கூறினார் ;—(11) மையன் - வஞ்சகன் ; கள்வன் ; "உயிர்தொறு மொளித்து நின்ற கள்வனை" (திருவிளை - புரா - மண்சு - பட); "எனதுள்ளங்கவர் கள்வன்" (தேவா) ; மையனை - மையல் - நை - மயக்கங் கெட்ட ; மையம் - நடுவு நிலைமையுமாம். புலம்பல் - அன்பு மேலீட்டால் ஆனந்தக் கண்ணீர்வார வாய் குழறிப் போற்றுதல் - சிவப்பிரகாச தேசிகர் குறிப்புக்கள். மையணி - மை - மை போன்ற கரிய விடம் ; ஆகுபெயர்.

தலவிசேடம் :—திருஆமாத்தூர் - III பக். உ0உ பார்க்க. ஆமாத்தூர் - பசு வுக்குத் தாயகமான ஊர் ; ஆமாதாவூர் என்பது ஆமாத்தூர் என மருவிற்று.

3448. அந்நாட்டின் மருங்குதிரு வரத்துறையைச் சேன்றெய்தி
மின்னாரும் படைமழுவார் விரைமலர்த்தாள் பணிந்தெழுந்து
சொன்மாலை மலர்க்"கல்வா யகி"லென்னுந் தொடை சாத்தி
மன்னார்வத் திருத்தொண்ட ருடன்மகிழ்ந்து வைகினார். உகூச

(இ - ள்) அந்நாட்டின்...எய்தி - அத்திரு நாட்டின் எல்லைக்குள் ஒரு பக்கத்தில் உள்ள திருநெல்வாயில் அரத்துறையினைச் சென்று சேர்ந்து ; மின் ஆரும்... எழுந்து - ஒளிபொருந்திய படையாகிய மழுவை ஏந்திய இறைவரது மணமுடைய மலர் போன்ற பாதங்களை நிலமுறவீழ்ந்து வணங்கி எழுந்து ; சொன்மாலை...சாத்தி- சொன்மலர் மாலையாகிய " கல்வா யகில் " என்று தொடங்கும் மாலையினைச் சாத்தி; மன் ஆர்வம்...வைகினார் - நிலைபெற்ற ஆர்வத்தினையுடைய திருத் தொண்டர்களோடும் மகிழ்ச்சி பொருந்தி எழுந்தருளி யிருந்தனர்.

(வி - ரை) அந்நாட்டின் மருங்கு - அந்நாளில் நடு நாடு, சோழ அரசமரபினராகிய பல்லவர்களுக் குட்பட்டிருந்தமையால், அந்நாடு என்பது சோழ நாட்டினையே குறிப்பதாம் ; அகரம்-முன் நீர்நாடு என்று கூறிய அந்த என முன்னறி சுட்டு; மருங்கு-ஒரு புறமாக.

மருங்கு - சோழர்களுக் குட்பட்ட சிற்றரசர்களாகிய முனையதரையர் மரபினர்களால் ஆளப்பட்ட குறிப்பு. அரசாட்சி பற்றிய நடுநாடு என்ற பிரிவு பிற்காலத்தது.

சொன்மலர் மாலை என்க ; மாலைத்(யாகிய) தொடை என்று கூட்டுக.

" கல்வாயகிலும் " பதிகத் தொடக்கமாகிய முதற்குறிப்பு.

அந்நாளில் திரு ஆமாத்தூரினின்றும் விழுப்புரம், உளுந்தூர்ப்பேட்டை - வழியே நேரே தென்மேற்காய் திருநெல்வாயிலரத்துறையினை அடைந்து, நிவா நதியைக் கடந்து செல்லும் பாதை ஒன்று வழக்கிலிருந்தது ; ஆளுடைய அரசுகள் தில்லையினின்றும் மேற்கே திருநாரையூர் சென்று சீகாழிக்கு எழுந்தருளியதும், ஆளுடைய பிள்ளையார் திருநெல்வாயிலரத்துறையினின்றும் மீண்டு சோழ நாட்டுப் பதிகளைக் கும்பிட்டுத் திருநாரையூர் - திருக்கருப்பறியலூர் வழியே போந்து சீகாழிக்கு எழுந்தருளியதும், ஆகிய வழிகளை ஈண்டுக் கருதுக.

குறிப்பு :—நம்பிகள் திருஆமாத்தூரினின்றும் திருவாரூருக்கு எழுந்தருளும் நிலையில் திருநெல்வாயிலரத்துறை, திருவாவடுதுறை, திருத்துருத்தி இவற்றை வழிபட்டுப் போந்தருளினர் என்ற சரிதப் பகுதிக்கு "எற்றே யொருகண் ணிலன்; நின்னையல்லால் நெல்வாயி லரத்துறை நின்மலனே, மற்றேலொரு பற்றிலன் " என்றும், " கண்ணி லேனுடம் பில்வடு நோயாற் கருத்த ழிந்துனக் கேபொறை யானேன்... திருவாவடுதுறையுள், அண்ண லேயெனை யஞ்சலென் றருளா யாரெ னக்குற வமரர்களேறே" என்றும், " என்னை நான் மறக்குமா றெம்பெரு மானை யென்னுடம் படும் பிணி யிடர்கெடுத் தானை " (திருத்துருத்தியும் திருவேள்விக் குடியும்) என்றும் வரும் அவரது திருவாக்குக்கள் பெரிய அகச்சான்றுகளாய் விளங்குகின்றன ; நம்பிகள் ஒரு கண்ணின்றி இப்பதிகளை வழிபட்டனர் என்பது இவற்றுள் விளங்கும். 294

## திருநெல்வாயி லரத்துறை

திருச்சிற்றம்பலம் பண் - இந்தளம்

கல்வா யகிலுங் கதிர்மா மணியுங் கலந்துந் திவருந் நிவவின் கரைமேல்
நெல்வா யிலரத் துறைநீ டுறையும் நிலவெண் மதிசூ டியகின் மலனே
நல்வா யில்செய்தார் நடந்தா நுடுத்தார் நரைத்தா ரிறந்தா ரென்றுநா னிலத்திற்
சொல்லாய்க் கழிகின் றதறிந் தடியே னுய்யப் போவதோர் சூழல் சொல்லே. (1)

புற்று டாவ மரையார்த் துகந்தாய் புனிதா பொருவெள் விடையூர் தியினாய்
எற்றே யொருகண் ணிலனின் னையலா னெல்வா யிலரத் துறைநின் மலனே
மற்றே லொருபற் றிலனெம் பெருமான் வண்டார் குழலாண் மங்கைபங் கினனே
யுற்றார் பிறவிக் கடனீந்தி யேறி யடியே னுய்யப் போவதோர் சூழல் சொல்லே. (3)

*நீரூ ருந்நெடு வயல்சூழ் புறவி னெல்வா யிலாத் துறைநின் மலனைத்*
*தேரூர் நெடுவீதி நன்மா டமலி தென்னா வலர்கோ னடித்தொண்டு பண்ணி*
*யாரூ ரனுரைத் தனநற் றமிழின் மிகுமாலை யோர்பத் திவைகற்று வல்லார்*
*காரூர் களிவண் டறையா னைமன் னவராகி விண்முழு தாள்பவரே.* (10)

*திருச்சிற்றம்பலம்*

**பதிகக் குறிப்பு** :—*ஒரு கண்ணிலேன் ; உன்னை யன்றி ஒரு பற்றிலேன் ; அடியேனுய்யப் போவதோர் சூழல் சொல்லே என்றது ; பதிக மகுடம் பார்க்க.* குறிப்பு. இப்பதிகம் *தமிழ்* இலக்கிய *நயமும் நீதி ஞான மொழிகளின் நயமும், தத்துவ நிச்சயமாகிய உபதேச நயமும் செறிந்த அருமைப்பாடுடையது.* திருக்குறட் *கருத்துக்களும் காணப்படுவது.*

**பதிகப் பாட்டுக் குறிப்பு** :—(1) கல்வாய் - **கல்** - *மலை; மலைபடுபண்டமாகிய ; இதனை* மணியுடனும் *கூட்டுக ;* நிவ - *நிவா நதி; ஈற்றேகாரம் குறுகி வந்தது;* நிலா - *என்பது* நில *என வருவது போல ;* உந்திவருதல் - *நீர்ச்சிறப்பு மிகுதி ;* நீடு உறையும் - *பழமையாக* உறைகின்ற ; நல்வாயில்...சொல்லாய்க் கழிகின்றது - *யாக்கை நிலையாமை ;* சொல்லாய்க் கழிகின்ற*தாவது சொல் மாத்திரை அளவிற் போய் ஒழிவது;* விரைவுக் குறிப்பு. நல்வாயில் சேய்தல் - *குழவி பிறந்த மகிழ்ச்சி நலம் பகர்ந்து சடங்கு செய்தல் ;* சூழல் - *உபாயம்* ;—(2) நிலையாத இம்மண்ணுலகில் - *நிலையாமையே நிரம்பிய உலகு ; கணந்தோறும் அழிவு பெறுகின்ற நிலை.* பொறிவாயில்...அவிய - “ *பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ ரொழுக்கம்* ” (குறள்) *என்ற* திருக்குறட் *சொல்லும் பொருளும் ஆட்சி* ;—(3) எற்றே ஒரு கண்ணிலன் - நின்னையலால் மற்றொரு பற்று மிலேன்-*நம்பிகளது சரிதங் குறித்த அகச்சான்று*;—(4) கோடு - *கொம்பு* ; கோங்கு-*மாவகை* ; ஓடுபுனற் கரையாம் இளமை - *விரைந்தோடும் யாற்றின்கரை இடிவது போல இளமை விரைவிற் கரைந்து இடிந்து கழியும் ; “இடிகரை யொத்த* இளமை ; உறங்கி விழித்தா லொக்குமிப் பிறவி - “ *உறங்குவது போலுஞ் சாக்கா டுறங்கி, விழிப்பது போலும் பிறப்பு* ” (குறள்) என்ற திருக்குறளாட்சி ; *யாக்கை நிலையாமையும் விரைந்து தொடரும் பிறவிச் சூழலும் குறித்தது* ;—(5) கல்பொழிய - *மலைமேல் மழைபொழிய.* கல் - *மலை* ; மயிலார் - *மயில் போன்ற சாயலினை உடைய பெண்கள்;* அலம்வந்து - *வருந்தி - துன்பப்பட்டு*;—(6) கனகம் - *பொற்சன்னம் ;* நெல் வால் - *நெல்லின் சிறிய கூரிய நுனியும் ; நுனிதானும் ;* இழிவு *சிறப்பும்மை தொக்கது.* அலந்தேன் - *வருந்தி யொழிந்தேன்* ;—(7) சிகரம் - *மலையுச்சி* ; மணக்கோலமதே பிணக்கோலமதாம் பிறவி - *மணமென மகிழ்வர் பின்னே பிணமெனச் சுடுவர் - என்ற ஞானம் ; “ மணமகனே பிணமகனாய் மணப்பறையே பிணப்பறையாய், அணியிழையார் வாழ்த்தொலிபோ யழுகை யொலி யாய்க்கழியக், கணமதனிற் பிறந்திறுமிக் காயத்தின் வரும்பயனை, உணர்வுடையார் பெறுவருணர் வொன்றுமிலார்க் கொன்றுமிலை* ” (பழியஞ்சின படலம் - 40) *என்ற திருவிளையாடற் புராணம் ஈண்டு நினைவு கூர்தற்பாலது ;* அகரம் முதலினெழுத்தாகி நின்றாய் - *எழுத்துக்களுள் அகரம் விரவி நின்று முதலு மாதல் போல இறைவர் உயிர்களினறிவினுள்ளே அறிவாகி விரவி நின்று முதல்வனுமாவன்; “அகர முதல வெழுத்தெல்லா மாதி, பகவன் முதற்றே யுலகு* ” (குறள்) என்ற திருக்குறட் *கருத்து ஆளப்பட்டது ; இதனைப் பின் வந்த ஞானாசாரியர் உமாபதி சிவனார் “அகர வுயிர்போ லறிவாகி யெங்கு, நிகரிலிறை நிற்கு நிறைந்து* ” (திருவருட் பயன் - 1) *என்று ஞான சாத்திரத்தினுள் விரித்தல் காண்க.* எழுத்து முதலின் அகரமாகி

நின்றமை என்க ; ஆகி - உவமப் பொருள் தந்து நின்றது ; அகரம் போல ;—(8) பண்டே...பெற்றேன் - இறைவரது திருநாமத்தைப் பயில்வதற்கு மிக்க முன்னைத் தவம் வேண்டப்படும் என்பதாம் ; செய்த பாக்கியம் - தவஞ்செய்து தேடிய பயன் ; நாமம்-திரு வைந்தெழுத்து; இந்நாளில் இறைவன் திருநாமத்தைப் பயிலுதற்குக் கூசுவோரும், பயிலாது நிற்பதோடன்றி, அதனைப் பழிப்போரும் பலராயினர். பயிலுவோர் சிலராகக் காண்டும். இதன் காரணம் முன்னைத் தவப்பய னில்லாதாரே பலராதல் என்க. " இலர்பல ராகின்ற காரண நோற்பார், சிலர் ; பலர் நோலா தவர் " (குறள்) என்பது பொய்யா மொழி ; " திருநாம மஞ்செழுத்துஞ் செப்பா ராகிற் றீவண்ணர் திறமொருகாற் பேசா ராகில்...அளியற்றார் பிறந்தவா றேதோ வென்னிற், பெருநோய்கண் மிகநலியப் பெயர்த்துஞ் செத்தும் பிறப்பதற்கே தொழிலாகி யிறக்கின் றாரே " (தாண்) என்ற திருவாக்கு ஈண்டு நினைவு கூர்தற்பாலதாம் ;—(9) மாணு உருவாகி - மாணி (வாமனன்) உருவாகி வந்து மண் கொண்ட பின் மாணு (மாணல்லாத - பெரிய) உருவு எடுத்து மண் அளந்தான் ; நீள் நீள் - அடுக்கு மிகுதி குறித்தது ; மிக நீண்ட ; வாணுர் - வாளார் என்பது எதுகை நோக்கி வாணுர் என நின்றது ; " நீணுதல் செய்தொழிய " (பிள். பிரமபுரம் - 9); " மாணி பால்கறந் தாட்டி வழிபட, நீணுல கெலா மாளக் கொடுத்தவன் " (குறுந். கோயில் - 4) ; பலவின்கனி ஈயது போல் - பலாப் பழத்தின் ஆசையாற் சென்று அதன் பிசின் ஒட்டி இறந்தொழியும் ஈப்போல ; (பழமொழி) " உழைதரு நோக்கியர் கொங்கைப் பலாப் பழத் தீயினொப்பாய், விழைதருவேனை " (திருவா. நீத் - விண் - 46) ; போல்வதன் முன் - பலாப் பழத்தில் ஒட்டி அகப்பட்ட ஈ இறப்பது போல இறந்து வீழ்வதன் முன்; கனி ஈ(ர்)ந்தது-என்று பாடங்கொண்டு பெண்ணுறுப்பு வடிவுவமமாக உரைப்பாருமுண்டு.—(11) அடித் தொண்டு - சிவபூசை ; தவநெறி ; யானை - அயிராவதம்.

**தலவிசேடம்.**—திருநெல்வாயிலரத்துறை - 2113-ன் கீழ்ப் பார்க்க. இத் தலத்து அருணகிரியார் திருப்புகழினுள் ஆளுடைய பிள்ளையார் இங்கு முத்துச் சிவிகை பெற்ற வரலாறு குறிக்கப் பட்டுளது. " கொச்சையிற் சதுர்வேதச் சிறுவநிற் கருட்கவிகை நித்தியச் சிவிகை யைக்கொடுத் தருளீசன்."

3449. பரமர்திரு வரத்துறையைப் பணிந்துபோய்ப் பலபதிகள்
விரவிமழ விடையுயர்த்தார் விரைமலர்த்தா டொழுதேத்தி
உரவுநீர்த் தடம்பொன்னி யடைந்தன்ப ருடனாடி
அரவணிந்தா ரமர்ந்ததிரு வாவடுதண் டுறையணைந்தார். ௨௬௫

(இ - ள்) பரமர்...போய் - இறைவரது திருவரத்துறையினைப் பணிந்து மேற் சென்று ; பலபதிகள்...தொழுதேத்தி - பதிகள் பலவற்றிலும் சேர்ந்து இளைய இடபக் கொடியினை உயர்த்திய இறைவரது மணமுடைய மலர் போன்ற திருவடிகளைப் பணிந்து துதித்து ; உரவு...ஆடி - பரந்த நீரையுடைய பெரிய காவிரியினைச் சேர்ந்து அன்பர்களுடனே நீராடி ; அரவணிந்தார்...அணைந்தார்-பாம்பினை அணிந்த இறைவர் விரும்பி எழுந்தருளிய தண்ணிய திருவாவடுதுறையினை அணைந்தனர்.

(வி - ரை) பலபதிகள் விரவி...ஏத்தி - திருநெல்வாயிலரத்துறையினின்றும் நம்பிகள் திருஎருக்கத்தம்புலியூரின் அணிமையில் நிவாநதியைக் கடந்து அங்கு நின்றும் நேர் தெற்கே செயங்கொண்ட சோழபுரம் வழியாகச் செல்லும் பாதை வழியே சென்று, திருஆப்பாடியின் அணிமையில் கொள்ளிடத்தைக் கடந்து காவிரியை அடைந்தனர் என்பது கருதப்படும் ; இவ்வாறன்றித் திருநெல்வாயிலரத்துறையி

னின்றும் நிவாவின் வடகரை வழியே போந்து கூடலையாற்றூரின் அணிமையில் நிவாநதியினைக் கடந்து நேர் தெற்குப்பாதை வழியே கொள்ளிடங் கடந்து காவிரி யைக் கஞ்சனூர், கோடிகா இவற்றின் அருகில் அணைந்தனர் என்றலும் பொருந்தும்.

முன்னர்க் கூறியபாதையில் இடையில் உள்ள பதிகள் கோவந்தபுத்தூர், விசய மங்கை, கொட்டையூர், குடமூக்கு முதலாயின ; பின்னர்க்கூறிய பாதையில் இடைப் பட்டன திருப்பனந்தாள், திருமங்கலக்குடி, கஞ்சனூர் முதலாயின ; காவிரி கடந்த வுடன் திருவாவடுதுறையினை அணைந்தனர் என்கின்றூராதலின் பின் கூறிய பாதை வழியே போந்தமை வலியுறுத்தப்படும்.

உரவு நீர் - பரந்தோடுகின்ற நீரினை உடைய.

அன்பருடன் ஆடி - தொடர்ந்து வந்த அன்பர்களுடனே காவிரியிற் குளித்து ; அன்பருடன் என்பது அணைந்தோர் தன்மை ; இதனை விடாது எங்கும் கூறுதல் குறிக்க.

தண் ஆவடுதுறை - என்க. தண்மை - பிறவி வெப்பந் தீர்க்கும் தன்மை. 295

3450. அங்கணைவார் தமையடியா ரெதிர்கொள்ளப் புக்கருளிப்
பொங்குதிருக் கோயிலினைப் புடைவலங்கொண் டுள்ளணைந்து
" கங்கைவாழ் சடையாயோர் கண்ணிலே " னெனக்கவல்வார்
" இங்கெனக்கா ருற"வென்னுந் திருப்பதிக மெடுத்திசைத்தார். ௨௯௬

(இ - ள்) அங்கணைவார்...புக்கருளி - அங்குத் திருவாவடுதுறையினில் அணை வாராகிய நம்பிகளை அடியார்கள் எதிர்கொண்டு வரவேற்கப் பதியினுள்ளே புகுந் தருளி ; பொங்கு...உள் அணைந்து - சைவமெய்த் திருப் பொங்கும் திருக்கோயி லினைப் புடைவலங் கொண்டு சுற்றிவந்து உள்ளே சென்று திருமுன்பு சேர்ந்து ; கங்கை...கவல்வார் - கங்கைநதி வாழ்கின்ற சடையினை உடையவரே ! ஒரு கண்ணில்லேன் என்று கூறிக் கவல்கின்றூராகி ; இங்கெனக்கார் உறவு... இசைத்தார் - இங்கு எனக்கு யார் உறவு ? என்ற கருத்தினை உடைய திருப்பதிகத் தினைத் தொடங்கிப் பாடியருளினர்.

(வி - ரை) திருப்பொங்கு கோயில் - என்க ; திரு - சைவமெய்த் திரு. திருப் பொங்குதலாவது திருமூலதேவ நாயனூர் 3000 ஆண்டுகள் அரசின் கீழே சிவயோகத் தமர்ந்திருந்து திருமந்திரத்தினைப் பிறவி விடந் தீர்ந் துலகத்தோருய்ய அருளிய தும், கழுமல வூரர்க் கம்பொன் ஆயிரமும் உலவாக்கிழியாய் இறைவன் அளித்து சிவ வேள்விகளைப் பெருகச் செய்ததும், பின்னர்த் திருமாளிகைத் தேவர், நமசிவாய தேசிகர் முதலாகிய பெரியோர் மேன்மேல் வந்தருள வுள்ளதுமாகிய சிறப்புக்கள். பரமகுருநாதர்கள் வழிவழி வந்து சிவத்துவத்தை உலகில் விளங்கச் செய்தல்.

புடைவலங் கொள்ளுதல் - திருமதிலின் உட்பக்கத்தே பொன் மாளிகையினை வலமாகச் சுற்றிவருதல்.

உள் அணைந்து - இறைவர் திருமுன்பு சார்ந்து.

கங்கை வாழ் சடையாய் ! - இது பதிகத் தொடக்கம் ; ஓர் கண்ணிலேன் - பதிகத்தின் உட்குறிப்பு. பதிகம் 2வது பாட்டுப் பார்க்க.

" இங்கெனக்கு ஆர் உறவு " - என்னும் - இது பதிகக் குறிப்பாகிய முறையீடு ; " ஆர் எனக்குறவு அமரர்களேறே " என்பது பதிக மகுடம் ; நம்பிகளது திரு வாவடுதுறைப் பதிகங்களிரண்டும் தக்கேசிப் பண்ணில் அமைந்தன. அவற்றுள் " மறையவன் " என்று தொடங்கும் பதிகம் முன்முறை வந்து வழிபட்டபோது

அருளப்பட்டது ; இம்முறை அருளியது "கங்கை வாழ் சடையாய்" என்ற இத் திருப்பதிகம் : மிகவும் மனமுருக்கும் தன்மை வாய்ந்தது. 296

திருவாவடுதுறை

திருச்சிற்றம்பலம் பண் - தக்கேசி

கங்கை வாழ்சடை யாய்கண நாதா கால காலனே காமனுக் கனலே
பொங்கு மாகடல் விடமிடற் றானே பூத நாதனே புண்ணியா புனிதா
செங்கண் மால்விடை யாய்தெளி தேனே தீர்த்த னேதிரு வாவடு துறையுள்
அங்க ணாவெனை யஞ்சலென் றருளா யாரெ னக்குற வமரர்க ளேறே. (1)

மண்ணின் மேன்மயங் கிக்கிடப் பேனை வலிய வந்தெனை யாண்டுகொண் டானே
கண்ணி லேனுடம் பில்லடு நோயாற் கருத்த ழிந்துனக் கேபொறை யானேன்
தெண்ணி லாவெறிக் குஞ்சடை யானே தேவ னேதிரு வாவடு துறையுள்
அண்ண லேயெனை யஞ்சலென் றருளா யாரெ னக்குற வமரர்க ளேறே. (2)

வெண்ட லைப்பிறை கொன்றையு மாவும் வேரி மத்தமும் விரவிமுண் டித்த
இண்டை மாமலர்ச் செஞ்சடை யானை யீச னைத்திரு வாவடு துறையுள்
அண்ட வாணனைச் சிங்கடி யப்ப னணுக்க வன்றொண்ட னூர்வத்தா னுரைத்த
தண்டமிழ்மலர் பத்தும்வல் லார்கள் சாத லும்பிறப் பும்மறுப் பாரே. (10)

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு** :—ஆசிரியர் (3450) காட்டியருளியவாறு ; குறிப்பு - இப் பதிகத்துள் தலச்சுவாமி பெயர் (4), அம்மை பெயர் (3), தியாகேசர் பெயர் (6) போற்றப் பட்டமை சிறப்பு.

**பதிகப் பாட்டுக் குறிப்பு**:—(1) எனையஞ்சலென்றருளாய் ;......யாரெனக் குறவு ஏறே - இது பதிகக் குறிப்பாகிய மகுடம் ;—(2) மண்ணின் மேல்...ஆண்டுகொண் டானே - நம்பிகளைத் தடுத்தாட்கொண்ட சரிதக் குறிப்பாகிய அகச்சான்று ; கண்ணி லேன்...பொறையானேன் - சரித ஆதாரவாகிய குறிப்பு. அடுநோய் - திருவொற்றி யூரிற் கண்ணிழந்த நிலையில் மேற் சென்ற நீண்ட யாத்திரையில் நம்பிகளது திரு மேனியிற் புதிதாய்ப் பற்றியதொரு வெப்பு நோய் ; "புதியபிணி" (3453) ; இது திருத்துருத்தியில் நீங்கப் பெற்றனர். உனக்கே பொறையானேன் - கண்ணிருந்தாற் றாமாகத் தேடிச்செய்துகொள்ள வருவனவற்றையும் கண் இழந்தமையாற் றேடமாட் டாமையானபடியால் எல்லாவற்றையும் தருதல் இறைவர்பாற் சுமையாதல் குறிப்பு; பொறை - பாரம் ; "தன் கடன் அடியேனையுந் தாங்குதல்"; உனக்கே - ஏகாரம் பிரி நிலை. "உறவி லேனுனை யன்றிமற் றடியேன் ; யாரெனக்குறவு ?" என்பன காண்க;—(3) ஒப்பிலா முலையாள்-தல அம்மை பெயர்; முப்புரங்களை...வல்லானே - "மூவெயில் செற்ற...காவ லாளரென் றேவின பின்னை" (நம்பி - புன்கூர்)—(4) கோதி - கோபம் ; மனக் கொதிப்பு ; அடுநோய் - (2) பாட்டுப் பார்க்க;—(5) அரக் கன் - இராவணன் ; இந்து சேகரன் - பிறையைச் சூடியவர் ; ஒருபிழை - சபதம் பொய்த்தமை ; திருவாரூர்ச் செம்பொனே - இத்தலத்துத் தியாகேசர் பெயர் செம் பொற்றியாகர் ; அறவன் - தரும சொரூபி ; "அறவாழி அந்தணன்" (குறள்) என் புழிப்போல அறத்தின் வழி உலகை ஆள்பவன் ; "அமரர்நா டாளாதே ஆரு ராண்ட, அயிரா வணமே" என்று தியாகேசரை அரசாகக் கருதலின் இங்கு அற

வன் என்றார் ;—(7) விதிமுதலே - விதிக்கின்ற முதல்வன் ; விதித்தல் - படைத்தல் ; விதிமுகத்தால் மறைகளுள் கூறும் விதிவாக்கியங்களாகிய தர்மத்தைச் செய் - உண்மையைச் சொல் என்பன வாதியாக வருவனவற்றால் உலகத்தைச் செலுத்தும் முதல்வன் என்றலுமாம் ; மெய்யன் - சத்துப் பொருள் ;—(8) பரமேட்டி - அப்பாற்பட்டவன்-மேலானவன்; தீதிலா மலை - மலை, வெள்ள நீர்-யானை-சிங்கம்-பாம்பு முதலியவை உள்ள இடமாயிருந்தும் அவற்றை உடைய வினை மலைகள் தீமைக்கிட மாதல் போலத் தீமையில்லாத மலை ; சேவகம் - வீரம் ; " தந்திமேல் விடைமே லழகர் சேவகம் செய்தது " (திருவிளை. புரா);—(9) வழித்துணை - பிறவிப் பயணத் திற் றனித் துணையாய் உடன் வருபவர் ; மருந்து - உடன் வந்து பிறவி நோய் தீர்ப்பவர் ; மாசிலாமணி - தலச் சுவாமி பெயர் ; ஈடு - இடப்பெறுதல் ; தொழிற் பெயர் ; ஆனை - பெருமை குறித்தது ;—(10) சிங்கடியப்பன் - நம்பிகள் சரிதப் பகுதிக் குறிப்பு ; அணுக்கன் - அகம்படித் தொண்டு செய்பவர் ; தோழர் என்ற குறிப்புமாம் ; சாதலும் பிறப்பும் - சாதலை முன் கூறினார், இப்போது பிறப்பு நேர்ந்துவிட்டமையின் அடுத்து வருவது அதுவே யாதலின்; மேலே பிறப்பு என்றது இனிவரும் பிறவி.

தலவிசேடம் :—திருவாவடுதுறை - III - பக். ௨௩௭ பார்க்க.

3451. திருப்பதிகங் கொடுபரவிப் பணிந்துதிரு வருளாற்போய்
விருப்பினொடுந் திருத்துருத்தி தனைமேவி விமலர்கழல்
அருத்தியினாற் புக்கிறைஞ்சி "யடியேன்மே லுற்றபிணி
வருத்தமெனை யொழித்தருள வேண்டு"மென வணங்குவார், ௨௬௭

3452. பரவியே பணிந்தவர்க்குப் பரமர்திரு வருள்புரிவார்
" விரவியவிப் பிணியடையத் தவிர்ப்பதற்கு வேறாக
வரமலர்வண் டறைதீர்த்த வடகுளத்துக் குளி"யென்னக்
காவிறிருத் தொண்டர்தாங் கைதொழுது புறப்பட்டார். ௨௬௮

3451. (இ - ள்) திருப்பதிகம்...போய் - திருப்பதிகம் பாடியருளித் துதித்து வணங்கித் திருவருள் விடை பெற்று மேற் சென்று ; விருப்பினொடும்...இறைஞ்சி - விருப்பத்துடனே திருத்துருத்திப் பதியினை அடைந்து இறைவரது திருவடிகளை ஆசையுடன் திருக்கோயிலினுள்ளே புகுந்து வணங்கி ; அடியேன் மேல்...வணங்குவார் - அடியேன் உடம்பின் மேல் வந்த நோயின் துன்பத்தினை என்பால் நில்லாது தீர்த்தருள வேண்டும் என்று வணங்குவாராகி, ௨௬௭

3452. (இ - ள்) பரவியே...புரிவார் - துதித்து வணங்கிய நம்பிகளுக்கு இறைவர் திருவருள் புரிவாராய் ; விரவிய...என்ன - பொருந்திய இப்பிணி முழுதும் தீர்வதற்குத் தனியாக நன்மையுடைய மலர்களில் வண்டுகள் பாடும் தீர்த்தத்தினையுடைய வடகுளத்திற் குளிப்பாயாக என்று அருளிச் செய்ய; காவில்...புறப்பட்டார் - காவில்லாத திருத்தொண்டராகிய நம்பிகள் கைகூப்பி வணங்கி புறப்பட்டருளினர். ௨௬௮

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3451. (வி -ரை) அருத்தி - ஆர்வம் - ஆசை ; புக்குக் கழல் இறைஞ்சி என்க.

"அடியேன்...வேண்டும்" என-இது நம்பிகள் செய்த விண்ணப்பம்; உற்றபிணி-புதிதின் வந்து பொருந்திய ; "புதியபிணி" (3453); "உற்றநோய்" பதிகம் (5).

வணங்குவார் - வணங்குவாராகி - முற்றெச்சம். வணங்குவார் - பணிந்தவர்க்கு என மேற் பாட்டுடன் கூட்டி முடிக்க. 297

3452. (வி - ரை) "விரவிய இப்பிணி...குளி" - இஃது இறைவர் நம்பிகளுக்கு அருளிய ஆணை ; விரவிய இப்பிணி - இடையே வந்த புதிய பிணி.

வேறாக - இதற்கென்று தனியாக ; வேறாகக் குளித்தலாவது நித்த நியமத்தின் பொருட்டும், ஆலய சேவையின் பொருட்டும், குளித்து வந்த நியமங்களின் வேறாகப் பிணி நீங்க என்றெண்ணிக் குளித்தலாம்.

வடகுளம் - திருக்கோயிலினுள் இறைவரது திருமாளிகையின் வடபுறத்துத் திருமுற்றத்தில் உள்ளது ; இதன் கரையில் நம்பிகளது ஆலயம் தனியாக உள்ளது ; நம்பிகளின் திருவுருவம் ஒருகண் பார்வையுடன் நின்ற திருக்கோலமாக எழுந்தருளியுள்ள நிலை மனத்தை உருக்கும் அற்புதத் திருக்கோலமாம் ; கண்டு வழிபடத் தக்க பெருமை வாய்ந்தது ; நோய் நீக்கத்தின் பொருட்டும், பிறவுமாக இன்றும் பல அன்பர்கள் இங்கு வழிபட்டு இக்குளத்தில் நியமமாக மூழ்கி வரம் பெறுகின்றார்கள் ; வர...தீர்த்தம் என்ற குறிப்புமிது ; வரமலர் - தாமரை ; மலர் (279) ; தீர்த்தம் - தூய்மை ; அதனைச் செய்யும் நீருக்கு வந்தது; ஆகு பெயர் ; "ஆர்த்த பிறவித் துயர்கெடநா மார்த்தாடும் தீர்த்தன்" (திருவா).

கரவில் திருத்தொண்டர் - கரவாவது வஞ்சனை முதலிய மனக் குற்றங்கள் ; "கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானை" (தேவா).

புறப்பட்டார் - இவ்வரம் பெற்ற இடமாகிய இறைவர் திருமுன்பினின்றும் வடகுளத்தினைச் சார்தற்கு எழுந்தருளினார்.

குறிப்பு :—பிணி வருத்தம் ஒழித்தருள வேண்டும் என்று பாவிய பதிகம் கிடைத்திலது ! இப்போது உள்ள "மின்னுமா மேகங்கள்" என்ற பதிகம் வடகுளத்திற் குளித்து நோய் நீங்கி "அக்கணமே மணியொளி சேர் திருமேனி யாயின" (3453) பின் மகிழ்ந்து போற்றியது. 298

3453. மிக்கபுனற் றீர்த்தத்தின் முன்னணைந்து வேதமெலாந்
தொக்கவடி வாயிருந்த துருத்தியார் தமைத்தொழுது
புக்கதனின் முழுகுதலும் புதியபிணி யதுநீங்கி
அக்கணமே மணியொளிசேர் திருமேனி யாயினார். ௨௯௯

(இ - ள்) மிக்க...அணைந்து - மிகுந்த நீரினையுடைய வடகுளமாகிய அத் தீர்த்தத்தின் முன் சென்று சார்ந்து; வேதமெலாம்...தொழுது - வேதங்கள் எல்லாம் கூடிய வடிவமேயாயிருந்த திருத்துருத்தி யிறைவரைத்தொழுது; புக்கதனில்...நீங்கி-அத் தீர்த்தத்தினுள்ளே புகுந்து முழுகினவுடன் புதிய பிணி நீங்கி ; அக்கணமே... ஆயினார்-அந்தக் கணத்திலேயே மணியின் ஒளி பொருந்திய திருமேனியாக ஆயினார்.

(வி - ரை) மிக்க புனல் தீர்த்தத்தின்முன் - மிக்க - இறைவரது அட்ட மூர்த்தங்களுள் ஒன்றாகி அகமும் புறமும் தூய்மை செய்யும் அருட்டன்மை மிகப்பெற்ற என்ற குறிப்பு. தீர்த்தம் - தூய்மை என்பது அதனையுடைய நீருக்கு ஆகி, மேலும் அந்நீர் நிற்கும் குளத்துக்காகி வந்தது ; இருமடியாகு பெயர் ; விளக்கிருக்கும் இடத்தையும் விளக்கென்றாற் போல.

வேத மேலாம் தோக்க வடிவாயிருந்த - வேதங்களிற் கூறப்படும் இறைமைத் தன்மைகள் யாவும் ஒருங்கே தொகுதியாய்க் கூடி விளங்க வெளிப்பட்டுக் காண வீற்றிருக்கும் இறைவர்.

துருத்தியார்தமைத் தொழுது - அதனிற் - புக்கு முழுகுதலும் - நீராடும் போது இறைவரைத் தொழுது துதித்து மூழ்குதல் வேண்டு மென்பது விதி ; " உடையான் பொற்பாத, மேத்தி யிருஞ்சுனைநீ ராடேலோ ரெம்பாவாய் " " பாதத் திறம்பாடி யாடேலோ ரெம்பாவாய்" "வித்தகர்தாள், - வாயார நாம்பாடி, ஏருருவப் பூம்புனல் பாய்ந் தாடேலோ ரெம்பாவாய் " "நங்கள் பெருமானைப் பாடி நலந்திகழப், பங்கயப் பூம் புனல்பாயந் தாடேலோ ரெம்பாவாய் " என்பன முதலாக வரும் (திருவெம்) திருவாசகக் கருத்துக்கள் காண்க. இங்கு, அதன் மேலும், இறைவரது ஆணைவழிக் குளிக்கின்றாராதலின் அவரைநினைந்து தொழுதல் சிறப்பு விதியுமாம். " கங்கை யாடிலென் காவிரி யாடிலென்...எங்குமீச னெனாதவர்க் கில்லையே" "கோடி தீர்த்தங் கலந்து குளித்தவை, ஆடி னாலும் அரனுக்கன் பில்லையேல், ஒடு நீரினை யோட்டைக் குடத்தட்டி, மூடி வைத்திட்ட மூர்க்கனோ டொக்குமே " (அரசுகள் - பாவநாசத் திருக்குறுந்தொகை) என்ற திருவாக்குக்கள் ஈண்டு நினைவு கூர்தற் பாலன. இறைவரது அருளே இந்நீரினுக்கு இத்தன்மை தந்ததாம் என்ற உணர்வுடன் போற்றிக் குளித்தல் வேண்டுமென்பது ஆணை.

புதியபிணி - முன் இல்லாது இடையில் நேர்ந்த பிணி. இது வெப்புக் காரணமாக நம்பிகளது உடலைப்பற்றிய நோய் என்பது கர்ணபரம்பரை.

அக்கணமே...ஆயினார் - அக்கணமே - முழுகிய அப்பொழுதே ; "உற்றநோய் இற்றையே யுறவொழித் தானை" பதிகம் (5); மணிஒளிசேர் திருமேனி - மணி - செம்மணி ; மணியின் ஒளி அதனினின்றும் பிரிக்கப் படாத இயல்பின் உள்ளது போல் இங்கு நம்பிகளது திருமேனியிற் பெற்ற ஒளியும் அவரது திருமேனியின் இயல்பாகிய முன்னை ஒளி என்பது குறிப்பு ; " கண்களெண் ணிலாத வேண்டுங் காளையைக் காண " (171) என்பது முதலியவை காண்க ; அழகாகிய இறைவரது திருமேனியழகு வாய்க்கப் பெற்ற தன்மையால் சுந்தரர் என்ற திருநாம முடைமையும், சிறுவயதில் தெருவிற் சிறுதேருருட்டும் பொழுது நரசிங்க முனையர் என்னும் நாடுவா முரசர் கண்டு பரவருங் காதல் கூர்ந்தமையும், " அங்க ணெரொளி யாயிர ஞாயிறு பொங்கு பேரொளி போன்றுமுன் றோன்றிட", "வென்ற பேரொளியார்" என்ற தன்மைகளும் ஈண்டு நினைவு கூர்தற் பாலன ; சேர் - முழுகுதலினால் முன்னிலைமை வரப்பெற்ற ; திருமேனி ஆயினார்-ஆக்கச்சொல் முன்னை நிலைவந்தது என்ற பொருடந்து நின்றது.

நீங்க—என்பதும் பாடம். 299

3454. கண்டவர்க ளதிசயிப்பக் கரையேறி யுடைபுனைந்து
மண்டுபெருங் காதலினாற் கோயிலினை வந்தடைந்து
தொண்டரெதிர் "மின்னுமா மேக"மெனுஞ் சொற்பதிகம்
எண்டிசையு மறிந்துய்ய வேழிசையா லெடுத்திசைத்தார். ௩௦௦

(இ - ள்) கண்டவர்கள் அதிசயிப்ப - கண்டவர்கள் அதிசயமடையும்படி; கரை ஏறி...அடைந்து - வடகுளத்தின் கரையினை ஏறி ஈரம்மாற்றி வேறு ஆடைபுனைந்து கொண்டு, மிகுந்த பெரிய காதலினாலே திருக்கோயிலினை வந்து சேர்ந்து; தொண்டர் எதிர் - தொண்டர்களுக் கெதிரில் ; மின்னுமா மேகம் எனும் சொற்பதிகம் - மின்

னுமா மேகம் என்று தொடங்கும் சொல் நிறைந்த திருப்பதிகத்தினை ; எண்திசையும் ...எடுத்திசைத்தார் - எட்டுத்திக்குக்களில் உள்ளவர்களும் அறிந்து உய்யும்பொருட்டு ஏழிசைகளும் பொருந்த எடுத்துப் பாடியருளினார்.

(வி - ரை) கண்டவர்கள் அதிசயிப்ப - மூழ்குமுன் இருந்த நம்பிகளது திருமேனியிற் சார்ந்த பிணிப்பட்ட நிலையினையும், மூழ்கி எழுந்தவுடனே அது நீங்கி மணியொளி சேர் திருமேனியாயின நிலையினையும் நேரிற் கண்ட மக்கள் அந்தோ ஈது ஓர் அதிசயம் கண்டோம் என்று அதிசயம் கொள்ள ; "அதிசயங் கண்டாமே" (திருவா).

உடைபுனைந்து - குளிக்கும் போது அணிந்திருந்த ஈர உடையினை நீக்கி வேறு உலர்ந்த உடையினை அணிந்து.

கோயிலினை - திருமாளிகையினை ; வந்து - வடகுளத் தீர்த்தக் கரையினின்றும் கோயிலுக்கு வந்து.

தொண்டர் எதிர் - இப்பதிகம் கோயிலினுள் இறைவர் திருமுன்பன்றிக் கோயிலில் அங்குக் கூடியிருந்த திருதொண்டர்களெதிரே பாடியருளப்பட்டது ; "என்னுடம் படும்பிணி யிடர்கெடுத் தானை...நான் மறக்குமாறு என்னை ?" என்று பதிகத்துள் இறைவரைப் படர்க்கை யிட்டு வைத்துக் கூறும் வகையால் இப் பதிகம் தொண்டர்களின்முன் பாடியருளப் பட்ட தென்பது போதரும் ; தொண்டர்களைத் தவிர ஏனை உலகர்களை முன்னிலைப் படுத்திப் பேசும் நிலை எந்தம் பெருமக்களிடம் நிகழா தென்பது ; உலகரை வழிப்படுத்தி ஆணையிடும் நிலை வேறு.

எண்டிசையும் அறிந்துய்ய - "நான் பெற்ற இன்பம் பெறுகவிவ் வையகம்" (திருமந்) என்றபடி இவ்வருட் பெருமையினை அறிந்து உலக முய்யச் செய்தல் பதிகக் குறிப்பாகும். தம்பால் இறைவர் செய்த பேரருளை வியந்து போற்றும் வகையும் ஒரு குறிப்பாம்.

மின்னுமா மேகம் - பதிகத் தொடக்கமாகிய முதற் குறிப்பு. 300

## திருத்துருத்தியும் திருவேள்விக் குடியும்

திருச்சிற்றம்பலம் பண் - காந்தாரம்

மின்னுமா மேகங்கள் பொழிந்திழிந் தருவி
வெடில்படக் கரையொடுந் திரைகொணர்ந் தெற்றும்
அன்னமாங் காவிரி யகன்கரை யுறைவா
ரடியிணை தொழுதெழு மன்பரா மடியார்
சொன்னவா றறிவார் துருத்தியார் வேள்விக்
குடியுளா ரடிகளைச் செடியனே னுயேன்
என்னைநான் மறக்குமா றெம்பெரு மானை
யென்னுடம் படும்பிணி யிடர்கெடுத் தானை. (1)

மங்கையோர் கூறுகந் தேறுகந் தேறி
மாறலார் திரிபுர நீறெழச் செற்ற
வங்கையான் கழலடி யன்றிமற் றறியா
னடியவர்க் கடியவன் றேழவனு நான்
கங்கையார் காவிரித் துருத்தியார் வேள்விக்
குடியுளா ரடிகளைச் சேர்த்திய பாடல்
தங்கையாற் றொழுதுதந் நாவின்மேற் கொள்வார்
தவநெறி சென்றம ருலகமாள் பவரே. (10)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—இறைவர் தம்பாற் செய்த அருளிப் பாட்டினை வியந்து போற்றி அதனை உலகுய்யும்படி தொண்டர்களின் எதிரே பாடியது. (3454)

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) இழிந்தருவி-இழிந்து வரும் அருவி; வேடில் பட-ஒலிக்குறிப்பு; வேடிபட-என்பது பாடமாயின் முழக்கம்; நறுமணமுமாம்; அன்னமாம்-அன்னங்கள் விளையாடும் ; அடியார் சொன்னவாறு அறிவார்-அடியார்கள் முன்னின்று முறையிடுமவற்றை அறிந்து அருள்புரிபவர் ; நம்பிகளது சரிதக் குறிப்பு; சொன்னவாறறிவார் - தலத்துச் சுவாமி பெயர்க் குறிப்பும் காண்க; துருத்தியார்...வேள்விக்குடியுளார் - எதிர் எதிராகக் காவிரியின் இருகரையிலும் உள்ளவை; தலவிசேடம் பார்க்க. (III-பக். உ௮௮.) மறக்குமாறு என்னே - என்க ; அடிகளை - எம்பெருமானை - இடர் கெடுத்தானை நாயேன் மறக்குமாறென்னே ? என்று கூட்டுக ; என்னே - எவ்வாறு ; எங்ஙனம்; மறக்குமாறில்லை என, வினா எதிர்மறை குறித்தது; "இவர் தன்மையறிவாரார் ?" (தேவா) என்புழிப் போல; செயப்படுபொருள் பின்னர் வந்ததும், மறக்குமாறின்மை முன் வைத்ததும் உறுதிப் பொருட்டு. இப்பதிகம் இவ்வாறு முடிபு கொள வைத்த தனிச்சிறப்புடையது ; பிணியிடர் - பிணியாகிய இடர் என்றும், பிணியால் வரும் இடர் என்றும் உரைக்க நின்றது ;—(2) கூடுமாறுள்ளன - அங்கங்கும் வந்து கூடும் கிளைநதிகளும் கால்களும்; வெள்ளத்தால் வந்து சேரும் மற்றைப் பண்டங்களும் என்றலும் குறிப்பு; மேற்பாட்டுப் பார்க்க. மறித்தல்-அழித்தல்; ஏனல்-தினை; ஐவனம்-மலையரிசி (683) ; குறிஞ்சிக் கருப்பொருள்கள் ; மாடு - பக்கம் ; கோங்கம்-மருதம் - பெருமரங்கள் ; பொருது - அலைத்துப் பறித்து ; தூலை - செய்கரை ; சேடியனேன் - தீயவன்;—(3) யானையின் கொம்பு - மலைபடு பண்டம்; குறிஞ்சிக்கரு ; கூட்டேய்த்தி - கூடிச் சேர்ந்து; தவம்...மூழ்க-போகர்-காமியம் பற்றித் தவநிலை நிற்போர்; யோகர்-சிவயோகியர் ; புலரி - வைகறை ; விடியல் ; தொடர்ந்தடும் கடும்பிணி - இடையில் கூடித் தொடர்ந்து வருத்தும் நோய் ;—(4) சந்தனத்துண்டம் - சந்தன மரக்கட்டைகள்; சந்தனம்-அகில் - மீளது-குறிஞ்சி கரு; கறி-கார்ப்பு என்றலுமாம் ; அருவிகள் - பலமுகமாகவும் மலையினின்றும் பெருகி வந்து கூடும் நிலை ; புன்புலங்கவர - மலைச் சாரலில் உள்ள புன்புலக்கானங்களின் பொருள்களை வெள்ளத்தில் அலைத்துக் கொண்டு ஓட ; கடலுற விளைப்பதே கருதி - கடலைச் சார ஓடும் முகமாய் ; "கருங் கடல் காண்பதே கருத்தாய்" (7 - 8); கருத்து - தற்குறிப்பேற்ற அணி ; கைபோய் எறியும் - அலைகளை வீசும் ; ஆசு - குற்றம் ;—(5) வேங்கை-குறிஞ்சிக்கரு ; வேங்கை மலர்கள் மிக உதிர்ந்து கிடத்தலின் அவற்றை அலைத்து வருதலை மலர் உந்தி என்றார். பொன்மலர் - பொன்போன்ற நிறமுடைய மலர் ; வேங்கைமலர்கள் பொன்னிறமுடையன ; இழிந்திழிந்தருவி - பலபடியும் பல அருவிகள் வந்து கூடுதல் குறிப்பு ; சுழிந்திழி - வெள்ளத்தின் வேகத்தினால் நீர்ச் சுழிகளுடன் வழிகின்ற ; " மாவினுந் திச்சுழி மலர்தன் மேல்வரும், சால்பினால்" (53) ; உற்றநோய் - இடையில் வந்து பொருந்திய பிணி ; "புதிய பிணி" (3453); பிதற்றுதல் - பலவாறும் போற்றுதல் ; இற்றையே - இன்றைக்கே - (குளத்தில் மூழ்கின) இப்பொழுதே ; " அக்கணமே " (3453) ; உற - அந்தமுற ; உறவு - பொருந்துதல் என்று கொண்டுரைத்தலுமாம் ; —(6) பொன் - பொற் சன்னங்கள் ; " செம்பொன் வார்கரை " (57); பொன்னி என்ற பெயரும் காண்க. இதுபற்றி முன் (57) உரைத்தவை பார்க்க ; வரன்றி - மணலுடன் வாரிக்கொண்டு; உம்-அசை ; நன்மலர் - கரையிருமருங்கும், மலை-காடு இவற்றில் வரும் வழியிலுமுள்ள மலர்ச் சோலைகளின் மலர்கள் ; அகழுமா அருங்கரை - வெள்ள நீர் இருகரையினையும் கீண்டு ஓடுதல் குறிப்பு ; வளம்படப் பெருகி - நீர்ப்

பெருக்கினாலும் எருச்சத்துக்களை அலைத்து வந்து பரவுதலாலும் நிலங்களை வளம்படச் செய்து ; ஆடுவார் பாவம் தீர்த்து - காவிரியின் புண்ணிய நீரின் இயல்பு ; இஃது இன்றும் கண்கூடாகக் காண்பது ; அஞ்சனம்-கரிய அழுக்குக்கள் ; அலம்பி - கழுவித் தூய்தாக்கி ;—(7) மராமரம் - குறிஞ்சிக் கரு ; காம்பீலி - கவரிமயிர் ; மூங்கிலுமாம். உரையும் - உரைக்கும்; பிறவினை; உலகறி பழவினை - இந்நோய் வினைப்பயன் என்று உலகம் புற அடையாளத்தாற் கண்டு கூறும்படி தோற்றமுடைய வினைவிளைவு ;—(8) உகள - பாய; துள்ள; நேர்தல் - தெளிதல்; ஆருமாறு - நிறைய நுகரும் வகை;—(9) பொன்கள்-வளம்பட - 6ம் பாட்டுப் பார்க்க. பீழ்ந்து - வேருடன் பறித்து; விலங்குமாறு-நினையாது ஒழிதல் ;—(10) மாறலார்-பகைவர் ; அடியவர்க்கடியவன் - திருத்தொண்டத் தொகை அருளிய குறிப்பும், வரலாறும் காண்க. தோழவன் - அடித்தொண்டன் ; கங்கையார் காவிரி - கங்கையும் தன் தூய்மை கருதி வந்தாடும் காவிரி; " கங்கையிற் புனிதமான காவிரி " ; கங்கையின் பகுதியே காவிரியாகப் பெருகியது என்றலுமாம்.

தலவிசேடம் :—திருத்துருத்தியும் வேள்விக்குடியும் - III - பக். ௨அஅ பார்க்க.

3455. பண்ணிறைந்த தமிழ்பாடிப் பரமர்திரு வருண்மறவா
தெண்ணிறைந்த தொண்டருடன் பணிந்தங்க ணுறைந்தேகி
உண்ணிறைந்த பதிபிறவு முடையவர்தாள் வணங்கிப்போய்க்
கண்ணிறைந்த திருவாரூர் முன்றோன்றக் காண்கின்றார்; ௩௦௧

3456. அன்றுதிரு நோக்கோன்ற லாரக்கண் டின்புற்றார்
நின்றுநில மிசைவீழ்ந்து நெடிதுயிர்த்து நேரிறைஞ்சி
வன்றொண்டர் திருவாரூர் மயங்குமா லையிற்புகுந்து
துன்றுசடைத் தூவாயார் தமைமுன்னந் தொழவணைந்தார். ௩௦௨

3455. (இ - ள்) பண் நிறைந்த...மறவாது - பண்பொருந்திய தமிழாகிய அத்திருப்பதிகத்தினைப் பாடி இறைவர் செய்த பேரருளினை மறவாமல் ; எண் நிறைந்த...உறைந்து - எண் நிறைந்த திருத்தொண்டர்களுடனே கூடி இறைவனை வணங்கி, அத்திருப்பதியில் தங்கி யிருந்து ; ஏகி - புறப்பட்டு மேற் சென்று ; உள் நிறைந்த...போய் - நினைவில் எப்போதும் நிறைவிற் கொண்ட இறைவரது பிறபதிகளிலும் இறைவரது திருவடிகளை வணங்கிப் போய் ; கண்ணிறைந்த...காண்கின்றார் - கண்ணாரக்காணும் காட்சி நிறைந்த திருவாரூர் தம் எதிரே தோன்றக் காண்கின்றாராகி ; ௩௦௧

3456. (இ - ள்) அன்று...இன்புற்றார் - அன்று தமது ஒரு திருக்கண்ணினால் நிறையக் கண்டும் இன்பம் முற்றப் பெறாதவராய் ; வன்றொண்டர் - வன்றொண்டராகிய நம்பிகள் ; நின்று...இறைஞ்சி - ஊரினைக் கண்ட அவ்விடத்தே நின்று நிலத்தின்மேல் விழுந்து எழுந்து பெருமூச் செறிந்து நேரே வணங்கி ; திருவாரூர்... புகுந்து - பொழுது மயங்கும் மாலைப் போதினில் திருவாரூரினுள்ளே புகுந்து ; துன்றுசடை...அணைந்தார் - நெருங்கிய சடையினையுடைய தூவாயாராகிய இறைவரை முன்னே தொழுவதற்கு அணைந்தருளினர். ௩௦௨

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3455. (வி - ரை) பண் நிறைந்த் தமிழ்பாடி - தமிழ்-முன்கூறிய (3454) மின்னுமா மேகங்கள் என்ற திருப்பதிகம் ; பண் - பதிகப்பண்ணாகிய காந்தாரப் பண்.

திரு அருள் மறவாது - " என்னை நான் மறக்குமாறு " என்று பாடியருளிய படியே மறவாமல்.

எண் நிறைந்த - எண்ணத்தில் சிவனை நிறைவு கொண்ட ; நிறைதல் - வேறொன்றற்கு மிடமில்லாது பொருந்துதல் ; சிவனையே எப்போதும் நினைவிற் கொண்ட என்பதாம் ; நம்பிகளது எண்ணத்தில் குடி கொண்ட என்றலுமாம் ; " அடியவர்க் கடியவன் றொழுவ னாரூரன் " (10) என்ற பதிகக் குறிப்பு.

தொண்டருடன் பணிந்து - வடகுளத்திற் குளித்துப் புதிய பிணி நீங்கிக் கோயிலினை அடைந்து இறைவரது திருமுன்பு செல்லாது அங்குக் கூடியிருந்த தொண்டர்களெதிரே பதிகம் பாடியருளினமையால் (3454), அங்குநின்றும் அத்திருத்தொண்டர்களுடன் கூடி இறைவர் திருமுன்பு சென்று பணிந்து என்க. தொண்டரெதிர் எடுத்திசைத்தல் இறைவரது ஒப்பற்ற அருளினைப் பாராட்டி அடியவர்கள்பால் எடுத்துச் சொல்லி அவர்களுடன் கூடியனுபவித்தல் ; இதனால் அவர்களுக்குத் திருவருளினை அறிவித்தலுடன் தமது மகிழ்ச்சி அன்பர்களுடன் கூடி எண்ணியபடியால் பெருக நிகழும் பயனும் உளதாகும்.

தொண்டர்கள் - நம்பிகளுடன் போந்தவர்கள் ; வட குளத்துக் குளி என்று பரமர் திருவருள் பெற்றபடி நம்பிகள் குளிக்கச் சென்றபோது இத்திருத் தொண்டர்கள் அவர் குளித்து வருமளவும் கோயிலின்கண் தங்கினர், குளிக்கும் போதும் உடன் செல்லல் மரபன்றாதலின் ; குளித்து வந்தபோது கண்ட நிலையினாலே திருமேனி பிணி நீங்கிய நிலை தொண்டர்கள் அறியவாராது; ஆதலின் நீங்கள் காணும் இவ்வாறு இடர் கெடுத்தானை நான் மறக்குமாறென்னை ? என்று திருவருளினைப் பாராட்டும் வகையாற் றிருப்பதிகம் அருளிய குறிப்பும் காண்க.

உள் நிறைந்த - எப்போதும் தமது உள்ளத்திற் கொண்டிருந்த ; " இன்னும் பல்லாறுல கினினம்புகழ் பாடென்றுறு பரிவின்......அருள் செய்தான் " (222) என்றபடி தடுத்து ஆட்கொள்ளப் பெற்ற அன்றே இறைவரது ஆணை பெற்றாராதலின் அன்று முதலாக இறைவரது பதிகளை நினைந்து நினைந்து சென்று சென்று வணங்குதலே நியமமாக எண்ணத்தில் கொண்ட என்பதாம் ; பிறவும் - பிறவற்றின்கண்ணும் ; ஏழனுருபு தொக்கது.

கண் நிறைந்த-கண்டகண் மீளாதபடி தெவிட்டாத காட்சியின் அழகு நிறைந்த; " அணியாரூர் " " குளிராரூர் " " விழவாரூர் " " வளராரூர் " " தண்ணாரூர் " என்று அரசுகள் போற்றும் திறம் கருதுக. " சோலையாரூரானை " " பழனத் திரு அணியாரூரானை " " தாமரைப் பொய்கையாரூரானை " என்று பலவாறும் மனத்தின் கண் நிறையக் கண்டுகொண்டு நம்பிகள் திளைத்திருந்த என்றலுமாம்.

காண்கின்றார் - காண்கின்றாராகி ; முற்றெச்சம். காண்கின்றார் - இன்புறார் - நின்று இறைஞ்சிப் புகுந்து - அணைந்தார் என வரும் பாட்டுடன் கூட்டி முடிக்க.

உறைந்தேத்தி—என்பதும் பாடம். 301

3456. (வி - ரை) திருநோக்கு ஒன்றால் - காஞ்சியில் மீளப்பெற்ற ஒரு கண் (இடக்கண்) பார்வையினால்.

ஆரக்கண்டும் - என்று உம்மை விரிக்க ; இன்புறார் - ஆர்வம் நிறையப் பெறாராகி ; இங்கு இன்புற்றார் - என்று பாடங்கொள்வாருமுண்டு ; பின்னர் " வாழ்ந்த மலர்க் கண்ணொன்று லாராமன் மனமழிவார்" (3461) என்றும், "கண்களாற் பருகு

தற்கு ; மருவார்வத் துடன்மற்றைக் கண்தாரீர் எனவணங்கி " (3462) என்றும் வருவனவாற்றால் அப்பாடத்தின் பொருத்தம் ஆராயத்தக்கது.

**நின்று** - மேலடி எடுத்துச் செல்லுதலை நிறுத்தி நின்று.

**நிலமிசை வீழ்ந்து** - தலத்தினைக் கண்ட இடத்தே நிலமுற விழுந்து வணங்குதல் முறை ; இங்கு அவசமானார்போல விழுந்து என்ற குறிப்புமாம்.

**நெடிதுயிர்த்தல்** - பெருமூச்செறிதல் ; இஃது ஆற்றாமையுடன் கூடிய வருத்தத்தால் நிகழ்வது ; முன் எல்லாம் இரண்டு கண்ணுடன் கண்டவர் இப்போது ஒரு கண்ணால் பார்க்க மன மாற்றாத வருத்தத்தால் நெடிதுயிர்த்தார்.

**நேர் இறைஞ்சி** - எழுந்து நேர் நின்று வணங்கி ; நகரை நேர் நோக்கி என்றலுமாம்.

**மயங்கு மாலை** - சூரியன் அத்தமனமான பின், ஒளி மங்கி இருள் புகுதும் அந்தி வேளை ; கண் மயங்கும் நேரம் ; காட்டுமொளி குறைதலாற் கண்பார்வை மயங்கும் கண்ணின் மயக்கத்தை அது உளதாகும் நேரத்தின் மேலேற்றிக் கூறியபடி. இவ்வாறன்றி, மயங்குதல் - கலத்தல் என்று கொண்டு (இரவும் பகலும்) மயங்கின மாலைக் காலம் என்பாருமுண்டு.

**தூவாயார்** - பரவையுண் மண்டளித் திருக்கோயிலில் எழுந்தருளிய இறைவர் பெயர் ; தூ - உண்ணுகின்ற ; வாயார் - வாயினை உடையவர் ; ஊழிப்பெரு வெள்ளம் திருவாரூர்மேற் பரவி மூழ்குவிக்காமை அவ்வெள்ளத்தினை உண்பவர் என்ற காரணம்பற்றி வந்த பெயர் என்பது வரலாறு.

**பரவையுண் மண்டளி** - என்ற பெயர்ப் (பரவை-கடல் ; உண்-பெருகிவாராமல் உண்கின்ற) பொருளும் காண்க. " தூவாயா !" என்ற இப் பதிகத் தொடக்கம் காண்க ; அக்குறிப்புப்பட இப் பெயராற் கூறினார் ; இதனையே " தூவாயா " என்றெடுத்தே (3557) என மேற் கூறுதலும் காண்க. தலவிசேடம் பார்க்க.

**முன்னம்** - திருமூலட்டானத்தில் சென்று தொழுவதன் முன்னம்.

**குறிப்பு** - திருவாரூரினுள் மயங்குமாலையிற் புகுதலும், தூவாயாரை முன்னந் தொழுது பாடுதலும், அங்கு வேறிருந்து பின்னர்த் திருமூலத்தானத்துள் இடை தெரிந்து திரு அத்தயாமத்து இறைஞ்ச அணைவதும் ஆகிய இந்நிலைகள், நம்பிகள் திருவாரூருள்ளும் திருக்கோயிலுள்ளும் பிரானார் திருமுன்பும் அடியார்கள் திருமுன்பும் ஒரு கண்ணில்லாத அந்நிலையிற் சென்று காணவும் காணப்படவும் மனம் ஒருப்படாது வருந்திய தன்மை குறிப்பன.

**தூவாயார்**-என்பதற்கு முன் உரைத்தவாறன்றித், தூ ஆயார் - பற்றுக் கோடாயினவர் ; தூ - பற்றுக் கோடாதலை ; " மனந்தூய்மை செய்வினை தூய்மை யிரண்டும், மினந்தூய்மை தூவா வரும் " என்ற திருக்குறளானுணர்க ; தூய்மையுடைய வேத சிவாகம வாக்கியாதலின் தூவாயா ரென்றலுமொன்று என்றுரைத்தனர் இராமலிங்கத் தம்பிரானார். 302

3457. பொங்குதிருத் தொண்டருட னுள்ளணைந்து புக்கிறைஞ்சித்
தங்கவிசைத் திருப்பதிகம் "தூவாயா!" வென்றெடுத்தே
" இங்கெமது துயர்களைந்து கண்காணக் காட்டா"யென்
றங்கணர்தம் முன்னின்று பாடியருந் தமிழ்புனைந்தார். ௩௦௩

(இ - ள்) பொங்கு...இறைஞ்சி - பெருகும் திருத்தொண்டர்களுடனே கூடிக் கோயிலின் உள்ளே சேர்ந்து திருமுன்பு புகுந்து வணங்கி ; தங்க...எடுத்தே -

பெருமையுடைய இசையோடுங் கூடிய திருப்பதிகத்தினைத் " தூவாயா !" என்று தொடங்கி ; இங்கு...என்று - இங்கே எம்முடைய துன்பத்தினைப் போக்கிக் கண் காணும்படிக் காட்டுதல் வேண்டும் என்ற கருத்துடன் ; அங்கணர் தம்...புனைந்தார் - இறைவர் திருமுன்பு நின்று பாடி அரிய தமிழ்ப் பதிகமாகிய மாலையினைப் புனைந் தருளினர்.

(வி - ரை) துங்க இசை-துங்கம்-உயர்ச்சி; பதிகப் பண்ணாகிய பண் பஞ்சமம்.

" தூவாயா !" - பதிகத் தொடக்கமாகிய முதற் குறிப்பு ; உண்ணுகின்ற வாயினையுடையவரே !; தூ - உண்ணுதல். எமது துக்கங்களைப் போக்குபவர் என்பதும் குறிப்பு.

" இங்கெமது...காட்டாய்" என்று - பதிகக் கருத்தாகிய குறிப்பு ; எமது - பதிகத்துள் தொண்டு செய்வார் - நல்லன சொல்லுவார் - ஆகமசீலர் - என்றிவ்வாறு அடியார்களைக் குறித்து வேண்டுதலின் எமது என்று பன்மையிற் கூறினார்.

அங்கணர் - அங்கண்மை - கண்ணோட்டம் - உடையவர் ; அழகிய கண்ணுடையவர் என்றலுமாம். கண்பெறக் கேட்கின்றமையால் கண்ணுடையவரே கண் தரவல்லவர் என்ற குறிப்பும்பெற இத்தன்மை பற்றிக் கூறினார்.

தமிழ் - தமிழ்ப் பதிகமாகிய மாலை. 303

திருஆரூர்ப் பரவையுண் மண்டளி

திருச்சிற்றம்பலம் பண் - பஞ்சமம்

தூவாயா தொண்டுசெய் வார்படு துக்கங்கள்
காவாயே கண்டுகொண் டாரைவர் காக்கினும்
நாவாயா லுன்னையே நல்லன சொல்லுவேற்
காவாவென் பரவையுண் மண்டளி யம்மானே. (1)

கரந்தையும் வன்னியு மத்தமுங் கூவிளம்
பரந்தசீர்ப் பரவையுண் மண்டளி யம்மானை
நிரம்பிய ஆரூ ருரைத்தன பத்திவை
விரும்புவார் மேலையார் மேலையார் மேலாரே. (10)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—" தூவாயா ! இங்கெமது துயர்களைந்து கண்காணக் காட்டாய் என்று பாடியது. (3457) ஆசிரியர் காட்டியருளியவாறு.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) தூவாயா - சுவாமி பெயர் ; துக்கங்கள் காவாயே - துயர்கள் நலிவு செய்யாமற் காக்க வேண்டும் ; காவாய் - காக்க ; ஏகாரம் தேற்றம் ; ஐவர்காக்கினும் - மாறி நின்று மயக்கும் வஞ்சப் புலனைந்தும் என்னை உன்வழிச் செல்லாது சிறைப்படுத்திக் காவல் புரியினும் ; 4வது பாட்டுப் பார்க்க ; நாவாயால்...சொல்லுவேற்கு - நாவினால் உன்னை நன்மையே சொல்லித் துதிப்பவனாகிய எனக்கு ; ஆவா ! - இரக்கச் சொல் ; என் - என்று அபயம் சொல்க ; நல்லன சொல்லுவார் (3) ; ஐவர் காக்கினும் (4) ;—(2) புலவர்க்கு - தம்மை உளப்படுத்திப் படர்க்கையிற் கூறிய நயம் காண்க ; நினைவாரை - (5) ஆகமசீலர் (6) ; போற்றலர்ந்தன்னானே - தன்னைப் புகழ்ந்திடும் நற்சோதி - போற்றலாகும் அளவும் புகழும் புகழ்களெல்லாம் உன்னையே வந்து சாரும் சுயஞ்சோதியே ; புலவர் எவ்வாறும் எவ்வளவும் போற்றினும் அவை யாவும் உன்னையே வந்து சாரும் தன்மை

என்றபடி ;—(3) நாமாறது - நாவினால் இடையறாது ; போமாறென் ? - நீ அருளா விடில் அவர்க்குப் போமிடம் எது ; போக்கு - புகல்; ஆமாறென் - அருள் செய்தால் உமக்கு என்ன நட்டம் ? ; " என்றான் கெட்டது !" (திருவா) : அருள் செய்யாம லிருந்து வேறு உமது அருளை என்ன செய்வது உம் கருத்து ; வேறு உமக்கு ஆகும் வழி எது ?—(4) நோக்குவே னுன்னையே...காக்கிலும் - 1வது பாட்டில் ஐவர் காக்கிலும் என்ற கருத்து ; எனது கண்ணால் உன்னையே நன்கு நோக்குதலல்லது வேறு எதையும் நோக்காதிருந்தேனை அது செய்யாதவாறு கெடுப்பித்து அக்கேட் டினையே காக்கின்றார் ; வாக்கெனினும்...ஆர்க்கின்றேன் - கண்ணாற் காணமற் காக்கினும் வாக்கினால் மாலைபுனைந்து அதனால் உன்னை மனத்துட் கட்டுகின்றேன் ; ஆர்த்தல் - கட்டுதல் ; ஆர்த்தல் - வியந்தெழுதல் என்ற குறிப்புமாம் ;—(5) நெஞ்சே ...நினைவாரை - உன்னையன்றி நெஞ்சில் வேறெதனையும் எண்ணாத என்னையும் என் போன்றாரையும் ; காண இயலாமையாயினும் அதனால் மனம் வேறுபட்டு வருந்தி யொழியாது உன்னை நினைப்பினுட் கொண்ட என்பார் நெஞ்சே நினைவாரை என் றார் ; கண்ணில்லாவிடினும் நினைக்க நெஞ்சுண்டு என்பது ; " எதும் பெறாவிடி னெஞ்சுண் டன்றே " (பட்டினத்தார் ; கழுமலமும். கோ - 12) ;—(6) ஆகமசீலர்- சிவாகமங்களின் வழி ஒழுகிச் சிவபூசை செய்வோர் ; " தங்கோனைத் தவத்தாலே தத்துவத்தின் வழிபடுவோர் " " முதற்சைவ ராமுனிவர் " (ஆதிசைவர்) ; தண் தமிழ் நூற்புலவாணர்க் கோரம்மானே - " புலவர்க்கு " (2) ;—(7) விண்டானே - புலவாணர் - சங்கப்புலவர் ; அம்மான் - தலைவர் (மறையாகமங்கள்) சொன்னவரே; மேலையார்...மேலாய எண்டானே - மேலையார் - மக்களுள் உயர்ந்தோர் ; (அவ ரின்) மேலையார்...தேவருள் உயர்ந்தோர் ; மேலாய எண் - அவர் எல்லார்க்கும் மேலாகிய தேவதேவ தேவராக எண்ணப்படுபவர் ; எழுத்தொடு...கண்டானே - எழுத்தும் சொல்லும் பொருளும் என்ற தமிழ் இலக்கணப் பகுதிகள் எல்லாவற்றை யும் முன் சங்கத்திலிருந்து ஆய்ந்தவர் - தலைச் சங்கப்புலவர் ; முன்பாட்டில் " தண் டமிழ் நூற்புலவர்க்கோ ரம்மான் " என்றதனைத் தொடர்ந்து கூறியது ; " கூடலி னாய்ந்த வொண் டீந்தமிழ் " (திருக்கோவையார்) ; தமிழ்நூற் பொருளாராய்ந்து பொருணூல் கண்டருளிய வரலாற்றுக் குறிப்புமாம் ; " சொல்லுவார் சொற்பொரு ளெல்லாஞ் சோதிப்பான் " (தேவா.) " உரையின் வரையும் பொருளி னளவு, மிருவகைப் பட்ட வெல்லையுங் கடந்து " (கோயினான்) என்ற குறிப்புமாம் ; காணு தல் - செய்தல் என்றலுமாம். " முதல்வன் கண்டது முதனூல் " (தொல்) ; கண் தனைக் கொண்டிட்டுக் காட்டாயே - கண்கொடுத்துக் காட்டியருளுவாய் ; " கண் காணக் காட்டாய் என்று " (3457) என்று இதனைப் பதிகக் கருத்தாக ஆசிரியர் எடுத்துக் காட்டியருளியது காண்க ; அண்டானே - அண்டனே ;—(8) கார்முகில் மிகக்கருமை குறித்தது ; மெய்பற்றியதனுடன் பயன்பற்றியவுவமுமாம் ; கூற்றன் - சொல்லுக்கிலக்கியமாக வுள்ளவர் ; கூற்று - சொல் ;—(9) நல்லன செய்வினை செய்யாத என்க ; கண்டதே கண்டதே காமுறும் - எண்ணிப் பாராது கண்டகண்ட வாறு மனவிச்சை செலுத்தும் ; காமுறும் - இச்சிக்கும் ; கூறுமாறு - கூறத்தக்க படி ;—(10) மேலையார் மேலையார் மேலாரே - விரும்புவார் மேலானவர்கள் ; அவர்கள் மேலை வானவர்க்கும் மேலாவர் என்று பயன் கூறியவாறு.

தலவிசேடம்:—திருவாரூர்ப் பரவையுண் மண்டளி - சோழ நாட்டிற் காவிரித் தென்கரை 89 வது பதி ; இது துலாநாயனூர் கோயில் என்று வழங்கப் பெறும் ; ஒரு காலத்துத் திருவாரூரின் மேல் வருணன் ஏவலாற் பெருகி எழுந்து

வந்த கடலை உண்டு நிலைபெற்ற காரணத்தால் இப்பெயர் பெற்றது; தூவாய் நாயனார் என்பது துலாநாயனார் என உலக வழக்கில் மருவியது. தூவாயா என்ற பெயர் பதிகத் தொடக்கமாதல் காண்க; (தூ- உண்கின்ற; பரவை - கடல்; உண் - உண்கின்ற); மண்தளி - நிலவுலகத்தில் கடலுள் மூழ்கிவிடாது நிலைத்த கோயில் என்பது; துர்வாச முனிவர் பூசித்துப் பேறு பெற்ற பதி; இவர் திருவுருவம் விநாயகர் கோயிலில் தாபித்து வழிபடப் பெறுகின்றது. சுவாமி - மண்டலேசுவரர்; சுவாமியின் திருமேனி பளிங்குபோல விளங்குவது. அம்மை - பஞ்சினு மெல்லடியாயம்மை; பதிகம் 1.

இது திருவாரூர்க் கீழை வீதியில், பெரிய கோயில் மகாரத நிலைக்கு அணிமையில் தென் மேற்கில் உள்ளது.

3458. ஆறணியுஞ் சடையாரைத் தொழுதுபுறம் போந்தங்கண்
வேறிருந்து திருத்தொண்டர் விரவுவா ருடன்கூடி
ஏறுயர்த்தார் திருமூலட் டானத்து ளிடைதேரிந்து
மாறிறிரு வத்தயா மத்திறைஞ்ச வந்தணைந்தார். ௩௦௪

(இ - ள்) ஆறணியும்...புறம்போந்து - கங்கையை முடித்த சடையினை உடைய இறைவரைத் தொழுது புறத்திற் போந்து; அங்கண் வேறிருந்து - அங்கு வேறுமோர் தனியிடத்தெழுந்தருளித் தங்கியிருந்து; திருத்தொண்டர்...கூடி - தம்முடன் பொருந்த வருவார்களாகிய திருத்தொண்டர்களுடனே கூடி; ஏறுயர்த்தார்...வந்தணைந்தார் - இடபக் கொடியினை உயர்த்திய இறைவரது திருமூலத்தானத்தின் கண் ஏற்ற சமயம் அறிந்து ஒப்பற்ற திரு அத்தயாமக் கால வழிபாட்டின்போது சார்ந்து வணங்க வந்து அணைந்தருளினர்.

(வி - ரை) அங்கண் வேறிருந்து — அத்திருக் கோயிலின் பக்கத்தில் தனியிடத்தில் தங்கி.

விரவுவார் திருத்தொண்டருடன் கூடி - தம்முடன் வந்தாரும் திருவாரூரில் வந்தாரும் ஆகிய திருத்தொண்டர்களுடனே.

திருமூலட்டானத்துள் - பூங்கோயிலினுள் புற்றிடங் கொண்ட பெருமான் திருமுன்பு.

இடைதேரிந்து - செல்லத் தக்க காலமறிந்து; திரு வத்தயாம வழிபாட்டு நேரம் தெரிந்து சென்றனர் என்பது; வழிபாட்டுக் காலமல்லாக் காலத்தில் செல்லலாகாது என்பது குறிப்பு; முன் 3456ன்கீழ் உரைத்த குறிப்புக்களும் இங்குப் பார்க்கத்தக்கன.

மாறில் திருவத்தயாமம் - மாறின்மை - வேண்டிய வேண்டியாங்கு வரம் தரப் பெறும் தன்மையில் ஒப்புயர்வற்ற வழிபாட்டுக் காலம் திருவத்தயாம மாகும் என்னும் தன்மை.

வந்து அணைந்தார் - பூங்கோயிலின் பக்கம் வந்து சார்ந்தனர்; உள்ளணைந்தமை மேற் கூறுவார். (3460)

விரவ வவருடன் கூடி—என்பதும் பாடம். 304

3459. ஆதிதிரு வன்பரெதி ரணையவவர் முகநோக்கிக்
கோதிலிசை யாற் "குருகு பாய" வெனக் கோத்தெடுத்தே
ஏதிலார் போல்வினவி யேசறவாற் றிருப்பதிகங்
காதல்புரி கைக்கிளையாற் பாடியே கலந்தணைவார், ௩௦௫

3460. சீர்பெருகு திருத்தேவா சிரியனைமுன் சென்றிறைஞ்சிக்
கார்விரவு கோபுரத்தைக் கைதொழுதே யுட்புகுந்து
தார்பெருகு பூங்கோயி றனைவணங்கிச் சார்ந்தணைவார்
ஆர்வமிகு பெருங்காத லாலவனி மேல்வீழ்ந்தார். ௬௦௬

3459. (இ - ள்) ஆதி...அணைய - ஆதியாகிய இறைவரது திருத்தொண்டர்கள் அங்கு எதிரே வந்தணையக் கண்டு; அவர் முகநோக்கி - அவர்களது முகத்தினை நோக்கி; கோதில்...வினவி - குற்றமற்ற இசையினோடு "குருகு பாய" என்று கோவை செய்து தொடங்கியே அயலார் போல வினவி; ஏசறவால்...கலந்தணைவார் - வருத்தத்தினாலே திருப்பதிகத்தினைக் காதல் புலப்படுக்கும் கைக்கிளைத் திணையில் வைத்துப் பாடியவாறே அவர்களுடன் கலந்தணைவாராகி, ௬௦௫

3460. (இ - ள்) சீர்...இறைஞ்சி - சிறப்புப் பெருகுகின்ற திருத்தேவாசிரியன் என்னும் மண்டபத்தினை முன்னர்ச் சென்று வணங்கி; கார் விரவு...உட்புகுந்து - மேகந் தவழ்கின்ற திருக்கோபுரத்தினைக் கைகூப்பி வணங்கி உள்ளே புகுந்து; தார் பெருகு...அணைவார் - மாலைகள் மிக்கு விளங்குகின்ற பூங்கோயில் என்னும் திருமாளிகையினை வணங்கிச் சார்ந்து அணைவாராய்; ஆர்வ மிகு...வீழ்ந்தார் - ஆசை பெருகுகின்ற பெரு விருப்பத்தினாலே நிலத்தின்மேல் வீழ்ந்தார். ௬௦௬

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3459. (வி - ரை) ஆதி - எல்லார்க்கும் முன்னவர்; "தேசமுமை யறிவதற்கு முன்னே" (அரசு); நிமித்த காரணர் என்றலுமாம்.

திரு அன்பர் எதிர் அணைய - நம்பிகள் திருக்கோயிலினை யணையும்போது அன்பர்கள் எதிரே வந்து எதிர்கொள்ளும் நிலையிற் சார.

அவர் முக நோக்கி - பதிகத்தினுள் "உணர்த்த வல்லீர்களே" என்பன வாதியாக முன்னிலைப் படுத்தி வருவன எல்லாம் எதிர் வந்த அன்பரை நோக்கித் தமது வருத்தத்தினை உணர்த்திப் புள்ளினங்களின் மேல்வைத்து வினவுவதுபோல் விண்ணப்பித்தபடி.

கோத்து எடுத்தே - புள்ளினங்கள் பலவற்றின் செயல்களும் விரவும்படி அவற்றை விளிக்கும் வகையில் தொகுத்து.

ஏதிலார் போல் வினவி - ஏதிலார் - அயலார்; முன் தொடர்ச்சியில்லாத அந்நியர்; "எந்தை யிருப்பது மாரூர் அவர் எம்மையு மாள்வரோ கேளீர்" என்று முதலில் திருவாரூருக்கு வந்தபோது அருளிய நிலையினும் நம்பிகள் தொண்டர்களை நோக்கி வினவினர்; அந்நிலை வேறு. அதனுள் ஒற்றுமையில் ஒற்றுமை நயமும், இங்கு ஒற்றுமையில் வேற்றுமை நயமும் புலப்பட அருளிய தமிழ் நயம் காண்க.

ஏசறவு - வருத்தம்; எண்ணி ஏக்கற்ற உரிய பொருள் பண்ணும் கிடைக்கப் பெறாத கவலையுடன் கூடிய மனநிலை.

காதல்புரி கைக்கிளை - விருப்பத்தின் மீக் கூர்தலினால் விளைந்த ஒருதலைக் காமத்தின் மன நிலை; கைக்கிளை - ஒருதலைக் காமம்; "ஒரு மருங்கு பற்றிய கேண்மை. இஃது எழாவதன் தொகை எனவே ஒருதலைக் காமமாயிற்று" என்பர் நச்சினார்க்கினியர் (தொல். பொ - 1).

கலந்து - எதிர் அணைந்த அன்பர்களுடன் கூடி; கலத்தல்-முன்னைக் கேண்மை நிகழ அளவளாவி ஒன்று கூடுதல்.

3460. (வி - ரை) திருத்தேவாசிரியனை முன் சென்று இறைஞ்சி - பூங்கோயி லிற் "சோதி மாமணி நீள்சுடர் முன்றில்சூழ், மூதெ யிற்றிரு வாயின்முன் னுயது" (136) "தேவா சிரிய னெனுந்திருக் காவணம்" (137); திருமுன்றிலினுள் ளணைந்த வுடன் முதலிற் காண உள்ளது தேவாசிரிய னாதலின் அதனை முன் இறைஞ்சினார்; அன்றியும் அடியார் கூட்டம் நிறைந்துள்ள இடமதுவே யாதலின் அடியார்களை முன் வணங்கிச் செல்லும் முறையாலும் முன் இறைஞ்சினார் என்க.

கார்விரவு கோபுரம் - இது தேவாசிரியனை வணங்கிச் சென்றவுடன் உள்ள சுவாமி கோயில் முதற் கோபுரம்; இது நம்பிகளுக்கு "எதிர்காணக் காட்டும்படி எதிர் தோன்றி நின்று" (336) "தில்லைவா ழந்தணர்தம் மடியார்க்கு மடியேன்" என்று திருத்தொண்டத் தொகைக்கு அடியெடுத்துக் கொடுத்தருளின இடம்.

பூங்கோயில் - புற்றிடங் கொண்டாரும் தியாகேசரும் எழுந்தருளியிருக்கும் திருமாளிகை.

பெருங் காதலால் அவனி மேல் வீழ்ந்தார் - காதல் தள்ள நிலமிசை வீழ்ந்தார்; தம்வச மிழந்தமையால் தம் செயலாக நிலம் பொருந்த வீழ்வதன்றி, உடல் கீழே விழும் நிலை என்றது குறிப்பு.

தேவாசிரியன்முன்—என்பதும் பாடம். 306

திருவாரூர்

திருச்சிற்றம்பலம் பண் - கொல்லி

குருகுபா யக்கொழுங் கரும்புக ணெரிந்தசா
றருகுபா யும்வய லந்தணு ரூரரைப்
பருகுமா றும்பணிந் தேத்துமா றுந்நினைந்
துருகுமா றும்மிவை யுணர்த்தவல் லீர்களே. (1)

பறக்குமெங் கிள்ளைகாள் பாடுமெம் பூவைகாள்
அறக்கணேன் னத்தத மடிகளா ரூரரை
மறக்ககில் லாமையும் வளைகணில் லாமையும்
உறக்கமில் லாமையு முணர்த்தவல் லீர்களே. (2)

நித்தமா கந்நினைந் துள்ளமேத் தித்தொழும்
அத்தனம் பொற்கழ லடிகளா ரூரரைச்
சித்தம்வைத் தபுகழ்ச் சிங்கடி யப்பன்மெய்ப்
பத்தனூ ரன்சொன்ன பாடுமின் பத்தரே. (11)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—முன் (3459) ஆசிரியர் காட்டியருளியவாறு. இது கடவுண் மாட்டு மானிடப் பெண்டிர் நயந்த பக்கத்தின்பாற்படும் என்பர்.

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) குருகு - நாரைகள் முதலிய பறவைகள்; பாய - கரும்புச் சோலைகளின் ஊடே பாய்தலால்; கொழுங் கரும்புகள் நெரிந்த சாறு - கொழுவிய கரும்புகள் முரிந்து நெரிந்ததால் ஒடிய சாறு; அருகுபாயும் வயல் - பக்கத்தில் உள்ள வயலில் பாய்தற்கிடமாகிய, கரும்புப் பயிரின் வளமும் நீர் வள மும் குறித்தவாறு; ஆரூரரைப் பருகுமாறும் - பருகுதல்; உருவகம்; மிக்க நீர் விடாய் கொண்டவன் நீர்பருகும் ஆர்வம் போன்று அவரது அருளினைக் கண்வழி மடுத்து அனுபவித்தல்; இதனை ஆசிரியர் பருகா.........பருகுதற்கு (3462)

என்று விரித்தருளுதல் காண்க. "தின்பன் கடிப்பன் இருத்துவன் றூனே" (திருமந். 9 - 332); "பருகுவ னன்ன ஆர்வத்த னாகி"; நினைந்து உருகுமாறு - நினைந்து நினைந்து மனமுருகுதல்; உணர்த்த வல்லீர்களே - அவர்பாற் சென்று உணர்த்துவீர்களா? வினா விண்ணப்பங் குறித்தது; வல்லுவீராகிற் உணர்த்துங்கள் என்றபடி; தலைவனைப் பிரிந்த தலைவி பிரிவாற்றாது தலைவன்பால் தூது விடுத்தல் என்னும் அகத்துறை; இப்பதிக முழுதும் இவ்வாறே காண்க. இதன் இயல்பெல்லாம் அகப்பொருணூல்களுட் கண்டு கொள்க; "காதல்புரி கைக்கிளையாற் பாடியே" (3453) என்று ஆசிரியர் இதனை விளக்கியது காண்க. தூது கைக்கிளைப் பகுதியைச் சார்ந்தது; இது எதிரணைந்த அன்பர்களை முக நோக்கிக் கூறிய தென்பதும் ஆசிரியர் காட்டியருளியது காண்க; முன்னரும் "அவர் எம்மையு மாள்வரோ கேளீர்" என்று அருளியதும், நினைவு கூர்க ;—(2) எம் கிள்ளைகாள் - எம் பூவைகாள் - எம் என்பது தூதுசெலுத்துவோரை அன்பினாற் றம்மவராக்கிக் கொள்ளும் நிலை. அறக்கண் என்னத்தகும் - "இனையவகை - யெண்ணிறந்தோர்க் கருள்புரிந்து, முனைவரவர் வீற்றிருந்த" என்றதும் திருநகரச் சிறப்பில் மனுநீதிச் சோழர் சரித வினைவாகிய திருவருள் வெளிப்பாடும் காண்க. அறக்கண் - அறத்துக் கிருப்பிடம்; அறவுருவன்; "நீதிபலவும் தன்னதுரு வாமென மிகுத்ததவ நீதியொடு தானமர்விடம்" (தேவா); இறைவர் இங்கு "அறவாழியந் தண"ராய்த் தியாகேசராகி அரசாட்சி புரியும் நிலையும் கருதுக. மேற்பாட்டில் "ஆளும்" என்னும் குறிப்பும் காண்க. மறக்க கில்லாமை முதலியன பிரிவாற்றாது வருந்தும் தலைவியின் நிலைகள் ;—(3) சூழும் - சுற்றிலும் பல பக்கங்களிலும்; வாழுமாறு முதலியவையும் முன்கூறிய நிலைகள்; வாழுமாறு - பிரிவாற்றாமையால் இறந்து படாது "உயிரொன்றுந் தாங்கி" நின்ற நிலை என்பது குறிப்பு (318); இன்னும் உயிர் மட்டும் தங்கியிருக்கின்ற தென்பது; "கொல்லாது சூலைநோய்" (1322); வளை கழலுதல் - ஆற்றாமையால் உடல் மெலிந்து வளை நில்லாது கழலுதல். எனக்கு ஊழுமாறு - ஊழினைப்பற்றி நினைந்திரங்குதல் ;—(4) அக்கிரமங்கள் - தனித்துப் பிரிய விட்டுப் பார்த்திருந்து வருத்துதல் தகாத செயல் என்பது; "தக்கதன்று தமது பெருமைக்கே" (தேவா); அ - அந்த என்று கொண்டு, தமது நியதியாகிய அந்தக் கிரமப்படியே என்றலும் குறிப்பு. வக்கிரம் - திறம்புதல்; உக்கிரம் - கோபம்; அவர் அக்கிரமங்கள் செய்யினும் அடியோம் அடிமைத் திறத்திற் பிறழ்தலேனும் அவர்பாற் பிணங்குதலேனும் செய்திலோம் என்பது ;—(5) அலை - அலைத்தல்; வருத்துதல்; கலைகள் சோர்தல் - வளைகழலுதல் - முலைகள் பீர் கொள்ளுதல்-பிரிவாற்றாமையின் வரும் நிலைகள்; பீர்-பீர்க்கம்பூ நிறமுடைய பசலை; "காமத் தீக்கனன் றெரிந்துமெய் உண்டவாறும்" என்று இதன் காரணத்தை மேற் பாட்டில் விரித்தல் காண்க ;—(6) மெய் உண்டவாறு - உடம்பைச் சுருக்கி இளைக்கச் செய்தவாறு ;—(7) ஆனலம் - புதுநலம்; ஆனைந்து என்றலுமாம்; ஆன் - ஆன்மா என்று கொண்டு உயிரின் நலம் என்றலுமாம். பயந்து-பசப்புற்று; பொன் ஊனலம்-பொன் பிதிர்ந்தன்ன பசலை; இது பிரிவாற்றாமையான் வருவது; தேன் - இனிமை; —(8) அற்றம் - துன்பம்; மெலிவு; பற்று - பாடு - உற்று - பற்றுக்கோடாகிய நிலைகள் ;—(9) சுரவநாற - குராமலர்கள் மணஞ்செய்ய; பாடநின்று அரவமாடும் - குயிலும் வண்டும் பண்பாட அப் பாட்டுக் கேள்வியில் ஈடுண்டு தம்மை மறந்து அரவங்கள் ஆட; பரவி - பாடி - உருகி - பிரிவாற்றாத தலைவியின் செயல்கள் ;—(10) ஆடும் அம்பொற்கழல் - தியாகேசரது அசபா நடனம் குறித்தது; பாடுதல் - பணிந்தேத்துதல் ஊடுதல் - இவை பிரிந்த தலைவிமாட்டுத் தலைவனது உருவெளிப்பாடு கண்டு நிகழ்

வன ;—(11) நித்தமாக - மறவாது ; இடையறாது ; சிங்கடியப்பன் - நம்பிகளின் சரிதக் குறிப்பு. சொன்ன - சொன்னவற்றை.

3461. வீழ்ந்தெழுந்து கைதொழுது முன்னின்று விம்மியே
வாழ்ந்தமலர்க் கண்ணொன்று லாராமன் மனமழிவார்
"ஆழ்ந்ததுயர்க் கடலிடைநின் றடியேனை யெடுத்தருளித்
தாழ்ந்தகருத் தினைநிரப்பிக் கண்டாரீ" ரெனத்தாழ்ந்தார். ௩௦எ

(இ - ள்) வீழ்ந்தெழுந்து...விம்மியே - முன் கூறியவாறு வீழ்ந்தபின் (நம்பிகள்) எழுந்து கை கூப்பித் தொழுது திருமுன்பு நின்று விம்மி விம்மி ; வாழ்ந்த...மனமழிவார் - வாழ்வு பெற்ற மலர் போன்ற கண் ஒன்றினாற் கண்டு நிறைவு பெறாமல் மனமழிவாராகி ; ஆழ்ந்த...தாழ்ந்தார் - மிக ஆழமாகிய துன்பக் கடலினின்றும் அடியேனை மேலே எடுத்தருள் செய்து விரும்பிய கருத்தை நிறைவாக்குவித்துக் கண் கொடுத்தருளுவீர் எனத் தாழ்ந்து வணங்கினர்.

(வி - ரை) வீழ்ந்து - முன் பாட்டிற் கூறியவாறு நிலமிசை விழுந்ததன் பின்னர்.

வாழ்ந்த மலர்க் கண் ஒன்றால் - திருவொற்றியூரில் இழந்த கண்களிரண்டனுள், மூலச்சுவட்டுக் கோலமுடைய திருவேகம்பரை "காணக் கண்ணடியேன் பெற்ற வாறே" என்றபடி இறைவரது திருக்கோலம் காணும் வாழ்வு பெறும் பொருட்டே அவ்வொரு கண் பெற்றமையால் அதனை வாழ்ந்த மலர்க்கண் என்றார்.

கண் ஒன்று - இடது கண் ; கண் ஒன்றால் - ஒரு கண்ணாற் கண்ட காட்சி.

ஆராமல் - ஆர்த்திபெறாமல் ; ஆர்தல் - நிறைவு - அமைதி ; மனமழிதல் - மனம் உருகி நைதல்.

ஆழ்ந்த...எடுத்தருளி - ஆழ்ந்த - நிலைகாணாதவாறு மிக ஆழமுடைய ; நான் அழுந்திய என்றலுமாம்; கடல் - உருவகம்; கடல் என்றதற் கேற்ப எடுத்து என்றார். "என்னையிப் பவத்திற் சேரா வகையெடுத்து" (சித்தி) என்றாற்போல.

தாழ்ந்த கருத்தினை நிரப்பி - தாழ்தல் - விரும்புதல் ; சபதம் பிழைத்த பெரும் பிழையினையும் பொறுத்தருள வேண்டுதலின் தாழ்வாகிய என்ற குறிப்புமாம் ; இப் பொருளில் தாழ்ந்த (தாழ்வாகிய) கருத்தாயினும் அதனை என்று இழிவு சிறப்பும்மை விரிக்க. கருத்தாவது யாது ? எனில் கண்தாரும் - என்ற இதுவேயாம் என்றபடி.

தாழ்ந்தார் - தாழ்ந்து வணங்கினார். 307

3462. திருநாவ லூர்மன்னர் திருவாரூர் வீற்றிருந்த
பெருமானைத் திருமூலட் டானஞ்சேர் பிஞ்ஞகனைப்
பருகாவின் னமுதத்தைக் கண்களாற் பருகுதற்கு
மருவார்வத் துடன்"மற்றைக் கண்டாரீ" ரெனவணங்கி, ௩௦அ

வேறு

3463."மீளா வடிமை" யென்றெடுத்து மிக்க தேவர் குலமெல்லாம்
மாளா மேநஞ் சுண்டருளி மன்னி யிருந்த பெருமானைத்
"தாளா தரிக்கு மெய்யடியார் தமக்கா மிடர்நீர் தரியீ"ரென்
றுளாந் திருத்தோ ழமைத்திறத்தா லஞ்சொற் பதிகம் பாடினார்.

3462. (இ - ள்) திருநாவலூர் மன்னர் - திருநாவலூர்த் தலைவராகிய நம்பிகள்; திருவாரூர்...இன்னமுதத்தை - திருவாரூரில் வீற்றிருந்த பெருமானைத் திருமூலட்டானத்தில் எழுந்தருளியுள்ள பிஞ்ஞகராகிய இறைவரை வாயினாற் பருகலாகாத இனிய அமுதம் போன்றவரை; கண்களாற் பருகுதற்கு - கண்களினாற் கண்டு அனுபவித்தற் பொருட்டு; மருவார்வத்துடன்...வணங்கி - பொருந்திய பேரன்பினோடும் "மற்றைக் கண் தாரீர்" என்ற கருத்துடன் வணங்கி, ௩௦௮

3463. (இ - ள்) "மீளா அடிமை" என்றெடுத்து - மீளா அடிமை என்று தொடங்கி; மிக்க...பெருமானை - மிகுந்த தேவர் கூட்டமெல்லாம் இறந்து படாதபடி தாம் விடத்தினை உண்டு அருளிச் செய்து நிலைபெற்றிருந்த இறைவரை; தாள்... ...என்று - உமது திருவடியை அன்புடன் பேணும் உண்மை யடியார்களுக்கு ஆகும் துன்பங்களை நீர் தரிக்க மாட்டீரே என்ற குறிப்புடனே; ஆளாம்...பாடினார் - அடிமையும் திருத்தோழமையும் ஆகிய திறத்தோடு அழகிய சொற்றிருப் பதிகத்தினைப் பாடியருளினார். ௩௦௯

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3462. (வி - ரை) பெருமானை - பிஞ்ஞகனை - அமுதத்தை - இவ்வாறு மூன்று திறத்தாற் கூறும் கருத்துப் பற்றி முன் (3434)லும், பிறாண்டும் உரைத்தவை பார்க்க.

பருகா இன் அமுதத்தைக் கண்களாற் பருகுதற்கு - இது முன் "பருகுமாறும்" என்ற பதிகப்பகுதிக்கு உரைவகுத்துக் காட்டியபடி; ஆண்டுரைத்தவை பார்க்க.

மருவு ஆர்வம் - கண்ணொன்றாற் கண்டு ஆராத ஆர்வம்.

மற்றைக் கண் தாரீர் - மற்றைக் கண்ணாவது காஞ்சிபுரத்தில் பெற்ற இடக்கண்ணன்றி ஏனைய வலக்கண் - இது நம்பிகளது திருவுள்ளக் குறிப்பு. மேற்பாட்டில் "தாளா தரிக்கும்...தரியீர்" என்பது பதிகக் குறிப்பு - (பதிகம் - 2)

வீற்றிருக்கும்—என்பதும் பாடம். 308

3463. (வி - ரை) மீளா அடிமை - பதிகத் தொடக்கமாகிய முதற் குறிப்பு.

மிக்க...பெருமானை - இக்கருத்தே பட "விண்ணுள்வா ரமுதுண்ண மிக்க பெரு விடமுண்ட, கண்ணுளா" (3440) என்று முன்னர்க் காஞ்சிபுரத்தின் நிகழ்ச்சியிலும் கூறும் குறிப்புக் காண்க.

தாளாதரித்த மெய்யடியார் - "மீளா வடிமை யுமக்கே யாளாய்...ஆளாயிருக்குமடியார்" என்ற பதிகத்தை விளக்கியவாறு. ஆதரித்தல் - இடையறாது பேணி அன்பு செய்தல்; மெய்யடியார் - மெய் - இயற்கை யடைமொழி.

மெய் அடியார் தமக்கு ஆம் இடர் - ஆம் - அடியார்கள் தமது வினை தீர்ந்து உய்தற் பொருட்டு நீர் நியதியின்படி ஊட்டுவிக்க அவ்வாறு அவர்பால் வாலாகும்; இடர் - இடரையும்; நீரே ஊட்டுவிப்பினும் அதனை அவர் அனுபவித்தற்கண் அவர் படும் துன்பத்தையும் என்று உம்மைவருவிக்க.

தரியீர் - தரிக்கமாட்டாத கருணையுள்ளவரே! என்று துதித்தபடி; பதிகம் பார்க்க.

ஆளாந் திருத்தோழமைத் திறத்தால் - ஆளாந் தன்மையும், அதனுடன் பொருந்தவுள்ள திருத்தோழராந் தன்மையும் இரண்டும் விரவிப் பொருந்தும் வகை

யால் ; " வாழ்ந்து போதீரே " " நீரே பழிப்பட்டீர் " என்பன முதலிய பதிகப் பாட்டுக்களின் தன்மையினை விளக்கி யருளியவாறு. 309

திருவாரூர்

திருச்சிற்றம்பலம் பண் - செந்துரு(த்)தி

மீளா வடிமை யுமக்கே யாளாய்ப் பிறரை வேண்டாதே
மூளாத் தீப்போ லுள்ளே கனன்று முகத்தான் மிகவாடி
யாளா யிருக்கு மடியார் தங்க ளல்லல் சொன்னக்கால்
வாளாங் கிருப்பீர் திருவா ரூரீர் வாழ்ந்து போதீரே. (1)

விற்றுக் கொள்வீ ரொற்றி யல்லேன் விரும்பி யாட்பட்டேன்
குற்ற மொன்றுஞ் செய்த தில்லை கொத்தை யாக்கினீர்
எற்றுக் கடிகே ளென்கண் கொண்டீர் நீரே பழிப்பட்டீர்
மற்றைக் கண்டான் றரா தொழிந்தால் வாழ்ந்து போதீரே. (2)

அன்றின் முட்டா தடையுஞ் சோலை யாரூ ரகத்தீரே
கன்று முட்டி யுண்ணச் சுரந்த காலி யவைபோல
என்று முட்டாப் பாடு மடியார் தங்கண் காணாது
குன்றின் முட்டிக் குழியில் விழுந்தால் வாழ்ந்து போதீரே. (3)

செந்தண் பவளந் திகழுஞ் சோலை யிதுவோ திருவாரூர்
எந்தம் மடிகே ளிதுவே யாமா றுமக்காட் பட்டோர்க்குச்
சந்தம் பலவும் பாடு மடியார் தங்கண் காணாது
வந்தெம் பெருமான் முறையோ வென்றால் வாழ்ந்து போதீரே. (5)

தினைத்தா ளன்ன செங்கா லன்னஞ் சேருந் திருவாரூர்ப்
புனத்தார் கொன்றைப் பொன்போன் மாலைப் புரிபுன் சடையீரே
தனத்தா லின்றித் தாந்தா மெலிந்து தங்கண் காணாது
மனத்தால் வாடி யடியா ரிருந்தால் வாழ்ந்து போதீரே. (6)

ஆயம் பேடை யடையுஞ் சோலை யாரூ ரகத்தீரே
ஏயெம் பெருமா னிதுவே யாமா றுமக்காட் பட்டோர்க்கு
மாயங் காட்டிப் பிறவி காட்டி மறவா மனங்காட்டிக்
காயங் காட்டிக் கண்ணீர் கொண்டால் வாழ்ந்து போதீரே. (7)

கழியாய்க் கடலாய்க் கலனாய் நிலனாய்க் கலந்த சொல்லாகி
இழியாக் குலத்திற் பிறந்தோ மும்மை யிகழா தேத்துவோம்
பழிதா னாவ தறியீ ரடிகேள் பாடும் பத்தரோம்
வழிதான் காணா தலமந் திருந்தால் வாழ்ந்து போதீரே. (8)

செருந்தி செம்பொன் மலருஞ் சோலை யிதுவோ திருவாரூர்
பொருந்தித் திருமூ லத்தா னம்மே யிடமாக் கொண்டீரே
இருந்து நின்றுங் கிடந்து மும்மை யிகழா தேத்துவோம்
வருந்தி வந்து முமக்கொன் றுரைத்தால் வாழ்ந்து போதீரே. (10)

காரூர் கண்டத் தெண்டோண் முக்கண் கலைகள் பலவாகி
ஆரூர்த் திருமூ லத்தா னத்தே யடிப்பே ராரூரன்
பாரூ ரறிய வென்கண் கொண்டீர் நீரே பழிப்பட்டீர்
வாரூர் முலையாள் பாகங் கொண்டீர் வாழ்ந்து போதீரே. (11)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—ஆசிரியர் காட்டி யருளியவாறு காண்க. (3462 - 3463)

பதிகப் பாட்டுக்குறிப்பு:—(1) மீளா அடிமை - பெத்த நிலை-முத்தி நிலை இரண்டிலும் என்றென்றும் நீங்காத அடிமைத் திறம் ; உண்மை நூல்களின் முடிபு ; "ஆளாயினி யல்லேனென லாமே", "ஒருமையே யல்லே னெழுமையு மடியேன்" (நம்பி); மூளாத் தீப்போல்...சொன்னக்கால்- உள்ளே மனம் வெதும்பிப் புறத்தோற்றத்திற் காட்டாது தம் வருத்தத்தை எல்லாம் உள் அடக்கி முறையிடுதல் ; வாளா - ஆங்கு = வாளாங்கு ; வாழ்ந்து போதீரே - பதிகத்தின் மகுடம்; துன்ப மேலீட்டினால் மனம் புழுங்கி உரைக்கும் தன்மை ; நீரே வாழ்ந்து போம் ; நாங்கள் எக்கேடு கெட்டாலு முமக்காவ தென்ன என உலக வழக்கில் உரிமை பற்றிக் கூறும் நிலை ; இதனை ஆசிரியர் " ஆளாந் திருத்தோழமைத் திறத்தால் பாடி " (3463) என்று அடிமைத் திறத்தின் மாறுபடாத நிலையினை வகுத்துக் காட்டி யருளுதல் காண்க. " இருந்து நின்றுங் கிடந்து மும்மை யிகழா தேத்துவோம் " (10) ; " இழியாக் குலத்திற் பிறந்தோ மும்மை யிகழா தேத்துவோம் " (8) என்ற பதிக அகச்சான்றும் காண்க. " ஏசின வல்ல விகழ்ந்தன வல்ல " (நம்பி); வாளாங்கு - ஒன்றும் விடை பகராதும், வேண்டுகையை நிரப்பாமலும்; "வாய்தான் திறவீர்" (9); (2); விற்று...அல்லேன் - ஒற்றி மீட்டுக்கொள்ளும் உரிமையுடன் ஒரு பொருளைப் பிறன் வசம் ஒப்படைக்கும் கடன் வகை ; விற்றுக் கொள்ளுதல் - பிரதிபலன் எவ்வித நிபந்தனையு மின்றிப் பெற்றுப் பொருளைப் பிறன் வசமாக முழு உரிமையுடன் விற்பனை செய்துவிடுதல் ; (இவற்றை முறையே mortgage and sale என்பது நவீன வழக்கு) ; என்னை மீட்க முடியாதவாறு எல்லா வுரிமையுடன் உமக்குக் கொடுத்து விட்டேன் ; மீளா அடிமை - (1) என்றதன் விரிவு ; " ஒற்றியூரே லும்மதன்று " " ஒற்றியூரென்ற ஊனத்தி னுலது தானே " " உம்மை ஒற்றி வைத்திங் குண்ண லாமோ " (தேவா) ; கோத்தை-குருடு ; நீரே பழிப்பட்டீர் - குற்றமொன்றும் செய்யா திருப்பவும் கண்ணை மறைத்தமையால் பழி உம்மேல தாயிற்றென்பதாம் ; திருவாரூரிற் செல்வதற்குத் திருவொற்றியூரிற் செய்யும் அந்தச் சபதம் தடையாயிருத்தல் கூடாதென்ற தமது எண்ணத்தினை முன்னர் இறைவர்பால் வேண்டி விண்ணப்பித் துள்ளாராதலின் இவ்வாறு கூறினார் என்க ; மற்றைக்கண் - காஞ்சிபுரத்தில் தந்த இடதுகண் போக எஞ்சிய கண் ; வலக்கண் :—(3) அன்றில் முட்டாதடையும் - என்றது இணைபிரியாத அன்றில்கள் போலத் திருவாரூரை நம்பிகள் அணைவதாம் என்றபடி; கன்று...போல காலி - பசுக் கூட்டம் ; எருமை முதலாயின ; கன்றுகள் மடியில் முட்டி உண்ணப் பால் சுரக்கும் என்பது ; போல - உவமை; அதுபோல அடியார்கள் உம்மிடம் வந்து இடித்திடித்து வேண்டு மளவு அருள் சுரத்தல் வேண்டும் ; அவ்வாறு சுரவாது அவர்கள் துன்பமுற வைத்தால் என்றபடி ; " வருமேனிச் செங்கண்வரால் மடி முட்டப் பால்சொரியும்" (1273) ; தங்கண்...விழுந்தால்-கண்ணில்லாமையால் வழியிடறித் துன்பப்பட்டால் ; துன்று - மேடு என்ற பொருளில் வந்தது ;—(4) அருத்தி- அன்பு ; மறுமைப் பணித்தால் - பின்னே அருள்வதென்றால் ;—(5) இதுவோ ? -

ஒற்றைக்கண் பார்வை யாதலின் அழகு முழுமையும் காண இயலாமைக் குறிப்பு ; 5 - ம் பார்க்க. பாடுமடியார் - தமது பணியின் தன்மை பற்றிக் கூறியது ; “ பாடுவாய் நம்மை ” (217) என்று ஆணையிட்டபடி பாடி அடிமை செய்யும் என்றது குறிப்பு. ஆணையின் வழியே பணி செய்யும் அடியவனைத் துன்பமின்றி வைத்தல் தலைவர்க்குக் கடன் என்பதும் குறிப்பு. பாடுமடியார் (3 - 6) ; ஆட்பட்டோர் (7) பாடும் பத்தரோம் (8) ;—(6) தினைத்தாளன்ன செங்கால் - மெய்யும் உருவும் பற்றி வந்த உவமை ; சிவந்து மெல்லிதாய் நீண்டிருத்தல் ஈரிடத்தும் பொதுத்தன்மை ; தனந்தாலின்றி மேலிந்து கண்காணாது - வாடி - கண்ணிழந்த வருத்தத்தாற் பொருள் வேண்டுதலையும் ஒழிந்து மனம் வாட ;—(7) ஆயம் பேடை - பறவைக் கூட்டம் ; மாயம்...காயம் காட்டி - “ மாலுங் காட்டி வழிகாட்டி வாரா வுலக நெறியேறக், கோலங் காட்டி யாண்டாயை” (திருவா - ஆனந்த மாலை - 3);— (8) கலன் - கடல் கடக்கும் மரக்கலம் ; இழியா தேந்துவோம் - வாழ்ந்து போதீரே என்று வசைமொழிக் குறிப்புப்படக் கூறுதல் இழிகுலத்தோர் வழக்கு ; நாங்கள் அவ்வாறன்றி இழிவில்லாத குலத்திற் பிறந்தவரானதால் இவ்வாறு கூறியது ஏத்துகின்ற வகையின் பாற்படும் என்றதாம் ;— போயோடேனும்...பிறர் - உம்மை இழிவு சிறப்பு ; காய்தான்...கோண்டக்கால் - விரும்பி ஏற்றுக் கொண்டால் அவர்கள் காய் கேட்கவும் கனிதனைக் கொடுக்கும் விரைந்த அன்பன்றோ வேண்டுவது. அதுவன்றி வேண்டிய அதனையும் கொடாமை முறையன் றென்பது ; நாயிதான் போல... திரிந்து - வேண்டப் படாத இடத்தும் காலத்தும் முன்னை நன்றியினால் ; அணுகித் திரிவதற்கு வினைபற்றி வந்த உவமம்; வாய்தான் திறவீர் - வாய் திறந்து ஒரு விடையேனும் சொல்லீர்; இப்பாட்டில் மூன்றடிகளுள் மூன்று உவமைகள் கூறிய அழகு காண்க ;—(9) இதுவோ திருவாரூர் - 5 - 10 பார்க்க ;—(10) சேருந்தி சேம்போன் மலர் - பிள் - நெல்வேலி 1-பார்க்க ; திருமூலத்தானம் - 11-ம் பார்க்க. இப்பதிகம் திருமூலத்தானத்தில் வீற்றிருக்கும் புற்றிடங் கொண்டார்பால் விண்ணப்பித்தது; அப்பெருமானிடத்தே நம்பிகள் வழியடிமைப் பட்டனர் என்பதுபற்றி மேல் 11 பார்க்க ; இருந்து...ஏத்துவோம் - வாழ்ந்து போதீரே என்பது இகழ்ச்சி யன்றித் துதிசெய்யும் ஒரு வகையே என்பதாம் ; “ நின்று மிருந்துங் கிடந்து நடந்தும், என்றும் சிவன்ருள் கினை ” ; தமக்காகப் பரிகாரம் தேடிக் கண் பெறாத மனப் புழுக்கத்தாற் பாடியருளியமையால் இங்குப் பயன் கூறவில்லை.*

3464. பூத முதல்வர் புற்றிடங் கொண் டிருந்த புனிதர் வன்றொண்டர்
காதல் புரிவே தனைக்கிரங்கிக் கருணைத் திருநோக் களித்தருளிச்
சீத மலர்க்கண் கொடுத்தருளச் செவ்வே விழித்து முகமலர்ந்து
பாத மலர்கள் மேற்பணிந்து வீழ்ந்தா ருள்ளம் பரவசமாய் ௩௰

(இ - ள்) பூத...புனிதர்-பூதபதியாகிய புற்றிடங் கொண்ட பெருமானார் ; வன்றொண்டர்...இரங்கி-வன்றொண்டராகிய நம்பிகள் காதலால் இடையறாது வேண்டிய வேதனைக்கு இரங்கியருளி ; கருணை...கொடுத்தருள - தமது அருட்டிரு நோக்கம் செய்து குளிர்ந்த மலர் போன்ற கண் பார்வையினைக் கொடுத்தருளினாராக ; செவ்வே...பரவசமாய் - செவ்வையாகப் பார்வையோடு கூடிய விழியினை விழித்து

*குறிப்பு:—இத்திருப்பதிக உண்மை அனுபவத்தில் வரக்கூடிய சிறப்புடையது. இதனைப் பயின்று கண் பெற்றவர்களை நான் அறிவேன்.

முகமலர்ச்சி யடைந்து உள்ளம் தம் வசமிழந்து பரவசப்பட்டு இறைவரது திருவடி மலர்களின் மேல் பணிந்து வீழ்ந்தனர்.

(வி - ரை) பூத முதல்வர் - சிவபூத கணங்களுக்கு நாயகர்; உயிர்களுக்கெல்லாம் ஒரு தனி நாதராகிய பசுபதி என்றலுமாம்.

காதல்புரி வேதனை - காதல் காரணமாக வரும் துன்பம். வேதனைக்கு - வேதனையை நீக்க.

கருணைத் திருநோக்களித்தருளி - " அங்கணர் கருணை கூர்ந்த அருட்டிரு நோக்க மெய்த " (753) ; முன்னர் நம்பிகளைக் கண்ணிழப் பித்ததும் இறைவரது கருணையேயாம் ; ஆனால் அது மறக்கருணை ; இப்போது செய்தது அறக்கருணை நோக்கம்.

கண் கொடுத்தருள - கண்பார்வை கொடுக்க.

செவ்வே விழித்தலாவது குருடர் பார்க்கும் பார்வை போலன்றிப் பொருள் களை நேரே மலர்ந்து பார்க்கும் செவ்விய பார்வை. 310

**3465.** விழுந்து மெழுந்தும் பலமுறையான் மேவிப் பணிந்து மிகப்பரவி
எழுந்த களிப்பி னாலாடிப் பாடி யின்ப வெள்ளத்தில்
அழுந்தி யிரண்டு கண்ணாலு மம்பொற் புற்றி னிடையெழுந்த
செழுந்தண் பவளச் சிவக்கொழுந்தி னருளைப் பருகித் திளைக்கின்றார்;

**3466.** கால நிரம்பத் தொழுதேத்திக் கனக மணிமா ளிகைக்கோயில்
ஞால முய்ய வருநம்பி நலங்கொள் விருப்பால் வலங்கொண்டு
மாலு மயனு முறையிருக்கும் வாயில் கழியப் புறம்போந்து
சீல முடைய வன்பருடன் றேவா சிரியன் மருங்கணைந்தார். ௩௧௨

3465. (இ - ள்) விழுந்து...பரவி - நிலம் பொருந்த விழுந்தும் பின் எழுந்தும் பல முறைகளாலும் பொருந்திப் பணிந்து மிகவும் துதித்து ; எழுந்த...அழுந்தி - மேன் மேல் அதிகரித்து எழுந்த மகிழ்ச்சியினாலே ஆடியும் பாடியும் இன்பப் பெருக்கில் மூழ்கியும் ; இரண்டு...திளைக்கின்றார் - இரண்டு கண்களாலும் அழகிய பொற் புற்றினிடமாக முளைத்தெழுந்த செழிய குளிர்ந்த பவளம் போன்ற சிவக்கொழுந்தாகிய இறைவரது திருவருளைப் பருகி அனுபவத்தில் மூழ்கினவராகி, ௩௧௧

3466. (இ - ள்) காலம்...ஏத்தி - அந்த வழிபாட்டுக் காலம் நிரம்பும் வரை தொழுது துதித்து ; ஞாலம்...நம்பி - உலக முய்யும் பொருட்டுத் திருவவதரித்த நம்பிகள் ; கனக மணிமாளிகைக் கோயில் - பொன்மயமாகிய அழகிய அப்பூங்கோயி லின் திருமாளிகையினை ; விருப்பால்...புறம் போந்து - விருப்பத்தினால் வலமாகச் சுற்றிவந்து விட்டுணுவும் பிரமனும் முறைகிடந்து காத்திருக்கும் திரு வாயிலினைக் கடந்து புறத்திற் போந்து ; சீலமுடைய...அணைந்தார் - தவவொழுக்க முடைய அன்பர்களுடனே தேவாசிரியனின் பக்கத்தே அணைந்தனர். ௩௧௨

இந்த இரண்டு பட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபுகொண்டன.

3465. (வி - ரை) விழுந்து...அழுந்தி - கண்பெற்ற பெருமகிழ்ச்சியினால் நிகழும் அளவுபடாத மெய்ப்பாடுகள்.

பலமுறையான் - அட்டாங்க பஞ்சாங்க திரியாங்கமாகவும், அவையும் பலமுறை யாகவும்.

பரவி - பாடி - பரவுதல் - துதித்தல் : பாடுதல் - கீதம் பதிகம் முதலியவை பாடுதல் ;

இன்பவெள்ளத்தில் அழுந்தி - இன்பத்தை நீர்ப்பெருக்காக உருவகித்தார் ; அழுந்தி - என்றது நம்பிகளை அவ்வின்ப வெள்ளம் தன்னுள் அடக்கி மேலெழுந்தது என்ற குறிப்பாம்.

இரண்டு கண்ணாலும் - பருகித் திளைக்கின்றார் - முன் ஒரு கண்ணாற்கண்டு களித்தார் ; ஆயின் அதனால் மனம் நிறைவு பெறவில்லை ; இப்பொழுது மற்றக்கண்ணும் பெற்றதனால் இரண்டு கண்ணாலும் பருகினார் என்பதாம்; உம்மை முற்றும்மை; கண்களால் பருகினர்-பருகுதல் - வாயின்றொழில்; அதனை இங்குக் கண்ணின் றொழிலாக உபசரித்தார் : " பருகாவின் னமுதத்தைக் கண்களாற் பருகுதற்கு " (3462); திளைக்கின்றார் - திளைத்தல் ஆனந்தானுபவத்தில் மூழ்குதல்; திளைக்கின்றாராய்; முற்றெச்சம்; திளைக்கின்றார் - ஏத்தி என வரும் பாட்டுடன் கூட்டி முடிக்க.

எழுந்து களிப்பினால்—என்பதும் பாடம். 311

3466. (வி - ரை) காலம்நிரம்ப - மாறிறிருவத்தயாமத் திறைஞ்ச வந்தாராதவின் (3458) அந்த அத்தயாமமாகிய வழிபாட்டுக் காலம் முடிய ; அத்தயாம முடியும்வரை ஏத்தியிருந்தனர் ; அதன்பின் கோயில் திருக்காப்பிடப் பெறுமாதலின் வலங்கொண்டு புறம் போந்தனர் என்பதாம் ; " அங்கெய்தாக் காலத்தின் " " காலமெல்லாந் துதித்திறைஞ்சி " என்பவையும், ஆண்டுரைத்தவையும் பார்க்க.

முறையிருத்தல்-முறையீடுகளை விண்ணப்பிக்கக் காலம்பார்த்துக் காத்திருத்தல்.

வாயில் - இது முதற்றிருவாயில் ; நம்பிகளுக்கு இறைவர் வெளிப்பட்டுக் காட்சிதந்து திருத்தொண்டத் தொகைக்கு அடியெடுத்துக் கொடுத்தருளிய இடம் ; " கொடிநெடுங் கொற்றவாயில் " (336). இல்வாய் என்பது முன்பின்னாகத் தொக்கது. 6ம் வேற்றுமைத்தொகை ; இலக்கணப் போலி.

சீலமுடைய அன்பர் - நம்பிகளுடன் தொடர்ந்து வந்தோரும் திருவாரூரிற் கலந்த அன்பர்களும் ; சீலம் - சிவத்தவ ஒழுக்கத்திற் பிறழாமை.

ஞாலமுய்யவரு நம்பி-"மாதவஞ் செய்த தென்றிசை வாழ்ந்திடத், தீதிலாத் திருத்தொண்டத் தொகைதரப் போதுவார் " என்றது ஈண்டு நினைவுகூர்தற்பாலது. 312

3467. நங்கை பரவை யார்தம்மை நம்பி பிரிந்து போனதற்பின்
தங்கு மணிமா ளிகையின்கட் டனிமை கூரத் தளர்வார்க்குக்
கங்குல் பகலாய்ப் பகல்கங்கு லாகிக் கழியா நாளெல்லாம்
பொங்கு காதன் மீதூரப் புலர்வார் சிலநாள் போனதற்பின், கூ௧கூ

3468. செம்மை நெறிசேர் திருநாவ லூர ரொற்றி யூர்சேர்ந்து
கொம்மை முலையார் சங்கிலியார் தம்மைக் குலவு மணம்புணர்ந்த
மெய்ம்மை வார்த்தை தாமவர்பால் விட்டார் வந்து கட்டுரைப்பத்
தம்மை யறியா வெகுளியினாற் றரியா நெஞ்சி னொடுந்தளர்வார், கூ௧௪

3469. மென்பூஞ் சயனத் திடைத்துயிலு மேவார் ; விழித்து மினிதமரார் ;
பொன்பூந் தவிசின் மிசைமரார்; நில்லார்; செல்லார்; புறம்பொழியார்;
மன்பூ வாளி மழைகழியார்; மறவார்; நினையா ரென்செய்வார்
என்பூ டுருக்கும் புலவியோ பிரிவோ விரண்டி னிடைப்பட்டார். கூ௧௫

3467. (இ - ள்) *நங்கை...போனதற்பின்* - நங்கை பரவையார் தம்மை நம்பிகள் பிரிந்து போனபின்; *தங்கு...தளர்வார்க்கு* - தாம் தங்கும் அழகிய மாளிகையின்கண் தனிமை மிக்கதனால் தளர்பவருக்கு; *கங்குல்...எல்லாம்* - நாள்கள் முற்றும் இரவு பகலேயாகவும், பகல் இரவேயாகவும் ஆகிக் கழிய; *பொங்கு...போனதற்பின்*-மேன் மேல் அதிகரிக்கும் ஆசையானது மேலோங்க வருந்துவாராகி. இவ்வாறு சில நாட்கள் கழிந்த பின்னர்; ௩௯௩

3468. (இ - ள்) *செம்மை...வார்த்தை* - செம்மை நெறியென்னும் சிவநெறி சேரும் திருநாவலூராளியாகிய நம்பிகள் திருவொற்றியூரிற் சேர்ந்து பணைத்த தனங்களையுடையாராகிய சங்கிலியம்மையாரை விளக்கமிக்க மணஞ்செய்துகொண்ட உண்மையான செய்தியை; *தாம்...உரைப்ப* - செய்தியறிவதற்காகத் தாம் அவனிடத்து ஏவியனுப்பிய மக்கள் வந்து நிச்சயமாகக் கூற; *தம்மை...தளர்வார்* - தம்மையறியாத படியே எழுந்த சினத்தினாலே தரிக்கலாற்றாத நெஞ்சினோடும் தளர்வாராகி; ௩௯௪

3469. (இ- ள்) *மென்பூ...அமரார்* - மெல்லிய மலர்கள் பரப்பிய சயனத்திலே தூங்குவதையும் விரும்பார்; (தூங்காவிடில் விழித்திருப்பரோ எனின் அவ்வாறு) விழிப்புடனும் இனிதாகவிருத்தலையும் விரும்பமாட்டார்; *பொன்பூந்தவிசின்...* *...புறம்பொழியார்* - சயனத்தின்மேவாராகிப் பொன்புனைந்த அழகிய ஆசனத்திருப்பரோ எனின் அதன்மேலும் இருக்கமாட்டார்; (ஆதனத்தின் இராராயின்) எழுந்து நிற்பரோ எனின் அதுவும்மாட்டார்; நடக்கவும்மாட்டார்; நடந்து புறம்பு செல்லவு மாட்டார்; *மன்...கழியார்* - மன்மதனுடைய பூ அம்புகள் இடைவிடாது மழை போல வீழ்தலையும் விலக்கமாட்டார்; *மறவார்...என்செய்வார்* - நம்பிகளை மறக்கவும் மாட்டார்; (ஆயின் நினைப்பரோ எனின் செற்றத்தால்) நினைக்கவும் மாட்டார்; என்னதான் செய்வார்?; *என்பூடு...இடைப்பட்டார்* - எலும்பினையும் உள் உருக்கும் புலவியினிடத்தோ? அன்றிப் பிரிவினிடத்தோ? என்றறியமாட்டாது இவ்விரண்டி னிடையிற் பட்டனர். ௩௯௫

இம் மூன்றுபாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3467. (வி - ரை) தனிமைகூர - தனித்திருத்தலால் வரும் - பிரிவினாலாகிய துன்பம் மிகுதிப்பட; தனிமை - அதனால்வரும் துன்பத்துக்காகி வந்தது.

கங்குல் பகலாய்ப் பகல் கங்குலாகிக் கழியா நாள் - கங்குல் பகலாதல் - பிரிவாற்றாமையால் கண் துயில்பெறாது விழித்திருத்தலின் இரவே பகல்போலாகும் நிலை; இரவுறுதுயரங் கடலொடு சேர்த்தல், நிலவுவெளிப்பட வருந்தல் என்பன முதலிய அகப்பொருட்டுறைகளில் இத்தன்மை பேசப்படும்; பகல் கங்குலாதல் - நாயகனது சந்நிதியின்மையால் பொலிவும் ஒளியுமிழந்து இருள்பொதிந்துநிற்றலும் பகலிற் செல்லும் மனவெழுச்சியின்றி யிருத்தலுமாம் - இரவுக்குரிய புணர்வு, நினைவு, அயர்வு முதலியன பகற்போதிலும், பகற்போதுக்குரிய விழிப்பு, காமவின்ப நீக்கம், புறம் போதல் முதலியன இராப்போதிலும் இவர்பால் நிகழ்தலின், "கங்குல் பகலாய்ப் பகல்கங்குலாகிக் கழிய" என்றார்; நங்கை பரவையார் இருபெயரொட்டு; எழுவாய்; இது மேல்வரும் "இடைப் பட்டார்" (3469) என்பது கொண்டு முடியும்; தளர்வாராகிய அவ்வம்மையாருக்கு; வினையாலணையும் பெயர்; நான்கனுருபேற்று வந்தது: இவை ந. சிவப்பிரகாச தேசிகர் குறிப்பு.

கழியா நாளெல்லாம் - கழியாமை - "ஊழியா மொருகணந்தான்" (3422) என்ற கருத்துக் காண்க; கழியாத நாட்களிலெல்லாம்.

காதல்மீதூரப் புலர்வார் - மீக்கொண்டெழுந்த காதல் மிகுதியினால் புலர்வாராகி; புலர்தல் - மனம் வெதும்புதல்.

சிலநாள் போனதற்பின் - இவ்வாறு புலர்வாராய்ச் சில நாட்கள் சென்றபின்பு.

3468. (வி - ரை) செம்மை நெறி - சிவநெறி; தவநெறியினை வேண்டிப் பெற்று மேற்கொண்டொழுகிய நெறி.

கோம்மை - வட்டம்; அழகு; திரட்சி (பிங்); தூலவுமணம்-விளக்கம்பொருந்திய மணம்; விளக்கமாவது உலகர் யாவருமறிய நிகழும் விதிமணம்; இதனைக் கற்பியல் என அகப்பொருள் நூல்கள் பேசுவன; இது களவியல் மணத்தினின்றும் வேறாகியது என்றறிவிக்கத் தூலவு என்ற அடைமொழி தந்தோதினார்; "தக்க விதிமணத்தால்" (3395) என்றதும், இறைவர் ஆணையின்படி "திருத்தொண்ட ரொழிற் பதியோ ருடனீண்டிக், கண்ணிறைந்த பெருஞ்சிறப்பிற் கல்லியாணம் செய்தளித்தார்" (3420) என்றதும் கருதுக. தூலவும் - இறைவர் விதித்தபடி நிகழும்.

மெய்ம்மை வார்த்தை - உண்மைகளைக் கட்டுரைப்ப என்று கூட்டுக; முன்னர்ப் பிறர்பாற்கேட்டுப், பின்னர் அதன் உண்மையினை அறியச் சிலரை அனுப்பி, அவர்கள் கண்டு வந்து அஃதுண்மையே என்று கூற என்ற அளவில் விரித்துக்கொள்க; காரைக்கா லம்மையார் புராண நிகழ்ச்சிகள் ஈண்டு நினைவுகூர்தற்பாலன. (1756 - 1757); பிறர்பாற் கேட்டபொருளை அவ்வாறே நம்பிவிடாமல் தாம் சிலரை ஒற்று அனுப்பி உறுதிப்படுத்திக்கொண்டு மேல் தொழில் புரிதல் வேண்டுமென்பது உலகியல் நீதிநூல்: முன் உரைத்தவையும் பார்க்க.

மெய்ம்மை வார்த்தை - இத்துணையும் குறிக்க மெய்ம்மை என்றார். கட்டுரைத்தல் - உறுதியாகக் கூறுதல்.

தம்மை அறியா வெகுளி - தம்மையும் அறியாது பெண்ணியல்பால் வந்த சினம்; தாமே துணிந்து நினைந்து மேற்கொண்டதன்று என்பதாம். உம்மை தொக்கது; கற்புடை மடவார் கணவர்பாற் சினத்தலாகாது என்பது நீதியாகலின் வெகுளுதல் பொருந்தாது; ஆனால் இங்கு அவரையும் அறியாமலே சினம் போந்தது என்பதாம். தம்மையும் கோபத்தையும் வேறு பிரித்தற்கரிய கோபம் என்றும் கூறுவர்.

தரியாமையாவது - தமக்கே உரியதாகிய தம் நாயகரது இன்பம் பிறர்க்குமுரித்தாகக் கண்டு பொறுக்கலாற்றாமை.

தளர்தல் - தரியாமை காரணமாக உடல் தளர்ச்சியுறுதல்; இதன் தன்மையினை வரும் பாட்டிலுரைப்பார்.

கோம்மை மூலை, மெய்ம்மை வார்த்தை, செம்மைநெறி - பண்புத்தொகை; விட்டார் - வினையாலணையும் பெயர்; அறியா - தரியா - ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சங்கள் (ந. சிவ. தேசிகர் குறிப்பு). 314

3469. (வி - ரை) மென்பூ...அமரார் - உடல்தளரும் ஏனையோர் உலகியலில் படுக்கையிற் கிடப்பர்; உறங்குவர்; உறங்கியமையால் உடல் ஒய்வு பெறும்; பின்னர்த் தளர்வு நீங்கி வலுப்பெற்றெழுவர் என்பது உடல் பற்றிய மருந்து நூல் முடிபு; இங்குத் தளர்ச்சியுற்ற பரவையார் அவ்வாறு செய்ய லாற்றாதவராயினர் என்பது சயனத்திடைத் துயிலுமேவார் என்றதன் கருத்து; துயில் பெறாவிடினும் ஓய்வு பெற்றுச் சயனத்தின்மீது அமைதியாக இருப்பினும் ஒருவாறு உடற்றளர்ச்சி நீங்கும்; மனம் புலர்ந்து உள் வெதும்பியமையால் அவ்வாறு இனிதமர்தலும் ஆற்றாராயினர் என்பது. மேவுதல் - விரும்புதல்; "நம்பும் மேவு நசையா கும்மே" (தொல்.)

பொன்பூ...புறம்பொழியார் - சயனத்திடை இனிதமர்த லாற்றாதபோது பூந்தவிசில் இருக்கலாம் ; அஃது இயலாதாயின் எழுந்து நிற்றல் அன்றி மாளிகையினுள்ளாற் சுற்றி வருதல், அன்றிப் புறத்தே சென்று மனமாறுதல் என்றிவற்றி லொன்று செய்யலாம் ; இவையெவையும் செய்யவு மாற்றாராயினர் என்பது.

மன் பூவாளி மழைகழியார் - முன் சொன்ன நிலைகளின் காரணம் கூறியவாறு; மன் - வெற்றியுடைய மதனனது ; மதன் என்பதன் இடைக்குறை ; பூவாளி - மலரம்புகள் ; மழைகழியார் - மழைபோல அடர்ந்து பெய்யும் மதனம்புகளுக் குட்படாத படி விலகமாட்டார்.

மறவார் நினையார் - மறவார் இந்நிலைகளுக் கெல்லாம் காரணமாகிய அவரை மறந்துவிடலாமோ எனின், மறக்கவும் இயலாதவராயினர் ; புலத்தல் காரணமாக வேனும் அவரது நினைவு அகலாதாயிற்று ; நினையார் - மறக்க இயலாவிடின் நினைவில் வைப்பாரோ எனின் புலர்தலின் நினைக்கவுமாட்டார் என்க. "நினைந்ததும் மறந்ததும் இலாத நெஞ்சினள்".

என்செய்வார் - மேன்பூ...புறம்பொழியார் - என்றவை புறத் தொழில்கள் ; மறவார் நினையார் - அகத்தொழில் ; எனவே புறம் அகம் என்ற இரண்டாலும் எத்தொழிலும் செய்ய வியலாதபோது வேறென்னதான் செய்வார் என்றபடி. காரணம் பூவாளி மழைகழியாமையாம் என்று குறிக்க இடையில் வைத்தார் ; என்செய்வார்- ஒன்றும் செய்ய இயலாமை என எதிர்மறை குறித்தது. கவிக்கூற்று.

என்பூடு...இடைப்பட்டார் - புறம் அகம் என்ற இரண்டு கருவிகளாலும் எத்தொழிலும் செய்ய இயலாதபோது அவர் நிலைதானென்னை ? எனின்; அஃதின்னதாமென்றறிவித்தபடி ; புலவியோ அன்றிப் பிரிவோ என்ற இரண்டு நிலைகளின் இடையிலே பட்டு நின்றனர் என்பதாம். புலவி - ஊடலின் மிகுதி.

இடைப்படுதலாவது புலவியுமாகாது பிரிவுமாகாது வருந்தும் நிலை ; என்னை ? கூடிய வழியன்றிப் புலவி நிகழாதாதலானும் இங்குக் கூட்டம்நிகழாமையானும் இது கைக்கிளையே யன்றிப் புலவியாகாது ; மனத்தாற் பிரிதலில்லாமையானும், மன நினைவு இடையறாது நிகழ்தலின் உருவெளிப்பாடு முதலியவை உண்மையானும் பிரிவு மாகாது ; பின்னை என்னையோ இவர் நிலை ? எனின், இவையிரண்டி னிடைப்பட்டதோர் தனித்த நிலை என்பதாம்.

என்பு ஊடு உருக்கும் புலவி - புலவியின் இயல்புகுறித்தது; எலும்பையும் உருக்கும் தன்மைவாய்ந்தது என்க ; என்பூடுருக்கு மென்பதைப் பிரிவினுடனுங் கூட்டுக.

இப்பாட்டுப் பிரிந்தார் மன நிலையினையும், வேறொரு பெண்ணை மணந்த நாயகனிலை கேட்ட நாயகியின் உள்ள நிலையினையும், இனிது விளங்க உரைக்கும் சதுரப்பாடுடைய மிக உயர்ந்த அகப்பொருட் சுவையுடையது ; குறிக்கொள்க.

மிசையிரார்—வன்பூவாளி—நினையார்—வாய் விள்ளார்—என்பனவும் பாடங்கள்.

315

3470\. ஆன கவலைக் கையறவா லழியு நாளி லாரூரர்
கூன லிளவெண் பிறைக்கண்ணி முடியார் கோயின் முன்குறுகப்
பானல் விழியார் மாளிகையிற் பண்டு செல்லும் பரிசினாற்
போன பெருமைப் பரிசனங்கள் புகுதப் பெறாது புறநின்றார். ௩௧௫

(இ - ள்) ஆன...நாளில் - முன் கூறியவாறு உளவாகிய கவலையுடன் கூடிய செயலறு நிலையினாலே மனமுடைந்து வருந்தும் நாளில் ; ஆரூரர்...குறுக - நம்பி

யாரூரர் வளர்ந்த பிறைச் சந்திரனாகிய கண்ணி சூடிய முடியினை யுடைய இறைவரது திருப்பூங்கோயிலின் முன்பு சேர ; பானல்...பரிசனங்கள் - குவளைமலர் போன்ற கண்களையுடைய பரவையாரது திருமாளிகையில் முன்னெல்லாம் போகும் தன்மையினாற் சென்ற பெருமையுடைய பரிசனங்கள் ; புகுத...புறநின்றார் - மாளிகையின் உள்ளே செல்ல வாயில் பெறாமற் புறத்தே நின்றார்கள்.

(வி - ரை) ஆன - முன் இரண்டு பாட்டிலும் கூறியவாற்றால் உளவாகிய ; ஆக்கச் சொல் காரணங் குறித்தது.

கவலைக் கையறவு - கவலையுடன் கூடிய செயலற்ற நிலை ; கையறவு - வருத்தம் ; கவலை - பிரிவாற்றாமையினாலும், கையறவு - தம் நாயகர் வேறு ஒரு பெண்ணை மணந்து மனங் கொடுத்தார் என்றதனாலும் விளைந்தன. கையறுதல் - ஒரு செயலும் செய்யலாற்றாத நிலை. பெரும்பான்மை உயிர் போன்றதொன்றை இழந்தபோது உள்ள நிலையினைக் குறிக்க வழங்கும் சொல்.

அழிதல் - மனமுடைந்து மெலிவு பெறுதல்.

கூனல்...பிறை - பரவையாரது மனமழிந்த நிலை போலவே உள்ளுடைந்து உடல் வளர்ந்த இளம்பிறை என்றது குறிப்பு. கண்ணி - முடிமாலை ; " கூனற் றிங்கள் குறுங்கண்ணி " (தேவா - பிள்).

கோயில் முன் குறுக - நம்பிகள் திருக்கோயிலின் முன் அணையும்போது பரிசனங்கள் பரவையார் திருமாளிகைக்குச் சென்றனர் ; நம்பிகள் கோயில் முன் குறுகியது திருவத்தயாம நேரம் என்பது முன் (3458) உரைக்கப்பட்டது. திருவாரூரினை மயங்கு மாலையிற் புகுந்த நம்பிகளுடன் போந்த பரிசனங்கள் திருவத்தயாம நேரம் வரை அவரது பணி மேலிட்டு உடனிருந்தனராதலாலும், திருவொற்றியூரின் நிகழ்ச்சிகளும் பிறவும் பரவையார் தெரிந்து கொண்டமையால் வரும் மாறுபாடுகளின் விளைவினை உட்கொண்டனராதலாலும், ஊரெலாம் துஞ்சும் அந்நெடுநேரம் வரை தாழ்த்துச் சென்றனர் என்க ; ஆயின் இதுபோழ்து சென்றமை நம்பிகள் செல்லுமுன் சென்று ஆவன அறிந்து செய்தற் பொருட்டு என்க. திருக்கோயில் வழிபாட்டில் பரிசனங்கள் உடனிருக்க வேண்டாமையும் காண்க. அங்கு அடியவர்களே உடனிருத்தற் குரியார் என்ற குறிப்பு முன் " திருத்தொண்டர் விரவுவாருடன் கூடி " (3458) என்றவிடத்துக் காட்டப்பட்டது.

பண்டு செல்லும் பரிசு - முன் காலமெல்லாம் போகும் தன்மை.

பானல் விழியார் - இரவில் மலரும் குவளையினைக் கூறியது பரவையார் " துயிலும் மேவா "ராய் (3469) நின்ற நிலைக் குறிப்புப் பெறுதற்கு.

பெருமையாவது நம்பிகளது பணிவிடைகளைச் செய்யும் பெரும்பேறு வாய்க்கப்பெற்ற நிலை. " கழல் வணங்க வந்த பிறப்பை வணங்குவாம் " என்று அவ்வடிமைத்திறத்தின் பெருமையை ஆசிரியர் காட்டியருளியது காண்க. அவர்களது குணநிறைவுக் குறிப்புமாம். ஏனைய உலகியற் பரிசனங்கள்போன்று ரல்லர் என்பது.

புகுதப்பெறாது புறநின்றார்-இதன் காரணம் உணர்த்தற் கெழுந்தது வரும்பாட்டு; அந் நிகழ்ச்சிகளைப் பரிசனங்களின் வாக்கின் வைத்துக் கூறச்செய்தல் கவிநயம். 316

3471. நின்ற நிலைமை யவர்கள்சிலர் நிலவு திருவா ரூரரெதிர்
சென்று மொழிவார் "திருவொற்றி யூரி னிகழ்ந்த செய்கையெலாம்
ஒன்று மொழியா வகையறிந்தங் குள்ளார்கூறக் கேட்டுள்ள மாளிகையில்
இன்று புறமுஞ் சென்றெய்தப் பெற்றி லோ"மென் றிறைஞ்சினர்.

(இ - ள்) நின்ற...மொழிவார் - முன் கூறியவாறு புறத்தே நின்ற நிலைமையினை அப் பரிசனங்களுட் சிலர் நிலவும் நம்பியாரூரர்பால் சென்று அவர்க்கெதிரே சொல்வார்களாகி ; "திருவொற்றியூரில்...பெற்றிலோம்" என்று - திருவொற்றியூரிலே நிகழ்ந்த செய்திகள் எல்லாவற்றையும் ஒன்றும் விடாது முழுமையும் அறிந்ததனாலே, அங்கு உள்ளவர்கள் புறம்பு தள்ளியமையால் இன்று திருமாளிகையின் புறத்திலேயும் சென்று சேரப் பெற்றோமில்லை" என்று கூறி ; இறைஞ்சினார் - வணங்கினார்கள்.

(வி - ரை) இது - பரவையார் திருமாளிகையினுட் புகுதப் பெறாது புறம்பு நின்ற பரிசனங்களுட் சிலர் அச் செய்தியினை நம்பிகளிடம் அறிவித்தமை கூறுகின்றது. முன்பாட்டில் புகுதப் பெறாது புறநின்றார் - என்றதனை விரித்துரைத்தபடி.

நின்ற நிலைமை - மொழிவார் - என்று கூட்டுக. நிலைமை - நிலைமையினை ; இரண்டனுருபு விரிக்க. நின்ற - திருமாளிகைப் புறத்தே நின்ற.

அவர்கள் சிலர் - அப் பரிசனங்களுட் சிலர் ; இவ்வாறன்றி, நிலைமையவர்கள் என்று கூட்டி நிலையை அடைந்த பரிசனங்கள் என்று உரைத்தனர் முன்னுரைகாரர்கள்.

நிலவு - அருள் வாழ்வின் நிலைபெற்ற என்க.

மொழிவார் - என்று - என்று கூட்டுக ; மொழிவார் - மொழிவார்களாகி ; முற்றெச்சம ; என்று - என்று கூறி.

செய்கை எலாம்...வகை - நிகழ்ச்சிகள் ஒன்றும் ஒழியாது எல்லாவற்றையும்.

அறிந்து - தள்ள - என்று கூட்டுக. அறிந்த காரணத்தினால் தள்ள ; அறிந்து - காரணப்பொருளில் வந்த வினையெச்சம். உள்ளார் - அங்குள்ள மாதர்கள்.

தள்ள - பெற்றிலோம் - தள்ளியமையாலே ; காரணங் குறித்தது. புறமும் - சிறப்பும்மை ; இன்று மாளிகையின் புறமும் சேன்றெய்த என்க ; இன்று - முன்னெல்லாம் மாளிகையினுள் உரிமையாற் சென்ற நாங்கள் இன்று புறமும் சென்று எய்தப் பெற்றிலோம் என்பது, இன்று - புறமும் - என்றவற்றின் குறிப்பு.

இறைஞ்சினார் - இதற்கு மாற்று நிகழ்த்தினன்றி மேற்செயல் ஒன்றும் நிகழ்தல் இயலாமைபற்றிய முறையீடு குறித்த வணக்கம். 317

3472. மற்ற மாற்றங் கேட்டழிந்த மனத்த ராகி வன்றொண்டர்
"உற்ற விதனுக் கினியென்னோ செயலென் றுணர்வா ருலகியல்பு
கற்ற மாந்தர் சிலர்தம்மைக் காதற் பரவை யார்கொண்ட
செற்ற நிலைமை யறிந்தவர்க்குத் தீர்வு சொல்லச் சேலவிட்டார். ௩௧௮

(இ - ள்) மற்ற...மனத்தராகி - மற்ற மாற்றத்தினை அப் பரிசனங்கள்பாற் கேட்டு அழிந்த மனத்தினை உடையவராகி ; வன்றொண்டர்...உணர்வார் - நம்பிகள் வந்துற்ற இந்நிலையினுக்குத் தீர்வாக "இனி என்னோ செய்யக் கடவது ?" என்று உணர்ச்சியிற் றேர்வாராகித் தெளிந்து ; உலகியல்பு...செலவிட்டார் - உலகியல்பினை நன்கறிந்து தகவியற்றும் நிலை கைவந்த சில மாந்தர்களைக் காதலையுடைய பரவையார் மேற்கொண்ட கோப நிலைமையின் தன்மையினை அறிந்து அதற்கேற்றவாறு அவருக்கு அது தீரும் வகையினைச் சொல்லிச் சினந் தணிவிக்கும்படிச் செல்ல விடுத்தனர்.

(வி - ரை) மற்ற மாற்றங் கேட்டு-மற்று - தாம் எதிர் பார்த்ததற்குமாறாகிய ; மாற்றம் - சொல், மனம் மாறுபட்ட நிலை, என்று இரட்டுற மொழிந்து கொள்ள வைத்த கவிநயம் கண்டு கொள்க.

அழிந்த மனம் - மனமழிதலாவது - மனமுடைந்து வருந்துதல்.

உற்ற - எதிர்பாராது வந்து பொருந்திய ; இதனுக்குச் செயல் - இந்நிலையினை மாற்றுதற்கு ; உரிய செய்கை - உபாயம் ; நான்கனுருபு பகைப்பொருளில் வந்தது; " பிணிக்கு மருந்து " என்புழிப் போல.

உணர்வார் - சேலவிட்டார் - என்று கூட்டி முடிக்க ; உணர்வார் - உணர்வாராய்த் தெளிந்து. தெளிந்து என்பது குறிப்பெச்சம்.

உலகியல்பு கற்ற - உலகியல் அறிவும், அனுபவமும், வினை செயல் வகை முதலிய ஆற்றல்களும் உடைய ; உலகியலில் 'எவ்வெந் நிலையில் யார் யார்க்கு எவ்வெவ்வகையில் எடுத்துக்கூறினால் செயல் முடியுமோ அவ்வவ்வகை கூறிச் செயலினை முடிக்கும் ஆற்றல்வகை எல்லாம் அடங்க உலகியல்பு கற்ற எனப்பட்டது ; இவ்வாறாகிய செயல்களில் அனுபவ முதிர்ந்த என்க.

சேற்ற நிலைமை யறிந்து - பரிசனங்கள் கூறக் கேட்ட மட்டிலன்றி அவரது செற்றத்தின் அளவு முதலாகிய தன்மைகளை நேரே அறிந்து ; சேற்றம் - கோபம். " செற்றம் " (3526) (3474) ; தன் மட்டிலடங்குவதன்றி மேல் எழுந்து செலும் நிலையில் ஓங்கிய என்பது குறிப்பு. தணியாக் கோபமென்பர்.

தீர்வு - அது தணியும்வகைக்கு உள்ள மொழிகள். தீர்வு செய்யும் மொழிகளைத் தீர்வென்றார்.

சேலவிட்டார் - செல்லும்படி ஏவி விடுத்தனர்.

கேட்டோழிந்த—என்பதும் பாடம். 318

3473. நம்பி யருளாற் சென்றவரு நங்கை பரவை யார்தமது
பைம்பொன் மணிமா ளிகையணைந்து பண்பு புரியும் பாங்கினால்
வெம்பு புலவிக் கடலழுந்து மின்னே ரிடையார் முன்னெய்தி
" எம்பி ராட்டிக் கிதுதகுமோ ?" வென்று பலவு மெடுத்துரைத்தார்.

(இ - ள்) நம்பி...அணைந்து - நம்பிகளின் அருளாணையின் வழியே சென்ற அம்மாந்தர்களும் நங்கை பரவை யம்மையாருடைய பைம் பொன்னணிந்த அழகிய திருமாளிகையினைச் சென்றணைந்து ; பண்பு...பாங்கினால் - செற்றந் தணிவிக்கும் பண்பினைச் செய்யும் தன்மையினுடன் ; வெம்பு...எய்தி - மனத்தினை வெதும்பச் செய்தற் கேதுவாகிய புலவியாகிய கடலினுள்ளே அழுந்திக் கிடக்கும் மின் போன்ற இடையினையுடைய பரவையார் முன்பு சேர்ந்து ; எம்பிராட்டிக்கு...எடுத்துரைத்தார் - எமது பெருமாட்டியின் பெருந்தன்மைக்கு இவ்வாறு ஊடியிருந்து நாயகரை வெறுத்தல் தகுதியாமோ ? என்று இவ்வாறாகிய பலவற்றையும் எடுத்துச் சொன்னார்கள்.

(வி - ரை) அருளால் - நம்பிகளின் பணிசெய்ய ஏவப்பெற்றது ஒரு அருளிப்பாடு - அருட் பேறு - என்பதாம்.

பண்பு புரியும் பாங்கு - பண்பு - செற்றம் தணிவிக்கும் நல்ல நிலை ; புரிதல் - கைவரச் செய்யும் நிலை ; செய்தல் ; பாங்கினால் - அதற்குத் தக்கவாறு தம்மை அமைத்துக் கொண்டு ஒழுகும் தன்மையுடனே ; பாங்கினால் - எய்தி உரைப்பார் - என்க; இதற்கு இவ்வாறன்றிப், பாங்கினால் - அழுந்தும் என்று கூட்டி, இச்செயலைப் பரவையார்பாற் சார்த்திக் கற்பை யவாவிய நிலைமையால் பிணக்கென்னும் பெருங் கடலுளழுந்திய என்றுரைப்பர் இராமலிங்க அடிகள் ; இனிய மொழிகளைக் கூறும்

தன்மையால் என்பது சுப்பராய நாயகர் உரை ; நன்மை செய்கின்ற உரிமையினால் என்பது இராமநாதச் செட்டியார் குறிப்புரை.

வேம்பும் - வெறுப்பும் ; வெதும்புதல் செய்தற் கேதுவாகிய என்று பிறவினைப் பொருள் கொள்க.

புலவிக் கடல் அழுந்தும் - புலவியைக் கடலாக உருவகித்தார், கடத்தற் கருமை பற்றி ; அழுந்தும் - மிக ஆழ்ந்து வருந்தும் ; கடல் என்றதற் கேற்ப அழுந்தும் என்றார்.

மின் நேர் இடையார் - புலவி வருத்தத்தாற் மிகத் துவளுதல் குறிக்க ஈண்டு மின் என்றுவமித்தார்.

எம்பிராட்டி - எமது தலைவி ; பிராட்டி - மேன்மை குறித்தது. பெருமையும் உரிமையும் பாராட்டும் வகையால் செற்றம் தணிவித்தல் உலகியல்பு. கற்றார் கையாளும் முறைகளுள் ஒன்று ; இது சாமோபாயம் எனப்படும். இது - இவ்வாறு நாயகர் பாற் பிணங்குதல் ; தகுமோ ? ஓகார வினா தகாது என எதிர்மறை உணர்த்திற்று.

பலவும் - இவ்வாறாகிய தக்க பல செய்திகளையும், மொழிகளையும்.

எடுத்துரைப்பார்—என்பதும் பாடம். 319

3474. பேத நிலைமை நீதியினாற் பின்னும் பலவுஞ் சொன்னவர்முன்
மாத ரவரு மறுத்துமனங் கொண்ட செற்ற மாற்றாராய்
" ஏத மருவு மவர்திறத்தி லிந்த மாற்ற மியம்பிலுயிர்
போத லொழியா" தெனவுரைத்தா ரவரு மஞ்சிப் புறம்போந்தார்.

(இ - ள்) பேத நிலைமை...சொன்னவர் முன் - முன்னர்ச் சாம உபாயம் பற்றிக் கூறியவர்கள், அதன் மேல் பேத நிலைமையினை மேற் கொண்டு அந்த நீதியின் உபாயம் பற்றி மேலும் பலவாற்றானும் செற்றம் தணியுமாறு எடுத்துச் சொன்ன அம்மாந்தர்களின் முன்பு ; மாதர்...மாற்றாராய் அந்த மாதர் பரவையம்மையாரும் அக் கூற்றுக்களை மறுத்துத் தாம் மேற்கொண்ட செற்றத்தினை மாற்றாதவராகி ; ஏதம்...என உரைத்தார் - தீமை பொருந்திய அவர் (நம்பிகள்) திறம்பற்றி இந்த மாற்றங்களை மேலுஞ் சொன்னீர்களானால் எனது உயிர் போகுதல் தவறாது என்று சொன்னார் ; அவரும்...போந்தார் - அவர்களும் பயந்து புறம் போயினார்கள்.

(வி - ரை) பேத நிலைமை நீதியினால் - முன்னர்க் கூறிய சாமோபாயம் பற்றிய உரைகளை, அவ்வுபாயம் விரும்பியபடி பயன்றராமையாலே, விடுத்து, அடுத்த உபாயமாகிய பேதம் என்னும் தன்மையினை உட்கொண்ட நீதிபற்றி ; இவ்வுபாயம் பற்றிச் சொல்லும் முறைகளைப் பிள்ளைத்தமிழ் நூல்களுள் அம்புலிப் பருவப் பகுதியிற் பாக்கக் காணலாம் ; பேத நிலைமை நீதியினால் - ஊடலுக்குரிய ஒழுக்கத்தினால் என்பர் இராமநாதச் செட்டியார்.

பின்னும் பலவும் - முன் சாமோபாயத்தாலுரைத்த பலவற்றின் மேலாக, இவ்வுபாயத்தைத் தொடர்ந்து மேலும் பலவாறாகிய மொழிகளையும்.

ஏதம் மருவும் அவர் - என்பாற் றீங்கு செய்தலின் குற்றமுடைய அந் நம்பிகள்.

உயிர் போதல் ஒழியாது - நான் உயிர் நீப்பது உறுதி என்றபடி ; போதல் - தாம் வலிந்து போக்குதல் தற்கொலைப் பழியாமாதலின் அவ்வாறன்றி உயிர்தானே போய்விடுவது என்ற குறிப்பும் காண்க.

புறம் - திருமாளிகையினை நீங்கிப் புறம்பு. 320

3475. போந்து புகுந்த படியெல்லாம் பூந்தண் பழன முனைப்பாடி
வேந்தர் தமக்கு விளம்புதலும் வெருவுற் றயர்வார் துயர்வேலை
நீந்துந் துணையாம் புணைகாணார் நிகழ்ந்த சிந்தா குலநெஞ்சிற்
காந்த வழிந்து தோய்ந்தெழார் கங்கு லிடையா மக்கடலுள். ௩உ௧

(இ - ள்) போந்து...விளம்புதலும் - (முன் கூறியபடி பரிசனங்கள்) போந்து நிகழ்ந்தபடி எல்லாவற்றையும் அழகிய குளிர்ந்த வயல்களை யுடைய திருமுனைப்பாடி நாட்டின் தலைவராகிய நம்பிகளுக்கு அறிவித்தலும் ; வெருவுற்று அயர்வார் - (நம்பி கள்) அச்ச முற்று வருந்துவாராய் ; துயர்வேலை...காணார் - துன்பக் கடலினின்றும் நீந்திக் கரையேறுதற்குரிய துணையாகும் தோணிபோன்றாரைக் காணாமையின்; சிந்தா குலம்...அழிந்து - நேர்ந்த மன வேதனை நெஞ்சத்தினைச் சுட மனமழிந்து ; கங்குல் இடையாமக் கடலுள் - இராத்திரியின் நடுயாமமாகிய கடலுள்ளே ; தோய்ந்து எழார் - முழுகி மேல் எழ மாட்டாராயினர்.

(வி - ரை) புகுந்தபடி - நிகழ்ந்தவாறே ; எல்லாம் - எல்லாச் செய்கைகளையும்.

வெருவுற்று - எதிர்பாராது சடுதியில் நேரும் துன்பம் வெரு எனப்படும்.

துயர் வேலை நீந்தும் புணையாம் துணைகாணார் - துன்ப மிகுதியினைக் கடலாகவும், அதனைக் கடத்தற்குத் துணையாவாரைப் புணை ஆகவும் உருவகித்தார் ; காணார் - உலகியல்பு கற்ற மாந்தர் சொல்லியும் பயனில்லாமையால் மனிதருள்ளே துணை செய்வார் பிறரிலர் என்பார் காணார் என்றார்.

சிந்தா குலம் - சிந்தை ஆகுலம் என்பது ஒரு சொன்னீர்மைத்தாய் வந்தது.

ஆகுலம் - துன்பம் ; காந்துதல் - வெதுப்புதல்; சுடுதல்.

கங்குலிடை யாமக் கடலுள் தோய்ந்து எழார் - கங்குல் இடையாமம் - பாதி யிரவு ; நள்ளிரவு ; அர்த்தயாமம் என்பது வடமொழிவழக்கு ; கங்குல் இடையாமத் தைக் கடலாக உருவகித்தார் உலகுயிர்களை எல்லாம் தன்னுள் அகப்படுத்தி அவத்தை பேதங்களுட்படுத்தி யலைத்தலால் ; மேல் வரும்பாட்டில் பிறங்கிருள்வாய் என்பதும் காண்க. தோய்தல் - அழுந்துதல். 321

3476. அருகு சூழ்ந்தார் துயின்றுதிரு வத்த யாமம் பணிமடங்கிப்
பெருகு புவனஞ் சலிப்பின்றிப் பேயு முறங்கும் பிறங்கிருள்வாய்
முருகு விரியு மலர்க்கொன்றை முடிமே லரவு மிளமதியுஞ்
செருகு மொருவர் தோழர்தனி வருந்தி யிருந்து சிந்திப்பார், ௩உ௨

3477. "முன்னை வினையா லிவ்வினைக்கு மூல மானாள் பாலணைய
என்னை யுடையாய்! நினைந்தருளா யிந்த யாமத் தெழுந்தருளி
அன்ன மனையாள் புலவியினை யகற்றி லுய்ய லாமன்றிப்
பின்னை யில்லைச் செய"வென்று பெருமா னடிக டமைநினைந்தார்.

3476. (இ - ள்) அருகு...பிறங்கு இருள்வாய் - பக்கத்திற் சுற்றி யிருந்தவர் களும் துயின்று, திருவத்தயாம வழிபாடும் நிறைவேறிப், பெருகும் உலகத்திலுள் ளோர்களும் நடத்தல் ஒழிந்து, பேயும் துயிலும் மிக்க நள் இருளிலே ; முருகு... தோழர் - மணம் வீசும் கொன்றை மலர்களைச் சூடிய சடைமுடிமேல் பாம்பினையும் இளம்பிறைச் சந்திரனையும் செருகும் ஒப்பற்ற இறைவரது தோழராகிய நம்பிகள் ; தனி...சிந்திப்பார் - தனியே வருத்தத்துடன் இருந்து சிந்திப்பாராகி, ௩உ௨

3477. (இ - ள்) முன்னை...நினைந்தருளாய் - என்னை ஆளுடைய பெருமானே ! முன் வினையின் பயனாக இவ்வினைக்குக் காரணமாகி நின்ற பரவையாரிடம் நான் சேர்வதற்கு நினைந்தருள் செய்யீர் ! ; இந்தயாமத்து...என்று - இந்த நடு யாமத்தில் தேவரீர் எழுந்தருளி அன்னம் போன்ற அவளது புலவியை நீக்கினால் உய்யலாமே யன்றி வேறு செயல் இல்லை என்று வேண்டி ; பெருமான்...நினைந் தார் - இறைவரது திருப்பாதங்களை நினைந்தார். ௩௨௩

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3476 (வி - ரை) அருகு சூழ்ந்தார் - (3466) தேவாசிரியன் மருங்கே அணைந் திருந்த நம்பிகளைச் சுற்றிச் சூழ்ந்திருந்த பரிசனங்களும் அன்பர்களும்.

திருஅத்தயாமம் பணிமடங்கி - திருஅத்தயாமம் என்னும் திருக்கோயில் வழி பாடும், அதற்கங்கமாக நிகழும் நாள் வழிபாட்டு முறைகளும் நிறைவாகிக் கோயில் திருக்காப்பிட்டு ; மடங்குதல் - நிறைவேறி முடிவாதல்.

பெருகு புவனம் சலிப்பின்றி - பெருகு என்றது உலக வியாபாரங்களுட் பட்டு உயிர்கள் ஓயாமல் அலைந்து திரியும் நிலை குறித்தது ; புவனம் - சரம் அசரம் என்ற இருவகை யுயிர்கள் ; சலிப்பு - (சலனம்) அலைதல் - திரிதல் - அசைதல்.

பேயும் உறங்கும் பிறங்கு இருள் - பேய் - வாயு சரீரத்துடன் இருளிற் சஞ்சரித் துப் பிறவுயிர்களை அலைக்கும் உயிர்கள் அடையும் ஒருவகை நிலை ; பேயும் - இரவில் இயங்கும் பேய்களும் இயங்காத நள்ளிரவு என உம்மை உயர்வுசிறப்பு.

பிறங்கு இருள் - இருளுக்குப் பிறங்குதலாவது கூர்ந்த நிலையில் தன்னைக் காட்டி நிற்கும் நிலை. " ஒரு பொருளுங் காட்டா திருளுருவம் காட்டும் " (திருவருட் பயன் - 23) ; " கருகு மையிரு ளின்கணம் " (454).

முருகு...செருகும் - கொன்றைமுடி - உயர்வும், அரவுமிள மதியும் - தாழ்வும் குறித்தன ; தாழ்வான பொருள்களை உயர்த்தும் கருணையினையும், அரவு மதியும் - பகைப் பொருள்களைப் பகைதீர்த்து உடன் வைக்கும் கருணையினையும் குறிப்பா லுணர்த்தின; " மெய்ம்மையும் பொய்ம்மையு மாயி னார்க்குச் சோதியு மாயிரு ளாயி னார்க்கு " (திருவா) என்றும், " பாம்போடு திங்கள் பகைதீர்த் தாண்டாய் " (தேவா ) என்றும் வரும் திருவாக்குக்கள் காண்க ; ஈண்டு நம்பிகளது திருவுள்ளக் குறிப்பினை உட்கொண்டு கூறியவாறு.

ஒருவர் - ஒப்பற்றவர் ; " ஒன்றே பதி " என்றபடி ஒன்றாகிய பதி ; " தானே தனிமன் றாட் டன்னந் தனி " (திருமந்).

தனி வருந்தி யிருந்து - தனிமையாய் வருந்தி நின்று ; ஒருவர் தோழர் தனி என்றது ஒருவரது தோழராந் தன்மைக் கேற்றபடி இருவரும் தனியாயினார் என்ற கவிநயமும் காண்க.

சிந்திப்பார் - சிந்திப்பாராய் ; முற்றெச்சம்; சிந்திப்பார்-நினைந்தார் என வரும் பாட்டுடன் முடியும் ; சிந்தித்ததன் பயனாக நினைந்தார் என்க. 322

3477. (வி - ரை) முன்னை வினையா லிவ்வினைக்கு மூலமானாள் - முன்னை வினை - பண்டு திருமலையின் நிகழ்ச்சி ; இவ்வினை - இங்கு நேர்ந்த இத்துன்ப நிலை வரையில் உள்ள நிகழ்ச்சிகளின் தொகுதி; வினையால் வினைக்கு மூலம்-முன்னைவினை யின் விளைவாக வந்த இவ்வினை வருதற்குக் கருவி. மூலம் - வினை வெளிப்படுதற்குப் பயன்படும் கருவி. மூலமானாள் - பரவையார். பழைய வினையால் இப்பிறவியின் விளைவுக்கு மூலமாயி னாளுடைய பக்கத்தை யடையுமாறு.

அணையப் நினைந்தருளாய் - இறைவர் செயலெல்லாம் நினைப்பு மாத்திரை அளவானே நிகழ்வனவாதல் குறிப்பு ; "இச்சாமாத்திரம் பிரபோ சிருட்டி" "நினையாதார் புரமெரிய நினைந்த தெய்வத் தோரானை" (தேவா).

எழுந்தருளிப் புலவியினை அகற்றில் - எழுந்தருளி என்றது அருள் புரிந்து என்ற மட்டில் பொருள் தந்து நின்றது ; அகற்றுதல் - நீக்குதல்.

அகற்றில் உய்யலாம் அன்றிப் பிறிது செயல் இல்லை - உய்வதற்கு வேறு வழி இல்லை என்று உறுதிப்பொருள் தர உடன்பாட்டாலும் எதிர்மறையாலும் கூறினர்.

என்னை உடையாய் - என்னை உடைமைப் பொருளாய் ஆளாகக் கொண்டமையால் என்று வேண்டுதலுக்குக் காரணங் குறித்தவாறு ; இக்கருத்தே பற்றி மேலும் உரைத்தல் காண்க ; "நான் உமக்கு - அடியேனாகில் நீர் எனக்கு தம்பிரானாரே யாகில்" (3482) ; "வலிய ஆட்கொண்ட பற்றென்" (3509) ;

பெருமானடிகள் தமை - பெருமானது திருவடிகளை ; பெருமானாகிய அடிகளை என்று ஒரு சொல்லாகக் கொண்டுரைத்தலுமாம் ; "அவர் எம்பெருமா னடிகளே" (தேவா).

என்னை யுடையா னினைந்தருளில்—என்பதும் பாடம். 323

3478. அடியா ரிடுக்கண் டரியாதா ராண்டு கொண்ட தோழர்குறை
முடியா திருக்க வல்லரோ? முற்று மளித்தாள் பொற்றளிர்க்கைத்
தொடியார் தழும்பு முலைச்சுவடு முடையார் தொண்டர் தாங்காணும்
படியா லணைந்தார் நெடியோனுங் காணா வடிகள் படிதோய. ௩௨௪

(இ - ள்) அடியார்...வல்லரே?- அடியவர்களது துன்பங்களைத் தரிக்கலாற்றாத இறைவர் தமது அடியாராதலோடு தம்மால் ஆளாகக் கொள்ளப்பட்ட தோழராகிய நம்பிகளது குறையினை முடிக்காமலிருக்க வல்லாரவரோ ? ; முற்றும்...உடையார் - உலக முழுதும் ஈன்ற காமாட்சி யம்மையாரின் அழகிய தளிர்போலுங் கையிலணிந்த வளையின் தழும்பும் முலையின் சுவடும் உடைய இறைவர் ; தொண்டர்...படிதோய் - விட்டுணுவும் காணாத திருவடிகள் நிலம் பொருந்தத் தொண்டராகிய நம்பிகள் காணும் படியால் வந்தணைந்தனர்.

(வி - ரை) அடியார்...வல்லரே - இது கவிக்கூற்று ; ஏகாரம் வினா ; வல்லரல்லர் என எதிர்மறை குறித்தது. தொண்டர்காண அணைந்ததற்குக் காரணங் கூறியவாறு ; அன்புடையாரை அறிவன் சிவன் என்பது இறைவரியல்பாக ஞான சாத்திரங் கண்ட உண்மை ; குறை - வேண்டும் காரியம்.

முற்றும் அளித்தாள் - உலக முழுதும் ஈன்றளித்த உமையம்மையார்.

கைத்தொடியார்...உடையார் - திருவேகம்பர் அம்மையாரது வளைத் தழும்பும் முலைச்சுவடும் அணிந்த வரலாறு ; திருக்குறிப்புத் தொண்ட நாயனார் புராணம் (1143)பார்க்க. விரிவு காஞ்சிப் புராணம் தழுவக்குழைந்த படலமும், பிறவும் பார்க்க.

நெடியோனும் காணா அடிகள் படிதோயத் தொண்டர் தாங்காணும்படியால் அணைந்தார் என்க ; தொண்டர்தம் பெருமை கூறியபடி; படிதோய-நிலம் பொருந்த. தொண்டர் - நம்பிகள் ; அவர் கண்டவாறு வரும் பாட்டிற் காண்க.

முற்றும்...உடையார் - இறைவரது கருணையின் எளிமை குறித்தது. 324

3479. தம்பி ரானா ரெழுந்தருளத் தாங்கற் கரிய மகிழ்ச்சியினாற்
கம்பி யாகின் றவயவங்கள் கலந்த புளக மயிர்முகிழ்ப்ப

கம்பி யாரூ ரருமெதிரே நளின மலர்க்கை தலைக்குவிய
அம்பி காவல் லவர்செய்ய வடித்தா மரையின் கீழ்விழுந்தார். ௩௨௫

(இ - ள்) தம்பிரானார் எழுந்தருள - இறைவர் எழுந்தருளி வரக்கண்டு; தாங்கற்கரிய...முகிழ்ப்ப - தாங்குதற்கரிய பெருமகிழ்ச்சியினாலே உடலின் எல்லா அவயவங்களும் கம்பித்து, அதனோடு உடல் முழுதும் மயிர்ப்புளகம் முகிழ்ப்ப; நம்பி யாரூரரும்...குவிய - நம்பியாரூரரும் இறைவர் திருமுன்பு தாமரை மலர் போன்ற கைகள் தலையின்மேல் ஏறிக்குவிய; அம்பிகா வல்லவர்...வீழ்ந்தார் - அம்மைபாக ராகிய இறைவரது சிவந்த திருவடித் தாமரைகளின் கீழ்ப் பொருந்த நிலமுற விழுந் தனர்.

(வி - ரை) தம்பிரானார் - தம்மை ஆளாகக் கொண்ட தம் பெருமானடிகள் என்ற நிலையை நினைந்து வேண்டினாராதலின் தம்பிரானார் என்ற தன்மையாற் கூறினார்.

அவயவங்கள் கம்பியா நின்று - என்க; கம்பித்தல் - உடல் நடுக்கம் கொள்ளு தல்; "ஆகம் விண்டு கம்பம் வந்து குஞ்சி யஞ்ச லிக்கணே, யாக வென்கை கண்கள் தாரை யாற தாக வையனே" (திருவா).

கலந்த மயிர்ப்புளகம் முகிழ்த்தல் - மயிர்க்கூச் செறிதல்.

அம்பிகா வல்லவர் - அம்பிகையின் நாயகர்; சிவபெருமான்; வல்லவர் என்பது வலவர் என்பதன் விரித்தல் விகாரமாகக் கொண்டு, அம்பிகைக்கு வலப்பக்கத்தி னர் என்றுரைத்தலுமாம். பரவையார்பாற் றூது செல்ல நின்றாராதலின் அம்மை தொடர்பு பற்றிக் கூறினார். 325

3480. விழுந்து பாவி மிக்கபெரு விருப்பி னோடு மெதிர்போற்றி
எழுந்த நண்பர் தமைநோக்கி "யென்னீ யுற்ற" தென்றருளத்
தொழுந்தங் குறையை விளம்புவார் "யானேதொடங்குந் தரிசிடைப்பட்
டழுந்து மேன்னை இன்னமெடுத் தாள வேண்டு முமக்"கேன்று,

3481. "அடியே னங்குத் திருவொற்றி யூரி னீரே யருள்செய்ய
வடிவே லொண்கட் சங்கிலியை மணஞ்செய் தணைந்த திறமெல்லாங்
கொடியே ரிடையாள் பரவைதா னறிந்து 'தன்பா லியான்குறுகின்
முடிவே' னென்று துணிந்திருந்தா ளென்னான் செய்வ"தெனமொழிந்து,

3482. "நாய னீரே! நானுமக்கிங் கடியே னாகி னீரேனக்குத்
தாயி னல்ல தோழருமாந் தம்பி ரானா ரேயாகில்
ஆய வறிவு மிழந்தழிவே னயர்வு நோக்கி யவ்வளவும்
போயிவ் விரவே பரவையுறு புலவி தீர்த்துத் தாரு"மென; ௩௨௮

3483. அன்பு வேண்டுந் தம்பெருமா னடியார் வேண்டிற் றேவேண்டி
முன்பு நின்று விண்ணப்பஞ் செய்த நம்பி முகநோக்கித்
"துன்ப மொழிநீ யாமுனக்கோர் தூத னாகி யிப்பொழுதே
பொன்செய் மணிப்பூண் பரவைபாற் போகின் றோ"மென் றருள்செய்தார்

3480. (இ - ள்) விழுந்து...என்றருள - திருவடியில் வீழ்ந்து துதித்து மிகுந்த பெரிய விருப்பத்தினோடும் எதிரில் போற்றி எழுந்த தோழனாரை நோக்கி

"நீ இயைந்த வருத்தம் யாது?" என்று (இறைவர்) கேட்டருள; தொழும்... விளம்புவார் - தொழுகின்ற தமது குறையினை எடுத்துச் சொல்வாராய் (நம்பிகள்); யானே...உமக்கென்று - "நானே தொடங்கிக் கொண்ட குற்றத்தி னுட்பட்டு வருந்துகின்ற என்னை அக்குற்றத்தினின்றும் இன்னமும் மேலெடுத்து ஆட்கொண்டருள வேண்டுவது உமக்குக் கடமை" என்று கூறி, ௩௨௬

3481. (இ - ள்) அடியேன்...திறமெல்லாம் - அங்குத் திருவொற்றியூரிலே தேவரீரே அருள்புரிய, வடித்த வேல் போன்ற ஒள்ளிய கண்களையுடைய சங்கிலியாரை அடியேன் மணஞ்செய்து அணைந்த தன்மைகளை எல்லாம்; கொடியேர்... துணிந்திருந்தாள் - கொடி போன்ற அழகிய இடையினையுடைய பரவையார் தானே அறிந்துகொண்டு தன்னிடம் நான் வந்தால் உயிர் விடுவேன் என்று துணிந்திருந்தாள்; என்...மொழிந்து - ஆதலால் நான் செய்வது யாது என்று கூறி, ௩௨௭

3482. (இ - ள்) நாயனீரே...தம்பிரானுரே யாகில்-எனது தலைவரே! நான் இங்குத் தேவரீருக்கு அடியேனேயானல், தேவரீர் எனக்குத் தாயினும் நல்ல தோழருமாகும் பெருமானுரே யானல்; ஆய...தாரும் என - ஆகிய அறிவும் இழந்து மனமுடைவேனுடைய வருத்தத்தைக் கண்டு பரவையின் மாளிகை யளவும் போய் இவ்விரவிலேயே அவள்பால் அதிகரித்துப் பொருந்திய புலவியைத் தீர்த்தளிக்க வேண்டும் என்று விண்ணப்பிக்க, ௩௨௮

3483. (இ - ள்) அன்பு...வேண்டி - அன்பு ஒன்றினையே விரும்பிய தமது ஆன்ம நாயகர் தம் அடியாராகிய நம்பிகள் யாது விரும்பினரோ அதனையே தாமும் அருள விரும்பினராகி; முன்பு...நோக்கி - தமது திருமுன்பு நின்று விண்ணப்பஞ் செய்த நம்பிகளது முகத்தினை நோக்கி; துன்பம் ஒழிநீ...அருள் செய்தார் - நீ உன் துன்பத்தினை நீக்கக் கடவாய்; நாம் உனக்காக ஓர் தூதனாகி இப்பொழுதே பொன்னாலும் மணியாலும் புனைந்த அணிகளைப் பூண்ட பரவையிடம் செல்கின்றோம் என்று அருளிச் செய்தனர். ௩௨௯

இந்நான்கு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3480. (வி - ரை) நீ உற்றது என்? - என்க.

உற்றது - உற்ற துன்பம்; வருத்தம் என்றது நம்பிகளின் உள்ளுணர்வு நிறைந்த பெருமானாதலின் அறிய நின்றது; ஆயின் மேல் வினவ நின்றதென்னை? எனின், உலக நிலையியலின் பொருட்டென்க: மேல்வரும் நிகழ்ச்சிகள் யாவும் இவ்வாறே உய்த்துணர்ந்து கொள்ளத்தக்கன.

யானே தொடங்கும் துரிசிடைப்பட்டு அழுந்தும் என்னை - துரிசு - குற்றம்; யானே தொடங்கும் - நானே மேற்கொண்டு செய்துகொண்ட செயலின் பயனாக; சங்கிலியார்பாற் கொண்ட காதலும் செய்த சபதமும் அதனைத் தவறியதும் முதலியவற்றின் விளைவாக; இன்னம்-முன்னர் ஆட்கொண்டமைபோல மேலும்; "தோழனுமாய் யான்செய்யுந் துரிசுகளுக் குடனாகி" (நம்பி. தேவா).

உமக்கு - உமக்குக் கடன்; கடமை என்பது இசை யெச்சம்.

(நம்பி) என்று (3480)- என மொழிந்து (3481) - என (3482) - விண்ணப்பம் செய்த நம்பி முகநோக்கித் - தம்பெருமான் - அருள் செய்தார் (3483) என்று இந்நான்கு பாட்டுக்களையும் கூட்டி முடிக்க.

தோடக்கத்துரிசு - என்பதும் பாடம்.

3481. (வி ரை) அந்த - திருவாரூரில் விண்ணப்பிக்கின்றாராதலின் அங்கு என்று செய்மைச் சுட்டினூர் கூறி அங்குத் திருவொற்றியூரில் என்றார்; அந்த அசை என்பாருமுண்டு.

நீரே அருள் செய்ய - இத்துன்பம் நீர் அருள் செய்ததன் காரணமாகத் தொடர்ந்து வந்ததாதலின் அதனைத் தீர்த்தல் உமது கடன் என்றது குறிப்பு.

மணஞ் செய்தணைந்த - மணத்தாற் சேர்ந்த; மணஞ் செய்து பின் இங்கு வந்தணைந்த என்றலுமாம்.

திறம் எல்லாம் - இடையிட்ட சரித நிகழ்ச்சிகள் எல்லாம்.

தான் அறிந்து - பிறர் கேட்டு அறிந்ததனோ டமையாது தாமே தக்காரை ஏவி அறிந்து என்க; ஏகாரம் தொக்கது; "மெய்ம்மை வார்த்தை தாமவர்பால் விட்டார் வந்து கட்டுரைப்ப" (3468); "ஒன்று மொழியா வகையறிந்து" (3741); தான் அசை என்பாருமுண்டு. (3471)

முடிவேன் - முடிதல் - உயிர் துறத்தல் (3474); "முடியே னினிப்பிறவேன்" (நம்பி. தேவா); கோடி - கொடிபோன்ற; ஏர்-அழகிய; உவமஉருபு தொக்கது; ஏர் - உவம உருபு என்றலுமாம்.

துணிந்திருந்தாள் - இருக்கின்றாள் என்பது துணிவு பற்றி இறந்த காலத்தாற் கூறப்பட்டது என்பர் இராமலிங்க அடிகளார்.

கோடிநேரிடையாள் - என்னே செய்வது என்பனவும் பாடங்கள். 327

3482. (வி ரை) நாயனீரே! - தலைவரே!; நாயன் - தலைவர். "அழகிது நாயனீரே" (774); "நாயனு மடிமையு நாட்டியதாகும்"; ஏகாரம் விளியுருபு.

இங்கு - இந்நிலையில்; இவ்விண்ணப்பம் பற்றிய நிகழ்ச்சியில்; இங்கு அசை யென்பாருமுண்டு.

அடியேனாகில் - தம்பிரானுரேயாகில் - அடியேன் என்பதும் பிரானுர் என்பதும் திண்ணமே யானால் - உண்மையேயானால்;

தாயின் நல்ல - தாயினும் நல்ல; உயர்வு சிறப்பும்மை தொக்கது.

தோழருமாம் தம்பிரானுரேயாகில் - தான் அடியேனாகில் என்பதனாலே அவர் பிரானுராவது உடன் பெறப்படும்; ஆதலின் தம்பிரானுரேயாகில் என்பது வேண்டாது கூறினூர் என்னில், அற்றன்று; அடியேன் என்ற நிலையினை நீரே வலிய அமைவுபடுத்தி ஏற்றுக் கொண்டீர் என்ற குறிப்புப் பெறக் கூறினூர் என்க; தோழருமாம் - தலைவராதல் மட்டிலன்றித் தோழருமாகிய என உம்மை இறந்தது தழுவியது. ஏகாரம் - தேற்றம்.

அடியேன் - என்றும், தோழருமாம்பிரானுர் - என்றும் இரண்டு காரணங் கூறியது அவர்பால் தாம் இவ்வாறு விண்ணப்பித்தற்கும் அவர் இணங்கி யியற்றுதற்கும் உள்ள உரிமையும் அமைதியும் குறிப்பதற்கு;

தோழருமாம் - என்றது "பாங்கனை யானன்ன பண்பனைக் கண்டிப் பரிசுரைத்தால், ஈங்கெனை யார்தடுப் பார்மடப் பாவையை யெய்துதற்கே" (பாங்கற் கூட்டம் - பாங்கனை நினைதல்-11-திருக்கோவை) என்பதாதி அகப் பொருட் டுறைகளின் குறிப்புப்பட நின்றது.

தாயினு நல்ல - "தாயினு நல்ல தலைவரென் றடியார் தம்மடி போற்றிசைப் பார்கள்" (பிள்-தேவா - திருக்கோணமலை - 51; "தாயவ னுலகுக்கு" (ஷை திருவல்லம்-2); "தாயுமா யெனக்கே" (அரசுகள் - திருச்சிராப்பள்ளி - 4) "தாயினு

நல்ல சங்கரனுக் கன்பர்" (ஷை ஆதிபுராணக் குறுந் - 9) என்பன முதலியவை காண்க; இத்திருவாக்குக்களிற் காண்கின்றவாறு.

"தாயினு நல்ல" - என்ற அடைமொழியைத் "தம்பிரானு"ரோடு சேர்த்தாது "தோழர்" என்பதனோடு புணர்த்திய தென்னையோ? எனின், குழவிக்கு வேண்டிய எத்தொழிலும் செய்யும் தாயின் தன்மை தோழனுந் தகுதியோடே பொருந்துவதாகும் குறிப்புப்பட என்க.

ஆய அறிவும் இழந்து - உண்மை இறந்தது தழுவியதென்று கொண்டு, செயற்கை யறிவே யன்றி இயற்கை யறிவும் இழந்து என்பர் இராமலிங்க அடிகள்;

அவ்வளவும் - மாளிகையின் சிறு தூரத்தின் அளவும் என்றலின் உம்மை சிறப்பும்மை; அந்த மாளிகையின்கண்ணும் என்ற ஏழனுருபு விரித்துரைத்தலுமாம்; இப்பொருளில் உம்மை இழிவு சிறப்பு.

இவ்விரவே - ஏகாரம் பிரிநிலை; துன்ப மிகுதிக் குறிப்பு உணர்த்திற்று.

தீர்த்தாண்ட நளும்—என்பதும் பாடம். 328

3483. (வி - ரை) அன்பு வேண்டும் தம்பெருமான் - "வேண்டுதல் வேண்டாமை யிலா" னாகிய இறைவர் தமது அருள் சுரத்தற்கு அடியார்பால் வேண்டுவது அன்பு ஒன்றுமே யாம் என்பது; அன்பு-அன்பே; பிரிநிலை ஏகாரம் தொக்கது;

அடியார் வேண்டிற்றே வேண்டி - அடியார் வேண்டுமதனையே தாமும் திருவுள்ளங் கொண்டு; "வேண்டத் தக்க தறிவோய்" ... "வேண்டி நீயா தருள்செய்தா யானு மதுவே வேண்டினல்லால்" (திருவா); அடியார் வேண்டுவன முற்றுப்பெறும் அளவாவன அவற்றையே இறைவன் திருவுள்ளத்துக் கொள்ளும் நிலையளவேயாம். இறைவரது திருவருள் வழியே அடியார் வேண்டுவதும் பொருந்தினால் அவ்வளவே அவ்வேண்டுகை நிறைவேறும் அளவென்பது திருவாசகம். ஆனல் இங்கு அந்த முறையும் நிலையும் மாறி, அடியார் வேண்டுகையினை நிறைவேற்றத் திருவுளங்கொண்டு இறைவர் அதனையே தாமும் வேண்டினார் என்றார்; அடியாரது அடிமைத் திறத்தின் உறைப்பும், இறைவர் அவர் எண்ண முடிப்பதிற் கொண்டருளிய ஆர்வமும் குறித்தற்கு.

உனக்கு ஓர் தூதனுகிப் போகின்றேம் - என்க. உனக்கு - உன் பொருட்டு; தூதன்-தூதுகாணும் அகப் பொருட்டுறைகளின் கருத்தினை இங்கு வைத்துக் காண்க.

இப்பொழுதே - முன் "இவ்விரவே" (3482) என்றதற்கிணங்க, அதனினும் விரைந்து இப்பொழுதே - என்றார்; அது போழ்து பின்னிரவாய்க் கழிந்து செல்லும் கால எல்லையும் குறிப்பு. 329

3484. எல்லை யில்லாக் களிப்பினரா யிறைவர் தாளில் வீழ்ந்தெழுந்து
வல்ல பரிசெல் லாந்துதித்து வாழ்ந்து நின்ற வன்றொண்டர்
"முல்லை முகைவெண் ணகைப்பரவை முகில்சேர்மாடத் திடைச்செல்ல
நில்லா தீண்ட வெழுந்தருளி நீக்கும் புலவி" யெனத்தொழுதார்.

(இ - ள்) எல்லையில்லா...வன்றொண்டர் - அளவில்லாத மகிழ்ச்சியை உடையவராகி இறைவரது திருவடிகளில் விழுந்து எழுந்து இயன்ற தன்மைகள் எல்லாவற்றாலும் துதித்து வாழ்வடைந்து நின்றவராகிய வன்றொண்டர்; முல்லை... எனத் தொழுதார் - முல்லை யரும்பு போன்ற வெள்ளிய பற்களை யுடைய பரவையினது மேகந் தவழ உயர்ந்த மாளிகையின் கண்ணே சென்றருளுவதற்காக இனி

இங்கு நில்லாது விரைவில் எழுந்தருளிச் சென்று அவளது புலவியினை நீக்குவீராக என்று சொல்லித் தொழுதனர்.

(வி - ரை) எல்லையில்லாக் களிப்பினராய் - இறையவரே தூது செல்ல ஒருப் பட்டருளினாராதலின் " முன்னவனே முன்னின்றால் முடியாத பொருளுளதோ " (132) என்றபடி அச்செய்தி முற்றுப் பெற்றேவிடும் என்ற உறுதிப்பாட்டினால் தம் கருத்து முற்றியதாகவே கொண்டு அளவில்லா மகிழ்ச்சியினுட்பட்டனர்.

தாளில்...நின்ற - அளவுகடந்தெழுந்த மகிழ்ச்சியின் மெய்ப்பாடுகள் ; வல்லபரி சேல்லாம் - தாம் வல்ல - தம்மாலியன்ற - ஆற்றலெல்லாம்.

நகை - நகைக்கு இருப்பிடமான பல்வரிசை குறித்தது.

முகில் சேர் மாடம் - உயர்ச்சி குறித்தது.

வெண்ணகைப் பரவை - என்றது இறைவர் தூதுவரக்காணும் பரவை புலவி நீங்கி மகிழ் கொள்ளுதல் ஒருதலை என்ற குறிப்பினாற் கூறியது. " அணிமுறுவல் அரும்பரவை " (294).

ஈண்ட - விரைவாக ; நீக்கும் புலவி - என மாறிக் கூறியதும் விரைவுக் குறிப்பு.

3485. அண்டர் வாழக் கருணையினா லால கால மமுதாக
உண்ட நீலக் கோலமிடற் றொருவ ரிருவர்க் கறிவரியார்
வண்டு வாழு மலர்க்கூந்தற் பரவை யார்மா ளிகைநோக்கித்
தொண்ட னார்தந் துயர்நீக்கத் தூத னாரா யெழுந்தருள, ௩௩௧

3486. தேவா சிரியன் முறையிருக்குந் தேவ ரெல்லாஞ் சேவித்துப்
போவார் தம்மில் வேண்டுவார் போத வொழிந்தார் புறத்தொழிய
ஓவா வணுக்கச் சேவகத்தி லுள்ளோர் பூத கணநாதர்
மூவா முனிவர் யோகிகளின் முதலா னார்கள் முன்போத, ௩௩௨

3487. அருகு பெரிய தேவருட னணைந்து வருமவ் விருடிகளும்
மருவு நண்பு நிதிக்கோனு முதலா யுள்ளோர் மகிழ்ந்தேத்த
தெருவும் விசும்பு நிறைந்துவிரைச் செழும்பூ மாரி பொழிந்தலையப்
பொருவி லன்பர் விடுந்தூதர் புனித வீதி யினிற்போத, ௩௩௩

3488. மாலு மயனுங் காணாதார் மலர்த்தாள் பூண்டு வந்திறைஞ்சுங்
கால மிது"வென் றங்கவரை யழைத்தா லென்னக் கடல்விளைத்த
ஆல மிருண்ட கண்டத்தா னடித்தா மரைமேற் சிலம்பொலிப்ப
நீல மலர்க்கட் பரவையார் திருமா ளிகையை நேர்நோக்கி, ௩௩௪

3489. இறைவர் விரைவி னெழுந்தருள வெய்து மவர்கள் பின்றொடர
அறைகொ டிரைநீர் தொடர்சடையி லரவு தொடர, வரிய விளம்
பிறைகொ ளருகு நறையிதழிப் பிணையல் சுரும்பு தொடர,வுடன்
மறைக டொடர, வன்றொண்டர் மனமுந் தொடர வரும்பொழுது,

3490. பெருவீ தியினு மிகமுழங்கிப் பிறங்கு மதகுஞ் சரமுரித்து
மருவீ ருரிவை புனைந்தவர்தம் மருங்கு சூழ்வார் நெருங்குதலால்
திருவீ தியினி லழகாவர் மகிழுஞ் செல்வத் திருவாரூர்
ஒருவீ தியிலே சிவலோக முழுதுங் காண வுளதாமால். ௩௩௬

3485. (இ - ள்) அண்டர்...அறிவரியார் - தேவர்கள் வாழும் பொருட்டு அருளினாலே ஆலால விடத்தினையே அமுதாக உண்டு அதனால் நீலகண்டராகிய ஒருவரும், இருவராகிய பிரம விட்டுணுக்களுக்கு அறிதற் கரியவரும் ஆகிய இறைவர் ; வண்டு...நோக்கி - வண்டுகள் மொய்த்துள்ள மலர்களைச் சூடிய கூந்தலையுடைய பரவையாரது திருமாளிகையை நோக்கி ; தொண்டனார் தம்...எழுந்தருள - தொண்டனாராகிய நம்பிகளது தூதராக எழுந்தருளிச் செல்ல, ௩௩௧

3486. (இ - ள்) தேவாசிரியன்...புறத்தொழிய - தேவாசிரியன் திருவாயிலில் வரங்கிடந்து காத்திருக்கும் தேவர்கள் எல்லாரும் சேவித்துப் போவார்களுள் வேண்டுபவர்கள் மட்டும் உடன்போக, ஒழிந்தவர்கள் புறத்திற் போக ; ஒவா... முன்போத - நீங்காத திரு அணுக்கத் தொண்டில் உள்ளோர்களும் சிவ பூத கணநாதர்களும் மூத்தலில்லாத முனிவர்கள் யோகிகளுள் முதன்மை பெற்றவர்களும் முன்பு செல்ல, ௩௩௨

3487. (இ - ள்) அருகு...எய்த - பக்கத்தில் நந்திபெருமானுடனே அணைந்து வரும் அந்த இருடிகளும் பொருந்திய நண்புடைய குபேரனும் முதலாக உள்ளவர்கள் மகிழ்ந்து துதிக்கவும் ; தெருவும்...பொழிந்தலைய - திருவீதியும் வானமும் நிறைந்து மணமுடைய செழிய பூமழை பொழிந்து பரவ ; பொருவில்...போது - ஒப்பற்ற அன்பராம் நம்பிகள் விட்ட தூதராகிய இறைவர் தூய திருவீதியிற் போத, ௩௩௩

3488. (இ - ள்) மாலும்...என்ன - திருமாலும் பிரமதேவரும் காண்பதற் கரிய இறைவரது தாமரைபோன்ற திருவடிகளைச் சிரமேற்றாங்கி வந்து வணங்குதற் குரிய காலம் இது என்று அவர்களை அழைத்தாற்போல ; கடல்விளைத்த...சிலம்பு ஒலிப்ப - கடலில் வந்தெழுந்த விடம் தங்கியதனால் இருள்கொண்ட கண்டத்தினை உடைய இறைவரது திருவடித் தாமரையின்மேல் சிலம்பு சத்திக்க ; நீல...நோக்கி - நீலமலர் போன்ற கண்களையுடைய பரவையாரது திருமாளிகையினைக் குறித்து நேர் நோக்கி, ௩௩௪

3489. (இ - ள்) இறைவர்...எழுந்தருள - இறைவர் விரைவாக எழுந்தருள ; எய்து...பின்றொடர - முன் கூறியவாறு பொருந்த வருகின்ற அவர்களெல்லாம் அவர்பின் தொடர்ந்து வர; அறைகொள்...அரவு தொடர-சத்தித்து வரும் அலைகளையுடைய கங்கைநீர் பொருந்திய சடையில் பாம்புகள் தொடர ; அரிய...சுரும்பு தொடர - அருமையாகிய இளம்பிறையின் அருகே தேன்பொருந்திய கொன்றை மாலையில் வண்டுகள் தொடரவும் ; உடன் மறைகள் தொடர - உடனே வேதங்கள் தொடரவும் ; வன்றொண்டர் மனமும் தொடர - இவற்றோடும் வன்றொண்டரது மனமும் உடன் தொடரவும் ; வரும்பொழுது - இவ்வாறாக வரும்பொழுது, ௩௩௫

3490. (இ - ள்) பெருவீரையினும்...நெருங்குதலால் - பெரிய கடலினும் மிக்க முழக்கம் செய்து விளங்கும் மதயானையினை உரித்து அத்தோலைப் போர்த்த அப்பெருமானது பக்கத்தே முன்கூறியபடி சூழ்ந்து வருவார்கள் நெருங்கி வருதலாலே ; திருவீதியினில்...உளதாமல் - திருவீதியில் எழுந்தருளும் அழகராகிய இறைவர் மகிழும் அச் செல்வத் திருவாரூரின் ஒரு வீதியிலே சிவலோகம் முழுதும் காண உளதாயிற்று. ௩௩௬

இந்த ஆறு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3485. (வி - ரை) ஆலகாலம் - ஆலால விடம்.

உண்ட நீலக் கோல மிடறு - விடம் உண்டதனால் அது தங்கி நீலமாயின கழுத்து ; மேலும் " கடல் விளைத்த ஆலம் இருண்ட கண்டத்தான் " (3488)என்பது காண்க. கொடியதாகிய விடத்தினை அமுதாக உண்டு கண்டத் தடக்கியது போலவே பரவையார்பாற் றூதாகிய, தாழ்வாக உலகர் கொள்ளும் இச்செயலினையும் பரமனார் மேற்கொண்டருளினர் என்ற குறிப்புப் பட இத்தன்மையாற் கூறினார். இச்செயலினைப் பற்றியே இப்புராணத்தில் ஏயர்கோன் கலிக்காமனார் வெகுண்டமையும், நம்பிகளும் பிழை யுடன்பட்டு (3541) மேற்சரிதம் விளைந்தமையும் இங்குக் கருதத் தக்கன.

கோலமிடறு - கோலமாவது உயிர்களை உய்விக்கும் அழகு ; உண்ட - உண்ணுதலாலாகிய.

ஒருவர் இருவர்க் கறிவரியார் - எண் பற்றிய சொல்லணி.

நோக்கி - குறிக்கொண்டு.

தூதனாராய் - " உனக்கோர் தூதனாகி " (3483) என்ற இறைவர் கூற்றுக் காண்க ; ஆய் - ஆக்கச்சொல் தாமே அவ்வாறு தம்மை ஆக்கிக்கொண்டு என்ற பொருளில் வந்தது.

தொண்டனார்தம் துயர் நீக்க - தொண்டராதலின் அவரதுதுயர் நீக்கும் கடப்பாடுடைமைபற்றி எனக் காரணக் குறிப்புப்பட நின்றது ; அண்டர் வேண்ட ஆலமுண்டவர் தொண்டர் வேண்டத் தூதராய் வரமாட்டாரோ ? என்ற நயம் பற்றி வந்ததும் காண்க. 331

3486. (வி - ரை) தேவாசிரியன் முறையிருக்கும்-தேவாசிரியனிடத்துக் குறையிரந்து கிடக்கும் ; முறையிருத்தல் - வரங்கிடத்தல் ; " பூவார் திசைமுக னிந்திரன் பூமிசை, மாவா ழகலத்து மான்முதல் வானவர், ஓவா தெவரு நிறைந்துறைந் துள்ளது, தேவா சிரிய னெனுந்திருக் காவணம் " (137)

வேண்டுவார் போத ஒழிந்தார் புறத்தொழிய - வேண்டுவார் - வேண்டத் தகுதியுடையோர்; ஒழிந்தார் - தகுதியில்லாத ஏனையோர் ; போத - உடன்போக.

ஓவா அணுக்கச் சேவகத்தில் உள்ளோர் - நீங்காது அணுகிப் பணி புரிவோர் ; பூத கணநாதர் - சிவகணத் தலைவர்கள்.

மூவா முனிவர் - யோக சாதனையால் மூப்பில்லாத நிலைமை பெற்றவர்கள் ; " சந்ததமு மிளமையொ டிருக்கலாம் " (தாயுமா). 332

3387. (வி - ரை) பெரிய தேவர் - திருநந்தி பெருமான் ; " பெரிய தேவரைச் சென்று கொணர்கென " (வெள் - சருக். 44) ; சிவகணங்களுக் கெல்லாந் தலைவராதலானும், கோயில் நாயகராதலானும் இப்பெயர் பெற்றார்.

நண்பு நிதிக்கோன் - குபேரன் ; சிவபெருமானுக்குத் தோழர் எனப்படுவர். " மித்திரவச் சிரவணற்கு விருப்பன் கண்டாய் " (தாண்) ; " தனதனற் றோழா " (திருவிசைப்பா); "தனதனிற் சார்ந்தநற் றோழன்" (பேரூர்ப்புரா - பள் - பட-37).

பூமாரி அலைய - பூமழை பரவ ; பொழிந்து ; பொழியப்பட்டு. 333

3488. (வி - ரை) காணாதார் - காணுதற்கரியவர்.

காணாதார் வந்திறைஞ்சும் காலம் இது என்று அவரை அழைத்தா லென்ன - அவர்கள் முயன்றும் முன்னர்க் காணாதார் இங்கு எளிதில் கண்டு இறைஞ்சத் தக்க காலமிது என்று அவ்விருவரையும் அழைத்தது போலச் சிலம்பு ஒலித்தன என்பது. " திருச்சிலம் போசை ஒலிவழியே சென்று, நிருத்தனைக் கும்பிடென்றுந் தீபற " (உந்தி) ; திருவடியை அணுகச் செய்து உயிர்களை முத்திநெறி கூடச் செய்தல்

சிலம்பின் ஒலியின் பயனுதலின் அழைத்தால் என்ன என்றார்; என்ன - உவம வுருபு; வினைபற்றிய உவம முள்ளுறுத்த தற்குறிப்பேற்ற அணி.

காலம் இது - "இறைவன் கிளர்கின்ற காலமிக் காலம்" (4); "காலமுண் டாகவே காதல் செய்துய்ம்மின்...பிரான்றன் னடியவர்க்கு, மூலபண் டாரம் வழங்கு கின் றான்வந்து முந்துமினே" (5) (திருவா - பாண்டிப் பதிகம்) என்ற திருவாக்குக் களின் கருத்துக்கள் ஈண்டுக் கருதத்தக்கன.

அவரை - "மாலும் அயனும்" என்ற அவ்விருவரையும்.

கடல் விளைத்த ஆலம் - விளைத்த - விளைவிக்கப்பட்ட; கடலில் விளைவிக்கப் பட்ட என்பதைக் கடல் விளைத்த என்றுபசரித்தார்; இடத்து நிகழ் பொருள் இடத் தின்மேல் ஏற்றப்பட்டது. ஆலம் இருண்டகண்டம் - ஆலம் - விடம்; ஆலமிருண்ட - ஆலத்தால் இருண்ட.

நீல மலர் - குவளை; இது பெண்களின் கண்ணுக்கு உவமிக்கப்படும்; நீலமலர் போன்ற கண்; மெய் பற்றிய உவமம்.

நேர் நோக்கி - நேராக அதனையே குறிவைத்து. 334

குறிப்பு :—3486 - 3487 - 3488 இம்மூன்று பாட்டுக்களும் சில பிரதிகளில் இல்லை.

3489. (வி - ரை) திருவீதியில் இறைவர் எழுந்தருளும் பொழுது அவரைத் தொடர்ந்து சென்றாரையும் சென்ற பொருள்களையும் கூறுவது இத்திருப்பாட்டு.

எய்துமவர்கள் - முன் மூன்று பாட்டுக்களினும் குறிப்பிட்டவர்கள். இவர்கள் இறைவரது பின் தொடர்ந்தவர்கள்.

அறைகோள்...சுரும்பு தோடர - நீர் தொடர் சடையில் அரவும், பிறையினருகு இதழிப் பிணையலில் சுரும்பும் தொடர; அறை - ஓசை; இரைச்சல்; இறைவருடனே திருமேனித் தொடர்பு கொண்டன.

உடன் மறைகள் தோடர - இறைவரைத் தம்முள் வைத்தலால் உடன் தொடர்ந்தன.

வன்றொண்டர் மனமும் தோடர - வன்றொண்டர் திருமேனி மட்டில் தேவா சிரியன் மருங்கு நின்றதன்றி, அவரது மனம் இறைவரைப் பின்பற்றிச் சென்றது என்பதாம்; உம்மை முன்கூறிய ஏனையவையே யன்றி மனமும் என இறந்தது தழுவிய எச்சவும்மை; இனி, மனமும் என்பதற்குப் பிரியாது சிவயோக நிலையிற் கூடியிருக்கும் நம்பிகளது மனமும் என்று சிறப்பும்மை யாக்கி உரைத்தலுமாம்; பிரியாது கூடியிருந்தாலும் இங்கு உலகியல் நிலையில் நடிப்பார் போன்று இறைவர் போதலும் அவர் மனந் தொடர்தலுமாகிய செயல்கள் நிகழ்ந்தன என்பதாம். "ஏடு தரு மலர்க்குழலார் முலைத்தலைக்கே யிடைக்கே, எறிவிழியின் படுகடைக்கே கிடந்து மிறை ஞானங், கூடுமவர் கூடரிய வீடுங் கூடிக் குஞ்சித்த சேவடியும் கும்பிட்டே யிருப்பர்" (சித்தி - 10) என்ற கருத்து ஈண்டுச் சிந்திக்கத் தக்கது. உலகியல் நிலையில் இவ்வாறு நம்பிகள் மனந்தொடர்ந்த தன்மைபற்றி மேல் 3502 - 3503 பாட்டுக்களிற் கூறுதல் காண்க.

இத்திருப்பாட்டு மிகுந்த இசை நயமும் பொருணயமும் கவிநயமும் பொருந்தி விளங்குவதாகும். 335

3490. (வி - ரை) பெருவீரை - பெரிய கடல்.

சூழ்வார் - முன் நான்கு திருப்பாட்டுக்களிலும் கூறப்பட்ட பல்வேறு திறத் தினர்.

திருவீதியினில் அழகர் - வீதியில் எழுந்தருளிய அழகராகிய வீதிவிடங்கர்.

திருவாரூர் ஒரு வீதியிலே சிவலோக முழுதுங்காண- சிவலோகமுழுதும் என்றது சிவலோகத்துட் காணப்படுவோர் இத்திருவீதியிலும் காணப்படுதலால் ஒப்புமை கூறப்பட்டது. நெருங்குதலால் - காண உள்தாமால் என்று கூட்டுக.

வீதியிலே என்றார் இங்குச் சூழ்வோர் அனைவரும் வீதி அளவில் நின்றுவிட, இறைவர் மட்டும் தம்மைப் பூசிக்கும் அந்தணர் வடிவுடன் இம்முறையில் திரு மாளிகையினுள் எழுந்தருளுதல் குறிப்பு. மேல் வரும் முறையில் இறைவர் தாமாந் தன்மை அறிவுறு கோலத்தோடு மருங்கு சூழும் கணத்தவர் முதலிய அனைவருடன் மாளிகையினுள் எழுந்தருளுதலால் " அத்திருமாளிகை தென்பால் வெள்ளித் திருமலை போன்ற தன்றே " (3516) என்பது காண்க.

அழகர் - இறைவர் ; மகிழும் செல்வத் திருவாரூர் - திருத்தாண்டகப் பதிகங் களும் பிறவும் காண்க.

ஒரு வீதியிலே முழுதும் காண - ஒரு - சுட்டுப் பொருள் தந்து நின்றது ; ஏகாரம் பிரிநிலை ; உம்மை - முற்றும்மை. காண - காண்பதுபோல.

உள்தாமல் - காலமயக்கம் ; உரிமை - உரித்தலால் பெறப்படுவது. 336

3491. ஞால முய்ய வெழுந்தருளு நம்பி தூதர் பரவையார்
கோல மணிமா ளிகைவாயில் குறுகு வார்முன் கூடத்தம்
பாலங் கணைந்தார் புறநிற்பப் பண்டே தம்மை யர்ச்சிக்கும்
சீல முடைய மறைமுனிவ ராகித் தனியே சென்றணைந்தார். ௩௩௭

(இ - ள்) ஞாலம்...தூதர் - உலக முய்யும் பொருட்டு வந்தவதரித் தருளிய நம்பிகளது தூதராகிய இறைவர் ; பரவையார்...குறுகுவார் - பரவையாரது அழகிய மணிகள் அணிந்த திருமாளிகையின் வாயிலிற் சேர்வாராய் ; முன்கூட...புறநிற்ப- முன்னரே தம்பாலின் அங்கு அணைந்தவர்கள் எல்லாரும் புறத்திலே நிற்கப்பணித்து; பண்டே...சென்றணைந்தார் - நீண்ட நாளாகத் தம்மை அருச்சனை புரியும் சீலம் உடைய சிவ வேதிய முனிவராகிய கோலத்துடன் தனியே சென்று சேர்ந்தனர்.

(வி - ரை) ஞால முய்ய எழுந்தருளு நம்பி - " மாதவஞ் செய்த தென்றிசை வாழ்ந்திடத், தீதி லாத்திருத் தொண்டத் தொகைதரப், போதுவார் " (35) என்று தொடக்கத்திற் கூறிய கருத்தை ஈண்டு நினைவு கூர்தற் பொருட்டு எடுத்துரைத்த வாறு ; என்னை ? ஞாலமுய்தற் பொருட்டுத் திருமலையில் நம்பிகளது காட்சி நிகழ, அதனால் " மாதர்மேன் மனம் வைத்தனை தென்புவி, மீது தோன்றியம் மெல்லிய லாருடன், காத லின்பங் கலந்த ணைவாய்" என இறைவராணை நிகழ, அந்நியதியின் படி புவித்தோற்றம் நிகழ, அந்நிகழ்ச்சியினைக் கூட்டுவிக்கும் பொருட்டு இறைவர் தூதரா யெழுந்தருளினர் என்க. " செய்வானும் செய்வினையு மதன்பயனும் சேர்ப் பானும் " (சாக். புரா.) என்றபடி ஈண்டுச் செய்வினைப் பயன் கூட்டுவிப்பாராய் இறைவர் தூதரானார் என்பது குறிப்பு ; இங்கு இத்தூதின் நிலைபற்றி உண்மை யறிய லாற்றாது குறை கூறப் புகுவோர், நம்பிகளது சரிதம் பற்றிய இந்நிகழ்ச்சியே யன்றி உலகில் எல்லா உயிர்களின் எல்லா வினைப்பயன்களையும் இடை நின்று கூட்டு விப்பவர் இறைவரேயாம் என்ற உண்மை நிலையைக் கருதித் தெளியக்கடவர்.

முன்கூட...புறநிற்ப - கணங்கள் - தேவர் - முனிவர் முதலியோர்கள் திரு மாளிகையின் புறத்தே திருவீதியளவில் நின்றுவிட ; இதுபற்றியே முன் " ஒரு

வீதியிலே சிவலோக முழுதும் காண " என்றார். முன்கூட - அணைந்தார் - முன்னே சென்றவர்கள்.

பண்டே...தனியே சென்று அணைந்தார் - பண்டே - நீண்ட காலமாக; வயது முதிர்ந்த; சீலம் - தவவொழுக்கம்; தனியே - உடன் வந்தவர்களின்றி; "நீடிய பேதையா ளுடனின்றி" (447) என்ற கருத்தும் ஈண்டு வைத்துக் கருதத் தக்கது; பின்னர்த் "தாமாந் தன்மை யறிவுறு கோலத் தோடும்" (3515) என்பதனை இங்கு வைத்து ஒப்பு நோக்குக.

தனியே - "மாதரார் தாமிருந்த, இடவகையிற் றனிபுகுதோம்" (3697) என்ற நிலையினையுடையாராய்த் தம்மைக் காட்டி நடிக்கும் பிரானார் இங்குப் பரவையார் தனியிருந்த திருமாளிகையில், பாதிரவில் அதற்கு மாறாகத் தனியே புகுந்தாரோ? எனின், பண்டே தம்மை அர்ச்சிக்கும் மறை முனிவர் கோலமும் சீல முடைமையும் அவ்வொழுக்கத்தினை இகவாமற் காத்தன என்பது குறிக்க இவற்றை முன் கூறிக் காட்டிய நயம் காண்க.

ஆகி-ஆக்கச் சொல் உருவமாறுதலை மேற்கொள்ளுதல் குறித்தது. ஆக்கிக்கொண்டு இவ்வாறு அருளினாலே நினைந்தவாறே நினைந்த மேனி கொள்ளுதல் இறைவரியல் பென்க. (சித். 1-65; சிவப். 15).

மறைமுனிவராகித் தனியே சென்று அணைந்தார் - இவ்வாறு ஒரு முறைக் கிருமுறை தூது செல்லுதலும், முதலில் மறை முனிவராகித் தனியே செல்லுதலும், பின்னர்த் தாமாந்தன்மை அறிவுறு கோலத்தோடு செல்லுதலும் முதலிய செயல்கள் இறைமைத் தன்மையோடு இயைவனவோ? இவற்றின் தன்மை என்னை? எனின், இவை, உயிர்கள் வினைப்பயன்களைத் துய்த்து ஈடேறச் செய்தற்கண் முன்னவன் செய்யும் அருள் விளையாட்டுக்களேயா மென்க; இவற்றின் காரணமும் நிகழ்ச்சி முறையும் நம்மாற் காண முடியாது; ஆதலிற் கேட்டலுமாகாது என்பது இறைவனாணையாம். உயிர்கள் வினைத்திறத்தாற் பலதிறப்படுவன; ஆதலின் அவ்வவர்க்குச் செய்யும் அருளின் வண்ணமும் பலபல ஆவன; "ஆட்பா லவர்க் கருளும் வண்ணமு மாதி மாண்புங், கேட்பான்புகி லளவில்லை கிளக்க வேண்டா" (திருப்பாசுரம்) என்ற ஆணையும், அதற்கு, "அருளும் திறம், நாதன் மாட்சிமை கேட்க நவிலுங்கால், ஓதுமெல்லை யுலப்பில வாதலின், யாது மாராய்ச்சி யில்லையாம்" (2731) என்ற ஆசிரியரது விளக்கமும் ஈண்டு உளங்கொள்ளத் தக்கன. 337

3492. சென்று மணிவா யிற்கதவஞ் செறிய வடைத்த வதன்முன்பு
நின்று "பாவாய்! திறவா"யென் றழைப்ப, நெறிமென் குழலாரும்
ஒன்றுந் துயிலா துணர்ந்தயர்வா "ருடைய நாதன் பூசனைசெய்
தொன்றும் புரிநூன் மணிமார்பர் போலு மழைத்தா" ரெனத்துணிந்து,

3493. "பாதி மதிவாழ் முடியாரைப் பயில்பூ சனையின் பணிபுரிவார்
பாதி யிரவி லிங்கணைந்த தென்னோ?" வென்று பயமெய்திப்
பாதி யுமையா டிருவுருவிற் பரம ராவ தறியாதே
பாதி மதிவா ணுதலாரும் பதைத்து வந்து கடைதிறந்தார். ௩௩௮

3492. (இ - ள்) சென்று...அழைப்ப - முன்கூறியவாறு தனியே சென்றணைந்து நெருங்க அடைத்த அழகிய அவ்வாயிற் கதவத்தின் முன்பு நின்று, "பாவையே! கதவந்திறவாய்" என்று அழைத்திட; நெறிமென்...அயர்வார் - நெறித்த மெல்லிய கூந்தலையுடைய பாவையாரும் ஒரு சிறிதும் துயிலாமல் விழித்

திருந்து வருந்துபவர் ; உடைய நாதன்...எனத்துணிந்து - என்னை ஆளுடைய இறைவரது பூசையினைச் செய்யும் நெருங்கிய முப்புரிநூலினை அணிந்த மார்பினை யுடைய முனிவர் போலும் வந்தழைத்தனர் ?" என்று துணிந்து, ௩௩௮

3493. (இ - ள்) பாதி...பயமெய்தி - பிறைச்சந்திரன் வாழ்தற்கிடமாகிய சடைமுடியினை உடைய இறைவரை விளக்கமுடைய பூசனையின் பணி செய்கின்ற முனிவர் நடு இரவில் இங்கு வந்தணைந்த காரியம் யாதோ என்று அச்சமெய்தி ; பாதி ...அறியாதே - அவர் தமது திருவடிவிற் பாதியாகிய ஒரு கூற்றிலே உமையம்மை யாரையுடைய பரமரே ஆவர் என்பதை யறியாமல் ; பாதிமதி...திறந்தார் - அரைச் சந்திரன் போன்ற நெற்றியையுடைய பரவையாரும் பதைப்புடனே வந்து வாயிலைத் திறந்தனர். ௩௩௯

இந்த இரண்டு பாட்டுக்களும் ஒரு முடிபு கொண்டன.

3492. (வி - ரை) செறிய அடைத்த கதவமதன் முன்பு - என்க.

செறிய - நெருங்க ; நன்றாக ; பிணக்கினால் எளிதிற் றிறக்க வியலாதபடி அடைத்த என்ற குறிப்பு.

பாவாய் என்றழைத்துக் கடை திறவாய் என்ன - என்க.

கடை - (கதவம்) என்பது வருவிக்க ; பாவாய் ! அடைத்த கதவின் முன் வெளி நிற்பவர்கள் உள் இருப்போரை விளித்து உரைத்தல் பற்றி அழைத்தார் ; "அஞ்சொலீர் ! பலி ! என்னும் " (தேவா - ஐயாறு.); " வாட்டடங்கண் மாதே " " நேரிழையாய் " (திருவா - திருவெம்.)

நெறிமென் குழலார் - பரவையார் ; நெறி - நெறித்தலாவது கருமணல் ஒழுங்கு போலச் சிறு சுருள்களுடன் தொடர்ந்து இருத்தல் ; மென்மை - மெல்லிய மயிர்க ளுடைமை உயர்ந்த இலக்கணம்.

ஒன்றும் துயிலாது உணர்ந்து-ஒன்றும் - ஒரு சிறிதும்; காலத்துவந்த பொருந்தத் தக்க என்றலுமாம் ; ஒன்றுதல் - பொருந்துதல் ; துயிலாது - துயில் பெறாது ; உணர்ந்து - விழித்து இருந்து.

உடைய பெருமான் - தம்மை ஆளுடைய நாயகராகிய புற்றிடங் கொண்ட இறைவர்.

துன்றும் புரிநூல் மணிமார்பர் - சிவ வேதியராகிய அந்தணர்.

போலும் அழைத்தார் - போலும் - முழுதும் துணிவு பெறாத நிலை ; அதன் காரணம் வரும் பாட்டிற் கூறுவது காண்க; உயர்ந்த நிலையில் உள்ள அவர், காலமும் இடமும் தகாத நிலையில் வந்தமை ஐயப்பாட்டின் துணிவு பெறாமைக்குக் காரணம்.

துணிந்து - அழைத்தவர் இன்னார் என்பதை மட்டில் துணிந்து ; வினைக் கார ணம் முதலியவை துணியாமை மேற்காண்க.

பாவா யென்றழைப்ப - நெறித்துச் சுழல் மென் குழலாரும் - என்பதும் பாடம். 338

3493. (வி - ரை) பாதிமதி - முதிராத இளம்பிறை ; பாதி - வளர்ச்சிக் குறையுடைய என்ற மட்டில் பொருள் தந்து நின்றது.

பயில் பூசனையின் பணி - பயில் - விளங்கும் ; சிறந்த பிறப்பினின்றும் பழகிய என்ற குறிப்புமாம்.

இன் - பூசனையாகிய இனிய பணி ; இனிமை - தமக்கும் உலகுக்கும் வீடு பேறாகிய பயன் தருதல்.

பாதி இரவில் இந்த அணைந்தது என்னோ என்று பயம் எய்தி - பாதி இரவு - வரத்தகாத நேரம்; ("பேயு முறங்கும் பிறங்கிருள் வாய்" (3476);) என்பதும், இந்த - வரத்தகாத இவ்விடத்து என்பதும் குறிப்பு.

பயம் எய்தி - தம்பாலுள்ள குறை காரணமாமோ என்ற நினைவினால் வந்த அச்சம்.

பாதி யுமையாள்...அறியாதே - வந்து அழைத்தவர் சிவபெருமானே என்பதைச் சிறிதும் தெரியலாற்றாது; அக்குறிப்புக்கள் தானும் அறிந்த இடத்துப் பரவையார் கொண்ட மனமழிந்த நிலையினை மேல் (3513—3514) உரைப்பது காண்க; அறியாதே - அறிந்திருப்பாராயின் இங்கு, மேல் (3495—3499) வருமாறு மறுத்து வலிந்துரைத்திருக்க மாட்டார் என்பது குறிக்க அறியாதே என்று அமைதி வகுத்தமை காண்க.

பாதி மதிவாள் நுதலார் - பரவையார்; பாதிமதி - அரைப்பிளவாகிய சந்திரன். அர்த்த சந்திரன் என்பர். இது பெண்களின் நெற்றிக்கு மெய்யும் உருவும் பற்றி உவமிக்கப்படும்; வாள் நுதல் என்ற குறிப்புமிது; பாதிமதி - மதி - புத்தி - ஆலோசனை என்ற குறிப்புடன் - இந்நிலையில் புத்திக் குறைவுடனின்ற என்ற பொருளுந்தா நின்றது; "தேய் மதியன்" (திருவா) என்புழிப்போல.

பதைத்து - பதைத்தல் பயத்தின் விளைவு; கடை - கதவம்.

குறிப்பு :—இந்நிலையில் இறைவரது தூது பாதிப் பயனுடன் நின்று மீண்டும் வருதலுடன் முழுப்பயனும் தந்து நிறைவாவது என்ற குறிப்புத் தர இப்பாட்டில் பாதி என்று நான்கடியிலும் எதுகை வைத்து சொற் பொருட் பின்வரு நிலையில் அருளிய கவிநயமும் கண்டு கொள்க. 339

3494. மன்னு முரிமை வன்றொண்டர் வாயிற் றூதர் வாயிலிடை
முன்னின் றாரைக் கண்டிறைஞ்சி "முழுது முறங்கும் பொழுதின்கண்
என்னை யாளும் பெருமானிங் கெய்தி யருளி தென்ன
மின்னு மணிநூ லணிமார்பீ! செய்த வேண்டிற் றென்?"னென்றார்.

(இ - ள்) மன்னும்...இறைஞ்சி - நிலைபெற்ற தோழராகும் உரிமையுடைய வன்றொண்டரது காரணமாக வரும் தூதராகிய இறைவர் வாயிலின் முன்னே நின்றாரைப் பரவையார் கண்டு வணங்கி; முழுதும்...கண் - உலகத்துயிர்கள் யாவையும் இந்த நடு இரவிலே என்னை யாளுடைய இறைவரே இங்கு எழுந்தருளி வந்தார் என்பதுபோல, விளங்கும் அழகிய நூலணிந்த மார்பினை யுடையவரே! தேவரீர் இங்கு வரவேண்டிய காரணமென்ன? என்று வினவினார்.

(வி - ரை) உரிமை...தூதர் - தோழராகும் உரிமையினாலே விடுக்கப்பட்டுப் போந்த அவரதுதூதர்; நம்பி தூது விடுத்தற்கும் இறைவர் இசைந்து தூதுசெல்வதற்கும் இருபாலும் ஒன்று போலவே தோழராந்தன்மையே உரிமை தந்தது என்பதாம்.

வாயில் - காரணம்; வாயில் தூதர் - வாயிலாக வரும் தூதர். வாயிற்றூதர் - வாயிலிடை; சொற்பின் வருநிலை; வாயில் - திருமாளிகை வாயில்;

தூதர் நின்றாரை - தூதராய் வந்து நின்றாரை.

முழுதும் உறங்கும் பொழுது - உலகத்துள்ள உயிர் வருக்கமெல்லாம் துயிலும் நள்ளிரவு.

என்னை...எளின - என்னையாளுடைய நாயகராகிய இறைவரே (சிவபெருமானே)இங்கு நேரில் எழுந்தருளி வந்தாற் போல ; என்ன - போல ; உவம உருபு ; அருச்சிக்கும் முனிவர் வந்தது இறைவரே வந்தருளியது போலாம் என்க. அருச்சகரையே இறைவராகக் கொண்டு வணங்கும் மரபும் குறிப்பு. என்ன - என்ற உண்மைக் குறிப்பு உட்பெற என்றுரைக்க நின்றமையும் காண்க.

எய்த வேண்டிற்று என் ? - இங்கு வரவேண்டிய காரணம் என்ன ? வேண்டிற்று - வேண்டும் குறை.

என்றார் - என்று வினவினர். விடுத்த தூதர் - மார்பர்—என்பனவும் பாடங்கள்.

வேறு

3495. கங்கைநீர் கரந்த வேணி கரந்தவ ரருளிச் செய்வார்
"நங்கைநீ மறுது செய்யி னான்வந்த துரைப்ப" தென்ன,
அங்கயல் விழியி னாரு " மதனைநீ ரருளிச் செய்தால்
இங்கேனக் கிசையு மாகி லிசையலா " மென்று சொல்லி, ௩௪௧

3496. "என்னினைந் தணைந்த தென்பா லின்னதென் றருளிச் செய்தால்
பின்னைய தியலு மாகி லா "மெனப், பிரானார் தாமும்
"மின்னிடை மடவாய்! நம்பி வரவிங்கு வேண்டு" மென்ன,
நன்னுத லாருஞ் சால நன்று!நம் பெருமை " யென்பார், ௩௪௨

3497. "பங்குனித் திருநா ளுக்குப் பண்டுபோல் வருவா ராகி
யிங்கெனைப் பிரிந்து போகி யொற்றியூ ரெய்தி யங்கே
சங்கிலித் தொடக்குண் டாருக் கிங்கொரு சார்வுண் டோ?நீர்
கங்குலின் வந்து சொன்ன காரிய மழகி " தென்றார். ௩௪௩

3495. (இ - ள்) கங்கை நீர்...அருளிச் செய்வார்-கங்கை யாற்றுப் பெருக்கினைக் கரந்துள்வைத்த சடையினை மறைத்து வந்த இறைவர் அருளிச் செய்வாராகி; நங்கை...என்ன - நங்கையே ! நீ மறுக்காமல் அதனுக் கிணங்குதல் செய்வாயாகில் நான் வந்த செய்தியினை உரைக்கலாம் என்று கூற ; அங்கயல்...சொல்லி - அழகிய கயல்மீன் போலும் கண்களை உடைய பரவையாரும் அதனை நீர் இன்னதென்று முன்னர் அருளிச் செய்தீரானால் ஈண்டு அஃது எனக்கு இசைவதே யாகில் இணங்குதல் கூடும் " என்று கூறி, ௩௪௧

3496. (இ - ள்) என் நினைந்து...ஆம் என - என்னிடம் எதை எண்ணித் தேவரீர் அணைந்தது என்று அருளிச் செய்யின் அதன்மேல் அஃது இயல்வதே யாயின் என்னால் ஆகும் என்று கூற ; பிரானார்...என்ன - இறைவனாரும் மின் போன்ற இடையினை உடைய பெண்ணே ! இங்கு நம்பி வர வேண்டுவதேயாம் என்று சொல்ல ; நன்னுதலாரும்...என்பார் - அது கேட்டுப் பரவையாரும் மிகவும் நன்று ; நமது பெருமை இருந்தவாறு என்பாராய். ௩௪௨

3497. (இ - ள்) பங்குனி...வருவாராகி - பங்குனித் திருவிழாவுக்காக வழக்கம் போல மீண்டு வருவாராகி ; இங்கெனைப் பிரிந்து போகி - இங்கு என்னைவிட்டுப் பிரிந்து சென்று ; ஒற்றியூர்...சார்வுண்டோ ?-திருவொற்றியூரினைச் சார்ந்து அங்கே சங்கிலித் தொடக்கினாலே பிணைக்கப்பட்ட அவருக்கு இங்கு வருவதற்கு ஏற்ற சார்

வும் ஒன்றுண்டோ ? ; நீர்...என்று - நீர் இந்த நடு இராத்திரியில் வந்து மேற் கொண்டு சொன்ன இக்காரியம் மிக அழகிதாம் " என்று சொன்னூர். ௩௪௩

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3495 (வி-ரை) நீர் கரந்த வேணி கரந்தவர் - சொல்லணி; நீர் கரந்த-பெரு நீரினை வெளிப்படாது உள்ளே அடக்கிவைத்த ; கரந்தவர் - மறைத்தவர் ; அர்ச் சகர் வேடமாய் வந்தாராதலின் சடையினையும் தாமாந்தன்மையினையும் கரந்தார்.

நங்கை - பெண்களி லுயர்ந்தவரைக் குறிக்கும் மகடூஉச் சிறப்புப் பெயர் ; " அவர் நங்கை பரவையார் - (293).

செய்யின் - நான் வந்த காரியத்தை எடுத்து உரைக்கும்படி செய்வாயாகில் ; உரைப்பது - உரைக்கப்படுவதாம்.

அதனை - வந்த காரணத்தினை ; முன்னம் அருளிச் செய்தால் என்க ; முன்னம் என்பது குறிப்பெச்சம்.

இங்கு எனக்கு இசையுமாகில் இசையலாம் - தேவரீர் வந்த காரியம் என் மன திற் கிசையுமாகில் செய்ய இசையலாம் ; மனதிற் கிசைதல் - மனம் பொருந்துதல் ; மனதிற்குப் பொருந்தினும் தம்மாற் செய்தற் கியல்வது - செய்யக்கூடியதாதலும் வேண்டும் ; அதனை மேல்வரும் பாட்டிற் " பின்னையீ தியலுமாகில் " (3494) என்று கூறுதல் காண்க ; இயல்வதாயினும் மனமிசையாதாயின் செய்யக்கூடாமையாதலின் அதனை முதற்கண் இங்குக் கூறினூர். 341

3496. (வி-ரை). என்னினைந்து என்பால் அணைந்தது அதனை இன்ன தென்று - என்க ; பின்னை - அதன்மேல் ; அவ்வாறருளிச் செய்ததன்பின் ; ஆம் - செய்யலாகும் ; இசையலாகும்.

நம்பி இங்கு வரவேண்டும் ; அதுவே நான் நினைந்து உன்பால் வேண்டி வந்தது என்ன என்க. அதுவே நான் நினைந்து உன்பால் வேண்டி வந்தது என்பது இசை யெச்சம்.

வேண்டும் என்ன - வேண்டுதல் வேண்டாமையிலராயும், தம்பால் யாவரும் வேண்டுவன வேண்டுவதல்லது தாம் ஒருவரை எதுவும் வேண்டும் நிலையில்லாராயும் உள்ள இறைவர் இவ்வாறு வேண்டுவது பரவையாரது தவப்பெருமை ! என்க.

சால நம்பெருமை - இகழ்ச்சிக் குறிப்புப்படக் கூறியது ; அற்றுயினும் உண் மைக் குறிப்பும் படநிற்பதும் காண்க.

வரப்பெற வேண்டும் - என்பதும் பாடம். 342

3497. (வி-ரை) பங்குனித் திருநாளுக்குப் பண்டு போல் வருவா ராகி ; இது நம்பிகள் முன்னை நாள்களில் எல்லாம் சென்று வந்த முறைமை. திருவாரூரினின்றும் பிரிந்து எங்குச் சென்றூலும் அங்கங்கும் பொன்பெற்றுப் பண்டுபோலத் திருவாரூருக்குப் பங்குனி விழாவுக்கு மீண்டுவரும் வழக்கு ; இம்முறை அவ்வாறு பிழைத்துத் திருவொற்றியூர் சென்று சங்கிலித் தொடக்குண்டார் என்ற கருத்து மேல் உரைக்கப் படுதல் காண்க.

சங்கிலித் தொடக் குண்டாருக்கு - சங்கிலித் தொடக்கு - சங்கிலியாரை மணந்து கட்டுண்டு - சங்கிலியாலே பிணைப்பட்டு என இருபொருள்படவந்த சிலேடை ; சங்கிலி போன்று பிணைக்கும் சங்கிலியார் என்ற உவமத்தினையும் உள்ளுறுத்தி நிற் பது காண்க ; " என்னு ருயிரு மெழின்மலருங் கூடப் பிணைக்கு மிவள் " (3384), "சிந்தைநிறை காவா தவர்பாற் போய்வீழ" (3381),"என்னை யுள்ளந் திரிவித்தாள்"

(3382) என்பன முதலியவை காண்க. திருவொற்றியூரினின்றும் பிரியாமைக்குச் சபதத்தாற் கட்டுண்ட சரித நிகழ்ச்சியும், அதனைத் தொடர்ந்த பிறவும் குறிப்பு.

இங்கு ஒரு சார்வு உண்டோ? - சார்வு - சாரத்தக்க பற்று; சார்வு - சாரும் பொருள்.

அழகிது - இகழ்ச்சிக் குறிப்பு. நீர் - இதனை மேற்பூண்டு வரத்தகாத நீர் என்பதும், கங்குலின் - வரத்தகாத நேரம் என்பதும், வந்து சொன்ன - சொல்லவும் தகாததனைச் சொன்ன என்பதும் குறிப்பு. 3499 பார்க்க. 343

3498. நாதரு மதனைக் கேட்டு "நங்கைநீ நம்பி செய்த
ஏதங்கண் மனத்துக் கொள்ளா தெய்திய வெகுளி நீங்கி
நோதக வொழித்தற் கன்றே நுன்னையான் வேண்டிக் கொண்ட
தாதலின் மறுத்தல் செய்ய வடா"தென வருளிச் செய்தார் கூசச

(இ - ள்) நாதரும் அதனைக் கேட்டு இறைவரும் அம்மொழியைக் கேட்டு; நங்கை நீ...நீங்கி - நங்கையே! உன்பால் நம்பி செய்த குற்றங்களை மனத்துள் வையாது, பொருந்திய புலவியினை நீங்கி; நோதகவு...வேண்டிக் கொண்டது - துன்பஞ் செய்யும் தன்மையினை நீக்குதற் கல்லவோ உன்னை நான் வேண்டிக் கொண்டேன்; ஆதலின்...அருளிச் செய்தார் - ஆதலாலே நீ என் சொல்லினை மாறுபாடு செய்தல் தகாது என்று அருளிச் செய்தனர்.

(வி - ரை) நங்கை நீ - செற்றந் தணிப்பதற்கு நங்கை - என உயர்ச்சிக் குறிப்புப்பட விளித்தவாறு. நம்பி - என்று கூறியதும் அக்குறிப்பு.

ஏதங்கள் - அவை பலவாயினும் அவை எல்லாம் மனத்துக் கொள்ளாதொழுதக் கற்பாலன என்பது குறிப்பு.

நோதகவு - நோவுறுத்தலின் தன்மை; நோ - துன்பமுறுதல்; முதனிலைத் தொழிற் பெயர். தகவு - தன்மை; நோவுதக என்பர் அடியார்க்கு நல்லார்.

"நான்...அடாது" என - நான் வேண்டிக்கொண்டதன் பொருட்டாதல் மறுத்தல் செய்ய அடாது. செய்ய - செய்தல். நோதக வொழிதற்கு - என்பதும் பாடம். 344

3499. அருமறை முனிவ ரான ஐயரைத் தைய லார்தாம்
"கருமமீ தாக நீரிக் கடைத்தலை வருகை மற்றும்
பெருமைக்குத் தகுவ தன்று; லொற்றியூ ருறுதி பெற்றார்
வருவதற் கிசையே னீரும் போ"மென மறுத்துச் சொன்னார். கூசரு

(இ - ள்) அருமறை...தையலார்தாம் - அரிய மறைமுனிவராய் வந்த இறைவரை நோக்கிப் பரவையாரும்; கருமமீதாக...தகுவதன்றால் - குறித்த செய லிதுவேயாக மேற்பூண்டு நீர் இந்த வாயிலின்கண் வருவது மேலும் உமது பெருமைக்குத் தக்கதன்றாகும்; ஒற்றியூர்...போமென - ஒற்றியூரின்கண் நிலைபேறு உடைய உறுதியினைப் பெற்ற அவர் இங்கு வருவதற்கு நான் இசையமாட்டேன்; நீவிரும் போமின் என்று; மறுத்துச் சொன்னார்-எதிர் மறுத்துக் கூறினர்.

(வி ரை) மறை முனிவரான ஐயர் - ஆன - ஆக்கச்சொல் அவ்வேடம் பூண்டு வந்த என்ற பொருடந்து நின்றது; ஐயர் - பெருமையுடையோர்; யாவர்க்கும் மேலாம் பெருமையுடைய இறைவரைக் குறித்து நின்றது.

கருமம் ஈதாக - இஃதும் ஒரு செய் தொழிலாகக் கொண்டு; இழிவு சிறப் புமை தொக்கது மீதாக - என்று கொண்டு இதனை ஒரு மேம்பட்ட செயலாக வைத்து என்றலுமாம்.

இக்கடைத்தலை - இவ்வாயிலின் கண்; கண் - ஏழனுருபு. வாயிலி னின்ற வாறே இப் பேச்சுக்கள் நிகழ்ந்தன என்பது குறிப்பு; வீட்டினையே இவ் வாயில் என்றார் என்பதுமாம்.

மற்றும் - மேலும்; உம்பெருமை - உடைய பெருமானது பூசனை செய்யும் அருச்சகராகிய உமது பெருமை; திருவாரூர்ப் புற்றிடங் கொண்ட பெருமானை அருச்சிகப் பெற்ற பிறவி பெரும் பேறுடையது என்பதாம்; அஃதன்றியும் மும் போந்துந் திருமேனி தீண்டுவாராயும், திருவாரூர்ப் பிறந்தாராயும் உள்ள பல சிறப் புக்களையும் குறித்தது. மற்று உம் பெருமை - மேற்கொண்ட இவ்வேடமே யன்றி அதனுள் மறைந்துள்ள உமதுஉண்மை நிலையின் பெருமை என்றலும் குறிப்பு.

ஒற்றியூர் உறுதி பெற்றார் - உறுதி - நிலை பேறான தன்மை; சங்கிலியார் திரு மணமும் சபதமும் குறித்தது; மணம் பற்றித் தொடர்ந்த இல்வாழ்க்கைத் தன்மை.

உறுதி பெற்றார் வருவதற் கிசையேன் - உறுதி பெற்றமையால் - பெற்றாராத லின் எனக் காரணக் குறிப்புடன் நின்றது.

நீரும் போம் - மீக்கொண்ட வெகுளிக் குறிப்பு.

கரும மீதாகில் - வருதல் நுந்தம் - என்பனவும் பாடங்கள். 345

3500. நம்பர்தா மதனைக் கேட்டு நகையுமுட் கொண்டு மெய்ம்மைத்
தம்பரி சறியக் காட்டார் தனிப்பெருந் தோழ னார்தம்
வெம்புறு வேட்கை காணுந் திருவிளை யாட்டின் மேவி
வம்பலர் குழலி னார்தா மறுத்ததே கொண்டு மீண்டார். ௩௪௬

(இ - ள்) நம்பர்தாம்...காட்டார் - இறைவனார் அம்மாற்றத்தினைக் கேட்டுச் சிரிப்பினையும் உள்வைத்து, தமது மெய்யாகிய பரிசினை அவர் அறியும்படி வெளிக் காட்டாராகி; தனி...மேவி - தமது ஒப்பற்ற பெருந் தோழராகிய நம்பியினது மனம் வெதும்பும் வேட்கையினைக் காணுகின்ற திருவிளையாட்டினை மேற்கொண்டு; வம்பலர்...மீண்டார் - மணம் கமழ்கின்ற கூந்தலையுடைய பரவையார் மறுத் துரைத்த அம்மொழியினையே ஏற்றுக்கொண்டுமீண்டருளினர்.

(வி - ரை) நகையும் உட்கொண்டு - தம்மை அறிந்து கொள்ளாத நிலையிற் பரவையார் மொழிந்தது கண்டு போந்த சிரிப்பினை வெளிக்காட்டாது.

தம் மெய்ம்மைப்பரிசு - என்க; "தாமாந்தன்மை" (3515); அறியக்காட் டார் - "காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக் காலே" (தேவா) என்றபடி இறைவர் நேரே, வெளிப்பட்டு எழுந்தருளி நின்றாலும், அவர், தம்மைஅறியக் காட்டினாலன்றி உயிர்கள் அவரை அறியும் ஆற்றலில்லை யாதல் பின்னர்க் காட்ட நிற்பது மேற் காண்க. காட்டாமைக்குக் காரணம் திருவிளையாட்டென மேற்கூறுதலும் காண்க.

தனிப் பெரும் தோழனார் - நம்பிகள் தோழனாராதலின் வேட்கை காண என்க. விளையாட்டின் மேவி - விளையாட்டினை விரும்பி; மேவுதல் - விரும்புதல்.

வேட்கை காணுதலாவது - வேட்கை மிகுதியான் வரும் நிலையினையும் வெளிப் படும் சொற்களையும் கண்டும் கேட்டும் நுகர்தல்.

மறுத்ததே கொண்டு - மறுதலித்த அச்சொல்லையே முடிபாக எடுத்துக் கொண்டு. 346

3501. தூதரைப் போக விட்டு வரவுபார்த் திருந்த தொண்டர்
"நாதரை யறிவி லாதே னன்னுதல் புலவி நீக்கிப்
போதரத் தொழுதே" னென்று புலம்புவார் பரவை யாரைக்
காதலி னிசைவு கொண்டு வருவதே கருத்துட் கொள்வார், ௩௪எ

3502. போயவண் மனையி னண்ணும் புண்ணிய ரென்செய் தாரோ
நாயனார் தம்மைக் கண்டா னன்னுதல் மறுக்கு மோதான்
"ஆயவென் னயர்வு தன்னை யறிந்தெழுந் தருளி னார்தாஞ்
சேயிழை துனிதீர்த் தன்றி மீள்வது செய்யா" ரென்று, ௩௪அ

3503. வழியெதிர் கொள்ளச் செல்வர்; வரவுகா ணாது மீள்வர்
அழிவுற மயங்கி நிற்ப ரசைவுட னிருப்பர்; "நெற்றி
விழியவர் தாழ்த்தா" ரென்று மீளவு மெழுவர்; மாரன்
பொழிமலர் மாரி வீழ ஒதுங்குவர்; புன்க ணுற்றார். ௩௪௯

3501. (இ - ள்) தூதரை...தொண்டர் - தூதராக இறைவரைப் போகவிட்ட பின் அவர் செய்கை முற்றி மீண்டு வருதலையே எதிர் நோக்கியிருந்த தொண்டராகிய நம்பிகள்; நாதரை...புலம்புவார் - எனது தலைவராகிய இறைவரை அறிவில்லாத நான் நன்னுதலாகிய பரவையினது புலவி தீர்த்து வரும் பொருட்டு வணங்கி வேண்டினேன் என்று புலம்பிடுவார்; பரவையாரை...கருத்துட் கொள்வார் - பரவையாரைக் காதல் பெருக இசைவித்துக்கொண்டே மீள்வார் என்றே கருத்தினுட் கொள்வாராகி, ௩௪எ

3502. (இ - ள்) போயவள் - என்செய்தாரோ - இங்கு நின்றும் சென்று அவளது மனையினைச் சேரும் புண்ணியராகிய இறைவனார் என்னசெய்தனரோ?; நாயனார்...மறுக்குமோதான் - இறைவரைக் கண்டால் நன்னுதலாகிய பரவைதான் மறுப்பாளோ?; ஆய என்...என்று - பொருந்திய எனது வருத்தத்தினை அறிந்து எழுந்தருளிய இறைவனார் அவளது சிறு கலகத்தினைத் தீர்த்தாலன்றி மீளமாட்டார் என்றுட்கொண்டு, ௩௪அ

3503. (இ - ள்) வெளிப்படை - தூதர் மீண்டு வரும் வழி நோக்கி எதிர் கொள்ளும்படி சிறிதுதூரம் செல்வார்; அவர் வரக்காணாமையால் மீண்டு வருவார்; மனம் வருந்த மயங்கி நிற்பார்; சோர்வுடனே ஓர் புறம்இருப்பார்; நெற்றிக்கண்ணினையுடைய இறையவர் தாமதித்தார் என்று மீண்டும் எழுவார்; மதனன் பொழியும் மலரம்புகள் மழைபோல வந்து வீழ ஒதுங்குவார்; இவ்வாறு துன்பமுற்றனர். ௩௪௯

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

இவை இறைவர் தூதுபோய் மீளுமளவும் உள்ள இடையில் கால நீட்டிப்பில் தரிக்கலாற்றாது நின்ற நம்பிகளின் மன அலைவும் மெய்ப்பாடுகளும் குறித்தன.

3501. (வி - ரை) பரவையாரை...கருத்துட் கொள்வார் - பரவையாரை இசைவுபடுத்தியே இறைவர் மீள்குவர் என்று துணிந்தனராதலின் நாதரைத் தூது விடுத்த அதற்கு இரங்கிப் புலம்புவாராயினர்.

அறிவிலாதேன் - தகாத செயலாதலின் அறிவில்லேன் என்றார்; பின்னரும் "பிழையுடன் படுவாராகி" (3542) என்பது காண்க.

நன்னுதல் - பரவையார்பாற் கண்ட குணநலம் குறிப்பு; மேற்பாட்டிலும் " நன்னுதல் " (3502) என்பது காண்க.

தொழுதேன் - தொழுது வேண்டினேன். புலம்புவார்-பலவாறும் வருந்துவார்.

புலவிநீக்க—என்பதும் பாடம். 347

3502. (வி - ரை) இப்பாட்டுத், தூதின் முடிவுபற்றி நம்பிகள் மனத்துள் எண்ணிய ஐயங்களையும் அதற்குத்தாமே துணிவு பூண்ட நிலைகளையும் குறித்தது.

போய் அவள் மனையில் நண்ணும் - இது போழ்தினுள் அவள் மனையில் இறைவர் சேர்ந்திருப்பர் என்று எண்ணிய குறிப்பு.

என் செய்தாரோ ?- ஐயம்; ஐயர் செயல் எவ்வாறு தொடங்கி எவ்வாறு முடிந்ததோ ? என்றபடி.

நாயனார்...மறுக்குமோ தான் - ஐயத்தின் நீங்கி ஒருவழித் துணிதற்குரிய காரணம்.

தான் மறுக்குமோ - என்க; மறுக்கமாட்டாள் என்று வினு எதிர்மறை குறித்தது.

ஆய - மூண்ட; ஆகிய; அறிந்து எழுந்தருளினார்தாம் - தாமே அறிந்து எழுந்தருளினாராதலின் என்று காரணக் குறிப்புப்பட நின்றது; அறிந்து சென்றாராதலின் துனிதீர்த்தன்றி மீளார் - என்ற முடிபுக்குரிய ஏது; துனி - சிறுகலாம், சிறு ஊடல்; " துனியும் புலவியு " (குறள்).

தீர்த்தன்றி மீள்வது செய்யார் - எதிர்மறைகள் தீர்த்தே மீள்குவர் என உறுதி குறித்தன.

மீள்வதும்—என்பதும் பாடம். 348

3503. (வி - ரை) இப்பாட்டு முன் இரண்டு பாட்டுக்களில் கூறியவாறு நம்பிகள் மனத்தினுள் எண்ணமிட்டு இருக்கும் போழ்து, உடல் ஓரிடத்தில் அமைந்து இருக்கவும் தரிக்கவுமாற்றாது உழலும் மெய்ப்பாடுகளைக் குறித்தது. இம்மன நிலையினையும் இதன் மெய்ப்பாடுகளையும் பற்றிப் பரவையார் நிலையினை முன் (3469ல்) விரித்துரைத்தவாற்றாலும் கண்டு கொள்க. தன்மைநவிற்சியணி.

வழி எதிர் கொள்ளச் செல்வர் - முன்பாட்டில் முடித்தவாறு தூதர் பரவையாரின் துனி தீர்த்த நற்செய்தி கூறுவதை விரைவில் கேட்கும்பொருட்டு எதிர் செல்வார் என்பது.

அழிவுற - மனம் அழிந்து; வருந்தி நைந்து.

அசைவு - சோர்வு; நடுக்கம் என்றலுமாம்.

நிற்பர் இருப்பர் - மீளவும் எழுவர் - மனம் அழிந்து அலைதலின் உடலும் அவ்வாறே ஒரு நிலையில் நிற்கலாற்றாது அலைதல் குறித்தது. நிற்கலாற்றாது, சிறிது போது இருப்பர்; இருக்கவுமாற்றாது சிறிது போதில் எழுவர் என்க.

தாழ்த்தார் - தாமதிக்கமாட்டார் என்றுரைப்பினும்மையும்.

மாரன்...ஒதுங்குவார் - மாரனது மலரம்புகள் நம்பிகள்பால் செயலற்று வீழ்ந்தன என்பது வீழ என்ற குறிப்பு. ஒதுங்குதல் - அவற்றின் இலக்கினுட்படாது விலகுதல்; புன்கண் - துன்பம். 349

3504. பரவையார் தம்பா னம்பி தூதராம் பாங்கிற் போன
அரவணி சடையார் மீண்டே யழியுமா றணையும் போதில்

இரவுதான் பகலாய்த் தோன்ற வெதிரெழுந் தணையை விட்ட
உரவுநீர் வெள்ளம் போல வோங்கிய களிப்பிற் சென்றார். ௩௫௦

(இ - ள்) பரவையார்...போதில் - பரவையாரிடத்தில் நம்பிகளின் தூதரா கும் தன்மையிற் சென்ற அரவணிந்த சடையவராகிய இறைவனார் அங்கு நின்றும் மீண்டு தாமாந்தன்மை யறியும்படி உள்ள கோலத்துடனே வந்து அணைந்தபோது; இரவு...தோன்ற - அந்த நடு இரவானது இருளின்றிப் பகல் போலப் பேரொளி யுடன் விளங்கியிட; எதிர் எழுந்து - நம்பிகள் அவருக்கெதிரே எழுந்து; அணையை ...போல - அணையை உடைத்தெழுந்து பரந்த நீர்ப்பெருக்கினைப் போல; ஓங்கிய... சென்றார் - மிகுந்த களிப்பினுடனே எதிர்கொண்டு சென்றனர்.

(வி - ரை) நம்பி தூதராம் பாங்கு-நம்பிகளது தூதராகும் தன்மை; முறைமை; நிலைமை; ஆம் - ஆக்கச்சொல், அந்நிலையினராகத் தம்மை ஆக்கிக்கொண்டு தம்மை அருச்சிக்கும் முனிவர் கோலம் பூண்டு என்ற குறிப்புடையது.

அறியுமாறு - பரவையாரிடத்தில் அருச்சகர் கோலத்திற் சென்றது போலன்றி நம்பிகள்பால் தாமாந்தன்மை அறியும் கோலத்துடன்.

இரவுதான் பகலாய்த்தோன்ற - இருளடர்ந்த நடு இரவு பகல் போன்ற ஒளி யுடன் தோன்ற; இஃது பேரொளியுடைய இறைவராகிய இரவியின் வருகையா லாகியது; இரவி வந்தபோது இரவு பகலாகும் இயல்பு குறித்தது; தோன்ற - தோற் றத்தின் அளவே யன்றி இரவு உண்மையிற் பகலாகவில்லை என்பது; இறைவரைக் கண்ட மாத்திரையில் நம்பிகளின் மனத்தின் எழுந்த உவகையால் முன் கொண் டிருந்த துன்பநிலை நீங்கி உவகை போந்தமையால் அந்த இரவே பகலாக விளங் கிற்றெ ன்பதுமாம்.

அணையை விட்ட உரவு நீர் வெள்ளம் போல - அணையினாற் றடுப்புண்டு தேங்கி நின்ற நீர்ப்பெருக்கு அணை உடைந்தபோது மிக்க வேகத்திற் செல்வது போல; "சிறைபெறா நீர்போல" (திருவா), உரவு- (நீர்ப்) பெருக்கு; "ஊரங்கணநீர் உரவு நீர் சேர்ந்தக்கால்" (நாலடி).

தூதராய்ப்பாங்கில்—அணையுமாறறியும்—என்பனவும் பாடங்கள். 350

3505. சென்றுதம் பிரானைத் தாழ்ந்து திருமுக முறுவல் செய்ய
ஒன்றிய விளையாட் டோரா "ருறுதிசெய் தணைந்தா" ரென்றே
"அன்றுநீ ராண்டு கொண்ட வதனுக்குத் தகவே செய்தீர்
இன்றிவள் வெகுளி யெல்லாந் தீர்த்தெழுந் தருளி" யென்றார். ௩௫௧

(இ - ள்) சென்று...தாழ்ந்து - போய்த் தமது பெருமானாரை வணங்கி; திரு முகம் முறுவல் செய்ய - அவரது திரு முகமானது சிறுநகை காட்டக் கண்டு; ஒன்றிய...என்றே - பொருந்திய திருவிளையாட்டினை உணராதவராகிப் புலவியை நீக்கி இசைவு செய்து வந்தனர் என்றே எண்ணி; அன்று...என்றார் - தேவரீர் அன்று என்னை ஆளாகக் கொண்டருளிய அச்செயலுக்கு ஏற்ற தன்மையாகவே இன்றும் அருள் செய்தீர், இவளுடைய புலவியை எல்லாம் தீர்த்து எழுந்தருளிய அதனாலே என்று சொன்னார்.

(வி - ரை) திருமுகம் முறுவல் செய்ய - தம்பெருமானது திருமுகம் தம்மை நோக்கிச் சிறுநகை செய்ய அது கண்டு; செய்ய - செய்யக் கண்டு; அங்குப் பரவை

யார் மறுத்தது கேட்டு அவர் அறியாமை கண்டு " நகையுட் கொண்டது " (3500) போலவே, "ஈண்டு நம்பிகள்பாலும் அவாது, வெம்புறு வேட்கை காணும் திருவிளையாட்டின் மேவி " (3500) முறுவல் செய்தருளினர்.

ஒன்றிய விளையாட்டு - ஒன்றிய அச் சிறுநகையினுட் பொருந்திய ; இறைவர் மேற்கொண்ட என்றலுமாம் ; " திருவிளையாட்டு " (3500).

உறுதிசெய்து - இசைவுபடுத்தி ; " யாம் உனக்கோர் தூதனாகிப் - பரவை பாற்போகின்றோம் " (3483) என்று மேற்கொண்டு சென்ற காரியத்தை நிறை வேற்றி ; ஆனால் முன்னர் இறைவர் பரவைபால் தூதனாகிப் போகின்றோம் என் றருளினாரேயன்றிப் புலவி நீக்கி முடிக்கின்றோம் என்றாரிலர்; மேல், அதுபோலன்றி, " இன்னம் அவள்பாற் போய்...இப்போதே நீ குறுகுமா கூறுகின்றோம் " (3510) என்று உறுதி கூறுவதும் காண்க.

ஆண்டு கொண்ட அதனுக்குத் தகவே செய்தீர் - ஆட்கொண்ட நன்மை போலவே உறுதி செய்த இந்த அருளும் செய்தீர் என்றபடி ; அதனுக்குத்தகவே - அதற்கொத்தபடியே ; அன்று ஆண்டு கொண்ட - என்றது திருவெண்ணெய் நல் லூரில் தடுத்தாட் கொண்ட அருட் செயலைக் குறித்தது ; அன்று வலிந்து திருவிளை யாட்டால் அருளியது போலவே இன்றும் வலிந்து அருள நின்றீர் என்று இந் நிகழ்ச்சியின் உண்மைக் குறிப்புத் தருவதும் காண்க.

இன்று...எழுந்தருளி - நம்பிகள் தாமே தம்மனத்துட் செய்துகொண்ட முடிபு ; 3502 - பார்க்க.

எழுந்தருளி - எழுந்தருளிய அதனாலே ; எழுந்தருளி - தகவே செய்தீர் - என்று கூட்டுக. 351

3506. அம்மொழி விளம்பு நம்பிக் கையர்தா மருளிச் செய்வார்
" நம்மைநீ சொல்ல நாம்போய்ப் பரவைதன் னில்ல நண்ணிக்
கொம்மைவெம் முலையி னாட்குன் றிறமெலாங் கூறக் கொள்ளாள்
வெம்மைதான் சொல்லி நாமே வேண்டவு மறுத்தா " ளென்றார்.

(இ - ள்) அம்மொழி...அருளிச் செய்வார் - அந்த மாற்றத்தினை விளம்பும் நம்பிகளுக்கு இறைவனார் தாம் அருளிச் செய்வாராய்; நம்மை நீ...கூற - நம்மிடம் நீ வேண்டிக் கொண்டபடியே நாம் சென்று பரவையினுடைய இல்லத்தினைச் சேர்ந்து பணைத்தெழுந்த விருப்பம் தருகின்ற தனங்களையுடைய அவளுக்கு உனது திறங்களை எல்லாம் எடுத்துச் சொல்லவும்; கொள்ளாள்-ஏற்றுக் கொள்ளாதவளாகி ; வெம்மை தான் சொல்லி - விரும்பும் மொழிகளையே சொல்லி ; நாமே வேண்டவும் மறுத்தாள் என்றார் - நாமே வேண்டிக் கொள்ளவும் கேளாது மறுத்து விட்டாள் என்று அருளிச் செய்தார்.

(வி - ரை) அம்மொழி-முன்பாட்டிற் கூறியபடி இறைவரது திருவிளையாட் டினை உணராது நம்பிகள் கூறிய நன்றிமொழி.

நம்மை - நம்பால் ; உருபு மயக்கம் ; சொல்ல - சொன்னபடி ; சொன்ன தனாலே.

கொம்மை - பணைத்த; திரண்ட; வெம்மை - விருப்பம் விளைக்கின்ற சொற்கள்.

கொள்ளாள் - ஏற்றுக் கொள்ளாதவளாகி ; முற்றெச்சம் ; கொள்ளாள் - சொல்லி - மறுத்தாள் - என்று முடிக்க.

வெம்மைதான் சொல்லி நாமே வேண்டவும் - வெம்மை - விருப்பம் என்று கொண்டு, அவள் விரும்பத் தக்கனவாகிய இதமாகிய நல்ல வார்த்தைகளை எடுத்துச் சொல்லி நாமே வேண்டவும் என்று கூட்டியுரைக்க.

வெம்மைதான் சொல்லி மறுத்தாள்- கடிய மொழிகள் கூறி மறுத்தனள் என்று கூட்டியுரைக்கவும் நின்றது ; முன் " கரும மீதாக நீரிக் கடைத்தலை வருகை மற்றும் பெருமைக்குத் தகுவ தன்றால்...நீரும்போம் " (3499) என்றது. தான் - வெம்மை தானேயன்றி வேறில்லை.

நாமே வேண்டவும் - ஏகாரம் உயர்வு குறித்த பிரிநிலை ; வேண்டவும் - உம்மை உயர்வு சிறப்பு; வேண்டிய தன்மை; " நன்னைநான் வேண்டிக் கொண்டதாதலின் மறுத்தல் செய்ய வடாது " (3498) என்று முன் கூறியது.

திறமெலாம் கூற -" நம்பி செய்த ஏதங்கள் மனத்துக் கொள்ளா தெய்திய வெகுளி நீங்கி, நோக வொழிதற்கு " (3498) என்றது. 352

3507. அண்ணலா ரருளிச் செய்யக் கேட்டவா ரூரர் தாமுந்
துண்ணென நடுக்க முற்றே தொழுது "நீ ரருளிச் செய்த
வண்ணமு மடியா ளான பரவையே மறுப்பாள் ? நாங்கள்
எண்ணலா ரடிமைக் கென்ப தின்றறி வித்தீ " ரென்று, கூருகூ

3508. வானவ ருய்ய வேண்டி மறிகட னஞ்சை யுண்டீர்
தானவர் புரங்கள் வேவ மூவரைத் தவிர்த்தாட் கொண்டீர்
நான்மறைச் சிறுவர்க் காகக் காலனைக் காய்ந்து நட்டீர்
யான்மிகை யுமக்கின் றானா லென்செய்வீர் போதா? தென்றார்.கூருச

3507. (இ - ள்) அண்ணலார்...தொழுது - முன்கூறியவாறு இறைவனார் அருளிச் செய்ததனைக் கேட்ட நம்பியாரூரரும் துண்ணென்று நடுக்கமுற்று அவனை வணங்கி ; நீர்...மறுப்பாள் - தேவரீர் அருளிச் செய்த தன்மையினையும் உமது அடியாளாகிய பரவையே மறுக்கவல்லவள் ?; நாங்கள்...என்று - நாங்கள் அடிமைத் திறத்தின் வைத்து எண்ணுதற்கு உரியரல்லோம் என்பதனை இன்று அறியச் செய்தீர் என்று கூறி, கூருகூ

3508. (இ - ள்) வானவர்...உண்டீர் - தேவர்கள் உய்யும் பொருட்டு அலை கடலில் எழுந்த பெருவிடத்தினை உண்டீர் ; தானவர்...ஆட்கொண்டீர் - அசுரர்களது முப்புரங்களும் எரிந்து போக அவற்றுள் இருந்த அடியவர்களான மூவர்களை மட்டும் வேவாது தவிர்த்து ஆட்கொண்டீர் ; நான்மறை...நட்டீர் - நான்மறை வல்ல சிறுவராகிய மார்க்கண்டேயரைக் காக்கும் பொருட்டுக் கூற்றுவனை உதைத்து (அவ்வந்தணனை) அடிமை கொண்டீர் ; யான்மிகை...என்றார் - இத்தன்மையுடைய பெருங்கருணையாளராகிய உமக்கு நான் இன்று மிகையானால் மீண்டு வாராது வேறென் செய்வீர் ? என்றார். கூருச

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3507. (வி - ரை) துண்ணென நடுக்க மெய்தி - உறுதி செய்தனைந்தா ரென்றே கொண்டு எய்திய முன்கூறிய மகிழ்ச்சியெல்லாம் உடனே மாறி அதி விரைவில் மெய்ந் நடுக்கமுற்று.

நீர்...மறுப்பாள் - தலைவராகிய நீர் சொன்ன கட்டளையை அடியாளாகிய பரவையோ மறுக்க வல்லவள் ? ஏகார வினா வல்லளல்லள் என்று எதிர் மறை

குறித்தது ; வண்ணமும் - வண்ணத்தினையும் ; " வண்ணமும் வடிவும் " (திருஞா. தேவா) ; வண்ணம் - கட்டளை ; பொருள் ; உம்மை உயர்வு சிறப்பு.

**நாங்கள்...என்பது** - எண்ணலார் - எண்ணப்படாதவர் ; எண்ணத்தில் வரத் தகாதவர் ; அடிமைக்கு - அடிமைக்காக; அடிமையின் பொருட்டு ; நாங்கள் - பரவையாரையும் உளப்படுத்திய பன்மை ; பரவையாரை உளப்படுத்திய தென்னை ? ஏனின், " என்னைத் தன்னடி யானென் றறிதலுந், தன்னை நானும் பிரானென் றறிந்தெனே " (குறுந்) என்றவாறு, பரவையார் மறுத்தற்குக் காரணம் பிரானென் றறியாமை ; அவ்வறியாமைக்குக் காரணம் இறைவர் அவளைத் தன் அடியாளென் றறியாமை என்பார் " எண்ணலார் அடிமைக்கு " என்றார் ; அவளை அடிமை என்று எண்ணுமையால் இசைவித்தல் செய்யாமையாலும், தமது கருத்து முற்றுவித்தல் செய்யாமையின் தம்மையும் அடியானென் றறியாமை புலப்படுதலானும் நாங்கள் அடிமைக்கு எண்ணலார் என்று உளப்படுத்திக் கூறினார் ; புலவி நீக்கிச் சேர்த்தல் இருபாலும் சாரும் செயலாதலின் "நாங்கள்" என்றார் என்றலுமாம். புலவியினால் பிரியினும் அன்பாற் பிரியாமையின் உளப்படுத்தியவாறுமாம்.

**என்பது** - என்பதனை ; இரண்டனுருபு தொக்கது.

**இன்று அறிவித்தீர்** - இதுவரையும் நாங்கள் அடியோம் என்றெண்ணியிருந்தது தவறு என்பதனை இன்று அறியும்படி செய்தீர் ; அன்புரிமை காரணமாகத் தலைவரிடம் பிணங்கிக் கூறும் மொழி ; மேல் வரும் பாட்டில் " நான் மிகை உமக்கின் றானால் " (3508) என்றதும், அதன்மேல் " இன்று என் அடிமை நீர்வேண்டா விட்டால் " (3509) என்றதும் இக்கருத்து.

**என்று** - என்றார் என வரும்பாட்டுடன் முடிக்க.

எண்ண ஆர் அடிமைக்கு என்பது பாடமாயின் அடிமையாக எண்ணுதற்கு நான் ஆர் ? - என்ன பொருத்தமுடையேன் ? - என்க ; " யானு மொன்னுடை யடிமைதா னியாதே " (திருவிசைப்பா). 353

**3508.** (வி - ரை) நஞ்சையுண்டீர்-ஆட்கொண்டீர்-காய்ந்து நட்டீர்-என்ற மூன் றுதாரணங்களும் இறைவரது கருணைப் பெருக்கினை விளக்கி அவர் அடியாரைக் காக்கும் தன்மையை எடுத்துக்காட்டின ; இத்தன்மையுடைய நீர் என்னைக் காவா தொழியின் உமக்கு யான் மிகை என்றதே உமது துணிபு என்று கூறி நொந்துகொண்டவாறு. சிலரேயாயினும் பலரேயாயினும் செய்யும் கருணைப்பெருக் குடையீர்.

**மூவர்** - திரிபுரங்களில் இருந்த அடியார்களான மூன்று அசுரர்கள்; பரமவிரதன், பரமயோகன், பரமகுணன் என்பவர் ; வேறு பெயர்களு முரைப்பர். **தவிர்த்து** - வேவாமல் தடுத்து ; " மூவெயில் செற்ற ஞான்றுய்ந்த மூவரில் " (தேவா - நம்பி) ; " மூவார் புரங்க ளெரித்த வன்று மூவர்க் கருள்செய்தார் " (ஞான. தேவா).

**நான் மறைச்சிறுவர்** - மார்க்கண்டேயர்.

**காய்ந்து நட்டீர்** - காய்ந்து கருணை செய்தீர்.

**மிகை** - வேண்டத் தகாதவன் ; வெறுத்துத் தள்ளப்பட்டவன்.

**போதாது என் செய்வீர்** - வாளா திரும்பி வாராமல் வேறு என்ன செய்வீர் ; **போதாது** - திரும்பிவாராது ; இன்று உமக்கு நான் மிகையானால் என்க ; **இன்று** - முன் வலிந்தும் ஆட்கொள்ளவேண்டி நின்ற யானே இன்று உமக்கு மிகையானேன் என்ற குறிப்பு ; மேல் " அன்று வலிய ஆட்கொண்ட பற்றென் ?" (3509) என்பதும் காண்க.

மூவரைத் தடுத்தாட் கொண்டீர்—என்பதும் பாடம். 354

3509. "ஆவதே செய்தீ ரின்றேன் னடிமைநீர் வேண்டா விட்டால்
பாவியேன் றன்னை யன்று வலியவாட் கொண்ட பற்றேன்?
நோவுமென் னழிவுங் கண்டீர் நுடங்கிடை யவள்பா லின்று
மேவுதல் செய்யீ ராகில் விடுமுயி" ரென்று வீழ்ந்தார். ருடுரு

(இ - ள்) ஆவதே செய்தீர் - தகுதியாவதே செய்தீர்; இன்று...பற்று என் ?- இன்று எனது அடிமையைத் தேவரீர் விரும்பாவிட்டால் அடிமைக்கு எண்ண வாராத பாவியேனுகிய என்னை அன்று நான் மறுப்பவும் திருவெண்ணெய்நல்லூரில் வைத்து வலிய ஆளாக்கொண்ட பற்று எதற்காக ; நோவும்...கண்டீர் - எனது வருத்தத்தினையும் மனம் நைதலையும் கண்டுள்ளீர்; நுடங்கு...உயிர் என்று - துவளும் இடையினையுடைய பரவையிடத்தில் இன்றே நான் சென்று சேரும்படி செய்யீ ராகில் உயிர் விடும் என்று சொல்லி ; வீழ்ந்தார் - திருவடியில் வீழ்ந்தனர்.

(வி - ரை) ஆவதே செய்தீர் - வருத்தமிகுதியால் எதிர்மறைப் பொருட் குறிப்புடன் வந்த இகழ்ச்சிக் குறிப்பு வழக்கு.

இன்று வேண்டா விட்டால் - அன்று வலிய ஆட்கொண்ட பற்று என்? - அன்று வலிந்து ஈர்த்து ஆட்கொண்ட நீர் இன்று ஆளாக எண்ணுது கைவிடுதல் நீதியன்று என்பது ; நீதியன்று என்பது குறிப்பெச்சம்.

நோவும் என் அழிவும் - நோ - வருத்தம் ; அழிவு - அது காரணமாக வருவது; கண்டீர் - கண்கூடாக நேரில் அறிந்துள்ளீர்.

மேவுதல் செய்யீராகில் - மேவுதல் - நான் மேவும்படி ; மேவுவித்தலை ; செய்தல் - நிலையினை உளதாக்குதல் ; இன்று - இன்றே ; ஏகாரம் தொக்கது.

உயிர்விடும் - என்க ; முன்பின்னுக வந்தது விரைவுக் குறிப்பு ; விடுப்பேன் என்னுது விடும் - என்றது எனது முயற்சியின்றி உயிர் தானே நீங்கிவிடும் என்றதாம்.

வீழ்ந்தார் - நிற்கலாற்றுது தளர்ந்து அவரது திருவடியில் வீழ்ந்தனர். வரும் பாட்டைப் பார்க்க.

என்றன் அடிமை—இன்னம் மேவுதல்—என்பனவும் பாடங்கள். 355

3510. தம்பிரா னதனைக் கண்டு தரியாது தளர்ந்து வீழ்ந்த
நம்பியை யருளா னோக்கி, "நாமின்ன மவள்பாற் போயக்
கொம்பினை யிப்போ தேநீ குறுகுமா கூறு கின்றோம்
வெம்புறு துயர்நீங்" கென்றார் வினையெலாம் விளக்க வல்லார்.

(இ - ள்) தம்பிரான்...நோக்கி - தம்பிரானுர் அதனைக் கண்டு அவ்வாறு தரிக்கலாற்றுது தளர்ச்சியினுல் தம் அடிக்கீழ் வீழ்ந்த நம்பிகளை அருளாலே நோக்கி ; "நாம்...நீங்கு" என்றார் - நாம் மீண்டும் ஒருமுறை அவளிடம் தூதுபோய் அந்தக் கொம்பு போன்ற பரவையை நீ இப்போதே சென்று அடையும்படி சொல்கின்றோம் ; உன்னை வருத்துகின்ற துன்பத்தினை நீங்குவாயாக ! என்றருளினர் ; வினையெலாம் விளக்க வல்லார் - வினைப்பயன்களை யெல்லாம் அவ்வவ்வுயிர்கள்பாற் கூட்டுவிக்க வல்ல எம்பெருமானுர்.

(வி - ரை) தரியாது...நம்பி - முன்பாட்டில் "வீழ்ந்தார்" என்றதனை விளக்கியவாறு.

அருளால் நோக்கி - அருட்பார்வை செய்து ; அஃது இடர்நீக்கி உய்விக்கும் பார்வை.

இன்னம் - மேலும் ஒருமுறை ; நூறுதுமா - குறுகும்படி ; ஆறு என்பது ஈறு தொக்கு ஆ என நின்றது.

வெம்புறு துயர் - உள் வெதும்புதலினால் உளதாகும் துன்பம்.

வினை எலாம் விளைக்க வல்லார் - முன்னர் " வெம்புறு வேட்கை காணும் திரு விளையாட்டின் மேவி " (3500) என்றதனுள் விளையாட்டாவது அவ்வவரும் தத்தம் வினைப்பயன்களை அவ்வவரே துய்க்கும்படி செய்து பார்த்திருத்தல் ; அரனது விளையாட்டாவது வினையை விளைவித்தலே - அனுபவிக்கச் செய்து பார்த்திருத்தலே-யாம் என்பது. " வல்லார்கள் வல்ல வகையாற் றொழில் புரித, லெல்லா முடனே யொருங்கிசைந்து - செல்காலை ; முட்டாமற் செய்வினைக்கு முற்செய்வினைக் குஞ் செலவு, பட்டோலை தீட்டும் படிபோற்றி...அல்ல லுறுத்து மருநரகங் கண்டுநிற்க, வல்ல கருணை மறம்போற்றி—பல்லுயிர்க்கும் ; இன்ன வகையா லிருவினைக்க ணின் றருத்தி, முன்னைமுத லென்ன முதலில்லோ—னல்வினைக்கண்; எல்லா வுலகு மெடுப் புண் டெடுப்புண்டு, செல்காலம் பின்னாகஞ் சேராமே, - நல்லநெறி; யெய்துவதோர் காலந்தன் னன்பரைக்கண் டின்புறுதல், உய்யு நெறிசிறிதே யுண்டாக்கி..." (போற் றிப்பஃறொடை) என்றற் றொடக்கத்த திருவாக்குக்கள் காண்க. இறைவர் வினை யெலாம் விளைக்கும் தன்மைபற்றி மேலும் மெய்கண்டஞான நூல்களுட் கண்டுகொள்க.

வினை...வல்லார் - முன்முறை செயல் முற்றுப்பெறுமையின் காரணக்குறிப்பு.

கூடுமா கூறுகின்றேம்—என்பதும் பாடம். 356

3511, மயங்கிய நண்ப ருய்ய வாக்கெனு மதுர வாய்மை
நயங்கிள ரமுத நல்க நாவலூர் மன்னர் தாமும்
" உயங்கிய கலக்க நீக்கி யும்மடித் தொழும்ப னேனைப்
பயங்கெடுத் திவ்வா றன்றோ பணிகொள்வ" தென் றுபோற்ற,௩௫௭

3512. அன்பர்மேற் கருணை கூர வாண்டவர் மீண்டுஞ் செல்லப்
பின்புசென் றிறைஞ்சி நம்பி பேதற லோடு மீண்டார் ;
முன்புடன் போதா தாரு முறைமையிற் சேவித் தேகப்
பொன்புரி சடையார் மாதர் புனிதமா ளிகையிற் சென்றார். ௩௫௮

3511. (இ - ள்) மயங்கிய...நல்க - தெளிவுறாது மயக்கமுற்ற நண்பராகிய நம்பிகள் உய்யும் பொருட்டுத் தமது திருவாக்காகிய இனிமையும் உண்மையும் இன்ப மும் பொருந்திய அமுதத்தினை இவ்வாறு அருளியிட ; நாவலூர் மன்னர் தாமும் - திருநாவலூரர் பெருமானாகிய நம்பிகளும் ; உயங்கிய...என்று போற்ற - வருத்தம் விளைத்த கலக்கத்தினை நீக்கி உமது திருவடித் தொண்டனாகிய என்னை அச்சம் கெடுத்து இப்படி யன்றோ தொண்டு கொள்வது ! என்று துதிக்க. ௩௫௭

3512. (இ - ள்) அன்பர்...செல்ல - அன்பர்பாற் கருணை பெருக இறை வனார் இவ்வாறு மீளவும் செல்வாராக ; பின்பு சென்று...மீண்டார் - அவர் பின்னே சிறிது தூரம் சென்று வணங்கி நம்பிகள் மயக்கத்தோடு மீண்டனர் ; முன்பு ...ஏக - முன் முறையிலே உடன் செல்லாதவர்களும் முறைமைப்படி சேவித்துப் பின்செல்ல ; பொன்புரி...சென்றார் - பொன்போன்று ஒளிவிளங்குகின்ற புரித்த சடையினையுடைய இறைவரும் பரவையாரது தூய திருமாளிகையிற் சென் றருளினர். ௩௫௮

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3511. (வி - ரை) மயங்குதல் - சித்தம் துணிவு பெறுமை ; கலக்கம்.

அமுதம் - தரியாது தளர்ந்து வீழ்ந்த சோர்வு தீர்ந்து உய்ய வருதலின் அமுதம் என்றார்.

வாய்மை - மெய்த் திருவாக்கெனு மமுதம் ; முன்னர்க் (3483) கூறியதும் வாய்மையே ; "உனக்கோர் தூதனாகி யிப்பொழுதே...பரவையாற் போகின்றோம்" (3483) என்று தூதனாய்ச் செல்கின்ற அளவே அங்குக் கூறினாராதலின் ; இங்கு "இப்போதே நீ குறுகுமா கூறுகின்றோம்" என்ற நிலையினுடன் ஒத்துப் பார்க்க ; இக்கருத்தேபற்றி ஈண்டு வாய்மை நலங்கிளர மமுதம் என்றார்; "போதியோ வென்னு மன்ன மெய்த்திரு வாக்கெனு மமுதம்" (2986) ; முன்னே கூறியது திருவிளையாட்டின் பொருட்டாதலின், இங்கே இம்முறை "வாய்மை" என்றார் என்று ஈண்டு முன் கூறியது வாய்மை யன்று என்னும் குறிப்புப்பட விசேடவுரை காண்பாரு முண்டு ; முன்காட்டியவாற்றால் அது பொருளன்மை கண்டுகொள்க.

உயங்கிய - வாடிய ; உயங்குதல் - வாடுதல்.

அடித் தொழும்பனேனைப் பயங்கெடுத்துப் - பணி கொள்வது - "சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடனாதல்" என்றபடி தொண்டனைக் காப்பது தலைவர் கடன் என்பது குறிப்பு.

இவ்வாறன்றே பணிகொள்வது - தம் கருத்து நிறைவேறிற் றென்று நம்பிகள் துதித்த வகை. 357

3512. (வி - ரை) கருணைகூரச் சேல்ல - என்க. கூர - கூர்தலினால்.

பின்பு சென்று இறைஞ்சி - வழிச்செல விடுப்பாரைச் சிறிது தூரம் (7 அடி அளவு என்ப) பின் சென்று வழி விடுவித்து விடைகொள்ளும் மரபு குறித்தது.

பேதுறவோடும் - மயக்கத்துடனே ; பேதுறவு - இன்னதென்று துணியமாட்டாத துன்பநிலை.

முன்புடன் போதாதாரும் - முன்னர், "வேண்டுவார் போத, ஒழிந்தார் புறத்தொழிய" (3484) என்றபடி முன்பு உடன் தொடர்ந்து செல்லாதாரும்.

முறைமையில் சேவித்து - முறைமையாவது அவ்வவர்க்கேற்ற நிலை. அருச்சகர் கோலங்கொண்டு சென்ற முன்போலன்றி, ஈண்டு இறைவர் "தாமாந் தன்மை அறிவுறு கோலத்தோடு" (3515) செல்கின்றாராதலின் அம்முறைமைக் கேற்றவாறு என்றலுமாம் ; இவர்களை மேற் குறிப்பது (3515 - 3516) காண்க.

புனித மாளிகை - ஒருமுறைக் கிருமுறை இறைவர் எழுந்தருளும் பேறு பெறுதலின் புனிதம் என்றார். இதனையே "வெள்ளித் திருமலை" (3516) என்பது காண்க. முன்னர்த் தொடக்கத்தில் "அவதாரஞ்செய் மாளிகை" (90) என்றார்.

மாளிகையிற் சென்றார் - முன்பு சென்ற செலவினை எட்டுத் திருப்பாட்டுக்களாற் (3485 - 3492) கூறிய ஆசிரியர், ஈண்டு இவ்வொருபாட்டின் ஒரு பகுதியில் முடித்தருளினர், நம்பிகளுக்கருளும் விரைவு குறித்தற்கு. 358

3513. மதிநுதற் பரவை யார்தா மறையவர் போன பின்பு
முதுமறை முனியாய் வந்தா ரருளுடை முதல்வ ராகும்
அதிசயம் பலவுந் தோன்ற வறிவுற்றே யஞ்சிக் "கெட்டேன்!;
எதிர்மொழி யெம்பி ரான்மு னென்செய மறுத்தே!" னென்பார்.

3514. கண்டுயி லெய்தார் வெய்ய கையற வெய்தி "யீங்கின்
றண்டர்தம் பிரானார் தோழர்க் காகவர்ச் சிப்பார் கோலங்

கொண்டணைந் தவரை யானுட் கொண்டிலேன் பாவியே" னென்
றொண்சுடர் வாயி லேபார்த் துழையரோ டழியும் போதில், ௩௫௦

3515. வெறியுறு கொன்றை வேணி விமலருந் தாமாந் தன்மை
அறிவுறு கோலத் தோடு மளவில்பல் பூத நாதர்
செறிவுறு தேவர் யோகர் முனிவர்கள் சூழ்ந்து செல்ல
மறுவில்சீர்ப் பரவை யார்தம் மாளிகை புகுந்தார் வந்து. ௩௫௧

3513. (இ - ள்) மதிநுதல்...பின்பு - மதிபோன்ற நெற்றியினை உடைய பரவையார் மறையவராய் வந்தவர் சென்ற பின்னர்; முதுமறை...அறிவுற்றே - முதிய மறைமுனிவர் கோலத்துடன் வந்த அவர் அருளுடைய இறைவரேயாம் என்ற நிலை தோற்றும் அதிசயம் பலவும் தோன்ற அறிந்து; அஞ்சி...என்பார் - அச்சங்கொண்டு "கெட்டேன்! எமது பெருமான் திருமுன்பு எதிராக மொழி தந்து என்ன செய்ய மறுத்தொழிந்தேன்" என்று வருந்துவாராய், ௩௪௯

3514. (இ - ள்) கண்...எய்தி - கண்ணுறக்கம் கொள்ளாதவராகி வெவ்விய செயலிழந்த வருத்தம் கொண்டு; ஈங்கு...பாவியேன் என்று - இங்கு இன்று தேவர்கள் பெருமானார் தாமே தமது தோழராகிய நம்பிக்காக அருச்சகர் கோலந்தாங்கி வந்தணைந்தவரை நான் இன்னாரென்று தெளியாதேன் பாவியானேன் என்று இரங்கி; ஒண்...போதில் - ஒள்ளிய விளக்கமுடைய வாயிலினை நோக்கியவாறே பாங்கிமாருடனே மனமழிந்து வருந்தும் போதில்; ௩௫௦

3515. (இ - ள்) வெறி...விமலரும் - மணம்மிக்க கொன்றையைச் சூடிய சடையினை உடைய இறைவரும்; தாமாந் தன்மை அறிவுறு கோலத்தோடும் - இறைவர் என்று கண்டார் அறியும்படி வெளிக்காணும் திருக்கோலத்துடனே; அளவில்... செல்ல - அளவற்ற பல பூதகண நாதர்களும் நெருங்கிய தேவர்களும் யோகர்களும் முனிவர்களும் தம்மைச் சூழ்ந்து செல்ல; மறுவில்...வந்து - குற்றமற்ற சிறப்பினையுடைய பரவையாரது திருமாளிகையின்கண் வந்து புகுந்தருளினர். ௩௫௧

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3513. (வி - ரை) மதிநுதல் - மதியுடைய நுதல் என்று கொண்டு மதியுடைமையினாலே தோன்ற என்னும் குறிப்பும் தரநின்றது. "மதியினாலே சென்னியிளம் பிறையணிந்தார் கோயில் வாயிற் றிசைநோக்கிக் கைதொழுதாள்" (2373); "முன்னர்ப் பரமரா வ தறியாதே பாதி மதிவா ணுதலாரும்" (3493) என்றதனை இதனுடன் ஒப்பிட்டுக் கவிநயங் கண்டுகொள்க.

அருமறை முனியாய் வந்தார் - அர்ச்சகராகிய கோலத்துடன் வந்தவர்; "பண்டே தம்மை யர்ச்சிக்கும் சீலமுடைய மறைமுனிவ ராகி" (3491); "முப்போது மர்ச்சிப்பார் முதற்சைவ ராமுனிவர்" (முப் - தீண் - புரா - 1); ஆய் - ஆக்கச் சொல் அக்கோலந் தாங்கி என்ற பொருள் தந்து நின்றது.

ஆளுடைய முதல்வராதும் அதிசயம்-ஆதும் - என்று காணுதற் கேதுவாகிய என்ற பொருள் தந்தது. அதிசயம் பல - அவரது கோலமும், ஒழுக்கமும், வந்த நேரமும், பேசிய சொல்நிலையும், ஒளியும் முதலியவை; புட்ப வருஷம் பொழிதல் முதலியவை என்றுரைப்பாரு முண்டு; அது பொருளன்றென்க; இவ்வாறு இறைவர் தம்மையறியக் காட்டாது வெளிப்படும் போதெல்லாம் அவ்வக் கோலங்கள் மறைந்த பின்

னரே அறிய வைக்கும் சரிதங்களை ஈண்டு நினைவு கூர்க. "காண்பாரார் கண்ணுத லாய் காட்டாக் காலே" (தேவா); அருளுடை - வந்ததன் காரணம் கூறியபடி.

கேட்டேன் - தமது பெருந்தவறு கண்டபோது வருத்த மிகுதிக்கண் வருவதோ ரிடைச்சொல்.

என் செய மறுத்தேன்? - என் மறுத்தேன்; இறைவர் அருளிய மொழியைக் கேட்டு அதன்படி ஒழுகலன்றி வேறு என்ன செயல்தான் எனக்குண்டு என்பது.

என்பார் - என்று - பார்த்து - அழியும் போதில் - என வரும்பாட்டுடன் முடிக்க. என்பார் - என்பாராகி; முற்றெச்சம்.

முதிர்மறை—ஆளுடைய முதல்வர்—என்பனவும் பாடங்கள். 359

3514. (வி - ரை) கையறவு - செயலிழந்த நிலையின் வரும் துன்பம்.

ஈங்கு - உட்கோண்டிலேன் பாவியேன் - முன் பாட்டில் வந்தவர் முதல்வராகும் தன்மை அதிசயங்களால் அறிவுற்று அஞ்சிய நிலை கூறினார். இப்பாட்டால் அவர் அவ்வாறு வருதற்குரிய ஏதுவினை மேலும் கருதி யுணர்ந்தமை கூறினார். பிரானார் - அணைந்தவரை - பிரானார் அணைந்தார்; அவரை என்க; உட்கொள்ளுதல் - மனத்துள் ஆய்ந்துணர்ந்து அதற்குத் தக ஒழுகுதல் என்ற பொருளில் வந்தது.

பாவியேன் - பாவியேனாதலின் என்று தம்மைத் தாமே நொந்துகொண்டு வருந்தியது; பாவித்திலேன் என்றுரைத்தலுமாம்.

சுடர் வாயிலே பார்த்து - இறைவரைப் புலவி மிகுதியினாலே "நீரும் போம்" என்று மறுத்துப் போக்கியபின் மன அமைதியின்றிய கலக்கத்தால் வாயிலைச் செறிய அடைத்தலின்றி யிருந்தனராதலின் அதனைப் பார்த்து என்க. இவ்வாயில் வழியே முன் வந்தனர்; இன்னும் வருவரோ என்ற மனங்கலங்கிய நிலையினால் வாயிலே பார்த் தழிந்தனர்; இது (உயர்ந்த) தன்மைநவிற்சி யணி. வாயில் - தூது என்றலுமாம்.

உழையர் - பக்கத்திலிருப்போர்; தோழியர்கள்.

அவர்களோடு அழிதலாவது அவர்களும் தமது தலைவியாரது நோயிற் கலந்து அனுபவித்தனர் என்பது.

இன்றிங் கண்டர்—என்பதும் பாடம். 360

3515. (வி - ரை) தாமாந்தன்மை அறிவுறு கோலம்-முன் தம்மைக் கண்டோர் அறிவுறாதபடி அருச்சகர் கோலம் கொண்டணைந்தது போலன்றி, இப்போது இறை வர்தாம் என்று அறியும்படியுள்ள கோலம். அவை, பேரொளி, சடைமுடி முதலிய தமது அடையாளங்கள், பூதநாதர் முதலியோர் சூழ்தல் முதலாயின.

பூதநாதர் - சிவபூத கணநாதர்கள்; யோகர் - யோகத்தாற் சிவனை விடாது உட்கொண்டோர்.

வந்து மாளிகை புகுந்தார் - என்க; வினைமுற்று முன் வந்தது விரைவுக் குறிப்பு; வந்து (நேரே) மாளிகை புகுந்தார் - என்றமையால் வாயில் அடைப்பின்றி நின்றமை குறிக்கப்பட்டது. "மணிவாயிற் கதவஞ் செறிய வடைத்த வதன்முன்பு நின்று பாவாய் திறவாயென்றழைப்ப" (3492) என முன்னர்க் கூறியது கருதுக.

சேறிவுறு தேவர் - அனேகராதலின் செறிவுறு என்றார்; சேறிதல் - நெருங் குதல்.

மறுவில் சீர் - உத்தம குணங்களின் வழுவின்மையும், அதனாலாய சிறப்பும். முன்னர் அறியாது "நீரும் போம்" "உமது பெருமைக்குத் தகுதியன்று" என்றவா றெல்லாம் கடிந்து மறுத்தவை அவர்பாற் குற்றமாகாமையும், அதனாலே இறைவர் மீளவும் எழுந்தருளக் காரணமாயின சிறப்பும் குறிப்பாலுணர்த்தியவாறு.

பரவையார் தம் மாளிகை - பரவையார் திருமாளிகையே தமது மாளிகையாக் கொண்டார் என்பது தம் என்றதன் குறிப்பு. இதனால் வரும் பாட்டிற்குத் தோற்று வாய் செய்தவாறும் காண்க. 361

3516. பாரிடத் தலைவர் முன்னும் பல்கண நாதர் தேவர்
நேர்வுறு முனிவர் சித்த ரியக்கர்க ணிறைத லாலே
பேரரு ளாள ரெய்தப் பெற்றமா ளிகைதான் றென்பாற்
சீர்வளர் கயிலை வெள்ளித் திருமலை போன்ற தன்றே. ௩௬௨

(இ - ள்) பாரிடத்தலைவர்...நிறைதலாலே - பூத கணநாதர்கள் முதலாகப் பல வகைப்பட்ட கணநாதர்களும் தேவர்களும் நேர்மை பொருந்திய முனிவர்களும் சித்தர்களும் இயக்கர்களும் நிறைந்தமையாலே; பேரருளாளர்...மாளிகைதான் - பெருங்கருணையாளராகிய சிவபெருமான் எழுந்தருளி வரும் பேறுபெற்ற அத்திரு மாளிகை தானே; தென்பால்...அன்றே - தென்றிசையிலே சிறப்புமிக்க கயிலை யினைத் தன்னகத்துக் கொண்ட வெள்ளித் திருமலை போன்றது அப்பொழுதே.

(வி - ரை) பாரிடம் - பூதம்; பேய்; இங்குச் சிவபூதங்களைக் குறித்தது; " பேயாய, நற்கணத்தி லொன்றாய நாம்" (அற். அந்). முன்னும் - முதலாகிய; பல் கணம் - சிவகணங்களின் பல வகைகள்.

நேர்வுறும் - நேர்வு - நேர்மை; அருள் - ஒழுக்கம்; ஒப்பு என்பாருமுண்டு.

நிறைதலாலே - திருமலை போன்றது - உவமைக்குக் காரணங் கூறியபடி; இவர்கள் நிறைதல் பற்றி முன்னர்த் திருமலைச் சிறப்பிற் கூறியவையும், (14 - 21); ஆளுடைய அரசுகளுக்கு இறைவர் திருவையாற்றிற் கயிலைக் காட்சி அருளிய இடத் துக் கூறியவையும் (1639—1643) பார்க்க.

பேரருளாளர் எய்தப் பெற்ற மாளிகைதான் - " நீரும்போம் " எனக் கடிந்து மறுத்த பின்னரும் பொறுத்து அருள்புரிய வந்தமையும், " ஒளிவளர் செய்ய பாதம் வருந்தவோ ரிரவு மாறா, தளிவரு மன்பர்க் காக வங்கொடிங் குழல்வீ ராகி, எளி வந்து" போந்தமையும் குறிக்கப் பேரருளாளர் என்றார். பேரருளாள ராதலின் எனக் காரணக் குறிப்புடன் நின்றது; தான் - மாளிகை தானே என உறுதிப் பொருள் குறித்தது; எய்தப்பெற்ற - பூதர் முதலியோர் நிறைதலால் மட்டுமன்றிப் பேர் அரு ளாளர் எய்தப்பெற்றமையால் என்க.

தென்பால்...திருமலை - வடபால் உள்ள திருமலை போலத் தென்பாலில் உள்ளதொரு திருமலை.

கயிலை வெள்ளித் திருமலை - கயிலையைத் தன் முடியிலே கொண்ட வெள்ளி மலை. மாளிகை வெள்ளி மலையாகவும், அதனுள் இறைவர் போந்து நின்ற இடம் கயிலையாகவும் கொள்க. கயிலை என்னும் வெள்ளிமலை என்பார் முன் உரைகாரர் கள்; கயிலைமலை வெள்ளி மலையின் உயர்ந்த பல சிகரங்களுள் மிக வுயர்ந்த முடி; திருமலைச் சிறப்பிலுரைத்தவை பார்க்க.

அன்றே - அப்பொழுதே; அசையென் றுரைக்குவாரு முண்டு.

அன்பாற் சீர்வளர்—என்பதும் பாடம். 362

3517. ஐயரங் கணைந்த போதி லகிலலோ கத்துள் ளாரும்
எய்தியே செறிந்து சூழ வெதிர்கொண்ட பரவை யார்தாம்

மெய்யுறு நடுக்கத் தோடு மிக்கெழு மகிழ்ச்சி பொங்கச்
செய்யதா ளிணைமுன் சேர விரைவினிற் சென்று வீழ்ந்தார். ௩௬௩

(இ - ள்) ஐயர்...சூழ - எல்லாவுலகங்களிலுள்ளவர்களும் பொருந்தி நெருங்கிச் சூழ இறைவர் அங்கு எழுந்தருளிய போது ; எதிர் கொண்ட...பொங்க-அவரை வரவேற்று எதிர் கொண்ட பரவையார் தாம் உடம்பில் பொருந்திய விதிர் விதிர்ப்புடனே மிக்கு மேலெழுகின்ற மகிழ்ச்சி மேன்மேற் பொங்க ; செய்ய...வீழ்ந்தார் - அவரது செம்மையுடைய திருவடியிணையின் முன்பு பொருந்த விரைந்து சென்று வீழ்ந்தனர்.

(வி - ரை) சூழ அணைந்த போதில் - என்க ; சூழ - சூழும்படி ; சூழ்தல் - முன் உரைக்கப்பட்ட பாரிடத் தலைவர் முதலாயினோரன்றி ஏனைய மக்கள் முதலாயினோரும், வந்துசூழ்தல் குறித்தது ; முன் கூறியவர்கள் கயிலையில் இறைவருடன் இருக்கத் தக்கார் ; இங்குக் கூறிய அகில லோகத்துள்ளார் - அவ்வாறன்றி அன்று இறைவர் அத்திருமாளிகையில் யாவருங் காண எழுந்தருளியபோது கண்டு வந்து சூழும் பேறு மட்டில் பெற்ற இந்நிலவுலகம் முதலிய உலகத்தினர்கள் ; உள்ளாரும் - உம்மை கயிலையில் இறைவருடன் உள்ள கணங்கள் முதலியவர்களுடன் கூடி இருக்கத் தகாத இவர்களும் என்று இழிவு சிறப்பு ; இவர்களை இப்பாட்டில் வேறு பிரித்துக் கூறியது மிக்கருத்து. மெய்யுறு நடுக்கத்தோடும் மிக்கெழு மகிழ்ச்சி - முன்னர் எதிர் மொழிந்து கடிந்து மறுத்துப் போக்கிய அபராதத்தின் பொருட்டு நடுங்கினார் ; ஐயர் தம்மீது வைத்த பெருங் கருணையினால் மீள எழுந்தருளியதன் பொருட்டு மகிழ்ச்சி மிக்கெழுந்தது.

செய்ய தாளிணை - செம்மை செய்யும் திருவடிகள் - "கண்டு கொள்ளென்று காட்டிய, சேய மாமலர்ச் சேவடி" (திருவா - சென்னி-5)

வீழ்ந்தார் - வீழ்தல் - தமது முயற்சியின்றி அடியற்ற மரம் போல வீழ்தல் என்றது குறிப்பு.

363

3518. அரியயற் கரியார் தாமு மாயிழை யாரை நோக்கி
"உரிமையா லூர னேவ மீளவு முன்பால் வந்தோம்;
முருகலர் குழலா யின்ன முன்புபோன் மறாதே நின்பாற்
பிரிவுற வருந்து கின்றான் வரப்பெற வேண்டு" மென்றார். ௩௬௪

(இ - ள்) அரியயற்கு...நோக்கி-மாலுக்கும் பிரமனுக்கும் அறிதற்கரியவராகிய இறைவரும் பரவையாரை நோக்கி ; உரிமையால்...வந்தோம் - தோழன் என்ற உரிமையினாலே, நம்பியாரூரன் ஏவ மீண்டும் உன்னிடம் இப்போது வந்தோம் ; முருகலர்...வேண்டும் - மணம் வீசுகின்ற கூந்தலையுடைய பரவையே ! முன்புபோல மறுக்காதபடி உன்னைப் பிரிந்தமையால் வருந்துகின்றானாகிய நம்பி உன்பால் வரப் பெறுதல் வேண்டும் ; என்றார் - என்று அருள்செய்தார்.

(வி - ரை) அரி அயற்கு அரியார் - அரிக்கும் அயனுக்கும் அறிவரியார் ; அவர்களுக் கரியாராயினும் அடியவர்க் கெளிவந்தவர் என்பது குறிப்பு.

ஆயிழையார் - ஆய்ந்த அணிகளை அணிந்தவர் ; ஆய்தல் - நுணுக்கம் ; இழை - நூல், எனக்கொண்டு நுணுகிய நூல்களை ஆராய்ந்த மதிநுட்பமுடையார் என்ற குறிப்புப்பட உரைக்கவும் நின்றது. "ஆயிழையாய்" (போதம் 7 - சூத். 3 - அதி.

வெண்பா) என்றவிடத்து எமது மாதவச் சிவஞான முனிவர் சிற்றுரையில் உரைத்தவை பார்க்க. "மதிநுதற் பரவையாரும்" (3573) என்று முன் உரைத்த குறிப்பும் காண்க.

உரிமையால் ஊரன் ஏவ - உரிமை - தம்பிரான் றோழர் என்ற உரிமை; பாங்கற்கூட்டம் என்ற அகப்பொருட் பகுதிகளை ஒப்பு நோக்குக. ஊரன் - நம்பியாரூரன்; ஏவ - ஏவியதனால்; தமது எளிவரும் தன்மை குறித்தபடி.

மீளவும் உன்பால் வந்தோம் - "நீரும்போம்" (3499) என மறுத்துப் போக்கிய பின்னும் உன்பால் வருதல் தகுதி யன்றாயினும் முன்வந்தது போலவே மீளவும் வந்தோம் என உம்மை இறந்தது தழுவியது; ஏவ - அவ்வாறு வந்ததற்குக் காரணம் கூறியபடி; உன்பால் - உன் தகுதியும் நோக்கி என்ற குறிப்பும் தருவது.

முருகலர் குழலாய்! - இயற்கை மணமுடைய கூந்தல் என்றது; பெண்களில் உத்தம விலக்கண முடையார்க்கு இயைவது; "அரிவை கூந்தலி னறியவு முளவோநீ யறியும் பூவே" (குறுந்); இதனால் குணமேன்மையும் குறித்தபடி; முன்புபோல் மறாது இசைவதற்குரிய தகுதி குறித்தவாறும்.

முன்புபோல் மறதே - இதனாலும், மீளவும் வந்தோம் என்றதனாலும், முன்னர் வந்தவர் தாமேயாம் என்று குறிப்பா லுணர்த்தியவாறு; மேல் இக்கருத் துணர்ந்தே முன் எய்திய நீரோ? (3519) என்று பரவையார் வினவியதும் காண்க.

பிரிவுற வருந்துகின்றான் - பிரிவு உற - பிரிவு என்னும் நிலை உற்றதனாலே என்று காரணப் பொருளில் வந்தது; பிறவுற்றமையால்; நின்பாற் பிரிவுற என்றும், நின்பால் வரப்பெற வேண்டும் என்றும் ஈரிடத்தும் கூட்டியுரைக்க வைத்த நயம் காண்க. "அணியிழை, தன்னோய்க்குத் தானே மருந்து" (குறள்) என்ற உண்மை புலப்பட வைத்த கவிநயமும் கண்டுகளிக்க.

வரப்பெற வேண்டும் - வரப்பெறுதலை நீ இசைதல் வேண்டும் என்க; பெற - பெறுதலின் இசைவு.

வருந்துகின்றான் - வருந்துகின்றானாகிய நம்பி என வினைப்பெயர். 364

3519. பெருந்தடங் கண்ணி னாரும் பிரான்முன்பு மிகவு மஞ்சி
வருந்திய வுள்ளத் தோடு மலர்க்கரங் குழன்மேற் கொண்டே
"அருந்திரு மறையோ ராகி யணைந்தீர்முன் னடியேன் செய்த
இருந்தவப் பயனோ மென்ன வெய்திய நீரோ?" வென்பார், ௩௬௫

3520. துளிவளர் கண்ணீர் வாரத் தொழுதுவிண் ணப்பஞ் செய்வார்
"ஒளிவளர் செய்ய பாதம் வருந்தவோ ரிரவு மாறு
தளிவரு மன்பர்க் காக வங்கோடிங் குழல்வீ ராகி
எளிவரு வீரு மானா லென்செய்கே னிசையா" தென்றார். ௩௬௬

3519. (இ - ள்) பெருந்தடம் கண்ணினாரும்...கொண்டே - பெரிய விசாலமாகிய கண்களையுடைய பரவையாரும் இறைவர் முன்பு மிகவும் அச்சங்கொண்டு வருத்தம் பொருந்திய வுள்ளத்துடனே மலர் போன்ற கைகளைக் கூந்தலின் மேலே கூப்பிக்கொண்டே; அடியேன் செய்த...நீரோ - அடியேன் முன்னையிற் செய்த பெரிய தவத்தின் பயன் போல இப்பொழுது எழுந்தருளிய தேவரீரோ?; முன் - முன்பு; அருந்திரு...அணைந்தீர்- அரிய திருமறை முனிவராகிய அருச்சகர் கோலத்துடன் எழுந்தருளினீர்?; என்பார் - என்று சொல்வாராய்; ௩௬௫

3520. (இ - ள்) துளிவளர்...விண்ணப்பஞ் செய்வார் - துளிகளாக வந்து பெருகும் கண்ணீர் வழியத் தொழுது விண்ணப்பஞ் செய்வாராகி ; ஒளிவளர்... வருந்த ஒளி வளர்தற் கேதுவாகிய செம்மை தருகின்ற திருவடிகள் நோவ ; ஓர் இரவு - ஓர் இராத்திரி முழுதும் ; மாறுதா - மாறுதலில்லாது ; அளிவரும் அன்பர்க்காக - நிலைபெற்ற அன்பினை உடைய அடியவர் பொருட்டு ; அங்கொடிங்கு... எளிவருவீருமானால் - அங்கும் இங்குமாக அலைவீராகி எளிதாக எழுந்தருளுவீருமானால் ; என்...என்றார் - இசைவுபடாது வேறென் செய்ய வல்லேன் என்று சொன்னார். ௩௬௬

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3519. (வி - ரை) பெருந்தடங் கண்ணினரும் - முன்னர் " அங்கயல் விழியினரும் " (3495) என்ற இடத்துப் பரம ராவ தறியாத நிலை ; இங்கு அறிந்தபோது கண்ணோட்டம் பார்த்து சிறந்ததென்று குறிப்பித்தது கவிநயம் ; பெரும் - தடம் - ஒரு பொருட் பன்மொழி மிகுதி குறித்தது. குறுக்கும் நெடுக்குமாக நீண்டு அகன்ற எனினுமாம்.

அஞ்சி - பிரானாரை முன்னர் மறுத்து எதிர்மொழி கூறி - வலிந்து - போக்கிய தனை எண்ணிய அச்சம். " அருமறை...நீரோ ?" என்பது இதன் காரணம் குறித்தவாறு.

அடியேன் செய்த இருந்தவப் பயனும் என்ன எய்திய - செய்த - முன் செய்த ; இருந்தவப் பயனும் என்ன - பெருந் தவத்தினாலன்றி இறைவர் இவ்வாறு ஒரு முறைக் கிருமுறையும் வலிய எழுந்தருளி ஆட்கொள்ளும் பேறு கிட்டாதென்பது ; எய்திய - இப்பொழுது எழுந்தருளிய.

நீரோ - மறையோராகி முன் அணைந்தீர்-என்று கூட்டுக. என்பார்-முற்றெச்சம். எய்தினர்—என்பதும் பாடம் 365

3520. (வி - ரை) துளிவளர் கண்ணீர் வார - துளிகளாக முன்னர்த் தோன்றிப் பின் ஊற்றுப் போலத் தொடர்ந்து பெருகிக் கண்ணீர் வழிய.

ஒளிவளர் செய்ய பாதம் - அடியார்கள்பால் சிவஞான ஒளி பெருகச் செம்மை தரும் திருவடி ; " ஒளிவளர் விளக்கே " (திருவிசைப்பா).

ஓர் இரவு - இரவு முழுமையும் என முற்றும்மை தொக்கது ; ஓர் - ஒப்பற்ற என்ற குறிப்பும் காண்க.

மாறுது அளிவரும் அன்பர் - நம்பிகள் ; அளி-இறைவர்பால் வைத்த உள்ளூறிய அன்பு ; "அளிவள ருள்ளத் தானந்தக் கனியே " (திருவிசைப்பா) ; மாறுது - இடையறாது ; " ஆரூரானை மறக்கலுமாமே " " மாணிக்கத் தைமறந் தென்னினைக் கேனே " " எனக்கார் துணை நீயலதே " " உன்னையல்லா லினி யாரை நினைக் கேனே " "காணீ ராகிலுங் காண்பனென் மனத்தாற் கருதீ ராகிலும் கருதி, நானேலும்மடி பாடுத லொழியேன் " " எங்ஙனநான் பிரிந்திருக்கே னென்னாரூ ரிறைவனையே " "எழுபிறப்பும் மெங்கணம்பி கண்டாயே " " எனையஞ்ச வென்றருளா யாருறவெனக்கு " " என்னை நான் மறக்குமா றெம்பெருமானை " என்றற்றொடக்கத்த எண்ணிறந்த திருவாக்குக்கள் நம்பிகளது திருவுள்ளத்தின் மாறாத அளிவரும் அன்புடைமையினை விளக்குதல் காண்க. இவ்வாறன்றி, மாறுது என்பதனை "ஓர் இரவும் மாறுது " என்று கூட்டி ஒரு இரவு முழுமையும் இடைவிடாது என்றுரைப்பினும் அமையும். "அங்கொடிங்கு உழல்வீராகி எளிவருவீருமானால் என்பது இக் கருத்துப்பட நின்றதும் காண்க. மாறுமை - மனம் மாறுபடாமையுமாம்.

அங்கோடிந்த உழல்வீராகி - அந்த - நம்பிகள் இருக்கும் இடம். தேவாசிரியன் மருங்கு (3466).

இந்த - பரவையார்தம் திருமாளிகை ; உழலுதல் - ஒருமுறைக் கிருமுறை அடி வருந்த நடத்தல் ; மறுத்து வலிந்து போக்கிய பின்னரும் சார்தல் என்றதும் குறிப்பு.

எளிவருவீரும் - அரியாராகிய நீர் எளியாராக வருவீராகி ; ஏவலாள் போல அலைவீருமாகி.

எளிவருவீரும் - உம்மை உழல்வீராதலின்றியும் என இறந்தது தழுவியது.

அன்பர்க்காக எளிவருவீருமானால் என் செய்கேன் இசையாது - தேவரீர் உழன்று எளிவருதல் கருதி அதன் பொருட்டு இசைகின்றேன் என்பது ; அன்பர்க்காக, அரியவராகிய தேவரீர் எளியராய் வரும்போது அவர்க்காக அடியேன் இசைதலே தகுதி என்றதுமாம் ; இசையாது என் செய்கேன் - என்க. சொல் வைப்பு முறை மாறியதும், எதிர் மறைகளும் உறுதியும் விரைவும் மனந்தடுமாறி நிலைநின்ற அமைதியும் குறித்தன. 366

3521. "நங்கைநின் றன்மைக் கேற்கு நன்மையே மொழிந்தா" யென்று
மங்கையோர் பாகம் வைத்த வள்ளலார் விரைந்து போகத்
திங்கள்வா ணுதலி னருஞ் சென்றுபின் னிறைஞ்சி மீண்டார் ;
எங்களை யாளு நம்பி தூதர்மீண் டேகு கின்றார், ௩௬௭

வேறு

3522. ஆதியு மேனு மாலய னேடற் கருளாதார்
தூதினி லேகித் தொண்டரை யாளுந் தொழில்கண்டே
வீதியி லாடிப் பாடி மகிழ்ந்தே மிடைகின்றார்
பூதியி னீடும் பல்கண நாதர் புகழ்வீரர், ௩௬௮

3523. அன்னவர் முன்னும் பின்னு மருங்கு மணிவெய்த
மின்னிடை யார்பா லன்பரை யுய்க்கும் விரைவோடுஞ்
சென்னியி னீடுங் கங்கை ததும்பத் திருவாரூர்
மன்னவ னாரம் மறையவ னார்பால் வந்துற்றார். ௩௬௯

3521. (இ - ள்) "நங்கை...மொழிந்தாய்" என்று - "நங்கையே! உன்னுடைய உயர்ந்த தன்மைக்குத் தகுந்தபடி நன்மையே உரைத்தாய்" என்று பரவையாரை நலங்கூறிப் பாராட்டி ; மங்கையோர்...போக - உமையம்மையாரை ஒரு பாகத்தில் வைத்த வள்ளலாராகிய இறைவர் விரைந்து செல்ல; திங்கள்...மீண்டார் - சந்திரன் போன்ற ஒளி பொருந்திய நெற்றியினையுடைய பரவையாரும் சிறிது தூரம் பின்சென்று வணங்கி மீண்டனர் ; எங்களை...ஏகுகின்றார் - எங்களை ஆட்கொண்டருளும் நம்பிகளது தூதராகிய இறைவர் மீண்டு அவர்பாற் செல்கின்றாராக, ௩௬௭

3522. (இ-ள்) ஆதியும்...அருளாதார் - அடியினையும் முடியினையும் முறையே மாலும் பிரமனும் நாடிக் காணுதற்கு அருளாத இறைவர் ; தூதினில்...தொழில் கண்டே - தாமே தூதாகச்சென்று தொண்டனை ஆட்கொள்ளும் அந்த அருட்

செயலைக் கண்டே ; பூதியில்...வீரர் - அனுபூதியில் சிறந்து திளைக்கின்ற பலவகைப் பட்ட சிவபூத கணநாதர்களும் புகழுடைய வீரர்களும் ; வீதியில்...மிடைகின்றார் - அத்திருவீதியிலே ஆடியும் பாடியும் மகிழ்ச்சியோடு நெருங்குகின்றார்களாகி; ௩௬௮

3523. (இ - ள்) அன்னவர்... அணை வெய்த - அத்தகையோர்கள் தமது முன்னும் பின்னும் பக்கங்களிலும் முறைமைப்படி சார்ந்து வர ; திருவாரூர் மன்னவனார் - திருவாரூரினை அரசாளும் தியாகராசர் ; மின்னிடையார்...விரைவோடும் - மின்போன்ற இடையினை உடைய பரவையாரிடத்துத் தம் அன்பராகிய நம்பிகளைச் சேர்க்கின்ற விரைவினோடும் ; சென்னியில்...ததும்ப - தமது தலையிலே நீடிய கங்கையாறு அலைத்து மோத; அம்மறைவனார்பால் வந்துற்றார் - அந்த மறையோராகிய நம்பிகளிடம் வந்து சேர்ந்தருளினர். ௩௬௯

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டுரைக்க நின்றன.

3521. (வி - ரை) நங்கை ! - பெண்களிற் சிறந்தவளே !

நின் தன்மைக்கேற்ற நன்மையே - நினது அத்தன்மைக்குப் பொருந்திய நலப்பாடே ; முன் "முருகலர் குழலாய் !" என்று தொடங்கிய குறிப்பும் ஆண்டுரைத்தவையும் பார்க்க.

மங்கையைப் பாகம் வைத்த வள்ளலார் - வள்ளன்மையுடன் கருணையையும் உடையவர் என்பது.

விரைந்து போக - செயல் நிறைவை அறிவித்து வினை முடிபாக்கும் தீவிரம் ; மேல் (3523) இதன் காரணம் கூறுவார்.

திங்கள் வாணுதலினார் - பரவையார் ; "மதிநுதற் பரவையார்"(3519) என்று ஆண்டுத் தொடங்கியவாறே முடித்தபடி ; ஆண்டுரைத்தவை பார்க்க.

சென்றபின் இறைஞ்சி - வழிவிடும் நிலையும், வழிவிட்டு விடைகொள்ளும் நிலையும் குறித்தது ; நம்பிகளும் இவ்வாறே "பின்புசென் றிறைஞ்சி மீண்ட" நிலை (3512) காண்க ; முன்முறையில் மறுத்து "நீரும் போம்" (3499) என்று போக்கியபோது இம்மரபு பிறழ்ந்தமை அப்போதிலிருந்த மனநிலை காரணமாக நிகழ்ந்ததென்க.

நம்பி தூதர் - பரவையார்பால் தாமாந்தன்மை அறிவுறு கோலத்தோடு வந்தமையால் "மங்கை பாகர்" என்றதும், நம்பிகள்பால் செல்லும் நிலைபற்றி அதற்கேற்பத் தூதர் என்றதும் கருதுக. இவ்வாறு தூதாகச் சென்றமை நம்பிகள் திருவாக்கில் வரும் பல அகச்சான்றுகளாலும் விளங்குவதாம் ; "அடியேற் கெளிவந்த தூதனை" (நள்ளாறு) ; "தூதனை யென்றனையாள் தோழனை" (கானப்பேர்) என்பன முதலிய பலவும் காண்க.

ஏதகின்றார் - ஏகுகின்றாராகி ; முற்றெச்சம்.

ஏதகின்றார் - ஆளும் தொழில் - என்று வரும்பாட்டுடன் முடிக்க. 367

3522. (வி - ரை) ஆதியும் மேலும் - மாலயன் நாடற்கு - ஆதி - அடி ; மேல் - முடி ; ஆதியினை மாலும், மேலினை அயனும் முறையே நாடற்கு என்று நிரனிரையாகக் கூட்டுக.

மாலயற் கருளாதார்...தூதினில் ஏகித் தொண்டரை ஆளும் - அவர்கள் ஆட்படாமையின் அருளாதார் ; தொண்டர் ஆட்பட்டமையால் அருளினர் என்பது. அரியயற்கு அருளாத காரணம் பற்றி இலிங்க புராணத் திருக்குறுந்தொகை பார்க்க. "தேவர்கள் ஆள்கொடுத் தெம்போ லாரை யறிகிலர்" (திருமந்திரம்) என்பது முதலியவை பார்க்க.

ஆளும் தோழில் கண்டே - இறைவரது அடியார்க்கெளிவரும் பெருங் கருணையை நேரே கண்டு.

பூதி - அனுபூதி ; சிவானுபூதி ; பூதியில் நீடுதல் - யோக நிலையில் உள்ளே எப்போதும் சிவானந்தத்தில் திளைத்திருத்தல் ; உள்நிறைந்த சிவானுபூதியினை இங்குப் புறத்திலும் கண்டு மகிழ்ந்தனர். சிவானுபூதி - சிவனை உள்ளே கண்டு கொண்டு அவனது அருளில் திளைத்து மூழ்கிய அனுபவநிலை ; " மாறுத சிவானுபவ மருவிக் கொண்டே " (சித்தி - 11—1) ; "மெய்யே கண்டுகொண் டிருப்பர் ஞானக் கடலமு தருந்தி னோரே " (சிலப் - 98) என்பனவாதி ஞானநூல் உண்மைகள் காண்க. பூதி - விபூதி - திருநீறு என்றனர் முன் உரைகாரர்கள்.

புகழ் வீரர் - பாரிடத் தலைவர் முதலாக முன் (3516) சொல்லப்பட்டவர்கள் ; வீரமாவது சிவனடிமைத் திறத்தால் வருவது ; " வீர மென்னால் விளம்புந் தகையதோ ?"

கணநாதப் புகழ்வீரர் - என்று பாடங் கொள்வாருமுளர். மேல் பல வகையி னரைக் கூறி " முன்னும் பின்னும் மருங்கும் " என்று முறைமையும் வகுத்தலின் அது பொருந்தாமை யறிக. 368

3523. (வி - ரை) அன்னவர் - முன் கூறிய அத்தகைய கணநாதர் புகழ் வீரராகிய அவர்கள்.

முன்னும் பின்னும் மருங்கும் - இறைவரது முன்னரும் பின்னரும் பக்கங் களிலும் அவ்வவர் முறைமைக் கேற்ப.

மின்னிடையாள்...விரைவோடும் - இம்முறை மீண்டு செல்லும்போது இறைவர் விரைவின் ஏகுதலின் காரணம் கூறியபடி ; தளர்ந்து வீழ்ந்த நம்பிகளது இடுக்கண் கண்டு தரியாது (3510) போந்தாராதலின் விரைவின் ஏகினர்.

சென்னியில்...ததும்ப - சென்னியில் சடைக்கற்றையின் கரையினளவில் நிறைந்து நிற்கும் பரந்த நீராதலின் ஐயர் விரைவின் ஏகிய அசைவினால் நீர் ததும் பிற்று என்பது கவிநயம். கருணை வெள்ளம் ததும்ப என்பது குறிப்பு.

மன்னவனார் - மறையவனார்பால் வந்துற்றார் - மன்னர் மறையவரிடம் தேடி வருதல் தகுதி என்ற சொற்சுவைபடக் கூறியது கவிநயம் ; மறையவனார் - சிறப் புக் குறித்தது ; திருவாரூர் மன்னவனார் - தியாகராசர்.

மன்னவனார்தா மன்பினர்தம்—என்ற பாடமுமுண்டு. 369

3524. அன்பரு " மென்பா லாவி யளிக்கும் படிபோனார்
என்செய்து மீள்வா ரின்னமு" மென்றே யிடர்கூரப்
பொன்புரி முந்நூன் மார்பினர் செல்லப் பொலிவீதி
முன்புற நேருங் கண்ணிணை தானு முகிழாரால். ௩௭0

(இ - ள்) அன்பரும்...இடர்கூர - அன்பராகிய நம்பிகளும் " என்னிடத்து உயிரினை அளிக்கும்படி என்று சென்றவராகிய இறையவர் இன்னமும் என்ன செய்து மீள்குவரோ ?" என்றே வருத்தம் மிக ; பொன்புரி...முகிழாரால் - பொன் னாற் புரித்திட்டது போன்ற பூணூல் அணிந்த மார்பினையுடைய இறைவர் செல்லப் பொலிவு பெற்ற அத் திருவீதியினை எதிர் நோக்கும் தமது கண்களை இமைக்கா திருந்தனர்.

(வி - ரை) ஆவி அளிக்கும்படி - "அவள்பால் இன்று மேவுதல் செய்யீராகில் விடுமுயிர்" (3509) என்றபடி நீங்கும் "நிலையிலிருந்த உயிரினைத் தரும்படி ; ஆவி - ஆவி போன்ற பரவையை என்ற குறிப்புப்பட உரைத்தலும் ஆம் ; என்பால் - என் பாற் பொருந்த ; "என்னின் னுயிரா மன்னமென" (297) ; "ஆவி நல்குவ ராரூரை யாண்டவர், பூவின் மங்கையைத் தந்தெனும்" (302) என்று முன் கூறிய கருத்துக்கள் காண்க ; மேற்பாட்டிலும் "உயிர் நல்கும்" (3525) என்பதும் காண்க.

இன்னமும் என் செய்து மீள்வாரோ ? என்க ; இன்னமும் - முன்னர்ச் சென்ற காரியம் நிறைவு செய்யாது மீண்டமை போல் இன்னமும் என உம்மை இறந்தது தழுவிற்று ; என் செய்து - நிறைவு செய்வதும் அது செய்யாமையும் அவர் செயலே யன்றி மற்றும் உயிர்களின் செயலாவது ஒன்றுமில்லை என்பதும் குறிப்பு.

இடர் கூர - கூர்தல் - மிகுதல் ; கூர - கூர்தலினால் ; கூர - நேரும் கண்ணிணை - முகிழார் - எனக் காரணப் பொருளில் வந்தது.

வீதி முன்புற நேரும் கண்ணிணை - தானும் முகிழார் - வீதியினை எதிர் நோக்கிய வண்ணம் பார்த்த கண்கள் இமையாராயினர்; முன்புற நேரும் - இறைவரது வரவினை எதிர்நோக்கும்.

தானும் - உம்மை முற்றும்மை; சிறப்பும்மையுமாம் ; மனம் இடர்கூர வருந்துதலோடு கண் தானும் என்றலுமாம். முகிழ்த்தல் - இமைத்தல் - மூடுதல்.

முகிழாதால்—என்பதும் பாடம். 370

3525. அங்கிலை மைக்கண் மன்மதன் வாளிக் கழிவார்தம்
மன்னுயிர் நல்குந் தம்பெரு மானார் வந்தெய்த
முன்னெதிர் சென்றே மூவுல குஞ்சென் றடையுந்தாள்
சென்னியில் வைத்"தேன் சொல்லுவ" ரென்றே தெளியாதார், ௩௫௭௧

3526. "எம்பெரு மானீ! ரென்னுயிர் காவா திடர்செய்யுங்
கொம்பனை யாள்பா லென்கொடு வந்தீர் குறை?"யென்னத்,
தம்பெரு மானுந் "தாழ்குழல் செற்றந் தணிவித்தோம்;
நம்பி யினிப்போய் மற்றவ டன்பா னணு"கென்ன, ௩௫௭௨

3527. நந்தி பிரானார் வந்தருள் செய்ய நலமெய்துஞ்
சிந்தையு ளார்வங் கூர்களி யெய்தித் திகழ்கின்றார்
"பந்தமும் வீடு நீரருள் செய்யும் படிசெய்தீர்
எந்தை பிரானே! யென்னினி யென்பா லிடர்?"என்றார். ௩௫௭௩

3525. (இ - ள்) அங்நிலைமைக் கண்...எய்த - (நம்பிகள்) அங்நிலையில் நின்ற போது மன்மதனது அம்புகள் வீழ இடைந்த நம்பிகளது நிலைபெற்ற உயிரினைத் தந்தருளும் தமது பெருமானார் வந்து சேர ; முன் எதிர்...வைத்து - அவர் திரு முன்பு எதிர்கொண்டு சென்றே மூவுலகங்களும் சென்று அடையும் அவரது திருவடிகளைச் சிரத்தில் வைத்துப் பணிந்து ; என்...தெளியாதார் - என்ன சொல்வார் என்றே தெளியாதாராகி, ௩௫௭௧

3526. (இ - ள்) "எம்பெருமானீர் !...குறை" என்ன - எமது பெருமானே ! எனது உயிரைக் காவல் செய்யாது துன்பம் செய்கின்ற கொம்பு போன்ற பரவையிடத்தினின்றும் யாது குறை கொண்டு வந்தீர் ?" என்று வினவ ; தம்பெருமானும்...என்ன - தமது பெருமானாகிய இறைவரும் தாழ்ந்த குழலினையுடைய பரவையினது புலவியினால் வந்த கோபத்தினைத் தணியச் செய்தோம் ; நம்பியே ! இனி நீ போய் அவள்பாற் சேர்வாயாக" என்று அருள, ௩௭௨

3527. (இ - ள்) நந்தி...அருள் செய்ய - நந்தி என்னும் திருநாமமுடைய எமது பெருமானார் வந்து இவ்வாறு அருளிச்செய்ய ; நலமெய்தும்...திகழ்கின்றார் - நன்மை பொருந்தும் திருவுள்ளத்திலே ஆசை மிகுதலினாலே உண்டாகிய மகிழ்ச்சி பொருந்தி விளங்குகின்றாராகி ; பந்தமும்...என்றார் - பந்தத்தையும் வீட்டையும் நீரே உயிர்களுக்கு அருளும் நிலைக் கேற்றவாறே செய்தருளினீர் ! எமது பெருமானீரே ! இனி எனக்கு என்ன துன்பம் உள்ளது ? என்று போற்றினார். ௩௭௩

இந்த மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3525. (வி - ரை) மன்மதன் வாளிக்கழிவார் - என்ற துபசாரம் ; உலகியல்பற்றிக் கூறியதாம். நம்பிகள் காமவசப்பட்டு வருந்தினார் என்பதன்று. இது பற்றி முன் உரைத்தவை பார்க்க ; எவ்வண்ண நிற்பினும் சிவன்பாலன்றிச் சிந்தை பிறழாத சிவயோக நிலையின் நிற்பது நம்பிகள் திருவுள்ளம் என்பது ஈண்டுக் கருதத்தக்கது. "சீவன்முத்தர் சிவமேகண் டிருப்பர்" (சித்தி - 11—1).

உயிர் நல்கும் - முன் "ஆவியளிக்கும்படி போனார்" (3524) என்றது காண்க.

மூவுலகுஞ் சென்றடையும் தாள் - மூவுலகிலும் உள்ள எல்லாவுயிர்களும் துன்பநீக்கத்தின் பொருட்டுச் சென்று புகலடையும் திருவடி. இவ்வாறன்றிச் சங்கார காலத்து யாவும் திருவடியினொடுங்கிச் சிருட்டிக் காலத்து ஒடுங்கிய முறையே தோற்றும் திருவடி என்று உரைத்தனர் முன் உரைகாரர்.

என் சொல்லுவர் என்றே தெளியாதார் - முன்முறை "உறுதிசெய் தணைந்தார் என்றே" (3505) எண்ணிக் கொண்டதற்கு மாறாக நிகழ்ந்தமையால் இம்முறை தெளியாராயினார். இதனாலே "என் கொடுவந்தீர் குறை" என்று மேல் வினவலாயினர். தெளியாதார் - தெளியாராகி ; முற்றெச்சம்.

தெளியாதார் - என்ன - என வரும்பாட்டுடன் முடிக்க. 371

3526. (வி - ரை) என்னுயிர் காவாது இடர் செய்யும் கொம்பனையாள் - உயிர் காத்தல் - உயிரைப் பாதுகாத்தல் ; இடர் செய்யும் - பாதுகாத்தல் நாயகியின் கடனாயிருப்பவும் அதனைச் செய்யாமையே யன்றி இடரையும் செய்யும் என்பது ; இடர் செய்தலினாலே காவாது என்றுரைப்பினுமாம்; கொம்பு அனையாள் - உவமை, உணர்வின் குறைவு காட்டும் குறிப்புமாம்.

குறை என் கொடுவந்தீர் - என்க; குறை - முன்னர்க் கொண்டு வந்தது போலச் செயல் நிறைவேறாத நிலை ; என் கொடு - வேறும் ஒன்றை என்றது குறிப்பு.

தாழ்குழல் - பரவையார் ; வினைத்தொகையன்மொழி ; தாழ்தல் - வணங்குதல் என்ற குறிப்புடன் நின்றது ; தாழ் - முன்னர் வணங்காது நின்றதுபோ லன்றி அடியில் வீழ்ந்து தாழ்ந்த என்ற குறிப்புக் காண்க. "தாளினைமுன்சேர விரைவினாற் சென்று வீழ்ந்தார்" (3517).

சேற்றம் - புலவி காரணமாக வந்த சினம்; " செற்ற நிலைமை " (3472). 372

3527. (வி - ரை) நந்திபிரானார் - நந்தி - இறைவரது திருநாமங்களுள் ஒன்று; உயிர்களின் வினைத்துயரை நந்துதல் (குறைத்தல் - ஒழித்தல்) செய்பவன்; இங்கு நம்பிகளது துன்பமுழுதும் ஒழித்தமை குறிக்க இப்பெயராற் கூறினார்; இப் பெயர், இறைவரது கோயில் நாயகரும், அவரால் முதல் உபதேசம் பெற்றவரும், நம் குரு மரபுக்கெல்லாம் முதற் குருவுமாக உள்ளமையால் திருநந்தி தேவருக்கு வழங்கலாயிற்று.

ஆர்வம் கூர்களி - ஆர்வம் மிகுதலினால் வரும் களிப்பு.

பந்தமும் வீடும் நீர் அருள் செய்யும்படி - தகுதிக்கேற்ப உயிர்களுக்குப் பிறவியும் வீடும் நீரே தருகின்ற முறைமைப்படி; " பந்தமு மாய்வீடு மாயினாருக்கு " " பந்தமும் வீடும் படைப்போன் காண்க " (திருவா); இவையே ஐந்தொழிற் பெருங் கூத்தை உணர்த்துவன; " பந்தம் வீடு தரும்பா மன்கழல் " (300) என இக்கருத்தையே முன்னரும் பரவையாரைப் பற்றிய நிலையினும் உரைத்தது காண்க. ஆண்டுரைத்தவை பார்க்க.

செய்யும்படி செய்தீர் - படி - உவம உருபு. உயிர்களுக்குப் பந்தமும் வீடும் தருவது போலவே என்பால் முன்னர்த் துன்பமும் இப்பொழுது அதினின்றும் விடுதி பெறும் இன்பமும் செய்தீர்; பந்தம் - துன்பம்; வீடு - இன்பம்; எல்லாம் உமது செயலே என்று போற்றிய நிலை.

இனி என்பால் இடர் என்? என்க; வினா, இன்மை குறித்தது. 373

3528. என்றடி வீழு நண்பர்தம் மன்புக் கெளிவந்தார்
" சென்றணை நீயச் சேயிழை பா"லென் றருள்செய்து
வென்றுயர் சேமேல் வீதி விடங்கப் பெருமாடம்
பொன்றிகழ் வாயிற் கோயில் புகுந்தார் புவிவாழ. ௩௭௪

(இ - ள்) என்றடி...எளிவந்தார் - முன் கூறியவாறு சொல்லித் தமது திருவடியில் வீழ்ந்த நண்பராகிய நம்பியினது அன்புக்கு எளிமையாய் வந்த இறைவர்; சென்றணை...அருள் செய்து - " நீ அந்தப் பரவையி னிடம் சென்று சேர்வாயாக " என்று அருளிச் செய்து; வீதிவிடங்கப் பெருமாள்தாம் - அந்த வீதிவிடங்கப் பெருமாளாகிய தியாகேசர்; வென்றுயர் சேமேல் - வெற்றி பொருந்திய மேன்மையுடைய இடபத்தின் மேலே எழுந்தருளி; பொன்திகழ்...புவிவாழ - பொன் விளங்கும் திருவாயிலினையுடைய தமது திருப் பூங்கோயிலினுள்ளே உலகம் வாழும்படி புகுந்தருளினார்.

(வி - ரை) என்று - முன் (3527) கூறியவாறு சொல்லி.

நண்பர் - நம்பிகள்; நண்பு - தோழமை; தோழமை பற்றியே தூது சென்றாதலின் அக்குறிப்புப்படக் கூறியவாறு; " உரிமையா லூர னேவ " (3518).

அச்சேயிழை - " என்னுயிர் காவா திடர்செய்யும் கொம்பனையாள் " (3526) என்று நீ கொண்ட அந்த என முன்னறிசுட்டு; நீ நம்மை விரும்பி வேண்டிய அந்த; உனக் கினியளாய் " முல்லை முகைவெண் ணகைப்பரவை " முன் கூறிய அந்த என்று உரைப்பனவுமாம்.

வேன்று உயர் சே - வெற்றியும் உயர்வும் பொருந்திய இடபம்; "சேவேந்து வெல்கொடியான்"; சே - இடபம்.

வீதிவிடங்கப் பெருமாள் - வீதியில் எழுந்தருளும் சுயம்பு; தியாகேசர்.

பொன் திகழ் வாயிற் கோயில் - பொன்னாற் பொலியச் செய்த திருவாயில்; பொன் - இலக்குமி என்று கொண்டு இலக்குமி வரங்கிடந்து விளக்கமுற்ற என்றலுமாம்; கோயில் - பூங்கோயில்.

புவி வாழப் புகுந்தார் - புவிவாழ்தல்-அத்திருக்கோயிலில் விளங்க வீற்றிருப்பதனால் அங்கு வந்தடையும் உயிர்கள் எல்லாம் உய்தி பெறுதல். 374

வேறு

3529. தம்பிரா னார்பின் சென்று தாழ்ந்தெழுந் தருளான் மீள்வார்
"எம்பிரான் வல்ல வா"றென் றெய்திய மகிழ்ச்சி யோடும்
வம்பலர் குழலார் செம்பொன் மாளிகை வாயி னோக்கி
நம்பியா ரூரர் காத னயந்தெழுந் தருளும் போது, ௩எரு

3530. முன்றுயி லுணர்ந்து சூழ்ந்த பரிசன மருங்கு மொய்ப்ப
மின்றிகழ் பொலம்பூ மாரி விண்ணவர் பொழிந்து வாழ்த்த
மன்றல்செய் மதுர சீத சீகரங் கொண்டு மந்தத்
தென்றலு மெதிர்கொண் டெய்துஞ் சேவக முன்பு காட்ட, ௩எசு

3531. மாலைதண் கலவைச் சேறு மான்மதச் சாந்து பொங்குங்
கோலநற் பசுங்கற் பூரங் குங்கும முதலா யுள்ள
சாலுமெய்க் கலன்கள் கூடச் சாத்தும்பூ ணுடை வர்க்கம்
பாலன பிறவு மேந்தும் பரிசன முன்பு செல்ல, ௩எஎ

3532. இவ்வகை யிவர்வந் தெய்த, வெய்திய விருப்பி னோடு
மைவளர் நெடுங்கண் ணாரு மாளிகை யடைய மன்னுஞ்
செய்வினை யலங்கா ரத்துச் சிறப்பணி பலவுஞ் செய்து
நெய்வளர் விளக்குத் தூப நிறைகுட நிரைத்துப் பின்னும், ௩எஅ

3533. பூமலி நறும்பொற் றாமம் புனைமணிக் கோவை நாற்றிக்
காமர்பொற் சுண்ணம் வீசிக் கமழ்நறுஞ் சாந்து நீவித்
தூமலர் வீதி சூழ்ந்த தோகையர் வாழ்த்தத் தாமும்
மாமணி வாயின் முன்பு வந்தெதி ரேற்று நின்றார். ௩எகூ

3529. (இ - ள்) தம்பிரானார்...மீள்வார் - தமது பெருமானாரின் பின்பு சிறிது தூரம் சென்று வழிவிட்டு வணங்கி எழுந்து அருள்விடை பெற்று மீள்வாராகி; எம்பிரான்...மகிழ்ச்சியோடும் - எமது பெருமானது "எல்லாம் வல்லவாறுதான் என்னே!" என்று, பொருந்திய மகிழ்ச்சியுடனே; வம்பலர்...எழுந்தருளும்போது - மணம் விரிகின்ற கூந்தலையுடைய பரவையாரது செம்பொன் விளங்கும் திருமாளிகையின் வாயிலை நோக்கி நம்பியாரூரர் காதலால் விரும்பி எழுந்தருளும்பொழுது, ௩எரு

3530. (இ - ள்) முன்...மொய்ப்ப - முன்னரே துயில் நீங்கி விழித்து எழுந்து சூழ்ந்த பரிசனங்கள் பக்கத்தில் நெருங்கிச் சூழ; மின்திகழ்...வாழ்த்த - ஒளியுடைய அழகிய தெய்வ மலர்மழையினைத் தேவர்கள் பொழிந்து வாழ்த்த;

மன்றல் செய்...முன்பு காட்ட - மணம் விளக்கும் இனிய குளிர்ந்த நீர்த் திவலைகளுடன் கூடி மெல்லிதாய்த் தென்றலும் எதிர்கொண்டு செல்லும் பணியை முன்னே செய்து வர, ௩௭௬

3531. (இ - ள்) மாலை...முதலாயுள்ள - மாலையும், குளிர்ச்சியுடைய கலவைக் குழம்பும், கத்தூரி கலந்த சந்தனமும், மிக்க அழகிய நல்ல பச்சைக் கற்பூரமும், குங்குமமும் முதலாக உள்ள ; சாலும்...செல்ல - திருமேனியிற் பொருந்தும் அணிகளும், ஒருங்கே தரிக்கும் பூணுடை வகைகளும், தகுதியுடைய பிறவும் ஆகிய இவற்றைத் (ஏந்தும்...செல்ல -) தாங்கிவரும் பரிசனங்கள் முன்னே போக, ௩௭௭

3532. (இ - ள்) இவ்வகை...எய்த-இவ்வாறாக இவர் வந்து சார; இதனிடையில்); எய்திய...செய்து- பொருந்திய விருப்பத்தினோடும் மைதீட்டிய நீண்ட கண்ணையுடைய பரவையாரும் மாளிகை முற்றிலும் நிலைபெற்ற செய்தொழிலால் மிகும் அலங்காரத்துக்குரிய சிறப்புடைய அணிகள் பலவற்றையும் செய்து; நெய்வளர்...நிரைத்து- நெய் நிறைந்த விளக்குக்களையும் தூபங்களையும் நீர்நிறைகுடங்களையும் வரிசைபெற அமைத்து; பின்னும் - அதன் மேலும், ௩௭௮

3533. (இ - ள்) பூமலி...நாற்றி - பூக்கள் பொலிந்த மணமுடைய அழகிய மாலைகளையும், மணிகள் புனைந்த கோவைகளையும் தொங்க வைத்து ; காமர்...நீவி - விருப்பம் தரும் பொற்சுண்ணத்தை வீசி மணமுடைய நறிய சந்தனத்தால் மெழுகி ; சூழ்ந்த தோகையர் வாழ்த்த - சுற்றிலுமுள்ள தமது தோழியர்கள் வாழ்த்துக்களைச் சொல்ல; தூமலர் வீதி - தூய்மையாகிய மலர்கள் நிறைந்த திருவீதியிலே ; மாமணி வாயில் முன்பு வந்து - பெரிய மணிகள் பொருந்திய திருவாயிலின் முன்பு வந்து ; தாமும் - (பரவையார்) தாமும் ; எதிர் ஏற்று நின்றார் - (நம்பிகளை) வரவேற்று நின்றனர். ௩௭௯

இவ்வைந்து பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3529. (வி - ரை) பின்சென்று...மீள்வார் - மரபின்படி சிறிது தூரம் பின்சென்று வழிவிட்டு வணங்கி விடைகொள்ளும் முறை ; முன் (3521) உரைத்தவை பார்க்க.

" எம்பிரான் வல்லவாறு !" என்று - இது நம்பிகளின் மனத்தின் அற்புத உணர்ச்சியின் எழுந்த எண்ணம். சிறிது போதினில் முன்முறை சென்றபோது " நாமே வேண்டவும் வெம்மைதான் சொல்லி மறுத்தாள் " (3506) என்று மீண்டருளியதும், பின்முறை " தாழ்குழல் செற்றந் தணிவித்தோம் " (3526) என்றதும் ஆகிய இந்த இரண்டு நிலைகளும் இவரையன்றி யில்லையாதலின் வல்லவாறு ! என்று அற்புதமடைந்த தன்மை. இதற்கு இவ்வாறன்றி, எம்பிரானது வல்லமையால் முடிவதாயிற்று - நிறைவேறிற்று - என்றுரைப்பர் முன் உரைகாரர் ; அவர் இது முடிந்ததென்பது அவாய்நிலையால் வந்ததென்றும், ஆறு - என்பதற்கு ஆற்றால் என மூன்றனுருபு விரித்தும் பொருள் கூறுவர்.

வம்பலர் குழலார் - " முருகலர் குழலாய் (3518) என்றதும், ஆண்டுரைத்தவையும் பார்க்க. மேலும் " வண்டுலாங் குழலார் " (3534) என்பதும் காண்க.

காதல் நயந்து - காதலால் விரும்பி ; நோக்கி - குறித்து. 375

3530. (வி - ரை) முன் துயிலுணர்ந்து சூழ்ந்த - முன் - நம்பிகள் துயிலுணர்தி எவு முன்னமே பரிசனத்தின் கடமைப்பாடுடைய நிலை குறித்தது.

துயிலுணர்தல் - விழித்தல்.

விண்ணவர் பூமாரி பொழிந்து வாழ்த்த என்க ; இது திருவருள் வெளிப்பாடு கண்டபோது தேவர்கள் செய்தல்.

மன்றல் சேர் - மணம் வீசும் ; சீகரம் - நீர்த்துவலை ; தென்றல் நீர்த்துவலையுடன் வீசிற்று ; நீர் கலத்தல் குளிர்ச்சியை மிகுதிப்படுத்தியது என்பது.

மந்தத் தென்றல் - மெல்லிதாய் வீசும் தென்றற் காற்று ; மந்தமாருதம் என்பர்.

எதிர்கொண்டு எய்தும் சேவகம் - நம்பிகளை எதிர்கொண்டு வந்து கவரி வீசி உபசரிப்பது போன்ற பணி ; எதிர் கொள்ளுதல் - தற்குறிப்பேற்றம் ; தென்றல் எதிர்கொண்டு - என்றதனால் நம்பிகள் தேவாசிரியனினின்றும் போந்து, வடக்கு நின்றும் தெற்கு நோக்கி எழுந்தருளினார் என்றும், பரவையார் திருமாளிகை தெற்குத் திருவாயிலின்றும் தெற்கே உள்ளதென்றும் கருத இடமுண்டு ; இந்நாளில் பரவையார் திருமாளிகை என்று வழங்கும் கோயிலும் இவ்வாறே அமைந்துள்ளதும் காண்க.

முன்பு - காலத்தாலும் இடத்தாலும் முன்பு.

காட்ட - நிலைமை புலப்படுத்த. 376

3531. (வி - ரை) கலவைச் சேறு - வாசனைப்பண்டம் சேர்த்துக் கலந்த குழம்பு. மான்மதச் சாந்து - கத்தூரியுடன் கூட்டிய சந்தனம்.

மெய்க்கலன்கள் - மெய்யில் அணிவன ; மெய்ப்பூச்சும் அணிகளும்.

ஆடைவர்க்கம் - உடைவகை ; ஆரவர்க்கம் என்பது பாடமாயின் முத்தாரம் முதலியன என்க. முன்னர் மாலை என்றது மலர்மாலைகளை.

பாலன - இவ்வகையைச் சார்ந்தன ; பிறவும் - தாம்பூலம் பழம் முதலியவை.

இவை முன்னமே பரவையார் மாளிகையில் செல்வதற்கு நம்பிகள் கொணர்ந்தவை. ஏந்தும் - ஏந்திச் செல்லும்.

பரிசனம் முன்பு செல்ல - பரிசனம் - முன்னர் நம்பிகளுடன் வந்தாரும், அன்று திருவாரூரில் அப்போது சேர்ந்தாரும். இவர்களுள் ஒரு கூனனும் ஒரு குருடனும் சார்ந்தமையும், அவ்வாறு சார்ந்து மாலை - தாம்பூலங்களை ஏந்திச் செல்லப்பெற்ற பேற்றினால் முறையே நம்பிகள் திருவருளால் கூன் நீங்கப்பெற்றும், கண் விழிக்கப் பெற்றும் நலம் பெற்றமையும் வரலாறுகளாம். இவை "திருவாரூரன் பொன்முடி மேல், ஏற்றுத் தொடையலு மின்னடைக் காயு மிடுதருமக், கோற்றொருத்து கூனனுங் கூன்போய்க் குருடனும் கண்பெற்றமை, சாற்றித் திரியும் பழமொழி யாமித் தரணியிலே" (திருவந்தாதி-48) என்றும், இதனைச் "சடையார் தூதுதருந் திருநாட் கூனுங் குருடுந் தீர்த்தேவல் கொள்வார் குலவு மலர்ப்பாதம், யானும் பரவித் தீர்க்கின்றே னேழு பிறப்பின் முடங்குகூன்" (3938 - கூற்றுவர் புரா- 9) என்றும் உரைத்தருளியவாற்றால் அறியப்படும்.

பாலினம்—என்பதும் பாடம். 377

3532. (வி - ரை) இவர் - நம்பிகள் பரிசனங்களை யுள்ளிட்ட இவர்கள் என்றலுமாம்.

எய்திய விருப்பினோடும்-நம்பிகளைக் "காதல் நயந்து" (3529) என்றதற் கேற்பப் பரவையாரை எய்திய விருப்பினோடும் என்றது இருபாலும் விருப்பம் மூண்ட நிலை குறித்தது.

மைவளர் நெடுங்கண்ணாரும் - முன்னர்ப் புலவியாற் சிவந்திருந்த கண்கள் இப்போது புலவி நீங்கியதனால், "கருங்குவளைச்செவ்வி யோடிக் கெழுமினவே"

(கோவை) என்றபடி, அது மாறிக் கண்ணோட்டமுடன் நீண்டன என்பது குறிப்பு. "பெருந்தடங் கண்ணி னாரும்" (3519) என்றதும், ஆண்டுரைத்தவையும் பார்க்க ; மைவளர் என்றது இப்பொழுது மையிட்டு அணி செய்யப்பட்டதென்ற குறிப்புமாம்.

அடைய - முற்றும்.

மன்னும்...சிறப்பணி - நிலைபெறச் செய்த கைபுனைந்த அலங்காரங்களைத் திருத்திச் சிறக்கச் செய்து ; இவை நிலையான அலங்காரங்களைச் சிறப்புக் காணக் கவின் செய்தல் ; இப்போது செய்யும் அலங்காரங்கள் மேற்பாட்டிற் கூறுவார்.

நெய்வளர் விளக்கு - நெய்விளக்குக்கள் குணம் மிகுந்தன ; தூபம் - வாசங் கமழ் புகை.

நிரைத்தல் - வரிசைபட அமைத்தல். 378

3533. (வி - ரை) பூ...தாமம் - பூமாலைகள் ; பொன் - அழகு ; நறுமை - மணம் ; தாமம் - பூமாலைகள் ; மணமலர் மாலைகள்.

மணிக்கோவை - மணிமாலைகள்; இவை வேறு.

நாற்றுதல் - அங்கங்கும் அளவு பெறத் தொங்க வைத்தல்.

பொற்சுண்ணம் - வாசனைப் பொடி ; வீசுதல் - பலவிடமும் பரவத் தூவுதல் ; நீவுதல் - மெழுகுதல் ; காமர் - விரும்பத்தக்க ; காமம் மருவும் என்பர் நச்சினார்க்கினியர்.

சூழ்ந்த தோகையர் - தோழியர் ; வாழ்த்தல் - பாராட்டுதல்.

தூமலர் வீதி வாயில் முன்பு - என்க ; வீதிவாயில் என்றது முன்வாயில் ; வீதி தோகையர் - அத்தெருவிலுள்ள பெண்கள் என்றுரைத்தனர் முன் உரைகாரர் ; தூமலர் வீதி - இப்பொழுது மலர்மாலைகளால் அணி செய்த வீதி ; தேவர்கள் பொழிந்த தெய்வ மலர்கள் (3530) நிறைந்த வீதி என்ற குறிப்புமாம்.

வாயில் முன்பு - வாயிலின் வெளிப்புறத்து; முதலில் இறைவர் வந்து அழைத்ததும், (மணிவாயில் - 3472) அப்போது மீண்டு அவர் போயினபின் தாம் வாயிலே பார்த்து அழிந்ததற் கிடமாகியதும் ஆகிய அத்திருவாயிலே இப்போது வரவேற்க நின்றது என்பது குறிப்பார் தூ மணி - என்ற இரண்டு அடைமொழிகளாற் சிறப்பித்தார்.

தாமும் - தோழியர்களுடனே தாமும் என எச்சவும்மை. புலந்திருந்த தாமும் எனச் சிறப்பும்மையுமாம்.

எதிர் ஏற்று நின்றார் - எதிர் வரவு ஏற்கும் நிலையில் நின்றனர். இருதிறமும் ஒரே காலத்தில் அன்பினா னிகழ்ந்த நிகழ்ச்சிகளைப் பிரிப்பின்றி ஒரு முடிபாகத் தொடர்ந்து இவ்வைந்து பாட்டுக்களாற் கூறிய நயமும், நான்காவது பாட்டில் இருவர் செய்கையும் சேரவைத்துக் கூறிய நயமும், புலவி தீர்ந்த பின்பு இருபாலும் அன்பு நிறைந்த நிலையின் நிகழ்ச்சிகளை இழுமென்னும் ஓசையின் வேறு யாப்பாற் றொடங்கிக் கூறிய நயமும், முன் கூறிய ஐஞ்சீர்க் கலிநிலைத்துறை விருத்தத்தினின்று இங்கு அறுசீர்க் கழிநெடில் விருத்தமாகத் தொடங்கிய நயமும் கவிநலங்களாம். 379

3534. வண்டுலாங் குழலார் முன்பு வன்றொண்டர் வந்து கூடக்
கண்டபோ துள்ளக் காதல் வெள்ளத்தின் கரைகா ணாது
கொண்டநா ணச்சங் கூர வணங்கவக் குரிசி லாருந்
தண்டளிர்ச் செங்கை பற்றிக் கொண்டுமா ளிகையுட் சேர்ந்தார்.

(இ - ள்) வண்டுலாம்...கூட-அவ்வாறு நின்ற, வண்டுகள் உலவுதற் கிடமாகிய கூந்தலையுடைய பரவையார் தமது முன்பு வன்றொண்டராகிய நம்பிகள் வந்து சேர; கண்டபோது...கரைகாணாது - கண்டபொழுது உள்ளத்திலே எழுந்த காதற் பெருக்கத்தின் எல்லை காணமாட்டாராகி; கொண்ட....வணங்க - மேற்கொண்ட நாணும் அச்சமும் மிகுதியாகப் பெருக அவரை வணங்க; அக்குரிசிலாரும்...சார்ந்தார் - அந்தப் பெருமையுடையாராகிய நம்பிகளும் அவரது குளிர்ந்த தளிர் போன்ற செவ்விய கையினைப் பற்றிக்கொண்டு திருமாளிகையினுள்ளே புகுந்தனர்.

(வி - ரை) வண்டுலாங் குழலார் - 3485 - 3529-பார்க்க.

வன்றொண்டர் - முன்னரும் இப்பெயாற் கூறிய குறிப்பும் நினைவு கூர்க. 3484 முதலியவை பார்க்க.

கண்டபோது - என்றது காட்சி காரணமாகிய நிகழ்ச்சியினையும், உள்ளக் காதல்...வணங்க - என்றது அதனால் விளைந்த அகநிகழ்ச்சியினையும் குறித்தன.

நாண் அச்சம் - பெண்மைக்கு இயல்பாகிய நாண் முதலிய நாற்குணங்களுள் இவை ஈண்டு வெளிப்பட்டன என்ற பொதுமைக் குறிப்பும், மூண்ட புலவியினால் தாம் செய்தவற்றையும் சொல்லியவற்றையும் எண்ணியதனால் நாணும், தமது நாயகராகிய தலைவர்பாலினும் இறைவர் பாலினும் செய்த அபசாரங்களை எண்ணியனுதல் அச்சமும் கொண்டனர் எனச் சிறப்புக் குறிப்பும் போந்தன; நாற்குணங்களுள் மடம் பயிர்ப்பு என்ற ஏனையவை இயைபின்மையின் இங்கு வெளிப்படாது நின்றன என்க. கொண்ட - நினைதலால் மேற்கொண்ட.

குரிசில் - பெருமையையுடையார்; புலவியாற் செய்தவற்றை மனங்கொள்ளாது அன்பு மிகுந்து போந்த நிலைக் குறிப்பு.

செங்கை பற்றிக்கொண்டு மாளிகையுட் சார்ந்தார் - இச்செயலே மனநிலையைப் புலப்படுத்திற்று என்க. அன்பின் முதிர்வு.

காதல் கரைகாணாது - ஊடலை மறந்து கூடற்கட் சென்ற மனநிலையாலாகியது என்பர் முன் உரைகாரர். 380

3535. இருவருந் தம்பி ரானார் தாமிடை யாடிச் செய்த
திருவருட் கருணை வெள்ளத் திறத்தினைப் போற்றிச் சிந்தை
மருவிய வின்ப வெள்ளத் தழுந்திய புணர்ச்சி வாய்ப்ப
ஒருவரு ளொருவர் மேவு நிலைமையி லுயிரொன் றானார். ௩௮௧

(இ - ள்) இருவரும்...போற்றி - (நம்பிகளும் பரவையாரும் ஆகிய) இருவரும் தமது பெருமானார் தாம் இருவரினிடையே போந்து தம்பாற் செய்த திருவருட் கருணைப் பெருக்கினது திறத்தைத் துதித்து; சிந்தை...வாய்ப்ப - மனத்துள்ளே பொருந்திய இன்பப் பெருக்கினுள்ளே அழுந்திய ஒன்றிய நிலை சார்தலினாலே; ஒருவருள்...ஒன்றானார் - ஒருவருள்ளே ஒருவர் பொருந்தும் நிலைமையில் இருவர்களும் கூடி உயிர் ஒன்றாக ஆயினர்.

(வி - ரை) இடையாடி - இருவர்பாலும் இங்குமங்குமாகச் சென்று பிணக்கு நீங்கச் செய்த; "நடுவிடையாடி" (1643)

திருவருட் கருணை வெள்ளத்திறம் - அருள் - கருணை - ஒரு பொருளன; அருள்- எல்லா உயிர்களின் மேலும் செல்வது; கருணை - அது கூர்ந்து சிறப்பிற் புலப்பட வருவது; "அருள் வித்திட்டுக் கருணைநீர் பாய்ச்சி" (குமரகுரு); வெள்ளம்-பெருக்கு;

திறம் - இருவர்பாலும் தனித்தனி சென்றது இருவரையும் கூட்டும் ஒரே நிலை பற்றியாகலின் திறம் - என ஒருமையாற் கூறினர்.

போற்றி - கூடல் நீங்கிச் சேர்ந்த நிலையில் முதற்கண் நிகழ்ந்தது இறைவர் அருளைப் போற்றுதலேயாம்; இஃது அடிமைத்திறம் பூண்ட அன்பினில் ஊறித் தம் வசமற்ற வாழ்க்கையுடையாரிடமே யன்றிப் பிறர்பாலியலாதென்க.

சிந்தை...வாய்ப்ப - இன்பவெள்ளத் தழுந்திய - மனநிலையே தாமாக அதனுள் மூழ்கிய ; புணர்ச்சி - உள்ளக் கலப்பு.

அழுந்திய - மூழ்கும்படி என்பர் முன்உரைகாரர்.

வாய்ப்ப - வாய்த்தலால்.

ஒருவருள்...உயிர் ஒன்றனர் - இவர் நிலையினுள் அவரும் அவர் நிலையினுள் இவருமாக ஒன்றுதல்; ஒன்றுதல் - இரண்டறுதல் ; "ஒன்றி யிருந்து நினைமின்கள்" (தேவா); உயிர் ஒன்றுதல் - ஆன்மநேயக் கலப்பு ; "ஒருவரொருவரிற் கலந்த வுணர்வால்" (3484) "அன்பு பெருகத் தழுவவிரைந் தவரு மார்வத் தொடுதழுவ, வின்ப வெள்ளத் திடைநின்று மேற மாட்டா தலைவர்போல், என்பு முருகி யுயிரொன்றி யுடம்பு மொன்று மெனவிசைந்தார்" (3812 - கழறிற் - 65) ; "சேரர் பெருமா னெதிர்சென்று, தலைநாட் கமலப் போதனைய சரணம் பணியத் தாவில் பல, கலைநாட் டமுத வாரூரர் தாமுந் தொழுது கலந்தனரால்" (4247 - வெள். சருக். 19); "சிந்தை மகிழுஞ் சேரலனர் திருவா ரூர ரெனுமவர்கள், தந்த மணிமேனிகள்வேறு மெனினு மொன்றுந் தன்மையராய், முந்த வெழுங்கா தலிற்றெருழுது முயங்கி" (4248 - ஷை 20) என்ற நிலைகளில் இக்கருத்தை ஆசிரியர் நன்கு விளக்குதல் காண்க. ஈண்டு இவ்வாற்றான் ஒருமைப் படுத்திக் கூறிய தன்மை தெய்வ அருட் கவியின் பெருமித மாட்சி என்க. "பன்னாளும் பயில்யோகம் பரம்பரையின் விரும்பினர்" "சாரு விந்தமலர், சென்னியிலுஞ் சிந்தையிலு மலர்வித்து... மின்னிடையா ளுடன்கூடி விளையாடிச் செல்கின்றார்" (328) என்ற அளவில் முன்னருங் கூறி யமைந்த அருட்கவி மாட்சிமையும் ஈண்டு வைத்துக் கண்டு கொள்க. "காகத் திருகண்ணிற் கொன்றே மணிகலந் தாங்கிருவ, ராகத்து ளோருயிர் கண்டனம்" (திருக்கோவை - 71) என்ற கருத்து ஈண்டு வைத்து சிந்திக்கத் தக்கது. 381

3536\. ஆரணக் கமலக் கோயின் மேவிப்புற் றிடங்கொண் டாண்ட
நீரணி வேணி யாரை நிரந்தரம் பணிந்து போற்றிப்
பாரணி விளக்குஞ் செஞ்சொற் பதிகமா லைகளுஞ் சாத்தித்
தாரணி மணிப்பூண் மார்பர் தாமகிழ்ந் திருந்த நாளில், ௩அ௨

3537\. நம்பியா ரூரர் நெஞ்சி னடுக்கமொன் றின்றி நின்று
தம்பிரா னாரைத் தூது தையல்பால் விட்டா" ரென்னும்
இம்பரின் மிக்க வார்த்தை யேயர்கோ னார்தாங் கேட்டு
வெம்பினு ; ரதிச யித்தார் ; வெருவினர் ; விளம்ப லுற்றார், ௩அ௩

3538\. "நாயனை யடியா னேவுங் காரிய நன்று ! சால
ஏயுமென் றிதனைச் செய்தான் றொண்டனு ! மென்னே ? பாவம் !
பேயனேன் பொறுக்க வொண்ணாப் பிழையினைச் செவியாற் கேட்ப
தாயின பின்னு மாயா திருந்ததென் னாவி !" யென்பார், ௩அ௪

3539. "காரிகை தன்பாற் செல்லுங் காதலா லொருவ னேவப்
பாரிடை நடந்து செய்ய பாததா மரைக ணோவத்
தேரணி வீதி யூடு செல்வது வருவ தாகி
ஓரிர வெல்லாந் தூதுக் குழல்வா மொருவ!" ரென்று, நடுகு

3540. "நம்பர்தா மடிமை யாற்றா ராகியே நண்ணி னாரேல்
உம்பரார் கோனு மாலு மயனுநே ருணர வொண்ணா
எம்பிரா னிசைந்தா லேவப் பெறுவதே! யிதனுக் குள்ளங்
கம்பியா தவனை யான்முன் காணுநா ளெங்ஙா?" னென்று, நடுசு

3541. "அரிவைகா ரணத்தி னாலே யாளுடைப் பரமர் தம்மை
இரவினிற் றூது போக வேவியங் கிருந்தான் றன்னை
வரவெதிர் காண்பே னாகில் வருவதென் னாங்கொ?" லென்று
விரவிய செற்றம் பற்றி விள்ளுமுள் ளத்த ராகி, நடுஎ

3542. ஈறிலாப் புகழி னேங்கு மேயர்கோ னார்த மெண்ணப்
பேறிது பெற்றார் கேட்டுப் பிழையுடன் படுவா ராகி
வேறினி யிதற்குத் தீர்வு வேண்டுவார் விரிபூங் கொன்றை
ஆறிடு சடைய னாருக் கதனைவிண் ணப்பஞ் செய்து, நடுஅ

3543. நாடொறும் பணிந்து போற்ற நாதரு மதனை நோக்கி
நீடிய தொண்டர் தம்மு ளிருவரு மேவு நீர்மை
கூடுதல் புரிவா ரேயர் குரிசிலார் தம்பால் மேனி
வாடுறு சூலை தன்னை யருளினார் வருந்து மாற்றால். நடுகூ

3536. (இ - ள்) ஆரண...போற்றி - வேதமூலம் வெளிப்படும் பூங்கோயி லின் கண்ணே பொருந்திப் புற்றினை இடமாகக் கொண்டு ஆட்சிபுரியும், கங்கையை அணிந்த சடையாரை இடைவிடாது வணங்கித் துதித்து; பார்...சாத்தி - உல கத்தை அழகு விளங்கச் செய்யும் திருப்பதிகங்களாகிய மாலைகளையும் சாத்தி; தாரணி ...நாளில் - தாமரை மலர் மாலையினை அணிந்த மணியாரங்களைப் பூண்ட மார்பினை யுடைய நம்பிகள் தாம் மகிழ்ச்சியுடனே அங்கு வீற்றிருந்த நாட்களில், நடுஅஉ

3537. (இ - ள்) நம்பியாரூரர்...விட்டார் என்னும் - ஆரூராகிய நம்பிகள் சிறிதும் மனநடுங்காமல் அச்சமின்றி நின்று தமது பெருமானாரை ஒரு பெண்ணிடத் துத் தூது விட்டார் என்கின்ற; இம்பரின் மிக்க வார்த்தை - இவ்வுலகிலே பரந்த பழிச் சொல்லை; ஏயர்கோனார்தாம்...விளம்பலுற்றார் - ஏயர்கோன் கலிக்காமனார் தாம் கேட்டு மனம் புழுங்கினார்; அதிசயப் பட்டார்; அச்சங்கொண்டார்; மேல் வருமாறு சொல்லத் தொடங்கினார், நடுஅந

3538. (இ - ள்) நாயனே...நன்று - தலைவனை அடியவன் ஏவுதல் செய்யும் தொழில் மிக நன்று!; சால...தொண்டனும் - மிகப் பொருத்தமாவதென்று இக் காரியத்தைத் துணிந்து செய்பவனும் ஒரு தொண்டன் எனப்படுவானும்!; என்னே பாவம் - இது என்ன பாவம்; பேயனேன்...ஆவி என்பார் - நான் பேயேனாதலின் பொறுக்க வொண்ணாததாகிய இப்பெரும் பிழையினைக் காதினாற் கேட்க நேர்ந்த பின்பும் எனது உயிர் நீங்காது இருந்தது என்பாராகி, நடுஅச

3539. (இ - ள்) ஒரு பெண்ணினிடத்துச் சாரும் காதல் காரணமாக ஒருவன் ஏவியதனால் அதற்குட்பட்டு நிலத்தின் மேல் நடந்து சென்று செம்மையாகிய திருவடித் தாமரைகள் நோம்படி, தேர் செல்லும் அணிவீதியின் வழியே போவதும் வருவதுமாகி ஒரு இரவு முழுமையும் ஒப்பற்றஆண்டவர் தூதாக உழல்வாராம் ! என்று கூறி, ௩.அ௫

3540. (இ - ள்) நம்பர்...நண்ணினரேல் - இறைவர் தாம் அடியார் தன்பம் பொறுது எழுந்தருளி வந்தாராகில் ; உம்பரார் கோனும்...ஏவப் பெறுவதே - தேவராசனாகிய இந்திரனும் விட்டுணுவும் பிரமனும் நேர் உணரவும் இயலாதவராகிய எமது பெருமான் அவ்வாறிசைந்து வந்தாலும் ஏவுதல் செய்யலாமோ ? ; இதனுக்கு ...எந்நாள் என்று - இப்பாவச் செயலுக்கு மனநடுங்காதவனை என் முன்னே காணும் நாளும் எந்நாளோ ? என்று சொல்லி ; ௩.அ௬

3541. (இ - ள்) " அரிவை...என்னுங் கொல் " என்று - பெண்ணின் பொருட்டு ஆளுடைய பரமசிவனை இரவிலே தூது செல்லும்படி ஏவி அங்கே இருந்தவனை என் எதிர்வரக் காண்பேனாகில் என்ன விளைந்துவிடுமோ ? என்று ; விரவிய... உள்ளத்தராகி - மூண்ட சினத்தினாலே வெடிப்பது போன்று விம்மும் உள்ளத்தினையுடையாராகி; ௩.அ௭

3542. (இ - ள்) ஈறிலா...கேட்டு - எல்லையில்லாத புகழுடனே ஓங்கும் ஏயர்கோன் கலிக்காமனாருடைய இவ்வாறு எண்ணப்படுவதாகிய இப்பேற்றினைத் தமக்குரிமையாகப் பெற்ற நம்பிகள் இதனைக் கேட்டு; பிழை உடன்படுவாராகி - தாம் செய்தது பிழை என்று உடன்படுவாராய் ; வேறு இனி...வேண்டுவார் - இனி இதற்கு வேறாகத் தீர்வுதன்னை வேண்டுவாராய்; விரிபூங் கொன்றை...விண்ணப்பஞ் செய்து - விரிந்த அழகிய கொன்றையினையும் கங்கையினையும் அணிந்து கொண்ட சடையினையுடைய சிவபெருமானிடம் அதனை விண்ணப்பம் செய்து, ௩.அ௮

3543. (இ - ள்) நாடொறும் பணிந்து போற்ற - நாள்தோறும் வணங்கித் துதிக்க ; நாதரும்...புரிவார் - இறைவரும் அதனைத் திருவுளங் கொண்டு அன்பினால் நீடிய தொண்டர்களிருவரும் தம்முள் நண்பு பூண்டு பொருந்தும் நீர்மையினைக் கூடுமாறு அருள்செய்வாராய் ; ஏயர் குரிசிலார்...வருந்துமாற்றால் - ஏயர்கோனார் பால் அவர் திருமேனி வாடும்படி வருந்தச் செய்யும் வழியினாலே சூலை நோயினை அருளிச்செய்தனர். ௩.அ௯

இவ் வெட்டுப்பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3526. (வி - ரை) ஆரணக் கமலக் கோயில் - ஆரணம் - வேதம். " வேத மூலம் வெளிப்படு மேதினிக், காதன் மங்கை யிதய கமலமாம் " (43) என்ற கருத்து ; ஆண்டுரைத்தவை பார்க்க.

கமலக் கோயில் - பூங்கோயில் ; வேதம் புகழும் கமலாலயம் என்பர் முன் உரைகாரர்.

ஆண்ட - ஆட்சிபுரிகின்ற ; " ஆரூராண்ட அயிரா வணமே " (தேவா).

நிரந்தரம் - பணிந்து போற்றி - சாத்தி - எப்போதும்; வழிபடுங் காலமெல்லாம்; முன்னரும் " தன்னையா ளுடையபிரான் சரணார விந்தமலர், சென்னியினுஞ் சிந்தையினு மலர்வித்து...சாத்தி " (328) என்ற நிலை காண்க.

நாளில் - அக்காலத்தில் மேல்வரும் நிகழ்ச்சிகள் நிகழ்ந்தன ; அவையாவன ; என்க.

3537. (வி - ரை) நெஞ்சில் நடுக்கம் ஒன்று இன்றி - நெஞ்சில் நடுக்கமாவது செய்யத் தகாத செயல் செய்தலில் மனம் துணியாது நடுங்குதல். தீவினையஞ்சுத லால் வருவது; ஒன்று - ஒன்றும் - ஒரு சிறிதும் என்னும் பொருளில் வந்தது. முற்றும்மை தொக்கது.

தம்பிரானாரைத் தூது தையல்பால் விட்டார் என்னும் இம்பரின் மிக்கவார்த்தை- தம்பிரானாரை அடியார் தூது விட்டமை ஒரு பிழை; அதுவும் தையல்பால் விட் டார் என்பது மற்றொரு பெரும்பிழை என்பார், தூது தையல்பால் என மாற்றி உரைத்தார்; இதனை மேல் இரண்டு பாட்டுக்களிற் பிரித்து விரித்தல் காண்க. இம்பரின் மிக்க வார்த்தை - இவ்வுலகில் மிகுந்த பழிச்சொல். மிக்க - பழிப்பால் மிகுந்த; "பழியும் புகழும் பெருக்கில் பெருகும்" (கோவை) என்றபடி பழிச் சொல் இவ்வுலகில் விரைவிற் பரவும் தன்மையுடையது என்பது குறிப்பு.

வெம்பினார்...அதிசயித்தார் - வெருவினார் - வெம்புதல் - இத்தகைய தகாத செய லும் செய்யலாமோ என மனம் வெதும்புதல் - புழுங்குதல் - மிக்க சினங் கொள்ளு தல்; அதிசயித்தல் - இன்றளவும் கேட்டுமறியாததென்று வியப்பு அடைதல்; வெரு வுதல் - இது நினைத்தற்கும் கேட்டற்கும் ஒண்ணாததென அஞ்சுதல்; வெரு - சடுதி யில் நேரும் அச்சம். "வெருக் கொண்டாற் போலழுவர் குறிப்பயலாய்" (1953). (1) தையல்பால் தூது விட்டமை பற்றி அச்சமும், (2) அடியான் சொற்படி ஆண் டான் சென்றமை பற்றி அதிசயமும், (3) ஆண்டானை அடியான் ஏவியது பற்றி அச்சமும் கொண்டார்.

விளம்பலுற்றார் - மேல் வருமாறு சொல்லத் தொடங்கினாராகி. 383

3538. (வி - ரை) நாயன் - தலைவர்; எசமானர்.

நன்று - இழிவுக் குறிப்புத் தந்து நின்ற பழிச்சொல்; நன்று - தீது என மறு தலைப் பொருள் தந்து நின்றது; காரியம் - செயல் என்ற பொருளில் வந்தது.

சால ஏயும் என்று - மிகவும் பொருத்தமுடையதென்று கொண்டு; எண்ணி; ஏய் தல் - பொருந்துதல். சால நன்று - மிக நன்று என்பதுமொன்று.

தோண்டனாம் - ஆம்-சினத்தினால் எதிர்மறைப்பொருளில் வரும் வியப்புக் குறிக் கும் இடைச்சொல்; "விறலில் மேதகு மவுணராம் வலியிலார் மிகவும், வறிய ராகிய தேவரா மேலவர்" என்ற கந்தபுராணம் காண்க. ஆம் - தகுதியின்மைப் பொருள் தரும் இடைச் சொல்லுமாம்.

என்னே பாவம் - இஃது எத்தனை பெரும் பாவச் செயல்.

பேயனேன்...ஆவி - பேயனேன் - பேய்த் தன்மை யுடையேன்; பேய்த் தன்மையாவது மெய்யுணர்ச்சியின்றி வெறுவியதாத் திரிதல்; "பித்தனேன் பேதையேன் பேயே னாயேன் பிழைத்தனகள்" (தேவா); கேட்கவுந் தகாத பெரும் பிழையாகிய சிவாபராதத்தைக் கேட்ட பின்னும் உயிர் போகாது உடல் தாங்கி நிற்றல் இங்குப் பேய்த்தன்மையாகிய மெய்யுணர்ச்சியின்மை எனப்பட்டது. இத னைப் பொறுக்கவொண்ணா...ஆவி ஆதலின் பேயனேன் எனக் காரணப் பொருள்பட மேற்றொடர்ந்து கூறுதல் காண்க.

பொறுக்க வொண்ணா - தீர்வு தேடாது உடல் தாங்கலாகாத; பொறுத்தல் - உடல் தாங்குதல்.

பின்னும் - உம்மை இழிவு சிறப்பு.

கேட்பதாயின பின்னும் என் ஆவி மாயாதிருந்தது - என்க. தகாத கேள்வி கேட்ட மாத்திரையில் உயிர் போதல் தலையன்பின் திறம்; இதனால் தலையன்

பின்மை தெரிந்தமையால் பேயனேன் என்றார் ; இருந்தது - என் ஆவி - எழுவாய் பின் வந்தது இழிவு மிகுதிக்கண் வந்த விரைவுக் குறிப்பு. உயிர் மாயாது தாழ்த்திருந்த தாமத நிலை குறிப்பார் கேட்ட என்றொழியாது செவியாற் கேட்பதாயின என்று நீட்டித்தார். "கண்டு இங்குநின் றங்குவந் தத்துணையும் பகர்ந்த" என்ற திருக்கோவையாரின் குறிப்புப் போல. கேட்பது - கேட்பதென்பது.

ஆயினபின்னும் - நேர்ந்த பிறகும் ; செவியால் என்பது வேண்டாது கூற லாகிய விதப்பு மொழி ; இச்செவி இக் கொடுமொழியைக் கேட்க என்ன தீவினை செய்ததோ என்ற குறிப்புப்பட நின்றது ; "விதப்புக் கிளவி வேண்டியது விளைக்கும்" ; "வழுக்கியும் வாயாற் சொலல்" என்றாற்போல ; இருந்தது - இருந்ததே என்க ; என்பார் - என்று வருந்திக் கூறுவாராகி. 384

3539. (வி - ரை) ஏவ - ஏவியதனாலே.

காரிகை...காதலால் - பெண்ணிடத்துச் சாரு மாசையால் என இழிவுக் குறிப்பும், ஒருவன் - என இகழ்ச்சிக் குறிப்பும் படக் கூறியதாம். காதலால் - ஏவ - பெண்ணிடம் சாரும் ஆசையால் மயங்கி விதி விலக்குக் கடந்து ஏவ என்பதாம்.

நோவ - நடந்து - செல்வதும் - வருவதும் ஆகி - என்க ; அருமைபட இரங்கிக் கூறியதாம். பாத தாமரை - தாமரை போன்ற பாதம் ; தாமரை மலருக்காயிற்று.

தேரணி வீதியூடு - தேரிலும் ஏனைய அயிராவணம், இடபம் முதலிய ஊர்திகளிலும் ஊர்ந்து செல்வதன்றி இறைவரைநிலமுறநடந்து செல்லக் கண்டறியாத வீதியில் என்பது குறிப்பு. தேரோடுகின்ற அழகிய திருவீதி; "ஆழித்தேர் வித்தகன்"(தேவா).

ஒருவர் ஓர் இரவெல்லாம் உழல்வராம் - என்க ; ஒருவர் - ஒப்பற்றவர் என்ற அருமைப்பாடு ; முன் ஒருவன் என்றும், இங்கு ஒருவர் என்றும் கூறும் வேற்றுமை கண்டு கொள்க.

உழல்வராம் - ஒருவன் ஏவ - ஒருவர் - நடந்து - இரவெல்லாம் உழல்வாராம்; இதுவும் செய்யத் தகுந்ததொரு காரியமாமோ! என்று செற்றமும் பரிவும் பற்றி அச் செயலைப் பன்னிப் பன்னிக் கூறியது.

ஓர் இரவெல்லாம்-என்றது கால நீட்டிப்பையும், வீதியூடு-என்றது இடநீட்டிப்பையும், பாத தாமரை நோவ நடந்து - என்றது முயற்சி நீட்டிப்பையும், செல்வது வருவதாகித் தூதுக்கு உழல்வதாம் - என்றது செயல் நீட்டிப்பையும் செயலின் தாழ்வு நீட்டிப்பையும் குறிப்பாலுணர்த்தின. 385

3540. (வி - ரை) அடிமை ஆற்றாரேயே - தாம் அடிமை நெறியினில் நின்று ஒழுகிக் காட்டுபவராகியே ; ஆறு - நெறி என்றலுமாம். அடிமையற்றாரேயே - என்பது பாடமாயின் தாழ்வாகிய இச்சிறு வேலையைத் தானும் ஏவிச் செய்விப்பதற்குரிய அடிமைகள் ஒருவரும் தமக்கு இல்லாது தாமே போந்தாராலும் என்றுரைக்க. நம்பர் தமக்கு அடிமை செய்வாராக வேறு அடிமையற்றுப் போய்த் தாம் இவ்வாறு இகழ்வு செய்தேனும் இவ்வடியவனைப் பெறவேண்டு நிலையினில் வந்தாராயினும் என்றலுமாம் ; ஆறு - வழி.

இசைந்தால் - பெருங் கருணையினால் இசைந்தாலும் என்க. சிறப்பும்மை தொக்கது.

ஏவப் பெறுவதே ? - ஏகாரம் வினா ; ஏவப் பெறுவது தக்கதன்று என எதிர் மறைப் பொருள் தந்தது. ஏவப்பெறுதல் - ஒரு சொல்.

இதனுக்கு...எந்நாள் - இப்பெரும் பிழையைச் செய்ய மன நடுங்காதவனைத் தாணுவதும் ஒரு நாளோ ?

கோனும் மாலும் அயனும் - எண்ணும்மைகள். சிறப்பு முணர்த்தின.

உள்ளங் கம்பியாதவன் - ஏனை எவர்களுக்கும் மன நடுங்கும் இச்செயலைச் சிறிதும் நடுங்காது செய்தவன்.

முன் - கண்ணுற் காணும்படி; "தீயாரைக் காண்பதுவும் தீது" என்பாராகலின் அவ்வாறாகிய பெருந்தீங்கு என்பார் கண்ணுநாள் - என்றார். 386

3541 (வி - ரை) அரிவை காரணத்தினாலே - இகழ்ச்சிக்குறிப்புப்படக் கூறியது. முன்னும் (3539) கூறியது காண்க. அரிவை - பெண்ணின் ஊடல்தீர்க்கும் என்க.

ஏவி அங்கு இருந்தான் - ஏவி அதன் பின்னும் உயிர் தாங்கியிருந்தான் என்றதும் குறிப்பு; ஏவியபின், வீதியில் அவர் நடக்கவும் தான் இருந்த விடத்தே சுகமாய் இருக்கவும் உள்ளவன் என்பதும் குறிப்பு. அங்கு - பரவையார் மாளிகையில் என்றலுமாம்.

இரவினில் - உலகியல் ஏவலாளரும் தொழில் செய்யாத இரவினில் ஏவி.

வரவெதிர்...என்னுங்கொல் - எதிர் வரக் காண்பேனாகில் என்க; எதிர்வர - தாம் அவரைக் காணச் செல்வதில்லை யாயினும் அவரே வரக்கண்டால் என்க. இருந்தான் - இருந்தவன் - வினைப்பெயர்; அவரது பெயராற் கூறாது இவ்வாறு கூறியது செற்றம்பற்றி; அங்கு இருந்தானை இங்கு வர என்க; விதிவசத்தாற் காண நேரின் என்க. எதிர் - என் கண்ணெதிர்; வருவது - விளைவது; கோல் ஐயப் பொருள் தரும் இடைச் சொல். என்னுங்கோல் - வினை என்ன கொலைப்பழி விளையுமோ; என்ற நயங்குறித்தது. சிவாபராதத்தினைக் கண்டபோது அது செய்தாரைக் கொல்லுதலும், அது கூடாத போது தாம் இறந்து படுதலும், அல்லது அவ்விடம் விட்டகலுதலும் செய்க என்பது விதியாதலின் இவற்றுள் எது செய்ய நேருமோ என்பார் என்னும் கோல் என்றார். கோல் - (ஏவல்) கொல்லுதலே துணியத்தக்கது என்ற குறிப்புப்பட நிற்றல் காண்க; யாரைக் கொல்வது என்ற செயப்படுபொருள் வெளிப்படாமையின் தம்மையே கொல்க என்ற உட்குறிப்பும் கொண்டது. பிற் சரித விளைவில், நம்பிகளே எதிர் வரவும், அதனைக் காண்பதற்கு முன் கலிக்காமனார் தம்மையே கொலைசெய்து கொள்வதும் ஆகிய நிகழ்ச்சிகளின் முற் குறிப்பும் காண்க. தூய அன்பின் விளைந்தெழுபவை மெய்த்திருவாக்குக்களாகப் பின்னர்ப் பலிப்பது நியதி.

விரவிய செற்றம் - பொருந்தத் தக்க; தகாத சினமே விலக்கத் தக்கது; இஃது அவ்வாறன்றி அன்பின் பெருக்காற் பொருந்த வருவது என்பதாம்; விரவுதல் - பொருந்துதல்; செற்றம் - செறுத்தலினை உட்கொண்டு பின்னர் விளைவிக்கும் நிலைக் குறிப்பு.

விள்ளும் உள்ளம் - விள்ளுதல்-பிளந்து வேறுபடுதல்; உள்ளே மூண்டெழுதல்; உள்ளத்தராகி - ஒங்கும் - என வரும்பாட்டுடன் முடிக்க. விள்ளுதல் - சொல்லுதல் என்று கொண்டு, மனமானது உள்ளே நின்று கூற என்றலுமாம். உள்ளம் என்ற குறிப்புமது. 387

3542. (வி - ரை) ஊறு இலாப் புகழினோங்கும் - புகழ் - விள்ளும் உள்ள முடைமையே புகழ் எனப்பட்டது.

ஓங்கும் - என்றது இப்புகழினால் அதுவே ஆறாக அந்நம்பிகளுக்கு நண்பருமாகும் பெருமையினை இனிப் பெற நிற்பது குறித்தது; "தூதுவிட்டவர்க்கே நண்பாம் வள்ளலார்" (3563) என்று ஆசிரியர் இதனை அவரது புகழின் சிறப்பாக எடுத்து முடித்து வடித்துக் காட்டி யருளுதல் காண்க.

எண்ணப்பேறு - எண்ண வருவதாகிய பேறு; செற்றம் பற்றிய நிலையே பேரு கும் என்பதாம். பெரியோர்களது திருவுள்ளத்தினுள் எவ்வாறேயாயினும் எண்ணம் வரப் பெறுதலே ஒருவருக்குச் சிறந்த பாக்கியம் என்பதும், அதுவே அவனுக்குத் திருந்தும் வழி தருவதாகும் என்பதும் மூதறிஞர் துணிபு ; "கூவிப் பணிகொள்ளாது ஒறுத்தா லொன்றும் போதுமே" (திருவா) ;

பேறிது பெற்றார் - நம்பிகள் ; கலிக்காமனார் செற்றம் பற்றி எண்ணியதனைப் பேறெனக் கொண்ட பெருமை வாய்ந்தவராதலின் அவ்வாற்றாற் கூறினர்.

பிழை உடன் படுவாராகி - தாம் செய்தது பிழை என்பதனை உடன்பட்டு ஒப்புக்கொள்வாராகி; நம்பிகளது இப்பெருந்தன்மை உலகுக்கு வழிகாட்டி நிற்பதாம். இது கண்டு தக ஒழுகினால் மக்கள் நலம் பெறுவர் என்பது துணிபு.

இனி இதற்கு வேறு தீர்வு - என்க ; தீர்வு - கழுவாய் ; பிராயச்சித்தம் என்பது வடமொழி வழக்கு ; இனி - ஈங்கு நிகழ்ந்து விட்டமையான் மேற்செய்யக் கடவது என்பதாம். வேறு தீர்வு - சிவாபராத மாதலின் ஏனைய பழிகள் போலன்றித் தனித்திறம் படைத்த பெருங் கழுவாய் வேண்டப்படுவதென்றபடி. இதற்கு - சிவா பாரதத்துக்கு - கலிக்காமனாரது ; செற்றத்துக்கு என்றலுமாம்.

வேண்டுவார் - வேண்டுவாராகி ; முற்றெச்சம்.

விரிபூ...விண்ணப்பஞ் செய்து - இறைவரால் ஆளாகக் கொள்ளப்பட்டாராத லின் தாம் வேண்டுவனவற்றை யெல்லாம் அவர்பால் விண்ணப்பித்தே பெறும் நியமம் குறித்தது ; அன்றியும் சிவாபராதத்துக்கு அவனருளே யன்றி வேறு கழு வாய் நூல்களுள் வகுக்கப்படாமையின் சடையார்பால் விண்ணப்பித்தனர் என்றலு மாம் ; சடையார் - பிழைத்தாரையும் பொறுத்தற்கிடமாகிய சடை என்றது குறிப்பு.

விண்ணப்பஞ் செய்து - போற்ற - என வரும்பாட்டுடன் முடிக்க. 388

3543. (வி - ரை) நாடோறும் பணிந்து போற்ற - முன் கூறியவாறு விண் ணப்பித்துத் துதிக்க ; ஆன்மார்த்த பூசையில் ஆளுடையார்பால் வேண்டுவன வற்றை விண்ணப்பிக்கலாமென்றும், ஒன்றும்வேண்டாது பூசித்துப்பூசையின் பலனை யும் அவர் பாலே அர்ப்பணம் செய்தல் வேண்டுமென்றும் இவ்வாறு இரண்டு மரபுக ளுண்டு. இவை காமியம், நிட்காமியம் எனப்படுவன. சிவபூசையில் இலயாங்கம் போகாங்கம் என்றவற்றுள், இலயாங்க பூசை என்ற பகுதியின் இறுதியில், "வேண் டுவனவற்றை விண்ணப்பிக்க" என்று சிவாகமங்கள் விதிக்கின்றன. அம்முறை பற்றி நாள்தோறும் நம்பிகள் தம் ஆளுடையாராகிய ஆரூர்ப் பெருமானிடம் விண்ணப் பித்துப் போற்றினர் என்க. திலகவதியம்மையார் தமது தம்பியாராகிய மருணீக் கியார் பொருட்டுச் "சுடரொளியைத் தொழுதென்னை, ஆண்டருளி னீராகி லடி யேன்பின் வந்தவனை, ஈண்டுவினைப் பரசமயக் குழிநின்று மெடுத்தருள, வேண்டு மெனப் பலமுறையும் விண்ணப்பஞ் செய்தனர்." (1311) என்ற வரலாறு இங்கு நினைவு கூர்தற்பாலது.

நாடோறும் - இவ்வாறு ஒரு நாளன்றிப் பல நாளும் இடை விடாது என்க.

நாதனும் - அதனை நோக்கி - நோக்கி - திருஉள்ளத்திற் கொண்டு ஆளும்கருணை கூர்ந்து ; நோக்குதல் - அதனுள் ஊன்றிக் கருதுதல்.

நீடிய - அன்பினால் நீடிய; பழமையால் நீடிய என்றலுமாம் ; அன்பினால் நீடுத லாவது இறைவர்பால் வைத்த அன்பின் பெருக்கமொன்றே காரணமாகப் பெருகு தல் ; ஈண்டு, உயர் குடியிற் பிறந்து விளங்கும் கலிக்காமனார் நம்பிகள்பாற் செற்றங் கொண்டு பிணங்கியதும், நம்பிகள் அதனை உடன்பட்டதும் ஆளுடைய இறைவர்பால்

வைத்த அழுந்திய அன் பொன்றே காரணமாய் நிகழ்ந்தமை குறிக்க; தொண்டின் திறத்தில் நீடிய காலத்தால் மிகப் பழையதாகிய; இருவர் பாலும் நீடிய தொண்டு, நம்பிகள்பால் வழிவழி யடிமை செய்யும் வேதியர் என்றதும், "ஆளாயினி யல்லே னெனலாமே" என்றதும், கயிலையிலும் பணி செய்தமையும், காண்க; கலிக்காமனார் பால் "எந்தை தந்தை தந்தையெங் கூட்டமெல்லாம், தம்பிரா னீரே யென்று வழிவழிச் சார்ந்து வாழும், இம்பரின் மிக்க வாழ்க்கை யென்னை" (3546) என்ற அவரது திருவாக்குக் காண்க.

தம்முள் இருவரும் மேவும் நீர்மை கூடுதல் - ஒருவருள் ஒருவர் நட்புரிமையிற் பொருந்தும் தன்மையினை விளைவித்தல்; இருவரும் - இங்கு நம்பிகள் மட்டில், பிழை யுடன்பட்டுக் கலிக்காமனார்பால் நட்புக் கொண்டனர்; கலிக்காமனார் நம்பி கள்பால் வெறுப்பும் சீற்றமும் கொண்டனர்; இவ்வாறு இருவருள் ஒருவர் மட்டி லன்றி இருவரும் என உம்மை முற்றும்மை. மேவும் - அன்புடன் கலந்திருக்கும் - நீர்மை - தன்மையைத் திருவுளங்கொண்டு; கூடுதல் - ஒன்று சேர்தலை; புரிவார் - செய்ய விரும்புவாராகி;

ஏயர் தூரிசிலார்...வருந்துமாற்றல் - பிழை யுடன்பட்ட நம்பிகள்பால் அதனை மாற்றும் நிலை புரியாது கலிக்காமனார்பால் இறைவர் சூலை தந்து வருத்திய நிலை என்னையோ? எனின், "ஆட்பா லவர்க் கருளும் வண்ணமு மாதி மாண்பும், கேட்பான்புகி லளவில்லை கிளக்க வேண்டா" (தேவா) என்பது திருஅருள் ஆணை; ஆதலின் அதுபற்றி நாம் ஆராய்தற்குரிய ரல்லோம். இனி, இதுவேயுமன்றி, இறைவர் தாமே சிவமும் சத்தியுமாயிருந்து எல்லாவுயிர்களுக்கும் போகங்களைக் கூட்டுவித்து நுகரச் செய்தருளுகின்றார்; போகங்கள் நுகர்தற்குரிய உடலையும் கரணங்களையும் போக பண்டங்களையும் தமது சத்தி கொண்டு தாமே கொடுத்தருளிப் போக நுகர்ச்சிக் கண்ணே துணையும் செய்கின்றார்; "போகியா யிருந்து யிர்க்குப் போகத்தைப் புரித லோரார்" (சித்தி. 1 - 70) என்று உடன் பாட்டிலும், "வில்லாடன் மாரா னிருப்பவும் யோகம் விளைத்த வந்நாட், புல்லா திருந்தன வெல்லா வுயிருந்தம் போகத்தையே" என இறைவர் செயலன்றியில்லை என்று எதிர் மறையிலும் இவ்வுண்மைகள் பேசப்படுதல் காண்க; அகப்பொருளிலும், இயற்கைப் புணர்ச்சி என்ற பகுதியில் 'அன்ன மென்னடை யரிவையைத் தந்த, மன்னிருந் தெய்வத்தை மகிழ்ந் துரைத்தது' என்னும் கருத்துடைய "தெய்வத்தை மகிழ்ந்தது" என்ற துறையினை விளக்கும் "கிளைவயி னீக்கியிக் கெண்டையங் கண்ணியைக் கொண்டுதந்த, விளைவை யல்லால்விய வேனய வேன்றெய்வ மிக்கனவே" (6) என்று திருக்கோவையாரும் காண்க; ஈண்டு நம்பிகள்பாற் பிரிவு - புலவி - தூது முதலியவற்றால் வரும் துன்பம் உலகியல் நோக்கிற்கு அவ்வாறு காணப்படினும், உண்மைநிலையில் இடையறாத சிவ யோக நெறி நின்ற அப் பரமாசாரியர்பால் அவை சாராத தன்மையும் நாம் மனங் கொளத்தக்கதாம். கலிக்காமனார் அவைபற்றிச் செற்றங்கொண்ட நிலை அவற்றை உலகியல் வழக்கினளவில் வைத்துக் கண்டதனு லாகியதேயன்றி மற்றில்லை; "காண் பாரார் கண்ணுதலாய் காட்டாக் காலே" (தேவா) என்றபடி இவ்வுண்மைகளைக் கலிக் காமனருக்கு இறைவர் காட்டியருளுதலே இச்சரித நிகழ்ச்சியாம் என்க. ஆயின் இவ்வாறு காட்டி அறிவிக்கும் உபதேசம் ஈண்டுக் கலிக்காமருக்குச் சூலை வர, அவர் வாள் கொண்டு வயிற்றைக் கிழிக்க, அதுகண்டு நம்பிகள் தாமும் முடிவேனென்று அவ் வாளைப் பற்ற, அருளினால் கலிக்காமனார் உய்ந்து எழுந்து நம்பிகள் செயலை மாற்றி நட்பாயின நிலைமைகளின் விளைவால் உளதாயிற்று; வேறு அறிவிப்பு மொழிகளா

லன்று என்பதும் கண்டுகொள்க. போகங் கூட்டுவிக்கும் எல்லாவுயிர்களுக்கும் இவ்வாறு நிகழ்தலில்லையே எனவும், கலிக்காமனாரை வருந்தச் செய்யாது வேறு வழியால் இறைவர் அறிவித்திருக்கலாமே எனவும் மேலும் மேலும் வினவுதல் திருவருள் செல்லும் வழிகள் மனிதர் அறிவுக்குள் அகப்படாமையினை அறியாதார் செயலேயாமென்றொழிக. (3557—3559 பார்க்க); கலிக்காமனார் விதிவழியே இறைவர்பால் வைத்த அன்பு காரணமாகவே செற்றங்கொண்டாரேனும் இறைவரது திருவருள் உயிர்களிடத்து நிகழும் வழிகள் பலவே ஏறுதலும், நம்பிகளது சிவயோக நிலையும், அவர் உலகினைத் தெருட்டி ஆட்கொள்வதற்கு இறைவரது பணியினால் வந்த நிலையும் மேல் இறைவரால் காட்டியருளப் பெறும் தன்மையில் விளங்கினர் என்பதும் ஈண்டு மனங் கொளற்பாலது; இறைவர் செய்யும் நிக்கிரகங்கள் அருளின் பாலனவேயாம் என்ற சிவாகம ஞானநூல் முடிவாகிய உண்மையும் இங்குக் கருதப்படுதல் வேண்டும்; இங்கு "அருளினார்" என்ற குறிப்புமது. அன்றியும், இறைவரது திருவருட் செயல்கள் மக்களின் பசுபோதங் கொண்டு ஆராயத் தக்கன என்று புகுதலும் பிழையாகு மென்க.

வாடு - முதனிலைத் தொழிற் பெயர்; தன் - சாரியை; அருளினார் - கருணை பாலித்தார். மறக்கருணை.

வருந்துமாற்றல் அருளினார் எனக; ஆறு - இங்கு அறிவுறுத்தும் வழி என்ற பொருளில் வந்தது; வருந்தும் - வருந்தச் செய்யும் என்று பிறவினைப் பொருள் கொள்க. "மருத்துவன் சில வியாதி - அறுத்துக் கீறித் தீர்த்திடும்; சில நோய் - கட்டி - பாலும் கலந்துடன் கொடுத்துத் தீர்ப்பன்" (சித்தி - 2-33) என்ற உண்மை இங்குக் காணற்பாலது. 389

3544. ஏதமில் பெருமைச் செய்கை யேயர்தம் பெருமான் பக்கல்
ஆதியா ரருளுஞ் சூலை யனல்செய்வேல் குடைவ தென்ன
வேதனை மேன்மேற் செய்ய மிகவதற் குடைந்து வீழ்ந்து
பூதநா யகர்தம் பொற்றாள் பற்றியே போற்று கின்றார், ௩௯0

3545. சிந்தையால் வாக்கா லன்பர் திருந்தடி போற்றி செய்ய
எந்தமை யாளு மேயர் காவலர் தம்பா லீசர்
"வந்துனை வருத்துஞ் சூலை வன்றொண்டன் றீர்க்கி லன்றி
முந்துற வொழியா" தென்று மொழிந்தருள் செய்யக் கேட்டு, ௩௯௧

3546. "எம்பிரா னெந்தை தந்தை தந்தையெங் கூட்ட மெல்லாந்
தம்பிரா னீரே யென்று வழிவழிச் சார்ந்து வாழும்
இம்பரின் மிக்க வாழ்க்கை யென்னைநின் றீருஞ் சூலை
வம்பென வாண்டு கொண்டா னொருவனே தீர்ப்பான் வந்து!"

3547. "மற்றவன் றீர்க்கிற் றீரா தொழிந்தெனை வருத்த னன்றால்;
பெற்றமே லுயர்த்தீர்! செய்யும் பெருமையை யறிந்தா ரியாரே?
உற்றவன் றொண்டற் கேயா முறுதியே செய்தீ" ரென்னக்
கற்றைவார் சடையார் தாமு மவர்முன்பு கரந்தா ரன்றே. ௩௯௩

3544. (இ - ள்) ஏதமில்...பக்கல் - குற்றமில்லாத பெருமை கொண்ட செய்கையினையுடைய ஏயர் பெருமானிடம்; ஆதியார்...செய்ய - இறைவர் அரு

ளிய சூலையானது அனலிற் காய்ச்சிய வேல் குடைவது போல மேன்மேலும் வேதனையைச் செய்ய ; மிக அதற்கு...போற்றுகின்றார் - அதற்கு மிகவும் உள்ளுடைந்து வருந்தி விழுந்து பூதநாயகராகிய சிவபெருமானுடைய பொன்னடிகளைப் பற்றிக் கொண்டு துதிப்பாராகி, ௩௯௦

3545. (இ - ள்) அன்புடைய அந்த வேயர் பெருமானார் மனத்தாலும் வாக்கினாலும் இறைவாத சீர்செய்யும் திருவடிகளைப் போற்ற; எந்தமை...ஈசர் - எமது தலைவராகிய ஏயர்கோனார் பக்கம் இறைவர் எழுந்தருளி ; வந்து உன்னை...அருள் செய்ய - வந்து உன்னை வருத்துகின்ற சூலைநோய் வன்றொண்டன் தீர்த்தாலன்றி வேறு வழியால் முன்னால் நீங்காது என்று மொழிந்து அருளிச் செய்ய ; கேட்டு - அதனைக் கேட்டு, ௩௯௧

3546. (இ - ள்) எம்பிரான் !-எமது பெருமானே!; எந்தை தந்தை...என்னை எனது தந்தையும் அவர் தந்தையும் மேலும் அவர் தந்தையும் எமது கூட்ட முழுவதும் எங்களைக் காக்கும் பெருமானார் தேவரீரே என்று வழிவழியாகத் தேவரீரது திருவடிச் சார்புபற்றியே வாழ்ந்து வருகின்ற இவ்வுலகிற் பெருகிய வாழ்க்கையினையுடைய இத்தன்மையனாகிய என்னை; நின்று...வந்து - பெருகி நின்று வருத்தும் சூலையினை வம்பாகத் தேவரீரால் ஆண்டுகொள்ளப்பட்ட ஒருவனே வந்து தீர்ப்பவன் ? ௩௯௨

3547. (இ - ள்) மற்றவன்...நன்றால் - மற்று அந்த வன்றொண்டன் தீர்ப்பதினும் அந்நோய்தீராமல் என்னை வருத்தலே நன்றாகும் ; பெற்றமேல்...யாரே - இடபக் கொடியினை உயர்த்த பெருமானே ! தேவரீர் செய்யும் அருளிப்பாடுகளின் பெருமையினை யாவரே அறிந்தவர் ?; உற்ற...செய்தீர் என்ன - புதிதாகப் பொருந்திய வன்றொண்டனுக்கே ஆகின்ற உறுதியினையே செய்தீர் என்று கூறி வருந்த ; கற்றை...அன்றே - கற்றையாக நீண்ட சடையினையுடைய பெருமானாரும் அவர் முன்பு நின்றும் அப்பொழுதே மறைந்தருளினர். ௩௯௩

இந்நான்கு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3544. (வி - ரை) ஏதமில் பெருமைச் செய்கை - இறைவர்பாலே தமது உயிரினும் சிறந்த அன்பு பூண்டு அதன்வழியே ஒழுகிய தொண்டின் உறைப்புடையாராதல் குறிப்பு. சரித நிகழ்ச்சியின் பல பகுதிகளிலும் வைத்து இத்தன்மை விளங்கக் கண்டு கொள்க. பக்கல் - பக்கம் ; மொழியிறுதிப் போலி ;

அருளும் சூலை - அருளுருவாகி வந்ததென்பது குறிப்பு. முன்பாட்டில் அருளினார் (3543) என்றதும், ஆண்டுரைத்த குறிப்புக்களும் காண்க ; ஆளுடைய அரசுகள் பக்கல் இறைவன் சூலை நோய் அருளிய வரலாறுகள் ஈண்டு நினைவு கூர்தற்பாலன ; "மலையான் மணவாளன் மலர்க்கழல் வந்தடையு, மிவ்வாழ்வு பெறத்தரு சூலையினுக்கெதிர்செய் குறை யென்கொல் ?" (1338) என்று அரசுகள் சூலையினைப் போற்றிய தன்மையும் கருதுக. அருளும் - "சூலை வேதனை தன்னைக் கண்டருளெற்றிய ரருள" (1314)

அனல் செய் வேல் குடைவ தென்ன - அனல் செய் - அனலிற் காய்ச்சுதலைச் செய்யப்பட்ட ; செய் என்பது காய்ச்சுதலைச் செய்யப்பட்ட என்ற பொருளில் வந்தது ; காய்ச்சுதல் இடநோக்கி அவாய் நிலையான் வந்தது ; செய் - செயப்பாட்டு வினை ; அனல் - ஏழனுருபு தொக்கது ; அனல்செய் - அனலின் தன்மை செய்யப்பட்ட என்றலுமாம்;

அனல் செய் வேல் தடைவது - உள்ளே கூரிய உளைதல் செய்து வேதனை விளைத்தற்குவமை; கூரிய வேல் ஒன்றே போதிய தாயினும் விரைவும் சுடு வேதனையும் கூடி வேதனை மிகுதற்கும் அனல் செய்தலும் சேர்த்துக் கூறினர். அது போலச் சூலநோ யொன்றுமே தன்னியல்பில் உட்குடைந்து வேதனை செய்யப் போதியதாயினும், ஆதியார் அவ்வாற்றால் அருளுதலினால் அது விரைவும் மிகுதிப் பாடும் பெற்ற தென்று பொருளிலும் வைத்துக் கண்டு கொள்க; இக்கருத்தினை "இன்னம் புண்செய் நோவின் வேலெறிந்தாற் போலும் புகல்வ தொன்றென்றார்" (சிறுத். புரா - 50 - 3709) என்று மேல் வேறோருவமையில் விளக்குதல் காண்க. இவ்வரிய உவமை நயத்தினையே "எண்ணிலா வருந்தவத்தோ னியம்பியசொன் மருமத்தி னெறிவேல் பாய்ந்த, புண்ணிலாம் பெரும்புழையிற் கனனுழைந்தா லெனச் செவியிற் புகுத லோடும்" என்று கம்பன் எடுத்தாண்டு மேலும் விளக்க முயலுதல் காண்க. என்ன - உவமவாசகம்.

உடைந்து - உடைதல் - உள்ளே உடல் வலி சிதறி நைதல்.

பூதநாயகர் - பூதம் - உயிர்கள்; "பூத பரம்பரை பொலிய" (1898); உயிர் களைக் காக்கும் தலைவர்; இடநோக்கிக் காக்கும் கடமைப்பாடு பற்றிக் கூறினர்.

பூதம் - சிவ பூதங்கள் என்றலுமாம். பற்றி - சரணாகக் கொண்டு;

போற்றுகின்றார் - இதனை மேற்பாட்டில் விரிக்கின்றார்; முற்றெச்சம்; போற்றுகின்றாராகிப் - போற்ற - என்க. போற்றுதல் - ஈண்டு வழிபடுதல் துதித்தல் என்ற பொருளில் வந்தது.

ஏவும் சூலை—என்பதும் பாடம். 390

3545. (வி - ரை) சிந்தையால்...போற்றி செய்ய - நோயினால் உள்ளுடைந்து உடல் வீழ்ந்துவிட்ட படியால் மனத்தாலும் வாக்கினாலும் என்று மனமொழி களிரண்டுமே கூறினர்; அன்பர் - கலிக்காமனர்.

திருந்து அடி - உயிர்கள் திருந்துதற் கேதுவாகிய அருள் புரியும் திரு அடி; திருத்தும் என்பது.

எந்தமை ஆளும் - எமது தலைவர்; ஆளுதல் - பத்தி வைராக்கிய நெறியினை உலகுக்குக் காட்டி வழிப்படுத்துதல்; நாயனார் என்ற தன்மையின் பொருள்.

வந்து ஊன வருத்தும் - நம் அருளினாலே உன்பால் வந்து என்பது குறிப்பு. வந்து - உன் உடல்பற்றின நிலை முதலிய உலகியற் காரணங்களாலன்றி மற்றொரு வகையான் அருளப்பட்டு வந்து என்ற குறிப்புந் தந்து நின்றது. ஈசர் வந்து என்று கூட்டி உரைத்தனர் முன்உரைகாரர்கள்.

தீர்க்கிலன்றி - ஒழியாது - எதிர்மறையாற் கூறியது உறுதி குறித்தற்கு; முந்துற - முன்னே; முற்பட-விரைவாக; இங்கு இறைவர் அருளிய இவ் வெருளில் மெய்மொழி பின்னர் நிகழ்ச்சியில் வன்றொண்டர் தீர்க்காமலே தீர்ந்தமையாற் பிழைபடுமோ? எனின், படாது; என்னை? நோய் தீர்தல் உடலினுள் உயிர் இருக்கும் நிலையினன்றி உயிர் தீர்ந்து போந்த நிலையினன்று; உயிர் போமாயின் அது நோய்த்தீர்வெனப் படாது; இதுபற்றியே மேல் "உயிரி னொடுஞ் சூலையும் தீர்ந்த தன்றே" (3551) என்பாராயினர்; ஈண்டு முந்துற என்றது வன்றொண்டன் தீர்க்கிலன்றி உயிர் போவதன் முன் தீர்வு பொருந்த என்ற குறிப்பும் தந்து நிற்றல் காண்க. வன்றொண்டன் வரவினால் உயிர் போக உடன் தீர்தலன்றி இச்சூலை அதன் முன்னர் ஒழியாது என்னும் குறிப்பும் காண்க.

மொழிந்தருள் செய்ய - சூலை தந்தருளியதே யன்றி மொழிந்தும் அருளிச் செய்தனர். எச்சவும்மை தொக்கது; இம் மொழியும் சூலை போலவே மிக்க வேதனைக்கிடமாதலும், அதனாலே நாயனார் வாள் கொண்டு குடர்கிழித்து உயிர் நீத்தலும் பின்னிகழ்ச்சிகளாதல் காண்க. 391

3546. (வி - ரை) எம்பிரான் - எமது பெருமானே!; விளி முன்கூறியபடி முன்னின்று மொழிந்த இறைவரை நோக்கிக் கூறியது.

எந்தை...வழிவழிச் சார்ந்து வாழும் - என் தந்தையும், அவர் தந்தையும், அவர் தந்தை இன்னும் இருமரபும் பற்றிய எல்லாரும் என்க. வழிவழிச் சார்ந்து - வழிவழியாகத் தொடர்பு விடாமற் சிவச்சார்பு பூண்டு. நீரே-ஏகாரம் தேற்றம்; பிரிநிலையுமாம்.

கூட்டம் - குலம் - குடும்பம்.

வாழும் இம்பரின் மிக்க வாழ்க்கை - அதுபற்றி வாழ்ந்து வருவதனால் உலகில் சிறக்க நிகழும் வாழ்க்கை; "மரபிரண்டுஞ் சைவநெறி வழிவந்த கேண்மையினார்" (1915) என்றும், "மறிவளருங் கையார் பாதம், பற்றியே வருங்குலத்துப் பான்மையினான்" (2210) என்றும், இவ்வாறு வருவன பலவும் காண்க. இவ்வாறு எண்ணும் திறமும் தகுதியும் விளங்கப் பெருமை கொள்ளுதலே அன்பின் திறமாய் ஒருவனைச் சிவனடிச் செலுத்தி உய்விக்க வல்லது; இவ்வெண்ணங்கள் தாமும் இந்நாள் மக்களுள் மறைந்து வருதல் வருந்தத் தக்கது.

என்னை - பெருமிதம் படக்கூடிய திறம். தம்பிரான் - தங்கட்குக் கடவுள்;

வம்பென ஆண்டுகொண்டான் ஒருவனே - கூட்டமெல்லாம் வழிவழிச் சார்புடன் வாழ்ந்து வரும் என்நோயினை அவ்வாறன்றி இன்று புதிதாகவும் வலிந்தும் ஆட்கொள்ளப்பட்ட ஒருவனோ வந்து தீர்ப்பவன்; தீர்ப்பது தகுதியாமா? ஆகாது, என ஓகாரவினா எதிர்மறைப் பொருள் தந்தது.

வம்பு - எவரும் செய்யாத புதுமை; வல்வழக்கு என்ற குறிப்பும் தருவது; ஒருவனே - இகழ்ச்சிக் குறிப்புப்பட நின்றது. ஏ - வினா;

கொண்டான் - கொள்ளப்பட்டான்; செயப்பாட்டு வினை. 392

3547. (வி - ரை) மற்றவன் - அருணெறி வழியடிமைத் திறத்தின் வேறாகிய அவன் - அயலவன் - என்பது குறிப்பு. தீர்க்கில் - தீர்ப்பதினும்.

தீர்க்கில் தீராதொழிதல் நன்றால் - தீர்ப்பதனை விடத் தீராமலே எனது உயிர் ஒழிதல் நலமேயாம்; நன்றால் - உறுதிப் பொருள் தந்தது. நன்மையாவது பத்தி நெறியிற் பிழை படாதிருத்தல். மற்று அவன் தீர்த்தல் உடல் ஆசையினால் பிழைக்குடன் பட்டுச் சிவாபராதத்துக் குடன்பட்ட பாவம் சாரச் செய்யும்; ஆதலால் தீராதொழிதல் நன்று என்றார்.

பெற்றம்...யாரே - செய்யும் பெருமை-பெருமையாவது சிறியதைப் பெரிதாக்கியும், பத்திவைராக்கியச் சார்பாகிய பெருமையினைச் சிறிதாக்கியும் அருளிச் செய்தல்; பெருமை - அதன் (உட்கிடை) உள்ளுறையினைக் குறித்தது; யாரே - ஒருவருமிலர் என, வினா இன்மை குறித்த எதிர்மறை; உமது அருட்பெருமையின் உள்ளீடு எவராலும் அறிதற்கரிது என்றபடி; பெருமை - இகழ்ச்சிக் குறிப்புடனும் நின்றது. பெருமை யில்லாதவருக்கும் பெருமையுண்டாக்குவர் என்பதும் குறிப்பு.

உற்ற...செய்தீர் - ஏகாரங்களிரண்டும் பிரிநிலை; உற்ற - வம்பென ஆண்டு கொண்டதனால் உற்ற; ஆம் உறுதி - (மேன்மை) ஆக்கம் தரும் நன்மை. ஆம் - உமக்குப் பொருந்திய என்றலுமாம்.

கரந்தார் - கரத்தல் - மறைதல்.

அன்றே - அப்பொழுதே ; கலிக்காமனுர் நேரே முன்பு முறையிட்டதற்கு மறு மொழி ஒன்றும் தராது என்க. மேல்விளைவு நிகழ்தற் பொருட்டுத் திரோதன சத்தி யால் மறைவு செய்தபடியாம் ; நம்பிகள் சங்கிலியார் திறத்து இடையாடினபோது இறைவர் செய்ததை ஈண்டுக் கருதத் தக்கன.

தீர்க்க—அறிவார்—என்பனவும் பாடங்கள். 393

3548. வன்றொண்டர் தம்பாற் சென்று வள்ளலா ரருளிச் செய்வார்
"இன்றுநம் மேவ லாலே யேயர்கோ னுற்ற சூலை
சென்றுநீ தீர்ப்பா யா"கென் றருள்செயச் சிந்தை யோடு
நன்றுமெய்ம் மகிழ்ந்து போற்றி வணங்கினர் நாவ லூரர். ௩௯௪

(இ - ள்) வன்றொண்டர்...அருளிச் செய்வார் - வன்றொண்டரிடத்து வள்ள லாராகிய இறைவர் அருளிச் செய்வாராகி; இன்று நம்...அருள் செய - இன்றைக்கு நமது அருளாணையினாலே ஏயர்கோன்பால் பொருந்திய சூலையினை "நீ சென்றுதீர்ப் பாயாக!" என்று அருளிச் செய்ய ; சிந்தையோடு ..நாவலூரர் - மனத்துடன் உடலும் நன்கு மகிழ்ச்சி யடைந்து நாவலூர் நம்பிகள் துதித்து வணங்கினர்.

(வி - ரை) வன்றொண்டர் தம்பாற் சென்று - சென்று என்பது ஈண்டு வெளிப் பட்டு என்ற பொருளில் வந்தது.

நம் ஏவலாலே உற்ற சூலை - நீ தீர்ப்பாயாக - நமது ஏவலாலே பொருந்திய அதனை நம் ஏவலாலே நீ போய்த் தீர்க்க. நோய்த்தீர்வு முறைகளில் எது எதனால் விளைந்ததோ அக்காரணம் பற்றியே அது தீர்க்கத் தக்கது என்பது ஒருவகை முறை. ஒப்பு முறை மருத்துவம் (Homeopathy) என்பர். அக் குறிப்புப்பட நிற்றல் காண்க. சென்று - செல்லுதலினாலே என்ற குறிப்பும் காண்க.

சென்று - அவன் அழையாமல் நீயே முற்பட அவனிடம் சென்று என்க. பிழையல்லாததைப் பிழை என்று கொண்டதன் பொருட்டும், நம்பிகள் விருப்பப்படி நட்புப் புரியவும் அவர்பாற் சூலையினை ஏவியதனோடு நம்பியாற்றீரும் என்று அருளிய இறைவர், பிழை யுடன்பட்டு நட்பு வேண்டியதன் பொருட்டு நம்பிகளைக் கலிக்காம னார்பாற் செலுத்திய நிலை ஊன்றி உணரத் தக்கது. இருதிறமும் ஒப்ப நாடி அருள் புரியும் இறைவரது கருணையின் விளக்கம் காண்க. மேல் விளைவினும் கண்டு கொள்க.

ஆக - என்பது ஈற்றகரம் கெட்டு நின்றது. வியங்கோளின் அகரந் தொகுத்தல் விகாரம். ஆக - ஆசி புரிந்து, தீர்க்கும் சத்தி கொடுத்த அருள் மொழி.

நன்று சிந்தையோடு மெய்ம்மகிழ்ந்து - மகிழும் தன்மை சிந்தைக்கே யாதலின் ஓடு உருபை அதனுடன் சார்த்தி ஓதி, மெய் (உடல்) யினை அதனைச் சாரப் பின் வைத்தார். உடல் மகிழ்தலாவது சிந்தை மகிழ்ந்தமையால் உளவாகும் மெய்ப்பாடு களாகிய மயிர் முகிழ்த்தல், பரவசமாதல், விதிர்த்தல், ஆனந்தக் கண்ணீர் பொழிதல் உடல் பூரித்தல் முதலிய அடையாளங்கள் வருதல் ; நன்று - மிகவும். 394

3549. அண்ணலா ரருளிச் செய்து நீங்கவா ரூரர் தாமும்
விண்ணவர் தம்பி ரானு ரேவலால் விரைந்து செல்வார்
கண்ணிய மனத்தின் மேவுங் காதலாற் கலிக்கா மர்க்குத்
திண்ணிய சூலை தீர்க்க வருதிறஞ் செப்பி விட்டார். ௩௯௫

(இ - ள்) அண்ணலார்...நீங்க - இறைவர் முன் கூறியபடி மொழிந்தருளிச் செய்து மறைந்தருள ; ஆரூரர்...செல்வார் - நம்பியாரூரரும் தேவதேவராகிய இறைவரது அருளாணையினாலும் விரைந்து செல்வாராகி ; கண்ணிய...காதலால் - ஏயர் கோனாரது நட்பினைக் கருதிய மனத்தினுள்ளே எழுந்த பெரு விருப்பத்தினாலும்; கலிக்காமர்க்கு...செப்பிவிட்டார் - அக்கலிக்காமனாருக்கு வந்த வலிய சூலையினைத் தீர்க்கும் பொருட்டுத் தாம் வருகின்ற நிலையினைச் சொல்லி வரத் தூதுவரை யனுப்பினார்.

(வி - ரை) அண்ணலார் - "செய்யும் பெருமையை அறிந்தார் யாரோ?" என்று ஏயர்கோனாருங் கூறியபடி அறிதற்கரிய பெருமையினையுடையவர்.

ஏவலால் - காதலால் - இறைவரது ஏவலும் தமது காதலும் ஆகிய இரண்டு காரணங்களாலும் நம்பிகள் கலிக்காமர்பால் விரைந்து செல்லுதலும், செப்பிவிடுதலும் ஆகிய இரு செயல்களையும் உடன் நிகழ்த்தினார் ; எண்ணும்மைகள் தொக்கன.

செல்வார் - செல்வாராகி ; முற்றெச்சம் ; செல்வார் - செப்பிவிட்டார் என்று கூட்டுக.

கண்ணிய - கருதிய ; கண்ணுதல் - குறிக்கொண்ட நோக்கம் வைத்து உணர்தல் ; கருதுதல் ; "கண்ணிருள்" என்றவிடத்து (போதம் - சிறப்புப்பாயிரம்) கருதி யுணரப்படும் என்றுரைத்தமை காண்க. ஈண்டுக் கருதி யுணர நின்ற பொருளாவது கலிக்காமனார் தம்பாற் கொண்ட செற்றத்தினுள்ளே நின்ற சிவன்பாலுறைப்புடைய அன்பின்றிறம். ஏயர் கோனாரது நட்பைக் கருதுகின்ற ; ஏயர் கோனாரது சூலையைத் தீர்க்கக் கருதுகின்ற ; சிவபிரான் கட்டளையைக் கருதுகின்ற என்று பலவும் உரைக்க நின்றது.

திண்ணிய சூலை - திண்மையாவது இறைவரது திருவருட் கருவியாய்க் குறித்த பயனை விளைத்துவிடும் வலிமை ; ஈண்டுப் பயனாவது அன்பு காரணமாக பகைப்பட்டாரை நட்புக்கூட்டுதல் ; திண்ணிய - பெருநோய் செய்து பிறிதெவ்வாற்றானும் தீராத என்ற குறிப்பும் தருவது.

வருதிறம் - தாமே வரும் செயல் ; திறம் - ஈண்டு வலிய செயல் என்ற குறிப்புமுடையது.

செப்பி விடுதலாவது - அறிவிக்கும்படி தூதரை ஏவுதல். 395

3550. நாதர்தம் மருளா னண்ணுஞ் சூலையு மவர்பாற் கேட்ட
கேதமும் வருத்த மீண்டும் வன்றொண்டர் வரவுங் கேட்டுத்
"தூதனா யெம்பி ரானை யேவினான் சூலை தீர்க்கும்
ஏதமிங் கெய்த வெய்தி யியான்செய்வ தென்னா?" மென்பார்,

3551." மற்றவ னிங்கு வந்து தீர்ப்பதன் முன்னான் மாயப்
பற்றினின் றென்னை நீங்காப் பாதகச் சூலை தன்னை
உற்றவிவ் வயிற்றி னோடுங் கிழிப்ப "னேன் றுடைவா டன்னாற்
செற்றிட வுயிரி னோடுஞ் சூலையுந் தீர்ந்த தன்றே. கூ.சூள

3550. (இ - ள்) நாதர்தம்...வருத்த - இறைவரது திருவருளினாலே வந்து பொருந்திய சூலையும், அதன்மேல் அவ்விறைவர் மொழிந்தருளக் கேட்ட துன்ப மொழியும் தம்மை மிகவும் வேதனை செய்ய ; மீண்டும்...கேட்டு - அதன் மேலும் வன்றொண்டரது வரவினையும் கேட்டு ; தூதனாய்...என்பார் - தூதனாக எமது பெரு

மானே ஏவினனாகிய நம்பி இங்கு வந்து எனது சூலை நோயினைத் தீர்க்கும்படியான பெருங்கேடும் பொருந்த வருமேயாகில் யான்செய்வதென்னுமோ என்பாராகி, ௩௬௬

3551. (இ - ள்) மற்றவன்...முன் - மற்றவன் இங்கே வந்து நோய் தீர்ப்பதற்கு முன்னே ; நான்...சூலை தன்னை - நான் இறக்கும் வேதனை அளவு என்னைப் பற்றி நின்று நீங்காத இந்தப் பாதகமுடைய சூலை நோயினை ; உற்ற...என்று - அது பொருந்தித் தங்குதற் கிடமாகிய வயிற்றினோடுங் கிழித்து அழித்து விடுவேன் என்று துணிந்து ; உடைவாள்...செற்றிட - உடைவாளினாலே வயிற்றினைக் கிழித்திட ; உயிரினோடும்...அன்றே - உயிரினுடனே சூலை நோயும் அப்போதே தீர்ந்தது. ௩௬௭

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3550. (வி - ரை) சூலையும் - கேதமும் - வருந்த என்க. கேதம் - துன்ப மொழி ; சூலை வருத்தியதன் மேலாக இறைவர்பாற் கேட்ட மொழி வேறாக அதிக துன்பம் செய்தமையால் வேறு பிரித்தோதினர். அவர் - இறைவர் ; கேட்ட கேதம் - முன் (3545) கூறியது.

மீண்டும் - அவற்றின் மேலும் ; வரவும் - முன்னவற்றின் மேல் இதுவும் என உம்மை இறந்தது தழுவிய எச்சவும்மை.

ஏவினன் சூலை தீர்க்கும் ஏதம் - சூலை தீர்தலை விரும்பி இறைவரை வேண்டினாரேனும் (3544 - 3545), இறைவரைத் தூதாக ஏவினால் அது தீரும் நிலையைக் கெடுதியாகவே கொண்டனர் ; ஏதம் - கேடு; ஏவினன் - ஆரூரர்; வினையாலணையும் பெயர்.

ஏதம் இங்கு எய்த எய்தில் - எய்தில் - பொருந்தினால்; எய்த - எய்தும்படி; எய்தில் - வன்றொண்டன் எய்தினால் என்றலுமாம் ; வன்றொண்டன் வரில் இறைவர் அருளியபடி சூலை தீரும் ; அது தீர அவனால் தீர்க்கப்படும் ஏதம் எய்தும் என்பதாம்.

இங்கு - இவ்விடத்தில் ; நான் உயிருடன் உள்ள இப்போது என்றலுமாம் ; மேற்பாட்டுப் பார்க்க.

செய்வதென்னும் - என்னாகுமோ ; எது விளையுமோ ? நான் செய்வது என்னை என ஆலோசித்தார் என்பாருமுண்டு.

என்பார் - என்று - செற்றிட - என மேல்வரும் பாட்டுடன் முடிக்க.

யான் செய்வதென்னோ என்று - என்பதும் பாடம். 396

3551. (வி - ரை) மற்றவன் - அருள் ஒழுக்கத்திற்கு வேறானவன். அயலவன் என்பது குறிப்பு ; மற்று அவன் என்றலுமாம் ; மற்று - முன் (3550) கூறியபடி " ஏவினன் " ஆகிய என்பது.

தீர்ப்பதன் முன்-சூலை தன்னைக் கிழிப்பன் என்று கூட்டுக. கிழித்தல் - ஈண்டுத் துணிபடுத்தி அழித்தல் என்னும் பொருளில் வந்தது. அவன் தீர்ப்பதன்முன் நானே அதனை அழித்தொழிப்பேன் என்றது அடியார்பால் விளங்கும் வீரம். " வீரமென்னால் விளம்புந் தகையதோ ?" (144) ; " வானந் துளங்கிலென்...ஆட்பட்ட வுத்தமர்க்கே" (தேவா); இப்புராணத்தில் வரும் பல அடியார்களின், தம் உயிரையும் பொருட்படுத்தாத பற்பல வீரச் செயல்களை இங்கு நினைவு கூர்க.

பாதகச் சூலை - சிவாபராதம் செய்தானது தொடர்புக்கு உடன்பட வைத்தலால் பாதகச்சூலை என்றார்.

உற்ற இவ்வயிற்றி னோடும் கிழிப்பன் - சூலையைக் கிழித்து ஒழித்தலே கவிக்காமனார் இங்குக் கருதியதாயினும், அது வயிற்றை யிடமாகப் பற்றி நிற்றலாலும்

அது பற்றிநின்ற வயிற்றினையும் உடன் கிழித்தாலன்றி அதனை வேறு பிரித்துக் கண்டு கிழித்தல் இயலாதாதலானும் உற்றவிவ் வயிற்றினோடும் என்றார். உற்ற - பிரிக்கலாற்றாது பொருந்திய. இவ்வெல்லா ஏதங்களும் பொருந்துதற் கிடம் தந்த என்பதும் குறிப்பு.

உடைவாள் தன்னாற்சேற்றிட - உடைவாள் - வளவர் சேனாபதிக் குடியில் வந்து அத்தொழிலும் புரிவாராதலின் உடைவாளினை எப்போதும் உடையராயினர் ; அதனுடன் உடைவாள் கொண்டேோச்சிப் பகைவரைக் கிழித்தலும் வல்லராயினர் ; ஆதலின் பாதகச் சூலையாகிய பகையினை எளிதினிவ்வாறு கிழித்துத் தீர்க்கவும் வல்லராயினர் என்க. " ஏயர் கோக்குடிதான், மன்னி நீடிய வளவர் சேனாபதிக் குடியாம் " (3159) ; சேற்றிட - என்ற குறிப்புமது ; சேறுதல் - அழித்தல். பகையை வீட்டல் இங்கு வயிற்றைக் கிழித்தல் குறித்தது.

உயிரினோடும் சூலையும் தீர்ந்தது - மங்கல வழக்கு ; உயிரினோடு - சிறப்பு நோக்கி ஓடு உருபை உயிருடன் சார்த்தி ஓதினார்; சூலையும் - உம்மை இழிவு சிறப்பு; வெல்லவந்ததாயினும் அது செய்ய மாட்டாது தான் தீர்ந்தது என்று எளிமைபடக் கூறியவாறு. அன்றே - அப்பொழுதே.

நான் மாயப்பற்றி நின்று - நான் மாயும்படி இறக்கும் அத்தனை வேதனைசெய்து பற்றி ஊன்றி நின்று ; மாய - மாயும்படி ; முற்குறிப்பு. 397

3552. கருதரும் பெருமை நீர்மைக் கலிக்காமர் தேவி யாரும்
பொருவருங் கணவ ரோடு போவது புரியுங் காலை
" மருவியிங் கணைந்தார் நம்பி" யென் றுமுன் வந்தார் கூற
" ஒருவரு மழுதல் செய்யா தொழிக " வென் றுரைத்துப் பின்னும்,

3553. கணவர்தஞ் செய்கை தன்னைக் கரந்து"கா வலரை நம்பி
அணைவுறும் பொழுது சால வலங்கரித் தேதிர்போ" மென்னப்
புணர்நிலை வாயிற் றீபம் பூரண கும்பம் வைத்துத்
துணர்மலர் மாலை தூக்கித் தெழுதெதிர் கொள்ளச் சென்றார். ௩௯௯

3552. (இ - ள்) கருதரும்...தேவியாரும் - நினைத்தற்கும் அரிய பெருமையும் அன்புமுடைய கலிக்காமனாரது தேவியாரும் ; பொருவரும்...காலை - தமது ஒப்பற்ற கணவருடனே உயிர் துறந்து உடன் தாமும் போவதனை விரும்பி அதற்குரிய நிலையினை அமைக்கும் காலையில் ; மருவி...கூற - நம்பிகள் இங்குப் பொருந்தி அணுக அணைவாராயினர் என்று முன் வந்தவர்கள் சொல்லக் கேட்டு ; ஒருவரும்... பின்னர் - ஒருவரும் அழுதலைச் செய்ய வேண்டாம் என்று உடனிருந்தார்க்கெல்லாம் சொல்லிப் பின்னரும், ௩௯௮

3553. (இ - ள்) காவலரை - காவலாளர்களை நோக்கி ; கணவர்...கரந்து - கணவனாரது செயலினை மறைத்து ; நம்பி...என்ன - நம்பிகள் இங்கு அணையும் போது திருமனையை மிகவும் அலங்காரஞ் செய்து எதிர் சென்று நல் வரவேற்று அழையுங்கள் என்று ஏவியிட ; புணர்நிலை...சென்றார் - (அதுகேட்ட அப்பரிசனமாந்தர்களும்) செறிந்த நிலையினையுடைய வாயிலில் விளக்கும் நிறைகுடமும் வைத்து கொத்துக்களையுடைய மலர்மாலைகளையும் தொங்கவிட்டு வணங்கி எதிர்கொள்ளச் சென்றார்கள். ௩௯௯

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன,

3552. (வி - ரை) கருதரும் பெருமை நீர்மை - கருதரும் - கருதலளவையானும் அறிதற்கரிய; பெருமை - அளவு காண்டற்கருமை ; நீர்மை - அன்பு; பேரன்பு. இங்குக் கற்பின்றிறம் குறித்தது. பெருமையினைக் கலிக்காமனார் தேவியார் என்னுமிருவர்பாலும் சார்த்துக.

தேவியாரும்...புரியும் - கணவனிறந்தபோது அவருடனே தாமும் உயிர் துறத்தல் கற்பு நிலை வழக்கு என்ப ; புகழனார் இவ்வுலகைவிட்டகன்றபோது மாதினியார் "சுற்றமுடன் மக்களையுந் துகளாக வேநீத்துப், பெற்றிமையா லுடனென்றும் பிரியாத வுலகெய்துங், கற்புநெறி வழுவாமற் கணவனா ருடன்சென்றார், (1293) என்றும், கலிப்பகையார் உயர்நீத்த செய்தி கேட்ட போது "அவர்க்கே யுரியதுநா னாதலினால், இந்தவுயி ரவருயிரோ டிசைவிப்பன்" (1297) எனத் திலகவதியார் துணிந்தனர் என்றும் அரசுகள் புராணத்துள் வரும் வரலாறுகள் இங்கு நினைவு கூர்தற்பாலன; ஆண்டுக் காணும் கலிப்பகையாரும் இச்சரிதமுடைய கலிக்காமனாரும் வேளாள மரபினராதலுடன் அரசன் சேனைப் பற்று முடையாராதலும் காண்க. கணவரிறந்த போது மனைவியர் அவருட னுயிர்நீத்தல் இம்மரபிற் கற்புநிலைக் குறியாகப் பெரு வழக்கிலிருந்தமை பலவாற்றானும் துணியப்படும். போவது - இங்கு உயிர் நீத்துப் பிரியா வுலகிற்குப் (கணவருடன்) போவது ; புரிதல் - விரும்புதல் மட்டுமன்றி அந் நிலைக் காவனவற்றுள் அமைதல் என்ற குறிப்பு முடையது. "நல்லோள் கணவனொடு நனியழற் புகீஇச், சொல்லிடை யிட்ட பாலை நிலையும்" (தொல் - பொருள் - புறத்திணை - 24) ; "காதலர் இறப்பிற் கனையெரி பொத்தி, ஊதுலைக் குருகின் உயிர்த்தகத் தடங்காது, இன்னுயிர் ஈவர் ஈயாராயின், நன்னீர்ப் பொய்கையின் நளியெரி புகுவர்...பத்தினிப் பெண்டிர் பரப்புநீர் ஞாலத்து" (மணி) ; எமக்கெம், பெருந்தோட் கணவன் மாய்ந்தென வரும்பற, வள்ளித ழவிழ்ந்த தாமரை, நள்ளிரும் பொய்கையுந் தீயுமோ ரற்றே (புறம் - 246) என்பன முதலியவை இவ்வழக்குண் மையைக் காட்டுவன.

காலை - அப்போது ; இறைவர் கலிக்காமர்க்குக் கனவில் அருளிச் செய்து மறைந்தாரென்பது கருதப்படுமாதலின் அதிகாலை நேரம் என்ற குறிப்பும் தருவது.

இந்து அணைந்தார் என்று முன்வந்தார்கூற - அணைந்தார் - அணுக வருவாராயினர்-அணைகின்றார் என்க ; இறந்தகாலக் குறிப்பு விரைவுபற்றி வந்தது; முன்வந்தார்- அறிவிப்பின்பொருட்டு முன்வந்த பரிசனங்கள். வந்தார்-வினையாலணையும் பெயர்.

ஒருவரும்...ஒழிக என்றுரைத்து - கலிக்காமர் உயிர்துறந்தமை கண்டு பரிசனங்கள், சுற்றத்தார், சேடியர் முதலியோர்கள் துக்கித்து அழுதனர் என்று குறிப்பால் உணர்த்திய கவிநயம் காண்க. உயிருடன் சூலையும் தீர்ந்தது (3551) என்று முன் பாட்டிற் கூறிய ஆசிரியர் அதன்பின் இந் நிகழ்ச்சிகளை விரிக்க வேண்டாமையின் கூறாதொழிந்தனர். ஆயின், தேவியாரது திண்ணிய அன்பின் செயல்கூறி, மேல் நிகழ்ச்சிகள் கூற வேண்டியிருத்தலின் ஒருவரும் அழுதல் செய்யாதொழிக என்ற ஆணைதந்த அளவின் அவற்றை உய்த்துணரவைத்த தன்மையும் காண்க. அழுதல் செய்யா தொழிக என்றமையால் அழுதவரை நோக்கிக் கூறிய நிலை புலப்படும்.

ஒருவரும் அழுதல் செய்யாது ஒழிக - என்றமையால் தாம் அழுதல் செய்யாமையும் புலப்படும் ; என்னை ? தாம் கணவரைப் பிரிந்த நிலை எண்ணினாலன்றோ துக்கம் புலப்பட்டு அழுதல் செய்ய நேரும். தாம் கணவரோடு உடன் போவது புரிந்தாராதலின் அழுது வறிதே அமர்ந்திலர் என்க. "விடுமின் வெகுளி வேட்கைநோய் மிகவோர் கால மினியில்லை, உடையா னடிக்கீழ்ப் பெருஞ்சாத்தோ டுடன்போ

வதற்கே யொருப்படுமின்" (திருவா - யாத் பத். 5) என்ற திருவாக்கிற்காணும் உறு திப்பாடுடனின்றனர் இங்கு அம்மையார் என்க.

பின்னும் - மேலும் சொல்வாராகி ; பின்னும் - என்ன என மேல் வரும் பாட்டுடன் கூட்டுக. 398

3553. (வி - ரை) கணவர் தம் செய்கை தன்னைக் கரந்து - கரத்தல் - இச் செய்கை நிகழ்ந்ததனை வெளியிற் புலப்படுத்தாது மறைத்தல் ; அழுகையை ஒழிதல் மாத்திரமன்றி வேறு சொற்களாலேனும், அந் நிகழ்ச்சியைக் குறிக்கும் பிற குறிப்புக் களாலேனும் பிறரறியாமல் வைத்தல்.

கணவர்தம் செய்கை - தம் - தாமே செய்துகொண்ட ; செய்கை - உயிரினை மாய்த்துக் கொண்டமை.

காவலர் - சுற்றத்தார் - இற்காவலாளர்-பணியாளர் ; நோக்கி என வருவித்துக் காவலரை நோக்கி - என்ன என்க ; சால அலங்கரித்து - திருமனையினை என்பது இசை எச்சம் ; அலங்கரித்தல் - மேற் கூறப்படுவது ; இது பெரியோரை வரவேற் கும் நிலையாகிய மரபு. காவலர் - கணவனார் என்று கொண்டு, அவரை நம்பி காண அணைவுறும் பொழுது என்றுரைக்கவும் நின்றது; இப்பொருளில், முன்வந்த பரிசனங் களை நோக்கி என்பதை முன்பாட்டினின்றும் வருவிக்க.

காதலரை நம்பி என்று பாடம் கொண்டு காதலர் - விருப்ப முடையோர் சிலரை என்றுரைத்தார் முன் உரைகாரர். இதன் பொருத்தம் ஆராயத் தக்கது.

என்ன - என்று ஆணையிட்டு வவ ; முன் "ஒருவரும் அழுதல் செய்யாதொழிக" என்றது ஒரு கூற்று ; இங்குக் "நம்பி...போம்" என்றது அதனின் மேம் பாடாகிய மற்றொரு கூற்று ; இவ்வேறுபாடு குறிக்க, இதனைப் பின்னும் - என்ன என வேறு பிரித்துக் கூறினமையுடன், வேறு பாட்டினுளும் கூறியருளினார்; "கணவ ரோடு போவது புரியும்" (3552) என்றது கற்புநிலை ; மேல், இங்குக் கூறிய சிவன் அடியவர்களை உபசரிக்கும் நிலை வேறு. இது சிவபுண்ணியமாம். முன்னையது புண்ணியலோகப் பயனும் பின்னையது சிவலோகப் பயனாகிய வீடு பேறும் தரவல் லன ; ஆதலின் உயிர் துறந்து கணவரோடு உடன்போவதற் கொருப்பட்ட அம்மை யார், அதனைத் தவிர்த்து உயிர் தாங்கிச் சிவனடியாரை யுபசரித்து வரவேற்றலை விரும்பிச் செய்தனர். இது செயற்கரிய பெருஞ்செயல் என்பது தேற்றம். இவ் வம்மையார் மானக்கஞ்சாற நாயனாரது திருமகளார் ; மணநாளன்று தம் கூந்தலை அரிந்து மாவிரதியார் விரும்பியவாறே கொடுக்க நின்ற அதன் மூலம் திருவருள் வெளிப்பாட்டுக்குத் துணைக் காரணமாய் விளங்கினர் ; இளம்போதில் இத்தன்மை வாய்ந்த இவர் இங்கும் அவ்வாறே அடியார் பணிசெய்து மேலும் அருள் வெளிப் பாட்டுக்குத் துணைநின்ற தன்மை காண்க. முன்பு அங்கு அடியில் அரிந்த கூந்தல் அருளால் பின்னை அன்றே புனைந்தமலர்க் குழலாய் (901) வளரப் பெற்றது ; இங்கும் அவ்வாறே உயிர்நீத்த கணவனார் அன்றே அருளால் உயிர் பெற்றெழுந்து கேளிரோயாகி எழுவதும் பெறநின்றனர் ; திருவருளின் பண்புபெற்ற இவ்வம்மை யாரின் பெண்மைப் பெருநலம் மக்கள் கண்டு ஒழுகி உய்தி பெறுவாராயின் உலகம் இன்புற்று ஓங்கி உய்திபெறும்.

தீபம் - தூபம் - மாலை - மங்கலப் பொருள்கள் ; இவற்றால் வாயில் அலங் கரித்துப் பெரியாரை எதிர் கொள்ளுதல் மரபு.

தீபம்...தூக்கி - திருவாரூரினின்றும் திருப்பெரு மங்கலத்துக்கு நம்பிகள் வந்து சாரும் கால இடையில் இவர்கள் இது செய்யலாயினர் என்க.

சென்றார் - அம்மையாரால் ஏவப்பெற்ற காவலர்களாகிய நன் மாந்தர் முதலியோர்; இவர்களைச் "செம்மை சேர் சிந்தை மாந்தர்" என்று மேல் வரும் பாட்டிற் சிறப்பித்தல் காண்க. 399

3554. செம்மைசேர் சிந்தை மாந்தர் சென்றெதிர் கொண்டு போற்ற
நம்மையா ளுடைய நம்பி நகைமுக மவர்க்கு நல்கி
மெய்ம்மையாம் விருப்பி னோடு மேவியுட் புகுந்து மிக்க
மொய்ம்மலர்த் தவிசின் மீது முகமலர்ந் திருந்த போது, ௪00

3555. பான்மையர்ச் சனைக ளெல்லாம் பண்பினில் வழாமை யேய்ந்த
நான்மறை தொடர்ந்த வாய்மை நம்பியா ரூரர் கொண்"டிங்
கியான்மிக வருந்து கின்றே னேயர்கோ னார்தா முற்ற
வூனவெஞ் சூலை நீக்கி யுடனிருப் பதனுக்" கென்றார். ௪0க

3554. (இ - ள்) செம்மைசேர்...போற்ற - செம்மை பொருந்திய சிந்தையினை உடைய மாந்தர்கள் போய் எதிர்கொண்டு வா வேற்றுத் துதித்து வணங்க; நம்மை...நல்கி - நம்மை ஆளுடைய நம்பிகள் அவர்க்கு இன்முகம் அளித்து; மெய்ம்மையாம்...போது - உண்மை ஆகும் விருப்பத்தினோடும் பொருந்தித் திருமனையினுள்ளே புகுந்து மிகுதியாகப் பரப்பிய மலராசனத்தின் மேல் முகமலர்ச்சி யுடனே வீற்றிருந்த பொழுது, ௪00

3555. (இ - ள்) பான்மை...வழாமை - விதிப்படிக்குரிய அருச்சனைகளையெல்லாம் விதித்த தன்மையில் தவறாதபடி செய்ய; ஏய்ந்த...நம்பியாரூரர் - பொருந்திய நான்கு வேதங்களையும் தொடர்ந்து கொண்ட வாய்மையினையுடைய நம்பியாரூரர்; கொண்டு - அவற்றை ஏற்றுக் கொண்டு; இங்கு...என்றார் - இப்பொழுது ஏயர்கோன் கலிக்காமனாருடைய மிக்க துன்பஞ் செய்யும் வெவ்விய சூலையினை நீக்கி அவருடனே மகிழ்ந்தினிதிருத்தல் நேராததற்கு நான் மிகவும் வருந்துகின்றேன் என்று சொல்லியருளினார். ௪0க

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3554. (வி - ரை) செம்மை சேர் சிந்தை மாந்தர் - முன்பாட்டில் அம்மையாரால் "அலங்கரித்து எதிர்போம்" என்று ஏவப்பெற்ற பரிசனங்கள், சுற்றத்தார், முதலாயினோர்; செம்மை - செப்பமுடைய நிலை; ஈண்டுச் செம்மையாவது தமது தலைவர் இவ்வாறு உயிர் நீத்ததனால் நேர்ந்த தமது துன்பம் ஒரு சிறிதும் புறந்தோற்றாதவாறு மனையலங்கரித்தலும், தமது சொல் செயல் முகக்குறி முதலியவற்றாலும் பிறர்க்குத் தெரியாவாறும் தமது தலைவியாராகிய அம்மையார் ஏவலுள் அடங்கி ஒழுகுதல். இனிச், செம்மைசேர் - செம்மை நிலையினை நம்பிகளருளாலும் இறைவரருளாலும் சாரவுள்ள என்ற குறிப்புமாம். நம்பிகளை இந்நிலையில் எதிர் சென்று வரவேற்கும் பேறு பெற்ற செம்மையும் குறித்தது. அடியார்களை வழிபடும் வழிவந்தவர் என்பதும் குறிப்பு.

போற்ற - வந்தித்து வணங்கி யழைக்க.

நம்மை ஆளுடைய நம்பி - ஆளுடைய நம்பி என்ற தொடருக்குப் பொருள் குறித்தவாறு; ஈண்டு இவ்வாற்றாற் கூறியது சிவனடிமைப் பண்பிற் பிறழாத நிலையினைத் தம் ஒழுக்கத்தால் உலகுக்குஅறிவுறுத்தி வழிப்படுத்தும் தன்மை குறித்தற்கு.

இவ்வாறே முன், "நந்தமை யாளுமேயர் காவலர்" என்று ஒப்பக் கூறியது நோக்கற்பாலது.

அவர்க்கு நகைமுகம் நல்கி என்க. அவர் - எதிர்கொள்ள வந்த மாந்தர்; நகை முகம் நல்குதல் - வரவேற்பை ஏற்று மகிழ்ச்சிக் குறியாக இன்முகம் காட்டுதல். நகையோடு கூடிய முகமலர்ச்சியைக் காட்டி; மூன்றும் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்கதொகை.

மெய்ம்மையாம் விருப்பினோடு மேவி - மெய்யடிமைத் திறமே பற்றி உள தாகிக் கலிக்காமனாரது நட்பினை விரும்பும் மனநிலை பொருந்தி; ஆம் - ஆக்கச் சொல் இந்நிலை இனி உண்மையேயாகி நிறைவுறும் என்ற குறிப்புப்பட நின்றது; ஆதல் - விளைதல்.

தவிசு - நம்பிகளுக்கென்று அமைத்த ஆசனம். 400

3555. (வி - ரை) வழாமை - கோண்டு என்று கூட்டுக.

பான்மை அர்ச்சனைகள் எல்லாம் - சிவனடியார்களையும் சிவாசாரியர்களையும் உபசரிக்கும் முறை இங்கு அர்ச்சனை எனப்பட்டது; பான்மை - ஆகமவிதிப் பகுப்பு; சிறப்பு மிக்க எனினுமாம். அர்ச்சனை - தூப தீப பாத்தியம் அர்க்கியம் முதலியவை. 16 வகை உபசாரங்கள்.

பண்பினில் வழாமை - பண்பாவது செய்யும் முறை; அர்ச்சனைகள் என்பது உபசாரப் பகுதிகளையும், பண்பு - என்பது அவை செய்யும் முறைகளையும் குறித்தன. ஏந்த என்று பாடங்கொண்டு முன்கூறிய அர்ச்சனைப் பகுதிகளாகிய பாத்திய அர்க் கியம் சாந்தம் புட்பம் தூப தீபம் முதலியவற்றை ஏந்த என்பது இராமநாதச் செட்டி யார் குறிப்பு; "கதுமெனக் கணவ னாரைக் கண்ணுதற் கன்ப ரோடும், விதிமுறை தீப மேந்தி" (851) என்றதும், "நங்கை பரவை யார்திருமா ளிகையி னண்ண நன் னுதலார், பொங்கு விளக்கு நிறைகுடமும் பூமா லைகளும் புகையகிலும், எங்கு மடவா ரெடுத்தேந்த" (3817 - கழறிற் - புரா. 70); "இனிய பஞ்ச வாசமுட னடைக்கா யிலையு மேந்தினார்" (ஷை 77) என்பனவும் காண்க.

நான்மறை தோடர்ந்த வாய்மை - வேதவுண்மைகளையே விளக்கும் திருவாக்குக் களாகிய தேவாரங்களை அருளும்; தோடர்தல் - கருத்துக்களை எடுத்து விரித்தல்; நான்மறை தோடர்ந்த வாய்மை - சிவாகமங்கள் என்ற குறிப்புமுடையது.

கோண்டு - ஏற்றுக்கொண்டு; அங்கீகரித்து.

ஊனவெஞ்சூலை - ஊனம் - கொடுந்துயர் என்ற பொருளில் வந்தது; வெம்மை - கொடுமை; இந்த இரண்டு அடைமொழிகளும், ஊனம் - வயிற்றினைக் கிழித்த லாகிய உடற் சேதத்தினையும், வெம்மை - உயிர் நீக்கிய கொடுமையினையும் செய் யும் நிலை என்ற சரித நிகழ்ச்சியின் உண்மை நம்பிகளது மெய்வாக்கினைப் பற்றி விளக்கி நிற்றல் காண்க; வாய்மை - என்றதும். இக்குறிப்பு; வருந்துகின்றேன் - நிகழ்ந்தவை பற்றிய குறிப்பும் தருவது காண்க. இங்கு - இப்போது; இடம் காலமும் குறித்தது.

ஊன வெஞ் சூலை நீக்கி உடன் இருப்பதனுக்கு - மிக வருந்துகின்றேன் - சூலை யினை நீக்கி அவருடன் கூடி மகிழ்ந்திருக்கும் நிலையை விரும்பினேனாதலின் அது இன்னும் நேராமை பற்றி வருந்துகின்றேன் என்பதாம்; அவர் சூலை வாய்ப் பட்டுக் கிடக்கின்றமையால் நன்னிலையின்றி உடனிருத்தல் கூடப் பெறாமை வருத் தத்தின் காரணம் என்றபடி. சூலை நீக்கமும் உடனிருக்கும் இன்பமும் விரும்பிய

படியாம்; அவரைக் காணாது செல்லும் கணந்தோறும் வருத்தம் பயப்பதாம் என்க. 401

3556. மாதர்தம் மேவ லாலே மனைத்தொழின் மாக்கண் "மற்றிங்
கேதமொன் றில்லை; யுள்ளே பள்ளிகோள் கின்று" சென்னத்
"தீதணை வில்லை யேனு மென்மனந் தேருளா தின்னம்
ஆதலா லவரைக் காண வேண்டு"மென் றருளிச் செய்தார். சு0உ

(இ - ள்) மாதர் தம் ஏவலாலே - அம்மையாரின் ஏவுதலின்படி; மனைத் தொழில்...என்ன - மனையிற் றொழில் செய்யும் பரிசனங்கள் "இங்குவேறு கெடுதி ஒன்றுமில்லை; அவர் (கலிக்காமனார்) உள்ளே பள்ளிகொள்கின்றார்" என்று நம்பிகளிடம் கூற; தீது அணைவில்லையேனும்...அருளிச் செய்தார் - (நம்பிகள் அது கேட்டு) தீமையின் சார்வு இல்லையாயினும் எனது மனம் இன்னும் தெளிவு பெறவில்லை; ஆதலினாலே அவரை நான் காணவேண்டும் என்று அருளிச் செய்தனர்.

(வி - ரை) மாதர்-கலிக்காமனாரது தேவியார்; முன் (3552-3553) கூறியவையும் இங்குக் கூறியவையும் அந்தத் திருமனையின் நிகழ்ச்சிகள் யாவும் அம்மையாரே உளங்கொண்டு ஆணையிட்டு நடாத்தி வந்த முறையினை நன்கு விளக்கும். மனையின் நிகழும் நடை முறைகளுக்கெல்லாம் தலைவியாரே பொறுப்புள்ள தலைவியாவார் என்ற பெண்மை நலம் பற்றிய நீதி விளங்குதல் காண்க; சிறுத்தொண்ட நாயனார் புராணத்தினுள் உத்தராபதியார் எழுந்தருளியபோது மனைக்கடனுடையாராய், "மனையறத்தின் வேராகி விளங்கும் திருவெண்காட்டு நங்கை" யம்மையின் செயல் நிகழ்ச்சிகள் ஈண்டு நினைவு கூர்தற்பாலன.

ஏவலாலே மனைத்தொழில் மாக்கள் என்ன - தலைவியர் ஏவியவாறே அமைந்து பணி செய்யக் கடமை பட்டவர்கள் பரிசனங்கள் என்பது; தொழில் - மாக்கள் என்றது மிக்குறிப்பு. மனைத்தொழில் - நான்காம் வேற்றுமைத் தொகை.

மற்றும் ஏதம் ஒன்று இல்லை - மற்றும் ஏதம் - நீங்கள் கூறிய வெஞ்சூலையினைத் தவிர வேறு கெடுதி; துன்பம்; ஒன்று - ஒன்றும் என முற்றும்மை தொக்கது. உயிர் நீங்கியதனால் இனி வரக்கடவதாகியஏதம் ஒன்றுமில்லை என்ற குறிப்புடனும் நின்றது; உள்ளே - மனையினுள்ளே.

தீது அணைவு இல்லையேனும் இன்னம் என மனம் தேருளாது - நீங்கள் கூறுவது உண்மையேயாயினும் என்றபடி. அணைவு - அணைந்தது.

இன்னம் - நீங்கள் தீதணைவில்லை என்று உறுதிக் கூறக் கேட்டபின்னும்; மனம் தேருளாது - என உள்ளம் தெருட்சி - அமைதி - அடையவில்லை. கலக்கம் நீங்கவில்லை.

தேருளாது - தேருட்சியாவது மனநிலை அறிவுற்றுத் தெளிவு பெறுதல். இது போன்றே அப்பூதியார் புராணத்தினுள் "இப்போ திங்கவ னுதவான்" என்று அப்பூதியார் கூறக்கேட்ட ஆளுடைய அரசுகள் "இவ்வுரை பொறாதென் னுள்ளம்; என்செய்தா னிதற்கொன் றுண்டால்" (1815) என்று அருளிய நிலை இங்கு நினைவு கூர்தற்பாலது. சிவனருள் நிறைவினுள் அடங்கித் தினைத்து நிற்கும் எந்தம் பெருமக்களின் உள்ளத்தினுள் நிறைந்து இறைவர் தாமே காட்டி நடத்துவிப்பாராதலின் அவர்களறிவு உண்மை நிலைகளைத் தெள்ளிதி னறிதல் எளிதென்க.

ஆதலால் காணவேண்டும் - அவர் தீதணைவின்றி யிருப்பினும் என் மனத்தெருளாமையினால் அவர் பொருட்டன்றி என் பொருட்டே - அது தெருட்சி பெறும் பொருட்டுக் - காணவேண்டும் என்பது.

அருளிச் செய்தார் - காண்பது கருதி மொழிந்த அளவே மேல் இறைவர் அருளிப் பாட்டுக்கு வழியாக நிகழ்வது என்றது குறிப்பு. 402

3557. வன்றொண்டர் பின்னுங் கூற, மற்றவர் தம்மை காட்டத்
துன்றிய குருதி சோரத் தொடர்குடர் சொரிந்துள் ளாவி
பொன்றியே கிடந்தார் தம்மைக் கண்டபின் "புகுந்த வாறு
நன்"றென மொழிந்து "நானு நண்ணுவே னிவர்முன்" பென்பார்,

3558. கோளுறு மனத்த ராகிக் குற்றுடை வாளைப் பற்ற
ஆளுடைத் தம்பி ரானா ரருளினா லவரு முய்ந்து
"கேளிரே யாகிக் கெட்டே" னெனவிரைந் தெழுந்து கையில்
வாளினைப் பிடித்துக் கொள்ள வன்றொண்டர் வணங்கி வீழ்ந்தார்.

3557. (இ - ள்) வன்றொண்டர்...காட்ட - வன்றொண்டர் அது கேட்ட பின்னரும் இவ்வாறு சொல்ல மற்று அவர்கள் (அழைத்துச் சென்று) அவரை (கலிக்காமனாரை)க் காட்ட ; துன்றிய...கண்டபின் - நிரம்பிய இரத்தம் வெளி வந்து தொடர்ச்சியாகிய குடர் வெளிப் போந்து உயிர் நீங்கியே கிடந்த அவரைக்கண்டவுடனே ; புகுந்த...மொழிந்து - நிகழ்ந்தவாறு நன்று ! என்று கூறி ; நானும்... என்பார் - நானும் இவர்முன் இவ்வாறே சார்வேன் என்பாராகி, ௪௦௩

3558. (இ-ள்) கோளுறும்...பற்ற-தற்கொலைத் துணிவு கொண்ட மனத்தினை உடையவராகி அதன்பொருட்டுக் குத்திக்கொள்வதற்குரிய அவ் வுடைவாளினைத் தம் கையாற் பற்றியிட; ஆளுடை....உய்ந்து- ஆளுடைய தமது இறைவனாரது திருவருளினாலே அக்கலிக்காமனாரும் மீள உயிர் பெற்று ; கேளிரே...பிடித்துக் கொள்ள - நட்புடையவரேயாகிக் கெட்டேன் ! என்று விரைவுடனே எழுந்து நம்பிகள் கையிற் பற்றிய வாளினைப் பிடித்துக் கொள்ளவே ; வன்றொண்டர் வணங்கி வீழ்ந்தார் - வன்றொண்டராகிய நம்பிகள் வணங்கி வீழ்ந்தனர். ௪௦௪

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3557. (வி-ரை) பின்னும் - "தீதணைவில்லை-உள்ளே பள்ளி கொள்கின்றார்" என்று கூறக் கேட்டபின்னரும் ; உள்ளே பள்ளி கொள்கின்றாராதலின் சென்று காணக் கூடாத நேரம் என்பது கேட்ட பின்னும் என உம்மை சிறப்பும்மை ; "இடைதெரிந் தருள வேண்டும் - துயில்கொளு மிறைவன்" (475) என்புழி வெளிப்படும் உட்குறிப்புப் போலக் கொள்க. பின்னும் கூற - முன் பாட்டிற் கூறிய அதுவேயுமன்றி அக்கருத்தினையே வற்புறுத்தி மேலும்கூற என்றுரைப் பாரும் உண்டு ; இப்பொருளில் உம்மை இறந்தது தழுவிய எச்சவும்மை.

காட்ட - உள் அழைத்துக் கொண்டு சென்று காட்ட ; மற்றவர் - மனைத் தொழில் மாக்கள் கூறியவாறுமன்றித், தாம் எதிர்பார்த்தவாறு சூலையுடனுமன்றிக் கிடந்தார் என்பது மற்று என்பதன் குறிப்பு.

துன்றிய குருதி சோர - துன்றுதல் - மிகுதல் ; சோர - சோர்ந்து என்ற வினையெச்சத்திரிபு.

தொடர் குடர்-குடர் என்னும் வயிறுள்பட்ட அன்னக் குழாய் நீண்டு சுருண்டுள்ள தொன்றுதலின் தொடர் என்றார். சோரிதல் - வாள் செறுதலாலாகிய தொளையின் வழியே ஊறுண்டு வெளியில் நீண்டு தொங்கிக் கிடத்தல் தொடர்குடர்-வினைத்தொகை.

உள் ஆவிபோன்றியே - உள் ஆவி இவற்றினுள் பொருந்திய உயிர் ; ஆவி போன்றுதல் - உயிர் நீங்குதல்.

கிடந்தார்-சோர-சோர்ந்ததனாலும், சோரிந்து - சொரிந்ததனாலும் ஆவி பொன்றினார் எனக் காரண குறிப்புப்படக் கூறியதுமாம் ; மிக்க குருதி வெளிப்படின் உயிர் போம் என்பதும், குருதி நீரே உயிர் தாங்கும் சத்துடையது என்பதும் இந்நாள் ஆங்கில மருத்துவ நூலாராய்ச்சியிற் கண்ட உண்மைகள். குருதி போனதால் மரணம் (Death due to loss of blood) என்றும், குருதிப்புனலுள் சிகப்பும் வெண்மையுமாகிய இருவகைப் புழுப்போன்ற தாதுக்களே உயிர் தாங்க உதவுவன (red and white corpusles) என்றும் கூறுவர் நவீனர் ; இதுபற்றி "...மௌ்ளகின் றாரும் புழுவினொழுங்கோ!... இன்ன தியானெனன் றறியே னென்னை, யெங்குந் தேடினன் யாதினுங் காணேன்" (திருவிடை - மும் - கோ. 13) என்பது பட்டினத்து அடிகள் திருவாக்கும் காண்க.

தொடர் குடர்-மேலே, வாயினை ஒரு கோடியாகவும், கீழே அபானத் துளையை மற்றொரு கோடியாகவும் கொண்டு நீண்டதோர் குழாயாக, இடையில் வயிறும் அதைச் சார்ந்த குடலின் சிறுகுழாய்ப் பகுதியும் பெருங்குழாய்ப் பகுதியுமாக (Small & large intestines)தொடர்ந்த நிலைபட உள்ளது உணவுச் சீரணக் கருவி என்பதும் நவீனரும் கண்டவுண்மை; தொடர் - என்ற கருத்துக் காண்க. குடர் - குடல் எனவும் வழங்கும். சோரிதல் - ஊறுண்டு வயிற்றிற் குற்றுப்பட்ட துளை வழியாக வெளியில் வந்து வழிந்தது போலத் தொங்குதல்.

கண்டபின் - கண்டவுடனே.

புகுந்தவாறு நன்று - புகுந்தவாறு - நிகழ்ந்தபடி ; நன்று எதிர்மறைக் குறிப்புப் பட நின்ற துன்பமொழி. புகுந்த-தீங்கு வந்து அடைந்த ; நான் வந்த என்றலுமாம்.

நானும் இவர் முன் நண்ணுவேன் - இவர் சென்றது போல நானும் உயிர் துறந்து செல்வேன் ; நண்ணுதல் - உடல் விட்டபின் சாருமிடத்திற்கு என்பது குறிப்பெச்சம். உம்மை இவருடன் இவர்போலவே என்று உம்மை இறந்தது தழுவிய எச்சவும்மை ; முன் - முன்பு. இடம் குறித்தது. முன் - இவர் செல்லு முன் ; முன்பாக என்றலுமாம்.

என்பார் - முற்றெச்சம். என்பாராகி - மனத்தராகிப் பற்ற என வரும்பாட்டுடன் கூட்டுக.

இவர் - முன்பு கிடந்த கலிக்காமனாரைச் சுட்டிய அணிமைச் சுட்டு. 403

3558. (வி-ரை) கோள்-தற்கொலை துணிந்த கொள்கை ; உறுதல் அதனாற் கொள்ளப்பட்ட நிலை.

குற்று உடை வாள் - குற்று - குத்துதல் ; "நெற்குறுபாட் டொலிபரக்கும்" (1049); குற்று - குறுகிய - சிறிய - என்ற குறிப்பு முடையது ; இது கலிக்காமனார் வயிற்றிடைக் குத்திக்கொண்டு அவர்பாலிருந்த உடைவாள் (3551). உடையிற் செருகும் வாள் உடைவாள். குற்று - குற்றிக்கொண்ட என்றலுமாம்.

பற்றுதல் - விரைவிற் பறித்துப் பிடித்தல்.

ஆளுடை...உய்ந்து - ஆளுடை - இருவரையும் ஆட்கொண்ட, ஆளாக வுடைய ; அவரும்-ஆவி பொன்றிக் கிடந்த அவரும் (கலிக்காமனாரும்); உம்மை சிறப்பு; உய்ந்து-உய்தல் - ஈண்டு மீள உயிர்பெறுதல் குறித்தது.

கேளிரேயாகி - முன்னிருந்த பகைமையும் செற்றமும் ஒழிந்து நண்பரேயாகி; இந்த மாறுதல் முன் கூறிய எல்லா நிகழ்ச்சிகளின் மூலமாக இறைவரருளால் கலிக்காமனாரது உயிர் (சூக்கும சரீரத்துள்) நுண்ணுடலினுள் தங்கிய நிலையில் உளதாயினவாறு அவ்வச் செயல்களின் றொடர்ச்சிகளுள் வைத்து உய்த்துணர்ந்து கொள்க. அருளினால் - என்பது இத்துணையும் ஒன்று சேர்த்துக் கூறியபடியாம்; கேளிர் - நண்பர்; பெரும்பான்மை நட்புமிகுதி யுடைமைபற்றி உறவினர்க்கும் வரும்.

"கெட்டேன்" என விரைந்தெழுந்து - "கெட்டேன்" என் காரணமாக இஃதென்ன பெருங்கேடு விளைந்தது என்று அவலங் குறித்த விரைவு பற்றிய இடைச்சொல்.

கெட்டேன் என விரைந்து எழுந்து - கெட்டேன் என்ற சொல் வாக்கினின்று எழுதலும், உடல், கிடந்த நிலையினின்று எழுதலும் ஒருங்கே விரைவின் உடனிகழ்ந்தன என்க; "தொழுதெழுவாள்" (குறள்) என்புழிப் போல.

கையில் வாளினைப் பிடித்துக் கொள்ள - நம்பிகள் கையிற் பற்றிய உடைவாளினை அவர் குறிக்கொண்ட செயல் செய்யாதவாறு தம் கையால் இறுகப் பிடித்துக்கொள்ள; "அரசரும் பெரியோர் செய்கை, யிருந்தவா றிதுவென் கெட்டே னென்றெதிர் கடிதிற் சென்று, பெருந்தடந் தோளாற் கூடிப் பிடித்தனர் வாளுங் கையும்" (596) என்ற எறிபத்த நாயனார் புராணவரலாறும், "தங்க ணிடந்தப்ப வுகவுங் கையை, ஏறுயர்த் தவர்தங் கையாற் பிடித்துக்கொண்டு" (829) என்ற திருக்கண்ணப்பதேவர் புராண வரலாறும் ஈண்டு நினைவு கூர்தற்பாலன.

வன்றொண்டர் வணங்கி வீழ்ந்தார் - தாம் வேண்டியவாறு பிழைநீங்கும் நண்பு பெற்றமையாலும், இறைவரருள் வெளிப்பட்ட இடமாதலாலும் நிலமுற வீழ்ந்து வணங்கினர்; பகை நீங்கிய எறிபத்த நாயனாரும் புகழ்ச்சோழ நாயனாரும் (முன்குறித்த அந்நிகழ்ச்சியிற்) திருவருள் வெளிப்பாட்டின்பின் ஒருவரை யொருவர் அடிவீழ்ந்து வணங்கிய நிலை (599) யும் காண்க. மேற்பாட்டுப் பார்க்க. 404

3559. மற்றவர் வணங்கி வீழ, வாளினை மாற்றி யேயர்
கொற்றவ னாரு நம்பி குரைகழல் பணிந்து வீழ்ந்தார்;
அற்றைநா ணிகழ்ந்த விந்த வதிசயங் கண்டு வானோர்
பொற்றட மலரின் மாரி பொழிந்தனர் புவனம் போற்ற. சo௫

(இ-ள்) மற்று...வீழ - இவ்வாறு நம்பிகள் வணங்கிவீழக் கண்டு; வாளினை.. வீழ்ந்தார் - ஏயர் கோனாரும் வாளினை அகற்ற நம்பிகளது சத்திக்கும் கழலணிந்த திருவடிகளிற் பணிந்து வீழ்ந்தனர்; அற்றைநாள்...போற்ற - அன்று நிகழ்ந்த இந்த அதிசயத்தினைக் கண்டு தேவர்கள் இந்நிலவுலகத்தவர்கள் துதிக்கச் சிறந்த அழகிய கற்பக முதலிய மலர்களை மழைபோலப் பொழிந்தனர்.

(வி-ரை) மற்று - முன் கூறியவாறு. அவர் - நம்பிகள். வாளினை மாற்றி - நம்பிகள் பற்றிய வாளினை ஏயர்கோனார் பிடித்துக்கொண்ட பின், நம்பிகள் அதனை விட்டு நிலமிசை வீழ்ந்து வணங்கியதனால் அந்த வாள் ஏயர்கோனார் கையில் வந்தது; அதனை மாற்றினார் என்பது; மாற்றுதல் - பிடித்த நிலையினின்றும் மாற்றுதல்; வேறாக எறிந்துவிடுதல்.

குரைகழல்-குரைத்தல்-ஒலித்தல்; கழல் - வீரக்கழல்; கழலையணிந்த திருவடிக்கு வந்தது தானியாகுபெயர்; ஏயர்கோனாரது பகைமையை நீக்கி வெற்றி கொண்ட

குறியாகக் கழல் என்றார். கழல் - ஈண்டு வெற்றிக்குறி என்ற பொதுமையை உணர்த்திய குறிப்புமாம். நம்பிகள் அரசர் திருவுடையாராதலின் அணிந்த கழல் என்பதுமாம். ஏயர்கோனார் வணங்கி வீழ்ந்தபோது நம்பிகள் திருவடி பெயர்க்கக் கழல் ஒலித்த குறிப்புமாம்.

வீழ்ந்தார் - தன்வயமிழந்து வீழ்ந்தனர் என்பது; தமது முன்னை நினைவுகளையும், தாமே பிழைபட்டதனையும் நினைந்து மனமுருகிய நிலையினால் அவசமாயினர் ; இரண்டிடத்தும் வீழ்ந்தார் என்றது அவர் வீழ்ந்த கருத்துப் பற்றியே இவரும் வீழ்ந்தார் என்ற குறிப்பும் தருவது காண்க.

புவனம் போற்ற வானோர் - மலரின்மாரி பொழிந்தனர் என்க; புவனம் - நில வுலகத்துள்ளோர் ; வானோர் சிவனருள் வெளிப்பாடு கண்டு பொழிந்தனர்; உலகரும் அது கண்டு போற்றினர் என்க. புவனம் - இடவாகு பெயர்.

3560. இருவரு மெழுந்து புல்லி யிடைவிடா நண்பினாலே
பொருவரு மகிழ்ச்சி பொங்கத் திருப்புன்கூர்ப் புனிதர் பாதம்
மருவினர் போற்றி நின்று, வன்றொண்டர் தம்பி ரானார்
அருளினை நினைந்தே "யந்த ணாள"னென் றெடுத்துப் பாடி, சஉசு

3561. சிலபகல் கழிந்த பின்பு திருமுனைப் பாடி நாடர்
மலர்புகழ்த் திருவா ரூரின் மகிழ்ந்துடன் வந்த வேயர்
குலமுதற் றலைவ னாருங் கூடவே குளிர்பூங் கோயில்
நிலவினார் தம்மைக் கும்பிட் டுறைந்தனர் நிறைந்த வன்பால். சஉஎ

3560. (இ - ள்) இருவரும் எழுந்து புல்லி - இருவர்களும் (வீழ்ந்து வணங்கிய நிலையினின்றும்) எழுந்து தழுவிக்கொண்டு ; இடைவிடா...பொங்க - இடையறாத நண்பினுடனே ஒப்பற்ற மகிழ்ச்சி மேன் மேலும் பொங்க ; திருப்புன்கூர்... நின்று - திருப்புன்கூரிற் சென்று அங்கு விளங்க வீற்றிருந்தருளிய இறைவரது திருவடிகளிற் பொருந்த வணங்கித் துதித்து நின்று ; வன்றொண்டர்...பாடி - வன்றொண்டராகிய நம்பிகள் தமது பெருமானாரது திருவருளினை நினைந்து "அந்தணாளன்" என்று தொடங்கிப் பாடியருளி, சஉசு

3561. (இ - ள்) சிலபகல் கழிந்தபின்பு - சில நாட்கள் இவ்வாறு செல்ல ; திருமுனைப்பாடி நாடர் - திருமுனைப்பாடி நாடராகிய நம்பிகள் ; மலர்புகழ்...... வந்த - விரிந்த புகழினையுடைய திருவாரூரிலே மகிழ்ச்சியுடன் தம்முடன் கூடத் தொடர்ந்து வந்த; ஏயர்......கூடவே - ஏயர் மரபில் வந்த தலைவராகிய கலிக்காமனாருடன் கூடவே ; குளிர் பூங்கோயில்...அன்பால் - குளிர்ந்த பூங்கோயிலின் கண் நிலைபெற எழுந்தருளிய இறைவரைக் கும்பிட்டு நிறைந்த அன்பினாலே அங்குத் தங்கியருளினார். சஉஎ

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபுகொண்டன.

3560. (வி - ரை) இருவரும் எழுந்து புல்லி - எழுந்து - "வன்றொண்டர் வணங்கி வீழ்ந்தார்" (3558); "ஏயர் கொற்றவனாரும் நம்பி குரைகழல் பணிந்து வீழ்ந்தார்" (3559) என்றபடி இருவரும் வீழ்ந்த நிலையிற் கிடந்தார்களாதலின் அந்நிலையினின்றும் எழுந்து ; புல்லுதல் - தழுவிக்கொள்ளுதல் ; இஃது அன்புடையார் தலைப்பெய்யும் கூட்டத்தின் நிகழும் மெய்ப்பாட்டுவகை.

இடைவிடா நண்பு - முன்போலன்றி, இடையறாத தொடர்புடைய நட்பு.

திருப்புன்கூர் - திருப்பெருமங்கலத்தின் மிக அணிமையில் வடகிழக்கில் 2 நாழிகையளவில் உள்ள பதி; இங்குக் கலிக்காமனார் அதிகமாயின திருப்பணி யனேக முஞ் செய்தும், 12 + 12 = 24 = வேலி நிலங்கள் விட்டும் தமது அபிமானத் தலமாகக் கொண்டு வழிபட்டு வந்தனர்; ஆதலின், இங்குத், திருவருள் வெளிப்பாடு கண்ட வுடன் அந்நன்றியின் பொருட்டு அங்குச் சென்று இறைவரை வணங்கினர்.

மருவினர் போற்றி நின்று - மருவினர் போற்றி - மருவினராகிப் போற்றி. மருவிப்போற்றி; மருவினர் - முற்றெச்சம்; மருவுதல் - அடிசேரப் பொருந்தும் வணக்கம் செய்தல்.

இருவரும் போற்றி நின்று - வன்றொண்டர் - பாடி - இருவரும் போற்றுதல் செய்தனர்; அவருள் வன்றொண்டர் ஒருவரே பதிகம் பாடினர்; இருவர்பாலும் சரித நிகழ்ச்சிகளும் பிணைந்து நிகழ அந்நிலையினில் இரண்டு திறத்தினையும் வேறு பிரித்துக் காட்டும் கவிநயம் கண்டுகொள்க; இவ்வாறே மேல்வரும் பாட்டிலும் காண்க.

"அந்தணாளன்" என்று - அந்தணாளன் என்பது பதிகத் தொடக்கம்; இதனுள் ஏயர்கோனாரது அடிமைத் திறத்தினைச் சிறப்பித்தும், (பதிகம் 2-3- பாட்டுக்கள்) சூலைதந் தாட்கொண்ட வரலாற்றின் அருளிப் பாட்டைப் போற்றியும் அருளிச் செய்துள்ளமை காண்க. பதிகப் பாட்டுக் குறிப்புப் பார்க்க.

பாடிச் சிலபகல் கழிந்த பின்பு என்று மேல்வரும் பாட்டுடன் முடிக்க போற்றி நின்று, வன்றொண்டர் பாடி, அதன்பின் பலபகல் கழிந்தபின் எனக. 406

3561. (வி - ரை) பகல் - நாள் என்ற பொருளில் வந்தது.

திருமுனைப்பாடி நாடர் - ஆரூர் நம்பிகள்; நாடர் - உடன் வந்த - ஏயர் தலைவனு ருங் கூடவே - ஆரூரில் - பூங்கோயில் நிலவினார் தம்மைக் கும்பிட்டு என்று கூட்டி முடிக்க. நிறைந்த அன்பால் - உறைந்தனர் - என்க.

மகிழ்ந்துடன் வந்த - கலிக்காமனார் நம்பிகளோடும் கூடி மகிழ்ந்து திருவாரூருக்கு உடன் சென்று அவருடனே புற்றிடங்கொண்ட இறைவரைத்தொழுதிருந் தனர் என்பது. ஏயர்கோனாரது அபிமானத் தலமாகிய திருப்புன்கூருக்கு நம்பிகளும், நம்பிகளது திருத்தலமாகிய திருவாரூருக்கு ஏயர்கோனாரும் உடன் போந்தமை சிவன்பால் அன்பின் உரிமைத் திறத்தின் பண்பாலாகியது. ஆளுடைய பிள்ளை யாரது திருத்தாயர் பிறந்த தவத் திருநனிபள்ளி மறையோர் முதலியோர் "சடை யாரை யெங்கள் பதியினிற் கும்பிட்டருள அங்கே யெழுந்தருள வேண்டும்" என (2010) விண்ணப்பித்துப் கொடு போந்த வரலாறும், அது போல்வன பிறவும் இங்கு நினைவு கூர்தற்பாலன. நிலமும் நாடும் மனையும் உடற்சுற்றமும் போன்ற பாச சம்பந்தமான பற்றுக்களானன்றிச் சிவசம்பந்த மொன்றே கருதி அளவளாவுதல் எந்தம் பெருமக்கள் பண்பாகும்.

குளிர் பூங்கோயில்-குளிர்ச்சியுடைய நீர்ப்பூவாகிய தாமரைபோன்ற கோயில்; பூங்கோயில் என்ற பெயர்க் காரணக்குறிப்பு; "அனையதனுக் கமலரா மறவனார் பூங்கோயில்"(135); இக்குளிர் பிறவிவெப்பத்தை மாற்றும் தன்மையுடையது என்ப தும் குறிப்பு. ஈண்டுக் கலிக்காமனார் கொண்டிருந்த மூண்ட சினத்தினையும் மாற்றித் தண்ணிய நட்பு உளதாகச் செய்த குறிப்புமாம்.

நாடர் - தலைவனுருங் கூடவே நிலவினாரைக் கும்பிட்டுறைந்தனர் என்க.

நிறைந்த அன்பால் உறைந்தனர் - என்பதாம். மனத்தினுள் முன்னர்ப் பகைமை யிருந்த இடத்தில் அதனைப் போக்கி அன்பு நிறைதலினால் என்க. 407

நண்பால்—என்பதும் பாடம்.

## திருப்புன்கூர்

திருச்சிற்றம்பலம் பண் - தக்கேசி

அந்த ணாளனுன் னடைக்கலம் புகுத வவனைக் காப்பது காரண மாக,
வந்த காலன்ற னாருயி ரதனை வவ்வி னாய்க்குன்றன் வண்மைகண் டடியேன்
எந்தை நீயெனை நமன்றமர் நலியி னிவன்மற் றென்னடி யானென விலக்குஞ்
சிந்தை யால்வந்துன் றிருவடி யடைந்தேன் செழும்பொ ழிற்றிருப் புன்கூ ருளானே (1)

"வையக முற்று மாமழை மறந்து
வயலி னீரிலை மாநிலந் தருகோம்
உய்யக் கொள்கமற் றெங்களை" யென்ன
வொளிகொள் வெண்முகி லாய்ப்பரந் தெங்கும்
பெய்யு மாமழைப் பெருவெள்ளந் தவிர்த்துப்
பெயர்த்தும் பன்னிரு வேலிகொண் டருளுஞ்
செய்கை கண்டுநின் றிருவடி யடைந்தேன்
செழும்பொ ழிற்றிருப் புன்கூ ருளானே. (2)

ஏத நன்னில மீரறு வேலி யேயர் கோனுற்ற விரும்பிணி தவிர்த்துக்
கோத னங்களின் பால்கறந் தாட்டக் கோல வெண்மணற் சிவன்றன்மேற் சென்ற
தாதை தாளற வெறிந்தசண் டிக்குன் சடைமிசைமல ரருள்செயக் கண்டு
பூத வாளிநின் பொன்னடி யடைந்தேன் பூம்பொ ழிற்றிருப் புன்கூ ருளானே. (3)

நற்ற மிழ்வல்ல ஞான சம்பந்த
னாவினுக் கரச னாளைப்போ வானும்
கற்ற சூதனற் சாக்கியன் சிலந்தி
கண்ணப் பன்கணம் புல்லனென் றிவர்கள்
குற்றஞ் செய்யினுங் குணமெனக் கருதுங்
கொள்கை கண்டுநின் குரைகழ லடைந்தேன்
பொற்றி ரண்மணிக் கமலங்கண் மலரும்
பொய்கை சூழ்திருப் புன்கூ ருளானே. (4)

இயக்கர் கின்னரர் யமனொடு வருண
ரியங்கு தீவளி ஞாயிறு திங்கள்
மயக்க மில்புலி வானர நாகம்
வசுக்கள் வானவர் தானவ ரெல்லாம்
அயர்ப்பொன் றின்றிநின் றிருவடி யதனை
யார்ச்சித் தார்பெறு மாரருள் கண்டு
திகைப்பொன் றின்றிநின் றிருவடி யடைந்தேன்
செழும்பொ ழிற்றிருப் புன்கூ ருளானே. (6)

கம்ப மால்களிற் றின்னுரி யானைக் காமற் காய்ந்ததோர் கண்ணுடை யானைச்
செம்பொ னேயொக்குந் திருவுரு வானைச் செழும்பொ ழிற்றிருப் புன்கூ ருளானை
உம்ப ராளியை யுமையவள் கோனை யூரன் வன்றொண்ட னுள்ளத் தாலுகந்
தன்பி னாற்சொன்ன வருந்தமி ழைந்தோ டைந்தும் வல்லவ ருருவினை யிலரே. (10)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—ஏயர் கோனாரது அடிமைத் திறத்தினைப் பாராட்டுதலும், அவர் பிணி தவிர்த்து அருளியவகையால் அவருடன் தமக்கு நட்புச் செய்தருளிய அருளிப் பாட்டினைப் போற்றுதலும் இறைவரை உயிர்கள் வந்தடைதற்குரிய காரணங்களை எடுத்துக் காட்டுதலும் குறிப்பு. பாட்டுத் தோறும் ஈற்றடிகள் பார்க்க.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) அந்தணாளன் - மார்க்கண்டேயர் ; காரணமாக வவ்வினாய்க்கு என்று கூட்டுக. வந்த-ஆயுள் எல்லை குறித்த நாள் வந்ததென்று உயிர் கொள்ள வந்த ; காலன் - காலத்தை அறுதியிட்டு அளந்து காலத்தால் வந்தான் என்ற குறிப்புப்பெறக் காலன் என்றார் ; காலம் - நியதியாதி தத்துவங்களின் றொழிற் பாட்டினுக்குள் நின்று இறைவராணையின்வழி ஏனை உயிர்களின் காலத்தை அறுதியிட்டுக் கொண்டு செல்லும் ஆற்றலுடையது காலனது உயிராதலின், ஆருயிர் என்றார் ; ஆர் - நிறைதல் ; வலிமை நிறைதல் குறித்தது ; வவ்வுதல் - நீக்குதல் குறித்தது ; வவ்வினாய்க்கு - வவ்விய உன்னிடத்து என நான்கனுருபு ஏழனுருபுப் பொருளில் வந்தது ; இவன் மற்றென் அடியானென விலக்கும் சிந்தையால் - இவன் என் அடியான் ; உனது ஆணையுட்பட இயைபில்லை என்று விலக்கித் தம் உலகஞ் சார்வித்தல் ; " அலமந்த போதாக அஞ்சேலென் றருள்செய்வான் " (பிள். ஐயாறு - 1) என்ற திருவாக்கும், அரசுகளது காலபாராயணத் திருக்குறுந் தொகைப் பதிகமும், கந்தபுராணத்தினுள் வீரவாகுதேவர் தமது தம்பியரைக் கொணரும்படி காலனுக்கு எழுதிவிட்ட ஆணையும், அதன்படி அவன் அவர்களுடனே வந்து விண்ணப்பித்த வரலாறும் (அக்கினிமுகாசுரன் வதை 211—229), இவைபோல்வன பிறவும் ஈண்டு நினைவு கூர்தற்பாலன. காலன் கைப்படுதலைத் தவிர்ப்பவன் காலகாலனே; இப்பிறவியினிறுதியிற் காலன் வேதனை தவிர்ப்பதன்றி, இனியும் பிறவியில் வாராது காத்தலால் மேலும் அவ்வேதனை யில்லாது செய்பவன் என்று தமக்குறுதி சொல்வதுபோற் சொல்லி உலகை வழிப்படுத்தி உபதேசித்தபடியாம். இச்சரிதத்தினுட் காலனைத் தவிர்த்து ஏயர்கோனாருக்கு மீள வுயிரருளிப குறிப்பும் காண்க;—(2)ஒரு காலம் மழை மறுத்திடப் புன்கூர் இறைவரிடம் மழைவேண்டி ஏயர்கோனார் இறையிரந்து மழை பெய்யின் அதற்காகப் பன்னிருவேலி நிலம் தானமளிப்பேன் என்றுவரங் கிடந்தார்; அதனுக்கிரங்கி இறைவர் பெருவெள்ளமாக மழையினை அருள, அவ்வெள்ளம் தவிர்க்கவேண்டி மேலும் பன்னிரு வேலி தானமளித்து வரங்கிடந்து அவ்வாறே அருளப்பெற்றனர். இந்நிலம் இருபந்து நான்கு வேலி எனக் குறிப்புப் பெற்று வழங்கலாயினமை இன்றும் நிகழ்வதாம். இச்சரிதம் பற்றித் திருவருளைப் போற்றி ஏயர்கோனாரது அடிமைத் திறத்தினையும் பாராட்டியது இத்திருப்பாட்டு. " வையக முற்றும்...எங்களை என்ன - இது ஏயர்கோனார் வரங்கிடந்த நிலை ; அவர் குடிமக்களின் நலத்திற் பொறுப்புள்ள நிலத்தலைவராதல் மாநிலந் தருகோம் என்றதனாலும் குடிகளின் பொருட்டு வரங்கிடந்து பூதானமும் செய்தமையாலும் அறியப்படும் ; அரசர் சேனைத்தலைவராதற் குறிப்பும் காண்க. பெயர்த்தும் - என்றமையால் முன்னளித்த 12 வேலி கொண்டமையுடன் மீண்டும் 12 வேலி கொண்டு என்பது பெறப்படுதல் காண்க ; வேண்முகில் - கருமுகிலினும் சிறந்து எங்கும் பரந்து செறிந்து அதிக காலம் மிக்க நீர்ப்பெயல் தரும் தன்மையுடையது ; ஒளி - மின்னுடன் கூடிய வெண்மை ஒளி ; " பொன்னம் பலத்துறை புண்ணிய னென்பர் புயன்மறந்த, கன்னன்மை தீரப் புனிற்றுக் கலிக்காமற் கன்றுபுன்கூர், மன்னு மழைமொழிந் தீரறு வேலிகொண் டாங்கவற்கே, பின்னும் மழைதவிர்த் தீரறு வேலிகொள் பிஞ்ஞகனே" (கோயிற்றிருப் பண்ணியர் விருத்தம் 54) என்று நம்பியாண்டார் நம்பிகள் இதனைப்

போற்றிய திருவாக்கும் காண்க ;—(3) ஏத நன்னிலம் - ஏதம்-பெருமை ; நன்மை ; " ஏதம் செய்தவ ரெய்திய இன்பம்" (திருநின்றி - 6 - தக்கேசி நம்பி); ஈராறு வேலி-பெயர்த்தும் கொளத்தந்த பன்னிருவேலி ; வேலி தந்த எயர் என அடைமொழி யாக்குக ; இரும்பிணி-இச்சரிதம் பற்றிய சூலை நோயின் குறிப்பு; கோதனங்களின்... அருள் செய் - சண்டீசர் சரிதம்; பூத ஆளி - பூதம் - உயிர்கள்; பூத ஆளி - உயிர்களை ஆட்கொள்ளும் தலைவன் ; பசுபதி என்ற பொருள் ;—(4) தூற்றம் செய்யினும் - உம்மை எதிர்மறை குறித்தது ; உலக நிலை பற்றிக் குற்றமாகக் காணப்படினும், இவை எவையும் குற்ற மன்று என்பது ; கற்ற சூதன் - மூர்க்கநாயனார் ; " கற்ற சூதால்" (மூர்க்கர் - புரா - 7 = 3624) என்று இத்தொடரினை ஆசிரியர் எடுத்தாண்டு விளக்குதல் காண்க ; சமணரைக் கழுவேற்றல் - சமணம் புகுந்து இகழ்தல் - குலநிலை பிறழ்தல் - சூதாடல் - கல்லெறிதல் - வாய் எச்சில் நூலால் மேல் வலயமிழைத்தல் - இறைச்சி யூட்டல்-வாய்நீ ருமிழ்தல், தலைச் செருகிய இலைப்பூச் சூட்டல், செருப்படி யால் மிதித்தல் முதலியவை-திருமுன்பு தலைமயிரினை எரித்தல் என்பன முதலிய இவை உலக நிலையினும் ஏனையோர்க்கு விதித்த நிலையினும் வைத்துக் குற்றமாகஅறியார் கூறு வன என்பது குறிப்புப் போலும். எந்தம் பெருமக்கள் சரிதங்களுள் இப்பாட்டிற்குப் பொருள் காணும் நிலையிலாயினும் தூற்றம் காண ஆராய்ச்சி புரிதல் சிவாபராதமாம். முன் குறித்தவை உலகர் கூறும் வகை என்பதற் குதாரணமாகக் குறித்தவை. இது வும் ஓரளவு அபராதமே ! பெரியோரும் என் எண்ணத்துள் நிறைந்த இறைவரும் பொறுத்தருளுதல் கடன் !;—(5) நஞ்சு கண்டவர் - விட்டுணுவாதி தேவர்கள் ; இரிய - நிலைகுலைந்து பலபுறமும் ஓட ; பித்த - பிறர் உண்ணில் சாதல் விளைக்கவல் லது நஞ்சு ; அது கண்டு அவர் தப்பி ஓட அதனை உண்டு சாவைக் கோருபவர் போல நின்றது பித்தர் நிலை என்றபடி ; அடைந்தார்க்கு அருள் புரிதலிற் பித்துடை யவர் என்ற குறிப்புமாம் ; சீலம் - பொருள் ; அன்று அவர்களைக் காத்ததுமன்றி அதனை உலகறியக் கண்டத்தில் வைத்து இனி யிது கண்டேனும் உயிர்கள் வந்தடைந்து உய்க என்று கொண்ட அருட்சீலம் ;—(6) இயக்கர்...அர்ச்சித்தார் பெறும் ஆரருள். இவை பற்றிப் புராண சரிதங்கள் பலவும் காண்க ; அயர்ப்பு - மறத்தல் ; ஒன்று - ஒன்றும்; சிறிதும் ; முற்றும்மை தொக்கது;—(7) போர்த்த நீள்செவி - போர்த்த - பொத்திய ; நீள்செவி - நீண்ட காதுகளையுடைய ; "காது பொத்தரைக் கின்னரர்... குழுவுடன் கேட்ப ஆனிழற் கீழறம் பகர" (நம்பி. தேவா - நின்றி - 6); இறைவாது உபதேசம் நிரம்பக் கேட்பதற்கும் புறம் போகாது முற்றும் கேட்பதற்கும் உதவும் பொருட்டு நீண்ட செவியினைவேண்டிப் பெற்றதனுடன், அவற்றைக் கைகளினால் ஒருபுறம் - பொத்திக் கேட்டனர் இரண்டு கின்னரர்கள் என்பது வரலாறு. அந்த ணாளர் - ஈண்டு அக்கின்னரர்களைக் குறித்தது. அறம்புரிந்து - அறமுத லன்கினையும் தெரியும்படி செய்து ; சொல்லாமற் சொல்லி ; தீர்த்தன் - தூய்மை செய்பவன் ; " நாமார்த்தாடுந் தீர்த்தன் " (திருவா);—(8) மூவெயில் செற்ற ஞான்று - திரிபுர சங்காரத்தின் போது ; உய்ந்த மூவர் - அவற்றுள் இறைவரருளால் வேவாது தப்பிய அன்பர் மூவர் ; கோயில் காவலாளர் - துவாரபாலகர் ; ஒருவன் - முழா முழக்க - மூவரில் இருவர் காவலராக, ஒருவன் முழக்க ; " எண்ணுடை மூவ ரிராக்கதர்க ளெரிபிழைத்து " என்ற திருவாசகமும் காண்க. (தோணோக்) ; மாவை நோக்கி - மாவின் வடுவகிர் போன்ற கண்ணுடையவர் ; உமாதேவியார். " மாவின் வடுவகி ரன்னகண்ணீர் " (திருவா) ;—(9) அறிவினன்...புரிந்து - அறுவகைச் சம யம் - உட்சமயங்க ளாறு ; " ஆறு சமயத் தவரவரைத் தேற்றுந் தகையன " (அரசு-விருத் - இன்னம்பர்) ; " அறுவகைச் சமயத் தோர்க்கு மவ்வவர் பொருளாய் "

(சித்தி) ; அருள் புரிந்து - அவ்வவர் தகுதிக் கேற்பப் படிமுறையில் அறிவு விளக்கம் செய்து என்க ; ஆர் - நிறைந்த ; நிறைதலாவது அவ்வவரும் தாந்தாம் கண்டதே பொருள் என்று அமைவு பெற ; இது கன்மக் கூறுபாட்டினால் முழுவுண்மை விளங்க வைக்காத திரோதான சத்தியின் செயல். குறிகோள்பாடல் - இறைவரைக் குறிக் கொண்ட சாமவேதம் ; நாள் - ஆயுள் ; செறிவு - அருளின் மிகுதிப்பாடு ;—(10) உம்பராளி - தேவர்களை ஆள்பவர் ; தேவதேவர் ; ஆளி - ஆள்பவர் - பெயர்.

குறிப்பு : இத்திருப்பதிகம் மிகச் சிறப்புடையது ; பாராயணம் செய்தல் பெரும்பயன் தரும்.

தலவிசேடம் :—திருப்புன்கூர் - I பக். ௩௪௨ (பாட்டு - 261) ; III பக். ௨௮௦ ; இவை பார்க்க.

3562. அங்கினி தமர்ந்து நம்பி யருளினால் மீண்டும் போந்து
பொங்கிய திருவின் மிக்க தம்பதி புகுந்து பொற்பிற்
றங்குநா ளேயர் கோனார் தமக்கேற்ற தொண்டு செய்தே
செங்கண்மால் விடையார் பாதஞ் சேர்ந்தனர் சிறப்பி னோடும். ௪௦௮

(இ - ள்) அங்கு...போந்து - அத்திருவாரூரில் இனிதாக விரும்பி எழுந்தருளி யிருந்து நம்பிகள்பால் அருள்விடை பெற்று மீண்டும் தமது திருநகரத்தினிற் சென்று சேர்ந்து ; பொற்பில் தங்குநாள் - அழகிதாக எழுந்தருளி யிருந்த காலத்தில் ; ஏயர் கோனார்...செய்தே - ஏயர்கோனார் தமக்கேற்றனவாகிய திருப்பணிகளைச் செய்தே ; செங்கண்...சிறப்பினோடும் - சிவந்தகண்ணையும் பெருமையினையுமுடைய விடையினை யுடைய இறைவரது திருவடிகளைச் சிறப்பினோடும் சேர்ந்தனர்.

(வி - ரை) அங்கு - முன்பாட்டிற் கூறிய அத்திருவாரூரில் ; முன்னறிசுட்டு.

அருளினால் - அருள்விடை கொடுப்பப் பெற்று.

பொங்கிய திருவின் மிக்க-முன்னரே பீடுதங்கிய தெய்வத் திருப் பெருமங்கலமா யிருந்த அந்நகர் இப்பொழுது இறைவர் செய்த அருளிப்பாட்டினாலும் நம்பிகளின் நட்புச் சேர்ந்த சிறப்பினாலும் அப்பெரிய திரு மேலும் பொங்கிற்று என்பதாம்.

பொற்பில் தங்குதல் - தமது சிவச்சார்பாகிய இயல்பினால் வாழ்தல்.

தமக்கு ஏற்ற தொண்டு - இறைவன்பாலும் அடியார்பாலும் பணி செய்தல் ; "அடிபணி வாரடிச் சார்ந்து, பொங்கு காதலி னவர்பணி போற்றுதல் புரிந்தார்" (3160) ; "சடைமுடி யார்திருப் புன்கூர்க் கதிகமாயின திருப்பணி யனேகமுஞ் செய்து, நிதிய மாவன நீறுகந் தார்கழ லென்று, துதியி னாற்பரவித் தொழுது" (3161) என்றவை காண்க.

செய்தே - ஏகாரம் தேற்றம் ; தொண்டே செய்து என்று ஏகாரம் பிரித்துக் கூட்டுக.

செங்கண் மால்விடை - சிவந்த கண்ணையுடைய திருமாலாகிய விடை என் றலுமாம்.

சிறப்பினோடும் சேர்ந்தனர் என்க; சிறப்பாவது சிவசிந்தனை மறவாத அன்பு.

3563. கள்ளிரு ணைய னாரைத் தூதுவிட் டவர்க்கே நண்பாம்
வள்ளலா ரேயர் கோனார் மலரடி வணங்கிப் புக்கேன்
உள்ளுணர் வான ஞான முதலிய வொருநான் குண்மை
தெள்ளுதீந் தமிழாற் கூறுந் திருமூலர் பெருமை செப்ப. ௪௦௯

(இ - ள்) நள்ளிருள்...வள்ளலார் - நடு இரவிலே தமது தலைவரைத் தூதாக விடுத்த நம்பிகளுக்கே நண்பராக ஆகிய வள்ளலாராம்; ஏயர்கோனார் மலரடி வணங்கி - ஏயர்கோனாருடைய மலர் போன்ற திருவடிகளை வணங்கி (அத்துணை கொண்டு); உள்ளுணர்வான...செப்ப - உள்ளே உணரத்தக்கதாகிய ஞானம் முதலாகிய ஒரு நான்கின் உண்மையினைத் தெளிவிக்கும் இனிய தமிழினாற் கூறும் திருமூல தேவ நாயனாரது பெருமையினைச் சொல்வதற்கு; புக்கேன் - இனிப் புகுகின்றேன்.

(வி - ரை) நள்இருள் - நடு இரவில்; "பாதி இரவில்" (3493); திணிந்த இருளில் என்ற குறிப்புமாம்.

இருளில் - தூது விட்டவர் - என்க; இருள் - இருளின்கண்; ஏழனுருபு தொக்கது; நள் இருள் - நாயனார் என்றே கூட்டி இரவில் ஆடுகின்ற நாயனாராகிய இறைவர் என்றலுமாம். இருள்-சங்காரகாலம்; நள் இருள்-நள் - நட்புச் செய்யும்-புலவி தீர்த்து ஒன்றுவிக்கும் - கருத்துடன் கூடிய அவ்விரவிலே என்ற குறிப்பும்பட நின்றது.

தூது விட்டவர்க்கே நண்பராம் - தூது விட்டதன் பொருட்டுப் பகைமை பூண்டு தாம் வெறுத்த அந் நம்பிகளுக்கே என ஏகாரம் தேற்றம்.

நள் இருள்...வள்ளலார் - ஏயர்கோன் கலிக்காமர் சரித முழுமையும் திரட்டிய சாரமாய் எடுத்து முடித்துக் காட்டியது கவிநயம்.

செப்பப் - புக்கேன் என்று கூட்டுக. புக்கேன் - புகுகின்றேன்; இறந்தகாலம் நிகழ்காலப் பொருளில் வந்தது காலவழுவமைதி.

உள்ளுணர்வான ஞானம் - உள்ளத்தால் அனுபவத்தில் உணரப் படுவதன்றி உரையால் உரைக்கலாகாத ஞானம்; அதனையும் கூறும் என்று திருமூலர் பெருமை குறித்தவாறு.

முதலிய - முதலாக; சிறப்புடைய முடிந்த முடிபாகிய.

ஞான முதலிய ஒரு நான்கு - நான்கினுட் பயனாக வுள்ளது ஞானமாதலின் அதனைச் சுட்டிப் படிமுறையாகிய ஏனையவற்றை அதனுள் அடங்க வைத்தார். "சிறப்புடைப் பொருளை முற்படக் கிளத்தல்"; "நலஞ் சிறந்த ஞானயோகக் கிரியா சரியையெலாம், மலர்ந்த மொழித் திருமூல தேவர்" (28) என்று முடித்துக் காட்டியருளுவதும் காண்க; நான்கு - ஞானம் யோகம் கிரியை சரியை என்பன.

உண்மை - உண்மை நிலைகளை; தெள்ளும் - தெளிய அறிவிக்கும்; பிறவினைப் பொருளில் வந்தது.

ஞான முதலிய ஒரு நான்கு உண்மை - இவை சிவாகமங்களுள் இறைவனால் அருளப்பட்டன. இவற்றை இனிய தமிழினால் திருமந்திரத்தினால் அருளியவர் திருமூல தேவர்; எனவே இறைவர் அவ்வாகமங்களைத் தமிழினன்றி (வேறு) வடமொழியில் அருளினர் என்பது கருதக் கிடக்கின்றது; "ஆகமம் செப்ப வந்தேனே" (திருமந் - 1 - 73); "இங்கியான் வந்த காரணம், நீலாங்க மேனி நேரிழையாளொடு, மூலாங்கமாக மொழிந்த திருக்கூத்தின், சீலாங்க வேதத்தைச் செப்ப வந்தேனே" (ஷை 76) (இங்கு வேதம் என்பது ஆகமம் ஞானம் என்ற பொருளில் வந்தது).

தெள்ளு தீந்தமிழ் - "என்னை நன்றாக இறைவன் படைத்தனன், றன்னை நன்றாகத் தமிழ்ச்செய்யு மாறே" (ஷை 81).

உண்மை - இறைவரது சத்திய வாக்காகிய சிவாகமம்.

பெருமை-செப்ப-ஏனைச் சரிதங்கள் போல இவ்வுலகிற்பிறந்து அடிமை செய்து திருவடி யடைந்த நிலை என்பதின்றித், திருமூல தேவ நாயனார் திருக்கயிலையில்

அருள் பெற்ற சிவயோகியாகி இந்நிலவுலகில் வழிக்கொண்டு போந்த காலத்து, மூலன் என்னும் இடையன் உடலில் பரகாயப் பிரவேசம் என்ற சித்தி வழியாகப் புகுந்து, திருவாவடுதுறையிற் போதியின் கீழ் அனேக காலம் சிவயோகத்திருந்து திருமந்திரமருளினார் என்ற அளவே இப்புராணத்தினுட் பேசப்படுவதாம். அஃது அவரது சரிதம் எனப்படாது பெருமை கூறும் அளவால் அமைதலின் பெருமை செப்ப என்றார்.

தலவிசேடம் :—(1) திருப்பெருமங்கலம் - இஃது இப்பெயராலே இன்றும் வழங்குகின்றது. ஏயர்கோன் கலிக்காமனாரது பதி. அவரது திருமனை இருந்த இடம் முதலிய அடையாளங்கள் ஒன்றும் கிடைத்தில ! இங்குக் கோயிலில் அவரது திருவுருவம் இல்லை. வைத்தீசுவரன் கோயிலி (புள்ளிருக்கு வேளூர்) னின்றும் மேற்கே மட்சாலை வழி 2 நாழிகை யளவில் அடையத் தக்கது ; திருப்புன்கூருக்கு வடக்கே ஒரு நாழிகை யளவில் உள்ளது.

(2) திருப்புன்கூர் – முன் உரைக்கப்பட்டது.

---

சரிதச் சுருக்கம் :—ஏயர்கோன் கலிக்காம புராணம் நாயனார் — சோழ நாட்டிலே அணிநகரம் திருப்பெருமங்கலம். அதில் சோழர்களது சேனாபதிக் குடியாகிய ஏயர்கோக்குடி வேளாண்மையிற் சிறந்து விளங்கியது. அதனுள் வந்தருளியவர் கலிக்காமனார். அவர் சிவனடியார் பத்தியிற் சிறந்து வாழ்ந்தனர். தமது பதிக்கு அணிமையில் உள்ள திருப்புன்கூரில் அதிகமான அநேகம் திருப்பணிகளும் செய்து திருநீற்றுச்செல்வமே செல்வம் எனக்கொண்டு அந்நெறியில் ஒழுகி விளங்கினார். அந்நாளில் நம்பியாரூரர் இறைவரைப் பரவையாரது ஊடலைத் தீர்ப்பதற்காகத் தூது செல்ல ஏவியது கேட்டு மிகவும் சினந்து இழித்துரைத்தனர். அதுகேட்டு நம்பிகள் பிழையுடன்பட்டு அவரது நட்பினைப் பெறவேண்டி இறைவர்பால் விண்ணப்பித்தனர். அவரருளியவாறே அந்நட்பினையும் பெற்றருளினர் ; அவ்வரலாற்றின் விரிவே இப்புராணமாகும் ; அதுவருமாறு :—

திருத்தொண்டத் தொகையினை அருளிச் செய்தபின்னர் நம்பிகள் திருவாரூரில் புற்றிடங் கொண்டாரை முப்பொழுதும் அன்புடன் பணிந்து அங்கு எழுந்தருளியிருந்தனர். அந்நாளில் குண்டையூர்க் கிழார் என்னும் வேளாளர் பெருந்தகையார் நாடோறும் நம்பிகளது திருமாளிகைக்குத் தவிராது பலநாளும் அமுதுபடி கொடுத்துவந்தார்; அப்போது மழைவளஞ் சுருங்கியமையால், படி எடுக்கப்போதாமையால், அவர் மனம் வருந்திப் பெருங் கவலையினால் துயரெய்தி அமுது செய்யாது துயில் கொண்டனர். அன்றிரவுஇறைவர் அவர் கனவிலேவந்து "ஆரூரனுக்காக உனக்கு நெல் தந்தோம்" என்றருளிக் குபேரனுக்கு ஆணையிட, அவ்வூர் முழுதும் வானமளாவும் நெல்மலையாய்க் குவிந்தது. காலையில் அதுகண்டு அதிசயித்துக் களித்தகுண்டையூர் கிழார் அதனை எடுக்கப் போதிய ஆளில்லாமையால் நம்பிகளிடம் சென்றறிவித்தனர். அதுகேட்ட நம்பிகள் அவருக்கு முகமன்சொல்லித் தாமும் குண்டையூர் வந்து சார்ந்தனர். நெல்லின் மலையினை நோக்கி இதனை எடுக்க ஆளும் இறைவரே தரிலன்றி ஒருவராலும் எடுக்க வியலாதென்று அருகில் உள்ள திருக்கோளிலி என்னும் பதியினிற் சென்று, நெல்லிட ஆள் வேண்டி இறைவரை "நீள நினைந்தடியேன்" என்ற பதிகம் பாடியருளினர். இறைவரது அருளால் அன்றிரவு பூதங்கள் அதனை ஆரூரிற் கொண்டு

குண்டையூர் நெற் கொண்டது

சேர்க்கும் என்று ஒரு வாக்கு ஆகாயத்தில் எழுந்தது. அது கேட்டு நம்பிகள் தொழுது சென்று திருவாரூர் சேர்ந்தருளினர். அன்றிரவே இறைவர் ஏவலினால் சிவபூதங்கள் அந்நெல்மலை முழுதும் கவர்ந்து திருவாரூர் வீதி முழுமையும் ஆளியங்கா வண்ணம் நிரப்பின. பிற்றைநாட் பகல் ஆரூர் வாழ்வார் கண்டு அதிசயித்து நம்பிகளுக்கு இறைவர் அளித்தன என்று மகிழ்ந்தனர். ஆளியங்கா வண்ணம் தெரு முழுமையும் அடைத்த நெல்லைக் கண்டு பரவையார் மகிழ்ந்து அவ்வவர் மனையெல்லை அளவு உள்ள நெல்லை அவ்வவர் எடுத்துக் கொள்க என்று பறைசாற்றச் செய்தனர். திருவாரூர் நகர் வாழ்வார் அவ்வாறே கொண்டு மகிழ்ந்தனர். நம்பிகள் இறைவரைக் கும்பிட்டெழுந்தருளியிருந்தனர்.

அந்நாளில் திருநாட்டியத்தான்குடியினின்றும் கோட்புலி நாயனார் வந்து நம்பிகளைக் குறையிரந்து தமது பதியினுக்கு அழைத்துச் சென்றனர். அங்குத் தமது திருமாளிகையில் நம்பிகளை எழுந்தருளுவித்துச் சந்தனம், பூ முதலிய எல்லா உபசாரங்களையும் பூசனையினையும் முறைப்படி மிக்க விருப்பத்தோடும் செய்வித்து வணங்கினர்; பின்னர்த் தமது மக்களாகிய சிங்கடி, வனப்பகை என்ற இருவரையும் கொணர்ந்து நம்பிகளைப் பாதம் பணிவித்து "அடியேனது மக்களாகிய இவர்களை அடிமையாக ஏற்றுக் கொண்டருளித் தேவரீரது திருவடிகளைத் தொழுதிருக்கும்படி கருணை செய்தருளவேண்டும்" என்று வேண்டிக்கொண்டனர். நம்பிகள் "இவர்கள் எனக்குத் தூய மக்கள்" என்றுகொண்டு, அவர்களை மடியிலிருத்தி உட்கசிவினால் உச்சி மோந்து வேண்டுவனவும் கொடுத்து மகண்மையாகக் கொண்டருளினர். பின்பு இறைவரது திருக்கோயிலுக்குச் சென்று வணங்கிப் "பூணண்" என்று தொடங்கும் திருப்பதிகம் அருளிச்செய்து, அதன் திருக்கடைக்காப்பில் "சிங்கடியப்பன்" என்றே தம்மைவைத்துப் பாடிக் கோட்புலியாரது அருளுரிமையினையும் சிறப்பித்தருளினர். அங்குநின்றும் திருவலிவலத்தை வணங்கிப் பாடிய திருப்பதிகத்தில் திருஞான சம்பந்தர் திருநாவுக்கரசர் பாட்டுகந்தீர் என்று அருளிச்சென்று, திருவாரூரினை அடைந்து இறைவரை வணங்கி எழுந்தருளியிருந்தனர்.

திருநாட்டியத் தான்குடி - கோட்புலியார் - வனப்பகை - சிங்கடி -

அந்நாளில் திருவாரூர்த் திருப்பங்குனி உத்திரத் திருநாள் அணுகியது. அதற்குப் பரவையார், விழாவில் அடியார்களுக்குக் குறைவறுக்கும் பொருட்டுப் பொன் கொண்டணைவதற்கு நினைந்து நம்பிகள் திருப்புகலூருக்கு எழுந்தருளி அங்கு இறைவரை வணங்கிப் பாடித் தமது கருத்தினை நிகழ்வித்துக் கும்பிட்டுப், பொன் பெருமையால் வறிது புறம் போந்து, திருமுன்றிலின் ஒரு மருங்கு அமர்ந்திருந்தனர்; அப்போது திருவருளாலேயோ துயில் வந்தெய்த, அங்குத் திருப்பணிக்குப் பயிலும் சுடுமட்பலகை பல கொணர்வித்து உயரம் பண்ணி அதன்மேல் வெண்பட்டு உத்தரியம் விரித்துப் பள்ளியமர்ந்தனர். சுற்றியிருந்த தொண்டர்களும் துயின்றனர். சிறிதளவில் நம்பிகள் பள்ளியுணர்ந்தெழுந்தனர். இறைவர் திருவருளாலே வேமண் கல்லே பொன்னாயிருந்தமை கண்டனர்; மகிழ்ந்தெழுந்து இறைவரை வணங்கித் "தம்மையே புகழ்ந்து" என்ற பதிகம் பாடித் துதித்து விடைபெற்றுப் போந்து, இடையில் திருப்பனையூர் தொழுது, திருவாரூரில் அணைந்து, பொற்கட்டிகளைத் திருமாளிகையிற் போக்கிப் புற்றிடங் கொண்டாரைத் தொழுது சென்று அமர்ந்திருந்தருளினர். அந்நாள்களில் திருநன்னிலத்துப் பெருங்கோயில், திருவீழிமிழலை, திருவாஞ்சியம் பணிந்து, அரிசிற்கரைப்புத்தூரினை அணைந்து வழிபட்டு அங்குப்

திருப்புகலூர் - செங்கல் செழும்பொன்

புகழ்த்துணையாருக்கு இறைவர் அருளிய திறத்தினைப் போற்றிப் பாடியருளினர்; அங்குநின்றும் பல பதிகளையும் வணங்கிச் சென்று திருவாவடுதுறையினை யணைந்து கோச்செங்கணார் செய்த திருப்பணியினைச் சிறப்பித்துப்பாடி வைகினர்; பின்னர்க் காவிரித் தென்கரையில் உள்ள திருவிடைமருதும், திருநாகேச்சரமும் பணிந்து, திருக்கலயநல்லூரினை அணைந்து, மெய்ம்மைப் புராண சரிதங்கள் பலவற்றையும் போற்றித் திருப்பதிகம் அருளிச்செய்தனர். பின்பு, திருக்கடமுக்கு, திருவலஞ்சுழி, திருநல்லூர், திருச்சோற்றுத்துறை, திருக்கண்டியூர், திருவையாறு பணிந்து, திருவாலம் பொழிலில் அணைந்து பணிந்து இரவு அங்குத் தங்கித் துயின்றருளினர். அப்போது இறைவர் அவரது கனவிலெழுந்தருளி "மழபாடியினில் வருதற்கு நினைக்க மறந்தாயோ?" என்று வினவித் தமது கோலங் காட்டியருள, உணர்ந்து, காவிரியின் வடபால் ஏறித் திருமழபாடியினை அணைந்து வணங்கிப் "பொன்னார் மேனி" என்றெடுத்து "உன்னையல்லா லினி யாரை நினைக்கேனே" என்று பாடித் துதித்தபின் காவிரியின் இருகரையிலும் உள்ள பதிகளை வணங்கி மேல்பாற் போதுவார், திருவானைக்காவில் எழுந்தருளினர். அங்கு இறைவரைப் பணிந்து பரவி, இறைவர் உறையூர்ச் சோழனது மணியாரத்தைச் சாத்திக்கொண்டருளிய திறத்தினைச் சிறப்பித்துத் திருப்பதிகம் பாடி அங்குத் தங்கினர். அந்நாளில் இறைவரது பதிகள் பலவும் சென்றிறைஞ்சித் திருப்பாச்சிலாச்சிராமத்தினை அணைந்தனர்.

அங்கு இறைவர் திருமுன்பு நின்று பொருட்காதல் பெருக விரும்பிப் பரவ, இறைவர் தாம் நினைந்த பொருள் தாராதொழியவே நேர் நின்று திருத்தொழுமைப் பணியால் உள்ளம் புழுங்கிப் புறம் பொருபால் நின்ற திருத்தொண்டர் முகப்பே முறைப்பாடு உரைப்பார் போல "எத்தனை யருளா தொழியினும் இவரலா தில்லையே பிரானார்" என்ற கருத்துடன் "வைத்தனன் றனக்கே" என்ற திருப்பதிகம் பாடியருளினர். அவ்வளவில் இறைவனார் நிதிக்குவை யளித்தருள மகிழ்ந்து, அங்கு வைகி அம் மருங்குள்ள பதிகளையும் வணங்கிச் சிலநாள் அமர்ந்திருந்தனர். அதன்பின் திருப்பைஞ்ஞீலி, திருவீங்கோய்மலை முதலாகிய பதிகளையும் வணங்கிப் போய்க் காவிரியைக் கடந்து கொங்கு நாட்டில் திருக்கறையூர்ப் பாண்டிக்கொடுமுடியை அணைந்தனர்.

**திருப்பாச்சில்-பொன்.**

அங்கு இறைவரது பொன் மேனியை நோக்கி இவரை நான் மறக்கினும் எனது நா இடைவிடாது அவரது நாம அஞ்செழுத்தினைச் சொல்லும் என்று நமச்சிவாயத் திருப்பதிகத்தினை அருளிச் செய்தனர். அதன்பின் அங்குநின்றும் பல பதிகளையும் வணங்கிச் சென்று, மேல்கொங்கில் அணிகாஞ்சிவாய்ப் பேரூரினை ஆதரவினோடும் அடைந்தருளினர். அங்கு நித்தனார் தில்லை மன்று ணின்றாடல் நீடிய கோல நேர்காட்டக் கண்டு பேரானந்தத்துட் டினைத்துப் பாடி மகிழ்ந்தனர். அங்கு நின்றும் அருளினாற் போய் அருவரைச் சுரங்களும் நதிகளும் பலபல கடந்து, பல பதிகளும் பணிந்து, திருவெஞ்சமாக் கூடலும் வணங்கிப் போய்த், திருக்கற்குடி மலையில் எழுந்தருளினர். அங்கு இறைவரை வணங்கிப் பதிகம் பாடிப் பலபதிகள் பணிந்து சென்று, திருவாறைமேற்றளி, திருவின்னம்பர் பணிந்து பதிகம்பாடியே திருப்புறம் பயம் சென்று வணங்கி, மேல், இறைவர் மகிழ்ந்த பல பதிகளிலும் வணங்குவாராய்த் திருக்கூடலையாற்றூர் சார எழுந்தருளி அங்குச் சேராது திருமுதுகுன்றத்தினை நேர் நோக்கிச் செல்வாராயினர். அப்போது அவ்வழியில் இறைவர் ஒரு வேதியராகி வந்து நம்பிகளின் முன்பு நின்றனர். அவரை நோக்கித் திருமுது குன்றம் எய்த வழி எது?

**கொங்குநாடு-திருப்பேரூர்**

என்று நம்பிகள் கேட்க, அவர் திருக்கூடலையாற்றூர் செய்தச்சென்ற திவ்வழிதான் ! என்று சொல்லித் தாமும் வழித்துணையாகி உடன் சென்றனர். சிறுபொழுதில் அவர் காணாது மறைந்தருள, நம்பிகள் " அடிகளின் வழிபோந்த அதிசய மறியேனே " என்ற கருத்துடன் " வடிவுடை மழுவேந்தி " என்ற பதிகம்பாடிக் கூடலையாற்றூர் சென்று மிக்க ஆர்வத்தோடும் பணிந்து துதித்துத் திருமுது குன்றத்தினை அணைந்தனர்.

கூடலை யாற்றூர்

அங்கு இறைவரை முறையினாலே வழிபட்டு " நஞ்சியிடை " என்ற பதிகத்தினைப் பாடித் தாம் பொருள் வேண்டி வந்த திருவுள்ளக் குறிப்பினோடே வணங்கித் துதிக்கும் போது இறைவர் 12000 பொன் கொடுத்தருளினார். அது கண்டு நம்பிகள் மகிழ்ந்து தாழ்ந்து அருகு சென்று " தேவரீர் அருளும் இப்பொன்னெல்லாம் ஆரூர் உள்ளோர் மருளுற வியப்ப ஆங்கே வரப்பெற வேண்டும் " என்று விண்ணப்பித்தனர். அதற்கு இறைவர் " இப்பொன்னை யெல்லாம் இங்குத் திருமணிமுத்தாற்றில் இட்டுப் போய்த் திருவாரூர்க் குளத்தினிற் கொள்க" என்றருள நம்பிகள் மச்சம் வெட்டிக் கைக்கொண்டு அப்பொருளை யெல்லாம், அன்று என்னை வலிய ஆண்ட அருளை இதில் அறிவேன் என்று வணங்கி ஆற்றினில் இட்டனர்.

திருமுது குன்றம் — 12000 பொன் பெற்று ஆற்றிலிடுதல்

அங்கு நின்றும் அருள் விடை பெற்றுத், திருத்தில்லையினை அணைந்து திருவம்பலக் கூத்தரது அருட் பெருங் கூத்தினைக் கண்டு கும்பிடுவார் இறைவரைப் பேரூரிற் கண்ட நிலை சிறப்பித்துப் பாடியருளினார் ; அதன்பின் அங்கு நின்றும் திருக்கருப்பறியலூர் - திருப்பழ மண்ணிப் படிக்கரை என்ற பதிகளை வணங்கித் திருவாழ்கொளிபுத்தூரினை எய்தாது சென்றவர் மீள நினைந்து வந்து வணங்கி " மறந் தென்னினைக்கேனே " என்ற பதிகம் பாடித் துதித்தனர். அங்கு நின்றும் திருக்கானாட்டு முள்ளூர், திருஎதிர்கொள்பாடி, திருவேள்விக்குடி முதலிய பதிகளைக் கும்பிட்டுத் திருவாரூரில் அணைந்தனர். பின் ஒரு நாள் பரவையாரையும் உடன் கொண்டு திருமுதுகுன்றில் இறைவர் தந்த பொருளை எடுப்பதற்குக் குளத்தின் வடகீழ்க் கரையினை அணைந்து அற்றைநா ளிட்டெடுப்பவர் போல் தடவினர். திருவிளையாட்டினை உவந்து இறைவர் பொன்வருவியா தொழியக் கண்டு, " ஆற்றினி லிட்டுக் குளத்தினிற் றேடுவார் அருளிதுவோ " என்று பரவையார் நகைத்து மொழிந்தருளவே, நம்பிகள், " பொன் செய்த மேனியினீர் " என்று தொடங்கிப் பரவையார் நகைக்காதபடி அடியேன் இட்டளங்கெடவே பொன்தாரும் என்று வேண்டினார் ; அதனுள் "ஏத்தாதிருந்தறியேன்" என்ற எட்டாவது திருப்பாட்டளவில் இறைவர் பொன்முழுதுந் தந்தருளக் கைக்கொண்டு பதிக நிறைவாக்கிப் பொன்னினை, மூலமெனக் கொடுபோந்த ஆணியின் முன் உரைப்பிக்க, இறைவரருளால் உரைதாழ, அதன் பொருட்டு இறைவரை வணங்க, உரை நிறை வெய்தப்பெற்றுக், கரையேறி கனகமெலாம் மாளிகையினிற் போக்கித் தாம் புற்றிடங்கொண்டாரை வணங்கி மகிழ்ந்திருந்தருளினர்.

அந்நாளில் நம்பிகள் இறைவரது பிற பதிகளைத் தொழுவதற்கு நினைந்து சென்று திருநள்ளாறு, திருக்கடவூர், திருக்கடவூர்த் திருமயானம், திருவலம்புரம், திருச்சாய்க்காடு, திருவெண்காடு, திருநனிபள்ளி, திருநின்றியூர் முதலிய தலங்களைப் பணிந்து திருநீடூரைப் பணியாது செல்பொழுதில் மீள நினைந்து வந்து " நீடூர் பணியா விடலாமே " என்ற திருப்பதிகம்பாடி வணங்கி அங்குத் தங்கினர். அதன்

பின்பு திருப்புன்கூர் பணிந்து திருக்கோலக் காவினை அணைய இறைவர் எதிர் காட்சி கொடுத்தருளக் கண்டு வணங்கித் திருப்பதிகத்தாற் போற்றித் திருஞான சம்பந்தருக்குத் திருத்தாளம் அளித்த கருணையைச் சிறப்பித்துப் பாடியருளினர்.

அங்கு நின்றும் திருக்குருகாவூருக்குச் சென்ற போது நம்பிகள் உண்ணீரின் வேட்கையுடனே பசியினாலும் மிக வருந்தி வரும் இடத்தில் இறைவர் தண்ணீரும் பொதிசோறும் கொண்டு மறைவேதியராய் வேடங்கொண்டு அவ் வழியிடே சார்ந்து குளிர்ந்த பந்தரும் அமைத்து வன்றொண்டரது வரவு பார்த்திருந்தார். நம்பிகள் தொண்டருடனே அந்தப் பந்தரிடைப் புகுந்து அம்மறையவர்பால் பெருகிய ஆர்வத்துடன் "சிவாயநம" என்ப் பேசி அணுகி யிருந்தனர். இறைவர் நம்பிகளை நோக்கி "நீர் மிகவும் பசித்திருந்தீர். இப்பொதிசோறு தருகின்றேன். தாழாது கைக்கொண்டு உண்டு தண்ணீர் குடித்து இளைப்புத் தீரும்" என்று கூற, அதனை மறுக்கலாகாது என்று இசைந்தருளி ஏற்றுத் தொண்டருடன் நம்பிகள் சோறருந்தித் தண்ணீரும் குடித்து இளைப்புத் தீர்ந்தனர். நம்பிகளுடன் வந்தார்களுமே யன்றி அம்மருங்குப் பசித்து அணைந்தார்களும் அருந்தும்படி வேதியர் தரும் பொதிசோறு வளர்ந்து பொலிந்தது. அதன்பின் நம்பிகள் இறைவர் நாமத்தைப் புகழ்ந்து ஏத்தி அங்குச் சிறிது பள்ளி யமர்ந்தனர். அருகணைந்தார்களும் துயின்றனர்; அப்போது இறைவர் அப்பந்தருடன் தாமும் மறைந்தருளினர்; நம்பிகள் உணர்ந்து எழுந்து அவரைக் காணாமையால் இஃது இறைவர் செயலே யென்று கண்டு மிக்க ஆர்வத்துடன் "இத்தனை யாமாற்றை யறிந்திலேன்" என்று தொடங்கித் திருப்பதிகம் பாடித் திருக்கோயிலிற் சென்று வணங்கிப் பருகா இன்னமுதத்தைக் கண்களாற் பருகிப் பாடி ஆனந்தத்தில் திளைத்து அங்குத் தங்கியருளினர். அதன்பின் திருத்தில்லை சென்று வணங்கித், திருத்தினை நகரும் திருநாவலூரும் சென்று வணங்கிப், பிறபதிகளையும் வணங்கச் செல்வாராயினர்.

குருகாவூர் - பொதிசோறு

திருத்தொண்டை நன்னாட்டிற் பலபதிகளையும் கும்பிட எண்ணிச் சென்று திருக்கழுக்குன்றத்தினை வழிபட்டுத் திருக்கச்சூருக்கு எழுந்தருளி வணங்கி அங்குத் திருக்கோயிற் புறத்து அணைந்தனர். அப்போது அமுதுசெய்யும்பொழுது ஆயிற்று; அமுது சமைத்தளிக்கும் பரிசனங்கள் வந்து சேராமையால் பசி வருத்தத்துடன் நம்பிகள் திருவாயில் மதிற் புறத்திருந்தனர். அப்பொழுது மலைமேல் மருந்தாகிய இறைவர் ஒரு அந்தணராக வேடந் தாங்கிக் கையில் ஓடேந்திக் கொண்டுவந்து அருள்கூர அவரது முகநோக்கி, "நீர் மிகப் பசித்திருந்தீர்; உமது பசிதீர இப்போதே சோறு இரந்து கொண்டு வந்து உமக்குக் கொண்டு வருகிறேன்; இங்குவிட்டு நீங்காதே சிறிதுபொழுது அமரும்" என்று சொல்லிச் சென்று திருக்கச்சூர்ச் செல்வ மனைகடோறும் புக்குப் பாத தாமரைகள் நிலம் பொருந்தவும், கண்டவர்கள் மனமுருகவும் கடும் பகலி விடும்பலிக்குச்சென்று சோறு இரந்துகொண்டு தாம் விரும்பி யாட்கொண்டவர்முன் கொண்டுவந் தருளிப் "பசிதீர உண்க" என அளித்தனர். நம்பிகளும் அவரது பேரருளின் திறத்தினைப் பாராட்டித் தொழுது வாங்கிப் பக்கத்தில் அணைந்த திருத்தொண்டர்களுடனே அத்திருவமுதினை உண்டு மகிழ்ந்திருப்ப, அவர் தம்மை யறியாதே இறைவர் மறைந்தெழுந்தருளினர். அது கண்டு நம்பிகள் வந்த மறைவனார் இறையவனார்தாமேயாம் என்று மதித்துக் கண்ணீர் சோரப் பதைத்து மன மிக உருகி "முதுவாயோரி" என்று பதிகம் பாடி மகிழ்ந்து வணங்கினர். பின்னர் அங்கு நின்றும் புறப்பட்டுப் பல பதிகளையும் வணங்கித் திருக்

தொண்டை நாடு

திருக் கச்சூர்

காஞ்சிமா நகரத்தினை அணைந்தனர். அடியவர்கள் வந்து எதிர்கொள்ள, உட்புக்குத் திரு ஏகாம்பரம் பணிந்து மேலும் அங்குள்ள திருக்காமக் கோட்டமும், திருமேற்றளியும் வணங்கினர்; திருவோணகாந்தன்றளியில் தோழமையாற் பொருந்திய அடிமைத்திறம் பேசிப் பாவி எண்ணில்லாத நிதியம்பெற்றுப் பின் திரு அனேகதங்காவதத்தினையும் மற்றும் பதிகளையும் வணங்கி அங்கு எழுந்தருளியிருந்தனர். அதன்பின் திரு வன்பார்த்தான் பனங்காட்டூர், திருமாற்பேறு, திருவல்லம் முதலிய பதிகளை வணங்கித் திருக்காளத்தி மலை சேர்ந்தனர். அங்கு இறைவரையும் பெருங்காதற்றலை நின்றருளும் கண்ணப்பரையும் வணங்கி இனிதமர்ந்தனர்; அந்நாளில் அங்கிருந்தவாறே சீபர்ப்பதம், திருக்கேதாரமலை முதலாகிய வடநாட்டுப் பதிகளை வணங்கிப் பதிகம் பாடியருளினர்; அதன்பின் அங்கு நின்றும் போந்து பலபதிகளையும் வணங்கிக் கொண்டு திருவொற்றியூர் சார்ந்து முதல்வரை வணங்கித் திருப்பதிகம் பாடிக் கும்பிட்டு அங்கு எழுந்தருளியிருந்தனர். இதன் முன்பே, திருக்கயிலையிலிருந்து ஆணையின்படி போந்த இரண்டு சேடிமாருள் அநிந்திதை என்பவர், ஞாயிறு என்ற ஊரில் வேளாண் மரபிலே கொள்கைகளால் மேம்பட்ட வாழ்க்கையுடைய திருஞாயிறு கிழவர் என்பவருக்கு மகளாராய் அவதரித்துச், சங்கிலியார் என்னும் திருநாமம் பூட்டப்பெற்று, இறைவரருளால் வந்த நெறியின் முன்னையுணர்வு வரத் தாமே அறிந்த நிலையினராய் வளர்வாராயினர். அவரது மரபுக்கேற்ற செயலே யன்றித் தெய்வத் தன்மையும் உலகோர் கண்டு அதிசயிக்கும்படி வளர்ந்து மணத்துக்கு உரிய பருவம் அடைந்தனர். அப்போது அவருக்கு ஏற்றவாறு மணமுடிக்கும் நிலைபற்றி அவரது தாயாரும் தந்தையாரும் ஒருநாட் பேசிக்கொண்டிருந்ததனைச் சங்கிலியார் கேட்டு, இறைவரது அருள் பொருந்திய ஒருவர்க்கே யான் உரியது; இங்கு வேறு என்ன விளையுமோ என்று வெருவுற்று மயங்கி யயர்ந்து நிலமிசை வீழ்ந்தனர். பெற்றவர்கள் அதுகண்டு பதைத்துப் பரிவுடன் எடுத்தே ஏங்கி "இவளுக்கு என்னேவுற்றது?" என்று அவரது முகத்தில் பனிநீர் தெளித்து உபசரிக்க மயக்க நீங்கிற்று. அப்போது அவர்கள் உனக்கு நேர்ந்தது என்ன? என்று கேட்க, ஒன்றும் ஒளிக்காமல் "இன்று என்னைப்பற்றி நீங்கள் உரைத்தது என் தன்மைக்கு இசையாது; சிவபெருமான் திருவருள் பெற்ற ஒருவருக்கு நான் முன்னமே உரியவளாயினேன்; நான் இனிமேற் சென்று திருவொற்றியூரணைந்து சிவனருள்வழி தவம்புரிந்து வருவேன்" என்றார். அவர்கள் அதுகேட்டு அயர்வும் பயமும் அதிசயமும் கொண்டு, அந்த மாற்றத்தினை வெளிப்படுத்தாது மறைத்து ஒழுகி வந்தார்கள்; இவர்களோடு ஒத்த குலமுடைய ஒருவன் இதனை அறியானாகி அம்மையாரை விரும்பி மணம் பேசும் பொருட்டுச் சிலரை அனுப்பினன். அவர்களும் போந்து அவ்வாறே இசைத்தனர். அதனைக் கேட்ட தாய் தந்தையார் உண்மைத் தன்மையினை வெளிப்படுத்திச் சொல்லத் தகாமையினாலே வருத்தம் வாராதவகையில் வேறு மொழிந்து அவர்களைப் போக்கினர். அவர்கள் சென்று அவனிடம் சேர்ந்து சொல்வதற்குமுன் அவன் அவர்களுடனே தீமை செய்து செத்தான்போல் இறந்துபட்டான். இது கேட்டுப் பெற்றோர்கள் மயங்கிச் சங்கிலியார் திறத்திலே பேசத்தகாத வார்த்தையைத் தாம் உய்ந்திருக்க வேண்டும் என்று எண்ணமுள்ள எவரும் சொல்ல மாட்டார் என்ற உண்மையை உலகமறியும் பொருட்டு இது நிகழ்ந்தது என்று கொண்டு, உண்மை நிலையினை உலகர் அறிய வெளிப்படுத்தி, அம்மை விருப்பத்தினையே உடன்படத் தீர்மானித்தார்கள். அவ்வாறே சுற்றத்தாருடன் அம்மையாரையும் உடன் கொண்டு திருவொற்றியூர் சேர்ந்து இறைவரைப் பணிந்து, அப்பதியவர்களுடைய

திரு வொற்றியூர்

சங்கிலியார்

இசைவினாலே திருக்கோயிற் புறத்திற் பக்கத்திலே கன்னிமாடம் அமைத்துச், சேடியர்களையும் பரிசனங்களையும் மற்றும் ஏவற் பரிசனங்களையும் தக்க செல்வமும் வகுத்துக் காவலும் அமைத்து, அதில் அம்மையாரை இருத்தித் தந்தையார் அவரை அடிவணங்கி "யாங்கள் உமக்குப் பணி செய்ய நீர் இறைவருக்கு ஏற்ற பணிசெய்து இப்பெரிய கன்னிமாடத்தில் உறைகின்றீர்" என்று தாங்குதற்கரிய கண்ணீர் பொழியத் தரியாது வணங்கித் தமது பதியிற் சென்றனர். அம்மையார் காலந்தோறும் சென்று இறைவரைப் பணிந்து திருப்பூமண்டபத்துள் திரைசூழ்ந்த ஒரு பக்கத்திருந்து அவ்வக்காலங்களுக் கேற்றபடி முன்னைநிலையிற் றிருக்கயிலையிற் றும் செய்து வந்தவாறே இறைவர்க்கு ஏற்ற பூமாலைகளைத் தொடுத்துக் கொடுத்து அமர்வாராயினர்.

**நம்பிகள்**

இந்நாள்களில் ஒருநாள் இவரது மணம் நிகழும் பருவமாதலினால் முந்தை விதியின்படி நம்பிகள் இறைவரை வணங்கத் திருக்கோயிலுட் புகுந்து பணிந்து துதித்துப், புறம்போந்து அங்கு அடியார்கள் செய்யும் திருப்பணிவிடைகளைக் கண்டு தொழுது செல்கின்றவர் திருப்பூமண்டபத்தினுட் புகுந்தார். அங்கு, அன்பே நாராகக் கொண்டு திருவைந்தெழுத்தினையும் நெஞ்சம் தொடுக்கக் கைகளால் மலர் தொடுத்து என்பும் உள்ளுருகப் பணிசெய்யும் அடியார்களைத் தொழுது சென்று, வேறோரிடத்தில் முன்புபோல், திரைநீக்கி இறைவர் சாத்தும் திருமாலையினைக் கொடுத்து மின்போல மறைந்த சங்கிலியாரை விதியினாலே கண்ணுற்றார். கோவைபடாத முத்தும் வண்டுகள் உண்ணாத கொழுமையுடைய மெல்லிய அரும்பினையும் போன்ற சங்கிலியாரைக் கண்டபோது நம்பிகளது சிந்தை நிறை காவாது அவர்பாற் போய் வீழ்ந்தது. காமனது பூவாளிகள் வந்து வீழ்ந்தன. நம்பிகள் புறம்போந்து அங்கு உள்ளாரை நோக்கி "இங்குத் திரையினுள்ளே பொன்னும் மணியும் விளங்கும் புதிய ஒளியுடன் அமுதுடன் கலந்த சந்திரனுடைய நீர்மையாலே சமைத்த மின்கொடி போல்வாள் என்னை உள்ளம் திரிவித்தாள் ; அவர் யார்கொல் !" என்ன, அவர்கள் "அவர்தாம் நங்கை சங்கிலியார்; பெரிய தவத்துடனே இறைவரது பணியினைப் பேணும் கன்னியாராகும்" என்றார். அப்போது நம்பிகள் "இறைவர் இருவரால் இப்பிறவியில் என்னை அடைய வகுத்தருளினர் ; அவருள் பரவையார் ஒருத்தி; இவள் மற்றையவளாகும்" என மருண்டு, "இறைவரிடம் போய் விண்ணப்பித்து இவளைப் பெறுவேன்" என்று உட்சென்று அவ்வாறே விண்ணப்பித்துப் புறத்துவந்து, ஒருபக்கம் இருந்து நினைந்து நினைந்து வருந்த, இறைவர் போந்து "பெருந்தவத்துச் சங்கிலியை உனக்குத் தருகின்றோம் ; கவலை ஒழிக" என்றருளிச் செய்தனர். நம்பிகள் மகிழ்ந்தனர். இறைவர் சங்கிலியார்பால் கனவில் எழுந்தருளச், சங்கிலியார் அன்பு பொங்க வணங்கி நின்றனர்; அவரை நோக்கி, மேருமலையின் மேம்பட்ட தவத்தை யுடையானும், நாமே வலிய ஆட்கொள்ள உரியவனும், நம்பாற் பேரன்புடையவனும் ஆகிய வன்றொண்டன் உன்னைத்தரும்படி என்னை இரந்தான். அவனை நீ மணத்தினால் மகிழ்ந்து அணைவாய்" என்றருளிச் செய்தனர். சங்கிலியார் வணங்கி எழுந்து நின்று, "இறைவரே ! தேவரீர் அருளிச் செய்த ஒருவர்க்கு யான் உரியேன்தான். ஆனால் என்னை மணத்தால் அவருக்குக் கொடுத்தருளும்பொழுது அவர்தாம் திருவாரூரில் மகிழ்ந்துறைவாராவர் என்பதனை அறிந்து அதற்குத் தக்கவாறு அருள்புரிய வேண்டும்" என்று விண்ணப்பித்தார். இறைவர் "அவன் உன்னைவிட்டு நீங்கிப் போகாதிருக்க ஒரு சபதம் செய்வான்" என்று கூறி, அங்கு நின்று நீங்கி வன்றொண்டர்பால் எழுந்தருளி, "நீ

அவளைவிட்டு நீங்காது உடனிருப்பதற்கு ஒரு சபதம் இவ்விரவே சென்று அவள் முன்பு செய்வாயாக'' என்றருளினர். அதுகேட்டநம்பிகள் இறைவரது பிற பதிகளிலும் சென்று கும்பிடக் கடவேனுக்கு இது விலக்காகும் என்ற குறிப்பினை உட்கொண்டு இறைவரை நோக்கித் "அவ்வாறு அவளுடன் நான் சபதம் செய்வதற்கு வந்தால் அப்பொழுது கோயிலை விட்டுத் தேவரீர் தங்கும் இடம் திருமகிழின் கீழேயாகக் கொள்ளுதல் வேண்டும்" என்று குறை யிரந்தனர்; இறைவரும் தமது தோழர் வேண்டியதற்குடன்பாடு செய்வாராகி, "நம்பி நீ சொன்னபடி நாம் செய்வோம்" என்று அருள, நம்பிகளும் மகிழ்ந்தனர். இறைவர் எழுந்தருளி நம்பிகள்பால் ஒரு திருவிளையாட்டினை மகிழ்ந்தோ? அன்றிச், சங்கிலியாரின் வழியடிமைப் பெருமையினலோ? மீளவும் அவ்விரவிலே சங்கிலியார் பால் முன்போலத் தோன்றி, "நங்காய்! உனக்கு ஆரூரன் சபதம் செய்குவன்; ஆனல் நீ அச்சபதத்தினைத் திருக்கோயிலின் நம் முன்பு செய்தற்கு இசையாமல் திரு மகிழின்கீழே கொள்ளக் கடவை" என்று அருளிச் செய்யச், சங்கிலியாரும் கண்ணீர் வெள்ளம் பொழிய இறைவரை வணங்கி எழுந்தனர். இறைவர் இவ்வாறருளி நீங்கவே, தம்பக்கல் துயிலும் சேடியர்களை எழுப்பிச் சங்கிலியார் இறைவர் அருளிச் செய்ததெல்லாம் அவர்களறிய உரைத்தனர். அப்போது திருப்பள்ளி எழுச்சிக்கு மலர் தொடுக்கும் காலம் ஆகவே அதற்குரிய சேடியருடன் சங்கிலியார் செல்லத், தாம் சபதம் செய்தற்குரிய காலம் அதுவாகவே குறித்து, நம்பிகளும் அணைந்து தமது பெருமானருளினைக் கூறச் சங்கிலியார் நாணுடன் ஒருபுறம் ஒதுங்கிக் கோயிலினுட் புகுந்தனர். நம்பிகள் சேடியரை நோக்கிச் சபதம்செய்ய இறைவர் முன்பு வாருங்கள் என்ன, அவர்கள் "எமது பெருமானே! இதற்காக இறைவர் திருமுன்பு சென்று செய்வது தகா"தென்று கூற, நம்பிகள் இறைவரது செயலினை அறியாது "அவ்வாருயின் பின்னர் எங்குச்செய்வது?" என்று கேட்டனர். அதற்கு "அவர்கள் மகிழின்கீழே அமையும் என்னக் கேட்டு, மனமருண்டு இவர் சொன்னபடி செய்ய மறுத்தால் இஃது அலராகிலுமாகும்; ஆதலினல் உடன்படவே அமையும்" என்று துணிந்து அவ்வாறே வாருங்கள் என்று சொல்லி அவர்களுடன் மகிழின்கீழே அணைந்து பெருந்தவத்துச் சங்கிலியாருங் காணத் திருமகிழை மும்முறை வலம் வந்து, "இங்கு மேவாது நான் அகல மாட்டேன்" என நின்று சபதம் விளம்பினர். சங்கிலியாரும் அதுகண்டு "தம்பிரான் பணியாலே பாவியேன் இது கண்டேன்" என்று ஆவி சோர்ந்தழிந்து ஒருபுறம் மறைந்தயர்ந்தனர். நம்பிகள் இறைவரை வணங்கித் "தேவரீர் செய்தவா றழகிது" என்று துதித்து மகிழ்ந்து போந்தனர். சங்கிலியாரும் தமது பணிசெய்து வணங்கிக் கன்னிமாடம் புகுந்திருந்தனர்.

சபதம்

அன்றிரவே, இறைவர் அந்நகரில் வாழும் தொண்டர்களுக்கெல்லாம் கனவிற் ரேன்றி, "நம்பியாரூரனுக்கு நங்கை சங்கிலிதன்னை இவ்வுலகிலே நமது ஏவலிலே கலியாணம்செய்து உலகறியக் கொடுப்பீராக" என்று கட்டளையிட்டருளிச் செய்தனர். அவ்வாறே அருள் தலைக்கொண்டு தொண்டர்களும் பதியவர்களும் மகிழ்ந்து நெருங்கிக்கூடி வானவர் பூமழை பொழியக் கண்ணிறைந்த பெருஞ்சிறப்பிற் கலியாணம் செய்தளித்தார்கள். வன்றெண்டரும் இறைவரருளாலே சங்கிலியாரை மணந்து அவருடன்கூடி அவரது தெய்வ நலத்தைக் கண்டு கேட்டுண்டுயிர்த்து உற்றுக் காதலினல் இனிது அமர்ந்தருளினர். அவர்களிடையே மிகு புலவிப் புணர்ச்சிக்கண் ஒருகணம் ஓர் ஊழியாகும்; ஊழி ஒருகணமாகும். இவ்வாறு திருவொற்றியூரிலே நம்பிகள் இறைவரைத் தொழுதிருக்

திருமணம்

கவே பலகாலங்கள் வந்து கழிந்தன. அந்நாளில் தென்றல் வந்துலவி வசந்த காலத்தினை நம்பிகளுக்கு நினைவூட்டிற்று. திருவாரூரிலே வீதிவிடங்கப்பெருமான் வசந்தவிழாக் கொண்டருளுதலும் அத்திருவோலக்கத்தினிடையே பரவையார் பாடலாடல் புரிவதும் கண்ணின்முன் நேரே கண்டார்போலக் கருதி, "அப்பெருமானை மறந்திருந்தேன்" என்று ஏசறவினாலே மனமழிந்து "பத்திமையும் அடிமையையும்" என்று எடுத்து, "எத்தனை நாள் பிரிந்திருக்கேன் என் ஆரூரிறைவனையே" என்ற குறிப்புடன் திருப்பதிகம் பாடினார். பின் ஒருநாள் திருவாரூரை மிக நினைந்து திருவொற்றியூரினை அகலப் புக்கனர். தாம்செய்த சபதம் பிழைத்தமையால் கண்களிரண்டும் மறைந்தன. மூர்ச்சித்து மேற்செய்வதறியாது, "அழுக்கு மெய்கொடு" என்று தொடங்கிக் குற்றத்தீர்வு வேண்டித் திருவொற்றியூரிறைவரைப் பாடினார். அங்குஇறைவர் செய்யும் அருளதுவேயாகக் கைகுவித்துத் தொழுது திருவாரூரை நோக்கி, வழிக்கொள்வாராயினர். உடன்போதுவார்கள் வழி காட்டச் சென்று திருமுல்லைவாயிலை யடைந்து, "கொண்ட வெந்துயர் களைக" எனப்பரவி வழிக்கொண்டு திருவெண்பாக்கத்தினை அணைந்து கோயிலின் முன்நின்று தொழுது, இறைவரைக் "கோயிலுளீரே?" என்று வினவித் துதிக்க, ஊன்றுகோல் ஒன்றருளி "உளோம் போகீர்" என்றருளப் பெற்று வழிக்கொண்டு சென்று திருவாலங்காட்டினை வணங்கித் துதித்து, திருக்காஞ்சிமாநகர மணைந்தனர். அங்கு அறப்பெருஞ் செல்வக் காமக்கோட்டத்தில் எல்லாவுயிர்களுக்கும் கருணை புரிந்து அறம் வளர்க்கும் அம்மையை வணங்கித், திரு ஏகாம்பரத்தினை அணைந்து அம்மை அருச்சித்த திருவடிகளை வேண்டித் துதிக்க அம்மை தழுவக் குழைந்த அப்பெருமான், கண்ணளித்தருளி மறைந்த இடக்கண் கொடுத்துத் தமது கோலங்காட்டி யருளினர். நம்பிகள் மிக மகிழ்ந்து "எம்மானைக் காணக்கண் அடியேன் பெற்றவாறே" என்று பாடித் திளைத்து இன்புற்று அங்கு அமர்ந்திருந்தனர். அங்கு இறைவர் செய்யும் அருள் அதுவாக, அங்கு நின்றும் திருவாரூரினை நோக்கி "எந்தை பெருமானூர் என்று கொல் எய்துவதே" என்று துதித்துக்கொண்டு, அதனை நோக்கி வழிக்கொள்வாராய்ச் சென்று, திருவாமாத்தூர், திருநெல்வாயி லரத்துறை, திருவாவடுதுறை பணிந்து, திருத்துருத்தியினை அணைந்தனர். அங்கு இறைவரை வணங்கித், தம்மேல் வந்த புதிய பிணி நீக்குமாறு இறைவரை வேண்ட, அவரது ஆணையின்படி வேறாக வடகுளத்துக் குளித்து அக்கணமே பிணிநீங்கப் பெற்று மணியொளிசேர் திருமேனி பெற்று விளங்கினார்.

சபதம் பிழைத்தல்-கண் மறைதல்

இடது கண் பெற்றமை

திருத்துருத்தி-புதியபிணி நீங்குதல்

அங்கு நின்றும் போந்து பல பதிகளையும் வணங்கிச்சென்று திருவாரூர்முன் தோன்றக் காண்கின்றார், அதனை ஒருகண் நோக்கினாற்கண்டு, மனம் ஆராது நிலத்தில் வீழ்ந்து நெடிதுயிர்த்து வணங்கி, மயங்குமாலைநேரத்தில் திருவாரூரினுள் அணைந்து திருப்பரவையுண் மண்டளியில் தூவாய்நாயகரைப் பணிந்து பாடிப்போந்து, வேறிருந்து தொண்டருடன் கூடித் திருமூலட்டானத்துள் இடைதெரிந்து திருவத்தயாமத்தில் இறைஞ்சுதற்காக வந்தணைந்து, காதல்புரி கைக்கிளையால் அன்பரெதிர் "குருகுபாய" என்று ஏசறவினாலே பதிகம் பாடிவந்து, திருத்தேவாசிரியனையும் பூங்கோயிலினையும் வணங்கி எழுந்து உட்புக்கு, ஒருகண்ணாற்கண்ட காட்சியாலாராமல் மனமழிந்து பருகா இன்அமுதத்தைக் கண்களாற் பருகுதற்கு மற்றக் கண்ணை

யும் தாரீர் என்று, “ மீளா அடிமை ” என்ற பதிகம் பாடி வணங்கினர். புற்றிடங்கொண்ட புராணனர் இரங்கிக் கருணைத் திருநோக்கம் செய்து வலக்கண்ணையும் கொடுத்தருளச் செவ்வே விழித்து முக மலர்ந்து உள்ளம் பரவசமாய்ப் பலமுறையும் வணங்கிப் புற்றிடங் கொண்ட சிவக்கொழுந்தினருளை இரண்டு கண்ணாலுங் கண்டு பருகித் திளைத்தனர். பின்பு திருக்கோயிலினை வலங்கொண்டு போந்து தேவாசிரியன் மருங்கணைந்து இருந்தருளினர்.

வலக்கண் பெறுதல்

இவ்வாறிருக்க, நம்பிகள் பிரிந்து போனதற்பின் பரவையார், அவரது பிரிவாற்றாமையால் வருந்தினர். அதன்மேலும், அவர் திருவொற்றியூர் சேர்ந்து சங்கிலியாரை மணம் புணர்ந்த செய்தியினையும் தாம் அவர்பால் விட்டார்வந்து உரைக்க அறிந்து, தம்மையுமறியா வெகுளியினுல் நெஞ்சம் தரியாது தளர்ந்தனராய்ப் புலவியும் பிரிவும் கூடிய இரண்டன்பாலும் பட்டு வருந்தினர். இந்நிலையில் நம்பிகள் திருவாரூரில் எழுந்தருளப், பரிசனங்கள் பரவையார் திருமாளிகையில்முன்புபோலச் செல்ல மாளிகைப் புறத்திலும் இடம்பெருது தள்ளப்பட்டார்களாய் அதனை நம்பிகள்பால் வந்துரைத்தனர். நம்பிகள் உலகியல்பு கற்ற மாந்தர் சிலரைப் பரவையார் கொண்ட செற்றம் மாற்றித் தீர்வுசொல்லும்படி செலவிட்டார். அவர்கள் சென்று உலகியல்பிற் பலவும் எடுத்து இயம்பப், பரவையார் மறுத்துத் தமது செற்றத்தினை மாற்ருராகி நம்பிகளின் வார்த்தையினை மேலும் சொல்லினுல் உயிர்போதல் ஒழியாதென்று கடிந்து சொல்ல, அவர்களும் அஞ்சிவந்து நம்பிகளிடம் அதனை அறிவித்துச் சென்றனர். நம்பிகள் அந்நள்ளிரவில் வேறுதுணைகாணுராய்த் துன்பக்கடலுள் மூழ்கிச் சிந்தித்துத் தமது பெருமானுகிய இறைவரை நினைந்தனர்; அவரும் வெளிப்பட்டு வந்து முன்னிற்க, வணங்கிப், பரவையாரது செற்றத்தினைத் தீர்த்து ஒன்றுவித்தல் வேண்டும் என வேண்டிக்கொள்ள, அவரும் இசைந்து சில கணங்கள் புடைசூழ அருச்சகர் வேடந்தாங்கிப் பரவையார் திருமாளிகைக்குச் சென்று, அங்குச் செறிய அடைத்த திருவாயிலின் முன்னின்று, 'பாவாய் திற வாய்' என அழைப்ப, அவரும் இறைவரது அருச்சகர் இப்பாதியிரவில் அணைந்தார் என்று பயமெய்திக் கதவு திறந்து அவரைக் கண்டு, “இந்நள்ளிரவில் தேவரீர் இங்கு எய்தவேண்டிற் றென்னை ?” என்ருர். அதற்கு இறைவர் “நம்பி இங்கு வரப் பெற வேண்டும்; நம்பி செய்த ஏதங்கள் மனத்துக்கொள்ளாது வெகுளி நீங்கி நோதகவு ஒழிக ” என்று கூறப், பரவையார் “ இஃதொரு கருமமாக நீர் இக்கடைத்தலை வருகை உமது பெருமைக்குத் தகுவதன்று ; நீரும் போம் ” என்று மறுத்தனர். இறைவரும் நம்பியின் வெம்புறு வேட்கை காணும் திருவிளையாட்டின் மேவிப் பரவையார் மறுத்ததனையே கொண்டு மீண்டனர். இசைவு செய்வார் என்று மிக்க காதல் கொண்டு எதிர்பார்த்திருந்த தோழனரிடம் இறைவர் மீண்டுசென்று, “ நாம் உனது திறமெலாம்கூறி நாமே வேண்டவும் பரவையார் மறுத்தாள் ” என்ருர். நம்பிகள் அதுகேட்டு நடுங்கித், தேவரீர் அருளியவண்ணம் நன்று !; அடியாளான பரவையோ மறுப்பாள்; நாங்கள் அடிமைக்கு எண்ணலார் ! இன்று என் அடிமை நீர் வேண்டா விட்டால் முன்னர் வலிய ஆளாகக் கொண்ட பற்று என்னை ? இன்று பரவையின் புலவி தீர்த்து அங்கு மேவும்படி செய்யீராயின் விடும் உயிர் !” என்று தளர்ந்து வீழ்ந்தார். அதுகண்டு இறைவர் நம்பிகளை அருளால் நோக்கி, “ நாம் இன்னமொரு முறை அவள்பாற் சென்று நீ அங்குமேவும் செயலைக் கூறுகின்ருேம்; துயர் நீங்குக ” என்று கூறிப் பரவையார் திருமாளிகையினை நோக்கித் தூதராக முன்

இறைவர் தூது

போலன்றித் தாமாந்தன்மை அறிவுறுகோலத்தோடு, தேவர் பூதர் முனிவர் சூழச் சென்றருளினார். இதற்கிடையில், பரவையார் அருச்சகராகி வந்தவர் ஆளுடைய முதல்வரேயாகும் அதிசயம் பலவும் தோன்ற, அவர்முன் என்செய மறுத்தோம் என்று கையறவு எய்தி, மனமழிந்து வாயிலே பார்த்து வருந்தியிருந்தனர். அவ்வளவில் இறைவரும் வந்து புகுந்தனர். பரவையார் விரைந்து சென்று அவரடியில் வீழ்ந்தனர். அவரை நோக்கி இறைவர், " உரிமையினால் ஆரூர் நம்பி ஏவ மீளவும் உன்பால் வந்தோம். முன்புபோல் மறாதே, நம்பி இங்கு வருதற்கு இசைவாயாக" என்றனர். அதுகேட்டுப் பரவையார், "எனது பெருந்தவப் பயனாக முன் எய்தியவர் நீரோ ? அன்பர்க்காகத் திருவடி வருந்த ஓரிரவு முழுதும் அங்குமிங்குமாக எளிவருவீராயில் இசையாது என்செய்வேன் " என்று வணங்க, இறைவரும் அவளுக்கு ஆசி கூறி எழுந்தருளி நம்பிகள்பால் சென்று பரவையார் இசைந்தமைகூறித் திருக்கோயிலில் எழுந்தருளினர்.

நம்பிகள் மகிழ்ந்து இறைவரை இறைஞ்சிப், பின்பு, கலவைச் சேறு, கலங்கள், பூந்துகில் வர்க்கம் முதலியவற்றை ஏந்திய பரிசனங்கள் முன்பு செல்லத் தாம் திருமாளிகையை வந்தணைந்தனர். பரவையார், திருமாளிகையை அலங்கரித்து விளக்கு, நிறைகுடம் முதலியவற்றை வைத்துத் தாம் வாயிலின் முன்புவந்து நம்பியை எதிரேற்று நின்று, அவர் வந்து கூடிய அளவில் காதல் வெள்ளங் கரைகாணாது வணங்கினர். நம்பிகள் அவரது கையினைப் பற்றி உள்ளே சார்ந்தனர். இருவரும் இறைவர் இடையாடிச் செய்த கருணை வெள்ளத்திறத்தினைப் போற்றி ஒருவருவொருவர் மேவு நிலைமையில் உயிர் ஒன்றாகி மகிழ்ந் தமர்ந்திருந்தனர்.

அந்நாளில், நம்பிகள் நெஞ்சில் சிறிதும் நடுக்கமின்றிப் பெண்ணிடத்தில் இறைவரைத் தூதாக அனுப்பினார் என்ற இவ் வநீத மொழியினை ஏயர்கோன் கலிக்காமனார்

**ஏயர்கோன் கலிக்காமர்**

கேட்டு, வெம்பினார் ! வெருவினார் ! மிக வருந்தினார். " தலைவரை அடியான் ஏவும் காரியம் நன்று ; இதனைச் செய்பவனும் ஒரு தொண்டனும் ! பொறுக்க வொண்ணாத இப்பிழையினைப் பாவியேன் காதினாற் கேட்டும் என் உயிர் போகாதிருந்தது ! பெண்ணாசையால் ஒருவன் ஏவினாலும் இறைவரும் இசைந்து ஓரிரவெல்லாம் தூதுக் குழல்வதா ? இறைவர் இசைந்தாலும் அவரை ஒருவன் ஏவுவதும் ஆகுமா ? இவ்வாறு செய்த வினை நான் காணப் பெற்றால் என்ன விளையுமோ ?" என்று மனத்துட் செற்றம் பொருந்தி யிருந்தனர் கலிக்காமனார். இச் செய்தியைக் கேட்ட நம்பிகள், பிழை யுடன் படுவாராகி இதற்குத் தீர்வு வேண்டி, நட்புச் செய்யும் வண்ணம் இறைவரிடம் நாடோறும் பணிந்து போற்றினர். இறைவரும் அதனை நோக்கி, இவ்விருவரும் நண்பாகும் தன்மை செய்வாராகி, உடல் வாடும் நிலைபுரியும் கொடிய சூலைநோயினை ஏயர்கோனார்பால் ஏவியருளினர். அந்நோய் அவர் வயிற்றினுள் அனல்செய் வேல் குடைவதென்ன வேதனை மேன்மேலும் செய்தது. அவரும் அதற்குடைந்து வீழ்ந்து இறைவரைப் போற்றினார். இறைவர் அவர்பாற்றோன்றி " உன்னை வருத்தும் சூலை வன்றொண்டன் தீர்க்கிலன்றி முந்துற ஒழியாது " என்று மொழிந்தருளினர். அது கேட்டுக், கலிக்காமனார், " எம்பெருமானே ! எந்தை தந்தை தந்தை எம் கூட்டமெல்லாம் நீரே எமது இறைவர் என்று கொண்டு வழிவழிச் சார்ந்து வாழும் வாழ்க்கையை யுடையேனுக்கு என்னை நின்று வருத்தும் சூலையினைப், புதிதாக வம்பென ஆண்டுகொண்ட ஒருவனோ வந்து தீர்ப்பவன் ? அவன் தீர்ப்பதினும் தீராதொழிதல் நன்று ; உமது பெருமையை யார்தாம் அறிந்தார் ? வன்றொண்டர்க்கே

ஆகும் உறுதியே செய்தீர் " என்றுகூற, இறைவரும் அவர் முன்பு மறைந்தருளி, வன்றொண்டர்தம்பாற் சென்று, " நம் ஏவலாலே ஏயர்கோனுற்ற சூலையினை நீ சென்று தீர்ப்பாயாக !" என்றருளினர். நம்பிகளும் வணங்கி மகிழ்ந்து அவ்வாறே சூலை தீர்க்கத் தாம் வரும் செய்தியை ஏயர் கோனுருக்குச் சொல்லியனுப்பினர்.

இறைவர்பாற் கேட்ட துன்பமொழியும் சூலையும் தம்மை வருத்த, அதன் மேலும் வன்றொண்டர் வரவு கேள்வியும் பெற்ற ஏயர்கோனுர், " எம்பிரானைத் தூதனாய் ஏவினன் வந்து தீர்ப்பதன்முன் என்னைப்பற்றி நின்று நீங்காப் பாதகச் சூலையினை அதற்கு இடங்கொடுத்திருக்கும் இவ் வயிற்றினோடும் கிழிப்பன் " என்று துணிந்து உடைவாளினாலே வயிற்றினைக் குத்திச் செற்றிட, உயிரினோடும் சூலையும் தீர்ந்தது. அதுகண்டு எண்ணுதற்கரிய பெருமையினை யுடைய கலிக்காமனாரது தேவியாரும் ஒப்பற்ற தம் கணவருடனே தாமும் போகும் நிலைபுரியும் வேளையில், நம்பிகள் இங்குப் பொருந்த அணைந்தார் என்று முன் வந்தவர் கூறக் கேட்டு, " ஒருவரும் அழாதீர்கள் ! காவலரை நம்பி அணையும்போது திருமனையை மிகவும் அலங்கரித்து எதிர் செல்லுங்கள் !" என்று பரிசனங்களைப் பணித்தனர். அவர்களும் பூரண கும்பமும் தீபமும் வைத்து வாயிலைப் பூமாலை தூக்கி அணிசெய்து நம்பிகளை எதிர்கொண்டனர். நம்பிகள் அவர்களுக்கு நகைமுக மளித்துப் பெருவிருப்பினோடும் திருமாளிகையினுட் புகுந்து தவிசின் வீற்றிருந்து, அவர்கள் விதிமுறை செய்த பூசனைகளை எல்லாம் ஏற்றுக்கொண்டு, " ஏயர்கோனுர்க்கு வந்த கொடிய சூலையினை நீக்கி அவருடன் இருத்தற்குக் காலம் தாழ்க்கின்றதுபற்றி நான் மிகவும் வருந்துகின்றேன் " என்றருளினர். அதற்கு, அம்மையாரின் ஏவலாலே, மனைத் தொழில்மாக்கள் " இங்கே கெடுதி ஒன்றுமில்லை ; அவர் உள்ளே பள்ளிகொள்கின்றார் " என்று கூறக் கேட்டு, நம்பிகள், " தீமையில்லை என்றாலும் இன்னம் என் மனம் தெருட்சி பெறவில்லை ; ஆதலால் அவரைக் காணவேண்டும்"என்றனர். ஏவலாளரும் அவ்வாறே கொண்டு சென்று அவரைக் காட்டக், குருதி மிகவும் சோரக் குடர் சொரிந்து ஆவி நீங்கிக் கிடந்த அவரை நம்பிகள் கண்டனர். "புகுந்தவாறு நன்று ! நானும் இவர்முன்பு நண்ணுவேன் " என்பாராகி, அக்கொள்கையினில் நம்பிகள் உறுதிகொண்டு குற்றுடைவாளைப் பற்றினர். அப்போது ஆளுடைய பெருமானருளினாலே கலிக்காமனாரும் உயிர்பெற்று உய்ந்து, கேளிரே ஆகிக் "கெட்டேன் " என்று விரைந்தெழுந்து, நம்பிகள் கையினின்றும் வாளினைப் பிடித்துக்கொள்ள, அவர் வணங்கி வீழ்ந்தனர். ஏயர்கோனாரும் வாளினை மாற்றி நம்பிகளது திருவடிகளில் வீழ்ந்தனர். விண்ணவர் பூமாரி பெய்தனர். இருவரும் எழுந்து தழுவி இடைவிடாத நண்பினாலே மகிழ்ந்து திருப்புன்கூரிற் சென்று இறைவர் பாதம் வணங்கித் துதித்தார்கள். நம்பிகள் திருவருட் பெருமையினைப் போற்றி " அந்தணாளன் " என்று தொடங்கும் திருப்பதிகம் பாடி வணங்கினர். சில நாட் கழிந்தபின் நம்பிகள் தம்கூடவே மகிழ்ந்துவந்த ஏயர்கோனாருடன் திருவாரூரிற்சேர்ந்து பூங்கோயிலின் இறைவரை வணங்கி நிறைந்த அன்பினாலே அங்குத் தங்கினர். அதன்பின் நம்பிகள்பால் அருள்விடைபெற்று ஏயர்கோனார் தமது பதிபுகுந்து தமக்கேற்ற பணிகள் செய்திருந்து இறைவரது திருவடி நீழல் அணைந்தனர்.

இறைவர் செய்த நட்பின் திறம்

---

தலவிசேடம் :—(1) திருப்பெருமங்கலம் - திருப்புன்கூருக்கு வடக்கே ஒரு நாழிகை யளவில் உள்ளது. சிவாலயமும் அதில் நாயனார் திருவுருவமும் உண்டு; இதனருகே விறன்மிண்டர் தங்கிய இடமாக வழங்கும் விறன்மிண்டர் மடம் என்ற நிலயமும் உண்டு. முன் (3155) உரைத்தவை பார்க்க.

திருப்புன்கூர் - முன் (261-ன் கீழ்) உரைக்கப்பட்டது.

கற்பனை : சிவபெருமான்பால் அன்புமிக்க குடிகள் நெருங்கிச் சிவபுரி என்னும்படி விளங்குதல் ஒரு நகரத்துக்கு ஏனைய பெருமைகள் எல்லாவற்றிலும் மேம்பட்ட சிறப்பு. (3158)

2. வேளாளர்களுள் வழிவழி அரசர் சேனாதிபதிக் குடியாகவரும் ஒரு வகையும் உண்டு. (3159).

3. சிவன்பணி செய்துவாழும் வாழ்க்கையே இன்பந்தருவது. (3161)

4. குருவின் மாளிகைக்கு நாடோறும் அமுதுபடி முதலானவற்றைப் படி சமைத்தல் சிவபுண்ணியமாம். (3165)

5. குருவின்பணி நியமம் முட்டுப்படின் பெரியோர் வருந்தி உண்ணாமலும் இருந்து இறைவனை வேண்டுவர். (3167)

6. குருவின்பணி நிறைவேறும்பொருட்டு வேண்டி வருந்துவோர்க்கு இறைவர் அருள்புரிவர். (3168)

7. குண்டையூர்க்கிழார் வேண்டியவாறே நென்மலை அருளியதுடன், அதனைத் திருவாரூருக்கு எடுக்கப் பூதங்களையும் இறைவர்ஏவியருளினார். தாமே திருவாரூரில் நம்பிகளுக்கு நெல் தராது இவ்வாறு அருளியது குண்டையூர்க் கிழாருக்குக் குருபணியின் பலன் தருவதற்காம். "பனிமதி முடியா ரன்றே யுமக்குநெல் லளித்தார்" (3132) என்று நம்பிகள் இதனை விளக்குதல் காண்க.

8. திருவாரூரில் வாழ்வார்கள் அவ்வவர் மனையெல்லைக்குட் படுநெல் லெல்லாம் அவ்வவர் மாளிகையிற் புகப்பெய்து கொள்க எனப் பரவையார் பறைசாற்றி அளித்தனர்; இஃது அவரது முன்னைத் தவத்தின் பெருந்தன்மையும் புகழுமாம். அவ்வாறே நம்பிகள் ஒவ்வோர் முறையும் கொணர்ந்தளிக்கும் பொற்குவைகளும் அவ்வப் பங்குனி உத்திரவிழாக்களில் அடியார்களுக்கு குறைவறுக்கும் பொருட்டுப் பயன்படுத்திய திறமும் காணப்படும். இதனுட் பரவையாரது பெருமையும் மேம்பாடும் கண்டு கொள்ளத்தக்கன.

9. நாட்டியத்தான்குடிக் கோட்புலியார் நம்பிகளை அழைத்துச்சென்று உபசரித்துத் தமது மக்களாகிய வனப்பகை சிங்கடி என்ற இருவரையும் அவர்பால் அளித்து அடிமையாகக் கொண்டருளும்படி வேண்டினார். நம்பிகள் அவர்களைத் தமது தூய மக்களாக ஏற்றுக்கொண்டு, அவர்கட்கு வேண்டுவன அளித்துக், கண்ணீர் வார உச்சிமோந்து தமது பதிகங்களிலும் தம்மை அவர்களைப் பெற்றெடுத்த பிதாவாக வைத்துப் பாடியருளினார். நம்பிகள் பொன்னாசை பெண்ணாசை கொண்டவர் எனப் பிதற்றும் மதியிலிகள் இவ்வுண்மைகளைக் கணிப்பாராயின் உய்குவர் (3194 - 3196).

10. திருப்புகலூரில் செங்கல்லே செழும் பொன்னாக இறைவ ரருளாற் பெற்ற நம்பிகள், பொன் முதலியவற்றை வேண்டிப் பொய்ம்மையாளராகிய புன்மாக்களைப் பாடித்திரியும் புலவர்களை நோக்கி "நீவீர் அதனைவிட்டு இறைவரைப் பாடினால் இம்மையே சோறும் கூறையும் முதலியன எல்லாம் பெறலாம்" என்று

ஆற்றுப்படுத்திப் பதிகம் பாடியருளியது நம்பிகளது பெருங்கருணைத் திறத்ினையும் பரமாசாரியாராம் தன்மையினையும் புலப்படுத்துவதாம். (3205)

11. ஒருவனிடமிருந்து கைநழுவிப்போன பொருள்களையும் சிவனுக்காக (சிவார்ப்பணம்) என்று எண்ணுதல் வேண்டுமென்பதும், அவ்வாறு எண்ணினால் அதனை இறைவர் ஏற்றருளுவர் என்பதும் ஆன்றோர் மரபு. உறையூர்ச்சோழர் காவிரியில் நீராடும்போது முத்து ஆரம் நழுவிவிட, அதனைச் சிவனுக்காக என்றெண்ணினார். அது திருமஞ்சனக் குடத்துட் புகுந்து சிவன் முடியில் வீழ இறைவர் அதனைச் சாத்திக்கொண்டருளினர் என்ற வரலாற்றினை நம்பிகள் பதிகத்துள் வைத்துப் போற்றி, இவ் வுண்மையினைக் கண்டொழுகி உய்யும்படி உலகுக் குபதேசித் தருளினர். (3231)

12. திருப்பாச்சிலாச்சிராமத்தில் தாம் நினைந்த பொருளினை இறைவர் தாராது தாழ்க்கத், தொண்டர் முகப்பே முறைப்பாடு உரைப்பார்போல் நம்பிகள் எத்தனை யருளா தொழியினும் பிரானு ரிவரல்லா தில்லையே ? என்று தோழமைத் திறத்தாற் பாடிய நம்பிகளின் மொழியினை உகந்து பொருள் தந்தருளியமை இறைவரது அடியார்க் கெளிவரும் பெருங்கருணைத் திறம். (3235)

13. நான் மறக்கினும் எண்ணிய நாவே இடையறு தின்சுவை பெருக நாம அஞ்செழுத்தினை யென்றும் இயம்பும் என்றிதனைத் திண்ணிய உணர்விற் கொண்டு திருப்பதிகம் அருளினர் நம்பிகள். இவ்வாறு மனங் கலவாதபோதும் புறக் கருவி காரணங்கள் சிவன்பா லீடுபடுதல் இடையறாத நீண்ட பழக்கத்தாலும் தவமுயற்சியாலுமே வருவதாம். இத்தன்மை வரப் பழகுதல் பெருநன்மை தரும். (3241)

14. சிவனையே எண்ணியிருப்பவர்கள் செய்யத்தக்க காரியங்களெவற்றையேனும் மறப்பினும் சிவனே உண்ணின்று நினைவூட்டி அவற்றை நிகழ்விப்பன் (3226). "அன்னே உன்னையல்லா லினி யாரை நினைக்கேனே" "வாழ்கொளி புத்தூர் மாணிக்கத்தை மறந் தென்னினைக் கேனே", நீடு ரானைப் பணியா விடலாமே", "அடிகளிவ் வழிபோந்த அதிசய மறியேனே" (தேவா).

15. தில்லை மன்றுணின் றாட னீடிய கோலத்தினைத் திருப்பேரூரில் நம்பிகளுக்கு இறைவர் நேர்காட்டி யருளக் கண்டனர். இவ்வாறு இறைவர் காட்டிடக் காணும்போது வருவது ஐம்புலனிற் புலப்படாத பேரின்பத்துடன் புணரும் மெய்யுணர்வாம். (3242)

16. நம்பிகள் திருமுதுகுன்றத்தினிற் பெற்ற 12000 பொன்னையும் திருமணிமுத்தாற்றினி லிட்டுத் திருவாரூர்க் குளத்தினில் அங்குள்ளோர் மருளுற வியப்ப அங்கேவாப் பெறவேண்டும் என்று வேண்டி அவ்வாறே பெற்றனர். இதுதிருவருட் செயல். எங்கும் நிறைந்த எல்லாம் வல்ல பரம்பொருள் தமது ஆட்பாலவர்கட்கருளும் வண்ணங்களைச் சோதிக்கவேண்டாஎன்பது கட்டளை. இங்கு நின்ற பொருளை அங்குத் தருவதும், இங்கு நிகழ் ஒளி, ஒலி, யிவைகளை அங்குக் காட்டுவதும் இவ்வுலகத்தில் மனிதனின் சிற்றறிவின் சிறு அமைப்புக்களாலே கூடுமாறு காண்கின்றோமானால் பேரறிவின் அமைப்புக்களில் எதுதான் கூடாது ! ஆற்றினிலிட்டுக் குளத்தினிற்றேடினாற்போல என்னும் பழமொழியின் கருத்தும் காண்க.

17. திருக்குருகாவூரின் வழி நீர்வேட்கையுடன் பசியாலும் மிக வருந்தி நம்பிகள் அணையும்போது, இறையவா மறையவராய் வந்து பொதிசோறும் தண்ணீரும் கொண்டு வழிச்சார்ந்திருந்து நம்பிகளையும் அருகணைந்தாரையும் ஊட்டி மறைந்

தருளினர். திருக்கச்சூராலக் கோயிலினும் அவ்வாறே நகரினுட் சென்று சோறிரந்து கொண்டுவந்து ஊட்டியருளினர். எல்லா உயிர்களினுள்ளும் நிறைந்திருந்து அவ்வவர் கன்மத்துக் கேற்றவாறு இன்பதுன்பங்களை அறிந்து ஊட்டுபவர் சிவபெருமானே யன்றோ?

18. இறைவர், தாம் உலகர் கண்காண வெளிப்பட உருவங்காட்டி அருட்செயல் செய்யும்போது அவரை அன்னரென்று அறியமாட்டாது வைத்தலும், மறைந்தபோது அறிய வைத்தலும் அவரது வல்லமையாம். நம்பிகளுக்குத் திருவதிகைச் சித்தவட மடத்தில் திருவடி சூட்டிய நிலை, குருகாவூரிலும் கச்சூராலக் கோயிலினும் சோறுதந்த நிலைகள், கூடலையாற்றூரில் கூட வழிபோந்த நிலை முதலியவை காண்க; இவை தேவார அகச்சான்றுகளால் விளங்க நிற்பனவும் காண்க.

19. திருக்குருகாவூரில் இறைவர் நம்பிகளுக்குத் தாமே பொதிசோறுந் தண்ணீருங் கொண்டுவந்து கொடுத்தருளினர்; திருக்கச்சூராலக் கோயிலில் அந்நகரின் செல்வ மனைதோறும் சென்று சோறு இரந்து கொணர்ந்தளித்தனர். இவ்வேறுபாடு என்னை எனின்? இதனால் திருக்கச்சூர் வாழ்வார்களை ஈடேற்றும் பொருட்டுப் போலும் என்க. இறைவரது திருவிளையாட்டும் அருளும் வண்ணங்களுமாம்.

20. திருக்கயிலையினின்றும் போந்து முன்னை யுணர்வுடன் வந்து பிறந்து வளர்ந்தனர் சங்கிலியார். இவ்வாறு முன்னுணர்வுடன் வந்து பிறப்பது தவ வலிமையாலும் திருவருளாலும் சிலர்க்கே கிடைப்பதாம். கோச்செங்கட் சோழனார் சரிதமும், பிறவும் பார்க்க. (3362 - 3367 - 3377)

21. பெண்கள் பெற்றோர் உற்றார்களி னீங்கிச் சிவபெருமானது பற்றே பற்றாகக் கொண்டு கன்னிமாடத்தில் தங்கி உலகத் தொடர்பின்றிச் சிவன் பணியே செய்திருந்து, பின் திருவருள் பணித்தவழி மணம் செய்து கொள்ளும் வழக்கு முன்னாளில் உண்டு. (3374-3375); அவ்வாறு தவஞ்செய்யும் கன்னியரின் மணம் இறைவன் காட்டியருளியபடி தொண்டர்களால் முடிக்கப்படும்.

22. சிவனறிய உரைத்த சபதம் பிழைக்கின் யாவரேயாயினும் அதற்குரியபடி தண்டம் செய்யப்பெறுவர் என்பதனை உலகுக்குக் காட்டி உய்விப்பதற்கு நிகழ்ந்தது நம்பிகளது திருவொற்றியூர் நிகழ்ச்சியாம்.

23. கண்ணைக் கெடுத்த தெய்வம் கோலைக்கொடுக்கும் என்ற பழமொழி திருவொற்றியூரில் கண்ணிழந்த நம்பிகளுக்குத் திருவெண்பாக்கத்தில் ஊன்றுகோல் அருளியதன் வழிவந்தது போலும்.

24. காஞ்சிநகரில் இறைவர் இடக்கண் கொடுத்தருளியபோது "கம்பனெம்மானைக் காணக் கண்ணடியேன் பெற்றவாறே" என்று திருவருளைப் பாராட்டிப் போற்றித் திளைத்தனர் நம்பிகள். கண்பெற்ற பேறு இறைவனைக் காண்பதற்கே என்ற உண்மையினையும் வற்புறுத்தி யருளினர். ஆனால் திருவாரூரிற் புக்கபோது, அதனைக் காண்பதற்கு வாழ்ந்த மலர்க்கண் ஒன்றன்றே லாராக் கண்டின்புறார், மற்றொரு கண்ணையும் வேண்டிப் பெற்று இரண்டு கண்ணாலும் புற்றிடங் கொண்ட பெருமானருளை ஆரப் பருகித் திளைத்தனர். இஃது அன்புமிக்க காதலின் விளைவாகும். (3465)

25. கற்புடை நாயகியார்க்குத் தமது நாயகர் வேறொரு பெண்ணை மணந்தார் எனக் கேட்டபோது தரியாது புலவி மூள்வது இயல்பு. (3469)

26. தம்மையன்றி வேறு பற்றுக்கோடில்லாத அடியார்க்கு வரும் எத்தகைய வருத்தத்தையும் தீர்த்தல் ஆண்டவன் கடன். (3493)

27. இறைவர் அடியார்க்கருளும் திறங்கள் அளப்பில. அவை மனிதர் ஆராய்ச்சியுட்படா.

28. இறைவர் பரவையார்பால் நம்பிகளுக்காக ஒரு முறையன்றி இருமுறை தூதுசென்றது நம்பிகள்பால் வெம்புறு வேட்கைகாணும்படி மேற்கொண்ட திரு விளையாட்டின் றிறமும், பரவையாரது தவத்தின்றிறமுமாம்.

29. ஆண்டவர் திறத்தில் இழிவுபட யார்பாலேனும் சொற் செயல்கள் நிகழக் கண்டால், அவர்பாற் செற்றங்கொள்ளுதல் உறைப்புடைய அன்பின்றிறத்தால் வருவது.

30. வழிவழி இடையறுது சிவனடிமைத் தன்மையிற் சார்ந்துவரும் வாழ்க்கை ஒருவற்குப் பெருமிதமாக எண்ணத் தகுதியுடைய பொருளாம்.

31. மாதர்பால் இறைவரை அடியாராகிய நம்பிகள் தூது விட்டமை காதினுலும் கேட்கத்தகாத பெரும் பிழையாகிய சிவாபராதம் என்று கொண்டனர் ஏயர் கோன் கலிக்காமனார். இது நூல்வழிக் கொண்ட துணிபு.

32. நம்பிகள் அதனை அன்னதொன்றென்றே ஒப்பிப் பிழை யுடன்பட்டமை அவரது குணத்தின் நேர்மையினையும் பெறற்கரிய பெருந்தன்மையினையும் காட்டும்.

33. இவ்வாறு உடன்பட்டு ஒப்பிய உண்மையினைக் கடைப்பிடித் தொழுகிய செம்மையாளர் கலிக்காமனார் ; அப்படி யிருந்தும் சூலைநோயினை அவர்பால் ஏவி அவரை மிக்க வருத்தத்துக் குள்ளாக்கினர் இறைவர். இது எப்பொருள் எத்தன் மைத்தாயினும் சிவன் உடன்பட் டருளுவதே விதியாம் என்ற மெய்யுணர்வு தலைப் படவாராத குறைவு நோக்கிப்போலும் என்க.

34. வழிவழி வந்த பழஅடிமை உரிமையிற் பெருமித முற்று, அதனை உயிரினும் சிறந்ததாகக் கொண்டு, நம்பிகளால் சூலை தீர்க்கப் பெறுதலினும் உயிர் துறத்தல் நன்றென்று துணிந்து உயிர் துறந்தனர் கலிக்காமனார். இஃது அன்பின் உறைப்பினால் வந்த உயர்வாகிய இறுமாப்பு.

35. தமது பிழை யுடன்பட்டுத் தம்மீது செற்றங்கொண்டு வெறுத்த கலிக் காமனாரது நட்புப் பெறுதற்கு வாயில் வேண்டினர் நம்பிகள் ; இது சிவனன்பின் நலத்தின் வைத்த நேரிய மனப்பண்பு.

36. கலிக்காமனார் தேவியார் தமது கணவர் உயிர் துறந்தவுடன் அவருடனே போவது புரிந்து முயன்றனர். இது கற்பின்றிறம். மாதினியார் - திலகவதியார் - செயல்கள் ஈண்டுக் கருதத்தக்கன.

37. ஆயின் அதுபோழ்து நம்பிகள் தமது திருமனையில் வரவு கேட்டு, அதனைத் தவிர்ந்து ஒருவரு மழுதல்செய்யாது மனையலங்கரித்து அவரை எதிர்கொண்டு உரியபடி உபசரிக்க ஏவினர். முன்னையது கற்பினியலாகிய அறத்தின்பாலதாகிய புண்ணியப் பகுதியாய்ப் பசு தருமமாகும். பின்னையது சிவனடியார் பத்தியின் பாலதாகிய சிவபுண்ணியமாகிய பதிதருமமாகும். இஃது அதனின் உயர்ந்ததாய்ப் பாரம்பரியத்தின் வீடுபேறு தரும் தன்மையுடையது. ஈண்டு அம்மையார் இதனை அறிந்தொழுகியதுபோல ஏனைய பெண்மணிகளும் மக்களும் அறிந்தொழுகின் நல மாகும். இஃது அரியதோர் சித்தாந்த உண்மையாகும். காரைக்காலம்மையார் தமது கணவன் தம்மை நீத்தசெய்தி தெரிந்தவுடன் ஒழுகிய நிலை ஈண்டு நினைவு கூர்தற்பாலது. (1765)

38. ஈண்டு அம்மையாரது இல்லற வொழுக்க நிலையும், சிவனடிமைத்தனத்தின் ஒழுக்கநிலையும் மிக உயர்ந்த பண்பில் விளங்குவன. அவையே இச்சரித மேல் நிகழ்ச்

சிக்குத் துணையாக நின்றன. அவை படி எடுத்தொழுகற்பாலன. மனைவியாரின் அன்புநிலை கணவனாரது உய்திக்குத் துணையாயிருத்தலும் கருதற்பாலது.

39. சிவன்பாற் பிழைபட்ட தம்மால் சூலை தீர்ந்து நலம்பெறுதலை விரும்பாது கலிக்காமனார் உடைவாளாற் குத்திக்கொண்டு உயிர் துறந்தனர் என்று தெரிந்த நம்பிகள் தாமும் அவ்வாற்றால் உயிர் துறக்கத் துணிந்தனர். இஃது அன்பின் செம்மையின்பாற்கொண்ட உறைப்பும், தமதுகுற்றத் தீர்வுபெறச் சூழ்ந்த நிலையும் ஆம்; இது பெரியோரியல்பு.

40. சூலை தீர்த்து நட்பாகுக என்றருளிய இறைவர், சூலையும் தீர்ந்தவழி சூலை தீர்ந்த உயிரினை மீட்டும் கொடுத்தருளி நம்பிகள்பால் நட்பாம் தன்மையையும் செய் தருளினர். இவை நம்பிகள் வேண்டியபடி அருளப்பட்டமையின் நம்பிகள் செய் தருளியவையேயாம். ஆட்பாலவர்க்கு இறைவர் அருளும் வண்ணம் அளவிட் டறிதற் கரியன.

ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணம் முற்றும்



# தேவார முதற் குறிப்பு

[எண் - பக்க எண்]

# பாட்டு முதற்குறிப் பகராதி

[எண் - பக்க எண்]

